24-4

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

மூலச் சந்திர ஞாநி

ஹிந்தி பாஷையில் இயற்றிய

# வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா.



இது

பரசமய கோளரியாரும், மண்டலேசுவரரும்,

உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்தகாசார்யரும்,

திருக் களர்,

ஸ்ரீலஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்

அவர்கள் மாணுக்கரும் ஆகிய

திருப் பூவண மடாதிபதி

ஸ்ரீலஸ்ரீ

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

அவர்களால், தமிழில், வசந வடிவமாக,

மொழி பெயர்க்கப்பட்டு,

ஷ யார்களால்

சென்னை, கோமளேசுவரன் பேட்டை

சச்சிதாநந்தப் பிரசிலும்,

மதுரை

ராஜேஸ்வரி பிரசிலும்,

அச்சிடப்பட்டது.




1936. [விலை ரூ 2—8—0

[காபிரைட்]

24-4

## பூமிகை.

இவ்வுலகத்தின்கண் மநிதர்களால் அடையவேண்டியது அநர்த்த நிவிர்த்தி, ஆநந்த அவாப்தி ஒன்றேயாகும். அதற்குச் சாதநமும், மார்க்கமும், சமுத்திரத்தினைத் தாண்டுவதற்குப் பல மார்க்கங்களும், பல சாதங்களும், இருப்பன போன்று இருக்கின்றன. அவற்றுள் அத்வைத மார்க்கமும், அதனை அடைதற்குச் சாதநத்தினைக் கூறும் வேதாந்த சாஸ்திரங்களுமே முக்கியமாகக் கொள்ளற்பாலன.

வேதாந்த சாஸ்திரங்களும், அதிகாரிகளின் புத்தி விருத்தியின் பேதத்தினால் விரித்தும், சுருக்கியும் சம்ஸ்கிருத பாஷையிலும், ஹிந்தி பாஷை முதலிய பாஷைகளிலும் மஹான்கள் கருணையினால் பல செய்திருக்கின்றனர். அவற்றுள், வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா என்னும் ஹிந்தி பாஷை நூலும் ஒன்றாம்.

இந்த நூல் சம்ஸ்கிருதத்தில் உள்ள வேதாந்த சஞ்ஞா என்னும் நூலுக்கு வியாக்யாநமாக மூலச் சந்திர ஞாநி என்பவரால், கி. பி. 1876ஹு செய்யப்பட்டிருக்கின்றது. இதன்கண் இரண்டு தொகுதி முதல் 15 தொகுதி வரை 14 பிரிவாக 174 வகையாக 800க்கு மேல் 900 பதார்த்தங்கள் வரை லக்ஷணப் பிரமாண ஆக்ஷேப சமாதாநங்களோடு விரிவாக எழுதப்பட்டிருக்கின்றது. இதனை எழுதிய மூலச் சந்திர ஞாநி பிரஹ்ம நிஷ்டையுடைவர் என்பது இந்நூல் எழுத்தினாலேயே தெரிகின்றது ஷட் சாஸ்திரங்களையும் நன்குக் கற்றுணர்ந்தவர் என்றும் தெரிகின்றது. இந் நூலில் உள்ள இவ்வளவு பதார்த்தங்கள் ஒரே நூலில் வேறு எந்தப் பாஷையிலும் எழுதப்படவில்லை. இந் நூல் ஒன்றைக் கொண்டே வேதாந்த சாஸ்திரப் பொருள் முழுவதும் தெரிந்து கொள்ளலாம்.

இவர் விசார சாகரம், விருத்திப் பிரபாகரம், யுக்திப் பிரகாசம், முதலிய ஹிந்தி பாஷை நூலியற்றிய, தாது பந்தியிலிருந்த நிச்சல தாசர் சம காலத்தவர் இவர் நாகப் பந்தியில் இருந்தவர். நிச்சல தாசர் இங்கிலீஷ் 1799ஹு பிறந்தவர். மூலச் சந்திர ஞாநி, கி பி. 1806 ஹு பிறந்தவர். நிச்சல தாசர் கி பி. 1869 ஹு சமாதியுற்றனர். 70 வருஷம் ஜீவித்திருந்தனர். மூலச் சந்திர ஞாநி, கி பி. 1878 வருஷம் சமாதியுற்றனர். 72ஹு ஜீவித்திருந்தனர். நிச்சல தாசர் சமாதியுற்று இற்றை (1935)க்கு 66 வருஷம் ஆகின்றது. மூலச்

சந்திர ஞாநி சமாதி யுற்று இற்றை (1935)க்கு 57 வருஷம் ஆகின்றது. பதார்த்த மஞ்ஜூஷா என்னும் ஹிந்தி பாஷை நூல் கி. பி. 1876ஆம் சமாப்தியா யிருக்கின்றது. நிச்சல தாசர் விசாகர சாகரம் முதலிய நூற்களை 1868 வருஷத்திற்கு முன் செய்திருக்கவேண்டும். ஆனதால், ஏழு வருஷம் முன் பின்னாக ஜநித்தவர்களாகலின் இருவர்களும் சம காலத்தவர்கள் என்பது பொருந்துகின்றது. வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா என்னும் மிக அத்புதமான அத்வைத நூல் இயற்றி அறுபது வருஷங்களாகியும் இன்னும் தமிழில் வராதிருந்தது வருந்தத் தக்கதே யாம். கி. பி. 1915ஆம் தமிழில் யாம் மொழி பெயர்த்தும் இது வரைப் பல இடையூறுகளால் வெளிவரா திருந்தது. இந்நூல் டெம்மி 1×8 பேஜ் சைசில் 60 பாரங்கள் ஆகின்றது. விசார சாகரத்தையும் யாம் மொழி பெயர்த்து கி. பி. 1923ல் அச்சிட்டிருக்கிறோம். அது டெம்மி 1×8 பேஜ் சைசில் 52 பாரங்கள் ஆகியிருக்கின்றது. இரு நூலும் அளவிலும் எழுத்திலும், எழுதியவர்களும், சமமாயினும் வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷாவில் லகுவாய் அறியக் கூடியதாக அள விறந்த பதார்த்தங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. இந் நூலைப் பார்த்தால் வேதாந்த சூடா மணி முதலிய நூல்களுக்குப் பொருள் எளிதில் தெரிந்து கொள்ளலாம். வேதாந்த சூடா மணியில் திருக்கு வஸ்துவின் பேதமும், திருசிய வஸ்துவின் பேதமும் 1—2—3, 4,5, 6, 7, 8,9, 10, 11, 14, 21, என்று 13 பிரிவாக, 138 பதார்த்தங்கள் தான் கூறப்பட்டிருக்கின்றது. இது கொண்டே இந் நூலின் பெருமை நன்கு விளங்கும்.

இந் நூல் பஞ்சாப் பக்கத்தில் வழங்கும் ஹிந்தி பாஷையில் எழுதி யிருக்கின்றமையின், பாஷையின் தாத்பரியத்தினை அதிக மான சிரமம் எடுத்தே தெரிந்து கொள்ள வேண்டியதா யிருந்தது. மூலப் பிரதி ஒன்றே நமக்குக் கிடைத்ததையாயினும், அதிலும் அச்சுப் பிழை அதிகமாக இருந்ததையாயினும், கூடிய வரை யோஜித்துத் திருத்தியே தமிழில் மொழி பெயர்ப்புச் செய்திருக்கிறோம். வேறு பதிப்புச் சுத்தமாகக் கிடைக்கின் அதைக் கொண்டு ஒப்பிட்டு மறு பதிப்பில் இன்னும் சுத்தமாக வெளியிடுவாம்.

1-12-1935. காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

திருப் பூவணம்.

## மூலச் சந்திர ஞாநி சரிதம்.

சிந்து தேசத்தில் உள்ள ஹைதரா பாத் என்னும் நகரத்தில் க்ஷத்திரிய (லோஹாணா) ஜாதியில் ஸ்ரீ நாநக் ஆசாரியர் சம்பிரதாயத்தினைக் கைக் கொண்டு சுகாநந்தர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கு விக்கிரமார்க்க வருஷம் 1856 சாலி வாஹந வருஷம் 1721 இங்கிலீஷ் 1806 ல், கார்த்திகை மீ சுக்ல பக்ஷம் சதுர்த்தி திதி சநிக் கிழமையில், ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவருக்கு மூல ராம சாது எனப் பெயர் வைத்து வளர்த்து வந்தனர்.

அவர் சிறு வயதில் கல்வி கற்றுத் தமது 14-வது வயதில் சத்சங்கத்தினைச் சார்ந்தனர். ஒரு பெரியாரிடம் உபாசனையின் உபதேசத்தினைப் பெற்று அநேக காலம் அதனை அப்யாசித்தனர். அந்த உபாசனையினால் விவேகம் வைராக்யம் முதலியவற்றோடு கூடியவராக விளங்கினர் அது வரை வியவகாரங்கள் ஒன்றும் இல்லாதவராக இருந்தனர். வெகு காலத்திற்குப் பின் ராஜாவினது காரியங்களைப் பார்க்க ஆரம்பித்தனர். பாஷையோடு கூடிய பாரஸி எழுத்தைப் படித்தனர். அந்தப் பாரஸி எழுத்தினாலும், அந்தப் பாரஸி பாஷையினாலுமே ராஜ காரியங்கள் நடந்து வந்தன. அந்தக் காலத்தில் மூல ராம சாது என்பவர் பாஷையில் உள்ள வேதாந்தக் கிரந்தங்களில் வித்வானா யிருந்தனர். பின்னர் கோட்டிக் கிராம வாசியாய, ஸ்ரீமத் பக்த பகவானது புத்திரர், நம்மால் துதிக்க முடியாத பெருமையோடு கூடிய, ஸ்ரீ கிருஷ்ண தாசர் என்னும் பெயரினை யுடைய மஹானிடம் சொற்ப சம்ஸ்கிருதம் படித்தனர். அக்காலத்தில் ஹைதரா பாத், சிந்து தேசங்களில் மிகுதியாகச் சம்ஸ்கிருத வித்தையை ஒருவரும் படித்திலர். அதனால் சம்ஸ்கிருதத்தில் முதலில் சொற்ப வித்தையே படித்தனர் பின்னர் தக்ஷிண தேசத்தில், திராவிட தேசத்தி லிருந்து, ஸ்ரீ ராமாநுஜ மதத்தின் அநுஷ்டாநமுடைய அதிசய வித்வான், ஸ்ரீ சேஷ ஆசார்யர் அகஸ்மாத்தாக அங்கு வந்தனர். அவரிடத்தில் சாரீரக பாஷ்யம் முதலிய வேதாந்தக் கிரந்தங்களையும், ஹைதரா பாத்தி லுள்ள நியாய சாஸ்திரங்கள் பூராவையும் படித்தனர்.

வெகு காலத்திற்குப் பின் ஒரு சாது வித்வான் அவ்விடம் வந்தனர். அவரிடத்தில் சித்தாந்த கௌமுதி முதலிய வியாகரணக் கிரந்தங்களைப் படித்தனர். மூல ராம சாது என்பவர் ஜந்மாந்தர சம்ஸ்கார முடையவராக இருந்தனர். இவரது பிரபாவத்தினால் நிர்ஜந தேசத்திலும் சம்ஸ்கிருத வித்தை உண்டாய் விட்டது. இவர் நிஷ்காமம் உடையராய், ஆத்ம ராமராய் இருந்தனர். அதனால் மூலச் சந்திர ஞாநி எனப் பெயர் வைத்தனர். இவர் ஒருவரிடத்தும் ரூபாய் காசு முதலியன வாங்குவ தில்லை. தனது பிதா சம்பந்தமான தநத்தினால் சக்தி யநுசாரம் சாதுக்கட்குச் சேவை செய்து வந்தனர். வித்தியார்த்திகளுக்குச் சாப்பாடும் போட்டு வித்தையும் கொடுத்து வந்தனர். சதா வேதாந்த நிஷ்டையில் இருந்து வந்தனர். தானும் சதாசார நிஷ்டையில் இருந்து கொண்டு ஞாநிக்கு யதேஷ்டாசரணம் உசிதம் அன்று என்று பிறர்க்கும் கூறி வந்தனர். சிஷ்டாசாரத்தினைப் பிரதாநமாகக் கொண்டு தேவதை முதலியவற்றினை நமஸ்கரித்து வந்தனர். இவர் ஹிந்தி பாஷையில், சொற்ப டீகையோடு கூடிய தத்வாநுசந்தாநம், சார உத்தாரம், பஞ்ச தசி, வாக்ய விருத்தி, பாகவத மாஹாத்ம்யம், வைசாக மாஹாத்ம்யம், ஜப புத்தகத்திற்குப் பெரிய வியாக்யாநங்களும், சிறிய வியாக்யாநங்களும், ராம கலி வாரணத்தின் வியாக்யாநங்களும், குரு கிரந்தத்தி னுள்ள சுலோகம் முழுவதுக்கும் வியாக்யாநங்களும், சம்ஸ்கிருதக் குரு கௌமுதிக்கு ஹிந்தி பாஷா டீகையும், வேதாந்த சஞ்ஞா என்னும் நூலுக்கு வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா என்னும் பாஷா டீகையும் செய்திருக்கின்றனர்.

இவர் அநேகஞ் சிஷ்யர்களுக்குச் சகல சாஸ்திரங்களையும் பாடஞ் சொல்லிக் கொண்டு வேதாந்தத்தில் நிஷ்டை யுடையவராயிருந்து, தமது எழுப தாவது வய தாகிய விக்கிரமார்க்க வருஷம் 1926 இங்கிலீஷ் வருஷம் 1876 ஆனி மீ சுக்ல பக்ஷம் தூஸம திதியில் வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா கிரந்தத்தினைச் செய்து முற்றுப் பெறச் செய்தனர். அதன் பின் தமது எழுபத் திரண்டாவது வய தாகிய விக்கிரம வருஷம் 1928 க்குச் சாலி வாஹந சகாப்தம் 1793 க்கு இங்கிலீஷ் வருஷம் 1878 பங்குனி மீ சுக்ல பக்ஷ சஷ்டி திதி சுக்கிர வாரத் தன்று பிரஹ்மத்தோடு சமரசபாவம் அடைந்தனர்.

மூலச் சந்திர ஞாநி சரிதம் முற்றிற்று.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 8 | ஜிக்வை | ஜிஹ்வை |
| 7 | 14 | சுதர்த்தச | சதுர்த்தச |
| 9 | 15 | ரூப | ரூபமாம் |
| | 18 | ஜீவத் தன்மையை | ஜீவர்களை |
| | 25 | வியஷ்டி சூக்ஷ்ம | வியஷ்டி ஸ்தூல |
| 11 | 29 | எதற்குப் | அதற்குப் |
| | 30 | பிரதிபந்தமிருத்த | பிரதிபந்திக்கப்படுர் தன்மை |
| 12 | 18 | தர்மங்களின் | தர்மங்கள் |
| 14 | 25 | ருபம் | ரூபம் |
| 15 | 6 | குணம் | குண |
| | 11 | ஹிதிகளும் | ஹிதி விதிகளும் |
| | 15 | தர்மங்கட்குச் | தர்மங்கட்குஞ் |
| 16 | 28 | பதத்தை ஸம்சபத்தின் ஸ்தாநத்தில் | ஸ்தாநத்தில் சம்சய பதத்தை |
| 18 | 5 | இன்றது | இன்றமையின் |
| 21 | 26 | சப்தம் | சப்தத்திற்கு |
| 25 | 11 | ஜந்மத்தினின்றும்சம்பாதித்த | ஜந்மத்தினைக் கொடுக்கும் |
| | 26 | வாச்சியமாகின்றது | கூறத்தக்கதும் ஆகின்றது |
| 26 | 9 | அநாசிருத மெனின் | அநாசிருத மென்பது |
| | 10 | காரி கர்ம மெனின் | காரிய கர்மம் என்பது |
| | 12 | சந்யாச மெனின் | சந்யாசம் என்பது |
| | | யோக மெனின் | யோகம் என்பது |
| | 13 | லயப்படுகின்றன | பொருந்துகின்றன |
| | 18 | அக்நி யின்றியவ னெனின் | அக்கிரியன் என்பது |
| | 19 | தியாக மன்றும் | தியாகி அன்றும் |
| | | அக்கிரியன் எனின் | அக்கிநி யின்றியவன் என்பது |
| | 20 | தியாகமு மின்றும் | தியாகியும் அன்றும் |
| | | சந்யாச மெனின் | சந்யாசம் என்பது |
| | 21 | யோக மெனின் | யோகம் என்பது |
| | 23 | சங்கல்ப மெனின் | சங்கல்பம் என்பது |
| | 24 | சுங்கல்பமும் ஆம் | சங்கல்மமாம் |
| 27 | 5 | அப்யாஸத்தின்ஏதுவுடைய | அப்யாஸத்தை ஏதுவாகவுடைய |

| | | | |
|---|---|---|---|
| | 10 | ரூபத்தால் | ரூபமாக |
| | | அச்சிரகாலம் | அசிரகாலம் |
| | 18 | அதனுல் | எதனுல் |
| | 19 | ரூபத்தால் | ரூபமாக |
| | 27 | ரூபத்தால் | ரூபமாக |
| 28 | 5 | எவனுக்கு | அவனுக்கு |
| 29 | 10 | மாசை | தமசை |
| | 17 | தம்பாதி | டம்பாதி |
| | 24 | பிரீதி | பிரதீதி |
| | 27 | அதனே | எதனே |
| | 28 | அதனே | எதனே |
| 30 | 8 | அதனே | எதனே |
| 31 | 10 | எதன் | அதன் |
| 33 | 2 | சம்பாதிக்கப்பட்ட | சம்பாதிக்கப்பட்டதாய் |
| | 26 | அநிர்வசநீய | அநிர்வயநீயப் பிம்பப் |
| 34 | 11 | சீக்கிரம் கதியாகலின் | சீக்கிர கதியாகலின் |
| 35 | 3 | சேதந மன்று | சேதந மாம் |
| | 13 | சங்கர சுவாமிகளாலும் | சங்காசார்ய ஸ்வாமிகளாலும் |
| | 17 | திருஷ்டி— | திருஷ்டி (ஞாநம்) |
| | 22 | ,, | (2) அவச்சேதவாதம் |
| | 23 | நிரூப | நீரூப |
| | 24 | நிரூப | நீரூப |
| | ,, | நிரூப | நீரூப |
| | 27 | நிரூப | நீரூப |
| | 31 | நிரூப | நீரூப |
| 36 | 1 | அவச்சேதக | அவச்சேத |
| | 8 | உபாதியாம் | உபாதிகளாம் |
| | 10 | அவித்யா | அவித்யாதி |
| | 11 | உபாதியாம் | உபாதிகளாம் |
| | 24 | அந்தக்கரண சுத்தி | அந்தக்கரண சுத்தியை |
| 37 | 16 | அவச்சேதகத் | அவச்சேதத் |
| 38 | 9 | ஜிவன் | ஜீவன் |
| | 18 | அதனைப்பலத்தின் பிரகாரம் | அதனை நன்ருய் |
| 39 | 11 | எதுவாகின்றது | எது உளதாம் |
| | 14 | எதுவாகின்றது | ஏது உளதாம் |



| | | | |
|---|---|---|---|
| | 27 | வேத வாக்கியம் | வேதாந்த வாக்கியம் |
| | 32 | அநந்தாநந்தப் | அநந்தாநந்தம் |
| 41 | 12 | லக்ஷியத்திற்கு | லக்ஷியத்தின் |
| 42 | 16 | ஸ்திதியும் | ஸ்திதி |
| | 17 | ஆச்ரயமும் | ஆசிரயம் |
| 43 | 8 | ஜடத்வத்திற்குப் | ஜடத்வத்தின் |
| 44 | 14 | அதன் | அத் |
| | 28 | ஆர்ஜூவம் | ஆர்ஜவம் |
| 46 | 12 | ஆர்ஜூவம் | ஆர்ஜவம் |
| | ,, | ஆர்ஜூவம் | ஆர்ஜவம் |
| 47 | 26 | அவைகளால் | அவைகளோடு |
| 48 | 24 | நரகத்தை | நரனே |
| 49 | 2 | சங்கர சுவாமிகளால் | சங்கராசார்ய ஸ்வாமிகளால் |
| | 17 | விஷய ஸ்ம | விஷய—ஸ்ம |
| | ,, | வின்சதிர்சமுன் | வின், சதிர்ச—முன் |
| 52 | 12 | சம்வாதாதி | சம்வாதி |
| 55 | 16 | அகங்கிரகத் | 2. அகங் கிரகத் |
| 56 | 14 | போழுது | பொழுது |
| 58 | 14 | அதிர்க்த | அதிரிக்த |
| ,, | 18 | கூறுகின்றனர், | கூறுகின்றனர் ? |
| 59 | 7 | அதிர்க்தம் | அதிரிக்தம் |
| | 27 | சுரோத்திரியப் | சுரோத்திரியப் |
| 60 | 22 | ஈண்டு சாதந பக்தியே | |
| | 29 | கின்றது அது | கின்றதோ |
| 61 | 20 | தன் | என் |
| 62 | 3 | புத்ராதிகளின் | புத்ராதிகள் |
| 62 | 26 | அர்ச்சநாதி | அர்ச்சந |
| 63 | 32 | பரிச்சர்யத்தால் | பரிசர்யத்தால் |
| 64 | 15 | சித்தமாம் | சித்த மெவனுக்கோ |
| 65 | 1 | எவன் சத்சித் | சத் சித் |
| 66 | 18 | தூஷணத் | தூஷகத் |
| | 29 | அதனின்றும் | அதனினின்றும் |
| | 33 | அதனின்றும் | அதனினின்றும் |
| 68 | 2) | சட மடாதி மாத்திரத் | கட மாத்திரத் |
| | 24 | பிராமணத்வத்திற்குச் | பிராமணத்வம் |
| | 26 | ஜாதிக்குக் | ஜாதி |

| | | | |
|---|---|---|---|
| | 31 | (அது) பிரதீதிக்கு | பிரதீதி |
| 69 | 3 | ஞாந ஜாதிக்குப் | ஞாநம் ஜாதியின் |
| | 23 | அவச்சேதகத்திற்கே | அவச்சேதகமே |
| | 30 | ஸ்மாரகாபவ | ஸ்மாரகபாவ |
| 71 | 2 | கடத்வ | கடத்வாதி |
| | 24 | சம்ஞா வாசகங்களாம் | பெயரைக் கூறுவனவாம் |
| 72 | | தலைக் கற்பிக்கின்றது | தல் கற்பிக்கப்படுகின்றது |
| 73 | 31 | ஜஹதாஜஹத் | ஜஹதஜஹத் |
| 75 | 26 | ஜஹதாஜஹத் | ஜஹதஜஹத் |
| | 27 | ஜஹதாஜஹத் | ஜஹதஜஹத் |
| | 32 | ணர்த்தம் | ணர்த்த |
| 76 | 14 | லக்ஷணையின்கண் | லக்ஷணையின்கண்ணும் |
| | 15 | விசேஷிய | விசேஷண |
| | ,, | இல்லாமையினாலும் | இல்லாமையினால் |
| | 17 | ஜஹதாஜஹத் | ஜஹதஜஹத் |
| 77 | 13 | வ்யஞ்ஞா | வ்யஞ்ஜநா |
| | 20 | வ்யஞ்ஞா | வ்யஞ்ஜநா |
| | 27 | பாவாபாவங்கட்குப் | பாவாபாவங்கள் |
| 78 | 22 | சக்தி விருத்தியும் | சப்த விருத்தியும் |
| | 31 | சரீரங்களின் | சரீர |
| 79 | 20 | ஆகாசாதி ஜகத்திற்கும் அவித்தையின் பரிணாமரூப ஜகதாகார ஞானத்திற்கும் உண்டான | அவித்தையின் பரிணாம ரூப மாயஆகாசாதி ஜகத்தினதும் ஜகதாகார ஞானத்தினதும் |
| | 25 | ஸாஜாதியாதி | ஸஜாதியாதி |
| | 27 | (1) எதனால் | எதனால் |
| | 28 | ஸமஷ்டி | (1) ஸமஷ்டி |
| | 32 | வியவகாரங்கட்கும் | விகாரங்கட்கும் |
| | 33 | நரன் எனின் | நரன் என்பது |
| | ,, | சர்வ ஜீவ | சர்வ ஜீவனும் |
| 80 | 8 | சமஷ்டி | எல்லா |
| | 23 | சரீரங்களினது உபாதித் தன்மையால் | சரீர உபாதியால் |
| 81 | 31 | அதன் ஸ்பஷ்ட | ஸ்பஷ்ட |
| 83 | 13 | சுழுத்தி | சுழுத்தி |



| | | | |
|---|---|---|---|
| 84 | 28 | தாரா | தார |
| 86 | 10 | கெய்யப்பட்ட | செய்யப்பட்ட |
| 87 | 26 | கருமத்திற்கு | கருமத்திற்கும் |
| | 27 | பிராரப்தத்திற்கு | பிராரப்தத்திற்கும் |
| 89 | 21 | சமவாயமா யிருப்பது | சமவாயத்தால் இருப்பது |
| 90 | 18 | அபிவ்யஞ்ஞக விஷயியாம் | அபிவ்யஞ்ஜக விஷயியாம் |
| | 25 | பதார்த்தங்கட்கு | பதங்கட்கு |
| 91 | 10 | ஜ்வர முதலியவற்றிற்கு ஹேதுவான | ஜ்வர முதலியவைகளை ஹேதுவாகக் கொண்ட |
| | 27 | பூதங்களின் ஆசிரயத்தாலு | பூதங்களை ஆசிரயித்து |
| 92 | 14 | யுண்டாகின்றது | புண்டாகின்றதோ |
| | 26 | ரூபாந்தரமாக | ரூபாந்தரம் |
| 93 | 17 | பலத்தாலும் (ஆம்) | பலத்தாலும் |
| | 23 | ஹேதுக்களாம் | ஹேதுக்களால் |
| 95 | 10 | காலா)திகளின் | காலா)தி |
| 100 | 30 | ஜக்ரப் | ஜாக்ரப் |
| 101 | 11 | ஜீதேந்திரிய | ஜிதேந்திரிய |
| 102 | 5 | வீர்யகதி | வீர்யாதி |
| 112 | 16 | ஏன்க | என்க |
| 113 | 13 | விருப்புடைச் | பொருட்டுச் |
| 115 | 13 | இரண்டிற்கும் | இரண்டும் |
| 118 | 10 | குதிரையினின்றும் | குதிரை முதலியவற்றினின்றும் |
| | 12 | அதனால் | தெனால் |
| | 13 | அல்லக்கால் | அல்லாக்கால் |
| 121 | 3 | தக்கதாம் | தக்க தன்றாம் |
| | 18 | சரீராதி | சரீராதி(களால்) |
| 122 | 8 | சத் சங்கம் | (சத் சங்கம் முதலியன) |
| | 27 | விசேஷ மின்றிய | விசேஷண மின்றிய |
| 124 | 17 | அவ்வுதாஸீந | ஔதாஸீந |
| | 29 | அஹந்தன்யாதிப் | அஹம்தன்மையாதிப் |
| 133 | 2 | ஸராஸர | சராசர |
| 138 | 9 | தஷிணமாம் | தக்ஷிணமாம் |
| 155 | 2 | கர்ப்பன் | கர்ப்பம் |
| 207 | 26 | பிரஹ்மஹம்ச | பரமஹம்ச |

| | | | |
|---|---|---|---|
| | 27 | பிரஹ்மஹம்ச | பரமஹம்ச |
| 230 | 8 | இடுத வேற்ற | இடுத லேற்றல் |
| 231 | 8 | ஸ்ுக | ஸுக |
| 241 | 5 | நிஷத்தம் | நிஷித்தம் |
| 251 | 27 | கிரீடர்ஸ்த் | கிரீவாஸ்த |
| 253 | 4 | அநுக்கத | அநுகத |
| 258 | 15 | அஸ்த் கியாதி | அஸத் கியாதி |
| 260 | 6 | ரஜ்தம் | ரஜதம் |
| 266 | 30 | पद | यत |
| 268 | 25 | முமுஷு | முமுக்ஷு |
| 274 | 12 | அநிமிதி | அநுமிதி |
| 277 | 10 | பிரத்திக்ஷத்தினால் | பிரத்தியக்ஷத்தினால் |
| 284 | 5 | ஜிவன் | ஜீவந் |
| 285 | 26 | பிரதிம்பித்து | பிரதிபிம்பித்து |
| 289 | 24 | ஆருடமா | ஆரூடமா |
| 293 | 4 | பிரதியோகின் | பிரதியோகியின் |
| 294 | 22 | பிரதீதி யின்மையாயில் | பிரதிதி யின்மையால் |
| 298 | 9 | சநமாமா | சமாநமா |
| 300 | 12 | உத்பதித் | உத்பத்தி |
| 301 | 11 | பூதலஙளின் | பூதலங்களின் |
| 303 | 23 | பிரவிர்தகிப்ப | பிரவிர்த்திப்ப |
| 304 | 23 | மதத்லும் | மதத்திலும் |
| | 31 | மததில் | மதத்திலும் |
| 307 | 8 | முமுக்ஷுக்ககள் | முமுக்ஷுக்கள் |
| 323 | 20 | சேஷ | சேஷர் |
| 328 | 9 | ஆபிந | அபிந |
| ,, | 24 | சத்தியாதிகளில் | சுக்தியாதிகளில் |
| 343 | 18 | கடாஷத்தினாலும் | கடாக்ஷத்தினாலும் |
| 349 | 15 | ஜீவந முக்தி | ஜீவக் முக்தி |
| 354 | 24 | சுததப் | சுத்தப் |
| 359 | 11 | மாக | மகா |
| ,, | 14 | ஔவதம் | ஔஷதம் |
| 376 | 14 | அதில | அதில் |
| 377 | 19 | பதத | பத்த |
| ,, | 21 | சொல்லுதல் | செல்லுததல் |



| | | | |
|---|---|---|---|
| ,, | 30 | கிஹம் | கிரஹம் |
| 379 | 13 | ஸ்வதிகம் | ஸ்வஸ்திகம் |
| ,, | 17 | பிரத்தியத்தின் | பிரத்தியயத்தின் |
| ,, | 20 | யின்றிப | யின்றிய |
| ,, | 21 | பிரத்தியத்தின் | பிரத்தியயத்தின் |
| ,, | 32 | ஜயித்திற்கு | ஜயித்தற்கு |
| 384 | 17 | பிராபல்யததினாலும் | பிராபல்யத்தினாலும் |
| 392 | 16 | அபிமநம் | அபிமாநம் |
| 394 | 9 | ஞநம | ஞாநம் |
| 395 | 16 | எங்ஙனம | எங்ஙனம் |
| 397 | 27 | சந்நிக்ஷ | சந்நிகர்ஷ |
| 398 | 27 | துக்கார | துக்காகார |
| 399 | 17 | விதிக்கப்டாதது | விதிக்கப்படாதது |
| 401 | 26 | லுாவந்ததா | லுவந்ததா |
| 402 | 5 | தன்மை | தன்மை |
| 406 | 21 | காதி எதுள்ள | காதி லுள்ள |
| 411 | 30 | னையிம்னு | னையினும் |
| 412 | 5 | ஆவிர்ப்பாவம | ஆவிர்ப்பாவம் |
| 413 | 19 | அபிப்பிராயப் | அபிப்பிராய |
| ,, | 20 | ஆவிர்பாவம் | ஆவிர்ப்பாவம் |
| 414 | 14 | அநய | அந்ய |
| ,, | 28 | கூறப்பட்டிருக்கின்ற | கூறப்பட்டிருக்கின்றன |
| 415 | 15 | கலையும் | களையும் |
| ,, | 19 | பிளக்கப்படாமையின் | பார்க்கப்படாமையின் |
| ,, | 24 | ''ஹே அர்ஜுந | '' * ஹே அர்ஜுந |
| ,, | 31 | வரியில் பகவத் கீதை 4–25 | பாட்டை படிக்க |
| 417 | 29 | பகவத் கீதை விழியா மென செய்யுளை | 415 பக்கம் 31வது வரியில் படிக்க |
| 418 | 25 | நெருபுப் | நெருப்புப் |
| ,, | 32 | ஜிஜ்ஞஸுக்களும் | ஜிஜ்ஞாசுக்களும் |
| 419 | 12 | அநாமாக்கள் | அநாத்மாக்கள் |
| 421 | 17 | ஸக்ஷி | ஸாக்ஷி |
| 423 | 5 | ஸாமர்தியமும் | ஸாமர்த்தியமும் |
| 434 | 3 | அத்தியாத்மமம் | அத்தியாத்மமாம் |
| 435 | 16 | காலத்தில்க் | காலத்தில் |
| 436 | 13 | அஞ்ஞநம் | அஞ்ஞாநம் |
| ,, | 18 | கலத்தில் | காலத்தில் |
| ,, | 24 | மொழித | மொழிந்த |
| 439 | 17 | சைதநமே | சைதந்யமே |
| 440 | 21 | லம்படனப | லம்படனய |

## விஷயத் தோதி.



## விஷயத் தோதி



# வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா.



## பாயிரம்.

---

சிக்கல்வா முகந்த தேசிக னடியைத் திருவளர் கோவிலூர் வாழு
நக்கன்முத் திராம தேசிக னடியை நல்லரு ணாசல வடியைத்
தக்கசி தம்பர தேசிக னடியைத் தண்டிருக் களரினில் வைகு
மிக்கவீ ரேச தேசிக னடியை மிடிகெடத் திநம்பணிந் திடுவாம்.

கருத்தனைத் தொலைக்கும் விருப்பினர்க் கருளுங் கருணைசெய்
வலம்புரிக் களிற்றை, யொருத்திதெய் வானை வல்லிமா துடனே
யுலவிடுங் குகன்றனை யுலகை, விருத்திசெய் யமுத வல்லியம் பிகையை
விரும்புபா ரிஜாதக்காட் டிறையை, விருத்திக ளொடுங்க வருளிடும்
வீர சேகர விறைபதம் பணிவாம்.

யாவரும் புகழு மிந்திப்பா ஷையிற்று ளிரும்மூலச் சந்திர
ஞாநி, எவரும் வேதாந் தபதார்த்தமஞ் ஜுஷா வென்னுமின்
னூலது தன்னைத், தேவரும் புகழெண் ணூற்றினோ டிரண்டு திகழ்
பதார்த் தங்களாச் செய்தான், தாவருங் காசி காநந்தத் துறவோன்
சமைத்தனன் றமிழினு லதனை.

கோவிலூர் மடம், திருக் களர்.
ஸ்ரீவீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் மாணாக்கர்



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்
திருப் பூவண மடம்.

மண்டலேசுவரர், பரசமய கோளரியார்.

श्री काशिकानंत ज्ञानाचार्य स्वामिनः तिरुप्पूवण मठः ॥

உ

## பாயிரம்.

---

சிக்கல்வா முகந்த தேசிக னடியைத் திருவளர் கோவிலூர் வாழு
நக்கன்முத் திராம தேசிக னடியை நல்லரு ணாசல வடியைத்
தக்கசி தம்பர தேசிக னடியைத் தண்டிருக் களரினில் வைகு
மிக்கவீ ரேச தேசிக னடியை மிடிகெடத் திரம்பணிந் திடுவாம்.

கருத்தனைத் தொலைக்கும் விருப்பினர்க் கருளுங் கருணைசெய்
வலம்புரிக் களிற்றை, யொருத்திதெய் வானை வல்லிமா துடனே
புலவிடுங் குகன்றனை யுலகை, விருத்திசெய் யமுத வல்லியம் பிகையை
விரும்புபா ரிஜாதக்காட் டிறையை, விருத்திக ளொடுங்க வருளிடும்
வீர சேகர விறைபதம் பணிவாம்.

யாவரும் புகழு மிருப்பா ஷையிற்று ணிரும்மூலச் சந்திர
ஞானி, எவரும் வேதாந் தபதார்த்தமஞ் ஜூஷா வென்னுமின்
ஞாலது தன்னைத், தேவரும் புகழெண் ணூற்றினோ டிரண்டு திகழ்
பதார்த் தங்களாச் செய்தான், தாவருங் காசி காநந்தத் துறவோன்
சமைத்தனன் தமிழினு லதனை.

கோவிலூர் மடம், திருக்களர்.

ஸ்ரீவீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் மாணக்க



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்
திருப்பூவண மடம்.

மண்டலேசுவரர், பரசமய கோளரியார்.

श्री काशिकानंत ज्ञानाचार्य स्वामिनः तिरुप्पूवण मठः ॥

ஓம்

தத் சத்

பரப்பிரஹ்மணே நம :.

# வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா.

## (வேதாந்த பதார்த்த நிகண்டு.)

### மங்கலம்.

திருவமர் சிவன்றன் சுதனுமா யிடரைத் தீர்த்துமே வரங்களை யீந்தும், அருளமர் குரவர் வணங்கவு முரியோ னருவா மீயுமுத் தமனும், தெருள்விழி யோர்க ளாலுமே பூசை செய்யவே யுரியவ னாகும், இருள்கெடக் கணேசன் பதங்களை யென்று மிருதய மதனிலே வைப்பாம். 1

எவரிக் கலியில் மாணுக்க ரிணையிற் பாரம் பரியத்தாற்
சருவ வுலகத் தவரையுமே சம்சா ரத்தி னகற்றினரோ
எவர்வே தத்தின் முக்காண்ட மிணையிற் பொருளை விளக்கினரோ
அவர்நா னக்கா சாரியரை யகத்தி னன்றுன் கொள்ளுவனே. 2

பிரமவித்தை யினைநன்கு யீந்தோ னுயும் பிரமத்திற் சேர்ப்பித் தோ னுயு னன்கிங், கரியமறை புகலுவதாங் கிருஷ்ண ரூப மானவனுங் குருவினது நற்சி ரேட்டன், பிரியமுள சேஷனுங் குருவை நித்தம் பிறங்குமக கமலமதி னிலேக்க வைத்து, உரிமையுடன் வாழ்த்தியே பணிதல் செய்வா முண்மையிலஞ் ஞானமதை யொழிக்கத் தானே. 3



## நூல்.

வேதாந்த சஞ்ஞா வென்னும் பெயரை யுடைய பிரகரணம், அறியப்படாத பெயரை யுடைய ஒரு தயாளு புருஷரால் மந்த மதியுடைய ஜிஞ்ஞாசுக்கட்கு வேதாந்த சாஸ்திர சிரவணாதியில் பிரவிர்த்தியின்பொருட்டும் பிரவேசத்தின்பொருட்டும் முன்ன ரியற்றப்பட்டதாம். அது இரண்டு மூன்று முதலிய எண்ணிக்கைகளின் கிரமத்தால் வேதாந்த உபயோகி பதார்த்தங்கள் நாமத்தினால் கீர்த்திக்கப்பட்டிருக்கின்றது ; பதார்த்தங்களின் சம்பந்தக் கிரமத்தால் இயற்றப்பட்டதன்றும். மற்றும், அதன் சிற்சில விடங்களில்பதார்த்தங்களினது லட்சணமும் புத்தியநுசாரமாக எழுதப்பட்டிருக்கின்றது. அங்ஙனமாயினும், அதிகாரிகட்கு வேதாந்தத்தின் சிரவணத்தில் அபேட்சிக்கப்பட்ட பதார்த்தங்கட்குக் கேவல நாம சிரவணத்தினால் அவற்றி(பதார்த்தங்களி)ன் வேறு வேறாய விசேஷ போத மெங்ஙன முண்டாம்? மற்றும், போத மின்றி வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணாதியில் பிரவிர்த்தியும் பிரவேசமும் எங்ஙன முண்டாம்? பின்னும், வஸ்துவினது ஸ்பஷ்ட போத மின்றி வஸ்துவினது ஹாந உபாதாந (விடுதல் கொள்ளுதல்) புத்தி எங்ஙன முண்டாம்? இன்னும், வேதாந்தத்தில் பிரவிர்த்தியும் பிரவேசமு மின்றி இப்பிரகரணம் அதிகாரிகட்கு மிகுந்த உபகாரத்தைச்செய்வது எங்ஙனமாம்? அதனால், நான் எனதுசமீபத்தி லிருப்பவ (சிஷ்ய) ர்களது அதிஆக்ரகத்தின் வசமாய்ப் புத்தி அநுசாரமாகப் பதார்த்த மஞ்ஜூஷா என்னும் பெயரினையுடையபிரகரணத்தைச்செய்கின்றேன். இந்தக்கிரந்தம் வேதாந்த பதார்த்த நிரூபகத்தன்மையால் அதன் சம்பந்தியாகலின், விஷயாதி அநுபந்த சதுஷ்டயத்தை இதற்குப் பிந்நமாகக் கூற வில்லை; ஏதனா லெனின், அவ்(வேதாந்த) அநுபந்தத்தானும், இதனது தத்துவத்தை (அநுபந்தத்தை) யறிந்தவனாகலின். இந்த ஜந்மத்தில், அல்லது, ஜந்மாந்தரத்தில் அநுஷ்டிக்கப்பட்ட ஹரி ஆராதநாதி நிஷ்காம கர்மத்தினால் சுத்தமான அந்தக்கரணம் எவனுக் கிருக்கின்றதோ, ஸ்திரீ தநாதி விஷயங்களில் ராகத்தன்மை விடுபட்டதனால் எவன் விரக்தனோ, புத்தியின் மந்தத்தன்மையால் வேதாந்த சிரவணத்தின்கண் எவன் அநதிகாரியோ, அவனுக்கு, அதிகாரப் பிராப்தியின்பொருட்டு இந்தப் பிரகரணத்தில் வேதாந்தத்தின் உபயோக மிருக்கின்றது. அதில் (வேதாந்த சஞ்ஞையில்) கூறியதும்



அதன் அதிரிக்தமு (அடங்காதது)மான பதார்த்தங்களின் நாமத்தைக் கூறும்வாயிலாக அவ்வெண்ணிக்கையின் அநுசாரமாக வேறு வேறு அசாதாரண லட்சண சொரூபப் பிரயோஜந காரணாதிகளைக் கூறுகின்றேன். அதையும் கிரந்தம் விஸ்தார மாகு மென்னும் பயத்தினால் சங்கை சமாதாந சலந அந்வயரூபப் பதயோஜநை யின்றி அதிகாரிகட்கு மிகுந்த உபகாரத்தினது சித்தியின்பொருட்டுக் கூறுகின்றேன். எதை ஈண்டு அதிகாரிகள் மீண்டுமீண்டு மப்பியாசித்து விசேஷமாக அறிந்து வேதாந்த சிரவணத்தில் அதிகாரியாய்விட்டனரோ அவர்களும் சுகமாக அவ்வப் பதார்த்தங்களைக் குருமுக வாயிலாச் சீக்கிர மறிந்து கொள்ளுவார்கள். அதன் பின்னர் விடத்தக்க அநாத்மபதார்த்தங்களின் தியாகபூர்வகம் கொள்ளத்தக்க பிரஹ்மாத்மைகத்வ ஞாநத்திற்குச் சாதநமான அந்தரங்க பகிரங்க சாதநங்களைச் சம்பாதித்து, பிரஹ்மசொரூபமா யிருக்கும் மோக்ஷத்தை யடைவார்கள். "அத்தியாரோப அபவாதமாகிய இவ்விரண்டினால் பிரபஞ்சாதீதப் பிரஹ்மமானது ஆசாரியரால் முமுக்ஷுக்கட்கு ஞாநத்தின்பொருட்டுப் போதிக்கப்படுகின்றது" என்னும் பெரியோர்கள் வசந மிருத்தலின்,

அதன் அநுசாரமாக ஈண்டும் அத்தியாரோப பதார்த்தங்களின் லட்சணங் கூறப்படுகின்றது.

வஸ்துவின்கண் அவஸ்துவினது ஆரோபம் அத்யாரோப மெனப்படும். ஆரோப மெனினும் அவபாச மெனினும் அத்தியாச மெனினும் அந்யதா (வேறு விதமாக) பாந மெனினும் ஆம். அதிஷ்டாந சச்சிதாநந்த ரூபப் பிரஹ்மம் வஸ்து எனப்படும்; அதிஷ்டாநப் பிரஹ்மத்தில் கற்பிக்கப்படுகின்ற அஞ்ஞாநாதி சகல ஜகத் சமுதாய ரூப மகாப் பிரபஞ்சம் அவஸ்து எனப்படும். அம் மகாப் பிரபஞ்சத்தினுள் அந்தர்க்கதமான அவாந்தர பதார்த்தங்களினது எண்ணிக்கையையும், ஔபாதிகப் பிரஹ்மத்தினது பேதத்தையும் பிரதமத்திற் கூறுவாம்:—

### இரண்டு தொகுதியாய வஸ்துக்கள்.

**1**— 1. பிரபஞ்சம், 2. அஞ்ஞாநம், 3. சூக்ஷ்மசரீரம், 4. ஸ்தூல சரீரம், 5. அஞ்ஞாநத்தினது சக்தி, 6. மோக்ஷம், 7. சம்சயம், 8. அசம்பாவனை, 9. விபரீதபாவனை, 10. பிரஞ்ஞை, 11. சமாதி, 12. பரமஹம்ச சந்யாசம், 13. நிக்ரஹம், 14. அகங்காரம், 15. சப்

தம், 16. கந்தம், 17. அத்யாத்ம தாபம், 18, வாதம், 19. வாக்யம், 20. லட்சணம், 21. சம்பத்தி, 22. அத்தியாசம், 23. உபாசனை, 24. ஜாதி, 25. சப்த சங்கதி.

மூன்று தொகுதியாய வஸ்துக்கள்.

**2**— 1. பிரஹ்மம், 2. ஜீவன், 3. சரீரம், 4. அவஸ்தை, 5. கரணம், 6. கர்மம், 7. புண்ய கர்மம், 8. பாப கர்மம், 9 மிஸ்ர கர்மம், 10. பிராரப்தம், 11. பிரதிபந்தம், 12. சம்பந்தம், 13. தாபம், 14. அத்யாத்மாதி, 15. காரண வாதம், 16. குணம், 17. காலம், 18. மூர்த்தி, 19. ஞாதாதி, 20. பிரபஞ்சம், 21. லோகம், 22. ஞானப் பிரதிபந்தகம், 23. வாசனை, 24. சிரவணாதி, 25. சிரவணாதியின்பலன், 26. ஞானாதி, 27. ஹேத்வாதி, 28. அவதி, 29. பிராணயாமம், 30. குருட்டுத் தன்மை முதலியன, 31. தாதாத்மியம், 32. நிவிர்த்தி, 33. ஏஷணை, 34. சுழுத்தியாதி, 35. ஆநந்தம், 36. கர்மம், 37. ஜாக்ரம், 38. சொப்பநம், 39. சுழுத்தி, 40. ஆத்மா, 41. ஸ்வர்க்க தாபம், 42. நாதாதி, 43. அர்த்தவாதம், 44. விதிவாக்யம், 45. வேதத்தின் காண்டம், 46. அந்தக்கரண மலம், 47. ஆத்மாவின் பேதம், 48. கர்த்தவ்யாதி, 49. கர்ம விகர்மாதி, 50. உத்தேசாதி, 51. லக்ஷணதோஷம், 52. வாதாதி.

நான்கு தொகுதியாய வஸ்துக்கள்.

**3**— 1. வர்த்தமானப் பிரதிபந்தம், 2. பிரதிபந்த நிவிர்த்தி ஹேது, 3. புருஷார்த்தம், 4. சப்தப் பிரவிர்த்தி நிமித்தம், 5. வர்ணம், 6. ஆஸ்ரமம், 7. விவேகாதி, 8. அநுபந்தம், 9. அந்தக்கரணம், 10. வேதம், 11. பிரமாணம், 12. சமாதி விக்நம், 13. மைத்ரியாதி, 14. பூதக்கிராமம், 15. பிரஹ்மவித்தாதி, 16. சந்யாசம், 17. யோக பூமி, 18. யுக்தி, 19. ஸ்பர்சம், 20. ஆர்த்தன் முதலிய பக்தர், 21. உத்பத்தியாதி கிரியா, 22. பூஜா பாத்ரம், 23. தர்மாதி, 24. மோக்ஷத் துவாரபாலர்.

ஐந்து தொகுதியாய வஸ்துக்கள்.

**4**— 1. கோசம், 2. ஞானேந்திரியம், 3. சப்தாதி, 4. கர்மேந்திரியம், 5. வசநாதி, 6. பிராணாதி, 7. உப வாயு, 8. கர்மம், 9. சூக்ஷ்ம பூதம், 10. ஸ்தூல பூதம், 11. யமம், 12. நியமம், 13. யோக பூமிகை, 14. பிரளயம், 15. பிரமம் (பிராந்தி) 16 பிராந்தி நிவிர்த்தியின் பிரகாரம், 17. திருஷ்டாந்தம், 18. கியாதி, 19. கிலேசம், 20. ஜீவந் முக்தியின் பிரயோஜநம், 21. மஹா யக்ஞம், 22. அஞ்ஞானத்தின் பேதம், 23. ஹேத்வாபாசம், 24. பேதம், 25. அபாவம்.



ஆறு தொகுதியாய வஸ்துக்கள்.

**5**— 1. சமாதி, 2. சத்ருவர்க்கம், 3. விகாரம், 4. கௌசிகம், 5. ஊர்மி, 6. லிங்கம், 7. அவஸ்தை, 8. சாஸ்திரம், 9. சூத்திரம், 10. வேதாங்கம், 11. கர்மம், 12. பிரமாணம், 13. சமமாதி, 14. ஜிக்வை யின்மை யாதி, 15. பிராந்தி, 16. ரசம், 17. ஈசுவரனது ஐஸ்வரியம், 18. ஈசுவரனது ஞானம், 19. அநாதி பதார்த்தம்.

ஏழு தொகுதியாய வஸ்துக்கள்.

**6**—1. அவஸ்தை, 2. சைதந்யம், 3. பூராதி லோகம், 4. அதலாதி பாதாளம், 5. பூமிகை, 6. மௌனாதி, 7. தாது, 8. வியசநம், 9. ரூபம், 10. திரவியாதி பதார்த்தம்.

எட்டுத் தொகுதியாய வஸ்துக்கள்.

**7**— 1. புரி, 2. பிரகிருதி, 3. சமாதியின் அங்கம், 4. பிரமசரியத்தின் அங்கம், 5. பாசம், 6. மதம், 7. மூர்த்தி மதம், 8. சப்தத்தின் சக்தியைக் கிரகிக்கும் காரணம்.

ஒன்பது தொகுதியாய வஸ்துக்கள்.

**8**— 1. சம்சாரம், 2. தத்துவம்.

பத்துத் தொகுதியாய வஸ்துக்கள்.

**9**— 1. நாடியின் தேவதை, 2. சிருங்காராதி ரசம்.

பதினொரு தொகுதியாய வஸ்து.

**10**— 1. ஞான சாதநம்.

பன்னிரண்டு தொகுதியாய வஸ்துக்கள்.

**11**— 1. ஆத்மாநாத்மாக்களின் தர்மம், 2. மஹத்துத் தன்மையின் காரண தர்மம், 3. பிராமணர்களின் விரதம்.

பதின்மூன்று தொகுதியாய வஸ்து.

**12**— 1. பாகவத தர்மம்

பதிநான்கு தோகுதியாய வஸ்து.

**13**— 1. திரிபுடி.

பதினைந்து தோகுதியாய வஸ்து.

**14**— 1. மாயையின் பெயர்.

பிரதானத் தன்மையாக இவ்வளவு பதார்த்தங்களின் பெயர் அத்யாத்ம சாஸ்திரங்களில் ஆண்டாண்டு ஆச்சாரியர்களால் வேறு வேறு பிரயோசநத்தின் பொருட்டுக் கூறப்பட்டிருக்கின்றது. இப்பொழுது கிரமமாக அப்பதார்த்தங்களினது சொரூபமும், லட்சணாதிகளும் நிரூபணஞ் செய்யப்படுகின்றன.

அவற்றுள், முதலில் அவஸ்து சப்தத்தினாற் கூறப்பட்ட அஞ்ஞாந மகாப் பிரபஞ்சத்தை எழுதுவாம். எது சத் அசத் என்னு மிரண்டு சப்தங்களால் அநிர்வசநீய திரிகுணாத்மக ஞாந விரோதி "நான் அஞ்ஞன்" என்னும் அநுபவத்தினது பலத்தினால் பாவரூபத்தாற் கூறுவதற்கு யோக்யமா யிருக்கின்றதோ அஃது அஞ்ஞாந மெனப்படுகின்றது. அவ்வஞ்ஞாநம் மூல காரண மாகலானும், சத்துவ ரஜஸ் தமோ குண சாம்யாவஸ்தா ரூபமாகலானும், மூலப் பிரகிருதி யென்றும், பிரதாந மென்றுங் கூறப்படுகின்றது (அது) சர்வப் பிரபஞ்சத்தினது லயத்திற்கு ஆதாரமா யிருத்தலின், பிரளய மென்று கூறப்படுகின்றது ; இந்திரியங்கட்கு அவிஷயமாகலின் அவ்யக்த மென்று கூறப்படுகின்றது ; ஆகிருதியினது அபாவத்தினால், அவ்யாகிருத மெனப்படுகின்றது; சர்வ சுழுத்திகளுக்கும் ஆதாரமா யிருத்தலின், மகாசுழுத்தி யென்று கூறப்படுகின்றது; கூடம் போன்று நிர்விகாரப் பிரஹ்மத்தில் கற்பித தாதாத்மிய சம்பந்தத்தினால் நிலைத்திருத்தலின், கூடஸ்த மெனப் படுகின்றது; உபநிஷத் பிரமாண ஜந்யப் பிரமா ஞாந மின்றி நாசமின்மையின், அக்ஷர மெனப் படுகின்றது.

மகாப் பிரபஞ்சம்.

ஸ்தூல, சூக்ஷ்ம, காரணப் பிரபஞ்சத்தின் சமுதாய மெதுவோ அது மகாப் பிரபஞ்சமாம். பஞ்சீகரணஞ் செய்த ஆகாசாதி பஞ்ச மகா பூதமும், அதன் காரிய சதுர்வித அண்டஜாதி சரீரமும் ஸ்தூலப் பிரபஞ்ச மெனப்படும். அபஞ்சீகிருத பஞ்சமகா பூதமும், அதன் காரிய அந்தக்கரணாதி சமுதாயமும் சூக்ஷ்மப் பிரபஞ்ச மெனப்படும். இவ்விரண்டு பிரபஞ்சத்திற்கும் காரணமாய [illegible]



காரணப் பிரபஞ்ச மெனப்படும். பிரபஞ்சத்திற்குக் காரணமா யிருத்தலின், அஞ்ஞாநமும் பிரபஞ்ச மெனப்படும்.

**1**—25. இரண்டு தோகுதியாய வஸ்துக்கள்.

**1**—1. பிரபஞ்சம்.

இப்பொழுது மகாப் பிரபஞ்சத்தில் அந்தர்க்கதமாய பதார்த்தங்கட்குக் கிரமமாகச் சொரூபாதிகளைக் கூறுவாம். பாகியப் பிரபஞ்ச-ஆந்தரப் பிரபஞ்ச பேதத்தினால், பிரபஞ்சம் இரண்டு வகைத்தாம்.

(1). பாகியப் பிரபஞ்சம்.

(1) அவற்றுள் முதலதைக் கூறுவாம். பிருதிவியாதி பஞ்ச பூதமும், அவற்றினின்றுண்டாகிய பிரமாண்டமும், அதனுளடங்கிய மேன்மேலுள்ள பூர், புவ, சுவர், மகர், ஜந, தப, சத்தியம் என்னும் பெயரை யுடையதும், கீழ்க்கீழுள்ள அதல, விதல, சுதல, தலாதல, மகாதல, ரசாதல, பாதால மென்னும் பெயரையுடையதுமான சதுர்த்தச புவநங்களும், அவற்றிலுள்ள சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் என்னும் பெயரையுடைய சதுர்வித பூதக் கிராம சமுதாயமும், யதா யோக்கிய நாநாவித நாமம், ரூபம், குணம், தர்மம், சக்திகளினது ஆச்ரயமும், அவ்வவ் லோக உசித அந்நபாநாதி போகமுமாய இவ்வெல்லாம் பாகியப் பிரபஞ்சமாம். ஸ்தூல பூத காரியத் தன்மையால் இந்திரிய கோசரமாகலின், அது தத் பதார்த்தத்தினது உபாதியாம்.

(2). ஆந்தரப் பிரபஞ்சம்.

(2) இரண்டாவதை யெழுதுவாம். அந்நமயாதி பஞ்ச கோசம், ஸ்தூலாதி மூன்று சரீரம், அவற்றின் சம்பந்தமாய இருத்தல் என்பதாதி சட்பாவ விகாரம், துவக் மாம்சாதி சட்கோசம், உண்ணல் பருகலாதி சடூர்மி, சுரோத்ராதி ஞாநேந்திரிய பஞ்சகம், வாக்காதி கர்மேந்திரிய பஞ்சகம், பிராணாதி வாயு பஞ்சகம், மநாதி அந்தக்கரண சதுஷ்டயம், சங்கல்பாதி நான்கு அந்தக்கரண வியாபாரம், மூன்று அவஸ்தை, அவற்றின் சம்பந்தி வியாபாரம், அவற்றின் அபிமானியாய விச்வ, தைஜத, பிராக்ஞ ஜீவன், சமாதி - மூர்ச்சை - மரணமாகிய மூன்றவஸ்தை, காமக் - குரோதாதி அரி ஷட்வர்க்கம், விவேகாதி சாதந சதுஷ்டயம், சாத்விகாதி முக்குணங்கள், சுக துக்க-ஞாந அஞ்ஞாந-அவித்யாதி பஞ்சக் கிலேசங்கள், மைத்திரியாதி

நான்கு, விபர்யய பிரமாணாதி பஞ்ச விருத்தி, யம-நியம-ஆசநாதி அஷ்டாங்க யோகம், பிரத்தியட்சாதி ஆறு-அல்லது நான்கு பிரமாணம், ரோக-அரோகாதி சமுதாய யோக்கிய நாநாவித நாம-ரூப-குண-தர்ம சக்தியினது ஆஸ்ரயம் ஆய எல்லாம் ஈண்டு ஆந்தரப் பிரபஞ்சமாம்; பாகியப் பிரபஞ்சத்தின் உள்ளிருக்கும் நான்குவித சரீரத்தின் சம்பந்தியாகலானும், ஆகாசாதி பாகிய பதார்த்தத்தின் அபேட்சையால் ஆந்தரமாகலானும், அது துவம்பதார்த்தத்தினது உபாதியாம்.

## 1—2. அஞ்ஞானம்.

இரண்டு விதமான அஞ்ஞானத்தைக் கூறுவாம். சமஷ்டி - வியஷ்டி பேதத்தினால் அஞ்ஞானம் இரண்டு வகைத்தாம். அவற்றுள், சமஷ்டி அபிப்பிராயத்தினால் அஞ்ஞானத்தின் ஏகத்தன்மை கூறப்படுகின்றது ; வியஷ்டி அபிப்பிராயத்தினால் நாநாத்தன்மை கூறப்படுகின்றது.

### (1) சமஷ்டி அஞ்ஞானம்.

(1) சமஷ்டி அஞ்ஞானம் ஈசுவரனது உபாதியாம். அஃது உத்கிருஷ்ட உபாதித் தன்மையால் ரஜசு - தமசுக்களின் மிசிர மின்றிய விசுத்த சத்துவப் பிரதான மாயை யென்றுங் கூறப்படுகின்றது; சகலத்திற்குங் காரணமாதலின் காரண சரீரமாம்; ஆநந்தத்தின் மிகுதித் தன்மையாலும், கட்கத்தின் உறை போன்று ஆத்மாவின் ஆச்சாதனமா (மறைப்பா)கலானும் ஆநந்தமய கோச மென்றுங் கூறப்படுகின்றது; சர்வத்தின் லய ஸ்தாநமாகலான் சுழுத்தி என்றும், சமஷ்டி ஸ்தூல-சூக்ஷ்ம சரீரங்களின் லயஸ்தாந மென்றுங் கூறப்படுகின்றது.

### (2) வியஷ்டி அஞ்ஞானம்.

(2) வியஷ்டி அஞ்ஞானம் பிராஞ்ஞ ஜீவனது உபாதியாம். இது நிக்கிருஷ்ட உபாதித்தன்மையால் ரஜஸ்-தமஸ் கலந்த மலிந சத்துவப் பிரதாந அவித்தை எனப்படுகின்றது ; அகங்காராதிகளுக்குக் காரணமாகலின் காரண சரீரமாம். ஆநந்தத்தின் அதிகத் தன்மையானும், உறை போன்று ஆத்மாவின் மறைப்பாகலானும், ஆநந்தமய கோச மெனப்படுகின்றது; அகங்காராதி சர்வத்தின் லயத்திற்கு மாதாரமாகலின் சுழுத்தியென்றும், வியஷ்டி ஸ்தூல-சூட்சும சரீரங்களின் லயஸ்தாநமென்றுங் கூறப்படுகின்றது.



## 1—3. சூக்ஷ்ம சரீரம்.

இருவிதச் சூக்ஷ்ம சரீரத்தைக் கூறுவாம். சமஷ்டி வியஷ்டி பேதத்தினால் சூக்ஷ்ம சரீரம் இரண்டு விதமாம்.

### (1) சமஷ்டி சூக்ஷ்ம சரீரம்.

(1) சகல சூக்ஷ்ம சரீரங்களின் ஏகபுத்தியின் விஷயத்தன்மையால் வநம் போன்று, அல்லது ஜல ஸ்தாநம் (தடாகம்) போன்று எது கிரகிக்கப்படுகின்றதோ அது சமஷ்டி சூக்ஷ்ம சரீர மெனப்படும்; சூக்ஷ்ம பூதத்தின் காரியத்தன்மை யாகலானும், பாகியேந்திரிய அகோசரத் தன்மை யாகலானும் சூக்ஷ்ம மெனப்படுகின்றது; நாச முடையதாகலின், சரீர மெனவும் படுகின்றது.

ஒவ்வொரு சூக்ஷ்ம சரீரத்தின் அநேக புத்தி விஷயத் தன்மையால் விருட்சம் போன்று, அல்லது ஒவ்வொரு ஜலம் போன்று எது கிரகிக்கப் படுகின்றதோ அது வியஷ்டி சூக்ஷ்ம சரீர மெனப்படும். சமஷ்டி சூக்ஷ்ம சரீரம் ஹிரண்யகர்ப்பனது உபாதியாம்; (அது) விஞ்ஞாநமயாதி மூன்று கோச ரூப சமஷ்டி ஸ்தூல சரீரத்தினது லய ஸ்தாந மெனவும், ஜாக்ரத் வாசநாமய மாகலின் சொப்பந மெனவுங் கூறப்படுகின்றது ; எதனா லெனின், ஹிரண்யகர்ப்பனிடத்தில் ஜீவத்தன்மையை யபேட்சித்துச் சாக்ராதிகளின் சம்பவமாகலின்.

### (2) வியஷ்டி சூக்ஷ்ம சரீரம்.

(2)ஒவ்வொரு சூக்ஷ்ம சரீரமும் சக்ஷுராதிகளின் அவிஷயமாகலானும், பூத சூக்ஷ்மத்தின் காரியத்தன்மை யாகலானும், ஸ்தூல சரீரத்தின் அபேக்ஷையால் சூக்ஷ்ம மாகலானும், வியஷ்டி சூக்ஷ்ம சரீர மெனப்படுகின்றது அது தைஜசசீவனது உபாதியாம்; விஞ்ஞாநமயாதி முக் கோச ரூபமாம்;ஜாக்ரத் வாசநாமய மாகலானும், சூக்ஷ்ம போகத்தின் ஸ்தாநமாகலானும் சொப்பந மெனவும், வியஷ்டி சூக்ஷ்ம சரீரத்தின் லய ஸ்தாந மெனவுங் கூறப்படுகின்றது.

## 1—4. ஸ்தூல சரீரம்.

இரண்டு வித ஸ்தூல சரீரத்தைக் கூறுவாம். சமஷ்டி வியஷ்டி பேதத்தினால் ஸ்தூல சரீரம் இரண்டு வகைத்தாம்.

(1) சமஷ்டி ஸ்தூல சரீரம்

(1) சராயுஜம்,அண்டஜம்,சுவேதஜம்,உற்பிஜம் என்னும் பெயரை
யுடைய சதுர்விதச் சகல சரீரங்களும், வநம் போன்று அல்லது ஜலா
சயம்போன்று ஏக புத்தி விஷயத் தன்மையாகாலனும் சமஷ்டி சூக்ஷ்ம
சரீரத்தி னபேக்ஷையால் ஸ்தூலமாகலானும் ஸ்தூல பஞ்ச பூத காரிய
மாகலானும் சமஷ்டி ஸ்தூல சரீர மெனப்படுகின்றது. அது விராட்
டின் உபாதியாம்; அந்நத்தின் விகார மாகலானும், ஜீவனது அபேட்
க்ஷையால் உறை போன்று ஆத்மாவை மறைத்தலானும் அந்நமய
கோச மெனப்படுகின்றது; ஸ்தூல போகத்தி னுயதந மாகலின் ஜாக்ர
மெனவும் படுகின்றது.

(2) வியஷ்டி ஸ்தூல சரீரம்.

(2) முற்புகன்ற நான்குவித ஸ்தூல சரீரத்துள் ஒவ்வொன்றும்
விருக்ஷம் போன்று அல்லது ஜலம் போன்று அநேக புத்தியின் விஷ
யத் தன்மையாக லானும், சூக்ஷ்ம சரீரத்தி னபேக்ஷபால் ஸ்தூல
மாகலானும், வியஷ்டி ஸ்தூல சரீர மெனப்படுகின்றது. அது விஶ்வ
ஜீவனது உபாதியாம்;அந்நத்தின் விகாரமாகலானும்,கோசம் போன்று
ஆத்மாவை மறைப்பதாகலானும், அந்நமய கோச மெனப்படுகின்றது;
ஸ்தூல போகத்தினது ஆயதநமாகலின், ஜாக்ர மெனவும் படுகின்
றது.

**1**—5. அஞ்ஞாநத்தினது சக்தி.

அஞ்ஞாநத்தின் இரண்டுவிதச் சக்தியைக் கூறுவாம். ஆவரண
விக்ஷேப பேதத்தினல் அஞ்ஞாநத்தின் சக்தி இரண்டு வகைத்தாம்.

(1) ஆவரண சக்தி.

(1) ஆந்தரத் திருக் திருசிய மென்னும் இரண்டன் பேதத்தையும்,
பாகியப் பிரஹ்ம சர்க்கம் (சிருஷ்டி) என்னும் இரண்டன் பேதத்தை
யும், அல்லது தனதாத்மாவைப் பார்க்கும் புத்தியை,அல்லது ஜீவனது
அகண்ட சச்சிதாநந்த சொரூபத்தை யெதனல் அஞ்ஞாநம் ஆவரணஞ்
செய்கின்றதோ அஃது ஆவரண சக்தியாம்.

(2) விட்சேப சக்தி.

(2) எதனல் அதிஷ்டாநப் பிரஹ்மத்தில் லிங்காதி பிரம்மாண்ட
பரியந்தம் நாநாவிதச் சொரூபத்தினல் விட்சேபத்தை யடைந்து பரி
ணமமாகின்றதோ அது விட்சேப சக்தியாம்.



(ஈண்டு அஞ்ஞாநாதிகளைக் கூறுவதற்கு இது தாத்பர்யமாம். அஞ்
ஞாநமும் அதன் காரிய இரண்டுவிதச் சரீரமு மின்றி ஜீவேசுவரர்களது
சொரூபம் சித்தியாவ தின்று; அவற்றின் சித்தி யின்றி மகாவாக்கியத்
தின்க ணுள்ள தத்துவ மென்னு மிரு பதங்களின் வாச்சியார்த்தம் சித்
தியாவ தின்று; வாச்சியார்த்தத்தின் சித்தி யின்றி லட்சியார்த்த ரூப
இரண்டு சேதநங்களினது அத்தியந்த ஏகத்துவரூப வாச்சியார்த்தம்
சித்தியாவ தின்று; வாக்கியார்த்த சித்தி யின்றி அதனை விஷயமாக
வுடைய மகா வாக்ய ஜந்ய அபரோக்ஷ ஞாநம் சித்தமாவ தின்று; ஞாந
மின்றிப் பிரஹ்மத்தின் நிலைத்திருத்தல்ரூப மோட்சமும் சித்தமாவ
தின்று. அதனல், அவற்றின் சித்தியின் பொருட்டு அஞ்ஞாநாதிகட்கு
வேதாந்தத்தில் அத்தியந்த உபயோக மிருத்தலின், கிரந்தக்காரரும்
ஆரோப அநுவாத அவஸ்தையில் தத்தம் கிரந்தங்களின் ஆதியில்
இதனை நிரூபணஞ் செய்தனர். அதனல், ஈண்டும் அதனை முதற்கண்
கூறினும். அல்லது, ஆவரண சகித அஞ்ஞாந நிஷேதமும் அதன்
காரிய அத்தியாச நிஷேதமும் அத்வைத சித்தாந்தத்தில் விசாரிக்கப்
பட்ட மகாவாக்ய ஜந்ய அபரோட்ச விருத்தியின் பல மென்று கூறப்
பட் டிருக்கின்றது. அந்த நிஷேதம் அஞ்ஞாநாதி நிஷேதிக்கப்படும்
வஸ்து வின்றிப் பொருத்தமாவ தில்லை. அதனல் அஞ்ஞாநாதிகளின்
நிரூபணம் வேதாந்த வாக்கியார்த்த ரூப அத்விதீயப் பிரஹ்ம நிரூப
ணத்தில் சிஷ்ய போதத்தின் பொருட்டு அத்யந்த உபயோகமாம்.
அதனல் ஈண்டும் அஞ்ஞாநாதிகளை முதற்கண் கூறினும்).

**1**—6 மோக்ஷம்.

இரண்டு வித மோக்ஷத்தை எழுதுவாம். அநர்த்த நிவிர்த்தி,
ஆநந்தப் பிராப்தியின் பேதத்தினல் மோட்சம் இரண்டு வகைத்தாம்.

(1) அநர்த்த நிவிர்த்தி.

(1) விசாரிக்கப்பட்ட மகாவாக்கிய ஜந்ய அபரோட்ச ஞாநத்தினல்
சோதிக்கப்பட்ட ஆத்மாவில் எந்த அத்தியஸ்த கர்த்திருத்வாதி சகல
பந்தத்தின் நிவிர்த்தியாம் அது பிரதம மோட்சமாம். நிவிர்த்தி யென்
பது மித்தியாப் பிரதீதி சொரூப நாச மன்று; ஏனெனின், எதற்குப்
பிராரத்த கர்மத்தினல் பிரதிபந்த மிருத்தலானும், ஞாநத்திற்கு உண்

மையாக வஸ்துப் பிரகாச சுபாவத் தன்மையால் தொம்சரூப நிவர்த்தியை யுண்டாக்காமையானு மென்க.

(2) ஆநந்தப் பிராப்தி.

(2) பூமியின் பேதத்தினால் எது விருத்தியோடு கூடியதும், விருத்தி யின்றியதுமான இரண்டுவித ஆநந்தத்தின் பிராப்தியாம் அஃது இரண்டாவது மோக்ஷமாம். பிராப்தி யென்பது இருவிதஆவரண பங்க பூர்வகம் சொப்பிரகாசத் தன்மையால் பாநமாம். ஆநந்தத்தை ஆத்ம ரூபத்தன்மையால் சதா அடைந்திருத்தலின் வித்தியாநந்தம் விருத்தியோடு கூடிய ஆநந்தமாம். அது பிரஹ்மவித்திற்குப் பிராப்தமாம். எதனால் பிரஹ்மாநந்தம் விருத்தி யின்றிய ஆநந்தமாம், அது ஜீவன் முத்தனுக்குப் பிராப்தமாம்—அதனால் (எப்புருஷன் இவ்விருவித மோக்ஷத்தையும் புருஷார்த்த மென் றறிந்து விஷய சுகத்தை அபுருஷார்த்த மென்று அங்கீகரித்து அதன் பிராப்தியின் பொருட்டு யத்தநஞ் செய்கின்றான், அவன் ஈண்டு உத்தம சாதுவும் ஆசிரமியுமாவன் ; விஷய சுகத்தை யிச்சிப்பவன் ஆசிரமியாயினும் ஆசிரமி யன்றாம்.)

**1—7. சம்சயம்.**

இரண்டுவிதச் சம்சயத்தைக் கூறுவாம். ஒரு தர்மியில் விருத்த நாநா தர்மங்களின் விசிஷ்டத்தன்மையைக் கிரகிக்கும் ஞாநம் சம்சயமாம்; அல்லது பூர்வ பட்ச சித்தாந்த பட்சங்களிற் கூறிய இரண்டு யுக்தியைக் கிரகிக்கும் ஞாநம் சம்சயமாம். பிரமாணகதம், பிரமேயதகம் என்னும் பேதத்தினால் அச்சம்சயம் இரண்டு வகைத்தாம்.

(1) பிரமாணகத சம்சயம்.

(1) அவற்றுள், முதலாவதைக் கூறுவாம்.

கர்மப் பிரஹ்மாதிகளைப் போதிக்கும் சுருதி வாக்கியங்களி னநந்தரம் சுருதிகளால் கிருதி சாத்திய கர்மங் கூறப்படுகின்றதா? அல்லது, சித்தப் பிரஹ்மம் கூறப்படுகின்றதா? அல்லது, வேதாந்தம்அத்வைதப் பிரஹ்மத்தில் பிரமாணமா? அல்லது, துவைதத்தில் பிரமாணமா? இவ்வித ரூப எச்சித்த விருத்தி இரண்டு கோடிகளைக் கவருகின்றதோ அது பிரமாணகத சம்சயமாம்.



(2) பிரமேயகத சம்சயம்.

(2) இரண்டாவதைக் கூறுவாம். ஈசுவர, ஜீவ சாதந பல பேதத்தினால் பிரமேயம் நான்கு வகைத்தாம்.

(i) அவற்றுள், முதலில் ஈசுவரரூபப் பிரமேயத்தின் சம்சயத்தைக்கூறுவாம். பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமா? அல்லது, பிரதாநாதிகள் காரணமா? ஜகத்காரணமாயினும், கேவலம் உபாதாந காரணமா? அபிந்ந நிமித்த உபாதாந காரணமா? அது சச்சிதாநந்த ரூபமா? சச்சிதாநந்தாதி குணத்தையுடையதா? அதன்கண் சர்வஞ்ஞத்வாதி தர்மம் சுவபாவிகமா? அல்லது, ஔபாதிகமா? அது பரமார்த்தமாக ஜீவ சேதநத்தினின்றும் பிந்நமா? அல்லது, அபிந்நமா? என்பனவாதி ஈசுவர சம்பந்தமான சம்சயமாம்;

ஜீவ ரூபப் பிரமேய சம்சயத்தைக் கூறுவாம்.

(ii) ஜீவன் ஜடமா? அல்லது, ஜடசேதந மிச்ரமா? அல்லது சேதநமா? சேதநமாயினும், கர்த்தாவா? அல்லது, அன்றா? அகர்த்தாவாயினும், போக்தாவா? அல்லது, அன்றா? அபோக்தாவாயினும், பிரஹ்மத்தின் விகாரமா? அல்லது, அம்சமா? அல்லது சொரூபமா? அஃது ஒன்றா? அல்லது, அநேகமா? அணு பரிமாணமா? அல்லது, மத்திம பரிமாணமா? அல்லது, மகத் பரிமாணமா? என்பனவாதி ஜீவ சம்சயமாம்;

(iii) மோட்சப் பிராப்தியில் சாதநம் கர்மமா? உபாசனையா? ஜீவப் பிரஹ்ம ஏகத்துவ ஞாநமா? கர்மோபாசனை சமுச்சித ஞாநமா? என்பன சாதந சம்சயமாம்;

(iv) சாதநத்தினால் அடையத்தகுந்த மோட்சம் சாதிசயமா? நிரதிசயமா? என்பன பல சம்சயமாம்;

என்பனவாதி ரூப எச்சித்த விருத்தியோ அவை யாவும் பிரமேயகத சம்சயமாம்.

**1—8. அசம்பாவனை.**

இரண்டு வித அசம்பாவனையைக் கூறுவாம்.

சித்தாந்தார்த்த அசம்பவத்தை, அல்லது சித்தாந்தத்திற் கூறிய யுக்தி அசம்பவத்தை, அல்லது அதன் அபாவத்தைக் கிரகிக்கும் பிரதீதி அசம்பாவனையாம். அல்லது, சுருதி தாத்பர்ய அசம்பவத்தைக்

கிரகிக்கும் ஞானம் அசம்பாவனையாம். பிரமாணகத பிரமேயகத அசம்பாவனா பேதத்தால் அவ் வசம்பாவனையு மிரண்டு வகைத்தாம்.

### (1) பிரமாணகத அசம்பாவனை.

(1) அவற்றுள், முதலதைக் கூறுவாம். பிரஹ்மம்சித்தித் திருத்தலின், பிருதிவியாதி போன்று வேறு பிரமாண விஷயத்தன்மையால் சுருதி சித்தப் பிரஹ்மத்தின் பிரதிபாதக மெங்ஙனமாம்? (அது) பலத்தினபாவத்தா லுண்டாவதின்றும். சுருதிக்கு வேறு பிரமாண அப்பிராப்த சபல வஸ்துவைப் போதிக்குந் தன்மை யிருத்தலானும், துவைதம் உபஜீவிய ஜேஷ்டப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினல் சித்தமாகலானும் துவைதத்தைக் கவரும் பிரத்தியக்ஷப் பிரமாண மிருக்கும்போது வேதாந்தம் அத்வைதத்திற் பிரமாண மன்றும். உபஜீவிய, உபஜீவக பாவ விரோதத்தினல் என்னுமாகார நிச்சயாத்மக எச்சித்த விருத்தி உளது அது பிரமாணகத அசம்பாவனையாம்.

### (2) பிரமேயகத அசம்பாவனை.

(2) ஈசுவர ரூபப் பிரமேய அசம்பாவனையைக் கூறுவாம்.

சேதநரூபப் பிரஹ்மத்திற்கு ஜட ஜகத்தினின்றும் விலட்சணத் தன்மை சித்தமா யிருத்தலின், ஜகத் காரணத்துவம் எங்ஙனம் சம்பவிக்கும்? கடம் மிருத்தாதி சமான இரண்டு வஸ்துவின்கண் காரண காரிய பாவம் பார்க்கப்படுதலின், சம்பவ மின்று. பிரஹ்மம் ஜகத்திற்கு உபாதாநமாயின், விகாரித்தன்மைப் பிரசங்கத்தானும், பிரஹ்மத்தில் உபாதாந காரணத்தன்மை யசம்பவத்தானும், அபிந்ந நிமித்த உபாதாநத்தன்மை அசம்பவத்தில் கூறுவதென்னை? லோகத்திலிரண்டற்கும் பேதம் பார்க்கப்படுதலின். லோகத்தில் சேதநாநந்தாதிகட்குக் குண ரூபத்தன்மை சித்தமாகலின், சச்சிதாநந்தாதி ருபம் பிரஹ்ம மன்றும். நையாயிகாதி பரீட்சகர்களும் அவற்றிற்கு (ஆநந்தாதிகட்கு)க் குண ரூபத் தன்மை அங்கீகரித்தலானும், சர்வஞ்ஞத்வாதி தர்மங்கட்குப் பெரியோர் நித்தியத்தன்மை யங்கீகரித்தலானும், அத்தர்மம் பிரஹ்மத்தில் ஔபாதிக மன்றும். சுருதிகளால் ஜீவேசுவரர்களின் பேதம் பிரதிபாதிக்கப்படுதலின், ஜைமிநி, கபில, பதஞ்சலி, அக்ஷபாத, கணபுக், வைஷ்ணவாதிகளால் ஜீவேசுவர பேதம் சுவீகரிக்கப்



படுதலின், ஜீவர்களோடபிந்நம் பிரஹ்ம மன்றும். என்பன வாதி ஆகார நிச்சயாத்மக சித்த விருத்தி ஈசுவர கத அசம்பாவனையாம்.

இப்பொழுது ஜீவ அசம்பாவனையைக் கூறுவாம்.

ஜீவாத்மா பிருதிவி யாதி ஒன்பது திரவியங்களில் அந்தர்க்கதமாகலானும், மந சையோக ஜந்ய ஞாநாதி நவகுணத்தின் உபாதாந காரணமாகலானும், தன் குணம் ஞாநவாயிலாய்ச் சுவ பரப் பிரகாசமாகலானும், பிருதிவி யாதி போன்று அது (ஜீவன்) ஜடமாம்; சேதந மன்றும்; அல்லது, சேதநாசேதந உபய ரூப மன்றும்; எதனாலெனின், ஒரு வஸ்துவிற்கு இரண்டு ரூபத் தன்மை அசம்பவத்தானும் அதர்சநத்தானு மென்க. ஜீவாத்மா அகர்த்தாவாயின், சிரவணாதிகளும் யஞ்ஞாதி விதிகளும் வியர்த்தமாகலானும், வேதாந்த ஆசாரிய ரன்றி அந்நிய சர்வ ஆச்சாரியர்களும் ஜீவனுக்குக் கர்த்திருத் தன்மை கூறுதலானும், ஜீவன் அகர்த்தா வன்றும். ஜீவன் அபோக்தாவாயின், சுவர்க்காதி பலத்தைப் போதிக்கும் சுருதிகட்கு வியர்த்தமாகலானும், கர்த்ருத்வ போக்திருத்வ இரண்டு தர்மங்கட்குச் சமாநாதிகரணம் நியமமாகலானும், அது (ஜீவன்) அபோக்தா வன்றும். அக்நி விஸ்புலிங்காதி (பொறிகள்) திருஷ்டாந்தங்களால் சுருதிகள் ஜீவனுக்குச் சிருஷ்டி பிரதிபாதித்தலானும், கீதை ஜீவனுக்கு அம்ச ரூபத் தன்மை பிரதிபாதித்தலானும், சிலர் காரிய காரண பாவமும், சிலர் அம்சாம்சி பாவமும் அங்கீகரித்தலானும், ஜீவன் பிரஹ்மத்தின் சொரூப மன்றும். பிரதி சரீரத்திலும் ஜீவனது பேதம் மாநசப் பிரத்தியக்ஷத்தினல் சித்தமாகலானும், சுருதியாதிகளால் ஜீவனுக்கு நாநாத்தன்மை கூறப்படுதலானும், சுக துக்காதி தர்மங்களின் சங்கர அபாவம் பார்க்கப்படுதலானும், ஜீவன் ஏக மன்றும். அல்லது, ஏகத் தன்மையின் அசம்பவமாம். "அணுவினின்று மணு" "ரூபத்தை ரூபத்தைக் குறித்துப் பிரதி ரூபமானன்." என்பனவாதி சுருதிகளால் அணு அல்லது மத்திம பரிமாணம் பிரதிபாதிக்கப் படுதலானும், அதன் அநுசாரம் சிலரால் அணு பரிமாணமும், சிலரால் மத்திம பரிமாணமும் அங்கீகரிக்கப்படுதலானும், ஜீவன் மகத் தன்றும்; அல்லது ஜீவனுக்கு மகத் பரிமாணத் தன்மையின் அசம்பவமாம்; என்பன வாதி ஆகார நிச்சய ரூப சித்த விருத்தி ஜீவ அசம்பாவனையாம்.

அல்லது, ஜீவ சம்சயமும், ஜீவ அசம்பாவனையு மிங்ஙனமாம்; (ஜீவன்) ஜகத்தினுள் ளிருக்கும் என்னிடத்து ஜகத் விலட்சணப் பிரஹ்மத்தன்மை இருக்கின்றதா? இன்று? என்னும் இவ்விதச் சித்த விருத்தி பிரத்யகாத்ம விஷயக சம்சயமாம்.

கர்த்ருத்வாதி அநேக தர்ம விசிஷ்டனான எனக்கு அகர்த்ரு பிரஹ்ம சொரூபத்தன்மை எங்ஙனமாம்? விருத்தமாயிருத்தலின், உண்டாகாது (என்னும்) இவ்வித நிச்சய ரூப சித்த விருத்தி பிரத்தியகாத்ம விஷயக அசம்பாவனையாம்.

இப்பொழுது சாதந பல ரூபப் பிரமேயத்தின் அசம்பாவனையைக் கூறுவாம். "இச்சந்மத்தில் கருமத்தைச் செய்கின்றேன்; மேல் நூறு வருஷ பரியந்த ஜீவநத்தை இச்சித்து" "கர்மத்தைச்செய்து ஜநகாதிகள் நல்ல சித்தியை அடைந்தார்கள்." "கலியில் பெயரே, பெயரே, பெயரே எனது ஜீவநம், வேறு கதி யில்லை, இல்லை, இல்லை" என்பன வாதி சுருதி ஸ்மிருதிகள் கர்ம உபாஸனைகட்கு மோக்ஷத்தைக் குறித்து ஸாதநத்தன்மை கூறுதலானும், அதன் அநுஸாரமாக ஜைமிநி பதஞ்சலி முதலியோர்களாலும் அவை அங்கீகரிக்கப்படுதலானும் ஞாநம் ஸ்வதந்தரமாக மோக்ஷத்தின் ஸாதந மன்றும் (என்னும்) இது ஸாதநத்தின் அசம்பாவனையாம்.

உபாஸனையின் தாரதம்மியத்தால், சுருதியாதிகளில் மோக்ஷத்தின் தாரதம்மியம் பிரதிபாதிக்கப்படுதலானும், வைஷ்ணவாதி ஆசாரியர்களால் தங்கள் கிரந்தத்தில் மோக்ஷம் ஸாலோக்யாதிரூப ஸாதிசயமாகப் பிரதிபாதிக்கப்படுதலானும் நிரதிசயப் பிரஹ்ம ரூபம் மோக்ஷ மன்றும் (என்னும்) இது பலத்தின் அசம்பாவனையாம்.

சில கிரந்தக்காரரோ அசம்பாவனையை ஸம்சயத்தில் அடக்கிக் கூறுகின்றனர். அசம்பாவனைக்கு ஸம்சயத்தினின்றும் பிந்ந லக்ஷணம் செய்வ தில்லை; பின்னையோ, ஸம்சயத்தின் ஸ்தாநத்தில் சில விடத்து அசம்பாவனை பதத்தை உச்சரிக்கின்றனர்; சிலவிடத்து அசம்பாவனை பதத்தை ஸம்சயத்தின் ஸ்தாநத்தில் உச்சரிக்கின்றனர். இரண்டும் பர்யாய பதமா யிருத்தலின்; எதனால் ஸம்சயாதிகள் ஸமாதாந வாயிலாய் வேதாந்த சித்தாந்த அர்த்த நிர்ணயத்தில் உபயோகமாகின்றனவோ, அதனால் சர்வக் கிரந்தக்காரர்களும் சிஷ்யாது சங்கை ஆக்ஷேப வாயிலாய்க் கிரந்தங்களில் அவற்றை எழுதினர்கள்.



## 1—9. விபரீத பாவனை.

இரு வித விபரீத பாவனையைக் கூறுவாம்.

சித்தாந்த அர்த்தத்தில் விபரீதத்தை அல்லது விருத்த அர்த்தத்தைக் கிரகிக்கும் ஞாநம் விபரீத பாவனையாம். அல்லது, சுருதி தாத்பர்ய அர்த்தத்தினின்றும் விபரீத அர்த்தத்தைக் கிரகிக்கும் பிரதீதி விபரீத பாவனையாம். பிரமாண பிரமேய பேதத்தால் விபரீத பாவனை இரு வகைத்தாம்.

### (1) பிரமாண விபரீத பாவனை.

(1) அவற்றுள், முதலதைக் கூறுவாம். பிரஹ்மம் சித்த ரூபமாகலின், சுருதிகட்குப் பிரமாணாந்தரத்தால் அறியப்பட்ட ஹேயம் (விடுதல்) உபாதேயம் (கொள்ளுதல்) இன்றிய பிரஹ்மத்தின் பிரதிபாதநத் தன்மையில் நிஷ்பலத் தன்மையின் பிரஸங்கத்தால் வேதம் கர்ம பரமாம்; பிரஹ்ம பர மன்றும்; அறியப்படாத பலத்தையுடைய அர்த்தத்தைப் போதிப்பதற்கே வேதரூபப் பிரமாண மிருத்தலின். எதனால், "வேதம் கிரியார்த்தமாகலின், அவ்வர்த்த மில்லாத வாக்கியங்கட்கு அநர்த்தகத் தன்மையாம்" என்பதாதி சூத்திரத்தில் ஜைமிநியாதிகளால் வேதத்திற்குக் கர்ம பரத் தன்மை ஸவிஸ்தரமாகப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது; சித்தப் பிரஹ்ம, ஜீவ ஸ்வரூப போதக வாக்கியங்கட்குக் கிரியையை அபேக்ஷிக்கும் தேவதை, கர்த்தா ஸ்வரூபத்தின் பிரதிபாதகத் தன்மை கூறப்பட்டிருக்கின்றது; ஜீவன் முக்தியாதிகளைப் போதிக்கும் வாக்கியங்கட்கு அர்த்தவாத ரூபத் தன்மை கூறப்பட்டிருக்கின்றது; அதனால், வேதம் கர்ம பரமாம் என்னும் இவ்வித நிச்சய ரூப சித்த விருத்தி பிரமாண கத விபரீத பாவனையாம்.

இங்ஙனமே, பிரமாண கத இரண்டாவது விபரீத பாவனையை இரண்டாவது ஸம்சயத்திற் கூறிய பூர்வ பக்ஷ யுக்தியின் அங்கீகார ரூபமாக அறிக.

### (2) பிரமேய விபரீத பாவனை.

(2) ஈச்வர ரூப பிரமேய கத விபரீத பாவனையைக் கூறுவாம்.

காரிய காரண ரூப படதந்து இரண்டின் ஸாரூப்ய தரிசநத்தாலும், ஜகத் பிரஹ்ம இரண்டின் ஜட சேதநத் தன்மையால் ஸமாந

ரூபத் தன்மையின் அசம்பவத்தாலும், ஜகத் காரணம் ஸஜாதிய பிரதாநாதிகளேயாம்; பிரஹ்ம மன்றும்; எதனல் எனின், கபில கணபுக் காதி ஸர்வஞ்ஞாசாரியர்களால், தாமியற்றிய ஸூத்திரங்களில் பிரதாந பரமாணுவாதிகட்கே ஜகத் காரணத்தன்மை அங்கீகரிக்கப்பட்டிருக் கின்றது என்னும் இவ்வித நிச்சய ரூப சித்த விருத்தி ஈஸ்வரகத விப ரீத பாவனையாம்.

இங்ஙனமே, ஈஸ்வரகத இரண்டாவது மூன்றுவது விபரீத பாவ னையை அசம்பாவனையின்கண் கூறிய யுக்தியின் பலத்தால் சம்சயக் கிரமத்தின் அநுஸாரம் இரண்டாவது மூன்றுவது சம்சயத்தின் கண்ணுள்ள பூர்வ பக்ஷ யுக்தியின் அங்கீகார ரூபமாக அறிக. கிரந்தம் விரியும் என்னும் பயத்தால் ஒவ்வொரு விபரீத பாவனையும் எழுதப் பட வில்லை.

இப்பொழுது ஜீவனிடத்துள்ள விபரீத பாவனையைக் கூறுவாம். எப்பொழுது ஜீவன் அகர்த்தா வாவன் அப்பொழுது "யாகஞ் செய், ஹோமஞ் செய்" "ஸ்வர்க்க காமன் ஜோதிஷ்டோமத்தான் யஜிக்க" என்பன வாதி சுருதிகளால் ஜீவனைக் குறித்துக் கர்மத்தின் உபதேசம் எங்ஙனமாம், அதனல், ஜிவன் கர்த்தாவாம். "ஈண்டு ஜீவன் கர்த்தா, விதி நிஷேத சாஸ்திரங்கள் அர்த்தமுடையன வாத லின்" என்பதாதி சூத்திரத்தில் பகவான் வியாஸராலும், நையாயிகர் முதலியோர்களாலும் ஜீவனுக்குக் கர்த்ருத்தன்மை அங்கிகரிக்கப்படு தலினாலும், ஜீவன் கர்த்தாவாம் என்னும் இவ்வித நிச்சயாத்மக சித்த விருத்தி ஜீவ கத விபரீத பாவனையாம்.

இங்ஙனமே ஜீவ கத இரண்டாவது மூன்றுவது விபரீத பாவ னையை இரண்டாவது மூன்றுவது ஜீவ சம்சயத்தி லுள்ள பூர்வபக்ஷ யுக்தியின் அங்கீகார ரூபமாக அறிக.

ஸாதந விபரீத பாவனையையும், பல விபரீத பாவனையையும் முற் புகன்ற சாதந ஸம்சய பல ஸம்ஸயத்தின்கண்ணுள்ள பூர்வபக்ஷ யுக்தியின் அங்கீகார ரூபமாக அறிக. சில கிரந்தக்காரரோ அநாத்மா வின்கண் ஆத்ம புத்தி, அல்லது ஆத்மாவின்கண் அநாத்ம புத்தி விபரீத பாவனையின் லட்சணம் எனக் கூறுகின்றனர். அவற்றின் நிவி ருத்தியோ பிரஹ்மாத்ம ஏகத்துவாகார சித்த விருத்திகளினது ப்ர வாகரூப நிதித்தியாஸநத்தின் அநுஷ்டாநத்தால் எனக் கூறுகின்றனர்.



எதனல் இச் சம்சயாதி மூன்றும் வேதாந்த சிரவணாதி பிர விருத்தி, ஞாந உற்பத்திகளில் பிரதிபந்தகமாம். அதனல் ஜிஞ்ஞாஸுக் களால் அவசியம்நிவர்த்திக்கத் தக்கனவாம். அவற்றுள், சுருதியின் அவி ரோதமான மநநரூப நாநாவிதத் தர்க்கங்களால் முற்புகன்ற நாநாவித ஸம்சயத்தை நிவாரணம் செய்க. எது வாக்கால் அநிஷ்டத்தைச் சம்பா தித்துஅர்த்தத்தால் இஷ்டத்தைச் சித்தஞ் செய்கின்றதோ அது தர்க்க மாம்; அல்லது வ்யாப்பியத்தின் ஆரோபத்தால் வ்யாபகத்தின் பிரஸஞ் ஜநம் செய்தல் தர்க்கமாம். எங்ஙனம்? எப்பொழுது பர்வதத்தில் அக்நி யின்றே, அப்பொழுது தூமமு மின்றும். ஈண்டு அக்நி அபா வம் வியாப்யமாம்; தூம அபாவம் வியாபகமாம். அக்நி அபாவத்தின் கற்பனையால் தூம அபாவத்தின் கற்பனை ஈண்டு வாக்கால் அநிஷ்டத் தின் ஸாதகமாம். எதனல் எனின், பிரத்தியக்ஷமாகப் பார்த்த தூமத் தின் அபாவம் எங்ஙனமாம்? தூம அபாவத்தின் அயோக்யத்தன்மை யால் அக்நியின் ஸத்பாவத்தைப் பர்வதத்தில் எது ஸாதிக்கின்றதோ அது ஈண்டு அர்த்தத்தால் இஷ்டத்தின் ஸாதகத் தன்மையாம்.

இப்பொழுது ஸம்சயக் கிரம அநுஸாரமாக முதலில் பிரமாண ஸம்சய நிவாரக தர்க்கத்தைக் கூறுவாம்.

(1) எக்கால் வேதம் கர்ம பரமாம் அக்கால் கர்ம பல ஸ்வர்க் காதிகள் மித்தையா யிருத்தலின் பிரஹ்ம ரூப நித்திய பலப் பிராப்தி யைப் போதிக்கும் சுருதி வாக்கியங்கட்கு விரோதமாம். ஸபல ரூபப் பிரஹ்ம ஞாநத்தின் பொருட்டு வேதம் புகன்ற அத்யயந விதிக்கும் விரோதமாம்; உபநிஷத் வாக்கியத்திற்கு அத்விதீயப் பிரஹ்ம பரத் தன்மையைப் போதிக்கும் "அதன் ஸமந்வயத்தால்" என்பதாதி பிரஹ்ம ஸூத்ரங்கட்கும் விரோதமாம்.

(2) எப்பொழுது வேதம் த்வைதத்திற் பிரமாணமாம் அப்பொழுது தமது அர்த்தத்தின்கண் தாத்பர்ய முடைய அத்வைத சுருதிகட்கும், "ஈண்டு நாநா அற்பமு மின்று" என்பதாதி த்வைதத்தை நிஷேதிக்கும் சுருதிகட்கும் விரோதமாம் என்னும் இவை பிரமாண ஸம்ஸய நிவர்த் தக தர்க்கமாம்.

இப்பொழுது ஈஸ்வர ஸம்ஸய நிவாரக தர்க்கத்தைக் கூறுவாம்.

(3) எக்கால் ஜட ப்ரதாநாதிகள் ஜகத்காரணமாம் அக்கால் "அது பார்த்தது", "அது இச்சித்தது", "காரணத்திற்கு இச்சையுடைமை யிருத்தலின்", "ப்ரதாநம் காரண மன்று" என்பன வாதி சுருதி ஸூத்ரங்கட்கு விரோதமாம்;

(4) எக்கால் பிரஹ்மம் கேவலம் உபதாந காரணமாம் அக்கால் ஊர்ண நாபி (சிலந்திப் பூச்சி) யின் திருஷ்டாந்தத்தால் உபய காரணத்தைக் கூறும் சுருதிகட்கு விரோதமாம் ;

(5) எக்கால் பிரஹ்மம் ஆநந்தாதி குணத்தை யுடையதாம் அக்கால் நிர்க்குண சுருதிகட்கு விரோதமாம்;

(6) எக்கால் ஞாந இச்சை பிரயத்நங்கள் பிரஹ்மத்தின்கண் ஸ்வாபாவிக நித்தியமாம் அக்கால் ஜகத்தின் உத்பத்தி ஸ்திதியாதிகளின் கிரமத்தைப் போதிக்கும் சுருதிகட்கு விரோதமாம்;

(7) எப்பொழுது பரமாத்மா ஜீவாத்மாவினின்றும் பிந்நமாம் அப்பொழுது கடம்போன்று அநாத்மத் தன்மையால் அநித்தியமாம்;

என்னும் இவை ஈஶ்வர ஸம்சயத்தை நிவர்த்திக்கும் தர்க்கமாம்.

இப்பொழுது ஜீவ ஸம்சயத்தை நிவர்த்திக்கும் தர்க்கத்தைக் கூறுவாம்.

(8) எக்கால் ஜீவன் சித்ரூப மன்றும் அக்கால் ஜடத்தன்மையால் கடாதி போன்று அநாத்மத் தன்மையால் ஜகத்தின்கண் அந்தப் (குருட்டுப்) பிரஸங்கமாம்;

(9) எக்கால் ஜீவன் உண்மையாகக் கர்த்தா போக்தாவாவன் அக்கால் ஜீவனுக்கு அகர்த்ரு, அபோக்த்ரு எனப் பிரஹ்ம ஸ்வரூபத் தன்மையைப் போதிக்கும் தத்துவமஸ்யாதி வாக்கியங்கட்கு விரோதமாம்;

(10) எக்கால் ஜீவன் பிரஹ்மத்தின் விகாரமாம்அக்கால் ஜீவனுக்கு நித்தியத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிகட்கு விரோதமாம்;

(11) எப்பொழுது ஜீவன் பிரஹ்மத்தின் அம்சமாம் அப்பொழுது பிரஹ்மத்திற்கு நிரம்சத்தைப் பிரதிபாதிக்கும் சுருதிகட்கு விரோதமாம். அம்சத்தோடுகூடிய பிரஹ்மத்திற்கு க்ஷீராதி போன்று பரிணாமித் தன்மையால் விகாரித் தன்மையாம்;



(12) எப்பொழுது ஜீவன் உண்மையாக நாநாவாவன் அப்பொழுது ஜீவனது ஏகத் தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிகட்கு விரோதமாம்;

(13) எப்பொழுது ஜீவன் அணுவாவன் அப்பொழுது சர்வ சரீரத்திலும் வ்யாபித்திருக்கும் சுக துக்கங்களின் ஞாநம் உண்டாகாது; மகத் பிரஹ்மத்தோடு அவனது ஏகத் தன்மையைப் போதிக்கும் சுருதிக்கு விரோதமாம்;

(14) எப்பொழுது ஜீவன் மத்திம பரிமாண மாவன் அப்பொழுது தேகாதி போன்று அநித்திய மாவன்; சர்வ பரீக்ஷகர்களாலும் அதன் நித்தியத் தன்மையின் அங்கீகாரமும் வியர்த்தமாம்;

என்னும் இவை ஜீவ ஸம்ஶயத்தை நிவர்த்திக்கும் தர்க்கமாம்.

எப்பொழுது கர்மம்அல்லது உபாஸனை அல்லது இரண்டும் சேர்ந்த ஞாநம் மோக்ஷத்தின் சாதநமாம் அப்பொழுது மோக்ஷமும் க்ரியாஜந்யத் தன்மையால் ஸ்வர்க்கம் போன்று அநித்தியத் தன்மையின் பிரஸங்கமாம். இது ஸாதந ஸம்ஶயத்தை நிவர்த்திக்கும் தாக்கமாம்.

எப்பொழுது மோக்ஷம் ஸாதிஶயமாம் அப்பொழுது ஸாதிஶய விஷய சுகம் போன்று அநித்யத்தன்மையால் நித்தியாநந்தத்தை இச்சிக்கும் முமுக்ஷுக்கட்கு அதன் பிராப்தியின் பொருட்டுப் பிரவிர்த்தி யுண்டாகாது; அல்லது நிரதிஶயப் பிரஹ்ம சொரூப மோக்ஷத்தைப் போதிக்கும் சுருதிகட்கு விரோதமாம்; அல்லது அதற்குப் புருஷார்த்தத் தன்மை யுண்டாகாது என்னும் இவை பலத்தின் ஸம்ஶயத்தை நிவர்த்திக்கும் தர்க்கமாம்.

(வேதாந்தத்தின் தாத்பர்யார்த்தத்தைக் கிரஹிக்கும் உபக்ரம உபஸம்ஹாராதி ஷட்வித லிங்க வாக்கியங்கட்கு குரு முகத்தால் யதார்த்தத்தை அறிந்து முற் புகன்ற ஸர்வ அசம்பாவனையையும் விபரீத பாவனையையும் ஜிஞ்ஞாசு நிவர்த்திக்க. "எச் சப்தம் எதன்கண் தாத்பர்யமாம் அது அதன் அர்த்தமாம்; முக்யார்த்த (மர்த்த) மன்றும்" என்னும் நியாயத்தால் வேதாந்த தாத்பர்யமோ பிரஹ்மாத்ம ஏகத்துவத்தின் கண்ணேயாம்; ஜீவ ஈஶ்வரர்களின் பேதத்தின்கண் அன்றும். அல்லது கர்த்தா போக்தா ஜீவனிடத் தன்றும்; பிரதாநாதி கார

ணாதிகளிலும் அன்றாம். உபக்ரமாதி லிங்கங்களின் லக்ஷணமும் சொரூபமும் ஆறு எண்ணிக்கையில் மேல் நிரூபிப்பாம். அசம்பாவனாதி நிரூபணத்தின்கண் பிரத்யக்ஷாதி ஸித்த த்வைதத்தைப் புகலும் எச் சுருதி கூறப்பட்டதோ அது தனதர்த்தத்தின்கண் தாத்பர்ய முடைய தன்றாம்; அதனால் நிஷ்பல அர்த்தத்தைக் கூறுகின்றதாம். பிரஹ்ம ஸூத்ரமும் ஜீவன்க ணுள்ள ஔபாதிக கர்த்ருத்வத் தன்மையின் அநுவாதகமாம். ஜைமினி, கணக்புகாதி ஆசார்யர்களின் அங்கீகாரமும் உபநிஷத தாத்பர்யார்த்த ஞானத்தின் சூந்யத் தன்மையால் அப்பிரமாணமாம். ஜீவர்களின் அநுபவமும் சுருதி விருத்தத் தன்மையால் அநுபவ ஆபாசப் பிராந்தி ரூபமாம்; பிரமாணம் அன்றாம். தமப் பிரகாசம் போன்று கேவலம் ஞானத்திற்கே அஞ்ஞானத்தோடு விரோதமாம்; கர்ம உபாஸனைகட் கன்றாம். எதனால் எனின், அவை அஞ்ஞான காரிய மாகலின். அதனால் அஞ்ஞானத்தை நிவர்த்திப்பதின்கண் ஞானமே ஸ்வதந்தர ஸாதநமாம்; கர்மாதிகள் அன்றாம். மோக்ஷமும் எப்பொழுது ஸாதிசயமாம் அப்பொழுது ஸ்வர்க்காதி பலம் போன்று அநித்யமாம். அதுவோ இஷ்டமன்றாம்; வேதாந்த அர்த்தத்தை நிர்ணயிக்கும் ஸூத்ரக்கார பாஷ்யக்காரராதி சர்வஞ்ஞ ஆசாரியர்களால் நிரதிஶயப் பிரஹ்ம ரூப மோக்ஷத்திற்கு நித்தியத்தன்மை அங்கீகரிக்கப்படுதலான் என்னும் இவ்வித யுக்திகளால் ஸாதந மோக்ஷ கத அசம்பாவனாதிகளையும் ஜிஞ்ஞாஸு எக்கால் நிவாரணம் செய்கின்றான் அக்கால் வேதாந்த சிரவணாதிகளில் பய மின்றிப் பிரவர்த்தித்து அபீஷ்ட ஞானத்தை யடைந்து ஜீவித்துக் கொண்டிருக்கும் அவஸ்தையின்கண்ணே ஞான சமகால விதேக முத்தனாய்ப் பிராரப்த போகத்தை நாசஞ் செய்க. இச் சம்சயாதி மூன்றின் நிவர்த்தியின் நிரூபணம் மூன்று எண்ணிக்கை - ஐந்து எண்ணிக்கையின்க ணுள்ள பதார்த்த நிரூபணத்தின்கண்ணும் விரிவாய் நிரூபணஞ் செய்வாம். ஈண்டுச் சுருக்கமாகக் கூறப்பட்டது.)

## 1-10. பிரஞ்ஞை.

இருவிதப் பிரஞ்ஞையை எழுதுவாம். ஸ்திதப் பிரஞ்ஞை, அநஸ்திதப் பிரஞ்ஞை யென்னும் பேதத்தால் பிரஞ்ஞை இருவகைத்தாம்



### (1) ஸ்திதப் பிரஞ்ஞை.

(1) சமாதி (சமம் முதலிய) சிரவணாதி ஸாதந அநுஷ்டாந பூர்வகம் விசாரிக்கப்பட்ட மகாவாக்கியத்தால் உத்பந்நமான எப் பிரஹ்மாகார புத்தி ஸம்ஶய விபரீதபாவனை யின்றியதோ அது ஸ்திதப் பிரஞ்ஞையாம். அது கீதையின்கண் ஸ்திதப் பிரஞ்ஞை லக்ஷண நிரூபணத்தில் அநேக பிரகாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

### (2) அநஸ்திதப் பிரஞ்ஞை.

(2) முற் புகன்ற ஸாதந அநுஷ்டாந மின்றி வேதாந்த வாக்கியத்தின் ஸாமாந்ய ஶ்ரவண படநத்தால் உண்டாகும் பிரஹ்மாகார க்ஷணிக புத்தி யாதோ அது அநஸ்திதப் பிரஞ்ஞையாம். அது மோக்ஷத்திற்குக் காரண மன்றாம். மாவின் முள் எங்ஙனம் அங்க வேதனைக்குக் காரண மன்றாம், அங்ஙனம், தலை கீழான ஞானத்தின் வியாஜத்தினால் சங்கை இன்றி அநாசாரத்தின்கண் பிரவிர்த்தித்தலான் கீழே விழுதற்குக் காரணமாம். "எப்பொழுது இவனது இருதயத்தில் இருக்கும் சகல காமமும் நாசமாகின்றனவோ அப்பொழுது மனிதன் அமிர்த னாகின்றான். இங்கேயே பிரஹ்மத்தை யடைகின்றான்" "ஏ பார்த்த! எப்பொழுது மனத்தின்கண்ணுள்ள சர்வ காமத்தையும் விட்டு ஆத்மாவால் ஆத்மாவின்கண் சந்துஷ்டனோ அப்பொழுது ஸ்திதப் பிரஞ்ஞ னெனப் படுகின்றான்". "ஏ மைத்ரேயி! கலியில் எல்லோரும் வாக்கினால் பிரஹ்மத்தைக் கூறுவார்கள்; அதன்கண் நிலைத்திருக்க மாட்டார்கள்; சிஶ்ந உதரங்களின் பரவசராகலின்" என்பன வாதி சுருதி ஸ்மிருதிகளின் பிரமாணத்தினால் எதனால் அநஸ்திதப் பிரஞ்ஞை யதேஷ்டாசரணவாயிலாய் அநர்த்தத்தின் காரணம் என்று கழறப் படுகின்றதோ அதனால் விஷயபோக சந்மாந ஆசையை விட்டு முற்கூறிய சாதநாநுஷ்டாந வாயிலாய்ப் பிரஹ்மாத்ம ஏகத்வாகார புத்தியை ஜிஞ்ஞாசு மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு ஸ்திரஞ் செய்க.

## 1-11. சமாதி.

இரு விதச் சமாதியை யெழுதுவாம். சம்பிரஞ்ஞாத அசம்பிரஞ்ஞாத சமாதி பேதத்தினால் சமாதி இரண்டு வகைத்தாம்.

### (1) சம்பிரஞ்ஞாத சமாதி.

(1) விஜாதீயப் பிரத்தியயத்தின் மறைப்பின்றிச் சஜாதீயப் பிரஹ்மாகார விர்த்தியின் தைலதாரை போன்று அநவச்சின்ன எப் பிரவாகம் உண்டாகின்றதோ அது சம்பிரஞ்ஞாத சமாதியாம். அது யம-நியமாதி அஷ்டாங்கத்தின் அநுஷ்டானத்தினால் சாத்தியமாம்.

### (2) அசம்பிரஞ்ஞாத சமாதி.

(2) சர்வ விருத்தி நிரோத பூர்வகம் நிர் விகல்பப் பிரஹ்மாகாரமாகச் சித்தம் நிலைத்திருத்தல் அசம்பிரஞ்ஞாத சமாதியாம். எவ்விடத்துப் பிரஹ்மாகார விர்த்திக்கும் ஸ்புரண மின்றிச் சித்தம் உள்ளிலும், வெளியிலும் சேதநத்தினாற் கவரப்பட்டுச் சேதநாகாரமாகவே யிருக்கின்றதோ, அக்கினியாற் கவரப்பட்ட லோகம் போன்று அது பரவைராக்யத்தோடு கூடிய சவிகல்ப சமாதியானும், பரமேசுவரப் பிரணிதான ரூப ஓங்கார ஜபத்தின் அர்த்தாநு சந்தானத்தானும் சாத்தியமாம். யோகத்தை அறிந்தவர்கள் எதனைச் சித்தத்தின் ஐந்தாவது நிருத்த பூமி என்கின்றனர்? வேதாந்திகள் எதனை அமநஸ்க அவஸ்தை யென்கின்றனர்? "வாக்கை மநத்திடை லயஞ் செய்க; மநத்தை விஞ்ஞாந ஆத்மாவில் (லயஞ் செய்க)" என்பதாதி சுருதி எதனைச் சாந்தாத்மக ரூபமாகக் கூறுகின்றது? "அதுவும் நிரோதமாய்ச் சர்வ விர்த்தியின் நிரோதத்தினால் நிர்ப்பீஜ சமாதியாம்" என்னு மிச் சூத்திரத்தில் பதஞ்சலி எதனை நிர்ப் பீஜ சமாதி யென்கின்றனர்? (அதுவாம்).

இவ்விரண்டு சமாதியின்கண் பிரமாணத்தைக் கூறுவாம்.

"பிரஹ்மாகார விர்த்தியின் பிரவாகம் தியாதாதி திரிபுடி யின்றி (உண்டாகின்றது) அது சம்பிரஞ்ஞாத மென்னும் பெயரினை யுடைய சமாதி யென்று யோகத்தை யறிந்தவர்களாற் கூறப்படுகின்றது" "விருத்தி யின்றிய பிரஹ்மாகாரத் தன்மையால் மநத்தின் திதி ஈண்டு அசம்பிரஞ்ஞாத மென்னும் பெயரினை யுடைய சமாதி யென்று கூறப்படுகின்றது? புகன்ற இரண்டு விதச் சமாதி ஜிஞ்ஞாசுக்கட்கு ஞானோற்பத்தியின் காரணமாய் யத்தந சாத்தியமாம். ஜீவன் முக்த ஞானிக்கு ஜீவன் முக்திக்கு ஏதுவாய்ச் சுபாவசித்தமாம்.





### 1-12-பரமஹம்ச சந்யாசம்.

இரண்டு விதச் சந்யாசத்தைக் கூறுவாம். விவிதிஷா வித்வத் பேதத்தினால் பரமஹம்ச சந்யாசம் இரண்டு வகைத்தாம்.

### (1) விவிதிஷா சந்யாசம்.

(1) அவற்றுள், ஞாந காரண வைராக்ய ஏதுவை யுடைய விவிதிஷா சந்யாசம் முக்ய-கௌண பேதத்தினா லிரு வகைத்தாம்.

(i) விவேகாதி சாதந பூர்வகம் தண்ட தாரணாதி ஆச்ரம சந்யாசம் பலத்தோடுகூடிய விதிக்கப்பட்ட கர்மத் தியாக ரூபம் முதல் முக்ய சந்யாசமாம். அதன்கண் பிராமணர்க்கே அதிகார முண்டெனச் சிலர் கூறுகின்றனர்; சிலர் மூன்று வருணத்தவர்க்கும் அதிகார முண்டெனக் கூறுகின்றனர்.

(ii) ஜந்மத்தினின்றும் சம்பாதித்த காமிய நிஷித்த கர்மத்தைச் சொரூபமாகத் தியாகஞ் செய்து விகித கர்மத்தைப் பலத்தினின்றும் தியாகஞ்செய்தல் ரூப மாநச சந்யாசம் இரண்டாவது கௌண சந்யாசமாம். அதன்கண் ஸ்திரீ புருஷ மூன்று வர்ண எல்லா விரத்தர்களுக்கும் அதிகாரமாம். எதன்கண் வேதாந்த சிரவணாதி அப்யாசம் பிரதாநமாம், மநோ நாசாதி அப்யாசம் கௌணமாம். எதனாலெனின், அது சாதந சதுஷ்டயங்களில் அந்தர்க்கதமாகலின். "தண்டாதிகளைப் பற்றுக; சேஷத்தை விட்டொழிக." "கர்மத்தா னன்று, பிரஜையா னன்று, தநத்தா னன்று அமிர்தத்தின் பிராப்தி. எல்லாவற்றின் தியாகத்தினால் அமிர்தத்தை யடைகின்றான்" என்பனவாதிப் பிரமாணங்களால் (என்க). ஈண்டுக் கூறிய கௌண விவிதிஷா சந்யாசம் எதுவோ அது பலத்தின் இச்சை, கர்த்ருத்வ அபிமாநம் என்னு மிரண்டின் தியாகத்தினால் விதிக்கப்பட்ட கர்ம அநுஷ்டாந ரூபமாம்; பல சகித கர்மத் தியாகரூப முக்ய சந்யாச மன்றாம்; அது யோக சப்தத்தினாற் கூறத்தக்கதாம். அங்ஙனமாயினும், (அது) குண விருத்தியால், சந்யாச சப்தத்தினால் வாச்சியமாகின்றது; எதனாலெனின், விதிக்கப்பட்ட கர்ம பலத் தியாக ரூப குணத்தின் சமாநத்தன்மை யாகலானும், பலத்தின் திருஷ்ணாரூப சித்த விர்த்தி நிரோதத்தின் சமாநத்தன்மை யாகலானும். "அந்நியத்தின் வாசக சப்

தம் அந்நியத்தின்கண் அந்வயித்துக் குணவிருத்தியினுல் அதன் சாதிருசியத்தையே போதிக்கின்றது" என்னும் நியாயத்தால் (ஆம்). அது கீதையின்கண் "எப்புருடன் கர்ம பலத்தைக் குறித்து அநாசிருதனுய்ச் செய்யத்தக்க கர்மத்தைச் செய்கின்ருன் அவன் சந்யாசியும் யோகியு மாவன்; ஆயினும், அக்நி யின்றியவ னன்ரும்; அக்கிரியனு மன்ரும்." என்றும், "ஏ பாண்டவ! எதனைச் சந்யாசமென்று கூறுகின்றனர் அதனை யோக மென்று நீ அறிக. எதனுல் சங்கற்பத்தை விடாத ஒருவரும் யோகியாவ தில்லை;" என்றும் கூறப்பட் டிருக்கின்றது. கர்மபல அநாசிருத மெனின், பலேச்சையின் ரகிதமாம். காரிய கர்ம மெனின், செய்யத் தக்கதாந் தன்மையால் சாஸ்திரத்தில் விகித நித்ய அக்நி கோத்ராதி கர்மமாம். சந்யாச மெனின், தியாகமாம். யோக மெனின், சித்தத்தின்க ணுள்ள விக்ஷேப அபாவமாம். அவ்விரண்டும், இக் கர்மியி னிடத்தில் லயப்படுகின்றன; அதனுல் கர்ம பலத்தின் தியாகத்தாலும், பல திருஷ்ணு ரூப விக்ஷேபத்தின் அபாவத்தினுலும், ஆசையோடு கூடியவர்களின் அபேக்ஷையால் ஸ்துதியைக் கூறும்பொருட்டுச் சந்யாசி யோகி என்னு மிரண்டு சப்தங்களினுல் ஈண்டுக் கர்மியைக் கூறியதாம். அக்நி யின்றியவ னெனின், அக்நியினுல் சித்தஞ் செய்யப்பட்ட ஸ்ரௌத கர்மத் தியாக மின்ரும். அக்கிரியன் எனின், அக்நியி னிரபேக்ஷ ஸ்மார்த்தக் கிரியையின் தியாகமு மின்ரும். சந்யாச மெனின், சர்வ கர்ம அதன் பலப் பரித்யாகமாம். யோக மெனின், காம்ய நிஷித்த கர்மத்திற்கு ஸ்வரூபமாகத் தியாகமும் விதிக்கப்பட்டதற்குப் பலத்தால் தியாகமுமாம். * அஸங்யஸ்த ஸங்கல்ப மெனின், தியாகம் பண்ணப் படாத பல ஸங்கல்பமும் ஆம்." இது கீதையின் மூல வாக்கியத்தின் சம்க்ஷேப அர்த்தமாம்.

### (2) வித்வத் சந்யாசம்.

(2) சித்த விஶ்ராந்தியால் உபலக்ஷிக்கப்பட்ட ஜீவந் முக்தியின் பிராப்தியின் பொருட்டு ஸாக்ஷாத்காரத்தின் அநந்தரம் செய்யப்பட்ட விதி பூர்வக ஸந்யாஸம் வித்வத் ஸந்யாஸமாம். அதன்கண் மநோ நாசம், வாஸநா க்ஷயத்தின் அப்யாசம் பிரதாநமும் ஞாநத்தின் அப்

* அஸங்யஸ்த - விடப்படாத.



யாஸம் கௌணமுமாம்; ஞாநம் பூர்வம் பிராப்தமா யிருத்தலின் "ஆத்மாவை யறிந்து முநியாகின்ருன்" என்பதாதிப் பிரமாணத்தால்.

அது மீண்டும் ஸாதந ரூப-பல ரூபபேதத்தால் இருவகைத்தாம்.

(i) அவற்றுள், சித்த விஶ்ராந்தி ரூப ஜீவந் முக்தியின் காரண மநோ நாசாதிகளோடு கூடிய அப்யாஸத்தின் ஏது வுடைய ஞாநத்தின் அநந்தரம் வித்வானுல் விதிப்பிரகாரம் செய்யப்பட்ட ஸாதந ரூப வித்வத் ஸந்யாஸம் முதலதாம்.

(ii) மநோ நாசாதிகளோடுகூட அப்யாஸத்தின் திடத்தன்மையின் தாரதம்யத்தால், வித்வானது சித்தத்தின் தாரதம்மியத்தால் நிர்விகற்பப் பிரஹ்ம ரூபத்தால் *சிரகாலம் அச்சிரகாலம் நிலைத்தல் எதன்கண் உண்டாகின்றதோ அது இரண்டாவதாகிய பல ரூப வித்வத் சந்யாசமாம்.

அதுவும், நிர்விகல்பத் தன்மையின் தாரதம்மியத்தால் இருவகைத்தாம்.

ஐந்தாவது ஆருவது பூமியி லுள்ள புருஷன் தானே அல்லது அந்யரால் வெளிக் கிளம்பியதோடுகூட தனது அல்லது அந்யரது இச்சையால் உண்டல் குடித்தலாதிச் சிற்சில வெளிக்கிளம்பிய வியவகாரம் உண்டாகின்ற தெவனிடத்து, அவனது சித்த விர்த்தி அதனுல் நிர் விகல்பப் பிரஹ்ம ரூபத்தால் ஸ்வல்ப காலம் நிலைத் திருக்கும்; ஸர்வதா தன்மய மன்ரும். அதனுல், அது முதலாவதாகிய பல ரூப வித்வத் ஸந்யாஸமாம். அது ஜடபரதாதிக ளிடத்துப் பிரஸித்தமாம்.

எதன்கண் ஏழாவது பூமியிலுள்ள புருஷன் பிறந்த மேனியாய்த் தன்னுலும் அந்யராலும் வெளிக் கிளம்பாது ஈஶ்வரனுல் பிரேரிக்கப்பட்ட பிராண வாயுவால் அந்யர்களின் வாயிலாய்த் தேக வியவஹாரத்தை யுடையவ ணுகின்ருன்; அவனது சித்தம் எதனுல் நிர்விகல்பப் பிரஹ்ம ரூபத்தால் நீண்ட காலம் நிலைத்தலாம்; ஸர்வதா தன்மயமாம்; அதனுல் அஃது இரண்டாவது பல ரூப வித்வத் ஸந்

* சிரகாலம் - நீளுள்.

யாஸமாம். அது ரிஷபாதிகளிடத்துப் பிரஸித்தமாம்; "எப் புருஷன் விழித்து ஸுஷுப்தி போன்று இருக்கின்றானோ அவனுக்கு ஜாக்ராவஸ்தையானது லீநத்தை அடைவ தில்லை. எவனுக்கு நிர்வாஸனை யுடைய ஞானமோ, அவன் ஜீவந் முக்த னெனப்படுகின்றான்." "எவனுக்கு ஞானம் தண்டமாம், ஞானம் யஞ்ஞோபவீதமாம், ஞானம் சிகையாம், லிங்க மின்றிய ஆசாரமாம், வசந அகோசரமாம்" என்பனவாதிப் பிரமாணத்தால். அதனால், சிரவண விதியின் அங்கமாய எவ் விரு வித விவிதிஷா ஸந்யாஸமோ அவற்றுள், விரக்த புருஷன் அதிகாரத்தின்படி ஒன்றை யடைந்து வேதாந்த ஶ்ரவணாதிகளில் அவஶ்யம் பிரவர்த்திக்க; எதனா லெனின், இதன் அநுஷ்டானத்தானே ஞான வாயிலாய் வித்வத் ஸந்யாஸத்தின் கண் அதிகாரியாயிருத்தலின். எவன் வைராக்யமின்றி ராகத்தால் ஸந்யாஸாதி ஆஶ்ரமங்களில் பிரவேசிக்கின்றானோ அவன் ஆஶ்ரமத்தின் பலமாகிய ஞானத்தை யடையான்; மாறாய், விஷயாசக்தியால் பதிதனாய்க் கீழே விழுகின்றான். "ஆத்ம தத்வ விவேக இச்சையின் பொருட்டுச் சர்வ கர்ம ஸந்யாஸம் எதனால் சுருதியின்கண் விதிக்கப்பட்டிருக்கின்றது அதனால் விவேக மின்றிய இச் சந்யாசி பதிதனாகின்றான்" என்பதாதிப் பிரமாணத்தால் (என்க).

### 1-13. நிக்ரஹம்.

இரு வித நிக்ரஹத்தைக் கூறுவாம். கிரம நிக்ரஹ - ஹட நிக்ரஹ பேதத்தால் மநத்தின் நிக்ரஹம் இரு வகைத்தாம்.

#### (1) கிரம நிக்ரஹம்.

(1) அத்யாத்ம வித்தையின் பிராப்தி, ஸாதுவின் ஸமாகமம், மலிந வாஸனையின் தியாகம், பிராணன்களினது நிரோதம் என்னு மிந் நான்கு யுக்திகளால் மநத்தின் நிக்ரஹம் எதுவோ அது கிரம நிக்கிரஹமாம். அதுவே சிரேஷ்டமாம்; விருத்தர்களால் அங்கீகரிக்கப்பட்டிருத்தலின்.

#### (2) ஹட நிக்ரஹம்.

(2) அதன் விலக்ஷண குருவினை லீந்த யுக்தி யின்றி ஹடத்தால் சக்ஷுராதி கோளகங்களின் நிரோத மாத்திரத்தால் மநத்தின் நிக்ரஹம் எதுவோ அது ஹட நிக்ரஹமாம். அம் மநம் எதனால் இந்திரியங்கள் போன்று கிரஹணஞ் செய்வதற்கு ஸமர்த்த மன்றாம்; அதன் கோளக ஹிருதய கமலத்தை நிரோதஞ் செய்வதற்கு அசம்பவமாம்; அதனால் அது முமுக்ஷுக்களால் விடத்தக்கதாம்; ஆசார்யர்களால் நிஷேதஞ் செய்யப்பட் டிருத்தலின். அங்ஙனமே, வஸிஷ்ட பகவானும் "அத்யாத்ம வித்தையின் லாபம், ஸாதுக்களின் ஸங்கமம், வாஸனையின் தியாகம், பிராண கதியின் நிரோதநம் என்னும் இந் தப் புஷ்டியினையுடைய யுக்திகள் சித்தத்தின் ஜயத்திலாம். இவை இருப்பினும், எவர்கள் ஹடத்தால் சித்தத்தை நிரோதிக்கின்றார்கள் அவர்கள் தீபத்தை விட்டு ஆயுதத்தால் மநஸை நிவாரணஞ் செய்வார்கள்; ஏகாந்தத்தில் இருந்துகொண்டு நிந்திக்கக்கூடாத யுக்தியின்றி மநதை ஜயித்தற்கு ஸமர்த்தர்களன்றாம். எங்ஙனம், துஷ்ட மதங் கொண்ட கஜமானது அங்குச மின்றி" எனக் கூறியிருக்கின்றனர். இவ் விருவித நிக்ரஹத்தின்கண் கிரம நிக்ரஹமே ஜிஞ்ஞாஸுக்களால் அநுஷ்டிக்கத்தக்கதாம்; ஆசார்யர்களால் அங்கீகரிக்கப்பட்டிருத்தலானும், அபீஷ்டபலத்தின் ஹேதுவாதலானும். ஹட நிக்கிரஹம் அன்றாம்; அது விருத்தர்களால் நிந்திக்கப்பட்டிருத்தலானும் தம் பாதி வாயிலான் அநர்த்தத்தைச் செய்தலானும் என்க.



### 1-14 அகங்காரம்.

இரு வித அஹங்காரத்தைக் கூறுவாம். ஸாமாந்ய விசேஷ பேதத்தால் அஹங்காரம் இரு வகைத்தாம்.

#### (1) ஸாமாந்ய அகங்காரம்.

(1) வருணாஶ்ரம ஜாதி அபிமான மின்றி "நான்" என்னும் இவ் விதப் பிரீதி மாத்திர அஹங்காரம் எதுவோ அது ஸமாந்ய அஹங்காரமாம். எது உதாஸீந அவஸ்தையினும், சுழுத்தி அவஸ்தையினும் இருக்கின்றது அது சூக்ஷ்ம அஹங்கார மென்றுஞ் சொல்லப்படுகின்றது. ஸாங்கியர்கள் அதனைப் பிரகிருதியின் காரிய மஹத்தத்துவம் என்கின்றனர், சிலர் அதனை ஸமஷ்டி அஹங்காரம் அல்லது "நான் அநேக மாவேன்" என்னும் இச் சுருதியிற் கூறிய மாயா விருத்தி ரூப ஈஶ்வரனது ஸங்கல்ப மென்றும் கூறுகின்றனர்.

(2) விசேஷ அகங்காரம்.

(2) வருணாஸ்ரம ஜாதியாதி அபிமானத்தோடுகூட எப் பரிச்சின்ந அஹங்காரம் “நான் பிராம்மணன், நான் மனுஷ்யன், நான் உதாஸீந ஸந்யாஸிசுகிதுக்கி என்பனவாதிப்பிரதீதியின் விஷயமோ அது விசேஷ அஹங்காரமாம். எது ஜாக்ர ஸ்வப்நாவஸ்தையின்கண்ணே யிருக்கின்றது, எதனை ஸ்தூல அகங்கார மென்றும் கூறுகின்றனர், ஸாங்கியர்கள் எதனை ஸாத்விக ராஜஸ தாமஸ பேதத்தால் திரிவித அஹங்காரம் மஹத்தத்துவத்தின் காரியம் என்கின்றனர்; சிலர் அதனை வியஷ்டி அகங்கார மென்றும் கூறுகின்றனர். கூறிய எவ் விவ் விரு வித அஹங்காரமோ அது ஸாக்ஷி ரூபப் பிரத்யகாத்மாவின் ஸமீபத்தி லிருத்தலின் பிரதமோபாதியாம். அதுவே தனது தாதாத்மிய அத்யாஸ வாயிலாய் ஆத்மாவின்கண் கர்த்ருத்வ போக்த்ருத்வ முதலிய தனது தர்மங்களை ஆரோபணஞ் செய்து, விகித அவிகித கர்மாநுஷ்டான வாயிலாய் ஜீவனுக்கு ஸுகித்தன்மை துக்கித்தன்மை முதலிய அநேக துர்த்தசைக் கேதுவாகின்றது. அதனால் ஜிஞ்ஞாஸு அஹங்காரத்தின் ஜடத் தன்மை திருசியத் தன்மை வியபிசாரித் தன்மை முதலிய தர்மங்களையும் ஆத்மாவின் சேதநரூபத் தன்மை த்ரஷ்ட்ருத் தன்மை அநுகதத் தன்மையாதி விலக்ஷண தர்மங்களையும் குரு வாயிலாய் அறிந்து ஒரு காலத்தும் இவற்றின் ஸம்பந்த மின்றியவனாகுக.

**1-15-சப்தம்.**

இரு விதச் சப்தத்தைக் கூறுவாம். வருணாத்மக - த்வந்யாத்மக பேதத்தால் சப்தம் இரு வகைத்தாம்.

(1) வருணாத்மக சப்தம்.

(1) அக்ஷரஸமூகரூப ஸம்ஸ்கிருத பாஷாதி வைகரி வாணி ரூபம் பிரதம வருணாத்மகமாம்.

(2) த்வந்யாத்மக சப்தம்.

(2) தண்டாதி ஜந்ய பேரியாதி த்வநி ரூபம் இரண்டாவது த்வந்யாத்மகமாம். நையாயிகர் எதனை ஆகாசத்தின் குண மென்றும் க்ஷணிக மென்றும் அநித்யமென்றும் அங்கீகரிக்கின்றனர், மீமாம்சகர் எதனைச் சப்த ப்ரஹ்ம ரூப விபுவென்றும் நித்ய மென்றும் அங்கீகரிக்கின்றனர், வையாகரணர் எதனைப் பதத்தின் ஸ்போடாதி ரூபமாக அங்கீகரிக்கின்றனர், அது ககாராதி வர்ணங்களால் அபிவியங்கியமும் கௌ(பசு) வாதி பதார்த்தங்களினது அபிவ்யஞ்ஜகமுமாம். ஸாங்கியர் எதன் ஸூக்ஷ்ம அவஸ்தையைச் சப்த தன்மாத்திரை யென்று கூறுகின்றனர், வேதாந்திகள் எதனை ஸ்தூலாகாசத்தின் காரண ஸூக்ஷ்ம பூதமும் மாயையின் காரியமு மென்கின்றனர், ஆம்நாய (வேத)ரூப சப்தத்தை எது பர்யந்தம் ஸ்திரமும் ஸாபேக்ஷ நித்யமும் பிரஹ்ம ரூப அதிஷ்டானத்தின் விவர்த்தமும் என்கின்றனர், அது ஸ்தூலாவஸ்தையை யடைந்து பஞ்சீகிருத ஆகாசத்தின் த்வநிரூப விசேஷகுணம் ஆகின்றது. எதன் அநுகதி வாயிலாய் வாயு அக்நி ஜலம் பிருதிவிகளில் கிரமமாக வீசி புக் புக் சல சல கடகட என்னும் த்வநி ரூபமாகக் கூறப்படுகின்றது, அது கேவலம் ஸ்ரவணேந்திரியத்தால் கிரஹிக்கத் தக்கதாம், அல்லது ஸ்ரவணேந்திரிய ஜந்ய ஞானத்திற்கு விஷயமாம். அச்சப்தமும் விஷய ரூபத்தன்மையால் அநுகூலப் பிரதிகூல பேதத்தால் ராகத்துவேஷாதி வாயிலாய் ஜீவனுக்குப் பிரதிபந்தகமாம். கொல்பவனது சப்தம் எங்ஙனம் மிருகத்திற்குப் பிரதிபந்தகமாம், அங்ஙனமே தனது ஸ்துதி முதலியவைகளைப் போதிக்கும் சப்தமும் மநோஹர ஸ்திரீ புத்ராதிகளின் சப்தமும் ஆத்மாநுகூல ராகத்தின் காரணமாம், தனது நிந்தாதிகளைப் போதிக்கும் ஆத்மாவின் பிரதிகூல சப்தம் த்வேஷத்தின் காரணமாம், அதனால் அது விடத் தக்கதாம். ஆயினும், எதனால் வேதாந்தத்தின்கண் இது (வருணாத்மக சப்தம்) ஆறாவது பிரமாணம் எனப்படுகின்றது, அது சர்வ லௌகிக வைதிக வியவகாரத்தின் காரணமாம். முமுக்ஷுக்கள் எத் தத்துவமஸ்யாதி மகாவாக்கிய ரூப சப்தத்தைக் குரு முகத்தாற் கேட்டு மீண்டும் மீண்டும் அதனது விசார வாயிலாய் இச்சிக்கப்பட்ட பிரஹ்ம ஞானத்தை அடைகின்றனர், உபாஸகர்கள் ஓங்காராதி மந்திர ரூப சப்தத்தைக் குரு வாயிலாய் ஸ்ரவணித்து அதன் ஜப அர்த்த அநுஸந்தானத்தால் ஞான வாயிலாய் மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு அபீஷ்ட சித்த ஏகாக்கிரத் தன்மையை அடைகின்றனர், அதனால் இது வேதாந்தத்தின்கண் உபயோகமாவின் ஈண்டுக் கொள்ளத் தக்கதும் ஆம்.

## 1-16 கந்தம்.

இரு விதக் கந்தத்தைக் கூறுவாம். ஸுரபி-அஸுரபி பேதத்தால் கந்தம் இரு வகைத்தாம். கருப்பூரம் கஸ்தூரி ரோஜா சந்தநாதி பிருதிவி ரூபத் திரவ்யத்தின்கண் நாநாபேத பிந்ந கந்தம் எதுவோ அது நற் கந்தமாம். மலாதி நாநா திரவியத்தின்கண் நாநாவித கந்தம் எதுவோ அது துர்க் கந்தமாம். அது நியாய ரீதியாய்ப் பிருதிவிரூப பரமாணுவின்கண் நித்தியமாம்;காரியரூபப் பிருதிவியின்கண் அநித்யமாம்; வேதாந்த ரீதியால் ஜலத்தின் காரிய ரூப சர்வப் பிருதிவியும் அநித்யமாம். அதனிடத்துள்ள கந்தமும் அநித்யமாம். அது கேவலம் கிராணேந்திரிய ஜந்ய ஞாநத்தின் விஷயமாம். அதுவும் சப்தம் போன்று விஷய ரூபத் தன்மையால் ஜீவனுக்குப் பிரதிபந்தகமாம். எங்ஙனம் வண்டுகட்குப் புஷ்பாதி கந்தம் பிரதிபந்தகமாம், அங்ஙனமேயாம். அவற்றுள், ஸ்திரீயாதி சம்பந்தமாய ஸ்ருக் சந்தநாதி கந்தம் ஆத்மாவின் அநுகூல ராகத்தின் காரணமாம், விபரீத கந்தம் த்வேஷத்தின் காரண மாம். அதனால்(அவை) முமுக்ஷுக்களால் ஸதா தள்ளத் தக்கன வாம். ஒவ்வொரு காலத்த தாதலானும், அநர்த்தத்தைச் செய்வ தாகலானும். அக்கந்தமே பகவத் மூர்த்தி ஸமர்ப்பிதமாய் ராகத்தின் ஹேதுவாம். ஹரி பக்தர் எவரது நிர்மாலியத்தை அத்தியந்த ஆதரவோடு வாங்கித் தம்மைப் பவித்திரர் என்று அங்கீகரிக்கின்றனர் அதனால் இது கொள்ளத் தக்கதும் ஆம்.

## 1-17- அத்யாத்ம தாபம்.

இரு விதத் தாபத்தைக் கூறுவாம். சாரீர தாப - மாநஸ தாபத்தின் பேதத்தால் அத்யாத்ம தாபம் இரு வகைத்தாம்.

### (1) சாரீர தாபம்.

(1) அவற்றுள், ஜ்வரம் குல்மம் (குன்மம்) உதரம் சூலை முதலிய தோஷ ஸம்பாதித தாபம் அநேக பேத பிந்நமாய் முதலாவதாய சரீரதாபமாம். அது தேவதாசரீரமின்றி ஸர்வப் பிராணிகளிடத்துந் தன்றன் ப்ராரப்த கர்மத்தால் உத்பந்நமாகின்றது.



### (2) மாநச தாபம்.

(2) அஸூயை, மதம், மாத்ஸர்யம், காமம், குரோதம் முதலிய தோஷத்தால் ஸம்பாதிக்கப்பட்ட சித்த வியாகூலத் தன்மையின் காரணம் இரண்டாவதாய மாநஸ தாபமாம். அது லிங்க சரீர அத்தியாஸத்தால் உத்பந்நமாய், பிராந்தியால் ஸர்வ தேவதை மனுஷ்யாதிகளிடத்துச் சாதாரணமா யிருப்பதாம். இந்தத் தாபம் இருவிதச் சரீரத்தின் ஸ்வாபாவிக தர்மமாம். ஆயினும், ஜீவாத்மா இருவிதச் சரீரத்தின் அத்தியாஸ வாயிலாய்ப் பிராந்தி அவஸ்தையின்கண் அதனைத் தனக்கிருப்பதாகவே அங்கீகரிக்கின்றது. எப் புருஷன் நல்லொழுக்கத்தால் ஈஸ்வர குருவின் பிரஸாதத்திற்குப் பாத்ரமாகின்றான் அப் புருஷன் அநாத்மரூப இரு விதச் சரீரத்தினின்றும் அந்யமாகத் தனது ஆத்மாவை அறிந்து முற் புகன்ற தாபங்களினின்றும் விடுபடுகின்றான்.

## 1-18 - வாதம்.

இருவித வாதத்தைக் கூறுவாம். பிரதிபிம்ப அவச்சேத பேதத்தினால் ஜிஞ்ஞாசுக்கட்கு அத்விதீய போதத்தின் பொருட்டு வேதாந்தத்தின்கண் இரண்டு விதமான வாத மிருக்கின்றது.

### (1) பிரதிபிம்ப வாதம்.

(1) அவ்விரண்டின்கண்ணும் பிரதிபிம்ப வாதம் இரண்டு வகைத்தாம்.

(i) சிலர் இங்ஙனங் கூறுகின்றனர்:—சுத்த சேதநத்திற்கும் அஞ்ஞாநத்திற்கும் உள்ள அநாதி சம்பந்த வசத்தினால் சுத்த சேதநத்தின்கண் எவ் வஞ்ஞாந நிஷ்டத் தன்மையின் பிராந்தி பிரதீதி யாகின்றது, அவ் வஞ்ஞாநத்தின்கணுள்ள பிரதி பிம்பம் ஜீவ சேதநமாம். அஞ்ஞாநத்தின் உபகித சுத்த சேதநமே பிம்ப சேதந ஈஸ்வரனும். அதனால் பிரதிபிம்பமும் சத்திய சொரூபமாம்; மித்தையாய அநிர்வசநீய மன்றும்; மற்றோ, அஞ்ஞாநத்தினால் ஒரே சுத்த சேதந அதிஷ்டாநத்தினிடத்து அநிர்வசநீயப் பிரதிபிம்ப பாவம் உற்பந்ந மாகின்றது; அது ஞாநத்தினால் அஞ்ஞாநம் நாசமாவதால், அதனினின்று முண்டாய பிரதிபிம்ப பிம்ப பாவங்கள் நாசமாக, ஒரே சுத்த சேதநம் சொரூபமாக அவஸ்தித மாகின்றது. எங்ஙனம் சுத்த முகத்திற்குக் கண்ணாடியின் சம்பந்தத்தின் அநந்தரம் அந்த ஒரே

முகத்தின்கண் அஞ்ஞானத்தினால் பிரதிபிம்ப, பிம்ப பாவனைகள் கற்பனையாகின்றன? ஒரு அநிர்வசநீய அல்லது வியவகாரிகப் பிரதிபிம்பமு முண்டாவ தின்று; ஏனெனின், கண்ணாடியின் சையோக துவம்ச அநந்தரம் அதிஷ்டான ஞான மின்றியும் வியவகார காலத்தின் கண்ணும் பிரதிபிம்ப, பிம்ப பாவங்கள் அபாவமாகலின். அதனால் கண்ணாடியோடு சட்சுவின் சந்நிகர்ஷ அநந்தரம் சட்சுவானது தர்ப்பணத்தை விஷயஞ்செய்து சீக்கிரம் அதனி னின்றும் வெளிப்போந்து கிரீவாஸ்த (கழுத்திற்கு மேலுள்ள) தனது முகத்தையே விஷயஞ் செய்கின்றது, தர்ப்பணத்தின்கணுள்ள நூதநமா யுற்பந்நமான எப் பிரதிபிம்பத்தையும்(விஷயஞ் செய்வது)அன்றாம். அதனால், சுத்த முகத்தின் கண்ணே சட்சுவிற்குச் சீக்கிரம் கதியாகலின், தர்ப்பணத்தின்க ணிருத்தலாதி ரூபப் பிரதிபிம்ப பாவமும், கண்டத்தின்மீ திருத்தற்றன்மை ரூப பிம்ப பாவமும், பிராந்தி ரூபமாகப் பிரதீதியாகின்றன. அதன் அதீந மாகவே பிரதிபிம்ப பிம்ப இரண்டன் தர்மங்களின் வியவஸ்தையும் பொருந்துகின்றது; உண்மையாகப் பிம்பப் பிரதிபிம்பங்கட்குப் பேத மின்றாம். அங்ஙனமே, சர்வஞ்ஞத்துவாதி தர்மங்களின் வியவஸ்தையும் பிம்பப் பிரதிபிம்ப ரூப ஜீவேசுவரர்களிடத்துப் பொருந்துகின்றது. உண்மையாக ஜீவேசுவரர்கள் ஒரே சுத்த சேதந மாவர். அதனால், பிரதிபிம்பமும் சுத்த முகத்தின் சொரூபமாய்ச் சதா சத்தியமாம். இஃது ஏக ஜீவவாதமாம். இப் பிரதிபிம்ப சத்திய வாதம் விவரண காரர் முதலியோர்களின் பக்ஷமாம். சித்தாந்தத்தின்கண் இதனையே திருஷ்டி சிருஷ்டி வாத மென்று கூறுகின்றனர். திருஷ்டி சிருஷ்டி என்பது திருஷ்டி மாத்திரம் சிருஷ்டியாம்; அல்லது, திருஷ்டியின் சம காலமே சிருஷ்டியின் உதயமாம்; ஏதனாலெனின், திருஷ்டி உண்டாவதற்குப் பூர்வமும், அதன் நாச உத்தரமும் சிருஷ்டியின் அபாவத்தினா லாம். இப் பக்ஷத்தின்கண் சம்பூர்ண ஆகாசாதிப் பிரபஞ்சம் பிராதி பாசிக சாக்ஷி பாஸ்யமேயாம்; சம்பூர்ணப் பிரபஞ்சத்திற்கு ஞாத சத்தையே யாம்; அஞ்ஞாத சத்தை யின்றாம். இஃது உத்தம ஜிஞ்ஞாசுக்களின் போதநப் பிரகாரமாம்.

(ii) அங்கியரோ இங்ஙனங் கூறுகின்றனர்:—சுத்த சத்துவப் பிரதான மாயையின்கண் அதிஷ்டான சகிதப் பிரதிபிம்பம் ஈசுவர சேதநமாம்; மலிந சத்துவப் பிரதான அவித்தையின்கண் அதிஷ்டான சகிதப் பிரதிபிம்பம் ஜீவ சேதநமாம். அவ் விரண்டு பிரதிபிம்ப சேதநங்



களும் அநாதி அநிர்வசநீய அஞ்ஞானத்தினால் அதிஷ்டான ஒரே சேதநத்தின்கண் அநிர்வசநீயமாகக் கற்பிக்கப்பட்டனவாம். அவ்விரண்டின்கண்ணும் அநுஸ்யூத அதிஷ்டான சேதநம் சுத்த சேதந மன்று; ஏனெனின், உபாதியின் சொச்சத் தன்மையால் ஈசுவரனிடத்துச் சர்வஞ்ஞத்வாதிகளாம்; உபாதியின் மலிநத்தன்மையால் ஜீவனிடத்து அற்பஞ்ஞத்வாதிகளாம். அவித்யோபாதியின் விசித்திரத் தன்மையால் ஜீவன் நாநாவாம்; மாயா உபாதியின் ஏகத்தன்மையால் ஈசுவரனும் ஏகனாவன். ஞானத்தால் அஞ்ஞானம் நசித்தபோது அதனாற் கற்பிக்கப்பட்ட பிரதிபிம்பங்களும் நசிக்கின்றன. அவ் விரண்டினது அதிஷ்டான ஒரே சுத்த சேதநமே சேஷமா யிருக்கின்றது. இந்த நாநா ஜீவ வாதமும், பிரதிபிம்ப மித்தியாத்துவ வாதமும், வித்தியாரண்ய சுவாமி முதலியோர்களின் பக்ஷமாம். இதனையே ஆபாச வாத மென்றுங் கூறுகின்றனர். இவ் வாபாச வாதம் சங்கர சுவாமிகளாலும் உபதேச சகஸ்ரியின்கண் கூறப்பட்டிருக்கின்றது. அதன் சுலோகத்தை மேற் கூறுவாம். இப் பக்ஷத்தையே சிருஷ்டி திருஷ்டி வாத மென்று கூறுகின்றனர். சிருஷ்டி திருஷ்டி என்பது, சிருஷ்டி - உற்பத்தியின் அநந்தரம், திருஷ்டி-உண்டாகின்ற தென்பதாம். ஈண்டு ஆகாசாதிப் பிரபஞ்சம் வியாவகாரிகமாம்; பிரத்தியக்ஷாதிப் பிரமாண சித்தமாம்; ரஜ்ஜு சர்ப்பாதிப் பிரபஞ்சம் பிராதிபாசிகமாம்; வியாவகாரிகப் பிரபஞ்சத்திற்கு அஞ்ஞாத சத்தையாம்; பிராதிபாசிகத்திற்கு ஞாத சத்தையாம். இது மத்திம ஜிஞ்ஞாசுக்களின் போதநப் பிரகாரமாம்.

வேறு அவச்சேத வாதி இங்ஙனங் கூறுகின்றனர்:—நிரூப சுத்த சேதநத்திற்கு நிரூப அஞ்ஞான அல்லது நிரூப அந்தக்கரண உபாதியின்கண் சர்வப் பிரகாரத்தும் பிரதிபிம்பம் பொருந்துவதின்று; சாரூப முகாதிகட்கே சாரூப தர்ப்பணாதியின்கண் பிரதிபிம்பம் பார்க்கப்படுதலின்; கூபாதி சொற்ப ஜலத்தின்கண் நிரூப விசால ஆகாசத்தின் பிரதிபிம்பம் தோற்றுகின்றது எது அது ஆகாசத்தினால் அதிஷ்டிக்கப்பட்ட ரூபத்தை யுடைய நக்ஷத்திராதிகளின் பிரதிபிம்பமாம். ஆகாசப் பிரதிபிம்ப அம்சத்தின்கண் அதன் தோற்றம் பிராந்தி ரூபமாம்; அல்லது, ஆரோபித நிரூபாதி விசிஷ்ட ஆகாசத்தின் பிரதிபிம்பம் பொருந்தும். ஆரோபித அல்லது சுவாபாவிக ரூப ரகித சுத்த சேதநத்தின் பிரதிபிம்பத்திற்குப் பொருத்த

மின்மையாகலின், அவச்சேதக வாதமே அங்கீகாரமாம். அதனால், சுத்த மிருத்வினின்று முண்டான மடாவச்சிந்ந ஆகாசம் போன்று மாயாவச்சிந்ந சேதநம் ஈசுவரனும்; மலிந மிருத்வினின்று முண்டான கடாவச்சிந்ந ஆகாசம் போன்று அவித்யாவச்சிந்ந அல்லது அதன் பரிணாம ரூப அந்தக்கரணாவச்சிந்ந சேதநம் ஜீவனும். மகாகாசம் போன்று அநவச்சிந்ந சேதந பாக இரண்டன் சொரூபம் சுத்த சேதநமாம். ஈண்டுக் கடம் கடாகாசத்திற்கும் மடம் மடாகாசத்திற்கும் விசேஷண மாம்; மகாகாசத்திற்கு அவ்விரண்டு முபாதி யாம். அங்ஙனமே, மாயா விசிஷ்ட ஈசுவர சேதநத்திற்கு மாயை விசேஷண மாம்; அவித்யா விசிஷ்ட ஜீவ சேதநத்திற்கு அவித்யாதிகள் விசேஷண மாம். அநவச்சிந்ந சேதநத்திற்கு அவ் விரண்டும் உபாதி யாம்; தான் உபகித மாம். அவித்யாதி உபாதித் தன்மையால் சாக்ஷி யென்றும், மாயா உபாதித் தன்மையால் பிரஹ்ம மென்றும் அது கூறப்படுகின்றது. சாக்ஷிக்கும், பிரஹ்மத்திற்கும் ஔபாதிக பேதம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. நான்கு சேதநங்களும் அங்கீகார மாம். விசேஷண உபாதிகட்கு விசேஷிய உபகிதங்களின் வியாவர்த்தகத் தன்மை சமாந மாம். அங்ஙனமாயினும், விசேஷியத்தின் சொரூபத்தில் பிரவேசமும், உபகிதத்தின் சொரூபத்தில் அப்பிரவேசமும் ஆய இவ்வளவு அம்சத்தில் அவற்றிற்குப் பேதம் உண்டு. ஆவரண சக்தி ரகித மாயா உபாதியின் சிரேஷ்டத் தன்மையால் ஈசுவரன் சர்வஞ்ஞத்துவாதி தர்மத்தோடு கூடியவனா யிருக்கின்றான். ஆவரணசத்தியோடு கூடிய அவித்தையின் நிகிருஷ்டத்தன்மையானும், நாநாத்தன்மையானும் ஜீவன் அற்பஞ்ஞத்துவாதித் தன்மையோடு கூடியவனும், நாநாவு மாவன். அந்த ஜீவன் எப்பொழுது அந்தக்கரண சுத்தியும், ஈசுவரப் பிரசாத வாயிலாய் அதிகாரத்தையு மடைந்து சுரோத்ரியப் பிரஹ்ம நிஷ்ட குருவின் முகத்தினால் மகா வாக்யார்த்தத்தை விசாரிக்கின்றான், அப்பொழுது லக்ஷணா வாயிலாய்த் தத் பதத்தின்கணுள்ள மாயா விசிஷ்டத் தன்மை ரூப விருத்தாம்சத்தையும், துவம்பதார்த்தத்தின்கணுள்ள அவித்யா விசிஷ்டத் தன்மை ரூப விருத்தாம்சத்தையும் விட்டு அவிருத்த சேதநாம்சத்தின் ஏகத் தன்மையை நிச்சயஞ் செய்து அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப முத்தியை யடைகின்றான்.



பிரதிபிம்ப வாதியோ அவற்றின்கணிங்ஙனங் கூறுகின்றனர்:— சுருதி யாதி சித்தப் பிரதிபிம்பத்தை அங்கீகரியாது விடின், கடபடாதி அவச்சிந்ந சேதநத்திற்கும் பிரமாத்ரு பாவ முண்டாம்; அது திருஷ்ட சர (லோகப் பிரசித்த) மன்றாம். லோகத்தின்கண் ஜட சேதந விபாகம் சிதாபாச அங்கீகார மின்றிப் பொருந்தாதாம். ஏதனாலெனின், பிரதிபிம்பத்தின் பாவாபாவத்தானே லோகத்தின்கண் ஜடசேதநத்தின் வியவகாரம் சித்த மாகின்றது. அசங்க சுத்த சேதநத்திற்கு மாயாதிகளோடு விசிஷ்டத் தன்மையும் யுக்தியோடு கூடியதன்றாம். வேதாந்தத்தினால் லக்ஷணையால் சுத்த சேதநத்தின் பிரதிபாதந மெதுவோ அதுவும் ஆபாச அங்கீகார மின்மையின் பொருந்துவதின்றாம். அதனால் நிர்த் தர்மத்தை யுடைய சேதநத்தின்கண் சப்தத்தின் பிரவிர்த்தி யின்று என்னும் இது பரஸ்பர அவற்றின்கண் தோஷ கதநம் (சொல்லல்) சம்க்ஷேபமாகக் கூறப்பட்டதாம்.

வேறு ஏக ஜீவ வாதியோ இங்ஙனங் கூறுகின்றனர்:—அவிகிருத சுத்த சேதந ஆநந்த சொரூப சதா முத்தியின்கண் பிரதிபிம்பத் தன்மையும், அவச்சேதகத் தன்மையும், கல்பித அஞ்ஞாநத்தினால் மித்தையாகவே கற்பிக்கப்படுகின்றன. அதனால், ஆகாசாதிகளின் சமாந சத்தை யுடைய ஜலத்தினால் பூரணஞ் செய்யப்பட்ட கடாதிகளிடத்துப் பிரதிபிம்பத் தன்மையும், அவச்சிந்நத் தன்மையும் பார்க்கப்படுகின்றன. அவித்தையும் அதன் காரியமும் அவிகிருத சேதந சத்தையினின்றும் விஷம சத்தையுடையதாம். வாஸ்தவமாகக் காரிய சகித அஞ்ஞாநம் சத்தா சூநிய மாம். அந்தத் திரி கால அசத் அஞ்ஞாநத்தின் சம்பந்தம் அசங்க சேதநத் தோடு துர்க்கட மாம் (நிரூபிக்கக் கூடாததாம்). அதன் அதீநப் பிரதிபிம்பத் தன்மையும், அவச்சிந்நத் தன்மையும் எங்ஙனம் உண்மையாகச் சித்த மாம்? அதனால், சுத்த சேதநத்தி னிடத்துக் கல்பித அஞ்ஞாநத்தின் கல்பித சம்பந்தத்தினால் மித்தையாக ஜீவ பாவ முண்டானது போன்று பிராந்தியால் தோற்றுகின்றது. அந்தப் பிரஹ்ம ரூப ஜீவன் முக்காலத்து மின்றிய கர்த்திருத்வாதி அநர்த்த சம்சாரத்தை அஞ்ஞாந வசத்தினால் மித்தையாகவே தன்னிடத்துப் பார்க்கின்றான்; அதன் நிவிர்த்தியின் பொருட்டுச் சர்வஞ்ஞத்வாதி தர்ம விசிஷ்ட ஈஸ்வரனையும், சுரோத்திரியத்வ பிரஹ்ம நிஷ்டத்வாதி தர்ம விசிஷ்ட குருவையும் அஞ்ஞாந

வாயிலாகக் கற்பனை செய்து அவர்கட்குப் பக்தி சிஸ்ருஷாதி வசத்தனுப் அவர்களது தியாந மகா வாக்ய உபதேசத்தை அநுஷ்டாநஞ் செய்து மித்தையாய அஞ்ஞாநத்தை நசிப்பித்து மித்தையாகவே அநர்த்தத்தின் நிவிர்த்தி பூர்வகம் தன்னிடத்து மோக்ஷ பலத்தை அங்கீகரிக்கின்றான்; உண்மையாகப் பந்த மோக்ஷங்க ளற்றவனும். எங்ஙனம், சொப்பந திருஷ்டாவால் சுவப்பந கல்பித ராஜாதிகட்கு மித்தையாய சேவையின் வாயிலாகப் பொய்யாக அபீஷ்ட பலம் அடையப்படுகின்றதோ அங்ஙனமே ஆம். அதனால், அநிர்வசநீய அஞ்ஞாந அவஸ்தா காலத்தின்கண்ணும் பிரஹ்ம சொரூப ஜிவன் பந்த மின்றியவனுவன். வாஸ்தவ பந்தத்தின் அபாவத்தினால் அவனுக்கு உண்மையாக முக்தியு மின்றாம். மற்றோ, எப்பொழுதும் அவன் அத்விதீய சுக சொரூப அவிகிருத சைதந்யமே யாவன். அங்ஙனமாயினும், அந்த ஜீவன் சுவகல்பித அஞ்ஞாந காரிய அந்தக்கரண விசிஷ்ட பிரமாதா ரூப ஜீவ ஆபாச வசிஷ்ட வாமதேவாதிகட்கு ஞாநப் பிரபாவத்தினால் முத்தி அங்கீகரிக்கின்றனன்; வர்ணாஶ்ரம அபிமாநமுடையவனுக்குப் பந்தத்தை யங்கீகரிக்கின்றனன்; சொப்பந திருஷ்டாப்போன்று அவற்றின்கண் தன்னையும், ஒரு வர்ணமுடையவன், அல்லது ஆஶ்ரம முடையவனென்று மித்தையாகவே அங்கீகரிக்கின்றனன்; உண்மையாக எவ் விகாரத்தையும் அடைவ தின்றாம். இது வேதாந்தங்களின்கண் முக்ய சித்தாந்த மாம். இது பாஷ்யகார, வார்த்திகக் கார, சித்தாந்த முக்தாவலிகார, வசிஷ்டாதிகளால் அங்கீகரிக்கப்பட்ட பக்ஷமாம். இம் மும் மதத்தின்கண்ணும் ஒரே அத்விதீய ஆத்ம ஞாநமே சமாந பலமாம். அங்ஙனமாயினும், அத்விதீய ஆத்ம போதநத்தின் பிரகாரம் முக்ய, அமுக்ய அதிகாரிகளின் பேதத்தினால் பிந்ந பிந்நமாம். அதனால், எவ் வதிகாரிக்குத் தனது அதிகாராநுசாரமாக எந்த ரீதி அநுகூலமா யிருக்கின்றதோ அதனைப் பலத்தின் பிரகாரம் சாஸ்திர குரு வாயிலாக அநுஷ்டாநஞ் செய்து பிரஹ்மாத்ம ஏகத்வ ஞாநத்தைச் சர்வப் பிரகாரத்தும் சம்பாதித்தல் யோக்யமாம். இதன் கண்டந மண்டநத்தின்கண் இச்சை செய்யற்க. எதனாலெனின், தூஷண பூஷணங்கள் சர்வ விடத்து மிருத்தலின். பின்னையோ, பாஷியக்காரராலோ "ஜீவன் அம்சம் போன்று அம்சன்; சுருதியின்கண் நாநா உபதேச மாகலின்" "ஆபாச ரூபம் ஜீவன்." "இக்காரணத்தானே இதன் உவமை சூரியாதி போன்று"



என்பன வாதி சூத்ரார்த்த நிரூபணத்தின்கண் ஆபாச வாதமே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது; உபதேச சகஸ்ரியின் 18 வது பிரகரணத்தில் அநேக யுக்திகளால் வாதியின் ஆக்ஷேப கண்டந பூர்வகம் ஆபாச பக்ஷமே பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. ஈண்டும் திசை(வழி)யைக் காட்டுவதற்காக அதன் ஒரு சுலோகத்தை யெழுதுவாம். "புத்திக்கு எப்பொழுது சைதந்ய ஆபாசத்தன்மையும், ஆத்மாவிற்குச் சைதந்ய சொரூபத்தன்மையு மாகின்றன அப்பொழுது வேதம் அவ்வாத்மாவை ஞாந சத்திய அநந்த ஆநந்த ஆத்மாதி சப்தங்களினால் பிரதிபாதநஞ் செய்கின்றது, ஈண்டுப் பொருந்துகின்றது." இதற்கு இது தாத்பர்ய மாம்:—பிரகாச சுவபாவ வஸ்து எதன்கண் பிரதிபிம்பிக்கின்றதோ அதன்கண்ணேயே பிரகாச ஆபாசத்தின் உதய ஏதுவாகின்றது. எங்ஙனம் ஜலத்தின்கண் பிரதிபிம்பித்த சூர்யன், அங்ஙனமே புத்தியில் பிரதிபிம்பித்த சைதந்யமும் அதன்கண், சித்தப் பிரகாசத்தின் உதய ஏதுவாகின்றது. அதனால் ஆபாசத்தோடு கூடிய புத்தியினிடத்து ஞாநாதி சப்தங்களின் வாச்சிய, வாசக பாவ சம்பந்தத்தைக் கொண்டு வேதம் ஆத்மாவை லக்ஷணையாற் போதிக்கின்றது என்னும் இது பொருந்துகின்றது. அங்ஙனங் கொள்ளாக்கால், நிர்த் தர்மக ஆத்மாவினிடத்து ஆபாசத்தோடு கூடிய புத்திரூப வாயிலின்றிச் சப்தப் பிரவிர்த்தியின் அநுபபத்தி யாகலின் அதற்கு வேதாந்தத்தினா லறியப்படுந் தன்மை சித்தமாவதின்றாம். பிரத்தியக்ஷாதி வேறு பிரமாணங்கட்கோ அதன்கண் பிரவிர்த்தித் தன்மை யின்று. எதனாலெனின், ஆத்மா அவற்றிற்கு விஷய மன்றாகலின். அதனால், ஆத்மாவின் அசித்தியே யாகும். இதனால் ஆபாச பக்ஷத்தின் அங்கீகாரம் சுருதி ஸ்மிருதி நியாயத்தை யறிந்தவர்களால் கொள்ளத் தக்கதாம்.

## 1—19. வாக்யம்.

இரண்டுவித வாக்கியத்தைக் கூறுவாம்.:—அவாந்தர வாக்கிய மகாவாக்கிய பேதத்தால் வேத வாக்கியம் இரு வகைத்தாம்.

### (1) அவாந்தர வாக்யம்.

(1) அவற்றுள்ளும், நிர்விகல்ப, ஸவிகல்ப, பிரகிருதியின் பேதத்தால் அவாந்தர வாக்கியம் மூவகைத்தாம்.

(i) சோதித தத்துவம் பதார்த்தங்களின் சொரூபத்தைப் பிரதிபாதிக்கும் "ஸத்திய ஞாந அநந்தாநந்தப் பிரஹ்மமாம்" "எது

ஈண்டுப் பிராணிகளின் ஹிருதயத்தினுள் ஜோதிரூப புருஷனும்" என்பன வாதி வாக்கியம் நிர்விகல்பமாம்.

(ii) தத் பத துவம் பத வாச்யார்த்த உபயோகியாய கிரம சிருஷ்டியைப் பிரதிபாதிக்கும் "ஆத்மாவினின்று ஆகாசம் உண்டாயிற்று" "எதனி னின்று இப் பூதங்கள் உண்டாயின" என்பன வாதி வாக்கியம் ஸவிகல்பமாம்.

(iii) பிரஹ்மாத்மாவின்கண் அத்யஸ்த அநாத்மாவின் நிஷேதத்தைப் பிரதிபாதிக்கும் "நிரோத மன்று உத்பத்தி யன்று" "ஈண்டு நாநா அற்பமும் இன்று" என்பன வாதி வாக்கியம் பிரகிருதி ரூபமாம்.

(2) மகாவாக்யம்.

(2) ஸ்வயம் ஸித்த ஜீவ னிடத்துள்ள அஞ்ஞாதப் பிரஹ்மத் தன்மையின் போதகவாக்கியம் மகாவாக்கியமாம். "தத்துவமஸி" "அயமாத்மாப் பிரஹ்மம்" "பிரஞ்ஞாந மாநந்தம் பிரஹ்மம்" "அஹம் பிரஹ்மாஸ்மி" என்பன வாதி பேதத்தால் நான்கு வேதத்தின்கண்ணும் நான்குவித மகாவாக்கியங்கள் இருக்கின்றன. அவற்றுள், 'தத்துவமஸி' யாதி மூன்று வாக்கியங்களும் உபதேச வாக்கியம் எனப்படுகின்றன. "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னு மிவ் வாக்கியம் வித்வான்களினது அநுபவ வாக்கிய மெனப்படுகின்றது. முற் கூறிய முன் மூன்று வாக்கியங்கள் எவையோ அவை எதனால் பிரஹ்மாத்ம ஏகத்துவ ரூப வாக்கியார்த்தத்தைப் போதிப்பதில் உபயோகியாய் மகாவாக்கியத்திற்கு உபகாரம் செய்வனவாம், அதனால் அவாந்தர வாக்கியம் அல்லது அங்க வாக்கிய மெனப்படுகின்றது. தத்துவமஸியாதி வாக்கியங்கள் எதனால் பிரஹ்மாத்மாவின் ஏகத்துவ ரூப அர்த்தத்தை லக்ஷணையால் முமுக்ஷுவினிடத்து சாக்ஷாத் போதநம் செய்கின்றனவோ, அதனால் அந்த மகா வாக்கியங்கள், அங்கீ வாக்கியம், அல்லது, உபகார்ய வாக்கியம் எனப்படுகின்றன. அதிகாரி, சுரோத்ரியப் பிரஹ்ம நிஷ்ட குரு வாயிலாய் மகா வாக்கியத்தை விசாரித்துப் பிரத்தியகாத்மாவைப் பூர்ணாநந்தப் பிரஹ்ம ரூபமாக அறிந்து நிலைத் திருக்கின்றான்; துவைதவாதியோ, ஜீவேசுவரர்கட்கு அத்தியந்த ஏகத்தன்மைரூப மகாவாக்கியத்தின் அர்த்தத்தை அங்கீகரியாது இரண்டற்கும் பேதத்தின்கண் அதன் அர்த்தத்தைக் கற்பிக்கின்றான். இன்னும் சிலர் காரிய காரண ஏகத்தன்மை, குண



ஏகத்தன்மை, ஸ்துதி ஏகத்தன்மை, உபசார ஏகத்தன்மை, அம்சாம்ஸி ரூப ஏகத்தன்மைகளைத் தமது புத்தி தோஷத்தால் கற்பிக்கின்றனர்; அவர்களினது கற்பனை சுருதி தாத்பர்ய ஞாநத்தின் சூந்யத் தன்மையால் நிர்மூல மநோரத மாத்திரமாம். அஃது ஆசார்யர்களால் நாநா வித யுக்திகளால் கண்டிக்கப்பட்டிருக்கின்றது; அதனால், ஜிஞ்ஞாஸுக்களால் ஸதா சிரத்தை செய்யத்தக்க தன்றாம்.

1-20 லக்ஷணம்.

இரு வித லக்ஷணத்தைக் கூறுவாம்:—தடஸ்த லக்ஷண ஸ்வரூப லக்ஷணத்தின் பேதத்தால் லக்ஷணம் இரு வகைத்தாம்.

(1) தடஸ்த லக்ஷணம்.

(1) வஸ்துவின் அஸாதாரண தர்மம் லக்ஷணம் எனப் படுகின்றது. எதன் ஞாநத்தால் லக்ஷியத்திற்கு அந்ய வஸ்துவினின்றும் பிந்ந விசேஷ ஞாநம் உண்டாகின்றதோ அது லக்ஷணத்தின் ஸாமாந்ய லக்ஷண மெனப்படுகின்றது. லக்ஷிய ஸ்வரூபத்தின் பிந்நமாய் லக்ஷியத்தின்கண் ஒரு காலத் திருப்பதாய்த் தனது லக்ஷியத்தை அந்யவற்றினின்றும் எது வியாவர்த்தகம் செய்வது அது தடஸ்த லக்ஷணமாம். எங்ஙனம்? லோகத்தின்கண் பிருதிவிக்குக் கந்தத்தன்மை தடஸ்த லக்ஷணமாம்; அது பிருதிவியின் உத்பத்தி க்ஷணத்தின் கண்ணே யின்றாம். எதனால் எனின், உத்தர க்ஷணத்தில் பிருதிவியின் காரண அவயவத்தின்க ணின்றும் கந்த குணம் உண்டாகுதலின் என்க. நையாயிகர்களது "உத்பத்தியாகும் திரவ்யம் ஒரு க்ஷணம் குண மின்றி யிருக்கின்றது" என்னு மிவ் வசநத்தால் முதல் க்ஷணத்தில் திரவியத்திற்கு நிர்க்குணத் தன்மை ஸ்வீகரிக்கப் படுதலினென்க. ஸகல காரிய நாசமே பிரளயமாகலின், மகாப் பிரளயத்தின் கண்ணும் கந்த குணமே யின்றாம். அதனால் மத்தியின்கண்ணே கந்தத்தன்மைத் தர்மம் பிருதிவியின்கண் இருந்துகொண்டு ஜலாதிகளினின்றும் பிருதிவியின் வியாவர்த்தகமாம்.

(2) ஸ்வரூப லக்ஷணம்.

(2) லக்ஷியத்தின் ஸ்வரூபமாய்த் தனது ஆஸ்ரய லக்ஷியத்தை அந்யவற்றினின்றும் எது வியாவர்த்தகம் செய்வது அது ஸ்வரூப லக்ஷணமாம். எங்ஙனம்? பிருதிவிக்குப் பிருதிவித் தன்மை லக்ஷண

மாம். ஜாதி வ்யக்தி என்னும் இரண்டிற்கும் தாதாத்மியம் அங்கீகாரம் செய்தலின், ஜாதி வியக்தியின் பேதம் பொருந்துவ தின்று; அதனால், லக்ஷிய லக்ஷண பாவமும் பொருந்துவதின்று; அங்ஙனமாயினும், ஜாதி வியக்தியின்கணுள்ள ஸாமாந்யத்துவ விசேஷத்துவ ரூப தர்மத்தின் பேதத்தால் அவற்றின் பேத கடித லக்ஷிய லக்ஷண பாவமும் பொருந்துகின்றது. அங்ஙனமே, வேதத்தின்கண்ணும் ஜகத்தின் உத்பத்தி, ஸ்திதி, லயத்தின் காரணத்தன்மை பிரஹ்மத்தின் தடஸ்த லக்ஷணமாம்; அதுவும் ஜகத்தின் உத்பத்திக்குப் பூர்வமும் அதன் பிரளயத்தின் பின்னரும் பிரஹ்மத்தின்கண் இன்றாம்; அவை மாயா காரிய மாகலின். அதனால், மத்தியின்கண் அவித்தையாற் கற்பிக்கப்பட்ட ஜகத் காரணத் தன்மை ரூப தடஸ்த லக்ஷணம் பிரஹ்மத்தின்கண் நிலைபெற் றிருந்து பிரஹ்மத்திற்கு அந்யவாதிகளாற் கற்பிக்கப்பட்ட பிரதாநாதி காரணங்களினின்றும் வியாவர்த்தகமாம்; அதனால், தடஸ்த லக்ஷண மெனப்படுகின்றது. "ஸ்திதி பிரளய காரணத் தன்மை" மாத்திரம் லக்ஷணமாகக் கூறின், ஜகத்தின் நிமித்த காரணம் அந்யமேயாம். எதனா லெனின், காரியத்தின் ஸ்திதியும், லய ஆச்ரயமும் உபாதாநத் தன்மைக்கே நியமமாகலின்; அதனால், ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயத்தின் காரணத் தன்மை கூறப்பட்டது. ஸ்ருஷ்டி, ஸ்திதிகளின் காரணத்தன்மை மாத்திரம் கூறின், பிரஹ்மத்திற்கு நிமித்த காரண மாத்திரத் தன்மையாம்; எதனா லெனின், ஸ்ருஷ்டி, ஸ்திதியின் காரணத்திற்குக் குலாலாதி போன்று நிமித்த காரண மிருத்தலின். இத்தூஷண நிவாரணத்தின் பொருட்டு லய காரணத் தன்மையென்னும் மூன்றாவது விசேஷணமும் கூறப்பட்டது. அதனால், ஜகத் கர்த்ருத்வ, ஜகத் உபாதாநத்வ ரூப தடஸ்த லக்ஷணம் கூறியதால், பிரஹ்மத்தி னிடத்து அபிந்ந நிமித்த உபதாநத் தன்மையும் அர்த்தத்தாற் சித்தமாம். பிரஹ்மத்திற்கு உண்மையாக ஸ்வரூபமாய் அந்யவற்றினின்றும் வியாவர்த்தமாகின்றது எது, அது பிரஹ்மத்தின் ஸ்வரூப லக்ஷணமாம். எங்ஙனம்? "ஸத் சேதநாநந்தம்" பிரஹ்மத்தின் லக்ஷணமாம். அது அஸத், ஜட, துக்க ரூப மாயையினின்றும் அத்தியந்த பிந்ந லக்ஷியப் பிரஹ்மத்தின் வியாவர்த்தகமாம். அஃது உண்மையாகப் பிரஹ்மத்தினின்றும் அத்தியந்த அபிந்நமாயினும் அந்தக்கரண விருத்திரூப உபாதி ஸம்ஸர்க்க வசத்தால் பேத கடித லக்ஷண பாவமும் பொருந்துகின்றது. "ஸத் பிரஹ்மமாம்" என்று இவ்



வளவு மாத்திரம் கூறின், நையாயிகர்களால் அங்கீகரிக்கப்பட்ட நித்திய ஸ்வரூபஸத்தாஜாதியின்கண் லக்ஷணத்திற்குஅதிவியாப்தியாகலின் ஞானம் எனக் கூறப்பட்டது; ஜாதி ஜடமாகலின். "ஞானம் பிரஹ்மம்" எனக் கூறின், பௌத்தர்களால் அங்கீகரிக்கப்பட்ட க்ஷணிக ஞானத்தின்கண் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியாகலின், "ஸத் ஞானம்" எனக் கூறப்பட்டது; க்ஷணிக ஞானம் அஸத்தாகலின். "ஸுகம் பிரஹ்மம்" எனக்கூறின், விஷய சுகத்தில் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியாகலின், பிரஹ்ம சுகத்திற்கும் அஸத்வ, ஜடத்வத்திற்குப் பிராப்தியாகலின் "ஸத் சேதந ஸுகம்" எனக் கூறப்பட்டது. இவ்விசிஷ்ட லக்ஷணம் கூறின் ஸத் விசேஷணத்தால் அர்த்தத்தால் பிரஹ்மத்திற்கு அஸத்தினின்றும் வியாவர்த்தியும், சித் விசேஷணத்தால் ஜடத்தினின்றும் வியாவர்த்தியும், ஸுக விசேஷணத்தால் துக்கத்தினின்றும் வியாவர்த்தியும் ஸித்தமாகின்றன; அதனால், மாயா கல்பித ஜகத் காரணத்வரூபப் பிரஹமத்தின்கண் ஒரு காலத்திருக்கும் பகிர் தர்மம் யாதோ அதனை மித்தையாக அறிந்து ஸ்வரூப லக்ஷணத்தால் அதன் பிரதிபாதக சுருதிப் பிரமாணத்தால் சச்சிதாநந்த ஸ்வரூபப் பிரஹ்மத்தின் ஸம்யக் ஞானம் முமுக்ஷுக்களால் ஸம்பாதிக்கத் தக்கதாம்.

## 1-21 சம்பத்தி.

இரு வித ஸம்பத்தியைக் கூறுவாம்:--தைவீ ஆஸுரீ பேதத்தால் ஸம்பத்தி இரு வகைத்தாம்.

### (1) தைவீ சம்பத்தி.

(1) சுருதி ஸ்மிருதியின்கண் பலத்தின் ஸங்கல்ப மின்றி எவ்வருணாச் சிரமத்தின் எச் சாத்விகக் கிரியை அவஸ்யம் கர்த்தவ்யத் தன்மையாற் கூறப்பட்டிருக்கின்றதோ அது தைவீ சம்பத்தியாம். அது ஸத்வ சுத்தி, பகவத் பக்தி, ஞாந யோக அவஸ்திதி பர்யந்தம் உண்டாய் ஸம்ஸார பந்தத்தினின்றும் நீங்குதற் பொருட்டுக் கூறப்பட்டிருக்கின்றது. அது முமுக்ஷுக்களாற் கொள்ளத்தக்கதாம்.

### (2) ஆஸுரீ சம்பத்தி.

(2) எது சாஸ்திர நிஷித்த அஹங்காரத்தோடும் பல ஸங்கல்பத்தோடும் ராஜஸீ தாமஸீ கிரியை எனப்படுகின்றது அது ஆஸுரீ

சம்பத்தியாம். அது தம்ப தர்ப்பாதி பர்யந்தமாய் ஸம்ஸாரத்தில் விழுதற்பொருட் டெனப்படுகின்றது. அது முமுக்ஷுக்களால் தள்ளத் தக்கதாம்.

அதனால், எப்புருஷன் சாஸ்திரத்தின் ஸம்ஸ்கார பலத்தால் ஸ்வபாவ சித்த ராகத் துவேஷத்தை விட்டு, தர்மபர னாகின்றான் அவனே தேவ னெனப்படுகின்றான். எப் புருஷன் சாஸ்திர ஸம்ஸ்கார ஹீநனாய் ஸ்வபாவ சித்த ராகத் துவேஷ பலத்தால் அதர்மபர னாகின்றான் அவன் அஸுர னெனப் படுகின்றான். அல்லது முன் ஜந்மத்தில் ஸம்பாதித்த விவேக வைராக்யாதி ஸாத்விக பரிணாம ரூப சுப விருத்தியின் வாஸனையின் சந்ததி தேவ தர்மமாதலின், தைவீ ஸம்பத்தியாம். அல்லது, இந்தச் சந்மத்தின்கண் பூர்வ ஸம்ஸ்காரத்தின் பலத்தால், அல்லது, சாஸ்திர சம்பந்தப் பிரயத்தநத்தால் உண்டான கல்யாண விருத்தியின் சமுதாயம் யாதோ அது தைவீ ஸம்பத்தியாம். அதன் தர்ம ஸம்பந்ந புருஷன் தேவ னெனப்படுவான்.

பூர்வம் அநுஷ்டிக்கப் பட்ட ராஜஸீ தாமஸீ பரிணாம ரூப காமக் குரோத லோப ஹிம்ஸா அநிர்தாதி அசுப விருத்திகளின் வாஸநா சந்ததி அஸுர தர்மமாதலின் ஆஸுரி ஸம்பத்தியாம். அல்லது இச் சந்மத்தில் பூர்வ ஸம்ஸ்காரத்தின் பலத்தால், அல்லது, கெட்ட சங்காதிகளின் பலத்தால் உத்பந்நமாய ராஜஸீ தாமஸீ அமங்கல விருத்தியின் சமுதாயம் யாதோ அது ஆஸுரீ ஸம்பத்தியாம். அத் தர்ம ஸம்பந்ந புருஷன் அஸுர னெனப்படுவான்.

அவ்விரண்டன்கண் தைவீ ஸம்பத்தி, ஸ்ரீபகவானால் 2 - 12 - 14 - 16 - வது அத்தியாயங்களில் நாநாப் பிரகாரமாகக் கூறப்பட் டிருக்கின்றது; அங்ஙனமாயினும் கீதையின் வசநத்தால் அதனை லேச மாத்திரமாகக் காட்டுவாம். "அபயம், ஸத்வ ஸம்சுத்தி, ஞாந யோக வியவஸ்திதி, தாநம், தமம், யஞ்ஞம், ஸ்வாத்யாயம், தபம், ஆர்ஜவம், அஹிம்ஸை, ஸத்யம், அக்குரோதம், தியாகம், சாந்தி, பிசுநத்தன்மை யின்மை, பூதங்களினிடத்துத் தயை, அலோலுத்துவம், மார்த்தவம், ஹ்ரீ, அசாபலங்கள் தைவீ ஸம்பத்தின் ஆசிரயத்தால் உத்பந்நமாய புருஷனுக்கு ஹே பாரத ! இத்தர்மங்கள் உண்டாகின்றன" என்று கூறப்பட் டிருக்கின்றது. இதன் அர்த்தம்:—



சாஸ்திரத்தால் உபதேசிக்கப்பட்ட அர்த்தத்தின் ஸந்தேக மின்றிய அநுஷ்டாநம் அபயமாம். அல்லது ஒன்றும் வாங்காத யான் எங்ஙனம் ஜீவிப்பேன் என்னும் இவ்வித எப்பயம், அல்லது பிராரப்த கர்மத்தை அல்லது பரமேசுவரனைச் சரீராதி யாத்திரையின் நிர்வாகமாக அறிந்து அந்தப் பய மின்றி யிருத்தல் அபயமாம்.

அந்தக்கரணத்தின் நிர்மலத் தன்மை (பகவானது தத்வ ஸ்பூர்த்தியின் யோக்யதத்தன்மை) சத்துவ சம்சுத்தியாம். அல்லது, பரவஞ்சனை மாயை அநிர்தாதி யின்மை சத்துவ சம்சுத்தியாம். அந்நியரை எவ் விதமான பொய்யாலும் வசிகரணஞ் செய்தல் பரவஞ்சனையாம். ஹிருதயத்தின்கண் வேறு பிரகாரமாய் அறிந்து வெளியில் வேறு பிரகாரமாய் நடித்தல் மாயையாம். காண்டல், கேட்டல் அநுசாரமாய்ப் புகலாமை அநிர்தமாம்.

சாஸ்திரத்தால் ஆத்ம தத்துவத்தின் லாபம் ஞாநமாம். சித்த ஏகாக்ரத் தன்மையால் தனது அநுபவத்தில் அதன் ஆரூடத்தன்மை யோகமாம். அவ்விரண்டனிடத்துச் சதா நிலைத்திருத்தல் ஞாந யோக வியவஸ் திதியாம். இது சாதந ரூப தைவீ சம்பத்தியாம்.

அல்லது, சர்வ பூதத்திற்கும் அபய தாந சங்கற்பத்தைப் பாலித்தல் அபயமாம். "சிரவணாதிகளின் பரிபாகத்தினால் அந்தக்கரணத்தின் அசம்பாவநா விபரீத பாவநாதி மல மின்மை சத்துவ சம்சுத்தியாம். ஆத்ம சாட்சாத்காரம் ஞாநமாம். மநோ நாச வாசநா க்ஷயத்தின் அநுகூலப் புருஷப் பிரயத்தநம் யோகமாம். அவ்விரண்டற்கும் சம்சாரத்தி னின்றும் விலக்ஷண விசிஷ்ட அவஸ்திதி ரூப ஜீவந் முத்தி ஞாநயோக வியவஸ்திதியாம். இது பல ரூப தைவீ சம்பத்தியாம்.

இங்ஙனம் மகா பாக்ய பரமஹம்சனுக்குப் பல ரூப தைவீசம்பத்தியைப் புகன்று, அதனின் நியூந கிருகஸ்தாதிகட்குச் சாதந ரூப தைவீ சம்பத்தி கூறப்படுகின்றது:—

தனது அந்நாதிகளைச் சத்தியநுசாரம் சாஸ்திரம் புகன்ற சற் பாத்திரத்தின்கண் பகுத்துக் கொடுத்தல் தாநமாம்.

பாஹியேந்திரியாதிகளை அடக்குதல் தமமாம். அல்லது, ருது காலத்தினின்றும் அந்நிய காலத்தில் மைதுந மின்மை தமமாம்.

ஸ்ரௌத அக்நிஹோத்ராதி, ஸ்மார்த்த தேவ பித்ராதி சதுர்வித யக்ஞாநுஷ்டாநம் யக்ஞமாம்.

இம் மூன்று தர்மங்களும் கிருகஸ்தர்கட்காம்.

வேதார்த்த ஞாநத்தின் பொருட்டு விதியாக ருக்வேதாதிகளின் அத்யயநரூப ஐந்தாவது ரிஷி யக்ஞம் சுவாத்யாயமாம். இது பிரஹ்மசாரியின் அசாதாரண தருமமாம்.

சரீரம் வாக் மநங்களை விரோத வியாபாரத்தினின்றும் தடுத்தல் திரிவித தபசாம். அது வாநப்பிரஸ்தனது சுவதர்மமாம்.

இவ்விதம் நான்காஶ்ரமத்தின் தர்மத்தைப் புகன்று வர்ணத்தின் தர்மத்தைக் கூறுவாம் :—

உபதேசிக்கும் குரு பெரியோர்களின் சமீபத்தில் வக்ரத்தன்மையின்மை ஆர்ஜவமாம். ஆர்ஜவ மென்பது நேரே யிருக்கும் தன்மை ரூப சரளத் தன்மைக்காம்.

பிராணிகளின் விர்த்தியைச் சேதித்தல் ஹிம்சையாம். அதனைச் செய்யாதிருத்தல் அஹிம்சையாம்.

அநர்த்தத்தின் சம்பந்த மின்றிய யதார்த்த வசநம் சத்யமாம்.

அந்நியர்களால் நிந்தை அல்லது அடித்தல் பிராப்தமாயின் குரோத முண்டாகாமை அக்குரோதமாம்.

விதிப்பிரகாரம் விகித கர்ம சந்யாசம் தியாகமாம்.

அந்தக்கரணத்தின் உபசமம் சாந்தியாம்.

பரன் குணம் பரோக்ஷமாக அவன் தோஷம் பிரகாசமா யிருத்தல் பிசுநத் தன்மையாம்; அஃதின்மை அபைசுநத் தன்மையாம்.

துக்கிப் பிராணிகளிடத் திரக்கம் தயையாம்.

விஷயத்தின் சந்நிதாநத்தை யடைந்தும் இந்திரியங்களின் அவிகாரித்தன்மை அலோலுத்துவமாம்.

பிரியமாகக் கூறுதலாதி ரூப மிருது சுபாவம் மார்த்தவமாம். அல்லது, குரோதத்தின் அபாவம் மார்த்தவமாம்.



செய்யக் கூடாததைச் செய்யுங்காலத்தில் அதன் பிரதிபந்தத்தால் லோகத்தவர்க்கு உண்டாகும் லச்சை யாது அது ஹிரீயாம்.

பிரயோசந மின்றி வாக் பாணியாதி அவயவங்களின் சலநமின்மை அசாபலமாம். இது பிராமணர்கட்கு அசாதாரண தர்மமாம்.

ஹே அர்ஜுந! சுத்த சத்துவமய வாசநா சந்ததி ரூப தைவீ சம்பத்தைக் கைக்கொண்டு உத்பத்தியாய புருடனுக்கு இத்தர்மங்கள் உண்டாகின்றன.

ஆசுரீய சம்பத்தும் அநந்தம் பிரகாரமாகக் கீதையின்கண் கூறப்பட்டிருக்கின்றது. அதனையும் லேச மாகக் காட்டுவாம் :—

" ஹே அர்ஜ்ஜுந ! ஆசுர தர்ம விசிஷ்ட ஜீவன் தம்பம், மாநம், மதத்தால் அந்விதனுப் பூர்த்தியாகாத காமத்தை ஆஸ்ரயித்து மோகத்தினால் அசத் கிராககத்தைக் கிரகணஞ்செய்து அசுசி விரதனாய் நடக்கின்றான்." இங்ஙனஞ் சங்கற்பஞ் செய்கின்றான் :—" இம் மநோரதத்தை யின்று நா னடைந்தேன்; இதனை மே லடைவாம்; இத் தநம் என்னிடத்தாம்; மேல் வேறு தநம் உண்டாம்; இச்சத்துரு என்னால் மரண மடைந்தான்; மற்றையோரையுங் கொல்வேன்; நான் ஈசுவரன்; நான்போகி; நான் சித்தன்; நான் பலவான்; நான் சுகியா யிருக்கின்றேன். ஹே அர்ஜ்ஜுந! இங்ஙனம் அசுர சம்பத்துடைய புருஷன் அசுசி நரகத்தின்கண் விழுகின்றான்." என. இதன் பொருள் இதுவாம்:-

உள்ளே அதர்ம முடையோனாயினும் வெளியில் தர்மமுடையவன் போன்று காண்பிப்பது தம்பமாம்.

பூஜ்ய னல்லாவிடினும் லோகத்தில் பூஜ்யத் தன்மையைத் தெரிவித்தல் மாநமாம்.

சுப குண விசிஷ்ட உத்கிருஷ்ட மில்லாவிடினும் தன்னிடத்தில் மித்தையாக உத்கிருஷ்டத்தின் ஆரோபணஞ் செய்து பெரியோர்களுக்குச் சந்மாநமும் ஆதரவுஞ் செய்யாமை மதமாம். அவைகளால் அந்வித (கூடின) அவ்வத் திருஷ்ட விஷயத்தின் அபிலாஷையைப் பூரணஞ் செய்வதற்குச் சமர்த்த மின்மை பூர்த்தி யின்றிய காமமாம். அதனை ஆஸ்ரயஞ் செய்து இம் மந்திரத்தினால் இத் தேவதையை ஆராதித்துக் காமிநிகளை ஆகருஷணஞ் செய்வேன்; இம்மந்திரத்

தினை வித் தேவதையை ஆராதித்து மகா தனிகனை, அல்லது, மகா நிதியை வசஞ் செய்வேன் என்னும் இவ்வித அசுப நிச்சயம் அசத்கிரகமாம். அதனை அவிவேகத்தினால் கிரகணஞ் செய்கின்றனர்; சாஸ்திரத்தினா லன்றாம்.

அவைதிக திருஷ்ட பலத்தின் பொருட்டு அவைதிக க்ஷுத்ர தேவதையின் ஆராதநத்தில் விரதம் அல்லது அசுசியாய ஸ்மசாநாதி தேசத்தில் வசித்தல் அல்லது அசுசி அந்நாதிகளைப் புசித்தல் முதலியவற்றில் விரதம் யாதோ அஃது அசுசி விரதமாம். அதனை யுடையவனாய் நடக்கின்றான். இவ்வபீஷ்ட விஷயத்தை இப்பொழுது இவ்வுபாயத்தினால் நான் அடைந்தேன். இம் மநச் சந்தோஷத்தினால் வேறு மநோ ரதத்தைச் சீக்கிரம் நா னடைவேன். இந்தத் தநம் பூர்வமே என் கிருகத்திற் சஞ்சிதமாம். மேல் வருடத்தில் மீண்டும் அதிக தநம் எனக் குண்டாம். இங்ஙனம் தந திருஷ்ணையினால் எவன் வியாகூலனாவன், அத்தியந்தம் ஜயிக்க முடியாத இந்தச் சத்துரு என்னால் மரித்தான்; அந்நிய சர்வ சத்துருக்களையும் சிரம மின்றிக் கொல்வேன்; அவர்களது தார தநாதிகளையும் கிரகணஞ் செய்வேன்; அற்புத சக்தியோடு கூடிய ஈசுவரன் நான்; கேவலம் மநுஷ்யனன்றாம்; சர்வ போக சாதநங்களாற் சம்பன்னன்; புத்ர பிராதாதி சகாயங்களோடுகூடிச் சித்தனா யிருக்கின்றேன்; அல்லது, வரம், சாபங் கொடுத்தற்குச் சமர்த்த சித்தனா யிருக்கின்றேன்; அத்தியந்த தேசசை யுடைய பலவானா யிருக்கின்றேன்; சர்வதா நிரோக சுகியா யிருக்கின்றேன் என்பன வாதி சகஸ்திர பிராந்தியோடுகூடிய எவ் வசுர புருஷன் உண்டோ அவன் அசுசி நரகத்தின்கண் விழுகின்றான். நானும் அக் கர்மத்தின் அநுசாரமாய் அவ்வதர்ம நரகத்தை அசுர யோநியின்கண் தள்ளி விடுகின்றேன். இத் தைவீ ஆசுரீய சம்பத் வாக்கியங்கட்கு மதுசூதந சுவாமிகளாற் செய்யப்பட்ட அர்த்தம் கூறப்பட்டது. இங்ஙனம் ஸ்ரீ பகவானாலும் உபயவித சம்பத்திக்கும் உபயவிதப் பலத்தின் காரணத் தன்மை கூறப்பட்டிருக்கின்றது; அதனால் மோக்ஷத்தை யிச்சிக்கும் புருஷர்களால் தமது மோக்ஷத்தின் பொருட்டுச் சாஸ்திர சம்பந்தப்பிரயத்நத்தினால் ராஜசி, தாமசி ரூப அசுப விருத்திகளைச் சர்வதா நிரோதஞ் செய்து சத்துவ சம்பந்த சுப விருத்திகளைச் சம்பாதநஞ் செய்தல் உசிதமாம்.



## 1-22-அத்தியாசம்.

இரண்டு வித அத்தியாசத்தைக் கூறுவாம் :—

ஞாநாத்தியாச அர்த்தாத்தியாச பேதத்தினால் அத்தியாசம் இரண்டு வகைத்தாம். அவ்விரண்டன் லக்ஷணம் ஸ்ரீ சங்கர சுவாமிகளால் சாரீரக பாஷ்யத்தில் "ஸ்மிருதி ரூபமாய் அந்நியத்தின்கண் பூர்வ திருஷ்ட சஜாதீய அந்நியத்தின் அவபாசம் அத்தியாசமாம்" என்று ஒரு வசநத்தின்கண்ணே காண்பிக்கப்பட்டிருக்கின்றது.

### (1) ஞாநாத்தியாசம்.

(1) அந்நியத்தில் பூர்வம் பார்த்த வஸ்துவின் சமாந ஜாதி யுடைய வேறு வஸ்துவின் ஸ்மிருதி ஞாந சதிர்ச ஞாநம் ஞாநாத்தியாசமாம்; இந்த ஞாநாத்தியாச பக்ஷத்தின்கண் பாஷ்ய வசநத்தின் அர்த்தம் இஃதாம் :—பிராந்தி ஞாநத்தின்கண் ஸ்மிருதி சதிர்சத் தன்மை பிரமாண அஜந்யத் தன்மை யாது அது சம்ஸ்கார ஜந்யத் தன்மை ரூபமாம். எங்ஙனம்? சுத்தியாதியின்கண் ரஜதாதி ஞாநமும், ஆத்மாவின்கண் அநாத்ம அகங்காராதி ஞாநமுமாம்.

### (2) அர்த்தாத்தியாசம்.

(2) ஸ்மிருதி விஷய ஸ்மரிக்கப்பட்ட வஸ்துவின் சதிர்ச முன் பார்த்த சமாந ஜாதி யுடைய வேறு வஸ்து, வேறிடத்தின்கண் தோற்வது அர்த்தாத்தியாசமாம். எங்ஙனம்? சுத்தியாதியின்கண் ரஜதாதியும், ஆத்மாவின்கண் அகங்காராதியுமாம்.

(i) அத்தியஸ்த அர்த்தத்தின்கண் ஸ்மரிக்கப்பட்ட வஸ்துவின் சதிர்சத் தன்மை யாது அது பிரமாண அஜந்ய ஞாநத்தின் விஷயத் தன்மை ரூபமாம். இஃது அர்த்தாத்தியாசத்தின்கண் பாஷ்ய வசநத்தின் சங்க்ஷேப அர்த்தமாம்.

(ii) அந்நியரோ இங்ஙனங் கூறுகின்றனர் :—வஸ்துவின்கண் அவஸ்துவினது ஆரோபம் அத்தியாசமாம். வஸ்து வென்பது வியாவகாரிக சுத்தியாதியும், பாரமார்த்திகப் பிரஹ்மமுமாம். அவஸ்து வென்பது பிராதிபாசிக ரஜதாதியும் அவற்றின் ஞாநமும், வியாவகாரிக ஆகாசாதிப் பிரபஞ்சமும் அவற்றின் ஞாநமுமாம். ஆரோப மென்பது அவபாசம் அத்தியாசம் கல்பநம் கல்பனையாம். இந்த லக்ஷணமும் அர்த்தாத்யாச ஞாநாத்தியாச இரண்டன்கண்ணும் சமந்வயமாம்.

(iii) அந்நியரோ இங்ஙனங் கூறுகின்றனர்:—அதிஷ்டாநத்தினின்றும் விஷம ஸத்தை யுடையதற்கு அதிஷ்டாநத்தின்கண் அவபாசம் யாதோ அஃது அத்தியாஸமாம். ஈண்டும், அதிஷ்டாநத்திற்குப் பாரமார்த்திக வியாவகாரிக சத்தையாம்; அத்தியஸ்தத்திற்கு வியாவகாரிக பிராதிபாசிக சத்தையாம். அதனால் அது விஷம சத்தை யெனப்பட்டது. அவபாச பதத்திற்கு விளக்கம் பாநம் என்னும் இரு பொருள் உணர்க. இந்த லக்ஷணமும் இரண்டத்தியாசத்தின்கண்ணும் சமந்வயமாம்.

(iv) அந்நியரோ இங்ஙனம் கூறுகின்றனர்:—அதன்கண் அதனது புத்தி அத்தியாச மன்றும். சுத்தியாதியின்கண் சுத்தியாதிகளின் ஞாநம் அத்தியாச மன்றும்; பின்னேயோ, ரஜதாதி ரூபத்தால் ஞாநம் எதுவோ அது ஞாநாத்தியாசமாம். இந்த இலக்ஷணம் ஞாநாத்தியாசத்தின்கண் சமந்வயமாம். இலக்ஷணத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்களில் இவற்றின் சப்தத்தாற் பேதம் விளங்குகின்றதாமாயினும், அர்த்தத்தால் பேதம் கிஞ்சித்தும் இன்றென உணர்க.

அவ் வத்தியாசம் மீண்டும் சாதி, அநாதி பேதத்தால் இரு வகைத்தாம்.

சாதி அத்தியாசம்.

(i) ரஜதாதிகளும், அகங்கார ஆகாசாதிகளுமாய இவற்றின் அத்தியாஸம் சாதியாம்; அதனது உபாதாந காரணம் அஞ்ஞாநமாம்; நிமித்த காரணம் தோஷம், ஸம்ஸ்காரம், அதிஷ்டாந ஸாமாந்ய ஞாநமாம்; ராகாதி தோஷம் பிரமாதாவி னிடத்தாம்; ஸாதிருசிய தோஷம் பிரமேயத்தி னிடத்தாம். பூர்வ பூர்வம் அநுபவிக்கப்பட்ட விஷய விஷயங்களினது அநுபவ ஜந்யம் ஸம்ஸ்காரமாம். சுத்தியாதிகளினிடத்து அதிஷ்டாந ஸாமாந்ய ஞாநம் தோஷத்தோடு கூடிய இந்திரிய வாயிலாய் அந்தக்கரண ஜந்யமாம். அதீந்திரிய ஆத்மாவின்கண் ஸாமாந்ய ஞாநம் ஸ்வப்ரகாச ரீதியா லாம்.

அநாதி அத்தியாசம்.

(ii) அஞ்ஞாநத்தின் அத்தியாஸம் அநாதி அத்தியாஸமாம். அவ்வநாதி அஞ்ஞாந அத்தியாஸத்தின்கண் சுத்த சேதநத்தோடு கூட அதன் அநாதி ஸம்பந்தத்தில் அஞ்ஞாநமே உபாதாநமும் நிமித்தமு



மாம். ஏதனாலெனின், நையாயிகர்களால் அங்கீகரிக்கப்பட்ட ஸமவாயாதி போன்று அஞ்ஞாநமும் ஸ்வபர நிர்வாக மாகலின்.

முற் புகன்ற இரண்டத்தியாசங்களுள், அர்த்தாத்தியாஸம் ஸ்வரூப ஸம்ஸர்க்க பேதத்தால் அநேக விதமாம். சிலவிடத்துத் தர்மி அத்தியாஸம், சில விடத்து ஸம்பந்த அத்தியாசம், சிலவிடத்துத் தர்மாத்தியாஸம், சிலவிடத்து அந்யோந்ய அத்தியாசம் உண்டாகின்றன. எங்ஙனம்?

ஸ்வரூப அத்தியாசம் - தர்மி அத்தியாசம்.

(1) சுத்தியாதிகளின்கண் ரஜதாதிகளின் ஸ்வரூபாத்தியாஸம் தர்மி அத்தியாஸமாம்.

ஸம்ஸர்க்க அத்தியாசம்.

(2) ரஜதாதிகளின்கண் இதந்தாதிகளின் அத்தியாஸம் தாதாத்மிய ரூப ஸம்ஸர்க்க அத்தியாஸமாம். ஏதனால் சுத்தியினது இதம் அம்சம் ஸ்வரூபமாக வியாவகாரிக ஸத்தியமாம், சுத்தியின் கண்ணேயே அதனது அபேதமாம், அதனால், அதனது தாதாத்மிய ஸம்ஸர்க்கமே ரஜதத்தின்கண் அநிர்வசநீயமாக உத்பந்நமாகின்றது. எங்ஙனம்? தர்ப்பணத்தின்கண் முகத்தின் அத்தியாஸம் ஸம்ஸர்க்காத்தியாசமாம். ஏதனால் அவ்விரண்டும் வியாவகாரிக ஸமாந ஸத்தை உடையனவாம், விஷமசத்தை அவற்றிற் கின்றும், அதனால் முகத்தின் அநிர்வசநீய அபேத ஸம்ஸர்க்கம் தர்ப்பணத்தின்கண் உண்டாகின்றது. ஸ்படிக மணியின்கண் ஜபாகுஸுமத்தின் தாதாத்மியாத்தியாஸம் யாதோ அதுவும் ஸம்ஸர்க்காத்தியாசமாம். ஏதனால் அவ்விரண்டும் ஸமாந சத்தை யுடையனவாம், ஜபாகுஸுமத்தின் தாதாத்மிய ஸம்பந்தம் தன்னிடத்தேயாம், ஸ்படிகத்தினிடத் தின்றும், அதனால் ஸ்படிகத்தின்கண் அதனது அநிர்வசநீய தாதாத்மியம் ஸம்ஸர்க்காத்தியாஸமாம்.

தர்மாத்தியாசம்.

ஆத்மாவின்கண் "நான் குருடன், செவிடன், ஒற்றைக் கண்ணன்" என்னும் இவ்வித அத்தியாஸம் யாதோ அது இந்திரியங்களின் அநிர்வசநீய தர்மத்தினது அத்தியாஸமாம்; தர்மியாய இந்திரியங் கட்கோ இன்றும். ஏதனாலெனின், "நான் சக்ஷு, நான் காது" என்னும் இவ்விதப் பிரதீதி உண்டாகாமையின்.

அந்யோந்யாத்யாசம்.

ஆத்மாநாத்மாவின் அந்யோந்ய அத்தியாஸம் யாது அதுவும் ஸ்வரூப அத்தியாஸம் ஸம்ஸர்க்க அத்தியாசம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

ஸ்வரூப அத்தியாசம்.

(i) ஆத்மாவின்கண் அநாத்ம அஹங்காராதிகளும் அவற்றின் தர்மங்களுமாய அவற்றின் அத்தியாஸம் ஸ்வரூபாத்தியாசமாம்; எதனுலெனின், அத்தியாசத்தின் பூர்வம் அஹங்காராதிகட்குச் சத்தா சூந்யமாகலின், அவற்றின் ஸ்வரூபமே அத்தியாஸமாம்.

ஸம்ஸர்க்க அத்தியாசம்.

(ii) ஆத்மாவிற்கு அஹங்காராதிகளி னிடத்து அத்தியாஸம் தாதாத்மிய ஸம்ஸர்க்க அத்தியாஸமாம்; எதனுலெனின், அத்தியாஸத்தின் முன்னரும் ஆத்மா சத் ஸ்வரூபமாகலின், அதன் ஸம்பந்தம் அத்தியஸ்தமாம்; ஸ்வரூப மன்றும். ஈண்டு இருவித அத்தியாஸம் கூறப்பட்டன.

அஞ்ஞாநமும் தனது காரியாத்தியாஸ வாயிலாய் ஜீவனுக்கு அநந்த துர்த்தச ப்ராப்தியின் காரணமாம். மநத்திற்கும் காமக் குரோதாதிகட்கும் சாஸ்திரத்தில் ஜயிக்கக்கூடாத தன்மையின் பிரபாவம் அநந்தம் பிரகாரமாகக் கேட்கப்பட்டிருக்கின்றது. அதுவும் ஆத்மாநாத்ம அத்தியாஸ அதீநமாம்; ஸ்வய மன்றும். ஆத்மாவினிடத்து ஸ்வயமாக அவற்றிற்குக் கிஞ்சித்தும் இருப்பின்மையின். அதனுல் முமுக்ஷுக்களால் ஶ்ரோத்ரியப் பிர்ஹ்ம நிஷ்ட குருவின் ஸங்கமாதிகளால் அவ் வத்தியாஸம் அவஶ்யம் நிவாரணஞ் செய்ய யோக்யமாம்.

**1 - 23.** உபாசனே.

இரு வித உபாஸனேயைக் கூறுவாம்:—ஸகுண நிர்க்குண பேதத்தால் பரம்பரையாக மோக்ஷ ஏதுவான உபாஸனே இரு வகைத்தாம்.

(1) சகுண உபாசனே.

(1) மீண்டும் ஸாதநரூப உபாஸனே-பிரதீகரூப, அஹங்க்ரஹரூப பேதத்தால் இரு வகைத்தாம். வேதாந்த விசார அசமர்த்த மந்த மத்தியம அதிகாரிகளே அதன்கண் அதிகிருத ராவர். அவ் வுபாசனே



சித்த ஏகாக்ரத் தன்மை வாயிலாய்ப் பரம்பரையாக ஞாநத்தின்கண்ணும், மோக்ஷத்தின்கண்ணும் உபயோகியாம். அதனுல், வேதாந்த பாகத்தின்கண்ணேயே சூத்திரக்கார பாஷ்யக்காரர்களால் அதன் விசாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது. எதனுல் இப் புருஷனின் இச்சை பிரயத்நங்களால் ஸாத்தியமாம், செய்தற்கும்,வேறுகச் செய்தற்கும், செய்யா திருத்தற்கும் யோக்யமாம், அதனுல் உபாஸநா விர்த்தி மாநஸக் கிரியையாம். அது புருஷனேப் பிரவிர்த்திக்கும் விதிவாக்கியம், அதன்கண் சிரத்தை, அதன் அநுஸார ஹடத்தால் அநுஷ்டாநம் என்னும் இம் மூன்றன் அதீநமாம்; அதனுற் பிரமை யன்றும். பிரமை ஞாநமோ நிர்த்தோஷப் பிரமாணத்தினதும் வஸ்துவினதும் அதீநமாம்; புருஷ,விதிவாக்கிய, விஶ்வாஸ அதீந மன்றும்;அங்ஙனமாயினும், ஸம்வாதாதிப் பிராந்தி போன்று ஞாந ஜநந வாயிலாய் ஸத்ய பலத்தின் ஏதுவாம்; அதனுல் பிரமையின்கண் அந்தர்க்கதமேயாம். குருவினுல் உபதேசிக்கப்பட்ட சுருதி வாக்கியத்தின்கண்ணும், த்யேய ஆகாரத்தின்கண்ணும் விலக்ஷண விர்த்தி யின்றி ஸஜாதீய விர்த்திகட்குத் தியேய ஸாக்ஷாத்கார பரியந்தம் ஈண்டு ஆவிர்த்தி எதுவோ அஃது உபாஸனேயின் சாமாந்ய லக்ஷணமாம். அவ்விரண்டன் மத்தியில் முதலில் சகுணத் தியாநத்தின்கண் பிரதீக அகங்க்ரஹ பேதத்தைக் காண்பிப்பாம்.

(i) பிரதீகத் தியாநம்.

(i) அந்நியத்தினிடத்து அந்நிய புத்தியை அல்லது அபகிருஷ்ட (தாழ்ந்த) வஸ்துவின்கண் உத்கிருஷ்ட (உயர்ந்த) புத்தியை ஆரோபம் செய்து சிந்திப்பது யாதோ, அது பிரதீகத் தியாநமாம். எங்ஙனம்? "அக்ஷராத்மக ஓங்காரம் யாது அஃது அபரப் பிரஹ்மமாம்" என்று குருவின் முகத்தாலும் சுருதி வாக்கியத்தாலும் நிச்சயம் செய்து ஓங்கார அக்ஷரத்தை ஸகுணப் பிரஹ்ம ருபத்தால் சிந்தநம் செய்வது யாதோ அது பிரதீகத் தியாநமாம். எதனு லெனின், உண்மையாக அக்ஷரங்கட்குப் பிரஹ்ம ஸ்வரூபத்தன்மை யின்மையின். இந்த ஸகுண நிர்க்குணப் பிரஹ்மரூப ஓங்காரத்தின் உபாசனே மாண்டூக்யாதி அநேக உபநிஷத்தின்கண் கூறப்பட்டிருக்கின்றது; அதனுல் ஸர்வோத்தமமாம். எங்ஙனம்? ஸாலிக்கிராமாதி பிரதிமையின்கண் விஷ்ணுவின் புத்தியை ஆரோபஞ் செய்து அவற்றைச் சுருதி குருவின்

வசநத்தால் தியாநம் செய்வது யாதோ அதுவும் பிரதீகத் தியாநமாம். எதனாலெனின், பிரதிமை பாஷாணாதி ரூபத்தால் சதுர்ப் புஜாதி விசேஷண விசிஷ்ட விஷ்ணு ஸ்வரூப மன்றாகலின். ஓங்காரத்தின் வாச்சியார்த்த ஸர்வஞ்ஞத்துவாதி குண விசிஷ்ட அபரப் பிரஹ்மம் யாதோ அதனைக் குருமுகமாக் கேட்டு ஓங்காரத்தின் ஆலம்பந மின்றி †ஸ்வஸ்வாமி பாவத்தால் பரதேவதையின் ரூபமாகத் தியாநம் பண்ணுவது எதுவோ, அது ஸாக்ஷாத் தியேய அநுஸாரி த்யாநமாம்; பிரதீகத் தியாநம் அன்றாம். "அநந்த ஸௌந்தரியாதி குண ஸம்பந்ந சதுர்ப் புஜாதி,சக்ர கதாதி,லக்ஷ்மீபார்ஷதாதி விபூதிகளோடுகூடிய வைகுண்டவாஸி பரமேஶ்வரன் யாவன், அவன் ஸர்வ சக்தி ஸர்வஞ்ஞத்துவாதி விசிஷ்டவிஷ்ணுவாம்" என குருவாற் சிரவணம்செய்து எவ்வதிகாரியால் அம்மூர்த்தித்தியாநம்செய்யப்படுகின்றது அதுவும் பிரதிமையின் ஆலம்பந மின்றி ஸாக்ஷாத் த்யேய அநுஸார சிந்தநமாம்; பிரதீகத் தியாநம் அன்றாம். இங்ஙனம் சுருதி குரு வசந அநுஸாரம் எவ் விரக்த புருஷன் பிரதீகத் தியாநம் அல்லது ஸாக்ஷாத் த்யேய சிந்தநம் நிரந்தரஞ் செய்கின்றானோ, அவனுக்கும் சாஸ்திரத்திற் புகன்ற தியாநத்தின் அநுஸாரம் தியேய ஸம்பந்தி, சதுர்வித முக்திரூப பலத்தின் அல்லது பிரஹ்ம லோகாதிகளின் பிராப்தி உண்டாகின்றது. புருஷ ஸ்திரீயாதி பஞ்ச வஸ்துக்களின்கண் அக்நி புத்தி ஆரோபத்தினால் குரு உபதேசத்தினால் எச் சிந்தந முண்டாகின்றதோ அதுவும் பிரதீகத் தியாநமாம். சாந்தோக்யத்தின்கண் அப் பஞ்சாக்நித் தியாநமும் அதனது பஞ்சாகுதியின் தியாநமும் கூறப்பட்டிருக்கின்றன. அது சாஸ்திரத்திற் புகன்ற பிரஹ்ம லோகப் பிராப்தியின் ஏதுவாம்; எதனாலெனின், "எவ் வதிகாரி சிரத்தையையும் சத்தியத்தையும் உபாசிக்கின்றான் அவன் அர்ச்சி தேவதையை யடைகின்றான்." "அந்த அமாநவ புருஷன் இவனைக் காரியப் பிரஹ்மத்தி னிடத்துக் கொண்டு போகின்றான்" என்னு மிப் பஞ்சாக்கிநி வித்தியாப் பிரகரணத்தின்கண் அர்ச்சிராதி மார்க்கமும் பிரஹ்ம லோகப் பிராப்தியும் கூறப்படுதலின். பிரதீக ஆலம்பநத்தை யுடைய உபாசகர்கட்குப் பிரஹ்ம லோகப் பிராப்தி சூத்திரக்கார, பாஷ்யக்காரர்களால் நான்காவது அத்தியாயத்தின் மூன்றாவது பாதத்தில் நிஷேதஞ் செய்யப்பட்டிரு

† ஸ்வ-தான் (அடிமை); ஸ்வாமி-யஜமான் (அடிமை கொண்டவன்).



க்கின்றது; எதனாலெனின், பிரதீகத் தியாநத்தின்கண் தியேயப் பிரஹ்மம் அப்பிரதாநமாகலின், தகராதி (ஹிருதயாகாசாதி) வித்தையின் உபாசகர்கட்கே பிரஹ்மலோகப் பிராப்தி கூறி யிருத்தலின். அங்ஙனமா மாயினும், பஞ்சாக்நி வித்தையின்கண் அவர் (சங்கர - வியாசர்) களானே அந்த நிஷேதத்தின் அபவாதம் புகலப்பட்டிருத்தலின், முற் புகன்ற சுருதியின் சற்பாவத்தினால் பஞ்சாக்நி வித்தையி னின்றும், அந்நியப் பிரதீக உபாசகர்கட்கும் பிதிர்மார்க்கம் மூன்றாவது கஷ்ட மார்க்கம் என்னு மிரண்டன்கண் பிரவேச மின்மையால், அர்ச்சிராதி மார்க்கம் புகலப்பட்டிருக்கின்றது. ஆயினும், அவர்கட்கு வித்யுத் (மின்னல்) லோக பரியந்தமே க்மநம் (போதல்) ஆம்; பிரஹ்ம லோகத்தின் பிராப்தி யின்றாம்.

"நாமம் பிரஹ்மம், வாக் பிரஹ்மம், மநம் பிரஹ்மம். இங்ஙனம் தியாநிக்க" "ஆதித்யன் பிரஹ்மம். இங்ஙனஞ் சிந்திக்க" என்பனவாதி சுருதிகளும் பிரதீகத் தியாநத்தைக் கூறுவனவாம். இதுகாறும் பிரதீகத் தியாநங் கூறப்பட்டது.

### அகங்கிரகத் தியாநம்.

(ii) இப்பொழுது அகங்கிரகத் தியாநத்தைக் கூறுவாம் :— முற்புகன்ற விசேஷண விசிஷ்ட ஓங்கார ஸ்வரூப அபரப் பிரஹ்மம், அல்லது சதுர்ப் புஜாதி விசிஷ்ட வைகுண்டவாசி விஷ்ணு உனது சொரூபமா மென்று சாஸ்திர குரு வசநத்தின்மீது விசுவாசனாய் எவன் அபேத உபாசனையைச் செய்கின்றான், "எது அபரப் பிரஹ்ம ரூப ஓங்காரம் அது நானா யிருக்கின்றேன், நானே விஷ்ணுவா யிருக்கின்றேன், விஷ்ணுவே நானா யிருக்கின்றேன்" என்னுமது அகங்கிரக ரூப சகுண உபாசனையாம். "எவன் விஷ்ணுவன்றாம், அவன் விஷ்ணுவின் கீர்த்தனையைச் செய்யற்க. எவன் விஷ்ணுவன்றாம், அவன் விஷ்ணுவின் அர்ச்சனையைச் செய்யற்க. எவன் விஷ்ணு வன்றாம், அவன் விஷ்ணுவின் ஸ்மரணஞ் செய்யற்க. எவன் விஷ்ணு வன்றாம், அவன் விஷ்ணுவை யடைவ தின்றாம்." என்னும் பிரமாணத்தானும், அவ்வவ் வுபாசனைகளின் உத்கருஷ, அபகருஷணத்தானும், அதிகாரி சாஸ்திரத்திற் புகன்ற சாலோகாதி முத்தி பதத்தை யடைகின்றான். சகுணப் பிரஹ்மம் சாதிசய ஐஸ்வரியவானா யிருத்தலின். "சர்வ விஶ்வ அபேத

அபிமாநி சமஷ்டி ஸ்தூல சரீர உபாதியை யுடைய வைஸ்வாநரப் பரமேசுவரன் நானு யிருக்கின்றேன். சர்வ வியஷ்டி லிங்க அநுகத சமஷ்டி லிங்காபிமாநி இரண்யகர்ப்பப் பரமேசுவரன் நானு யிருக்கி றேன். விஸ்வ, வைஸ்வாநரர்களிடத்தில் அநுகதமாயும், தைசச இரண்யகர்ப்பர்களிடத்தில் அநுகதமாயு முள்ள அந்தர்யாமி ஈஸ்வரன் நானு யிருக்கின்றேன்'' என் றிங்ஙனம் சுருதி குருவின் வாயிலாய்ச் சிரத்தை யுடையவனுய் எவ்வெவ் வதிகாரி மூவித உபாசனையின்கண் அபேத சிந்தனை செய்கின்றுன் அவ்வவனும் உபாசனையின் உத்கர்ஷத் தினுல் அவ்வவ் உபாசிய சொரூபத்தையும் போகப் பிராப்தி ரூபமாய பலத்தையும் அடைகின்றுன். "அப்பரமேசுவரனை எங்ஙனம் எங்ங னம் தியானிக்கின்றுன் அவன், அங்ஙன மங்ஙன மாகின்றுன்'' என்ப தாதி சுருதிகளால் இதுவும் சாஸ்திரத்திற் புகன்ற அகங்கிரக சகுணத் தியாநமாம்.

## (2) நிர்க்குண உபாசனை.

(2) இப்போழுது நிர்க்குண உபாசனையின்கண் பிரதீக அகங்கிரக பேதத்தைக் காண்பிப்பாம் :—

### (i) பிரதீக உபாசனை.

(i) "ஓங்கார அக்ஷரம் நிர்விசேஷப் பிரஹ்மம் என்று உபாசிக்க'' என்பதாதி வசநத்தினுல் குருவின் முகத்தால் ஓங்காரத்தின்கண் பரப் பிரஹ்ம புத்தியை ஆரோபஞ் செய்து எச் சிந்தனை யுண்டாகின்றதோ அது பிரதீக உபாசனையாம்; வர்ணுத்மக ஓங்காரம் பிரஹ்ம சொரூப மன்றுகலின். "நாமம் பிரஹ்மமா மென்று சிந்திக்க'' "நாமத்தினும் வாக் அதிகமாம்; அதனுல் வாக் பிரஹ்மமா மென்று சிந்திக்க'' "மநம் வாக்கினு மதிகமாம்; அது பிரஹ்ம மென்று சிந்திக்க'' என்பன வாதி வசநங்களும் பிரதீகத் தியாந பரமாய் நாமாதிப் பிரதீக உபாசனைகளின்கண் பூர்வபூர்வ உபாசனைகளினும், உத்தரோத்தர உபாஸனையின்கண் இச்சாந்சார அநுஷ்டாந விசேஷ பலத்தைக் கூறு கின்றன.

### (ii) அகங்கிரக உபாசனை.

(ii) "வாச்சியார்த்தத்தில் அநுகத தத்பத லட்சியார்த்த அகண்ட அத்விதீய சச்சிதாநந்த சொப்பிரகாச சர்வ அநுஸ்யூத ப்ரஹ்மம் நீ



ஆம்'' என்று குரு முகமாகச் சிரத்தையாய்ச் சிரவணஞ் செய்து அநந் தரம் எப் பரப்பிரஹ்ம அபேத சிந்தனை ஓங்கார ஆலம்பந மின்றிச் செய்யப்படுகின்றதோ, அஃது அகங்கிரக நிர்க்குணத் தியாநமாம்.

எவ்வதிகாரி ஓங்கார ரூபப் பரப் பிரஹ்மத்தைச் சுருதி குரு வாக்கியத்தினுல் தனது சொரூபமாக அறிந்து நிரந்தரஞ் சிந்திக்கின் றுன் அதுவும் நிர்க்குண அகங்கிரக உபாசனையாம்.

ஓங்காரத்தின் பிரஹ்ம ரூபத் தன்மையும், ஆத்மாவின் பிரஹ்ம அபிந்நத் தன்மையும் பாஷ்யகார வார்த்திககாரர் இருவர்களாலும் மாண்டூக்யாதி உபநிஷத்துக்களின் வியாக்யாநத்தின்கண் சவிஸ்தாரமா கக் கூறப்பட்டிருக்கின்றன. நானே அவற்றை அதிகாரி போதத்தின் பொருட்டுச் சங்க்ஷேபமாகக் கிஞ்சித் கூறுகின்றேன்:—

காரிய காரண ரூப நாம ரூபாத்மக எவ் விப் பிரபஞ்சம் இருக்கின் றதோ அத னதன்கண் நாம அம்சம், ரூப அம்சத்தினது நிரூபக மும், ரூப அம்சத்தில் அநுகதமுமாம்; ரூப அம்சம் நிரூப்யமும்,பரஸ் பரம் வியபிசாரியு மாம். ரூப அம்சம் நாசமாயினும் நாம அம்சமே சேஷமா யிருக்கின்றது; அதனுல் நாம அம்சமே சார மாம்; ரூப அம் சம் அசார மாம். எங்ஙனம்? கட வியக்தி அநந்த மாம்; அதன் (ஒரு கடத்தின்)நாமமே அதன் கிரகண தியாகாதி (கொளல் விடல்) வியவகா ரத்தின்கண் நிரூபக மாம்; நாம நிரூபண மின்றிக் கட ரூப வியக்தி யின்கண் எவ் வியவகாரமும் சித்தியாமையின். அல்லது, எங்ஙனம் மிருத்திகை தனது காரியங்களின்கண் அநுகத மாம், அது (காரியம்) நாசமாயினும் சேஷமா யிருக்கின்றதோ, அங்ஙனமே பிரத்தியேகக் கட படாதி நாமமும் அநந்தக் கட படாதி வியக்தியின்கண் அநுகத மாம். வியக்திகள் பரஸ்பரம் வியபிசாரி யாம்; அவற்றின் நாமம் அவ்வியபி சாரி யாம்; வியக்திகள் நாசமாயினும் சேஷமாயிருக்கின்றன; அதனுல் நாமமே சாபேக்ஷ சத்தாம்; ரூபம் மித்தை யாம். எங்ஙனம் ரூபாத் மக (தன் தன்)வியக்திகளின்கண் நாம அநுகதம் காண்பிக்கப்பட்டதோ, அங்ஙனமே ஆகாசாதி சர்வ நாமங்களினிடத்தும் ஓர் ஓங்காரமே அநு கதமும் நாமம் பரஸ்பர வியபிசாரியு மாம்; எதனு லெனின், சர்வ நாமங்களும் ஓங்காரத்தின் காரியமாதலின். "இந்த ஓங்காரம் யாது அஃது இச் சர்வ வாக்காம்'' என்பதாதி சுருதியால். இந்தப் பிரகாரம்

எங்ஙனம் ஓங்காரம் காரணத்தன்மையால் சர்வ ஜகத்தின்கண்ணும் அநுகதமாமோ, அங்ஙனமே பரப்பிரஹ்மமும் சர்வப் பிரபஞ்சத்தின்கண்ணும் அநுகதமும், அதிஷ்டாநத் தன்மையால் சர்வ சுருதியின்கண்ணும் பிரசித்தமுமாம். அதனால், உபாசனையின் பொருட்டே ஓங்காரத்திற்குக் குணவிர்த்தியாற் பிரஹ்மரூபத் தன்மை யென்று கூறப்பட்டது; வாஸ்தவமாக அன்று. (அநுகதம் - சம்பந்தம்.)

அல்லது பரப் பிரஹ்மம் வாச்சியமும், ஓங்காரம் வாசக பதமுமாம். ஈண்டு வாச்சிய வாசகத்தின் அபேதம் உபாசனையின் பொருட்டு அங்கீகாரத்தினால் ஓங்காரத்திற்குப் பிரஹ்மரூபத்தன்மை கூறப்பட்டது.

அல்லது, பிரஹ்மத்திற்குச் சர்வாதிஷ்டாநத் தன்மையால், ஓங்காரத்திற்கும் அதன்கண் அத்தியஸ்தத் தன்மையால் பாதசமாநாதிகரணத்தினால் பிரஹ்ம ரூபத்தன்மை கூறப்பட்டது; அத்தியஸ்தத்திற்கு அதிஷ்டாநத்தினின்றும் அதிர்க்த மின்மையின்.

அல்லது, எங்ஙனம் அவிகிர்த சுத்த ஒரே சேதநத்திற்கு மாயா சம்பந்தத்தினால் நான்கு பாகங்கள் உண்டாகின்றன? மாயையை உபாதியாகவுடைய சைதந்யம் ஈசுவரனாகின்றது. எதனை அந்தர்யாமி யென்று கூறுகின்றனர், மாயா காரிய சமஷ்டி சூக்ஷ்ம சரீர உபாதியை யுடைய சைதந்யம் இரண்யகர்ப்ப னாகின்றது, எதனை அந்தர் விர்த்தி யென்கின்றனர்? அதன் காரிய ஸ்தூல சமஷ்டி உபாதியை யுடைய சைதந்யம் வைஶ்வானர னாகின்றது. எதனைப் பகிர் திருஷ்டி என்கின்றனர்? சர்வாநுகத சர்வ சாக்ஷி ஸ்வப்ரகாச சைதந்யம் சுத்தப் பிரஹ்மமாமோ, அங்ஙனமே, அகார உகார மகார அமாத்ரா பேதத்தினால் ஓங்காரமும் நான்கு பாகமாம். சமஷ்டி ஸ்தூல சரீர விசிஷ்ட சைதந்யமும், வியஷ்டி ஸ்தூலசரீர விசிஷ்ட சைதந்யமும் அகாரத்தின் வாச்சியமாம். எதனை வைஶ்வானர னென்றும், விஶ்வ னென்றுங் கூறுகின்றனர்? சமஷ்டி சூக்ஷ்ம சரீர விசிஷ்ட சைதந்யமும், வியஷ்டி சூக்ஷ்ம சரீர விசிஷ்ட சைதந்யமும் உகாரத்தின் வாச்சியமாம். எதனை இரண்யகர்ப்ப னென்றும், தைசச னென்றும் கூறுகின்றனர்? சர்வ காரண ரூப மாயா விசிஷ்ட சைதந்யமும், அவ்வவஸ்தா ரூப அவித்யா விசிஷ்ட சைதந்யமும் மகாரத்தின் வாச்சியமாம். எதனை ஈஶ்வர னென்றும்



பிராக்ஞ னென்றுங் கூறுகின்றனர்? இந்த ஓங்காரத்தின் மூன்று பாகங்களின்கண் அநுகத சத்தியாதி சொரூப மூன்று வர்ண ரூப முப் பாகத்தின் அதிஷ்டாநம் யாது, அது அமாத்ரா பாக மெனப்படும்; அதற்கு அகாராதி மாத்திரை யின்மையின். இவ் விவக்ஷையி (தாத்பர்யத்தி)ன்கண்ணும் இரண்டற்கும் சமாந தர்மத்தினால் உபாசனையின் பொருட்டு ஓங்காரத்திற்குப் பிரஹ்மரூபத் தன்மை கூறப்பட்டது. (அதிர்க்தம்—வேறு)

இங்ஙனம் ஓங்கார ரூபப் பிரஹ்மத்தைத் தியாநிக்கும் ஆத்மா யாதோ அதற்குப் பிரஹ்மத்தோடு அபிந்நத்தன்மையின் பொருட்டு நான்கு பாதம் கூறப்பட்டிருக்கின்றன:—

(1) அவித்யா உபாதி விசிஷ்ட பிராக்ஞ சைதந்யம் பிரதம பாகமாம். எதனைப் பிரக்ஞாந கநம் என்கின்றனர்?

(2) அவித்யா காரிய அந்தக்கரண உபாதி விசிஷ்ட தைஜஸ சைதந்யம் இரண்டாவது பாகமாம். எவனை அந்தர்ப் பிரக்ஞ னென்கின்றனர்?

(3) அதன் காரிய ஸ்தூல சரீர உபாதி விசிஷ்ட விஶ்வ சைதந்யம் மூன்ருவது அம்சமாம். எதனைப் பகிர்ப்பிரக்ஞன் என்கின்றனர்?

(4) இச் சர்வத்தின்கண்ணும் அநுகத ஸாக்ஷி ஸ்வப்ரகாச சைதந்யம் நான்காவது பாகமாம். எதனைத் துரீய மென்கின்றனர்?

இந்தச் சாக்ஷி சைதந்யமும், பிரஹ்ம சைதந்யமும் உபாதியாற் பேதமு மாம்; அங்ஙன மாயினும், வாஸ்தவமாக அத்தியந்த ஐக்கியமாம். இந்தப் பிரகாரம் ஆத்மாவினோடு அபிந்நப் பிரஹ்ம ரூப ஓங்காரம் நான யிருக்கின்றேன் என்னும் இவ்விதத் தியாநம் யாது, அது நிர்க்குண அஹங்க்ரஹத் தியாநமாம். இங்ஙனம் ஓங்காரத்தின் உபாஸனை ஸங்க்ஷேபமாகக் காண்பிக்கப்பட்டது.

எவ்வுத்தம அதிகாரி அத்தியந்தம் விரக்தனாய் இவ்வுத்தம உபாஸனையைச் சுரோத்திரியப் பிரஹ்ம நிஷ்ட குரு முகத்தாற் கேட்டு, சிரத்தை அதியத்நங்களால் முற்புகன்ற ஓங்கார ஸ்வரூபப் பரப்ரஹ்மம் நான் என நிரந்தரஞ் செய்கின்றான், அப்(அவ் வுத்தம)புருஷன்

சித்த ஏகாக்ரத் தன்மை வாயிலாய்ச் சஞ்சலரூப அந்தக்கரண மலத்தை நிவாரணஞ் செய்து, தத்த்வமஸி வாக்கிய வாயிலாய்ப் பிரஹ்ம ஞாநத்தை யடைந்து ஈண்டே முக்தி யடைகின்றான். பிரதிபந்தகமாய் அல்லது சிந்தநத்தின் அபூர்ணமாய்ப் பிரஹ்ம லோகப் பிராப்தியின் அநந்தரம் காரியப் பிரஹ்மத்தின் (பிரஹ்மாவின்) மோக்ஷ காலத்தில் கிரம முக்தியை யடைகின்றான். "தத்வமஸி" என்னும் மகா வாக்கிய விசாரமும் குரு உபதேசமு மின்றியே பூர்வ ஸம்ஸ்காரத்தின் பலத்தால் ஓங்காரத்தின் வாச்சியார்த்த காரிய காரணரூப சமஷ்டி, வியஷ்டி, உபாதி விசிஷ்ட சைதந்யம் யாது அதன் மத்தியில் காரியத்தைக் காரணத்தினிடமாக லயஞ் செய்து ஓங்காரத்தின் இலக்ஷிய ஏக அத்விதீய சைதந்யம் யாது, அதனைத் தனது ஸ்வரூபமாக அறிந்து, சுத்த முத்தி அவஸ்தையை அடைகின்றான். இது தியாநரூப உபாஸனை எனப்படும்.

"ஹே பகவந்! தேவதா! நீயே நான். நானே நீ", "அந்ய விசாரத்தின்கண் அசமர்த்த எவ்வதிகாரி இவ்விதப் பிரஹ்மத்தை அறியாதிருக்கின்றான் அவன், அந்ய குருவினிடத்தினின்றும் பிரஹ்மத்தைச் சிரவணித்து நிரந்தரம் பிரஹ்மாத்மாவை அபேதத் தியாநம் செய்கின்றான். அவனும், ஸதா ஶ்ரவண வசத்தனாய் மிருத்யுவைக் கடக்கின்றான்" என் பனவாதி அபேத உபாஸனையைப் போதிக்கும் சுருதி ஸ்மிருதிப் பிரமாண மிருத்தலின்.

### 1. சாதந பக்தி.

ஈண்டு ஸாதந பக்தியே, சுருதி ஸ்மிருதி புராணாதிகளின்கண் ஹரிநாம ஶ்ரவணம், கீர்த்தநம், ஸ்மரணம், வந்தநம், அர்ச்சநாதி பேதத்தால் ஒன்பது பிரகாரமான பக்தியும் கலியின்கண் பிரதாநத் தன்மையால் கூறப்பட்டிருக்கின்றன. எதன் ஒவ்வொரு பிரகாரமும் தம்ப மின்றிச் சிரத்தை ஸகிதமாய்ப் பல இச்சை யின்றி நன்கு அநுஷ்டிக்கப்பட்டு ஈஶ்வரப் பிரஸாதம், ஞாநப் பிராப்திகளின் வாயிலாய் மோக்ஷ பலத்தைக் கொடுப்பதாகின்றது? அது அதன் சமஸ்த (எல்லா) அங்க அநுஷ்டாநம் மோக்ஷ பலத்தைக் கொடுப்பதன்கண் செய்ய வேண்டியது என்ன? கூற வேண்டியது என்னே? எதனால், பரீக்ஷித்து, சுகர், ப்ரஹ்லாதர், அநு



மான், அர்ஜுநன், பிருது, இலக்ஷ்மி, பலிச் சக்கரவர்த்தி, அக்ரூரர் முதலிய இவ் வுத்தம அதிகாரிகள் முற் புகன்ற ஒவ்வொரு அங்கத்தையும் சிரத்தையுடன் நிரந்தரம் திடமாய் அநுஷ்டித்து மோக்ஷ பதத்தை யடைந்தனர். இது சாஸ்திரப் பிரசித்தமாம். இப்பொழுது அவற்றின் இலக்ஷணத்தைக் கூறுவாம்:—

(1) சாஸ்திரார்த்தத்தை யறிந்த குருவின் முகத்தாலும், சத்துக்களின் ஸமாகமத்தாலும், பரமேஶ்வரனது ஸகுண நிர்க்குண ஸ்வரூபத்தையும், அவனது பக்தவத்ஸலத் தன்மையையும், பக்தவஶ்யாதி அநந்த கல்யாண குணங்களையும், ஆதர ப்ரீதியோடு எப் புருஷன் மீண்டு மீண்டும் ஶ்ரவணஞ் செய்தும் தத்பரனு மாகின்றான் அது சிரவண பக்தியாம்.

(2) குரு முகத்தால் சிரவணஞ் செய்யப்பட்ட பரமேஶ்வரன், அவனது குணங்கள், அவனது நாமங்கட்கு ரோமாஞ்சம், கண்ணீர் விழுதலோடுகூட அநுவாதம் யாது அது கீர்த்தந பக்தியாம்.

(3) பகவத் தத்துவத்தின் நிரந்தர யத்தநத்தோடு * அநுசந்தாநம் யாது, அது ஸ்மரண பக்தியாம்.

(4) தாச பாவ பக்தி இருவகைத்தாம்:—

(i) நான் பகவானால் நியமிக்கப்படுபவனும், அவன் நியாமகனுமாவன். பகவான் அந்தர்யாமியாகலின், எனது லௌகிக, வைதிகக் கர்மம் பகவத் பிரசாதத்தின்பொருட்டே யாம்; தன் பொருட்டன்றாம். எங்ஙனம் லோகத்தின்கண் தாசனது கர்மம் ஸ்வாமியின் பொருட்டாம், தனதுபொருட் டன்றாம், அங்ஙனமேயாம். எனது ஸ்திரீ, புத்ராதி, ஸர்வ ஸ்வத்துவமும் பகவானதே யாம். அவரே அவற்றின் பாலகராம்; எனக்கு அவற்றின் பாலநாதிகளின் சிந்தை செய்ய வேண்டிய தின்றாம்.

எங்ஙனம், விற்ற, அல்லது, தாநஞ் செய்த தனது வஸ்துவிற்கு அந்நியனுக்கே போஷிப்பதன்கண் சிந்தை யுண்டாகின்றது; விற்பவனுக்கும் தத்தஞ் செய்பவனுக்கு மன்றாம் என்பதாதி புத்தியால் பகவானது ஸேவை யாதோ, அது பிரதம தாஸ பாவமாம்.

---

* அநுசந்தாநம் - சிந்தனை, (ததாகார விருத்திப் பிரவாகம்.)

(ii) இந்த லோகத்தின்கண் எனது யோக க்ஷேமத்தைக் கொடுப்பவர் நாராயணர் ஒருவரே; அவருக்கே ஜநகத் தன்மையும் பாலகத் தன்மையும் இருத்தலானும், லௌகிக, பிதிர் புத்ராதிகளின் ஸ்வார்த்த ஸம்பந்தி யாகலானும், எனது சர்வ பாப நிவிருத்தியும், ஸம்ஸார பந்த நிவிருத்தியும் செய்வதன்கண் அவனே ஸமர்த்தனும்; ஸர்வ சக்திமானு யிருத்தலின் என்பதாதி புத்தியால் நித்தியாதி கருமத்தின்கண்ணும் ஆக்ரகத்தை விடுதல் வாயிலாய்ப் பகவான் ஒருவனிடத்தே ஶரணத் தன்மை யாது, அது இரண்டாவது தாச பாவமாம்.

(5) இத் திரிலோகத்தின்கண்ணும் எனது ஜீவநத்தின் சக காரி மித்திரன் நாராயணன் ஒருவனே; அவனுக்கு ஸதா கூடச் சஞ்சரிக்கும் தன்மை யிருத்தலானும், லௌகிக, சககாரி ஸம்பந்திகள் தேஹ உபகாரியும் வியபிசாரியுமா யிருத்தலானும், விஷ்ணுவே தனது மூர்த்தியால், அல்லது ஆசாரிய மூர்த்தியால், தனது பக்தனைக் குறித்து இஷ்ட வஸ்துவையும் ஞாநத்தினையும் கொடுப்பவனு யிருத்தலின் என்பதாதி திட விஶ்வாஸ புத்தியால் பகவானது சேவநம் யாது, அது ஸகா பாவ பக்தியாம்.

(6) இந்த லோகத்தின்கண் எனது பூஜைக்கு யோக்கியன் ஸ்வதந்த்ர ஒரு விஷ்ணு நாராயணனே யாம். ஸர்வ பலத்தையும் கொடுப்பவனு யிருத்தலின், அந்நிய இந்திர சந்திராதி ஸர்வ தேவதையும் அவனிடத்து அடங்கி யிருத்தலானும், மிகுந்த பூசையைச் செய்யினும் அவர்கட்கு அநித்திய பலத்தைக் கொடுக்குந் தன்மை யிருத்தலானும் என்னும் இவை முதலிய புத்தியால் ஶ்ரௌத, ஸ்மார்த்த யஜ்ஞாதிகளால், அல்லது சக்தி யநுஸாரம் பத்ர, புஷ்ப, தூப, தீப சாமக்கிரியைகளால் பிரீதிபூர்வகம் பகவானது பூஜநம் யாது அது அர்ச்சநாதி பக்தியாம்.

(7) பகவானது சரணாரவிந்தத்தின் தியாநாதிகளே ஸகாம, நிஷ்காம பக்தர்கட்குப் போக மோக்ஷத்தைக் கொடுக்கின்றன. இங்ஙனம் எதனுல் சுருதி ஸ்மிருதியாதியின்கண் கூறப்பட்டிருக்கின்றது, ஆசையற்ற ஞாநிகளாலும் ஸதா ஸேவிக்கத் தக்கவனும், அதனுல் நானும் அவனது சரண கமலத்தை நினைக்கின்றேன் என்னும் இது



முதலிய புத்தியால் பகவானது சரணாரவிந்தத்தினது ஆதரத்தோடு கூடிய ஸேவநம் யாது, அது பாத ஸேவந பத்தியாம்.

(8) எதனுல், ஸ்திரீ புத்ராதியையும் ராஜ லக்ஷ்மியாதி ரூப ஸர்வ ஸம்பத்தியையும் எல்லோருக்கும் பகவான் கொடுக்கின்றான்? பகவானது இச்சையால் ரக்ஷிக்கப்படுகின்றான்; பகவானது உபேக்ஷையால் நஷ்டமாகின்றான்; ஸர்வத்தையும் ஸமர்ப்பிப்பவர்கட்குப் பகவான் தானுகவே கொடுக்கின்றான் (அவ னதீநமாகவே உண்டாகின்றன). எங்ஙனம் பலிச் சக்ரவர்த்தி முதலியவர்களுக்கு இவ்வாதமும் சுருதி, ஸ்மிருதியின்கண் கேட்கப்படுகின்றதோ, அதனுல் நானும் பகவானுற் கொடுக்கப்பட்ட ஸர்வ வஸ்துக்களையும் அவனிடத்தின்கண்ணே சரீரத்தோடு கூட ஸமர்ப்பணம் செய்கின்றேன் என்னு மிது முதலிய புத்தியால் ஸர்வ ஸமர்ப்பண பூர்வகம் பகவானது சேவநம் யாது, அது நிவேதந பக்தியாம்.

(9) எதனுல் ஸ்ரீவிஷ்ணு மகா மாயா ரூப இலக்ஷ்மி பதியும், சத்திய சங்கல்பாதி தர்ம விசிஷ்ட பூர்ண காம ஆத்மாராமனும் ஆப்த காமனுமாம்? நம்மால் கொடுக்கப்பட்ட எவ்வபீஷ்ட வஸ்துவிற்கும் அபேக்ஷத் தன்மை யின்று, அதனுல் நானும் அவனுக்குக் கேவலம் நமஸ்காரமே செய்கின்றேன் என்னும் இவை முதலிய புத்தியால் சரீரம், வாக்கு, புத்தியாதிகளால் பிரீதியாகப் பகவானுக்குத் தண்டம் போன்று சாஷ்டாங்கம் செய்தலும் நாநாவித ஸ்தோத்திரத்தைப் படித்தலும் யாது, அது வந்தந பக்தியாம்.

முற்புகன்ற நாம கீர்த்தநாதி ரூப நவ வித பக்தியைப் போதிக்கும் சுருதியாதிகளைப் பாடமாக எழுதுவாம்:—த்வாபரத்தின் அந்தத்தில் நாரதர் "ஹே பகவன்! பிருதிவியின்கண் சுற்றிக்கொண்டிருக்கும் யான் எங்ஙனம் கலியைக்கடப்பேன்?" என்று பிரஹ்மாவை வினவினர். பிரஹ்மா கூறுகின்றார்:—"பகவான் விஷ்ணுவாய நாராயணனது நாமத்தைக் கூறுவதால் நீ கடப்பாய்" என்பதாதி சுருதி, "ஹரியினது நாமமே, நாமமே, நாமமே எனது ஜீவநமாம். கலியின்கண் வேறு கதி இன்று, இன்று, இன்று" என்பதாதி ஸ்மிருதி, "ஸத்திய யுகத்தின்கண் விஷ்ணுவைத் தியாநிக்கும் எப் புருஷன் திரேதா யுகத்தில் யஜ்ஞங்களால் விஷ்ணுவைப் பூஜிக்கும் புருஷன் துவாபர யுகத்தின்கண் பரிச்சர்யத்தால் அவனுக்கு எப் பலம் உண்டாகின்றதோ, அப்

பலம் கலியின்கண் ஹரியின் கீர்த்தநத்தானே உண்டாகின்றது". விஷ்ணுவின் ஸ்ரவணம், கீர்த்தநம், ஸ்மரணம், பாத ஸேவநம், அர்ச்சநம், வந்தநம், தாஸபாவம், ஸகாபாவம், ஆத்ம ஸமர்ப்பணம் என்னும் ஒன்பது லக்ஷணத்தை யுடைய பக்தி புருஷரால் விஷ்ணு பகவானிடத்தில் ஸாக்ஷாத் அர்ப்பணஞ் செய்து எப்பொழுது செய்யப்படுகின்றது அப்பொழுது அவன் உத்தம அதீத னென அங்கீகரிக்கப் படுகின்றான்" (என்பன வாதியானும் உணர்க.)

2. பல பக்தி.

இப்பொழுது பல பக்தியைக் கூறுவாம்:—பகவானது முகாரவிந்த ரசத்தைச் சேவிப்பவனும், சரணாரவிந்த ரஜத்தை (தூளியை) யடைந்தவனும் உள்ள மகா பாக்கிய நிஷ்காம எவ் வைஷ்ணவன், ஸர்வ ஸௌந்தர்ய ஸார சுத்த சத்வமய பகவத் மூர்த்தியின் ரஸாயநத்தைப் பாநஞ் செய்து திருப்தனா யிருக்கின்றான், அவனது தரிசந, ஸம்பாஷண, கிருபாகடாக்ஷ, கதிவிலாஸாதிகளால் கிரஹிக்கப்பட்ட சித்தமாம், அவனுக்குத் தன்னுடைய ரூப பரமேஸ்வரனிடத்து வியபிசார மின்றி அஹேதுகமான நிரதிசயப் பிரீதி யாது உண்டாகின்றதோ அது ஸகுண பலரூப உபாஸனையாம்.

எதனைப் பிரேமா பக்தி யென்றும் பரா பக்தி யென்றும் கூறுகின்றனர்? எதன்கண் கோபஸ்திரீ (இடைச்சி), அக்ரூரர், உத்தவாதிகள் அதிகிருதராவர்? எதனால் அவர்கள் தரிசநாநந்த பஜநாநந்தங்களைப் பிரஹ்மாநந்தத்தினின்றும் அதிகமாக அங்கீகரிக்கின்றனர்? பகவத் பிரேம ப்ரவாகத்தின்கண் மூழ்கின சித்த முடையவர்களாய்ப் பரமேஷ்டியாதி பதத்தையும் துச்சமாக அறிகின்றனர். ஆண்டு ஸ்மிருதி:—" பகவானது பாத ரஜத்தில் பிரபந்த ரசிக எப்புருஷன் அவன் ஸ்வர்க்க பதம் ஸார்வபௌம பதம், பரமேஷ்டி பதம், ரஸாதலத்தின் அதிபதித் தன்மை, யோக சித்திகள் மீண்டும் ஜநியாமை ரூப மோக்ஷத்தையும் ஒருகாலத்தும் இச்சிப்ப தின்று." "ஹே ஈஸ்வர! ஒரு உனது பக்தன் மோக்ஷத்தையும் இச்சிப்ப தில்லை; மாறாய் உனது சரணமாகிய ஸரஸினின்றும் உண்டான தாமரைப் புஷ்பத்தினது ஹம்ஸமாய ஹரிதாசர்களினது ஸங்கத்தால் கிருகத்தைவிட்டு விடுகின்றான்" எவன் மகா பாக்கிய நிஷ்காம ஆத்ம ராம வித்வானாய பரமஹம்ஸன்,



எவன் சத் சித் ஆநந்த பூரணாநந்தப் பரப்ரஹ்மத்தைப் பிரத்யகாத்மா ஸாக்ஷி ஸ்வப்ரகாசத்தின் ஸ்வரூபமாக அறிந்து தனது ஸ்வரூபப் பிரஹ்மத்தின்கண் நிருபாதிக நிரந்தர வியபிசார மின்றிய பிரேமை செய்கின்றான் அது நிர்க் குண பல ரூப உபாஸனையாம்.

எதன்கண் ஸநகாதி, நாரத, வசிஷ்ட, வ்யாஸ, வால்மீகாதிகள் அதிகிருதராவர், எதனால் ஆத்ம ரூபப் பிரஹ்மத்தின்கண் பிரீதி யாது அது ஸ்வாபாவிகமும், ஆத்ம பிந்ந ஸ்திரீ புத்ர தநாதி வஸ்துவின் கண் அவிவேக காலத்தில் இருக்கும் பிரீதி யாது, அஃது ஆத்மாவை உபாதியாக உடையதுமாம். எங்ஙனம் ஸர்வ ஜீவர்கட்கும் ஆத்மா பிரியமாம், அங்ஙனமே அந்நியவற்றின்கண் பிரிய மின்றாம். எதனால் விஷ்ணு, பிரஹ்மாதி தேவர்களிடத்தும் குரு சிஸ்ருஷா முதலிய வற்றின்கண்ணும் எப் பிரீதி யுண்டாகின்றதோ அதுவும் பிரயோசந அநுசாரமே யாம். அதன்கண்ணும் ஆத்மாவே உபாதியாம்." அரே மைத்ரேயி! ஸர்வ காமத்தின்பொருட்டு ஸர்வமும் பிரியமானவை யன்று. ஆத்மாவினது காமத்தின் பொருட்டு ஸர்வமும் பிரிய மாகின்றன" என்னும் சுருதியானும், "அப் பரமஹம்ஸ புருஷன் ஸ்வாபாவிக அதன் சம்பந்த சித்தமும் அதன் சம்பந்தப் பிராணனுமாம்; நித்தியம் அதனைக் கூறுவதும், போதிப்பவனு மாவன். பிரஹ்மாநந்தத்தின் கண்ணே ஸந்துஷ்டனாவன். எவனுக்கு ஸர்வ தேவரும் முமுக்ஷுவும் வித்வான் பிரஹ்மவாதியும் நமஸ்கரிக்கின்றனர்" என்னும் சுருதியானும் (உணர்க).

ஸர்வஞ்ஞ பாஷ்யகாரரானும் இதனது வியாக்யாநம் இங்ஙனம் செய்யப்பட்டிருக்கின்றது:—

"முக்த புருஷனும் விக்கிரஹஞ் செய்து லீலையால் அதனைப் பஜனை செய்கின்றான்", "அநந்த ஜந்மத்தின் அந்தத்தில் ஞானவானாய் என்னை அடைகின்றான். ஈண்டு ஸர்வமும் வாசுதேவனாம். இங்ஙனம் என்னை எவன் பஜிக்கின்றான், ஹே அர்ஜுந! அம் மஹாத்மா துர்லபமாம்", "எவன் என்னிடத்துச் சித்தமுடைய புருஷனும், என்னிடத்துள்ள பிராணனுமாவன், பரஸ்பரம் என்னையே போதித்தும் என்னையே உரைக்கின்றான், அவன் என்னிடத்தின்கண்ணே சந்துஷ்டனும்; என்னிடத்தின்கண்ணே ரமிக்கின்றான்", "ஸகல ஆசைகளு மற்ற புருஷர்களால் பகவத் குண அநுவாதம் கீர்த்தநம் பண்ணப்படு

கின்றது. அவனிடத்தினின்றும் பசுவைக் கொல்பவ னன்றி எவன் வைராக்யத்தை அடைவான்.'' "ஆத்ம ராம கிரந்தி யற்ற முநியும் ‡ உருக்கிரமத்தின்கண் ஹேது வின்றிய பக்தியைச் செய்கின் றான். இங்ஙனம் ரஸாலயம் ஹரியாம்.'' என்பன வாதிப் பிரமா ணங்களால். அதனால் இச்சர்வ உபாஸனைகளின் பேதத்தை ஜிஞ் ஞாஸு விசாரஞ் செய்து தனது அதிகாரத்தின் அநுஸாரம் குரு முகத் தாற்கேட்டுச் சித்தத்திற்குச் சூக்ஷும வஸ்துவைக் கிரஹிக்கும் யோக் கியத் தன்மையை ஸம்பாதித்தற்பொருட்டு உபாஸனைகளைப் பெரும் பிரயத்நத்தால் அவஸ்யம் செய்க. ‡ (உருக்கிரமம்-மூர்த்தி. வரிசை)

இவ்வுபாஸநாப் பிரகரணத்தின்கண் நிர்க்குண ஸகுணத்தின் பேதம் கூறப்பட்டது. அங்ஙனமாயினும், விசாரஞ் செய்து பார்க்கிலோ இரண்டற்கும் அத்தியந்த பேத மின்றாம்; உபாதியாற் செய்யப்பட்ட நாம மாத்திரமே பேதமாம்; வஸ்துவின் பேதம் இன் றாம். எதனால் ஓர் அத்துவிதீய அகண்ட சைதந்யமே அநிர்வச நீய அவித்தையின் ஸம்பந்தத்தால் ஸகுண அவஸ்தையை யடை கின்றது; அவ் வவஸ்தையின்கண்ணும் தனது அவிகிருத சைதந்ய ஸ்வரூபத்தைத் தியாகஞ் செய்வ தின்று. எதனா லெனின், அத்தி யஸ்த உபாதிகட்கு அதிஷ்டாநத்தின் தூஷணத் தன்மை இன்மை யின் (என்க). எதனால் பாஷ்யகாரராலும் "எவ்விடத்து அவித்தை யினாற் செய்யப்பட்ட நாம ரூபாதி விசேஷத்தின் பிரதிஷேதத்தால், அஸ்தூலாதி சப்தங்களினால், பிரஹ்மம் உபதேசிக்கப்படுகின்றது, அது நிர்க்குணப் பரப்பிரஹ்மமாம். அதுவே பரப் பிரஹ்மமாம். யாண்டு உபாஸனையின் பொருட்டு விசேஷண, விசிஷ்ட, நாம ரூபாதி, 'மநோ மய பிராண சரீரபாரூபமாம்' என்பதாதி சப்தங்களால் உபதேசிக்கப் படுகின்றது. அது ஸகுண அபரப் பிரஹ்மமாம்.'' என்று கூறப்பட் டிருக்கின்றது. அதனால் வாஸ்தவமாக இரண்டற்கும் பேத மின்றாம்; சேதநம் ஏக ஸ்வரூபமாகலின். ஸகுண வாதியும் ஸகுணப் பிரஹ்மத் திற்கே சத் சித் சுக ஸ்வரூபம் அங்கீகரித்து நிர்க்குண ஸ்வரூபம் கூறு கின்றனர். அதனின்றும் பிந்ந மன்றாம்; எதனாலெனின், அதனைக்கூறுவ தற்குப் பாகவதாதி அநந்த சாஸ்வத (பழைய) சாஸ்திரங்களின்கண் பிர சித்தமாயிருத்தலின். நிர்க்குண வாதியும் அவிகிருத சச்சிதாநந்த அத் விதீயப் பிரஹ்மத்திற்கே அவித்யா வசத்தால் ஸகுண அவஸ்தையின் பிராப்தி அங்கீகரிக்கின்றனன். அதனின்றும் அத்தியந்தம் பிந்நம் அங்கீ



கரிப்ப தின்றாம். அதனால், நிர்க்குண வாதி ஸ்ரீமத்சங்கரமதத்தின் அநு ஸாரிகளால் யாண்டு யாண்டு தமது கிரந்தத்தின்கண் ஸகுணப் பிரஹ் மத்தின் எக் கண்டநம் எழுதப்பட்டிருக்கின்றதோ, ஸகுண வாதி ஸ்ரீமத் ராமாநுஜ மதத்தின் அநுஸாரிகளால் யாண்டு யாண்டுத் தம் கிரந்தத்தின்கண் நிர்க்குணப் பிரஹ்மத்தின் நிராகரணம் செய்யப்பட் டிருக்கின்றதோ அஃது அவ்விருவர்களினது பிரௌட வாத ஸாஹஸ (அவிசார) மாத்திரமாம். விசாரஞ் செய்யினோ, உண்மையாக ஸகுண நிர்க்குணப் பிரஹ்மத்திற்குக் கிஞ்சித்தும் பேத மின்றாம்; அகண்ட அத்வய சச்சிதாநந்த ஒரு சேதநமே நிர்க்குண சகுண ரூபத்தால் விளங்குதலின். "ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம்.'' "ஒரே தேவன் ஸர்வ பூதங்களிலும் கூடமா யிருக்கின்றான்'' என்பன வாதிப் பிர மாணங்களினால் (என்க).

## 1 - 24 - ஜாதி.

இரு வித ஜாதியைக் கூறுவாம்:—

தான் ஒன்றாயும், அநேக வியக்தியின்கண் சமவாய அல்லது தாதாத்மிய சம்பந்தத்தினால் அநுகதமாயு மிருப்பது யாது அது ஜாதி எனப்படும். அது மீண்டும் பர அபர பேதத்தினா லிரண்டு வகைத் தாம்:—

பரஜாதி சாமாநிய ரூபமாம்; அபர ஜாதி திரவியத்வாதி ரூபமாம். அநேகவற்றில் வியாபித் திருப்பது சாமாநியமாம்; சிலவற்றில் வியா பித் திருப்பது இரண்டாவதாம்.

### (1) பர ஜாதி.

(1) சாமாநியம் சத்தா ஜாதி யெனப்படும். அது நையாயிக ரீதி யால் யாண்டும் "இருக்கின்றது'' என்னும் வியவகாரத்திற்கு ஹேது வாம். வேதாந்த ரீதியானோ, சர்வத்தின்கண் அநுஸ்யூத சத்தா ரூபப் பிரஹ்மமே "இருக்கின்றது'' என்னும் அநுகத வியவகார ஏது வாம். அவ் விரண்டு வித ஜாதியும் ஜட அசுவதந்திரமும், வியக்தியின் ஆசிரிதமும், சமவாய சம்பந்தத்தினால் தனது அநுயோகியின்கண் சமவேதமுமாம். அதனால் வியக்தியின் அதீநமாகவே அதன் பாந

முண்டாகின்றது; சுவதந்தரமாக வன்றும். அதன் பானமும், யோக்ய
வியக்தியின்கண் பிரத்தியக்ஷமாகவும், அயோக்ய வியக்தியின்கண்
பரோக்ஷமாகவு முண்டாகின்றது. ஜாதிக்கு வியக்தி ரூப அநுயோகி
யுடன் சமவாய சம்பந்தம் யாது அது ஜாதியால் சமாநாதிகரணமாம்.
(ஜாதியின் ஆசிரயம் வியக்தி, அதன் ஆசிரய முடையதாம்). அங்ஙன
மாயினும், வியக்தி எங்ஙனம் அநுயோகித்தன்மைச் சம்பந்தத்தினல்
அச்சம்பந்தத்தின் நிரூபகமோ, அங்ஙனமே ஜாதியும் பிரதியோகித்
தன்மைச் சம்பந்தத்தினல் அச்சம்பந்தத்தின் நிரூபகமாம்; சம்பந்தம்
உபய நிரூப்ய (ஜாதி வியக்தி என்னு மிரண்டாலும் நிரூபணஞ் செய்
தற்கு) யோக்யமாகலின்.

### (2) அபர ஜாதி.

(2) திரவியத்வ ரூப அபர ஜாதியும், வியாப்ய வியாபக பேதத்
தின லிரண்டு வகைத்தாம்:—

பிருதிவித்வ ஜாதி வியாப்யமாம்; திரவியத்வ ஜாதி வியாபகமாம்.
ஏதனல், பிருதிவித்வ ஜாதி பிருதிவி மாத்திரத் திருப்பதாம், ஜலாதி
களின்கண் ணிருப்ப தன்றும் அதனல் வியாப்ய மெனப்படுகின்றது.
திரவியத்வ ஜாதியோ பிருதிவி ஜலாதி ரூப நவ திரவியத்தின்
கண்ணு மிருப்பதாம். அதனல் விபாபக மெனப்படுகின்றது. அங்
ஙனமே, கடத்வ ஜாதி வியாப்யமாம்; பிருதிவித்வ ஜாதி வியாபகமாம்.
ஏதனல் கடத்வ ஜாதி கட மடாதி மாத்திரத் திருப்பதாம், பிருதி
வித்வ ரூப படாதியி லிருப்ப தன்றும். பிருதிவித்வம் கட படாதி
சர்வ பிருதிவிரூப வியக்தியின்கண்ணு மிருப்பதால் வியாபகமாம். அங்
ஙனமே,பிராமணத்வாதி ஜாதி வியாப்யமாம்,மநுஷ்யத்வ ஜாதி வியாபக
மாம்; ஏதனலெனின், பிராமணத்வத்திற்குச் சர்வப் பிராமண வியக்தி
யின்கண்ணும் இருத்தலானும், க்ஷத்திரியாதி வியக்தியின்கண் இருப்
பின்மையானும் என்க.மநுஷ்யத்வ ஜாதிக்குச் சதுர்வர்ண,சதுர்ஆஸ்ரம
ரூப சர்வ வியத்தியின்கண்ணும் இருத்தலால் வியாபகத் தன்மையாம்.
தனதாஸ்ரயரூப வியக்திகளின்கண் அநுகதவியவகாரத்தின்கண்ஏதுத்
தன்மை இரண்டற்கும் சமாநமாம். ஏதனல் அநுகத வியவகாரம்
யாது அது அநுகத வியவகார யோக்யப் பிரதீதியின் அதீநமாம்.
அநுகதப் பிரதீதி அநுகத தர்ம அதீநமாம்.(அது)பிரதீதிக்கு ஞேய



வஸ்துவின் அநுசாரியா யிருத்தலானும் அந்தச் சாதிக்குப் பலஞ்செய்
தலானும், சக்ஷுவின் அசந்நிகிருஷ்ட கடபடாதிகட்கும் அலௌகிகப்
பிரத்தியக்ஷ ஞாந ஜாதிக்குப் பிரத்தியாசந்நத்தைக் (வியக்தியின் சமீ
பத் திருத்தலைக்) கொண்டு நையாயிகர்களால் அங்கீகாரஞ் செய்யப்பட்
டிருக்கின்றது. அதனல் எங்ஙனம் "இது கடம்", "இது கடம்" என்
னும் அநுகதப் பிரதீதி வியவகாரங்களினது நிர்வாகத்தன்மை அநு
கத கடத்வ ஜாதிக்காமோ, அங்ஙனமே "இது திரவியம், இது திரவி
யம்" என்னும் அநுகதப் பிரதீதி வியவகாரங்களினது நிர்வாகத்
தன்மை அநுகத திரவ்யத்வ ஜாதிக்கும் சமாநமாம். அங்ஙனமே,
சர்வ குண வியக்தியின்கண் ணுள்ள குணத்துவ ஜாதி வியாபகமாம்.
ஒவ்வொரு ரூப ரசாதிகளின்கண் ணுள்ள ரூபத்வ, ரசத்வாதி ஜாதி
வியாப்யமாம். ஐந்து வித கர்ம வியக்தியின்க ணுள்ள கர்மத்துவ ஜாதி
வியாபகமாம். ஒவ்வொரு கர்ம வியக்தியின்க ணுள்ள * உத்க்ஷேபணத்
வாதி ஜாதி வியாப்யமாம். லோக வேதத்தின்கண் எக் காரிய
காரண, ஜந்ய ஜநக, 'பிதா புத்ர, ஆதார ஆதேய, வியாப்ய வியா
பகத்வாதி அநந்த வியவகார முண்டாகின்றதோ, அவ்வவ் வியவ
காரத்தின்கண் காரியாதியால் நிரூபிக்கப்பட்ட காரணதியின்க
ணுள்ள காரணத்வாதிகளின் நியத ஞாநத்தின்பொருட்டு வியாப்ய
வியாபகமாய இருவித ஜாதிகளின் அவச்சேத ரூபத்தினல்
அபேக்ஷிதத் தன்மையும், நிர்வாகத் தன்மையும் அங்கீகாரஞ் செய்
யப்பட்டிருக்கின்றன. ஜாதிக்குக் காரணத்வாதி தர்ம அதிகரணத்
தின்கண் நியமமாக வர்ணிக்கின் அவச்சேதக பாவமாம்; அவச்சேத
கத்திற்கே பிரதியோகித் தன்மை முதலிய தேசத்தினின்றும் நியூந
அதிக மின்றிய தேசத்தின்க ணிருத்தலின். அதனல், வைதிக வியவ
காரத்தின்கண்ணும் அதற்கு உபயோக மிருத்தலின். அதன் ஞாந
மும் அதிகாரிக்கு அபேக்ஷிதமாம். அதனல், சங்க்ஷேபமாக ஈண்டு
அது கூறப்பட்டது. ( * உத்க்ஷேபணம் - எழும்பல்)

### 1 - 25 - சப்தம்.

சப்தத்தின் இரண்டுவிதச் சங்கதியைக் கூறுவாம்:—பதபதார்த்த
மிரண்டற்கும் வாச்சிய வாசக பாவம், அல்லது ஸ்மார்ய ஸ்மாரக பாவ

ரூப சம்பந்தம் யாது அது சப்த சங்கதியாம். அது மீண்டும் சக்தி லக்ஷணையின் பேதத்தினு லிரண்டு வகைத்தாம்.

## (1) சக்தி.

(1) சப்தத்தின் முக்கிய விருத்தி சக்தி யெனப்படும். அது பத பதார்த்தங்களினது வாச்சிய வாசக பாவ சம்பந்த ரூபமாம். பதத்திற்கு வாசகத்தன்மையாம்; பதார்த்தத்திற்கு வாச்சியத்தன்மையாம். யோக ரூடியின் பேதத்தினுல் அம் முக்கிய விருத்தி மீண்டும் இரண்டு வகைத்தாம்.

### (i) யோகம்.

(i) அவ் விரண்டனுள் அவயவ சக்தி யோகமாம். அது பாசகாதி பதங்கட்காம். எப் பதம் தனது அவயவ சக்தியால் அர்த்தத்தை யறிவிக்கும் அது யோக பதமாம். எங்ஙனம்? பாசக பதத்தில் † பாச் அக் என்னும் இரண்டு அவயவங்களாம். அவற்றுள், பாச் என்னும் அவயவத்திற்குப் பாகக் கிரியை அர்த்தமாம். அக் என்னும் அவயவத்திற்குக் கர்த்தா அர்த்தமாம். அவயவ சக்தியால் பாசக பதத்திற்குப் பாக கர்த்தாவின் அர்த்தம் உண்டாகின்றது. அல்லது, பிரகிருதி பிரத்தியயங்களின் அர்த்தம், இவ்விரண்டன் சம்பந்தத்தினுல், அல்லது ரூடியாதி விருத்தியிற் புகன்ற இரண்டு பதார்த்தங்களின் சம்பந்தத்தினுல் எச் சப்தம் தன தர்த்தத்தைப் போதிக்கும், அப் பதம் அவயவ சக்தி யுடையதாம். எங்ஙனம்? “ஔபகவ” “பங்கஜ” பதங்களின்கண் “ஔபகவ” என்னும் பதம் பிரகிருதி பிரத்தியய அர்த்தங்களின் சம்பந்தத்தைக் கொண்டு உபகுகாவின் புத்ரன் என்னும் அர்த்தத்தினது ஞானத்தைத் தருகின்றது. பங்கஜ பதம், பங்க-ஜ என்னும் இரு பதங்களின் ரூட யோகார்த்தங்களைக் கொண்டு பங்கத்தினின்று முண்டானது என்னும் அர்த்தத்தினது ஞானத்தைத் தருகின்றது.

†(பாச் - அடு - அக் = அடுவோன்)

### (ii) ரூடி.

(ii) சமுதாய சக்தி ரூடியாம். அது கடாதி பதங்கட்காம். எச் சப்தம் பிரகிருதி பிரத்யய அர்த்தத்தின் அநுசந்தாந மின்றிச் சமு



தாய சக்தி மாத்திரத்தினுல் தன தர்த்தத்தை யறிவிக்குமோ அது ரூட பதமாம். எங்ஙனம், கடாதி பதம் கடத்வ விசிஷ்ட கடாதி அர்த்தத்தின் போதகமோ அங்ஙனமேயாம்.

எப் பதம் ஒரு விஷயத்தின் பிரதிபாதநத்தின் பொருட்டு யோக ரூட மென்னும் இரண்டு சக்தியை யுடையதாம், அது யோக ரூட பதமாம். எங்ஙனம்? பங்கஜாதி பதமாம். அஃது அவயவ சக்தியால் பங்கத்தினின்றும் ஜநித்த கமலத்தின் போதகமாம். ரூட சக்தியால் பத்மத்வ ரூபமாக பத்மத்தின் போதகமாம். அதனுல், யோக ரூட மெனப்படுகின்றது.

எப் பதம் இரண்டு விஷயத்தைச் சுவதந்தரமாய்ப் பிரதிபாதநஞ் செய்தற்பொருட்டு இரண்டு சக்தியை யுடையதாம் அது யௌகிக ரூடமாம். எங்ஙனம்? உத்பித்தாதி பதம். அதுவும், அவயவ சக்தியினுல் விருக்ஷம் கொடி முதலியவைகளின் போதகமாம். ரூட சக்தியினுல் உத்பித் என்னும் பெயரையுடைய யஞ்ஞத்திற்கும் போதகமாம். அதனுல் யௌகிக ரூட மெனப்படுகின்றது.

இவ் வுபய சக்தி விசிஷ்ட பதமும் யோக ரூட சக்தியை யுடையதே யாம். யோக ரூடத்தினின்றும் பிந்ந விசிட்ட (பேதத்தோடு கூடிய) மூன்ருவது சக்தியின் அங்கீகார மின்மையின். விலம்ப (தாமத)த்தால் தனதர்த்த போதகம் யோக பதமாம்; சீக்கிரம் தன தர்த்த போதகம் ரூட பதமாம்.

அந்த ரூட பதம் சொரூப - ஜாதி - குணங்களின் பேதத்தால் மூன்று வகைத்தாம்.

டித்த, கபித்தாதி பதங்கள் சொரூப சப்தங்களாம். அவை வஸ்துவின் சம்ஞா வாசகங்களாம்.

கோ ஆதி பதம் ஜாதி சப்தமாம்.

சுக்லாதி பதம் குண சப்தமாம்.

இங்ஙனம் முக்கிய விர்த்தி ரூப சப்தத்தின் சக்தி விர்த்தி யாது கூறப்பட்டது அதனை நையாயிகர்கள் ஈசுவரனது இச்சாரூப சப்த சக்தியா மென்று கூறுகின்றனர்; வையாகரணரும், பாதஞ்சலருமோ

ரூப சம்பந்தம் யாது அது சப்த சங்கதியாம். அது மீண்டும் சக்தி லக்ஷணையின் பேதத்தினு லிரண்டு வகைத்தாம்.

(1) சக்தி.

(1) சப்தத்தின் முக்கிய விருத்தி சக்தி யெனப்படும். அது பத பதார்த்தங்களினது வாச்சிய வாசக பாவ சம்பந்த ரூபமாம். பதத்திற்கு வாசகத்தன்மையாம்; பதார்த்தத்திற்கு வாச்சியத்தன்மையாம். யோக ரூடியின் பேதத்தினுல் அம் முக்கிய விருத்தி மீண்டும் இரண்டு வகைத்தாம்.

(i) யோகம்.

(i) அவ் விரண்டனுள் அவயவ சக்தி யோகமாம். அது பாசகாதி பதங்கட்காம். எப் பதம் தனது அவயவ சக்தியால் அர்த்தத்தை யறிவிக்கும் அது யோக பதமாம். எங்ஙனம்? பாசக பதத்தில் † பாச் அக் என்னும் இரண்டு அவயவங்களாம். அவற்றுள், பாச் என்னும் அவயவத்திற்குப் பாகக் கிரியை அர்த்தமாம். அக் என்னும் அவயவத்திற்குக் கர்த்தா அர்த்தமாம். அவயவ சக்தியால் பாசக பதத்திற்குப் பாக கர்த்தாவின் அர்த்தம் உண்டாகின்றது. அல்லது, பிரகிருதி பிரத்தியயங்களின் அர்த்தம், இவ்விரண்டன் சம்பந்தத்தினுல், அல்லது ரூடியாதி விருத்தியிற் புகன்ற இரண்டு பதார்த்தங்களின் சம்பந்தத்தினுல் எச் சப்தம் தன தர்த்தத்தைப் போதிக்கும், அப் பதம் அவயவ சக்தி யுடையதாம். எங்ஙனம்? "ஔபகவ" "பங்கஜ" பதங்களின்கண் "ஔபகவ" என்னும் பதம் பிரகிருதி பிரத்தியய அர்த்தங்களின் சம்பந்தத்தைக் கொண்டு உபகுகாவின் புத்ரன் என்னும் அர்த்தத்தினது ஞானத்தைத் தருகின்றது. பங்கஜ பதம், பங்க-ஜ என்னும் இரு பதங்களின் ரூட யோகார்த்தங்களைக் கொண்டு பங்கத்தினின்று முண்டானது என்னும் அர்த்தத்தினது ஞானத்தைத் தருகின்றது.

†(பாச் - அடு - அக் = அடுவோன்)

(ii) ரூடி.

(ii) சமுதாய சக்தி ரூடியாம். அது கடாதி பதங்கட்காம். எச் சப்தம் பிரகிருதி பிரத்யய அர்த்தத்தின் அநுசந்தாந மின்றிச் சமுதாய சக்தி மாத்திரத்தினுல் தன தர்த்தத்தை யறிவிக்குமோ அது ரூட பதமாம். எங்ஙனம், கடாதி பதம் கடத்வ விசிஷ்ட கடாதி அர்த்தத்தின் போதகமோ அங்ஙனமேயாம்.



எப் பதம் ஒரு விஷயத்தின் பிரதிபாதநத்தின் பொருட்டு யோக ரூட மென்னும் இரண்டு சக்தியை யுடையதாம், அது யோக ரூட பதமாம். எங்ஙனம்? பங்கஜாதி பதமாம். அஃது அவயவ சக்தியால் பங்கத்தினின்றும் ஜநித்த கமலத்தின் போதகமாம். ரூட சக்தியால் பத்மத்வ ரூபமாக பத்மத்தின் போதகமாம். அதனுல், யோக ரூட மெனப்படுகின்றது.

எப் பதம் இரண்டு விஷயத்தைச் சுவதந்தரமாய்ப் பிரதிபாதநஞ் செய்தற்பொருட்டு இரண்டு சக்தியை யுடையதாம் அது யௌகிக ரூடமாம். எங்ஙனம்? உத்பித்தாதி பதம். அதுவும், அவயவ சக்தியினுல் விருக்ஷம் கொடி முதலியவைகளின் போதகமாம். ரூட சக்தியினுல் உத்பித் என்னும் பெயரையுடைய யஞ்ஞத்திற்கும் போதகமாம். அதனுல் யௌகிக ரூட மெனப்படுகின்றது.

இவ் வுபய சக்தி விசிஷ்ட பதமும் யோக ரூட சக்தியை யுடையதே யாம். யோக ரூடத்தினின்றும் பிந்ந விசிட்ட (பேதத்தோடு கூடிய) மூன்ருவது சக்தியின் அங்கிகார மின்மையின். விலம்ப (தாமத)த்தால் தனதர்த்த போதகம் யோக பதமாம்; சீக்கிரம் தன தர்த்த போதகம் ரூட பதமாம்.

அந்த ரூட பதம் சொரூப - ஜாதி - குணங்களின் பேதத்தால் மூன்று வகைத்தாம்.

டித்த, கபித்தாதி பதங்கள் சொரூப சப்தங்களாம். அவை வஸ்துவின் சம்ஞா வாசகங்களாம்.

கோ ஆதி பதம் ஜாதி சப்தமாம்.

சுக்லாதி பதம் குண சப்தமாம்.

இங்ஙனம் முக்கிய விர்த்தி ரூப சப்தத்தின் சக்தி விர்த்தி யாது கூறப்பட்டது அதனை நையாயிகர்கள் ஈசுவரனது இச்சாரூப சப்த சக்தியா மென்று கூறுகின்றனர்; வையாகரணரும், பாதஞ்சலருமோ

வாச்சிய வாசக பாவத் தன்மையின் ஹேது,பத அர்த்தங்களின் தாதாத்மிய சம்பந்த ரூப சப்த சக்தியா மென்கின்றனர்; சித்தாந்தியோ, சர்வ பதார்த்தத்தினிடத்தும் தன் தன் காரியத்தைச் செய்தற்குச் சாமர்த்தியம் யாது அதனையே சக்தியா மென்கின்றனர். எங்ஙனம் தந்துவின்கண் படத்தைச் செய்யும் சாமர்த்தியமோ, வன்னியின்கண் தாகத்தைச் செய்யும் சாமர்த்தியமோ, அங்ஙனமே சர்வ சப்தத்தின் கண்ணும் தன் தன் அர்த்தத்தின் ஞானத்தை யுண்டாக்கும் சாமர்த்தியம் யாது அது சக்தி பதார்த்தமாம். அக் கடாதி பதத்தின் சக்தி கேவலம் வியக்தியின்கண்ணே யிருக்கின்றது, ஜாதியின்க ணின்றாம். எதன்கண் எப் பதத்தின் சக்தி யிருக்கின்றதோ அவ் வஸ்து அப் பதத்தின் சக்கியமும் வாச்சியமு மெனப்படும். அசக்கிய ரூப கேவல ஜாதிக்கும் கடாதி பதத்தினால் போதமோ இங்ஙன முண்டாகின்றது:—எக் கடாதி பதத்தால் நிரூபிக்கப்பட்ட கடாதி பதார்த்தத்தின்கண் வாச்சியத்தன்மை யாது அதற்கு நியமமாகப் பிரதீதி, அதன் அவச்சேதகத்தின் பிரதீதி யின்றி அசக்கியமாம். எதனால் வியக்தியின்கண் வாச்சியத்தன்மை ரூப தர்மம் வியாப்யமாம், கடத்வாதி ஜாதி ரூப தர்மம் வியாபகமாம், இரண்டும் சகசாரியாகலின் அதனால் அவச்சேதக சொரூபத்தினால் பதத்தின் அசக்கிய ஜாதிக்கும், பதத்தினால் பிரதீதி யுண்டாகின்றது. இது சிரோமணி ஆசாரியரது மதமாம்.

மீமாம்சகரோ இங்ஙனங் கூறுகின்றனர்:—கட பதத்தின் சக்தி கேவலம் ஜாதியின்கண் ணிருக்கின்றது, வியக்தியின்கண் ணின்று; வியக்திகள் அநந்தமாகலின். கட பதத்தின் சிரவண அநந்தரம் சர்வ கட வியக்தியின் தோற்றம் அசம்பவமாம்; வியக்தியின் போதமோ ஆக்ஷேபத்தினா லுண்டாகின்றது. எங்ஙனம்? "குடத்தைக் கொணா" என்னும் வாக்கியத்தை உச்சரித்தும், வியுத்பந்ந புருஷனுக்குக் கட பதத்தின் சக்கிய கடத்துவ ஜாதியின் போத முண்டாகியும், ஜாதி வியக்தி யதீநமாக இருத்தலின் ஜாதியின் கொணர்தல் வியக்தியின் கொணர்த லின்றிப் பொருத்த மின்மையின், வியக்தியின் கொணர்தலைக் கற்பிக்கின்றது. அதனால், அர்த்தாபத்திப் பிரமாணத்தாலே



சப்தத்தின் அசக்கிய வியக்தியின் பிரதீதி உண்டாகின்றது.

வையாகரணரும் தார்க்கிகரும் வேதாந்தியும் இங்ஙனங் கூறுகின்றனர்:—எப் பதம் எவ் வர்த்தத்தின்கண் சக்தமாம், அப் பதம் சிரவணத்தின் பின் வியுத்பந்ந சுரோதாவினிடத்துச் சக்கியார்த்தத்தின் ஸ்மிருதியையே உண்டாக்குகின்றது; அவ் வர்த்தங்களின் பரஸ்பர சம்சர்க்கரூப வாக்கியார்த்த போதமு முண்டாகின்றது; அசக்கியத்திற் கின்றாம். இங்ஙனம் கொள்ளாக்கால், கட பதத்தை உச்சரிக்க அசக்கிய பட பதார்த்தத்திற்கும் போத முண்டாம். அதுவோ இவ்விதம் உண்டாவ தின்று; அதனால், ஜாதி விசிஷ்ட வியக்தியின்கண்ணே பதத்தின் சக்தியாம்.

பிராசீந நையாயிகரோ, ஆகிருதி ஜாதி வியக்தி என்னும் மூன்று பதார்த்தத்தின்கண்ணும் கடபதத்தின் சக்தியை யங்கீகரிக்கின்றனர். ஆகிருதி யென்பது கபாலாதி அவயவங்களின் சம்யோகமாம். அதனால், ஜாதியும், ஜாதி விசிஷ்ட வியக்தியும், அவயவ சம்பந்தமும் ஆய இம் மூன்றுமே கடாதி பதத்தின் வாச்சியமாம்.

(2) இலக்ஷணை.

(2) இப்போது லக்ஷணையைக் கூறுவாம்:—சக்கிய சம்பந்தம் இலக்ஷணையாம். சக்திக்கு விஷயம் சக்கியமாம். அதற்கு இலக்ஷிக்கப்பட்ட பதார்த்தத்தோடு ஸாக்ஷாத் சம்பந்தம் யாது அது லக்ஷணையாம். அது மீண்டும் கேவல லக்ஷணை லக்ஷித லக்ஷணை என்னும் பேதத்தால் இரு வகைத்தாம்.

(i) கேவல லக்ஷணை.

(i) சக்கிய பதார்த்தத்திற்கு லக்ஷிக்கப்பட்ட பதார்த்தத்தோடு ஸாக்ஷாத் சம்பந்தம் கேவல லக்ஷணையாம். எங்ஙனம்? கங்கா பதத்திற்குத் தனது சக்கியப் பிரவாக வாயிலாய்த் தீரத்தின்கண் லக்ஷணையாம்.

(ii) லக்ஷித லக்ஷணை.

(ii) சக்கியார்த்தத்திற்கு லக்ஷிக்கப்பட்ட பதார்த்தத்தோடு பரம்பரா சம்பந்தம் லக்ஷித லக்ஷணை எனப்படும். எங்ஙனம்? சிம்ஹ பதத்திற்குத் தேவதத்த பிண்டத்தின்கண் லக்ஷணையாம்.

அக் கேவல லக்ஷணை மீண்டும் ஜஹத் அஜஹத் ஜஹதாஜஹத் என்னும் பேதத்தால் மூவகைத்தாம்.

### (a) ஜஹத் லக்ஷணை.

அவற்றுள், ஜஹத் லக்ஷணையை எழுதுவாம்:—பதத்தின் ஸம்பூர்ண வாச்சியார்த்தத்தைத் தியாகஞ் செய்து சக்கிய சம்பந்தி கேட்கப்படாத வக்தாவின் அபிப்பிராய, வேறு பதார்த்தத்தில் பதத்தின் பிரவிருத்தி யாது, அது ஜஹத் லக்ஷணையாம். எங்ஙனம்? கங்கையினிடத்துக் கிராமமாம். ஈண்டுக் கங்கா பதத்தின் அர்த்தமாய பிரவாகத்தின்கண் கிராம அர்த்தத்தின் அந்வயம் பொருந்துவ தின்று. பிரவாக அர்த்தத்தின்கண் கங்கா பதத்திற்கு வக்தாவின் தாத்பர்யமுமின்றும். அதனால், கங்கா பதம் தனது சக்கிய அர்த்தத்தை விட்டுத் தனது சக்கிய சம்பந்தி வக்தாவின் தாத்பர்ய விஷய தீர பதார்த்தத்தைப் போதிக்கின்றது. அப்பொழுது "தீரத்தில் கிராமம் இருக்கின்றது" என்னு மிவ் வாக்கியார்த்தம் உண்டாகின்றது.

பிரவாக ரூப சக்கியார்த்தத்திற்கு மத்ஸ்யாதி பதார்த்தங்களோடும் சாதாரண சம்பந்த மிருக்கின்றது. அங்ஙனமாயினும், அப்பதார்த்தம் முதலாவதோ வக்தாவின் இச்சைக்கு விஷயமாவ தின்றும். இரண்டாவது, கிராம பதார்த்தத்திற்கு அபேக்ஷத் தன்மை யின்றும். அதனால், கங்கா பதம் தீர பதார்த்தத்தையே சம்பந்திக்கின்றது; மத்ஸ்யாதிகளைச் சம்பந்திப்ப தின்று. அதுவும், எப்பொழுது வக்தாவின் தாத்பர்யம் சாமாந்ய தீரத்தின்கண்ணோ அப்பொழுது கங்கா பதம் ஜஹத் லக்ஷணையால் சாமாந்ய தீரத்தினது போதநஞ் செய்கின்றது. எப்பொழுது பாவநத்வ (பவித்திரத் தன்மை) சீதத்வாதி தர்ம விசிஷ்ட கங்கா தீரத்தின்கண் வக்தாவினது இச்சை யுண்டாமோ அப்பொழுது கங்கா பதம் அஜஹத் லக்ஷணையால் தனது அர்த்தத்தை விடாது கங்கையின் தீரத்தைச் சம்பந்திக்கின்றது; எதனாலெனின், கங்காதீரமே பாவநத்வாதி தர்ம விசிஷ்டமா யிருத்தலின்.

### (b) அஜஹத் லக்ஷணை.

இப்பொழுது அஜஹத் லக்ஷணையைக் காண்பிப்பாம்:—தனது சக்கியார்த்தத்தை விடாது அதன் சம்பந்தி அபிப்பிராயமுடைய கேட்கப்படாத அந்நிய பதார்த்தத்தின்கண் பதத்தின் பிரவ்ருத்தி யாது, அஃது அஜஹத் லக்ஷணையாம். எங்ஙனம்? 'சிவலை போயினது' என்னும் இவ்விடத்துக் குணம் திரவ்யாதீந பாரதந்திரமாம். எதனால்



ஸ்வதந்தரமாக அதற்கு ஓடும் தன்மை அசம்பவமாம், வக்தாவிற்குக் கேவலம் குணத்தைப் போதிப்பதன்கண் பதத்தி னுச்சாரணத்தில் தாத்பர்யமு மின்றும், அதனால், சிவப்பு என்னும் பதம் தனது சக்கியார்த்தத்தை விடாது சக்கியார்த்த சம்பந்தி ரக்த குணாஶ்ரய அசுவாதி திரவ்யத்தைக் காண்பிக்கின்றது. அப்பொழுது 'சிவப்புக் குதிரை ஓடுகின்றது' என்னும் இவ் வாக்கியார்த்தம் உண்டாகின்றது. எங்ஙனம்? "காகத்தினின்றும் தயிரை ரக்ஷிக்க" என்னும் இவ்விடத்துத் தயிரை நாசஞ் செய்வது கேவலம் காக மன்றும். அதனால் காக பதம் தனது சக்கியார்த்தத்தை விடாது அதன் சம்பந்தி வக்தாவின் தாத்பரிய ஶ்வாநாதி லக்ஷிக்கப்பட்ட பதார்த்தங்கட்கு அஜஹத் லக்ஷணையால் பொருத்தப்படுகின்றது. அப்பொழுது 'காக சுவாநாதி எல்லாவற்றினின்றும் தயிரை ரக்ஷணம் செய்க' என்னும் இவ்வாக்கியார்த்தம் உண்டாகின்றது. எங்ஙனம்? "கவிகையாளர் செல்கின்றனர்" என்னும் இவ்விடத்துக் கவிகை என்னும் பதம் தனது சக்தியார்த்த ஒரு கவிகையுடைய புருஷனை விடாது அதன் சம்பந்தி கவிகை இன்றிய அந்நிய புருஷ ரூப லக்ஷிக்கப்படும் பதார்த்தத்திற்கு அஜஹத் லக்ஷணையால் பொருத்தப்படுகின்றது. அப்பொழுது 'கவிகையாளன் கவிகை இன்றியவர்களோடு செல்கின்றான்' என்னும் இவ் வாக்கியார்த்தம் உண்டாகின்றது. எங்ஙனம்? "மஞ்சம் கரைகின்றது" என்னும் இவ்விடத்து மஞ்ச பதார்த்தமோ ஜடமாம்; அதன்கண் வாக்கு வியாபாரம் அசம்பவமாம்; வக்தாவின் தாத்பரிய விஷயமும் கேவலம் மஞ்ச மன்றும்; அதனால், மஞ்ச பதமும் தனது அர்த்தத்தை விடாது சக்கியார்த்த சம்பந்தி மஞ்ச ஆசிருத புருஷனோடு கூடச் சேர்க்கின்றது. அப்பொழுது "மஞ்சத்தி லுள்ள புருஷன் கூப்பிடுகின்றான்" என்னும் இவ் வாக்கியார்த்தம் உண்டாகின்றது.

### (c) ஜஹதாஜஹத் லக்ஷணை.

இப்பொழுது ஜஹதாஜஹத் லக்ஷணையைக் காண்பிப்பாம்:—சக்கியார்த்தத்தின் விருத்த விசேஷண அம்சத்தைத் தியாகம் செய்து அதன் சம்பந்தி அவிரோத விசேஷ்ய அம்சத்தின்கண் பதத்தின் பிரவ்ருத்தி யாது, அது ஜஹதாஜஹத் லக்ஷணையாம். இதனையே பாகத்தியாக லட்சணை யென்றும் கூறுகின்றனர். எங்ஙனம்? "ஸோயம் தேவதத்தன்" என்னும் இவ்விடத்து ஸः என்னும் சப்தத்தி னர்த்தம்

பரோக்ஷத்துவாதி தர்ம விசிஷ்ட தேவ தத்தனுக்கு, அயம் சப்தத்தினர்த்த அபரோக்ஷத்துவாதி தர்ம விசிஷ்ட தேவதத்தனோடு அத்தியந்த அபேதம் அசம்பவமாம்; பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் விரோதத்தால். அதனால், ஸ: என்னும் பதம் பரோக்ஷத்துவாதி விசிஷ்ட ரூப விருத்த விசேஷணாம்சத்தை விட்டு, விசேஷ்யாம்ச கேவல தேவதத்த பிண்டத்தைக் காண்பிக்கின்றது; அப்பொழுது முன் பார்த்த தேவதத்தன் யாரோ அவனே இந்தச் சுத்தமான தேவதத்தனும் என்னும் இவ் வாக்கியார்த்தம் உண்டாகின்றது. அங்ஙனமே 'தத்துவமஸி' என்னும் வாக்கியத்தின்கண்ணும், எதனால் ஜஹத் அஜஹத் லக்ஷணை பொருந்துவ தின்று, அதனால், பாகத் தியாக லக்ஷணையே ஆசார்யர்களால் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றது. ஜஹத் லக்ஷணையின்கண் சேதநாம்சத்திற்கும் தியாகமாகலின் அபீஷ்ட அகண்ட சேதநத்தின் லாப மின்மையின் ஜஹத் லக்ஷணை மகா வாக்கியத்தின்கண் நாம் அங்கீகரிக்க வில்லை. அஜஹத் லக்ஷணையின்கண் விசேஷ்ய அம்சத்திற்குத் தியாகம் இல்லாமையினாலும்,சுத்த சேதநத்தின் லாபம் உண்டாவ தின்றும். அதனால் அதற்கும் மகா வாக்கியத்தின்கண் அசம்பவமாம். பரிசேஷத்தால் ஜஹதாஜஹத் லக்ஷணையினையே ஸ்வீகாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அதன்கண் தத் பதம் த்வம் பதம் என்னு மிரண்டும் தனது வாச்யார்த்தத்தின்கண் மாயா விசிஷ்டத்தன்மை ரூபமும் அவித்தை அல்லது அதன் பரிணாம அந்தக்கரண விசிஷ்டத் தன்மை ரூபமுமாய விருத்த விசேஷணாம்சங்களை விட்டு அவிருத்த விசேஷ்ய சேதநாம்சத்தைப் பொருந்தச் செய்கின்றன. அப்பொழுது தத் பதத்தினது லக்ஷியார்த்த சுத்த சேதநம் த்வம் பதத்தின் லக்ஷியார்த்த சுத்த சேதநத்தினின்றும் அத்தியந்தம் அபிந்நமாம்; இரண்டின் சுத்த சேதநங்களின் அபிந்நத் தன்மையின்கண் பிரத்தியக்ஷாதிப் பிரமாண விரோத மின்றாகலின் என்று இரண்டு அகண்ட சேதநத்தின் தாதாத்மியம் வாக்கியார்த்தமாக உண்டாகின்றது.

### நிரூட லக்ஷணை.

இப்பொழுது நிரூட லக்ஷணையைக் கூறுவாம்:—எப் பதத்தின் சிரவணாநந்தரம் சக்கியார்த்தம் போன்று லக்ஷிக்கப்படும் அசக்கியார்த்தத்தின் போதம் ஸர்வ ஜீவர்கட்கும் ஸ்வாபாவிகமாகவே உண்டாம்



அப் பதம் நிரூட லக்ஷணை யுடையதாம். எங்ஙனம்? 'நீலோத்பலம் ரக்த படம்' என்னும் இவ்விடத்து, எங்ஙனம் நீல ரக்த என்னும் இரண்டு பதங்களினது சக்கியார்த்தம் குண மாத்ரமாம்; குணியினிடத்து அவற்றிற்கு ஶக்தி யின்றும்; அங்ஙனமாயினும், அப்பதங்களின் சிரவணத்தின் பின் அப் பதங்களால் லக்ஷியார்த்த குணத்தின் ஆஶ்ரய குணியாய திரவியத்தின் போதமே உண்டாகின்றது. நீல விசிஷ்ட கமலம் அல்லது நீலாசிரயாபிந்நம் கமலம் என்பன வாதி பதமும் இங்ஙனம் அநாதி விலக்ஷண தாத்பர்யமுடைய ஈஶ்வரனால் செய்யப்பட்டதாம்; அதனால், சக்தி விருத்தி போன்று லக்ஷிய லக்ஷணா பாவ ரூப சம்பந்தத்தின் அநுசந்தான மின்றிச் சப்தத்தின் நிரூட லக்ஷணாவிருத்தியும் சீக்கிரம் தனது அர்த்த ஞானத்தையுண்டாக்குகின்றது. ''விஷத்தைப் புசிக்க'' என்னும் இவ் வாக்கியத்தின்கண் இரண்டு பதங்கட்கும் காவ்ய, அலங்காராதிக் கிரந்தங்களினிடத்து வ்யஞ்ஜனா விருத்தி யுண் டென்று கூறுகின்றனர்; எதனால், இதன் முக்கியார்த்தத்தின் பிரதீதியின் பொருட்டு இவ் வாக்கியத்தைக் குரு பிதா முதலியோர்கள் உச்சரிப்ப தன்றும்;பின்னையோ, அந்நியக் கிருஹத்தின்கண் போஜநத்தின் நிஷேத ரூப அர்த்தத்தின் பிரதீதியின் பொருட்டு உச்சரிப்பதாம்; அந்நியக் கிருஹத்தின்கண் போஜநத்தின் நிவிருத்தி இவ் வாக்கியத்தின் வ்யங்கியார்த்தமாம். அதனால், வ்யங்கியார்த்தத்தின் ஸ்மிருதியை யுண்டாக்கும் இப் பதம் வ்யஞ்ஜனா விருத்தியை யுடையதாம். எதனா லெனின், பாவாபாவ ரூப இரண்டற்கும் பரஸ்பர அசம்பந்தத் தன்மையால் சக்கிய சம்பந்த ரூப லக்ஷணத்திற்குப் பொருத்த மின்றும். அங்ஙனமாயினும், நையாயிகரோ இப் பதங்கட்கு இலக்ஷணா விருத்தி உண் டென்கின்றனர். இதன் முக்கியார்த்த விஷத்தைப் புசித்தல் யாது அதற்கு அந்நியக் கிருஹத்தின்கண் போஜநத்தின் நிவிருத்தி ரூப லக்ஷிக்கப்பட்ட பதார்த்தத்தோடு ஸாக்ஷாத் ஸம்பந்த மின்றும்; பாவாபாவங்கட்குப் பரஸ்பரம் விருத்தமாகலின். அங்ஙனமாயினும், பரம்பரையால் ஸர்வத்திற்கும் ஸர்வத்தோடு ஸம்பந்தமும் பொருந்தும்; லோகத்தின்கண்ணும் பிரசித்தமாம். எங்ஙனம் கடத்தின் விரோதி கடாபாவமாம்; அதனோடு சாக்ஷாத் கட சம்பந்தத்தின் அபாவ மிருப்பினும் அபாவத்தின் நிரூபகத்தன்மையால் பிரதியோகித் தன்மைரூப சம்பந்தமோ இருக்கின்றது; அங்ஙனமே விஷத்தைப் புசி என்னும் இப் பதங்கட்கும் ஜஹத்

லட்சணையால் அந்நியக் கிருஹ போஜந அபாவரூப வக்தாவின் தாத்பரிய விஷய லக்ஷியார்த்தம் உண்டாகின்றது.

லக்ஷித லக்ஷணை.

இப்பொழுது லக்ஷித லக்ஷணையைக் கூறுவாம்:—பதத்தின் சக்தியார்த்தத்தின் பரம்பரா சம்பந்தம் யாது அது லக்ஷித லக்ஷணையாம். எங்ஙனம்? 'இரண்டு ரேபம் சப்திக்கின்றன' என்னு மிவ்விடத்து இரு ரேப பதங்கட்கு முக்கியார்த்தம் இரு ரகாரமாம். அச் சக்தியார்த்தத்தின் ஸாக்ஷாத் சம்பந்தம் இரண்டு ரகாரங்களை யுடைய பிரமர பதத்தோடாம். பரம்பரா சம்பந்தம் பிரமர பதத்தின் வாச்சிய வண்டினுடனும். அதனால் இரு ரேப பதம் பரம்பரா சம்பந்தத்தால் வக்தாவின் தாத்பரிய விஷய வண்டாகிய வஸ்துவின் போதகமாகலின் லக்ஷித லக்ஷணையை யுடையதாம். எங்ஙனம் "இத் தேவதத்தன் சிம்ஹம்" என்னு மிவ் விடத்துச் சிம்ஹ பதத்தின் முக்கியார்த்தம் பசுவாம். அச் சக்தியார்த்தத்திற்குச் சூரத் தன்மை, குரூரத் தன்மையாதி குணங்களோடு சம்பந்த மிருக்கின்றது. அக்குண விசிஷ்ட தேவதத்தனோடு பரம்பரா சம்பந்தமாம். அதனால் சிம்ஹ பதமும் லக்ஷிக்கப்பட்ட சூரத்தன்மை முதலிய குணங்களைக் கொண்டு தேவதத்தனது போதகமாதலின் இலக்ஷித லக்ஷணையை யுடையதாம். சிலரோ, இவ் வுதாஹரணத்தின்கண் லக்ஷிதலக்ஷணையினின்றும் வேறாய்ச்சிம்ஹ சப்தத்திற்குக் கௌணீ விருத்தி அங்கீகரிக்கின்றனர்; அதனது ஸதிருச குண வாயிலாய் வக்தாவினது தாத்பர்யார்த்தத்தின் போதகமா யிருத்தலின். இங்ஙனம் கூறிய இருவித சக்தி விருத்தியும் மகா வாக்கியார்த்த ஞானத்தின்கண் ஸாக்ஷாத்தாகவும், பரம்பரையாகவும் உபயோகியாகலின் ஜிஜ்ஞாஸுவின் ஞானத்தின்பொருட்டு ஸங்க்ஷேபமாகக் கூறப்பட்டன.

**2**—52. மூன்று தொகுதியாய வஸ்துக்கள்.

**2**—1. பிரஹ்மம்.

இப்பொழுது மூன்று எண்ணிக்கையின்கண் முதலில் மூவிதப் பிரஹ்மத்தை எழுதுவாம்:—

ஓர் அத்துவிதீயப் பிரஹ்மமே ஸமஷ்டி ஸ்தூல ஸூக்ஷ்ம காரணமாய மூன்று சரீரங்களின் உபாதிகளால் விராட் ஹிரண்ய கருப்பன் ஈஸ்வரன் என்னும் மூவித நாமங்களை யடைகின்றது; அதனால், பிரஹ்மம் மூன்றெனப்படுகின்றது. விராட்டைச் சிலவிடத்து வைஸ்வாநரன் என்றும், வைராஜனென்றும் கூறுகின்றனர். ஹிரண்ய கருப்பனைச் சிலவிடத்து ஸூத்ராத்மா வென்றும், பிராணனென்றும் கூறுகின்றனர். ஈஸ்வரனைச் சிலவிடத்து அந்தர்யாமி யென்றும் அவ்யாகிருதனென்றும், ஜகத்காரணனென்றும், அவ்யக்தனென்றும் கூறுகின்றனர். ஸாக்ஷி, பரமாத்மா, கூடஸ்தன், அக்ஷரம், ஜகததிஷ்டாநம், ஜகத்நிஷேத அவதிரூபம், அத்விதீயம் என்பன வாதி சப்தங்களால் எது கூறப்படுகின்றதோ அது பிரஹ்மமாம்.



ஸாக்ஷியாதி, விராட்டாதி பதங்களின் விரிவான வ்யாக்கியாநம் கிரமமாகக் கூறப்படுகின்றது:- வ்யாபார மின்றி அயஸ்காந்தம் போன்று தனது சந்நிதியின்கண் ணுள்ள ஞாதாதி திரிபுடிகள் எதனால் ஸ்வரூப சேதநத்தால் ஒரே காலத்தின்கண் பிரகாசிக்கப்படுகின்றன, அதனால் ஸாக்ஷியாம். ஜீவாத்மாவை அபேக்ஷித்து ஸம்ஸார தசையின்கண் எதனால் உத்கிருஷ்டம் அதனால் பரமாத்மாவாம். கூடம் போன்று நிர்விகாரத் தன்மையால் தனது ஸ்வரூப ஸ்திதி எதனாலாம் அதனால் கூடஸ்தமாம்; அல்லது, கூடம் என்னும் பெயர் அஞ்ஞாநத்திற்காம். அதன்கண் சத்தை ஸ்புரணத்தன்மையினைக் கொடுத்தலால் ஸ்திதமாம்; அதனாற் கூடஸ்தமாம். எதனால் ஸ்வரூபத்தாலும், தர்மத்தாலும், அவயவத்தாலும் நாசமின்று அதனால் அக்ஷரமாம். ஆகாசாதி ஜகத்திற்கும், அவித்தையின் பரிணாம ரூப ஜகதாகார ஞானத்திற்கும் உண்டான அத்தியாசத்திற்கு எதனால் ஆஸ்ரயமாம் அதனால் அதிஷ்டாந மாம். ஞாந அவஸ்தையின்கண் காரிய காரண ரூபப் பிரபஞ்சத்தின் நிஷேத முண்டாய்ச் சேஷமா யிருத்தலின் நிஷேத அவதியாம். ஸஜாதியாதி பேத ரகிதமா யிருத்தலின் அத்விதீயமாம்.

(1) விராட்.

(1) எதனால் பிரஹத் என்னும் வியாபகம் அதனால் பிரஹ்மமாம். ஸமஷ்டி ஸ்தூல சரீரோபாதி யுடைய பிரஹ்ம சேதநமே நாநாப் பிரகாரமாக விளங்குகின்றது அதனால் விராட் எனப்படும். விஸ்வநரர் என்னும் ஸமஸ்த ஜீவர்களிடத்திலும் நான் என்னும் அபிமாநத்தால் வைஸ்வாநரன் எனப்படுவன்; அல்லது, விஸ்வமே இந் நரனும்; ஸர்வாத்மாவாய் இருத்தலின். அல்லது ஸர்வ வியவகாரங்கட்கும் நரன் எனின் கர்த்தாவாம். அல்லது விஸ்வநரன் என்பது ஸர்வ ஜீவ

ஆத்மத் தன்மையானும், நியம்மியத்தன்மையானும் இவனுக்காம்; அதனால் விஸ்வாநரனும். விஸ்வாநரனே வைஸ்வாநரனும். இவ்விடத்து ஸ்வார்த்தத்தின்கண் தத்திதப் பிரத்தியயமாம். விசேஷமாக விளங்குதலால் வைராஜன் எனப்படுவன்.

(2) ஹிரண்ய கருப்பன்.

(2) ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரோபாதி யுடைய பிரஹ்ம சேதநம் அதிசய ஞாந சக்தி யுடைமையின் ஹிரணியகருப்பன் எனப்படுவன். மணியினுட் சூத்திரம் போன்று ஸமஷ்டி வ்யஷ்டி ஸ்தூல சரீரத்தின்கண் அநுஸ்யூதமா யிருத்தலின் சூத்ராத்மாவாம். கிரியா சக்தி சம்பந்நமாயும் இந்திரியாதி கிரியா சக்திகளின் ஹேதுவாயு மிருத்தலின் பிராணன் எனக் கூறப்படும்.

(3) ஈஸ்வரன்.

(3) ஸமஷ்டி அஞ்ஞாந உபாதியுடைய சைதந்யம் ஸமஸ்தப் பிராணிகட்கும் நியாமகமாகலின் ஈஸ்வரன் எனப்படும். ஸர்வப் பிராணிகளின் ஹிருதய தேசத்தின்கண்ணிருந்து கர்மாநுஸாரம் ஸர்வ ஜீவர்களையும் பிரேரணை செய்தலின் அந்தர்யாமியாம். நாம ரூபம் என்னும் இரண்டு மின்மையால் அவ்யாகிருதமாம். அஞ்ஞாந அதன் காரிய ஸகலத்தின்கண்ணும் அநுகதமாகலின் ஜகத் காரணமாம். பிரத்தியக்ஷாதி எப் பிரமாணத்தாலும் விஷய மன்றாகலின் அவ்யக்த மெனக் கூறப்படுகின்றது.

## 2— 2. ஜீவன்.

மூன்று ஜீவரைக் கூறுவாம்:—ஒரே பிரத்யகாத்மா வ்யஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம காரண மென்னும் முச் சரீரங்களினது உபாதித் தன்மையால் விஸ்வ தைஜஸ பிராக்ஞன் எனக் கூறப்படுகின்றது. இது மூன்று ஜீவ வியவகாரமாம். வ்யாவகாரிக ஜீவன் சிதாபாஸன் என்னு மிரு பெயரும் விஸ்வனுக்காம். பிராதிபாஸிக ஜிவன் ஸ்வப்ந கல்பிதன் என்னு மிரு பெயரும் தைஜஸனுக்காம். பாரமார்த்திக ஜீவன் அவச்சிந்நன் என்னும் இரு பெயரும் பிராக்ஞனுக்காம். முற் புகன்ற பிரத்யகாத்மா முச் சரீரத்தினது அதிஷ்டாநம், சைதந்யம், ஸாக்ஷி, கூடஸ்தம், அக்ஷரம் எனப்படுகின்றது. அநிர்த ஜட துக்காத்மக அஹங்காராதிகளி னின்றும் * பிராதிலோம்யம் என்னும் விலக்ஷணத் தன்மை

* பிராதிலோம்யம்—எதிர்மறைத்தன்மை.



விபரீதத் தன்மையால் சச்சிதாநந்தாத்மத் தன்மையாகப் பிரகாசிக்கின்றது. அதனால் பிரத்யக்காம். அஹங்கார தேஹேந்திரியாதி அநாத்மாவி னின்றும் அவிவேகத்தால் நிகிருஷ்டசித்து அல்லது அஹங்காராதி அநாத்மாவினிடத்து அநுகத சித்து ஆத்மா வெனப்படும்; அல்லது அஹங்காராதி ஸர்வ திருசியத்தைப் பிரகாசித்தலால் அல்லது திரிகால சத்தாகலின் ஆத்மா வெனப்படும். அது பிரத்தியகாத்மாவாம். சித்து, சைதந்யம், சிதி இம் மூன்றும் பரியாய சப்தங்களாம். இரண்டு சரீரத்தின் உபாதாந வ்யஷ்டி அஞ்ஞாநத்தின் கற்பனைக்கு அதிஷ்டாநமா யிருத்தலின் முச் சரீரத்தினது அதிஷ்டாநமாம். தன்னிடத்தில் அத்தியஸ்த அஹங்காராதி பதார்த்தங்களும் அவற்றின் விருத்திகளும் ஸாக்ஷாத் ஸ்வரூப சைதந்யத்தால் பிரகாசிக்கப்படுதலின் ஸாக்ஷியாம். கூடம் போன்று நிர்விகாரமாகலின் கூடஸ்தமாம். ஸ்வரூபமாக அவிநாசியாகலின் அக்ஷரமாம்.

(1) விஸ்வன்.

(1) இப்பொழுது விஸ்வாதிகளை எழுதுவாம்:—வியஷ்டி ஸ்தூல சரீர உபாதியை யுடைய ஆத்மா, ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீராதி ஸமஸ்தத்தின் அபிமாநியாகலின் விஸ்வ னெனப்படுவன்; அல்லது, ஸூக்ஷ்ம சரீரத்தை விடாது ஸ்தூல சரீரத்தின்கண் பிரவிஷ்டனாதலின் விஸ்வனும். லௌகிக, வைதிக, ஸமஸ்த வியவகாரத்தின் கர்த்தாவாகலின் வியாவகாரிக ஜீவனும். சைதந்யம் போன்று விளக்கமாய்ச் சித் லக்ஷண மின்றி யிருத்தலின் சிதாபாஸன் எனப்படுவன்.

(2) தைஜசன்.

(2) வியஷ்டி ஸூக்ஷ்ம சரீர உபாதியுடைய ஆத்மா, தேஜோமய அந்தக்கரண விசிஷ்டமா யிருத்தலின், அல்லது, தேஜஸ் சப்தத்தின் வாச்சிய அஹங்காராதி விருத்தியின்கண் அஹம் என்னும் அபிமாநத்தால் தபிக்கப்பட்டிருத்தலின் தைஜஸன் எனப்படும். பிரதீதி கால மாத்திரத்தி விருத்தலின் பிராதிபாஸிக ஜிவனும். அஞ்ஞாந காரிய நித்திரா சக்தியால் கற்பிக்கப்படுதலின் ஸ்வப்ந கல்பிதன் எனப்படும்.

(3) பிராக்ஞன்.

(3) இரண்டு சரீரத்திற்கும் உபாதாநமாய வியஷ்டி அஞ்ஞாந காரியத்தின் அவபாசகமாதலானும், அதன் ஸ்பஷ்ட மில்லாத உபாதித்தன்மையால், ஸ்பஷ்ட மின்றிய பிரகாசத் தன்மையானும்

பிரஞ்ஞ ரூப சேதநம் பிரதாநமாகலானும் அல்லது அஞ்ஞாநாதி விருத்தியுடைமை யாகலானும் ப்ராக்ஞன் எனப்படும். மூன்று அவஸ் தையின்கண்ணும் அநுஸ்யூதத் தன்மையாக விருத்தலின், விஸ் வாதிகளை அபேக்ஷித்துப் பாரமார்த்திகமாம். அவித்தை அஹங்கார தேஹாதி உபாதியின் பரிச்சிந்நத் தன்மையாக விளங்குதலின், அவச் சிந்ந மெனப்படுகின்றது.

**2**—3. சரீரம்.

இப் பொழுது முச் சரீரத்தைக் கூறுவாம் :—ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண பேதத்தால் சரீரம் மூவகைத்தாம்.

(1) ஸ்தூல சரீரம்.

(1) பஞ்சீகிருத பஞ்ச மகா பூதத்தின் பரிணாமமும், சுக்ல ஸ்ரோணித ஸையோகத்தால் உத்பந்நமும், க்ஷீராதி அந்நங்களினால் பாலிக்கப்படுவதும், ரூபாதி அளவைகளால் இந்திரிய கோசர மாவதும் ஸ்தூல சரீரமாம்.

(2) ஸூக்ஷ்ம சரீரம்.

(2) அபஞ்சீகிருத பஞ்ச பூதத்தின் காரியமும், பதினேழு தத் துவ ரூபமும், முக்கோசத்தோடு கூடியதும், பகிரிந்திரிய அகோசரமு மாவது ஸூக்ஷ்ம சரீர மாம்.

(3) காரண சரீரம்.

(3) அவ் விரண்டினது உபாதாந காரண அஞ்ஞாநம் காரண சரீர மாம்.

எதனால் அதன் அபிமாநியாய சரீரி ஜீவ சேதந மின்றித் தனது வியாபாரத்தின்கண் ஸ்வதந்தர மன்றும், ஞாநத்தாற் பாதமாம், பிராரப்த க்ஷயத்தால் நாச முண்டாகின்றதோ, அதனால் சரீரம் என்று கூறப்படுகின்றது.

**2**—4. அவஸ்தை.

இப்பொழுது மூன்று அவஸ்தைகளைக் கூறுவாம் :—ஜாக்ர, ஸ்வப்ந, சுஷுப்தியின் பேதத்தால் அவஸ்தை மூவகைத்தாம்.

(1) ஜாக்ர அவஸ்தை.

(1) யாண்டு பதினான்கு தேவர்களால் அநுக்ராஹிக்கப்பட்ட பதி னான்கு இந்திரியங்களால் ஸ்தூல விஷய போகமும், விகித கிரியையும்



பிராரப்த கர்ம அநுஸாரத்தால் உண்டாகின்றன, அச் சத்துவ குண பரிணாம ரூப புத்தி விருத்தி ஜாக்கிரத் அவஸ்தை யாம். விஸ்வன் எத னது அபிமாநியாவன்.

(2) ஸ்வப்ந அவஸ்தை.

(2) யாண்டு ஜாக்கிர போகத்தைக் கொடுக்கும் கர்மம் க்ஷயமாய் ஸ்வப்ந போகத்தைக் கொடுக்கும் கர்மம் உதயமாய் வாஸநா ரூப இந் திரியங்களால் வாஸநாரூப ஸூக்ஷ்ம போகமும், கிரியையும் உண்டா கின்றனவோ, அந்த ரஜோ குண பரிணாம ரூப புத்தி விருத்தி ஸ்வப்ந அவஸ்தை யாம். தைஜஸன் எதனது அபிமாநி யாவன்.

(3) சுஷுப்தி அவஸ்தை.

(3) அவ் விரண்டினது உத்பத்தி லயத்தின் ஸ்தாநமாய் ஸர்வ விசேஷ விருத்தி அபாவ ரூபம் யாது அந்தத் தமோ குணப் பரிணாம ரூப புத்தி விருத்தி ஸம்ஸ்கார ரூபம் சுழுத்தி அவஸ்தை யாம். பிராக் ஞன் எதனது அபிமானியாவன். அது எதனால் உத்பத்தி நாச மாகின் றதோ அதனால் பிராரப்த கர்ம அதீநமாம்.

**2**—5. கரணம்.

மூவிதக் கரணத்தைக் கூறுவாம்:—மநம் வாக்குக் காய பேதத் தால் கிரியையின் கரணம் மூவகைத்தாம். எதனால் ஜீவிக்கின்ற அவஸ்தையின்கண் ஜீவ ரூப கர்த்தாவால் விகித அவிகித நாநாவித எக்கிரியை உத்பத்தியாகின்றதோ, அவ் வெல்லாவற்றிலும் மநம் வாக்குக் காய மென்னும் இம் மூன்றுமே ஸாதக தமமாம்; அதனால் கரண மெனப்படுகின்றன.

**2**—6. கர்மம்.

இப்பொழுது மூவிதக் கர்மத்தை எழுதுவாம் :— புண்ணிய பாப மிஸ்ர பேதத்தால் கர்மம் மூவகைத்தாம்.

(1) புண்ணிய கர்மம்.

(1) சுருதி, ஸ்மிருதியினால் விதிக்கப்பட்ட எந்த யக்ஞாதி கர்மம் தனது அநுஷ்டாந வாயிலாய்ப் புண்ய ரூப அபூர்வத்தை உத்பத்தி செய்து ஸ்வர்க்காதி பலத்தை யுடையதாம் அது புண்ணிய கர்மமாம்.

(2) பாப கர்மம்.

(2) சுருதியாதியினுல் நிஷேதம் பண்ணப்பட்ட எப் பரஸ்திரீ கமநாதி ரூப கர்மம் பிராந்தியால், ராகத்தால், தனது இச்சையினுல், தனது அநுஷ்டாநவாயிலாய்ப் பாப ரூப அபூர்வத்தை உண்டாக்கி நரகாதி பலத்தை யுடையதாம் அது பாப கர்மமாம்.

(3) மிஸ்ர கர்மம்.

(3) முற் புகன்ற விகித நிஷித்தரூப இருவிதக் கர்மம் யாது, கிரமமாய் அநுஷ்டிக்கப்பட்டுத் தனது அநுஷ்டாநவாயிலாய்ப் புண்ய பாப ரூப அபூர்வத்தை ஜநிப்பித்து உயர்வு தாழ்வாகிய மநுஷ்ய ஜந்ம பலத்தையுடையது அது மிஸ்ர கர்மமாம்.

**2—7.** புண்ய கர்மம்.

மூவிதப் புண்ய கர்மத்தைக் கூறுவாம்:—உத்கிருஷ்ட, மத்யம, ஸாமாந்ய பேதத்தால் முற் புகன்ற புண்ணிய கர்மம் மூவகைத்தாம்.

(1) உத்கிருஷ்ட புண்ய கர்மம்.

(1) உபாஸநா விசிஷ்ட உயர்வினை யுடைய புண்ணிய கர்மத்திற்கு ஹிரண்யகர்ப்ப சரீரத்தின் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது.

(2) மத்தியம புண்ய கர்மம்.

(2) மத்திய புண்ய ரூப ஸகாம கர்மத்திற்கு இந்திராதி சரீரத்தின் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது.

(3) சாமாந்ய புண்ய கர்மம்.

(3) ஸாமாந்ய புண்ணிய ரூப கர்மத்திற்கு யக்ஷ ராக்ஷசாதி சரீரத்தின் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது.

**2—8.** பாப கர்மம்.

மூவிதப் பாப கர்மத்தைக் காண்பிப்பாம்:—உத்கிருஷ்ட, மத்தியம, ஸாமாந்ய பேதத்தால் முற் புகன்ற பாப கர்மம் மூவகைத்தாம்.

(1) உத்கிருஷ்ட பாப கர்மம்.

(1) பிரஹ்ம ஹத்தி, சிசு ஹத்தி, குரு தாரா கமநாதி மஹா பாபத்திற்கு ஸர்வ தாபத்தைச் செய்யும் சிம்ஹ, ஸர்ப்ப, விருச்சிக (தேள்), கொதுகு, வந மக்ஷி (ஈ), மல, கீட, ஶ்வாந, சண்டாள, முள் விருக்ஷாதி தாமச சரீரப் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது.



(2) மத்தியம பாப கர்மம்.

(2) திருட்டு, பொய், பரஸ்திரீ கமநம், பரவஞ்சநாதி மத்தியம பாபத்திற்கு, எருமை, அசுவ, கர்த்தவ, யூக, மசக, மா, பிலா, தென்னை முதலிய தாமஸ ராஜஸ சரீரப் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது.

(3) ஸாமந்ய பாப கர்மம்.

(3) எறும்பு ஆடு முதலிய ஹிம்ஸாரூப ஸமாந்ய பாபத்திற்கு, பசு, யானை, அரசு, துளசி, குச்ச (நாணற்புல்), கொடி முதலிய ராஜஸ சரீரப் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது.

**2—9.** மிஸ்ர கர்மம்.

மூவித மிஸ்ர கர்மத்தைக் கூறுவாம்:—உத்கிருஷ்ட, மத்தியம, ஸாமாந்ய பேதத்தால் மிஸ்ர கர்மம் மூவகைத்தாம்.

(1) உத்கிருஷ்ட மிஸ்ர கர்மம்.

(1) உத்கிருஷ்ட மிஸ்ர கர்மத்திற்கு நிஷ்காம கர்ம அநுஷ்டாநாதி நிர்விகல்ப ஸமாதி பர்யந்தமான ஸர்வ சாதநப் பிராப்தி யோக்கிய சரீரப் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது; புண்ணிய கர்மத்தின் அதிகத்தால் அந்த யோக்கிய சரீரத்தில், சாரீர மாநஸ துக்காதிகளின் எவ்வநுபவம் உண்டாகின்றதோ, அது அற்ப பாபத்தின் பலமாம்.

(2) மத்தியம மிஸ்ர கர்மம்.

(2) மத்தியம மிஸ்ர கர்மத்திற்குத் தன் வர்ணாச்சிரம உசித, காம்ய, நிஷித்த, நித்திய, நைமித்திகாதி கர்மாநுஷ்டாநப் பிராப்திக்கு யோக்கிய சரீரப் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது ; புண்ணிய பாபத்தின் ஸமாநத் தன்மையால்.

(3) சாமாந்ய மிஸ்ர கர்மம்.

(3) ஸாமாந்ய மிஸ்ர கர்மத்திற்குச் சண்டாள, வேடாதி அல்லது அசுவாதி, பசு சரீரப் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது; பாபம் அதிகமாகலின்.

சத்துவாதி குண தைவீ, ஆஸுரீ வாஸனைகளால் பிரேரிக்கப் பட்ட மனோ வாக் காயங்க ளியற்றிய உத்கிருஷ்டாதி கர்மத்தின் பேதத்தால் கர்மமும் கர்ம பலமும் அநேக விதமாம். அது ஆண் டாண்டு தர்ம சாஸ்திரத்தின்கண் ஆசார்யர்களால் நிரூபணஞ் செய் யப்பட்டிருக்கின்ற தென்பதறிக.

## 2—10. பிராரப்தம்.

இப் பொழுது பிராரப்தத்தைக் கூறுவாம்:—இச்சை, பர இச்சை, அநிச்சையின் பேதத்தால் பிராரப்த கர்மம் மூவகைத்தாம்.

### (1) இச்சாப் பிராரப்தம்.

(1) தனது இச்சையாற் செய்யப்பட்ட பிக்ஷாடநாதிகளால் பிராப்தமான சுக துக்கம் யாது, அஃது இச்சாப் பிராரப்தம் இயற்றிய தாம்.

### (2) பரேச்சாப் பிராரப்தம்.

(2) ஸமாதி அவஸ்தையின்கண், அல்லது, வியுத்தாந அவஸ்தை யின்கண் சிஷ்ய, பந்து, பக்தாதிகளால் தனது இச்சை யின்றிக் கொடுக்கப்பட்ட அந்நாதிகளினால் ஜநித்த சுகாநுபவமும், நிந்திப் பவன், நிஷ்ட்டூர, க்ரூர, வராக, கெட்டபந்து, த்வேஷி முதலியவர் களால் இயற்றப்பட்ட நிந்தாதி, பீடாதி ஜந்ய துக்காநுபவமும் யாது, அது பர இச்சாப் பிராரப்தம் இயற்றியதாம்.

### (3) அநிச்சாப் பிராரப்தம்.

(3) ஸ்வ பர இச்சை யின்றி ஆகாசத்தினின்றும் பழம் விழுவது போலக் காரண மின்றி உண்டாய கல்விழுதல் முள் தைத்தலாதி ஜந்ய அநிஷ்ட துக்காநுபவமும், பனம் பழம் தமலப் பழம் முதலியன விழுதலால் ஜந்ய இஷ்ட சுகாநுபவமும் யாது அது அநிச்சாப் பிராரப் தம் இயற்றியதாம்.

மூவிதப் பிரஹ்மாதி, மூவிதப் பிராரப்தாந்த எப் பதார்த்தம் நிரூபணம் செய்யப்பட்டதோ அதனைக் கூறுவதற்கு இது பிரயோசன மாம்:—சேதநத்தை ஆசிரயித்து அதன் விஷயக அஞ்ஞாநம் யாது, அது நிர்விபாக, நிர்விகார ஸர்வ கல்பனை யின்றிய சேதநத்தின்கண் தனது பரிணாம ரூப இரு விதச் சரீரத்தின் சம்பந்த வாயிலாய் உபாதி யின் உத்கிருஷ்டத் தன்மையால், வைஸ்வாநராதி மூன்றீஸ்வர



அவஸ்தையைக் கற்பிக்கின்றது; அச் சேதநத்தின்கண்ணே நிகி ருஷ்ட இரு வித சரீர அத்தியாச வாயிலாய் விசுவாதி மூன்று ஜீவர் களையும் அவற்றின் சம்பந்தி ஜாக்கிராதி மூவவஸ்தைகளையும், புண்ணிய பாபாதி மூன்று கர்மங்களையும், கிரியையின் காரண மூன்று கரணத்தையும், மூவிதக் கிரியையின் பல ரூப மூன்றுவிதப் பிராரப்தத் தையும் கற்பிக்கின்றது. எதன்கண் தனது ஸ்வரூபத்தின் அஞ் ஞாநத்தால் ஜீவன் தாதாத்மிய அபிமாநியாய் உத்தம மத்தியம அதம அவஸ்தைகளை யடைகின்றான், அதனால், இவ் வற்புத மாஹாத்மி யம் அஞ்ஞாநத்திற்காம்.

(ஆகாசத்தின்கண் விசித்திர சுகந்த புஷ்பாதி கற்பனை போன்று நிர்விகாரத்தின்கண் அநந்த விகாரம் கற்பிக்கப் படுகின்றது; அதனால், வைஸ்வாநராதி அவஸ்தையின் பரஸ்பர வியபிசார ரூப வ்யதிரேகம் யாது? அதிஷ்டாந சாக்ஷி சேதநத்தின் ஸாக்ஷித் தன்மையால் அவற்றின்கண் அந்வயம் யாது? விஸ்வாதி அவஸ்தைகட்கும், அவற்றின் சம்பந்தி ஜாக்கிரதாதி மூன்று அவஸ் தைகட்கும், மூவிதக் கர்மாதிகட்கும், பரஸ்பர வியபிசாரம் யாது? அதிஷ்டாந சாக்ஷி சேதநத்திற்கு அதன்கண் அந்வயம் யாது? அதனை உத்தமாதிகாரி குருவாயிலாய் நன்றாக அந்வய வ்யதிரேகரூப யுக்தியா லறிந்து வியபிசாரியாய சர்வ பதார்த்தங்கட்கும் அஞ்ஞாந காரியத் தன்மையால் திரி கால மித்யாத்துவத்தை நிச்சயஞ்செய்க. ஓர் அகண்ட அத்துவிதீய அதிஷ்டாந அவ்வியபிசாரி சாக்ஷி சேதநத்தினது திரி கால சத்தியத் தன்மையை நிச்சயஞ் செய்க; இவ் வபிப்பிராயத் தானே ஸர்வக் கிரந்தக்காரரும் ஆரோப்பிய அநுவாத அவஸ்தை யின்கண் தத்தம் கிரந்தங்களில் இப் பதார்த்தங்களினது நிரூபணஞ் செய்கின்றனர்; அதனால், இவற்றிற்கும் இங்ஙனம் வேதாந்தத்தின் கண் உபயோகமாம். அல்லது, புண்ணியாதி மூவிதக் கர்மத்திற்கு அவற்றின் பல ரூப மூவிதப் பிராரப்தத்திற்கு வேதாந்தத்தின்கண் நிரூபணத்திற்கு இது பலமாம்:—முமுக்ஷு பாப கர்மாதிகளை ஸர்வதா அநர்த்தத்தைச்செய்வதான துக்கந் தருவதென அறிந்து ஸர்வ விதத் தும் இவற்றைத் தியாகஞ் செய்து துக்க நிவிருத்தி, சுகப் பிராப்தி யின் பொருட்டுப் புண்ணியாசாரத்தின்கண்ணே பிரவர்த்திக்க. அவஸ் யம் அநுபவிக்கத்தக்க பிராரப்தத்தாற் சம்பாதிக்கப்பட்ட இஷ்டா

நிஷ்ட அவஸ்தாப் பிராப்தியின்கண் தைரியவா னுகுக; பிராரப்த பலம் நிவாரணஞ் செய்தற்குச் சக்த மன்றுகலின். ஸ்ருக், சந்தநாதி விஷயரூப சுக சாதநத்தைப் பிராரப்தாதீநம் என அறிந்து அவற்றைச் சம்பாதித்தற் பொருட்டு யத்நஞ் செய்யற்க. சதா பகவத் அநுஸந்தாந பரனுய் இருக்க.)

## 2—11. பிரதிபந்தம்.

மூன்று விதப் பிரதிபந்தகத்தைக் கூறுவாம்:—பூத, வர்த்தமான, ஆகாமி பேதத்தால் ஞாநப் பிரதிபந்தகம் மூவகைத்தாம்:—

### (1) பூதப் பிரதிபந்தம்.

(1) அவற்றுள், ஶ்ரவண மநநாதி அநுஷ்டாந காலத்தின்கண் பூர்வம் அநுபவிக்கப்பட்ட இஷ்டமான எருமையாதி வஸ்துக்களின் மீண்டும் அநுஸந்தாநம் யாது, அது பூதப் பிரதிபந்தமாம். அது ஹிரண்யகர்ப்பாதிகளி னிடத்துப் பிரஸித்தமாம்.

### (2) வர்த்தமாநப் பிரதிபந்தம்.

(2) நான்கு வித வர்த்தமாநப் பிரதிபந்தகத்தை மேல் நான்கு எண்ணிக்கையின்கண் கூறுவாம்.

### (3) ஆகாமிப் பிரதிபந்தம்.

(3) ஞாநத்தின் பொருட்டுச் சாதந அநுஷ்டாந காலத்தின்கண் பாப கர்மத்தால் ஜநித்துக் காரியத்தா லநுமாநஞ் செய்யப்பட்ட ஒரு வஸ்துவின்கண் தயை, விசுவாஸாதிகளினல் ரூடமான ஆஸக்தியை யுண்டாக்குவதாய பிராரப்த கர்மசேஷ பிரஹ்ம லோகாதி இச்சை யாது, அது ஆகாமிப் பிரதிபந்தமாம். அது ஜட பரதாதிகளி னிடத் துப் பிரசித்தமாம். எவர்கட்கு வைராக்கியாதி பூர்வக சிரவணுதிகள் செய்யினும், யதார்த்த ஞாநம் உண்டாவ தின்றே, அதனுல், சமாதி பகிரங்க சாதநமும், சிரவணுதி அந்தரங்க சாதநமும் இருந்தும், எந்த ஜிஜ்ஞாஸுக்கு நல்ல ஞாநம் உண்டாக வில்லையோ அவனுல் அதற்குச் சாஸ்திரத்திற் புகன்ற நிவிருத்தி உபாயம் அப்பிரதிபந்த ஞாநோத் பத்தியின் பொருட்டுப் பிரதிபந்தாநுசாரம் அவசியம் செய்ய யோக் கியமாம்.



## 2—12. சம்பந்தம்.

மூன்று சம்பந்தங்களைக் கூறுவாம்:—ஸம்யோக, ஸமவாய, தாதாத்மிய பேதத்தால் சம்பந்தம் மூவகைத்தாம்; அவற்றுள், முதலதைக் கூறுவாம்:—

### (1) ஸம்யோக சம்பந்தம்.

(1) அவச்சேதக பேதத்தால் தனது அத்தியந்தாபாவத்தின் அதிகரணத் திருப்பது ஸம்யோக ஸம்பந்தமாம்; அஃது அவ்யாப்ய விருத்தியாகலின். அஃது உபயக் கிரியா ஜந்யம், அல்லது ஏகதரக் கிரியா ஜந்யமாம்; அநுயோகி பிரதியோகியாய இரண்டு திரவ்யங்களால் நிரூப்யமாம். அது ஸம்ஸர்க்கப் பிரதீதியின் ஹேதுவாம். எங்ஙனம்? இரண்டு மேஷங்களின் ஸம்யோகம் உபயக் கிரியா ஜந்யமாம். எங்ஙனம்? அஸ்த புஸ்தகத்திற்கும், பக்ஷி விருக்ஷத்திற்கும் ஸம்யோகம் ஏகதரக் கிரியா ஜந்யமாம். அஃது எதனுல் விருக்ஷத்தின் மூல தேசத்தின்கண் இன்றும், அக்கிர தேசத்தின்கண் இருப்பதாம், அதனுல் மூலத்துவ அக்ரத்வ ரூப அவச்சேதக பேதத்தால் தனது அத்தியந்தாபாவ ஸமாநாதிகரணமாம். தண்ட தேவதத்தனுக்கும், குண்டல புருஷனுக்கும் உள்ள ஸம்யோகமும், ஏகதரக் கிரியா ஜந்யமும், கிரியா ஜந்ய விபாக வாயிலாய் நாசமுமாம்.

### (2) சமவாய சம்பந்தம்.

(2) இரண்டாவதைக் கூறுவாம்:—நித்யமாய் ஒன்றுய் அநேக திரவ்யத்தில் ஸமவாயமா யிருப்பது ஸமவாய ஸம்பந்தமாம். இதனது நித்தியத் தன்மை நியாய அபிப்பிராயத்தாலாம்.

"நீல விசிஷ்ட உத்பலம்," "ரக்த படம்" என்பனவாதி குணுதி விசிஷ்டப் பிரதீதியின் ஹேதுவாம். காரியம், ஜாதி, குணகிரியைகட்குத் தத்தம் ஆசிரய திரவ்யத்தின்கண் ஸமவாயம் உண்டாகின்றது. எங்ஙனம்? தந்துவின்கண் படத்திற்கும், பிராமண வியக்தியின்கண் பிராஹ்மணத்துவத்திற்கும், படாதி திரவ்யங்களின்கண் சுக்லாதி குணங்கட்கும், கிரியாவானிடத்துக் கிரியைக்கும், அநுயோகியாகிய காரணுதிக்கும், பிரதியோகியாய காரியாதிக்கும், அவ்விரண்டால் நிரூபிக்கத் தக்கதாம்.

(3) தாதாத்மிய சம்பந்தம்.

(3) மூன்றாவதைக் கூறுவாம்:—இரண்டு பதார்த்தங்கட்குப் பிரதீதியால், அல்லது பரமார்த்தத்தால் பரஸ்பரம் அபேதம் யாது அது தாதாத்மிய சம்பந்தமாம். அல்லது, எப் பதார்த்தம் எதனினின்றும் பிரதீதியினாற் பிந்நமாம், தனது சத்தையினின்று சூநியமாம் அதற்கு அதனோடு அபேத சம்பந்தம் யாது, அது தாதாத்மிய சம்பந்தமாம். எங்ஙனம்? ரஜ்ஜுவாதி சர்ப்பாதிகட்காம். எங்ஙனம்? ஸம்ஸார தசையின்கண் ஆத்மா அநாத்மாவுக்காம். ஈண்டு, அநிர்வசநீய தாதாத்மிய ஸம்பந்தம் பிராதிபாசிகமாம். எங்ஙனம்? முத்தித் தசையின்கண் ஜீவ சேதந, ஈஸ்வர சேதநங்கட்காம். இது வாஸ்தவ தாதாத்மியமாம். வேதாந்த மதத்தின்கண் ஜாதியாதிகளின் ஸம்பந்தமும் தாதாத்மிய ஸம்பந்தமாக அங்கீகாரமாம்; ஸமவாய மன்றும்; பிரமாண யுக்திகளின் அபாவத்தால். அங்ஙனமாயினும், மந்த ஜிஞ்ஞாஸுக்களின் போதத்தின்பொருட்டு ஈண்டு ஸமவாயமும் நியாய சாஸ்திரத்தின் ரீதியாற் கூறப்பட்டது. அல்லது, காரிய காரண பாவ, விஷய விஷயி பாவ, ஆதார ஆதேய பாவமென்று இம் மூன்று சம்பந்தமாம். கடாதி காரியமாம்; மிருத்தாதி காரணமாம்; சப்தாதி விஷயமாம்; அதன் அபிவ்யஞ்ஜக அந்தக்கரண விருத்தி விஷயியாம். ஆதாரம் எள் முதலியனவாம்; ஆதேயம் தைலாதிகளாம். அல்லது, ஆதாரம் கடாதிகளாம், கடத்துவாதி ஜாதியாதிகள் ஆதேயமாம்.

அல்லது, "தத் த்வம்," என்னும் இரு பதங்களினது பிரவிருத்தி நிமித்தத்தின் பேதத்தால் ஒரே அர்த்தத்தைக் கூறுவனவாய ஸாமாநாதி கரண்ய சம்பந்தமாம்.

பரோக்ஷத்துவாதி தர்ம விசிஷ்ட சேதந, அபரோக்ஷத்துவாதி தர்ம விசிஷ்ட சேதந ரூப இரு பதார்த்தங்கட்கு இரு வாச்சியார்த்தமாம். அவ் விரண்டினது அபேத ஸம்ஸர்க்கத்தால் விசேஷண விசேஷிய பாவ ஸம்பந்தமாம்.

பதத்திற்கு, அல்லது அர்த்தத்திற்குப் பிரத்யகாத்மாவோடு லக்ஷிய லக்ஷண பாவ ரூப ஸம்பந்தமாம்.

இது மூன்றுவிதச் சம்பந்தங்களாம். (இஃது) ஆசாரியர்களால் மகாவாக்கியார்த்த நிரூபணத்தின்கண் அங்கீகாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது. இச் சர்வப் பிரகார ஸம்பந்தமும் எதனால் வைதிக வியவகாரத்தின்கண் ஆண்டாண்டு ஜிஞ்ஞாஸுக்களுக்கு அபேக்ஷை யுண்டாகின்றதோ, அதனால், அவற்றின் ஞாநத்தின் பொருட்டு ஈண்டும் கூறப்பட்டதென அறிக.



## 2 - 13 தாபம்.

மூவித தாபத்தைக் கூறுவாம்:—ஆதி வியாதி உபாதியின் பேதத்தால் தாபம் மூவகைத்தாம்.

(1) ஆதி தாபம்.

(1) சிந்தாதிரூப மநத்தின் தாபம் ஆதி எனப்படும்.

(2) வியாதி தாபம்.

(2) ஜ்வர முதலியவற்றிற்கு ஹேதுவான சரீரத்தின் தாபம் வியாதி எனப்படும்.

(3) உபாதி தாபம்.

(3) மித்திராதி சத்ருவாதி ஔபாதிக தாபம் உபாதி எனப்படும். எதனால்? மித்ராதிகளின் நீக்க ரூப, அல்லது கிடைக்காமை ரூப உபாதியால் (தாபம்) உண்டாகின்றது; சத்ரு இயற்றிய இஷ்ட நாச ரூப அல்லது பிரதிபந்த ரூப, அல்லது நிந்தாதி ரூப உபாதியால் (தாபம்) உண்டாகின்றது.

## 2 - 14 அத்யாத்மாதி தாபம்.

அத்யாத்மாதி தாபத்தைக் கூறுவாம்:—அத்தியாத்ம அதிபூத அதிதைவ பேதத்தால் தாபம் மூவகைத்தாம்:—

(1) அத்யாத்ம தாபம்.

(1) ஆத்மா வென்பது தேக அந்தக்கரண பிராணாதி இந்திரியாதி சங்காதத்திற்காம். அவற்றை ஆஸ்ரயித்து உதர சூலாதி ஜந்ய காமக் குரோதாதி வியஸந ஜந்ய தாபம் அத்தியாத்ம தாபமாம்.

(2) அதிபூத தாபம்.

(2) சிம்ஹ சத்ரு வாதி பூதங்களின் ஆசிரயத்தா லுண்டாகும் தாபம் அதிபூத தாபமாம்.

(3) அதிதைவ தாபம்.

(3) மிகுந்த வாயு வர்ஷாதிகளால் உண்டாம் தாபம் அதிதைவ தாபமாம்.

ஆதி முதலிய மூன்று தாபமும், அத்தியாத்ம, அதிபூதத்
தின்கண் அந்தர்க்கதமாமாயினும் எண்ணிக்கையின் பேதத்தாலும்
போதநப் பிரகாரத்தின் பேதத்தாலும் வேறாகக் கூறப்பட்டனவாம்.
அநாத்மாவின் தர்மமாமாயினும்,எதனால் இம் முத் தாபமும் அவிவேகி
ஜீவனுக்கு ஸர்வாவஸ்தையின்கண்ணும் தாபம் செய்கின்றனவோ,
அதனால் ஜிஜ்ஞாஸுக்களால் குருவினிடத்தினின்றும் ஆத்மாநாத்ம
விவேக வாயிலாய் நிவிர்த்தி செய்யத் தக்கனவாம்.

## 2 - 15 காரண வாதம்.

காரண வாதத்தைக் கூறுவாம்:—ஆரம்ப பரிணாம விவர்த்த
பேதத்தால் காரண வாதம் மூவகைத்தாம்.

### (1) ஆரம்ப காரண வாதம்.

(1) அநேக காரண ரூப அவயவங்களினது ஸம்யோகத்தால்
யாண்டு அத்தியந்த பிந்நமாய் ஆரம்பிக்கப்பட்ட அவயவியாய காரியத்
திரவ்யம் ஸமவாய சம்பந்தத்தால் ஸமவேதமா யுண்டாகின்றது, அது
ஆரம்ப வாதமாம்.அதன்கண் காரிய காரண இரண்டற்கும் அத்தியந்த
பேத அங்கீகாரமாம். எங்ஙனம்? கிரியா வாயிலாய் இரண்டு பரமாணுக்
களின் ஸம்யோகத்தால் பரமாணு ஸமவேத த்வி அணுகமும், மூன்று
த்வி அணுகங்களால் திரியணுகமும், கபாலங்களால் கடமும், தந்துக்க
ளால் படமும் ஆரம்பிக்கப்படுகின்றன. ஈண்டு ஸமவாயி காரணம் பர
மாணுவாதிகளாம். காரண ரூப அவயவங்களினது கிரியையால் (உண்
டாம்) ஸம்யோகம், காரணத்தின்கணுள்ள அஸமவாயி காரணமாம்.
ஈச்வரனது இச்சை குலாலன் தண்டம் சக்ரம் முதலியன நிமித்த
காரணமாம். இது நையாயிகர்களால் அங்கீகரிக்கப்பட்டதாம்.

### (2) பரிணாம காரண வாதம்.

(2) உபாதாநத்தின் சமாந சத்தை யுடையதாய் யாண்டு ஓர் அம்
சத்தினது பரிணாமத்தால் காரிய ரூப ரூபாந்தரமாக உத்பந்நமாகி
ன்றதோ, அது பரிணாம வாதமாம். அதன்கண் பரிணாம பரிணாமி இர
ண்டற்கும் அபேதம் அங்கீகாரமாம். எங்ஙனம் ? மண்ணிற்குக் கட
ரூப பரிணாமமாம்; அந்தக்கரணத்திற்கு விருத்தி ரூப பரிணாமமாம்.
பிரகிருதிக்கு மகத்தத்துவாதி ரூப பரிணாமமாம். இது சாங்கியர்க
ளினுடைய அங்கீகாரமாம்.



### (3) விவர்த்த காரண வாதம்.

(3) உபாதாந காரணமே தனது ஸ்வரூபத்தை விடாது விஷம
சத்தையால் காரிய ரூப வேறு ரூபமாக யாண்டு உண்டாகின்றதும்,
தோற்றுகின்றதும் ஆமோ அது விவர்த்த வாதமாம். எங்ஙனம் ? சுத்
தியின்கண் ரஜதத்தின் உத்பத்தி, ஸ்வர்ணத்தின்கண் ஆபரணத்
தின் (பிரதீதி), பிரஹ்மத்தின்கண் ஸ்வர்க்கத்தின் (பிரதீதி)யாம். இது
வேதாந்தத்தின்கண் அங்கீகாரமாம்.

இம்மூன்று வாதங்களில் ஆரம்ப பரிணாம மென்னும் இரண்டு
வாதமும் சுருதி யுக்திகட்கு விருத்தமா யிருத்தலின், வித்துவான்க
ளால் உபேக்ஷிக்கத் தக்கனவாம்; அங்கீகாரம் செய்யத் தக்கனவு மன்
றாம். அவற்றின்கண் பரமாணு பிரகிருதி ரூப ஜட பதார்த்தங்கட்கு
ஜகத் காரணத் தன்மை அங்கீகரித்திருத்தலின். எதனால், ஸூத்ர கா
ரர்களாலும் பாஷ்யகாரர்களாலும் "அது ஈக்ஷித்தது", "நான் அநேக
மாவேன்" என்பன வாதி சேதந காரணத்தைக் கூறும் சுருதிகளின்
பலத்தாலும், "வண்டி முதலிய ஜட பதார்த்தங்களின் பிரவிருத்தி
சேதநத்தை அதிஷ்டித்தே பார்க்கப்படுகின்றது, ஸ்வதந்தர மன்று"
என்பதாதியுக்தியின் பலத்தாலும்(ஆம்). அவற்றினது ஸவிஸ்தாரமான
கண்டநம் சாரீர மீமாம்ஸையின்கண் கூறப்பட்டிருக்கின்றது. அத
னால், ஜிஜ்ஞாஸுக்களால் இரண்டு வாதமும் சிரத்தை செய்யத்
தக்கன வன்றாம். பரிசேஷத்தால் விவர்த்த வாதமே அத்விதீய ஆத்ம
ஞானத்தின் பொருட்டு ஆதரிக்கத் தக்கதாம். "வாசாரம்பண மாத்
ரமே காரியம், காரண ரூப மிருத்திகையே ஸத்தியம்", "காரிய காரண
ங்களின் அநந்யத் தன்மை, ஆரம்பண சப்தாதி ஹேதுக்களாம்"
என்பன வாதி சுருதி ஸூத்திரங்கள் பிரமாணமாகலின்.

## 2—16. குணம்.

மூன்று குணங்களைக் கூறுவாம்:—ஸத்துவாதி பேதத்தால் பிர
கிருதியின் குணங்கள் மூவகையாம்:—

### (1) சத்துவ குணம்.

(1) விருத்தி லாப அவஸ்தையின்கண் சாந்தியாதி விருத்தி
யின் காரணப் பிரகாச மிகுந்த ஞானத்திற்கும் ஏகாக்ரத்தன்மைக்கும்
ஜநகம் ஸத்துவ குணமாம். அது ஜீவனைச் சுக ஞாந சங்கத்தால்
கட்டுகின்றது. "நான் ஸுகி, நான் ஞாநி" என்பதாதித் தனது தர்

மங்களை க்ஷேத்ரஞ்ஞ ஜீவனிடத்து அஃது ஆரோஹணஞ் செய்கின்றது என்பது தாத்பர்யமாம்.

(2) ரஜோ குணம்.

(2) கோர ராகாதி விருத்திகளின் ஹேதுவாய் சஞ்சலம் மிகுந்த அநேக விட்சேபத்தின் ஜநகம் ரஜோ குணமாம். அது திரவ்ய திருஷ்ணுதிகளால் ஜீவனைப் பந்திக்கின்றது. திருஷ்டாதிருஷ்டார்த்த கர்மத்தின்கண் ஜீவனை ஆசை யுடையவனுக அது செய்கின்றதென்பது தாத்பர்யமாம்.

(3) தமோ குணம்.

(3) மூடாதி விருத்திகளின் ஹேதுவாய் ஜாட்யம் மிகுந்த ஹிம்ஸாதிப் பிரதாநம் தமோ குணமாம். அது மோகம் ஆவரணம் பிரமாதம் ஆலஸ்யாதிகளால் ஜீவனைப் பந்தஞ் செய்கின்றது. மோகம் என்பது பிராந்தியாம். ஆவரண மென்பது ஸ்வரூபத்தை மறைப்பதாம். பிரமாத மென்பது யத்தந மின்றியதாம். அது பற்றிக் கீதையின் 14வது அத்தியாயத்தின்கண் நான்காவது சுலோகம் முதல் ஸத்துவாதி குணத்தின் லக்ஷணமும், பிரதிபந்தநமும், அவற்றின் நிவிருத்தியும், பலமுமாய வெல்லாம் விரிவாய் எழுதப்பட்டிருக்கின்றன. அதனுல், ஜிஞ்ஞாஸுவானவன் ஸத்துவ குண பரிணும ரூப சாந்தியாதிய விருத்தியை யத்தநத்தாற் சம்பாதிக்க; ரஜ தமோ குண பரிணும ரூப விருத்திகளை ஜயிக்க; அவை அநர்த்தஞ் செய்வனவாகலின்; ஸத்துவ குணம் அவற்றிற்கு விரோதியாக விருத்தலின். பின்னர்ச் சாந்தியாதி விருத்தியின்கண்ணும் அபிமாநத்தை விட்டு குணுதீத பதப் பிராப்தியின் இச்சையைச் செய்க.

## 2—17. காலம்.

மூன்று காலங்களைக் கூறுவாம்:—பூத, பாவி, வர்த்தமாந பேதத்தால் காலம் மூவகைத்தாம்:—

(1) பூத காலம்.

(1) வர்த்தமாந க்ஷணத்தின் பூர்வ மிருப்பதாய், க்ஷண முகூர்த்தாதி ரூப ஸூர்யாதி சலநத்தால் உத்பந்நமாய் அதீதக் கிரியையால் உபலக்ஷிக்கப்பட்ட காலம் பூத காலமாம்.



(2) பவிஷ்யத் காலம்.

(2) வர்த்தமாந க்ஷணத்தின்பின் உத்பத்தியாகும் யுகாதி பரியந்த காலம் பவிஷ்யத் காலமாம்.

(3) வர்த்தமாந காலம்.

(3) ஆரம்பிக்கப்பட்டு முடிவு பெருத கிரியையால் உபலக்ஷிக்கப்பட்ட காலம் வர்த்தமாந காலமாம்.

அக் காலத்தைச் சிலர் பரமேஶ்வரனது அவஸ்தை யென்றும், சிலர் பரமேஶ்வரனது சேஷ்டை அல்லது சக்தி யென்றும் கூறுகின்றனர். அது ஸ்வரூபமாக ஒன்றுமாயினும் கிரியை, அதன் ஆசிரிய த்ரவ்ய ரூப உபாதியின் பேதத்தால் பூதா (இறந்த காலா)திகளின் பெயரை அடைகின்றது. கூறிய க்ஷண ப்ரகாராதி ரூப காலம் எதனுல் பிரஹ்மாதி ஸ்தம்ப பரியந்த ஸர்வ ஜீவர்களினது ஆயுளையும் ஸம்பத்தாதிகளையும் நாசஞ் செய்கின்றது, எல்லாரையும் தத்தம் ஸ்தாநங்களினின்று சலிப்பிக்கின்றது, அதனுல், ஜிஞ்ஞாஸுவும் தனது ஆயுளையும் ஸம்பத்து முதலியவைகளையும் க்ஷணிக மென்றும் சலந மென்றும் அறிந்து ஸ்வஸ்த அவஸ்தையின்கண் சாவதாநனுய் ஜநந மரணுதி துக்க நிவிருத்தி பிரஹ்மாநந்தப் பிராப்தியின் சாதந அநுஷ்டாநத்தையே செய்க. இங்ஙனம் செய்யாக்கால் ஸமயந் தவறிவிடின், பின்னர் அநேக தாபத்தை யடைவன்.

## 2—18. மும் மூர்த்திகள்.

மும் மூர்த்திகளைக் கூறுவாம்:—பிரஹ்மாதி பேதத்தால் ஈஶ்வர மூர்த்தி மூன்றும்:—

(1) பிரஹ்மா.

(1) ரஜோகுண உபாதியை யுடையதாய், பௌதிகப் பிரபஞ்சத்தின் கர்த்தாவாய், பதினுன்கு மாநஸ புத்ரவாயிலாய், ஜகத் விருத்தியின் காரண, தர்ம உபாஸனை ஞாந மென்னும் மூன்று ஸம்பிரதாயத்தினது பிரவர்த்தகமாய், குருவுக்கும் குருவாய், நான்முகமாய், கமண்டலாதிகளை யுடையதாய், ஸ்ரீ சாவித்திரி தேவியால் சேவிக்கப்பட்ட சுத்த ஸத்துவ மூர்த்தியாய ஸத்திய லோக வாஸி பிரஹ்மா வாம்.

(2) விஷ்ணு.

(2) ஸத்துவ குண உபாதி யுடையதாய், ஸர்வப் பிரபஞ்ச ஸ்திதியின் காரணமாய், ஒவ்வொரு ஜீவர்களினது கர்ம பலத்தைத் தனித் தனி கொடுப்பதாய், ஸர்வஞ்ஞத்துவாதி தர்ம விசிஷ்ட தனது அவதார ரூப விபூதிகளால் வேத விரோதி அஸுராதி துஷ்டர்களைக் கொல்லுவதாய், ஸர்வ சாதுக்களையும் பாலிப்பதாய், அத்தியாபந மின்றி முதற் கவிபோன்று வேதத்தை விஸ்தாரஞ் செய்வதாய், நிவிருத்தி பிரவிருத்தி ரூப சநாதந (பழமையான) வேதமார்க்க ஸ்தாபகமாய், சதுர்ப்புஜமாய், பக்தரக்ஷணையின் பொருட்டுச் சங்குச் சக்ராதிகளை யுடையதாய், தன் பக்தன் பொருட்டு க்ஷீர ஸமுத்திர மதநாதி கஜேந்திர மோக்ஷாதி ப்ரஹ்லாத ரக்ஷாதி அநேக லீலைகளைச் செய்ததாய், ஸ்ரீ லக்ஷ்மியால் ஸேவிக்கப்பட்டதாய், சுநந்தநாதி பார்ஷதர்களால் சூழப் பெற்றதா யுள்ள, சுத்த ஸத்துவ வ்யக்தியாய வைகுண்ட வாசி விஷ்ணுவாம்.

(3) சிவன்.

(3) தமோ குண உபாதி யுடையதாய், ஜிஞ்ஞாஸுக்கட்கு வைராக்யாதி ஸுகத்தைக் காண்பித்தற் பொருட்டு, யாவற்றையும் தியாகஞ் செய்ததாய், கபாலம் சர்மாதிகளை யுடையதாய், சதா சமாதிப் பிரியமாய், சதி (ஸ்திரீ) யால் சேவிக்கப் பட்டதாய், பூத பைரவாதி பார்ஷதர்களோடு கூடியதாய், திரிநேத்ர முடையதாய், திரி சூல தாரியாய், தனது பக்த ரக்ஷணத்தின் பொருட்டு விஷத்தைக் குடித்தல் முதலிய தொழிலைச் செய்ததாய், ஜீவர்களது கர்மாநுஸாரமாய், பிரபஞ்ச சமுதாயத்தை நாசஞ் செய்வதாய், சுத்த சத்துவ சரீரத்தை யுடைய ஸ்ரீ கைலாச வாசி சிவனும்.

பரம காரண மாயா உபாதி யுடைய ஈச்வரனே பிரகிருதியில் லயமாய்த் தூங்குகின்ற ஜீவர்களின் பல ஸந்முக பரிபக்குவ கர்ம நிமித்தத்தால் மாயையின் பரிணம ரூப சுத்த ஸத்வமய திரி மூர்த்தியின் கண் பிரவேசித்துப் பிரபஞ்சத்தின் ஸ்ருஷ்டியாதியின் பொருட்டும் ஜீவர்களின் தர்மாதி சிரவணாதி அநுஷ்டாநத்தின் பொருட்டும் ப்ரஹ்மாதி மூன்று பேர்களை யடைந்தனன். அங்ஙனமாயினும், அத் தேவதைகளின் உபாஸகர்கள் இஷ்ட தேவதையின் கண் உத்கிருஷ்டத் தன்மையினையும், அந்ய தேவதையின்கண் நிகிருஷ்டத் தன்மையினையும் ஆரோபணஞ் செய்து பரஸ்பரம் கலகஞ் செய்கின்றனர். அஃது அவர்களின் மித்தியாப் பிராந்தியேயாம்; அவர்கட்கு உண்மையில் ஏக ஸ்வரூபமாகலின். இவ்வர்த்தம் பாகவதத்தின் நான்காவது ஸ்கந்தத்தி லுள்ள பிரதம அத்தியாயத்தின்கண் அத்ரி விஷ்ணு வாதி தேவதைகளின் ஸம்வாத ரூப இரண்டு சுலோகங்களால், அத்ரியின் பிரச்நம்:—"ஹே தேவ! நான் ஒரே ஜகப் பிரதாந பகவாந் விஷ்ணுவைச் சந்தாநோத்பத்தியின் பொருட்டுச் சித்தத்தின்கண் (உபாஸனை) செய்தேன். நீங்கள் மூவரும் எங்ஙனம் ஈண்டு வந்தீர்? ஏது மநுஷ்யர்களின் மநத்திற்கும் அகோசரமாம்? எனக்கு ஈண்டுப் பெரிய விஸ்மய முண்டாகின்றது. நீங்கள் பிரசந்நராய்க் கூறுங்கள்." தேவர்கள் கூறுகின்றார்கள்:—"ஹே பிராஹ்மண! நீ எங்ஙனம் ஸங்கற்பஞ் செய்தாயோ நாங்களும் அங்ஙனமே அங்கீகரித்தோம்; வேறு பிரகாரமா யன்றும். ஏதனால் நீ ஸத்ய ஸங்கற்பத்தின் ஸங்கற்பனே, எந்த ஒரு ஜகதீச்வர னென்னும் பெயரையுடைய தத்துவத்தினை நீ தியாநம் செய்தாயோ அதுவே நாங்கள் மூவரு மாவோம். அஃது ஒரே தத்துவமாம். எங்கட்கு உண்மையாகப் பேதம் இல்லை யென அறி" என்று கூறப்பட்டிருக்கின்றது. விஷ்ணு புராணம், பாகவத புராணங்களில் "பரம காரண ஸ்வதந்தர விஷ்ணுவே உபாஸிக்க யோக்கியமாம்; அந்ய தேவரோ, பரதந்திரரும் உபாஸிக்க யோக்கிய மின்றியவரு மாவர்" என்பதாதி நிந்தா வசநம் ஒவ்வோரிடத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே, சிவபுராணத்திலும் "சிவனே பரம காரண ஸ்வதந்தர உபாஸ்யனும்; மற்றைய தேவர் உபாசிக்கத் தகுதியற்ற பரதந்திர ராவார்" என்பதாதி நிந்தா வசநம் கூறப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே, ஹிரண்ய கர்ப்பக் கிரந்தத்திலுமாம். அந்த வசநங்கட்கு நிந்தாதியின்கண்ணும் அவர்களின் உபாஸனையின் தியாஜ்யத்தின்கண்ணும் தாத்பர்ய மன்று; பின்னையோ, விதிக்கத் தக்க அவ்வத் தேவதையின் உபாஸனையின் ஸ்துதியின்கண்ணே தாத்பர்யமாம்; "நிந்தை நிந்திக்கத் தக்கதன் நிந்தையின் பொருட்டுப் பிரவிர்த்திப்ப தன்று; பின்னையோ, விதிக்கப்படும் பொருளின் ஸ்துதியின் பொருட்டு ஆகின்றது" என்னும் நியாயத்தால். ஆதலின், அவற்றின் உபாஸகர்களின் பரஸ்பர கலகமும், விவாதமும் தமது அஞ்ஞாநத்தால் நிர்நிமித்தமாகவே யிருக்கின்றன. அவர்கட்கு ஆவரண மின்றிய ஞாநமும், சர்வ சக்தி ஸம்பந்நமும், தத்தம் பக்தர்கட்கு அபீஷ்டத்தைக் கொடுக்கும் தன்மையு

பிருத்தலான், மூவரும் உபாஸிக்கத்தக்கவர்களே ; பரம காரண ரூப மாவர். ஆதலால், நவீந அதிகாரி ஜீவராகிய அற்பஜ்ஞத் தன்மை பிரமாதாதி தோஷ முடையவர்களாலும் ருசியின் அநுஸாரமாயும், அதிகார அநுஸாரமாயும் மூன்று தேவர்களும் உபாஸிக்கத் தக்கவர்களே யாவர்; நிந்தைக்கு விஷய மல்லர் ; அவர்கள் குருவிற்கும் குருவாதலினாலும், ஸர்வ ஸம்பிரதாயப் பிரவர்த்தக ராதலினாலும், ஸநகாதி வஸிஷ்ட நாரதாதி பிரஹ்ம ரிஷி, நந்தி தேவாதி ராஜ ரிஷிகளால் ஸேவிக்கத் தக்கவர்க ளானதினாலும். சிலர் பூர்வ சஞ்சித பாபத்தால், வித்தையாதிகளின் கர்வத்தால் அவர்களை நிந்தாதிகள் செய்கின்றார்கள். அது கேவலம் தன்னைத் தோஷமுடையவனாகச் செய்கின்றது. அவர்களின் நிந்தையால் அவர்கட்கு க்ஷதி யின்றாம் ; ஆகாசத்தின்கணுள்ள வநம்போன்று. அவர்கள் ஸர்வ ஜீவர்கட்கும் பரமகுரு ஸ்வரூபமா யிருத்தலால்.

## 2—19. ஞாதாதி.

ஞாதாதிகளைக் கூறுவாம்:—ஞாதா ஞாந ஜ்ஞேயத்தின் பேதத்தால் இவை மூன்றும். இவற்றினையே திரிபுடி என்றுங் கூறுவர். மூன்று புடங்களின் ஸமுதாயம் திரிபுடி எனப்படும்.

### (1) ஞாதா.

(1) பிரமை பிராந்தி முதலிய ஞாநங்களின் ஆஶ்ரய ஜீவன் ஞாதாவாம். அவனே பிரவிர்த்தி நிவிர்த்தி உபய மார்க்கங்களில் அதிகிருதனும். விதி நிஷேதாதி வசநம் எவனை ஆஶ்ரயித்துப் பிரவிர்த்திக்கின்றது (அவனேயாம்).

### (2) ஞாநம்.

(2) பிரத்தியக்ஷாதி ஆறு பிரமாண பிரமாண ஆபாச ஸம்ஸ்காரங்களால் கிரமமாக ஜநித்த பிரமை, பிராந்தி, ஸ்மிருதி ரூப சாதாரணம் ஞாநமாம். அது ஞாதா பிரமாதாதி பத வாச்சிய ஆபாசத்தோடு கூடிய அந்தக்கரண ஆசிரிதமாம் ; ஜீவனாற் செய்யப்பட்ட ஜாக்ரம் முதலிய ஸர்வ வியவகாரத்திற்கும் ஹேதுவாம். வேதாந்த சித்தாந்தத்தில் தாத்விகப் பிரமாணம் சுருதி ஒன்றே யாம். பிரத்தியக்ஷாதி அந்நிய மெல்லாம் பிரமாண ஆபாஸமாம். அங்ஙனமாயினும், வியாவகாரிகப் பிரமாணத் தன்மையின் அபிப்பிராயத்தால் அவற்றிற்குப் பிரமாண மெனப்பட்டது.



### (3) ஜ்ஞேயம்.

(3) அந்த ஞாநத்தின் விஷயமாய் வியாவகாரிக பிராதிபாசிக பேதமாகத் தோற்றும் இருவிதப் பிரபஞ்சமும் ஜ்ஞேய மெனப்படும். பாரமார்த்திகப் பிரஹ்மமும் விர்த்தி வியாப்யத் தன்மையால் ஜ்ஞேய மெனப்படும். இங்ஙனமே, தியாதா முதலிய திரிபுடியினையும் அறிக. இத் திரிபுடியின் நிரூபணம் மேலும் ஒன்பது எண்ணிக்கையின்கணுள்ள நவ வித ஸம்ஸ்காரத்தின் நிரூபணத்தில் ஸவிஸ்தாரஞ் செய்வாம். ஈண்டுக் கூறிய உபய மார்க்கத்தில் அதிகாரி ஞாநாசிரய ஞாதா ஜீவனாம். அவன் எதுவரையில் விஷ்ணுவினிடத்தி லர்ப்பிக்கப்பட்ட நிஷ்காம கர்மரூபப் பிரவிர்த்தி மார்க்கத்தின் ஸேவை செய்து, அந்தக்கரண சுத்தி வாயிலாய் நிவிர்த்தி மார்க்க ரூப வேதாந்த சிரவணாதிகளின் அநுஷ்டாநஞ் செய்து, திரிபுடியின் அதிஷ்டாந ரூப நிர்விகாரத் திரிபுடியின் அநுகத கூடஸ்த ஸாக்ஷி சேதநமாய தனது ஸ்வரூபத்தின் ஞாநத்தினை யடைய வில்லையோ, விஷய சுகத்தின் அதீநமாயே யிருக்கின்றனனோ, அதுவரையில் அநந்த அநர்த்த துக்க ஸங்குல ஸம்ஸாரத்தி னின்றும் விடுபடுவதில்லை. அவன் சாஸ்திரத்தில் "அநேகமாய்ப் பசுவாவன்" என்று கூறப்பட்டிருக்கின்றான். ஆதலால் பசுத்தன்மைத் தோஷ நிவிர்த்தியும் மனுஷ்யத் தன்மையின் சபலத் தன்மையையு மிச்சிக்கும் அதிகாரி ஞாதாவால் அதிகாரத்தை அநுஸரித்து இரண்டு மார்க்கத்தினையும் ஸேவிப்பதே உசிதமாம்.

## 2—20. பிரபஞ்சம்.

மூன்று பிரபஞ்சத்தினைக் கூறுவாம் :—ஸ்தூல ஸூக்ஷ்ம காரண பேதத்தால் பிரபஞ்சம் மூவகைத்தாம்.

### (1) ஸ்தூலப் பிரபஞ்சம்.

(1) பஞ்சீகிருத பஞ்ச பூத காரியமாய் அபிவியக்த நாமரூப முடைய சதுர்த்தச புவநமும், அவ்வப் புவநத்திற்கு உசித ஸ்தூல போகாயதந சதுர்வித சரீரமும், அவ்வச் சரீர உசித அந்நபாநாதி போகமும் ஆகிய இவை யெல்லாம் ஸ்தூலப் பிரபஞ்சமாம்; சக்ஷுராதி இந்திரிய கோசரமா யிருத்தலின்.

(2) ஸூக்ஷ்மப் பிரபஞ்சம்.

(2) அபஞ்சீகிருத பூதங்களின் காரிய அந்தக்கரண சதுஷ்டயமும், பஞ்சப் பிராணனும், தசேந்திரியமும், சதுர்த்தச தேவதைகளுமாகிய இவ் வெல்லாம் போகத்தின் சாதநமாய ஸூக்ஷ்மப் பிரபஞ்சமாம்; சக்ஷுராதி அகோசரமா யிருத்தலின்.

(3) காரணப் பிரபஞ்சம்.

(3) மாயா அவித்தையாதி நாமத்தினை யுடைய அஞ்ஞாநம் இரண்டு பிரபஞ்சத்திற்கும் காரணமாம். அது காரணப் பிரபஞ்சமாம்.

முற் கூறிய மகாப் பிரபஞ்ச ஆந்தர பாஹ்யப் பிரபஞ்சங்களின் லக்ஷண நிருபணத்தால் இம் மூவிதப் பிரபஞ்சத்தின் லக்ஷண நிரூபணம் சித்தமா யிருத்தலின், புனருக்தியி (கூறியது கூறலி)ன் பிரஸங்கத்தால் இதற்கு வேறு லக்ஷணஞ் செய்யப்பட்டது.

அல்லது, ஈஸ்வரனாற் கற்பிக்கப்பட்ட வியதாதி (ஆகாசாதி) ஸ்தாவராந்தப் பிரபஞ்சம் ஸ்தூலப் பிரபஞ்சமாம். அது ஜீவர்களின் மோக்ஷ மார்க்கப் பிராப்தியில் ஸாதகமாம்; குரு சாஸ்திராதி ரூப ஞாந ஸாமக்கிரியை யுடைமையா யிருத்தலின்.

ஜீவனால் மிருது தீவிர பேதத்தால் கற்பிக்கப்பட்ட இருவித மாநஸப் பிரபஞ்ச விஷயாகார புத்தி, வாஸநா ரூபங்கள் யாவை அவை ஸூக்ஷ்மப் பிரபஞ்சமாம். எது ஜீவத்வைத மென்றும், மநோ மய ஸிருஷ்டி என்றுங் கூறப்படுகின்றது, அதுவே மோக்ஷ மார்க்கப் பிராப்தியின்கண் ஜீவனுக்குப் பாதகமாம்; இராகத் துவேஷாதி, காமக் குரோதாதி வாயிலாய் அநந்த துர்த்தசைக்கு ஹேதுவா யிருத்தலின்.

இரு விதப் பிரபஞ்சத்தின் காரணமாய அஞ்ஞாநாதி சப்த வாச்சிய மாயை காரணப் பிரபஞ்சமாம்; இருவிதப் பிரபஞ்சத்திற்கும் ஹேதுவா யிருத்தலின், இதுவும் பிரபஞ்ச மெனப்படுகின்றது.

அல்லது, நாநாவித ஸ்பஷ்ட ஸுக துக்கத்தின் ஹேதுவாய ஸ்திரீ புத்ராதி ரூப ஜாக்ரப் பிரபஞ்சம் ஸ்தூலப் பிரபஞ்சமாம். வாஸநாமய ஸுக துக்கத்தின் ஹேதுவாய ஸ்திரீ புத்திராதி ரூப ஜக்ரப் பிரபஞ்ச சமான ஸ்வப்நப் பிரபஞ்சம் ஸூக்ஷ்மப் பிரபஞ்சமாம்.



இவ் விரண்டன் உத்பத்தி லயத்தின் ஸ்தாநம் காரணப் பிரபஞ்சமாம்.

இத் தூல, ஸூக்ஷ்ம, காரணமாய்க் கூறப்பட்ட மூவிதப் பிரபஞ்சமும் மாயையின் காரியமா யிருத்தலின், அஸத் ஜட துக்க ரூபமாகச் சர்வ அநுபவ சித்தமாம்; எதனால் ரோகாதிகளால் நாசமாகின்றது, அல்லது ஞாநத்தால் பாதிக்கப்படுகின்றது, அதனால் அஸத் ரூபமாம்; எதனால் ஸ்வ பர ஞாந மின்றும், சேதந மின்றிப் பிரதீதி இன்றும் அதனால் ஜடமாம்; எதனால் இஷ்டம் வியோகமான காலத்திலும் துக்க பரிணாம காலத்திலும் பிரதிகூலமாக விளங்குகின்றது, அதனால் துக்க ரூபமாம். அங்ஙனமாமாயினும், அவை அவிவேக தசையில் ஜிதேந்திரிய னல்லாத புருஷனுக்குப் பூர்வ பூர்வ ஸமஸ்காரத்தால் சத், சேதந, ஸுக ஸ்வரூபமாய் விளங்குகின்றன, அதனாலேயே ஜீவர்கள் குருசாஸ்திராதிக ளிருந்தும் விஷயஸுக ஸம்பாதநத்தின் பொருட்டே பெரும் பிரயத்நம் செய்கின்றனர். அஹோ ! பகவானது மாயையின் வைபவம்! அது தனது ஸாமர்த்தியத்தால் ஸத்தை அஸத்துப் போன்றும், அஸத்தை ஸத்துப் போன்றும் செய்து விடுகின்றது; பரதந்திர சேதந அதீநமா யிருந்தும் ஸ்வதந்தரம் போன்று சேதந புருஷனைத் தனது அதீநமுடையவனாகச் செய்கின்றது. இதனைத் தாண்டுதற்கு உபாயம் பகவத் பிரீதிரூப பக்தி யன்றி அஹோராத்ரம் செய்யப்பட்ட யஞ்ஞ தாந தீர்த்த தபாதிக ளன்று; "ஈண்டு எனது தைவீ மாயை முக்குண ரூபமா யிருத்தலின், கடத்தற் கியலாதாம். ஹே அர்ஜுந ! எப்புருஷன் என்னையே பஜநஞ் செய்கின்றான் அவனே இம் மாயையினைக் கடப்பன்" என்னும் கீதையின் பிரமாணத்தால். ஆதலால், பிரபஞ்சத்தின்கணுள்ள சத் புத்தியினை நிவிர்த்தித்தற் பொருட்டு அதிகாரிகளால் பகவத் பக்தியாதி ஸாதந ஸமூஹமே அநுஷ்டித்தற்கு யோக்கியமாம்; லோகத்திலுள்ளவர்களின் சித்தத்தைக் கிரஹித்தல், போஜநம், வஸ்திரம், ஸந்மாநம் முதலியவற்றின் பொருட்டு அவர்கள் பிரவிர்த்திப்பது உசித மன்று.

2—21. லோகம்.

மூன்று லோகத்தினைக் கூறுவாம்:—பாதாளாதி பேதத்தால் லோகம் மூ வகைத்தாம்.

(1) பாதாள லோகம்.

(1) ஜீவர்களின் போகஸ்தாநமாய் அந்நபாநாதி நாநா ஸாமக்கிரியைகளோடு கூடி மணியாதிப் பிரகாசத்தையுடைய அதலாதி பாதாள பரியந்தம் பாதாள லோகமாம். எதனுல் பலி முதலிய தைத்ய, தாநவ, நாகாதியர் நாநா ஐஶ்வரிய மாயா பல வீர்ய கதி யுடையவர்களா யிருக்கின்றனர், ஆண்டுச் சில பூமியின் விவ (த்வா) ரத்தில் நரக லோகத்தவர் பாபத்தின் பிரபாவத்தால் அநந்த யம பீடையை யடைகின்றனர்; சில பூ விவரத்தில் புண்ணியத்தின் பிரபாவத்தால் தைத்தியாதியர் அநந்த ஸுக ஸம்பத்தை யடைகின்றனர்.

(2) மிருத்யு லோகம்.

(2) மிஶ்ர கர்மத்தினை யுடைய ஜீவர்களின் போக பூமியாய் அநேகவித ஸுக துக்கத்தின் ஹேதுவாய், நாநா ஸாமக்கிரியை யுடையதாய் ஸூர்யாதி ஆலோகத்தை யுடையது மிருத்யு லோகமாம். மிருத்யு லோகத்தின்கண்ணே கர்மாதிகாரம் இருத்தலின், யாண்டு மரண சில மநுஷ்யர், திர்யக்காதி ஜீவர், தத்தம் கர்ம பல போகத்தின் பொருட்டு வஸிக்கின்றனர்? பூர்வ பூர்வ வாஸநாநுஸாரம் கர்மங்களையுஞ் செய்கின்றனர்.

(3) சுவர்க்க லோகம்.

(3) புண்ணியத்தைச்செய்தஜீவர்களின் விஷய ஸுகாநுபவத்தின் ஸ்தாநமாய், காமதேநு, கல்பதரு முதலிய நாநா விபூதி யுடைத்தாய்ப் புண்யோத்கர்ஷத்தால் அடைந்த நாநா ஆலோக விசிஷ்டமாய், இந்திர லோகாதி ஸத்ய லோக பரியந்தம் ஸ்வர்க்க லோகமாம். யாண்டு ஆஜாந தேவர், கர்ம தேவர், மஹா தேவர், கந்தர்வர், பிதிரர், சித்தாதி அநந்தவிதத் தேவதைகளும், ரிஷி முநி வர்க்கங்களும், ஊர்வசியாதி அப்ஸர ஸ்திரீகளும், தம் புண்ணிய பல போகத்தின் பொருட்டு வஸிக்கின்றனர்? அவர்களுள் எவர்கள் ஞாநோபாஸநைகள் இன்றியவர்களோ அவர்கள் கேவலம் புண்ய கர்ம பல ஸுகாநுபவத்தின் பொருட்டுச் செல்லுகின்றனர். அவர்கள் போகத்தை யநுபவித்துப் புண்ணியம் க்ஷயமாயின் மீண்டும் கீழே விழுகின்றனர். நிஷ்காமபுண்ய உபாஸநைகளால் ஆண்டுச் செல்பவரோ ஸுக போகத்தின் அநந்தரம்



பிரஹ்மாவுடன் விதேக கைவல்யத்தையு மடைகின்றனர். அவர் மீண்டும் ஸம்ஸாரத்தின்கண் வருவ தில்லை.

இது மூன்று லோக மெனப்படும். இதனையே "மூன்று ஜகத்" என்றுங் கூறுவர். இந்த லோகங்களின் நிருபணம் மேல் ஏழு எண்ணிக்கையின்க ணுள்ள பதார்த்த நிருபணத்தின்கண்ணும் விஸ்தாரமாக விளம்பப்படும்.

புண்யவான்கள் பூர்வஞ் செய்த புண்யத்தின் உத்கர்ஷத்தால் ஸ்வர்க்காதி லோக ஸம்பந்தி, பாதாள ஸம்பந்தியாய ஸம்பத்தினைக் கிஞ்சித் காலம் அநுபவிக்கின்றன ராயினும், காலத்தினது பயத்தினின்றும் கீழேவிழும் பயத்தினின்றும் மீண்டும் ஜந்மத்தினது பயத்தினின்றும் விடுபடுவதில்லை. அதனுல், முமுக்ஷுக்களால் நிஷ்காம புண்யமே ஸம்பாதிக்க யோக்கியமாம்; எதனுல் விஷ்ணுவின் பிரஸாத வாயிலாய்ப் பரம்பரையாக மோக்ஷத்தின் பிராப்தியும் காலாதி பயத்தின் நிவிர்த்தியும் உண்டாகின்றன?

**2—22. ஞாநப் பிரதிபந்தம்.**

ஞாநத்தின் மூவிதப் பிரதிபந்தகத்தினைக் கூறுவாம்:—ஸம்ஶயம் அஸம்பாவனை விபரீத பாவனையின் பேதத்தால் பிரதிபந்தம் மூவகைத்தாம்.

(1) ஸம்ஶயம்.

(1) அவற்றுள், முதலதைக் கூறுவாம்:—தர்ம உபாஸனை ஞாந போதக பரஸ்பர விருத்த நாநா சுருதிகளின் சிரவணத்தாலும், அவற்றினர்த்தத்தைப் பிரதிபாதிக்கும் யோக, யக்ஞ, தாந, தீர்த்தாடநாதிகட்குத் தத்தம் மதத்தின்கண் சிரேஷ்டத் தன்மையினைக் கூறும் ஸ்வபாவத்தினை யுடைய ஜைமிநி, கபில, பதஞ்சலி, கௌதமாதி ரிஷிகளின் நாநாவிதப் பரஸ்பர விருத்த மார்க்கங்களைப் பிரதிபாதிக்கும் வசநங்களின் சிரவணத்தாலும், பூர்வார்ஜித பாபத்தால் மந்த ஜிஞ்ஞாஸுவின் சித்தத்தில் உண்டாகும் வேதாந்த அர்த்தத்தின்கண் "இப் பக்ஷம் சிரேஷ்டமா? அன்று?" என்னும் ஆகாரமுடைய விருத்த இரண்டு கோடிகளைக் கிரஹிக்கும் பிராந்தி ஞாநம் சிரவணாதிப் பிரவிர்த்தியின் பிரதிபந்தகமாம்; அது பிரதம ஞாநப் பிரதிபந்தகமாம்.

### (2) அஸம்பாவனை.

(2) இரண்டாவதனைக் கூறுவாம்:—பிராந்தி காலத்தில் தன்
புத்தியின் தோஷத்தால் இஷ்ட அநுகூல புத்தியின் விஷய
ஸ்திரீ தநாதிகளின் தியாகத்தின் பயத்தால், அல்லது தியாகத்தின்
ஸகநமின்மையால், அல்லது ஞாநாதிகாரத்தின் துர்லபத் தன்மையால்
ஸர்வ ஸாதந புண்யத்தின் பலரூப அத்விதீயப் பிரஹ்மாத்ம ஞாந
மார்க்கத்தில் விஷய ஸுகத்தைக் கொடுக்கும் "யஞ்ஞ யாகாதிகள்
அநுஷ்டிக்கத்தக்கவை நிர்விஷய மோக்ஷ மார்க்க மன்று" என்பதாதி
யாக உண்டாம் விருத்த நிச்சய ஞாநம் விமுகத் தன்மையின் ஹேது
வாம்; அது த்விதீய ஞாநப் பிரதிபந்தகமாம்.

### (3) விபரீத பாவனை.

(3) மூன்ருவதனைக் கூறுவாம்:—அநாதி ஸம்ஸாரத்தில் பூர்வ
பூர்வ அத்தியாஸத்தின் திட தர வாஸனையால் உண்டாகும் அநந்த
அநர்த்த துர்த்தசையினை யடைவிக்கும் தேகாதி அநாத்ம பதார்த்
தத்தில் "இது யான், இது எனது" என்பதாதி அஹம் மம அபிமா
நம் மூன்ருவது ஞாநப் பிரதிபந்தகமாம்.

இவற்றுள், ஒன்று யிருப்பினும் யதார்த்த ஞாநம் உண்டாவ
தின்று; "அஞ்ஞ அஶ்ரத்தாநு ஸம்ஶயாத்மா நாசத்தை யடை
கின்ருன்" என்னும் கீதையின் வசநத்தால். ஆதலால், நான்கு சாதநங்
களோடு கூடிய ஜிஞ்ஞாஸு பிரஹ்ம ஶ்ரோத்திரிய, பிரஹ்ம நிஷ்ட
குரு வாயிலாய், வேதாந்த விசாரரூப சிரவணத்தை மீண்டு மீண்டுஞ்
சேவித்து முற்புகன்ற ஸம்ஶயத்தினை நிவிர்த்திக்க. ஜைமினி முதலிய
பரீக்ஷகர்கள் உளறும் வசநங்கட்குச் சுருதி தாத்பர்யார்த்த ஞாநத்தின்
சூந்யத் தன்மையால் (அவற்றை) நிர்மூலமும் அப்பிரமாணமு மென
அறிக.

சுருதியின் விரோத மின்றிய யுக்திகளால் அத்விதீயப் பிரஹ்
மாத்ம தத்வத்தின் மீண்டு மீண்டும் சிந்தநரூப மநநத்தால் அஸம்
பாவனையினை நிவாரணஞ் செய்க. அத்விதீய ஆத்ம ஸுகத்தின் பிந்ந,
விஷய ஸுக அதன் சாதநங்களை நீரசமும், அஸாரமும், மித்தையு
மென அறிக.



பிரஹ்மாத்ம ஏகத்துவ விஷய, தாரையாகச் செல்லும் விருத்தி
களின் பிரவாக ரூப நிதித்தியாஸநத்தால் விபரீத பாவனையினை
நிவாரணஞ் செய்க. தேஹக் கிருஹாதிகளில் அஹம் மமத் தன்மையை
அவித்தை கற்பித்த அத்தியாஸாதீந மென அறிக; அவை உண்மை
அன்று.

## 2—23. வாசனை.

மூன்று வாஸனையினைக் கூறுவாம்:—லோக தேஹ சாஸ்திர
வாஸனையின் பேதத்தால் வாஸனை மூவகைத்தாம்.

### (1) லோக வாசனை.

(1) அவற்றுள், முதலதைக் கூறுவாம்:—பரஸ்பர விஷம முள்ள
ஸ்வபாவ முடைய நாநாவிதமான புருஷர்கள் எல்லோரும் "எங்ஙனம்
என்னை நிந்தை செய்யாது ஸ்துதி செய்வார்களோ, அங்ஙனமே நான்
குணங்களைத் தரித்து விளங்குவேன்" என்று இங்ஙனம் ஸர்வ ஜநங்
களையும் பிரஸந்நம் செய்தற்குச் சித்தத்தின்கண்ணுள்ள அபிநிவேசம்
அல்லது வியஸநம் லோக வாஸனையாம்.

அல்லது, தந முடையவன், லௌகிகத்தில் பெருந்தன்மை யுடை
யவன், தாமஸி, ராஜஸி, தர்ம ஸம்பந்நனுய் ஸர்வ அதிகாரத்தினின்
றும் நீக்கப்பட்டவனென்னுமிவர் ஸத் புருஷர்களால் ஆதரிக்கப்பட்டவ
ரல்லர். அங்ஙனமாயினும், அவர்களின் அநுஸாரத் தன்மை, அதீநத்
தன்மை ஆதராதிகளின் பொருட்டுத் தந முதலியன அடைவதற்காகச்
சித்தத்தின்கணுள்ள வாசனை அபிநிவேசமாம். அபிநிவேச மென்பது
அவர்களின் அநுஸாரமாக உண்டாகும் தனது கதை கீர்த்தநம் முத
லிய சேஷ்டைகளாம்; அது லோக வாஸனை எனப்படும்.

அல்லது, பெரிய பெரிய தநாட்டியர்களை வசஞ் செய்தற்பொருட்
டுத் தன்னிடத்தில் அவர்கட்கு விஶ்வாஸ முண்டாகும்பொருட்
டுத் தம்பபூர்வகமாக பாகண்ட ஸமாதியின், அல்லது மலிந மந்த்
ராதிகளின் ஸேவநத்தின், அல்லது தபஸ் முதலிய உதாரத்
தன்மை, தர்மாநுஷ்டாநத்தின் வியஸநம் லோக வாஸனையாம்; அது
மாநி, பாஷண்டி, தம்பி என லோகத்தில் பிரசித்தமாம். "சப்த
சாஸ்திரத்தில் ரமிப்பவர்களுக்கு மோக்ஷ முண்டாவ தின்று; போஜ

நம் வஸ்திரம் இவற்றில் தத்பரரா யிருப்பவர்க்கும் மோக்ஷ முண் டாவ தின்று; உலகத்தி லிருப்பவர்களின் சித்தத்தினைக் கவர்வதில் ரமிப்பவர்க்கும் மோக்ஷ முண்டாவ தின்று; ரமிக்கத்தக்க வீட்டில் பிரிய முடையவர்க்கும் மோக்ஷ முண்டாவ தின்று'' என்னும் வச நத்தாலும், ''லோகத்திலுள்ளவர்களெல்லாம் பூஜித்தற்கு ஸாமர்த் திய முடையவராக யா ரிருக்கின்றனர்?'' என்னும் நியாயத்தாலும் லோக வாஸனை சம்பாதனை செய்தற்கு அசக்யமாயும், புருஷார்த்த அநுபயோகியாயும், கீழே விழுதற்கு ஹேதுவாயும் இருத்தலால் முமுக்ஷுக்களால் ஸதா தியாகித்தற்கு யோக்யமாம்.

(2) தேக வாசனை.

(2) தேக வாஸனையினைக் கூறுவாம்:—மல மூத்ராதிகளால் பூர் ணமாய், அஸ்தி மாம்ஸ மேதை மஜ்ஜை முதலியவற்றால் சுற்றப்பட்ட தாய், ஸதா அமங்கல ரூப அநாத்மாவாகிய தேகத்தினைப் பூர்வ பூர்வ பிராந்தியால் தனது ஸ்வரூபமாக அங்கீகரித்து, அதன் போஷண, மல நிவிர்த்தி, குணத்தைக் கொண்டு வருதலாதியாகச் சித்தத்தின்க ணுள்ள அபிநிவேசம் தேஹ வாஸனையாம். தேஹத்தின்கண் ஆத்மத் தன்மைப் பிராந்தி விரோசநாதிகளிடத்துச் சுருதிப் பிரசித்தமாம். அநாசாராதிகளாலும் நாநாவித அந்நபாநாதி போகங்களாலும் சரீரத் தின் பாலநம் போஷணமாம்.

ஔஷதங்களால் வியாதியாதிகளின் நிவிர்த்தி, தைலாதி மர்த்த நம், ஸ்நாந, ஆசமநாதிகளால் தேஹத்தின் பிரக்ஷாளநம் அல்லது அசௌசம் முதலியவற்றை நிவர்த்தித்தல், லௌகிக சாஸ்திரீய மாய இருவித மல நிவர்த்தியாம்.

கங்காதி ஸ்நாநம் தேவ பூஜை ஸாளிக்கிராமம் தீர்த்தாதி ஸம் பாதநம் சாஸ்திரீய குண ஆதாநமாம். நாநாவித ஸுகந்தங்களைப் பூசிக்கொள்ளுதல் நாநாவித வஸ்திரங்களைத் தரித்தல் அல்லது நல்ல சப்தாதி விஷயங்களைச் சம்பாதித்தல் லௌகிக குண ஆதாநமாம். இச் சர்வ குண ஆதாந (ஸம்பாதந) மும் ஸம்ஸ்கார மெனப்படும். அந்த மூவிதத் தேஹவாஸனை கர்மி விஷய லம்படன் பாமர னென்னு மிவர்க ளிடத்து லோகப் பிரஸித்தமாம். ''தேஹத்தில் ஆத்ம புத்தியால் ஜநித்த பாபம், கோடி பசுக்களைக் கொன்றதனானு முண்டாவ தின்று,



''தேஹாதி ஸங்காதங்களினின்று பின்னமாய ஆத்மாவினைத் தேஹாதி களின் ஸங்காத ரூபமாக அறிபவன் திருடனாவன்; ஆத்மாவைக் கொன்றவனாவன்; அவனால் செய்யப்படாத பாபம் யா துளது?'', என்பனவாதி வசநங்களால் தேஹவாஸனை அநர்த்த ஹேதுவாயும், பிரமாண மின்றியதாயும், அசக்யமாயும், புருஷார்த்த அநுப யோகி யாயு மிருத்தலால் அதியத்தநத்தால் ஜிஞ்ஞாஸுக்களால் தள்ளத்தக்க தாம்.

(3) சாஸ்திர வாசனை.

(3) சாஸ்திர வாஸனையைக் கூறுவாம்:—பாட வியசந, அநுஷ் டாந வியசந, அர்த்த வியஸந பேதத்தால் சாஸ்திர வாஸனை மூவகைத் தாம்.

(i) பாட வாசனை.

(i) நான் ஜீவிக்கும் வரையில் வேதம் முதலிய பாடங்களையே செய்வேன் எனச் சித்தத்தின்கணுள்ள அபிநிவேசம் பாட வாஸனை யாம். அது பாரத்வாஜரிடத்துப் பிரஸித்தமாம்.

(ii) அநுஷ்டாந வாசனை.

(ii) திரவ்ய, தேச, கால, மந்திர, ரித்விக்காதிகளின் சுத்தி பூர் வகம் நான் சுருதியாதிகளால் போதிக்கப்பட்ட கர்மத்தினையே சதாச் செய்வேன் எனச் சித்தத்தின்கணுள்ள அபிநிவேசம் அநுஷ்டாந வாஸனையாம். அது ராஜா நிதாகாதிகளிடத்துப் பிரஸித்தமாம்.

(iii) அர்த்த வாசனை.

() தர்ம, நியாய, சாங்கிய, பாதஞ்சல பூர்வோத்தர மீமாஞ்சா, வியாகரண, காவ்ய, கோச, புராணாதி சாஸ்திரத்தின் அர்த்தத்தினை நான் ஸதா ஸம்பாதிப்பேன் எனச் சித்தத்தின்கண்ணுள்ள அபிநிவேசம் அர்த்த வாஸனையாம். அது நாரதாதிகளிடத்துப் பிரஸித்தமாம். இந்த நாரதர் அநந்த வித்தையினை அர்த்தத்தால் தாரணஞ்செய்தும் சோக முடையவராய்ப் பிரஹ்மாத்ம தத்வத்தின் ஞாநத்தின் பொருட்டு ஸநத்குமாரராகிய தமது குருவினிடத்துச் சென்று ''ஹே பகவந்! யான் சோக முடையேன், என்னைச் சம்சாரத்தினின்றுங் கடப்பியும்'' என்று கூறினர். அப்பொழுது ஸநத்குமாரர் பூமாப் பிரஹ்மத்தின் வித்தையினை அவருக்கு உபதேசஞ் செய்தனர். இப்பிரஸங்கம் சுருதி

யின்கண் பிரஸித்தமாம். "சாஸ்திரமோ அநந்தமாம். அதன் அர்த்தத்தை அறிவதும் அநேகப் பிரகாரமாம். ஜீவிக்கும் காலம் அற்பமாம். அதிலும் விக்நம் பலவாம். அதனால், ஸர்வத்திலும் ஸாரரூபம் பிரஹ்மாத்மாவின் ஏகத்துவமாம். அதுவே முமுக்ஷுக்களால் உபாஸிக்கத் தக்கதாம். எங்ஙனம் ஹம்ஸமானது ஜலங் கலந்த க்ஷீரத்தினின்றும் க்ஷீர ரூப ஸாரத்தினைக் கொள்ளுகின்றது." என்பதாதி வசநத்தால் சாஸ்திரார்த்தத்தின் வியஸநம் புருஷனது ஆயுளாலும் பூரண மின்றியிருத்தலின். அது கிலேச ஹேதுவாயும், புருஷார்த்த அநுபயோகியாயும், தர்ப்ப ஹேதுவாயும், ஜந்ம ஹேதுவாயு மிருத்தலான் முமுக்ஷுக்களால் சாராம்சத்தின் ஸேவநஞ் செய்வதே யோக்கியமாம். கேவல ஶுஷ்க பாண்டித்தியத்தின் பொருட்டு யத்நம் செய்யத்தக்க தன்றாம்; அது லௌகிக, சந்மாந, பூஜை, கர்வ, பராபவத்தின் ஹேதுவா யிருத்தலின்.

**2** - 24 ஶ்ரவணாதி.

ஶ்ரவணாதிகளைக் கூறுவாம்:—ஶ்ரவண மநந நிதித்தியாஸநத்தின் பேதத்தால் ஶ்ரவணாதி மூ வகையாம்.

(1) சிரவணம்.

(1) உபநிஷத்துக்கட்கு ஸ்வத சித்தப் பிரஹ்மாத்ம ஏகத்துவத்தில் தாத்பர்யத்தினை நிர்ணயஞ் செய்யும் உபக்ரம உபஸம்ஹாராதி ஷட்வித லிங்கங்களால் குருமுக வாயிலாய்த் தாத்பர்யார்த்தத்தின் அவதாரண (நிச்சய) ரூப சித்தத்தின் வியாபாரம் சிரவணமாம். எதனை வேதாந்த விசார மென்று கூறுகின்றனர்? அது "கேட்கத் தக்கது" என்பதாதி நித்திய விதி வாக்கியத்தால் விஹிதமாம். கேவல வேதாந்த சாஸ்திரத்தினைப் படித்தல் சிரவண மன்றாம். அல்லது, ஏகத்துவ விரோதி, பஹிர்முகத்தன்மையின் ஹேதுவாய த்வைத சாஸ்திரத்தினைக் குருவினிடத்துப் படித்தல் சிரவண மன்றாம்.

(2) மநநம்.

(2) ஏகத்துவ ரூப வேதாந்தத்தின் தாத்பர்யார்த்த ஸம்பாவனையின் பொருட்டுச் சுருதிமூல அவிரோதி யுக்திகளால் மீண்டு மீண்டும் அவ்வர்த்தத்தின் சிந்தநம் மநநமாம். அது "மநநஞ் செய்க" என்பதாதி அங்க விதியால் விஹிதமாம். சுருதி விருத்தமாய்ப் புருஷர்களால் கற்பிக்கப்பட்ட நிலையற்ற ஶுஷ்க தர்க்க விசிஷ்ட நியாய ஸாங்கியாதி சாஸ்திரார்த்தத்தின் சிந்தநம் மநந மன்றாம்; அவை அத்வைதத்தின் விரோதிகளா யிருத்தலின்.



(3) நிதித்தியாசநம்.

(3) விஜாதீய விர்த்திகளின் திரஸ்கார பூர்வகம் சிரவண மநநங்களால் ஸம்பாவிக்கப்பட்ட பிரஹ்மாத்ம ஏகத்துவ ஆகார ஸஜாதீய விர்த்திகளின் பிரவாகம் நிதித்தியாஸநமாம். அது "நிதித்தியாஸநம் செய்க" என்னும் அங்க விதியால் விஹிதமாம். மித்தியா பலத்தைக் கொடுக்கும் அந்ய தேவதாதிகளின் தியாநம் நிதித்தியாஸந மன்றாம்.

**2** - 25 ஶ்ரவணாதிகளின் பலன்.

ஶ்ரவணாதிகளின் பலனைக் கூறுவாம்:—ஸம்ஶயாதி நிவிர்த்தி பேதத்தால் ஶ்ரவணாதிகளின் பலன் மூ வகைத்தாம்.

(1) சிரவண ஜந்ய ஞாநத்தால் முற் புகன்ற பிரமாணகத, பிரமாண ஜந்ய, பிரமாகத ஸம்ஶய அஸம்பாவநா ரூப ஞாநப் பிரதிபந்தகத்தின் நிவிர்த்தி, சிரவணத்தின் பலமாம்.

(2) மநநத்தால் முற் புகன்ற பிரமேயகதநாநாவித ஸம்ஶய அஸம்பாவனைகளின் நிவிர்த்தி, மநநத்தின் பலமாம்.

(3) நிதித்தியாஸநத்தால் முற் புகன்ற ஸர்வ விபரீத பாவனையின் நிவிர்த்தி, நிதித்தியாஸநத்தின் பலமாம். ஶ்ரவணாதிகள் ஸம்ஶய விபரீத பாவனை சுருதி நாநாத்வ குதர்க்காதி எல்லாப் பிரதிபந்தக நிவிர்த்தி வாயிலாயே ஞாநாதிகளில் உபயோகமாம். ஸாக்ஷாத் தன்றாம்; ஏனெனின், பிரமையினை யுண்டாக்கும் பிரமாண ஸ்வரூபத்தன்மை யின்மையின். ஸாக்ஷாத்தோ பிரதிபந்த மின்றிய வாக்கிய ரூப பிரமாணமே ஞாநத்தின் ஜநகமாம்.

**2** - 26 ஞாநாதி.

ஞாநாதிகளைக் கூறுவாம்:—ஞாநம் வைராக்யம் உபரதியின் பேதத்தால் ஞாநாதி மூ வகையாம்.

(1) ஞாநம்.

(1) தத் த்வம் பதார்த்தங்களின் சோதந பூர்வகம் குரு உபதேசித்த விசாரிக்கப்பட்ட மஹா வாக்கியத்தால் உண்டாகும் பிரஹ்மாத்ம ஸாக்ஷாத்காரம் ஞாநமாம்.

(2) வைராக்யம்.

(2) இக லோக பர லோக விஷயங்களில் அநர்த்த புத்தியை ஹேதுவாக வுடைய தோஷ திருஷ்டி மித்தியா புத்திகளால் இச்சையின் அபாவம் வைராக்யமாம்.

(3) உபரதி.

(3) சித்தத்தின்க ணுள்ள லௌகிக வைதிக ஸர்வ வியவகாரத்தின் அபாவம் அல்லது விஸ்மிருதி உபரதியாம்.

**2**—27. ஞாநாதிகளின் ஹேத்வாதி.

ஞாநாதிகளின் ஹேத்துவாதிகளைக் கூறுவாம்:—ஹேது ஸ்வரூப பல பேதத்தால் ஹேத்துவாதி மூ வகையாம்.

(1) தத்துவமஸ்யாதி மஹா வாக்கியம், சுரோத்திரியப் பிரஹ்ம நிஷ்ட குருமுக வாயிலாய்ச் சிரவணஞ் செய்யப்பட்டு அந்தக்கரண சுத்தி முதலிய பரம்பரையால் ஞாநத்தின் உத்பத்தியில் ஸாக்ஷாத் ஹேதுவாம். எதனால் அந்தக்கரண சுத்தி, விஷ்ணுவின் பிரஸாதம் விஷயத்தில் தோஷதிருஷ்டி மித்தியா புத்தியின் வாயிலாய் வைராக்யாதிகட்கு ஹேதுவாம். வைராக்யாதி நான்கும் குருவின் ஸமீபத்திற் செல்லுதல் வாயிலாய்ச் சிரவணாதிகட்கு ஹேதுவாம். சிரவணாதிகள் ஸம்ஸய விபரீதபாவநா ரூபப் பிரதிபந்தக நிவிர்த்தி வாயிலாய் ஞாநத்திற்கு உபயோகியாம்; ஸாக்ஷாத் ஹேது வன்று; அவை அப்பிரமாண ரூபமா யிருத்தலின், மஹா வாக்கியப் பிரமாணத்திற்கே பிரமாண ஜநகத்தன்மை யிருத்தலின், இது ஞாநத்திற்கு ஹேது கூறப்பட்டது.

(2) தேஹேந்திரியாதிகளினின்றும் அந்நியமாய நான் ஸ்வயம் பிரகாச அஸங்க ஸாக்ஷி சேதந ரூபப் பிரஹ்மமா யிருக்கின்றேன். இந்தப் பிரபஞ்சம் விளங்கினும் மித்தையாம் என்னும் திட நிச்சய ரூப ஸம்ஶய விபரீத பாவநா ரஹித சித்த விருத்தி, ஞாநத்தின் ஸ்வரூபமாம்.

(3) ஜீவிக்குங் காலத்தால் உபலக்ஷிக்கப்பட்ட ஸுக துக்காதி அவஸ்தைக்கண், அஹங்காராதி அநாத்மாவில் மீண்டும் ஆத்மத் தன்மைப் புத்தி யின்மை (ஜட சித்துக் கிரந்தியுண்டாகாமை) ஞாநத்தின் பலமாம்.



வைராக்யத்தின் ஹேதுவாதிகளைக் கூறுவாம்:—(1) அநந்த அநர்த்த துர்த்தசையின் ஹேதுவாய ஸ்திரீ புத்திராதி விஷயங்களில் க்ஷய அதிஶயாதிகளாலும் நாநாவிதத் துக்க ஹேதுத் தன்மையாலும் தோஷ திருஷ்டி வைராக்கியத்திற்கு ஹேதுவாம். (2) வாந்தாசநத்தின் தியாகம் போன்று அநர்த்த ஹேதுவாகிய விஷயங்களின் தியாகம் அல்லது தியாக புத்தி வைராக்கியத்தின் ஸ்வரூபமாம். (3) தனது பிரயத்தந மின்றிப் பிராரப்த கர்மத்தாற் கிடைத்த தநாதி விஷயங்களில் மீண்டும் இஷ்ட புத்தியால் கிரகண மின்மை (விஷயத்தின்கண் தீநத்தன்மை யின்மை) வைராக்கியத்தின் பலமாம்.

உபரதிகளின் ஹேதுவாதிகளைக் கூறுவாம்:—(1) பகவாந் பதஞ்சலியால் இயற்றப்பட்ட இயம நியமாதி யோகத்தின் அஷ்டாங்கத்தினை உள்ளபடி குரு வாயிலாய் அநுஷ்டித்தல் உபரதியின் ஹேதுவாம். (2) சாஸ்திரீய அசாஸ்திரீய சித்த பரிணாம ரூப சர்வ விருத்திகளின் ஸவிகற்ப நிர்விகற்ப ஸமாதிகளின் அப்யாஸத்தா லுண்டாம் ஏகாக்ரத் தன்மையும் நிரோதமும் உபரதியின் ஸ்வரூபமாம். (3) நிர்விகற்ப ஸமாதியின் திடத்தன்மையால் லௌகிக வைதிக நாநாவித வியவகாரத்தின் நாசம் உபரதியின் பலமாம்.

இம் மூன்றும் புண்யத்தின் உத்கர்ஷத்தால் சிலவிடத்து ஒன்றாகவே யிருக்கின்றன. சில பாபத்தின் பலத்தால் சிலவிடத்து வியோகமாகின்றன. யாண்டு வைராக்யம் உபஸமம் இரண்டும் ஒன்றாக இருந்து யதார்த்த ஞாநம் இன்றோ, ஆண்டு மீண்டும் ஜந்ம முண்டாம்; ஆனால், உத்தம லோகத்தின் பிராப்தியாகிய பலம் உண்டாகின்றது. யாண்டு யதார்த்த ஞாநம் இருக்க மிகுந்த வைராக்கிய உபஸமங்கள் இல்லையோ, ஆண்டு ஸம்ஶய மின்றி விதேக முத்தி யுண்டாகின்றது; ஆனால், ஜீவிக்கும் அவஸ்தையில் திருஷ்ட துக்கத்தின் நிவிர்த்தி யின்று.

**2** - 28 அவதி.

மூன்று அவதியினைக் கூறுவாம்:—ஞாந அவதி முதலிய பேதத்தால் அவதி மூவகைத்தாம்:—

(1) ஞாநத்தின் அவதி.

(1) அஞ்ஞனுக்குத் தேகாதிகளில் ஸம்ஶய விபரீத பாவனையின்றித் திட ஆத்மத் தன்மைப் புத்தி போன்று ஸ்வபாவ சித்தப் பிரஹ்மாத்மத் தன்மையில் திட புத்தி ஞாநத்தின் அவதியாம்.

(2) வைராக்யத்தின் அவதி.

(2) ஸ்வர்க்காதி, ஸத்தியலோக ஸம்பந்தி விஷயங்களில் திரண புத்தி வைராக்கியத்தின் அவதியாம்.

(3) உபரதியின் அவதி.

(3) ஜாக்ராவஸ்தையில் சுழுத்தி போன்று ஸமஸ்த வஸ்துவின் விஸ்மிருதி உபராமத்தின் அவதியாம்.

(இம் மூன்று பிரகார அவதியின் பிராப்தி கலியில் அதி துர்லபமாம். எதனல் ஸர்வ புண்ய, ஸர்வ ஸாதந அநுஷ்டாநத்தின் பலரூபமாம்; எதனல் கலிப் பிரபாவத்தால் யத்தநஞ் செய்யும் புருஷர்க்கும் பஹிர்முக இந்திரியங்கள் மதநஞ் செய்கின்றன; "ஸ்வயம்பு இந்திரியங்களைப் பஹிர்முகமாகச் சிருஷ்டித்தார். ஆத்ம தரிசநத்தினின்றும் வெட்டி (பிரித்து) விட்டார்" என்னும் சுருதிப்பிரமாணத்தானும், "ஏ கௌந்தேய! யத்தநஞ்செய்யும் புருஷன், பண்டிதனுயினும் அவன் மநதையும் மதந ஸ்வாபாவ இந்திரியங்கள் இழுக்கின்றன" என்னும் ஸ்மிருதிப் பிரமாணத்தாலும்)என்க.

## 2—29. பிராணுயாமம்.

மூன்று பிராணுயாமத்திணக் கூறுவாம்:—மந நிக்ரகத்தின் ஹேதுவாய, பிராண நிக்கிரகத்தின் உபாய ரூப, ரேசக பூரக கும்பக பேதத்தால் பிராணுயாமம் மூ வகைத்தாம்:—

(1) ரேசகப் பிராணுயாமம்.

(1) ஸ்வபாவ சித்த கதியின் நிரோத பூர்வகம், ஓங்கார மந்திரத்தின் உச்சாரண ஸஹிதம், உள்ளிருக்கும் பிராண வாயுவிணை இருபத்து நான்கு, அல்லது முப் பத்திரண்டு, அல்லது அறு பத்து நான்கு அங்குல பரிமாணம் வெளித் தேசத்தில் தனது பிரயத்தநத்தால் லயஞ் செய்தல் ரேசகம் எனப்படும்.

(2) பூரகப் பிராணுயமம்.

(2) மீண்டும் வெளியிலுள்ள அபாந வாயுவிணை மந்திரோச்சாரணத்துடன் ஹிருதயம் நாபி முதலிய உட்டேயத்தில் தனது பிரயத்தநத்தால் லயஞ் செய்தல் பூரகம் எனப்படும்.



(3) கும்பகப் பிராணுயாமம்.

(3) மேல் கீழ்ச் செல்லுதலை நிரோத பூர்வகம், உட் பிராணணை வெளியிடத்தில் கிஞ்சித் காலம் ஸ்தம்பித்தல் முதல் வெளிக் கும்பகமாம்; அங்ஙனமே வெளியிடத்தி லுள்ள அபாநனை உள் ஹிருதய முதலிய இடத்தில் ஸ்தம்பித்தல் உட் கும்பகமாம். எவ்வளவு காலம் பிராணன் ரேசக பூரகஞ் செய்யாதிருக்கின்றதோ அவ்வளவு காலம் கும்பக கால மெனப்படும்.

[இங்ஙனம் குருவால் கொடுக்கப்பட்ட யுக்திகளால் பிராணுயாமத்திணை அப்யஸிக்கின், சீக்கிரம் மநத்தின் நிரோத முண்டாம். எதனல் மநத்தின் சஞ்சலத் தன்மை பிராண விருத்தியின் அதீநமாம், பிராண நிரோத மார்க்கம் மிகக் கடிநமாம், விவேக மார்க்கம் ஸுகமமாம் (அநாயாஸ அடைவாம்). அங்ஙனமாயினும், அதிகாரியின் பேதத்திஞல் மந நிரோதத்தின் விருப்புடைச் சிலர்க்கு ஞாந மார்க்கம் ஸுக ஸாத்தியமாம், சிலர்க்கு யோக மார்க்கம் (ஸுக ஸாத்தியமாம்). எதனல் ஸ்ரீ கிருஷ்ணரால் சித்த நிரோதத்தின் பொருட்டுக் கீதையில் இரண்டு மார்க்கங்கள் கூறப்பட்டிருக்கின்றன].

## 2 - 30 - ஆந்தியாதி.

ஆந்தியாதியிணைக் கூறுவாம்:—சக்ஷு இந்திரியத்தின் தர்மமாய ஆந்திய மாந்திய படுத்துவ பேதத்தால் ஆந்தியாதி மூ வகையாம்.

(1) அந்தம்.

(1) ஜந்ம அந்தாதி தோஷத்தால் வெண்மை முதலிய ரூபம், ஹ்ரஸ்வ தீர்க்காதி பரிமாணம், ஏகத்துவாதி சங்கியை, ஸம்யோகம், விபாகம் என்னும் ஐங் குண விசிஷ்ட கடாதி திரவ்யத்திணைச் சக்ஷு கிரஹிக்காமை அந்தத் தன்மையாம்.

(2) மந்தம்.

(2) உத்பூத ரூபாதி குண விசிஷ்ட படாதி திரவ்யத்தின் "ஈண்டு ஒன் றிருக்கின்றது" என அஸ்பஷ்டத் தன்மையால் நேத்திரத்தால் காசம் முதலிய தோஷத்தால், சாமாந்யக் கிரஹணம் மந்தத் தன்மையாம். எதனல் ஜந்ம அந்தன் கூறுகின்றுன்:—நான் ரூபாதியோடு கூடிய கடாதி திரவ்யத்திணை அறிய வில்லை. மந்த சக்ஷு புருஷன்

கூறுகின்றான்:— நான் வஸ்துவின் இதந்தை மாத்திரத்தா லறிந்தேன்; விசேஷமாக அறிய வில்லை. இச் சந்மாந்தத் தன்மை மந்தத் தன்மைகள் ஜந்மாந்தரத்திற் செய்த பாபத்தின் பலமேயாம்.

### (3) படுத்துவம்.

(3) ஸூர்யாதி ஆலோகத்தோடு கூடிய சக்ஷுவால் உள்ளபடி வஸ்துவின் கிரஹணம் யாது, அது சக்ஷுவின் படுத் தன்மையாம். எங்ஙனம் தோஷ மின்றிய சக்ஷுவினையுடைய புருஷன் கூறுகின்றான்:— நான் ஸர்வ வஸ்துவினையும் உள்ளபடி அறிந்தேன்.

இச் சக்ஷுவின் படுத்தன்மை பூர்வஞ் செய்த புண்யத்தின் பலமாம். ஆதலால் ஈஸ்வரப் பிரஸாதத்தால் எப் புருஷன் சக்ஷுவின் படுத் தன்மையினையும் அடைந்து, குரு சாஸ்திராதி திருஷ்டியின் விமுகனே, ஸ்திரீ புத்திராதி திருஷ்டியில் ரமிக்கின்றனனே, அவன் தன்னையே கொன்றவ னும்; ஈஸ்வரனாற் கொடுக்கப்பட்ட படுத் தன்மை யுடைய சக்ஷுவினால் ஸாத்தியமான பிரயோஜநத்தைச் செய்யாமையினால். சக்ஷுவிற் கூறிய இந்த நியாயத்தைச் சுரோத்திராதி அந்நியஇந்திரியங்களி னிடத்தும் அறிந்து கொள்க. ஈண்டுச்சக்ஷுவின் மூன்று தர்மங்கள் லௌகிக ரீதியாகக் கூறப்பட்டன. சாஸ்திர ரீதியானே, எப்புருஷன் பாமரனாய்ச் சுருதி ஸ்மிருதியாய இரண்டு சக்ஷுக்களு மின்றியவனாய், நாஸ்திகனாய், பகவத் விமுகனாய், கர்த்தவ்ய அகர்த்தவ்ய ஞாந சூந்யனாய், குரு ஈஸ்வராதிகளை நிந்திக்கின்றானே, அவனே அந்த னும். எப்புருஷன் ஸ்திரீ புத்ராதி விஷய ஸுக லம்பட விஷயியாய், ஈஸ்வர ஆக்ஞாரூப சுருதி ஸ்மிருதிகளையும் பரமேஸ்வரனையும் ஸாமாந்யமாக அங்கீகரித்து, விசேஷ ரூபமாக அங்கீகரிக்காது அவற்றின் அதிநமா யிருந்து விஷய லம்படத் தன்மைத் தோஷத்தால் யதேஷ்டாசரணஞ் செய்கின்றானே, அவனே மந்த சக்ஷுவாம். எப் புருஷன் பகவானால் அநுக்ரஹிக்கப்பட்ட மஹா பாக்கியத்தை யுடையவனாய், சுருதி ஸ்மிருதி அநுஸாரமாய்ச் செல்பவனாய், குரு சாஸ்திராப்யாஸ வாயிலாய் மோக்ஷத்தின் பொருட்டு ஸாதந அநுஷ்டாநத்தில் தத்பரனாய் இருக்கின்றானே, அவனே படு சக்ஷுவாம். "சுருதி ஸ்மிருதிகள் இரண்டு நேத்திரங்கள். எந்த இரண்டால் ஜகத் விளங்குகின்றது அந்த இரண்டு மின்றியவன் அந்தனெனப்படுவன்; ஒன்று இன்றியவன் குருடன் எனப் படுகின்றான்"



என்றும், "சுருதி ஸ்மிருதிகள் இரண்டும் எனது ஆக்ஞைகள். இவ்விரண்டால் இச் சர்வ ஜகத்தும் விளங்குகின்றன. எவர்கள் இந்த எனது ஆக்ஞையினை நாசஞ் செய்து யதேச்சையாக இருக்கின்றார்களோ அவர்கள் எனது துவேஷிக ளாவர். அவர்கள் லிங்கத்தைத் தரித்து வெளிமுகமாக எனது பக்தர்களாயினும் வைஷ்ணவர்களல்லர்" என்று முள்ள பிரமாணத்தான் (என்க.)

## 2 - 31 - தாதாத்மியம்.

தாதாத்மியத்தினைக் கூறுவாம் :—ஸஹஜம் கர்மஜம் பிராந்திஜம் என்னும் பேதத்தால் அஹங்காரத்திற்கு, சிற்சாயை, தேஹ, சாக்ஷிகளோடு கிரமமாகத் தாதாத்மியம் மூ வகைத்தாம். அவற்றுள்,

### (1) சகஜ தாதாத்மியம்.

(1) சித் சாயையோடு அஹங்காரத்தின் தாதாத்மியம் ஸஹஜமென்னும் ஸ்வாபாவிகமாம்; இரண்டிற்கும் கூடவே உற்பத்தியாய், கூடவே நாசமாதலால்.

### (2) கர்மஜ தாதாத்மியம்.

(2) வர்த்தமாந தேஹத்தோடு அஹங்காரத்தின் தாதாத்மியம் ஆரப்தம் என்னும் கர்மஜமாம்; ஜீவிக்கும் அவஸ்தையில் "நான் மனுஷ்யன்" என்பது ஸர்வ ஜநங்கட்கும் அநுபவமாகலின்; பிராரப்த கர்ம ரூப உபாதியின் க்ஷயமாய்த் தேஹ தாதாத்மியத்தின் க்ஷய முண்டாதலின்; தேஹம் விழுந்ததன் பின் தேஹத்தின்கண் "நான்" என்பதாதி வியவஹாரம் பார்க்கப்படாமையின்.

### (3) பிராந்திஜ தாதாத்மியம்.

(3) அஸங்க ஸாக்ஷி ஸ்வப்பிரகாச சேதநத்தோடு அஹங்காரத்தின் தாதாத்மியம் பூர்வ பூர்வப் பிராந்தி சித்தப் பிராந்திஜ மாம்; யதார்த்த ஞாநத்தால் பிராந்தியின் க்ஷயமாய், தாதாத்மியத்தின் அபாவ மாகுதலின்; வித்துவானிடத்து "நான் கர்த்தா" என்னும் அபிமாந மின்மையின்.

(ஆதலால் ஜிஞ்ஞாஸுக்களுக்கு ஸாக்ஷியோடு அஹங்காரத்தின் தாதாத்மியத்தின் நிவிர்த்தியின் பொருட்டே மிக யத்நஞ் செய்தல் யோக்கியமாம்.)

## 2 - 32 - தாதாத்மிய நிவிர்த்தி.

மூவிதத் தாதாத்மியத்தின் நிவிர்த்தியினைக் கூறுவாம்:—

(1) சித் சாயை அஹங்காரம் இரண்டும் இருக்கும்போதே ஞானத்தாலும் இரண்டற்கும் ஸஹஜ தாதாத்மியத்தின் நிவிர்த்தி ஸ்வரூபமாக உண்டாவ தின்று. பின்னையோ, அவற்றினுக்கு மித்தையா புத்தியே உண்டாகின்றது; ஸ்வரூப நிவிர்த்திப் பிரதிபந்தகமாய பிராரப்த கர்ம மிருத்தலின். ஆதலால், விதேஹ கைவல்யத்தில் இரண்டு ஸம்பந்திகளின் ஸ்வரூபம் நாசமாய் ஸஹஜ தாதாத்மியத்தின் நாசம் உண்டாகின்றது; அது பிரதம தாதாத்மிய நிவிர்த்தியாம். எங்ஙனம் கடத்தின்கண் ணுள்ள ஜலத்தி லிருக்கும் ஸூர்யப் பிரதிவிம்பத்தின் நிவிர்த்தி கட ஜலத்தின் நிவிர்த்தியானே உண்டாகின்றது; வேறு வகைத்தா யன்று.

(2) பிராரப்த கர்மத்தின் பல ரூப ஸுக துக்க அநுபவம் போகத்தால் நாச மாகுதலின், சரீரம் விழும் ஸமயத்தில் சரீர அஹங்கார மிரண்டின் தாதாத்மியம் நாச மாகின்றது. அஃது இரண்டாவது தாதாத்மியத்தின் நிவிர்த்தியாம்; பிராரப்த க்ஷய மின்றி ஜீவிக்கும் அவஸ்தையில் நான் மனுஷ்யாதி என்னும் வியவகாரம் பார்க்கப் படுதலின்.

(3) வாக்கிய ஜந்ய ஞானத்தால் பிராந்தியின் நிவிர்த்தியாய் வித்வானிடத்து அஹங்காரம் ஸாக்ஷி என்னும் இரண்டின் தாதாத்மியம் நிவிர்த்தி யாகின்றது; அது மூன்றாவது தாதாத்மிய நிவிர்த்தியாம்; அஹங்கார சிதாத்மாவின் தாதாத்மியம் பிராந்தி ஹேதுவை யுடையதா யிருத்தலின்; வாக்கிய ஜந்ய அபரோக்ஷ ஞானத்தால் பிராந்தியின் நிவிர்த்தியாய் அதன் நிவிர்த்தி யுண்டாகின்றமையின்; "நிமித்தம் நாசமாக நைமித்திகமும் நாச மாகின்றது" என்னும் நியாயத்தால்.

(அஹங்காரத்தின் இருவிதத் தாதாத்மியம் தனது பிரயத்தந மின்றி எல்லார்க்கும் நாசமா மாயினும் அஹங்கார ஸாக்ஷியின் தாதாத்மியம் சாஸ்திரீயப் பிரயத்தந மின்றி ஆயிரம் ஜந்மத்தாலும் நாசம் ஆகாது; ஆதலால், அதிகாரிகள் இதன் நிவிர்த்தியின்கண்ணே மிக முயற்சி செய்தல் உசிதமாம்.)



## 2—33. ஏஷணை.

மூன்று ஏஷணைகளைக் கூறுவாம்:—புத்ரேஷணாதி பேதத்தால் ஏஷணை மூ வகைத்தாம்.

### (1) புத்ரேஷணை.

(1) தனது அநுற்பத்தி உற்பத்தி முதலிய பேதத்தால் மாதா பிதாக்கட்கு அநந்த துக்கத்திற்கு ஹேதுவாய புத்ரனின் உத்பாதந பாலநாதிகளில் நாநாப் பிரகாரமாக விஹிதம் விஹித மின்றிய யத்தநத்தாற் சித்தத்தி லுள்ள அபிநிவேசம் புத்ரேஷணையாம்.

### (2) வித்தேஷணை.

(2) ஸம்பாதந ரக்ஷணாதிகளால் புருஷனுக்கு நாநா அநர்த்தத்தின் ஹேதுவாய் ஸ்வர்ணாதி ரூப தநத்தின் உத்பாதந ஸஞ்சய ரக்ஷணாதிகளில் சித்தத்தி லுள்ள உற்சாகம் வித்தேஷணையாம்.

### (3) லோகேஷணை.

(3) அநந்த தீநத்தன்மை தம்பாதிகளின் ஹேதுவாய, ராஜஸி தாமஸி மநுஷ்யர்களுக்குத் தன் பிரயோஜநத்தின் பொருட்டுப் பிரஸாதநத்தில் தன் பிரயத்தநத்தோடு கூடிய சித்தத்தி லுள்ள அபிநிவேசம் லோகேஷணையாம். அல்லது, உத்தம விஷய போகத்தின் பொருட்டு நாச ஸ்வபாவ ஸ்வர்க்காதி லோகப் பிராப்தி நிமித்தம் தனது பிரயத்தநத்தோடு கூடச் சித்தத்தின்க ணுள்ள துராக்கிரஹம் லோகேஷணையாம்.

(இம் மூன்றன்கண்ணே அநர்த்தத்தைச் செய்யுந் தன்மை, துக்க ஸம்பாத்தியத் தன்மை, புருஷார்த்த அநுபயோகித் தன்மைகளை விசாரஞ் செய்து முமுக்ஷு ஸதா தியாகஞ் செய்வதற்கு யத்தநஞ் செய்க. "வித்தேஷணையினின்றும், புத்ரேஷணையினின்றும், லோகேஷணையினின்றும் கடந்து பிராஹ்மணன் பிக்ஷாசரணத்தினைச் செய்க" என்னும் பிரமாணத்தால்.)

## 2—34. ஸுஷுப்தியாதி.

ஸுஷுப்தி முதலியவற்றைக் கூறுவாம்:—ஸுஷுப்தி மூர்ச்சை ஸமாதி பேதத்தால் ஸுஷுப்தியாதி மூ வகையாம்.

(1) ஸுஷுப்தி.

(1) ஜாக்ர ஸ்வப்ந போகத்தைக் கொடுக்கும் பிராரப்த கர்மத்தின் க்ஷயமாய், ஸுஷுப்தி ஸம்பந்தி ஸுக போகத்தினைக் கொடுக்கும் கர்மம் உதயமாய் ஸர்வ ஸ்பஷ்டவிர்த்தியின் அபாவ ரூப நித்திரை பிரஸங்க வதநாதி சிந்நத்தோடு கூடியே யுண்டாகின்றது யாது, அது சுழுத்தியாம். எது மீண்டும் ஜாக்ர போகத்தைக் கொடுக்கும் கர்மம் உதயமாய் நாசமாகின்றது.

(2) மூர்ச்சை.

(2) ஜாக்கிராவஸ்தையின்கண்ணே ரோகாதிகளால், அல்லது தண்டத்தா லடித்தலால், அல்லது குதிரையினின்றும் விழுதலால் உண்டாம் ஸர்வ ஸ்பஷ்ட விர்த்தியின் அபாவம் மலிந வதந குரூராதி சிந்நத்தோடு கூடியது யாது, அது மூர்ச்சையாம். அதனுல் பிராரப்தத்தின் சேஷம் இருக்கின் மீண்டும் உத்தாந முண்டாகின்றது, அல்லக்கால் மரணமுண்டாகின்றது.

(3) சமாதி.

(3) ஜாக்கிரத்தின்கண்ணே தனது பிரயத்தந ஸாத்திய நிதித்தியாஸநத்தால், அல்லது பதஞ்ஜலி கூறிய தாரணை தியாநத்தின் அநுஷ்டாநத்தால் உண்டாம் சித்தத்தின் ஏகாக்ரத் தன்மையும் நிரோதமும் ஸமாதியாம். அல்லது ஸாக்ஷாத்காரத்தின் பின் பிரஹ்மாகார சித்த விர்த்தியின் பிரவாகம், அல்லது ஸர்வ விர்த்தி நிரோத பூர்வகம் பிரஹ்ம ரூபமாகச் சித்தத்தின் ஸ்திதி ஸமாதியாம்.

(இம் மூன்றனுள்ளும் பாஹ்ய விர்த்திகளின் அபாவம் ஸமாநமாம். அங்ஙனமாயினும், பிராரப்தத்தால் சுழுத்தி மூர்ச்சைகளில் மீண்டுஞ் சித்த விர்த்திகள் உண்டாகின்றன. ஸ்வப் பிரயத்தந ஸாத்திய ஸமாதியில் உண்டாவ தில்லை; ஏனெனின், சித்தம் பிரஹ்ம ரூபமாக நிலைத்திருத்தலின்; வியுத்தாந காலத்தினும் பிராரப்த போக அநுகூலமாய் உண்டாய விர்த்திகட்கும் அவற்றின் அநுஸந்தாநத்தால் பாதிக்கப்படும் தன்மை யிருத்தலின்; ஆதலால், முமுக்ஷுக்கள் அதன் சித்தியின் பொருட்டே பிரவிர்த்தி செய்க.)



2—35. ஆநந்தம்.

மூன்று ஆநந்தத்தினைக் கூறுவாம்:—விஷயாநந்தம் வாஸநாநந்தம் பிரஹ்மாநந்தம் என்னும் பேதத்தால் ஆநந்தம் மூ வகைத்தாம்.

(1) விஷயாநந்தம்.

(1) அவற்றுள், முதலதைக் கூறுவாம் :—பிராந்தி காலத்தில் ஸ்திரீ புத்ராதிகளாய இஷ்ட வஸ்துவின் ஸ்மரண தரிசந லாப போக ஸமயத்தில், அல்லது அதன் உத்தர க்ஷணத்தில் புண்ய கர்மத்தால் உண்டாம் ஆத்ம அபிமுக ஸாத்விக பரிணமரூப சாந்தி விர்த்தியில் பிரதிபிம்பிக்கும் ஸ்வரூபாநந்தம் விஷயாநந்தமாம். அஃது ஏகரஸமன்று. எதனுல் இஷ்ட விஷயத்தின் தாரதம்மியத்தால் விர்த்தி ஆநந்தத்தின் தாரதம்மியத் தன்மை "அந்தப் பக்ஷி ரூப ஆநந்தமய கோசத்தின் பிரியம் சிரஸாம்; மோதம் வலப் பக்ஷமாம்; பிரமோதம் இடப் பக்ஷமாம்; ஆத்மா ஆநந்தமாம்; பிரஹ்மம் புச்சமாம்" என்னும் சுருதியின்கண் கூறப்பட்டிருக்கின்றது. அல்லது, ஸவர்க்காதிரூப அவ்வவ் விஷ்ட விஷயத்தின் லாபத்தால் அந்தந்த இச்சையின் உபராமம் உண்டாய் உண்டாம் அந்தர்முக, ஆத்மாபிமுக ஸாத்விக பரிணம ரூப அந்தக்கரண விர்த்தியில் விளங்கும் ஸ்வப்பிரகாச ஸ்வரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விஷயாநந்தமாம்; விர்த்தி விஷயமென்னும் இரண்டற்கும் துக்க ரூப, மாயா காரியத் தன்மையால் ஸ்வயம் ஆநந்த மின்மையின். இதன்கண் ஸம்ஸாரி ஜீவன் அதிகாரியாம்.

(2) வாசநாநந்தம்.

(2) ஸுஷுப்தியின் பூர்வோத்தர க்ஷணத்திலும் தூஷ்ணீம் ஸ்திதி ரூப உதாஸீந அவஸ்தையிலும் சக்ஷு இந்திரியத்தால் இஷ்ட விஷயத்தின் அநுபவ மின்றியும் விளங்கும் ஸுகம் வாஸநாநந்தம் எனப்படும். அது தனது பிரயத்தந மின்றி ஞாநி அஞ்ஞாநிகட்குச் சாதாரணமாம்.

(3) பிரஹ்மாநந்தம்.

(3) சுழுத்தியின்கண் ஞாதாதி திரிபுடி யின்றி ஸ்வப்பிரகாசத் தன்மையால் விளங்கும் ஆநந்தமும் ஜாக்ர ஸ்வப்நத்தில் விருத்தியோடு கூடிய பிரதிபிம்ப ஆநந்தத்தின் காரண ரூபப் பிம்பமும் பிரஹ்மாநந்தமாம். அது மநோ நாசாதி மூன்றோடு கூடின அப்பியாஸத்தால் அடையத் தக்கதாம். இதில் ஜீவன் முக்தன் அதிகாரியாம்.

(இம் மூன்றின் பிந்நமாய ஆநந்தம் ஜகத்தின்கண் அதிகம் ஒன்று மில்லை. எதனால் நிஜாநந்தம், முக்யாநந்தம், ஆத்மாநந்தம், யோகாநந்தம், அத்வைதாநந்தங்கள் பிரஹ்மாநந்தத்தில் அந்தர்ப்பாவமும், விஷயாநந்தத்தில் வித்தியாநந்தம் அந்தர்ப்பாவமும் ஆம். எதனால் மஹா வாக்கியஜந்ய ஸாக்ஷாத்காரத்தின்பின் பிராந்தி சித்த,கர்த்ருத்வ போக்த்ருத்வாதி ஸர்வ துக்கத்தின் நிவிர்த்தியாய் "நான் நிர்த்துக்கன், சுக ரூபன்" என்பதாதி ஆகார அந்தக்கரண விர்த்தியில் ஸாக்ஷியால் பிரதீதியாகும் துக்காபாவ உபலக்ஷித சுகம் யாது, அதுவும் ஸவிகற்ப விருத்தி ரூபமாம். அதனையே வித்தியாநந்த மென்பர். அதன்கண் தத்வ ஞாநி அதிகாரியாம். இவ்வாநந்தத்தின் ஸவிஸ்தார நிரூபணம், பஞ்சதசியி லுள்ள பஞ்சாத்தியாய ரூபப் பிரஹ்மாநந்த கிரந்தத்தில் வித்தியாரண்ய முநிவர்களால் செய்யப்பட்டிருக்கின்றது. ஈண்டு அதிகமாகக் கூற வில்லை. அவற்றுள், விஷயாநந்தம் ஸ்திரீ புத்ர தநாதி விஷயத்தோடு இந்திரிய ஸம்பந்தத்தின் அதீநமும் ஸாதிசயாதி தோஷத்தால் துஷ்டமுமாம்; அநந்த ஆயாஸ ஸாத்தியமாம் பரிணாம அவஸ்தையில் பூர்வம் அநுபவிக்கப்பட்ட ஸஜாதீய விஷய ஸுக இச்சையின் உத்பாதநத்தால் அதன் ஸாதந ஸ்ருக், சந்தநாதி, ஸ்திரீ, புத்ராதி விஷயங்களின் ஸம்பாதநத்தில் அநந்தக் கிலேசம் செய்வதும் பூர்வ ஜந்மத்தில் சம்பாதிக்கப்பட்ட புண்ய கர்ம மின்றித் துஸ் ஸம்பாத்தியமுமாம். ஆதலால், முமுக்ஷுக்கள் இந்த க்ஷணிக ஆநந்தத்தின் பொருட்டுத் தீநத்தன்மையினை அடைவது துர்ப்பாக்கியத் தன்மையின் சிந்நமாம். ஆதலால், ஜிஞ்ஞாஸுக்கள் இதன் சம்பாதநத்தின் பொருட்டு வியர்த்தமாக ஆயுளை நாசஞ் செய்வது உசித மல்ல. எதனால் விஷயஸுகம் அதிக துக்கத்தின் கலப்பால் விஷத்தோடு கூடிய அந்நம் போன் றிருக்கின்றது, அதனால் பூர்வாசாரியர் ஜிஜ்ஞாஸுவின்கண் இதன் இச்சை மாத்திரத்திற்கும் ஸஹிப்பதில்லை; ஆதலால், சரீர யாத்ரா (நிர்வாக) மாத்திரம் விதிக்கப்பட்ட விஷய போகத்தில் ஸந்துஷ்டனாவது யோக்யமாம். அதுவும் மோக்ஷ ஸாதந சிரவணாதி யநுஷ்டாநத்தின் பொருட்டாம்; இந்திரியப் பிரீதியின் பொருட் டன்று; "ஹே தாத! (புத்ர!) நீ முக்தியினை இச்சிக்கின் விஷயங்களை விஷம் போன்று விடுக" என்பதாதிப் பிரமாணத்தால். வாஸநாநந்தம் அநர்த்தத்தினைச்



செய்வதன்றாயினும், பிராரப்த கர்மாதீநத்தால் ஒரு காலத்ததா யிருத்தலின், ஸர்வ ஸம்ஸாரிக துக்க நிவிர்த்தியினை இச்சிக்கும் ஜிஞ்ஞாஸுக்களால் ஆதரிக்கத் தக்கதாம். பரிசேஷத்தால் (கூட்டிக் கழித்தலால்) வித்தியாநந்தப் பிரஹ்மாநந்தத்தின் பிராப்தியின் பொருட்டு அவஸ்யம் பெரும் பிரயத்தநத்தால் பிரஹ்ம சுரோத்திரியப் பிரஹ்ம நிஷ்ட குருவினையும் ஸத் சாஸ்திரத்தினையும் ஸேவிக்க. பிரஹ்ம ஸ்வரூபத்தில் நிலைத்தல் ரூப மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு (என அறிக).]

## 2—36. கர்மம்.

மூன்று கர்மத்தினைக் கூறுவாம்:—ஆகாமி ஸஞ்சித பிராரப்த பேதத்தால் கர்மம் மூ வகைத்தாம்.

### (1) ஆகாமிய கர்மம்.

(1) அவற்றுள், பிரதமத்தினைக் கூறுவாம்:—வர்த்தமாந சரீரத்தில் பிராரப்த கர்மத்தின் பல ரூப ஸுக துக்கத்தினை யநுபவித்துக் கொண்டு மரண பரியந்தம் புருஷர்களால் செய்யப்படும் புண்ய பாப ரூப கர்மம் ஆகாமியாம். அல்லது, யதார்த்த ஞாநத்தால் சித் ஜட கிரந்தியினைப் பேதித்து ஸஞ்சித கர்மத்தின் நாசமுண்டாய்ச் சரீரம் விழுதற்குப் பூர்வம் பிராரப்த சேஷ பல போகத்தின் ஸமயத்தில் ஞாநவானால், பாதிதாநு விர்த்தியால் சரீராதி மூ விதக் கர்ம முண்டாகின்றது. அது கிரியமாணம் எனப்படுகின்றது. அந்தப் பலத்தின், ஆத்மாவின் அஸங்கத் தன்மை ஞாநத்தின் பிரபாவத்தால் அந்த ஞாநிக்கு ஸ்பரிச முண்டாவ தின்று. எதனால், சுருதியின்கண் ஞாநியின் புண்ய பாப பலத்திற்குப் பந்துக்களும் துவேஷிகளும் கூறப்பட்டிருக்கின்றனர். அச் சுருதி இஃதாம்:—"அவன் பந்துக்கள் புண்ணியத்தினைக் கொள்ளுகின்றனர், பாபத்தினைத் துவேஷிகள் கொள்ளுகின்றனர்" என.

### (2) ஸஞ்சித கர்மம்.

(2) உண்டாம் உயர்வு தாழ்வாகிய அநந்த ஜந்மத்தின் ஹேதுவாய், பூர்வ ஜந்மம் ஜந்மாந்தரங்களிற் செய்த விஹித அவிஹித கர்மம் ஸம்ஸ்கார ரூபத்தால் அந்தக்கரணத்தின்கண் இருப்பது ஸஞ்சித மெனப்படும்.

(3) பிராரப்த கர்மம்.

(3) ஞானத்தின் யோக்ய அயோக்யமாய் வர்த்தமாந சரீராரம்பக சரீர வியோக பரியந்தம் ஸுக துக்கத்தைக் கொடுக்கும் கர்மம் பிராரப்த மெனப்படும். எதனால் ஸர்வ ஜீவர்கட்கும் ஜாதி போகம் பிரஞ்ஞை ஆயுள் முதலியவற்றின் நியம முண்டாகின்றது, அதனால்.

[எதுவரையில் பிராரப்த கர்மம் நசிக்க வில்லையோ, திடமான இந்திரியாதிகளோடு கூடித் தேஹ மிருக்கின்றது, அதுவரையில் முமுக்ஷுக்களால் ஸத் ஸமாகமாதி (ஸத்ஸங்கம்) செய்யத்தக்கதாம்; குசங்காதிகளன்று. அல்லாக்கால், குசங்கத்தின் பிரபாவத்தால் கர்ம வசனாய் அதோகதியி னின்றும் அதோ கதியை யடைவான்; "ஏ கௌந்தேய! என்னை அடையாது, அதனாலும் அதோ கதியை யடைகின்றான்" என்னும் பிரமாணத்தால்.]

**2**—37. ஜாக்ரம்.

மூ வித ஜாக்ரத்தினைக் கூறுவாம்:—ஜாக்ர ஜாக்ரம், ஜாக்ர ஸ்வப்நம், ஜாக்ர சுழுத்தி பேதத்தால் ஜாக்ரம் மூ வகைத்தாம்.

(1) ஜாக்ர ஜாக்ரம்.

(1) அவற்றுள், பிரதமத்தினைக் கூறுவாம்:—ஜாக்ராவஸ்தையில் பிரத்தியக்ஷாதி ஷட்வித நிர்த் தோஷப் பிரமாணங்களா லுண்டாய அறுவித பிரமைபாய அதை யுடையதன்கண் அதை விசேஷணமாக (கடத்துவாதி ரூப விசேஷணத்தை யுடைய கடாதி பதார்த்தத்தின் கண்ணே கடத்துவாதி விசேஷணத்தினை)க் கிரகிக்கும் ஞானத்தால் வியாவகாரிக விஷயத்தின் யதார்த்தக் கிரஹணம் ஜாக்ரத்தில் ஜாக்ரமாம்.

(2) ஜாக்ர ஸ்வப்நம்.

(2) அந்த அவஸ்தையின்கண்ணே அவித்தையின் பரிணாம ரூப பிரமாண ஆபாஸங்களால் ஜநித்த பிராந்தி ஸம்சய ஞானம் அஃதின்றி யதன்கண் அது விசேஷண ஞானமாம். (சர்ப்பத்துவாதி விசேஷ மின்றிய இரஜ்ஜுவாதியின்கண் சர்ப்பத்துவாதி விசேஷணத்தினைக் கிரகிக்கும் ஞானமாம்). அதனால் அநிர்வசநீய பிராதிபாஸிக சுத்தி ரஜதாதி விஷயத்தின் கிரகணம் யாது, அது ஜாக்ரத்தின்கண் ஸ்வப்நமாம்.



(3) ஜாக்ர சுழுத்தி.

(3) அந்த அவஸ்தையின்கண்ணே ஸம முதலிய அநுஷ்டானத்தால், அல்லது ராகத்வேஷாதி திட வாஸனையினால், அல்லது க்ஷணிக உதாஸீந அவஸ்தையின் பிராப்தியால் உண்டாம் மநத்தின் ஸ்தம்பீபாவத்தால் தத்தம் கோளகத்தி லிருக்கும் இந்திரியங்களால் தன் ஸந்நிதியி லுள்ள விஷயமும் கிரஹிக்கப்படாமை ஜாக்ரத்தில் சுழுத்தியாம்.

(i) ஜாக்ர ஜாக்ரம்.

இப்பொழுது ஞானியின்கண்ணும் மூன்று ஜாக்ரத்தினைக் காண்பிப்பாம்:—அல்லது,

(i) ஜாக்ராவஸ்தையில் விசாரிக்கப்பட்ட மஹா வாக்கியத்தினால் உண்டாகும் பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்தால் ஸர்வ ஜகத்தையும் அநுகதப் பிரஹ்ம ஸ்வரூபமாகக் கிரஹிப்பது ஜாக்ர ஜாக்ரமாம்.

(ii) ஜாக்ர ஸ்வப்நம்.

(ii) அந்த அவஸ்தையின்கண்ணே விபவகார காலத்தில் பாதிதாநுவிர்த்தியால் வேறு வேறு நாம ரூபங்களாக ஞானியால் த்வைதப் பிரபஞ்சம் கிரஹிக்கப்படுவது ஜாக்ர ஸ்வப்நமாம்.

(iii) ஜாக்ர சுழுத்தி.

(iii) ஸமாதி காலத்தில் இந்திரியங்கள் தத்தம் கோளகத்தி லிருந்தும் வாஸனை யின்றி ஞானத்தால் மநத்தினைப் பிரஹ்ம ரூபமாக நிலைக்கச் செய் திருக்கும் விர்த்தியால் விஷயத்தின் கிரகண மின்மை ஜாக்ர சுழுத்தியாம்.

**2**—38. ஸ்வப்நம்.

மூ வித ஸ்வப்நத்தினைக் கூறுவாம்:—ஸ்வப்ந ஜாக்ராதி பேதத்தால் ஸ்வப்நம் மூ வகைத்தாம்.

(1) ஸ்வப்ந ஜாக்ரம்.

(1) தன் கர்மத்தால் அடைந்த ஸ்வப்நாவஸ்தையில் அவித்தியாவஸ்தா ரூப நித்திரையோடு கூடிய அந்தக்கரணத்தின் பரிணாமம் ஜாக்கிர வாஸநா ஜந்ய வாஸநாமயப் பிரபஞ்சத்தில் ஜாக்ரப் பிரபஞ்சம் போன்று ஸத் புத்தியால் விஷயாநுபவம் உண்டாவது ஸ்வப்நத்

தின்கண் ஜாக்ரமாம். அல்லது, ஜாக்ர ஸுக துக்காதி போன்று ஸ்வப்நத்தி லுள்ள ஸுக துக்காதிகளின் பிரதீதி ஸ்வப்ந ஜாக்ரமாம். அல்லது, வாஸநாமய குரு முதலியோர் வாயிலாய் ஜாக்ரம் போன்று மந்திராதி அத்யயநாதியின் பிரதீதி யுண்டாவது ஸ்வப்ந ஜாக்ரமாம்.

(2) ஸ்வப்ந ஸ்வப்நம்.

(2) அந்த அவஸ்தையின்கண்ணே "என்னல் இச் சொப்பநம் காணப்பட்டது" என ஒரு காலத்துப் புத்தி யுண்டாகின்றது ; அல்லது, வேறு விதமான வஸ்துவிற்கு வேறு விதமான கிரஹணம் உண்டாகின்றது ; அது ஸ்வப்நத்தின்கண் ஸ்வப்நமாம்.

(3) ஸ்வப்ந சுழுத்தி.

(3) அந்த அவஸ்தையின்கண்ணே சில இஷ்டாநிஷ்ட வஸ்துக்கள் தமது கர்ம அநுஸாரமாக உதாஸீந ஞாநத்தாற் பார்க்கப்படுகின்றன ; விஸ்மிருதி ரூப தோஷத்தால் ஜாக்ர காலத்தில் ஸ்மரணஞ் செய்தற்கு, அல்லது சொல்லுதற்கு ஸாமர்த்திய முண்டாவ தில்லை; அது ஸ்வப்நத்தில் சுழுத்தியாம்; ஏனெனின், ஸம்ஸ்காரத்தை உண்டாக்காத உதாஸீந உபேக்ஷா விர்த்திகள் அவிர்த்தி ரூபமாகலின். அல்லது, ஸ்வப்நத்தின்கண்ணும் தன் கர்மத்தால் உண்டாம் அவ் வுதாஸீந அவஸ்தையில் எந்த விஷயத்தின் ஸந்நிதி யிருந்தும் இந்திரியங்களால் அதன் கிரகண மின்று, அது ஸ்வப்நத்தில் சுழுத்தியாம்.

(i) ஸ்வப்ந ஜாக்ரம்.

ஞாநிக்குரிய மூ வித ஸ்வப்நாவஸ்தையைக் கூறுவாம்:—

(i) அல்லது, ஜாக்ர ஸம்ஸ்கார ஜந்ய ஸ்வப்நத்தில் ஜாக்கிராப்யாஸத்தின் பிரௌட ஸம்ஸ்காரத்தால் "நான் பிரஹ்மம், அஸங்கன், ஸாக்ஷி" என்பன வாதி ஞாநவானுக்குப் பிரதீதியாகின்றன ; அது ஸ்வப்ந ஜாக்ரமாம்.

(ii) ஸ்வப்ந ஸ்வப்நம்.

(ii) அந்த அவஸ்தையின்கண்ணே விக்ஷேப சக்தி விசிஷ்ட லேச சப்தத்தாற் கூற யோக்யமான அஞ்ஞாநத்தின் வசத்தால் ஞாநவானுக்கும் அஞ்ஞனைப் போன்று உண்டாம் அஹந்தன்யாதிப் பிரதீதி ஸ்வப்ந ஸ்வப்நமாம்.



(iii) ஸ்வப்ந சுழுத்தி.

(iii) அந்த அவஸ்தையின்கண்ணே உண்டாம் ஸாமாந்ய வஸ்துவை விஷயமாக வுடைய உபேக்ஷா ஞாநம், அல்லது ஆபாத ஞாநம் ஸ்மரணத்தினை யுண்டாக்காது, ஜாக்ரத்தில் எதற்கு ஸம்ஸ்கார வாயிலாய் ஸ்மரணம் உண்டாவ தில்லை அது ஸ்வப்ந சுழுத்தியாம். அல்லது, ஸவப்நத்தில் முற் புகன்ற உதாஸீந அவஸ்தை ஞாநிக்கு முண்டாகின்றது ; அது ஸ்வப்ந சுழுத்தியாம்.

**2**—39. சுழுத்தி.

மூ விதச் சுழுத்தியினைக் கூறுவாம்:—சுழுத்தி ஜாக்ரம் முதலிய பேதத்தால் சுழுத்தி மூ வகைத்தாம்.

(1) சுழுத்தி ஜாக்ரம்.

(1) சுழுத்தி அவஸ்தையினும் தனது புண்ய கர்ம வசத்தால் உண்டாம் ஸாத்விகி, ஸோபாதிக, ஆத்ம ஸுகாகார அஞ்ஞாநத்தின் பரிணாம ரூப அஸ்பஷ்ட விர்த்தி சுழுத்தியில் ஜாக்ரமாம். அது ஜாக்ரத்தில் "நான் சுகமாய்த் தூங்கினேன்" என்னும் சுழுத்திச் சுக விஷய பராமர்சத்தால் அநுமிக்கப் பாலதாம்; பராமர்சம் அநுபவ அதீநமாகலின். அல்லது, சுழுத்தியில் அநுபவிக்கப்பட்ட அந்தந்த விஷயாகாரமானது ஜாக்ரத்தில் உண்டாம் ஸ்மரணத்தின் அந்யதாநுபபத்தியால் சுழுத்தி ஸம்பந்தி அஞ்ஞாந விர்த்திகளின் ஸம்பாவனை யுண்டாகின்றது.

(2) சுழுத்தி ஸ்வப்நம்.

(2) ஆண்டே பாப கர்மத்தின் வசத்தால் உண்டாம் துக்காகார ராஜஸி அஞ்ஞாந விர்த்தி சுழுத்தியில் ஸ்வப்நமாம். அது "நான் துக்கியாய்த் தூங்கினேன்" என்னும் ஜாக்ர பராமர்சத்தால் அநுமேயமாகின்றது. சுழுத்தியின் பூர்வ க்ஷணத்தில் பிரதிகூலமாகிய க்ஷயம் முதலிய மஹா வியாதியின் ஸம்பந்தத்தால் உண்டாம் துக்காகார அஸ்பஷ்ட விர்த்தி விசிஷ்ட அந்தக்கரணம் உத்தர க்ஷணத்தில் தனது காரண அஞ்ஞாநத்தில் லயத்தை அடைகின்றது; அதன் பலத்தானே ஜாக்ரத்தில் அந்தப் பராமர்சம் உண்டாகின்றது. எதனல் சில கிரந்தக்காரர், விர்த்தி விசிஷ்ட அந்தக்கரணத்தின் காரண அஞ்ஞாந பரியந்தத்தினையே ஆநந்தமய கோச மென்றும், சுழுத்தி என்றும் கூறுகின்றனர்;

சிலரோ, கேவல அஞ்ஞானத்தினை ஆநந்தமய கோச மென்றும், சுழுத்தி யென்றுங் கூறுகின்றனர். இது கொள்ளாக்கால் "நான் நன்றாய்த் தூங்க வில்லை ; எனக்கு விழிப்போடு கூடிய நித்திரை யுண்டாயிற்று" என ஜாக்கிரத்தில் ஒரு காலத்து ஸ்மரணம் உண்டாகின்றது; அதுவும் உண்டாக வேண்டுவ தில்லை. சுழுத்தியில் இவ்வித அநுபவத்தின் அபாவத்தால், அல்லது, ஜாக்ரத்தில் பிராரப்தத்தால் ஸம்பாதிக்கப் பட்ட துக்காநுபவத்தின் ஸம்ஸ்காரத்தினைக் கொண்டு அந்தக்கரணம் தனது காரணத்தில் லயத்தை யடைகின்றது. அதன் பலத்தால் "நான் துக்கியாய்த் தூங்கினேன்" எனப் பராமர்சம் ஜாக்ரத்தி லுண்டாகின்றது. சுழுத்தியில் துக்க ஸம்ஸ்கார விசிஷ்ட அந்தக்கரணம் தன் காரணமாகிய அஞ்ஞாந ரூபமாக இருத்தலின், அல்லது, சாந்தியாதி விர்த்தியினை யுடைய அஞ்ஞாநம் ஆண்டு விருத்தியுடையதாயிருத்தலின்.

(3) சுழுத்தி சுழுத்தி.

(3) ஆண்டே "நான் ஒன்றும் அறிய வில்லை" என்னும் ஆகாரமாக உண்டாம் அஞ்ஞாநத்தின் தமோ குண ஸம்பந்த விர்த்தி சுழுத்தியில் சுழுத்தியாம். அது "நித்திரையின்கண் காட மூடனாய்த் தூங்கினேன்" என்னும் ஜாக்ர பராமர்சத்தால் அநுமேய மாகின்றது.

(i) சுழுத்தி ஜாக்ரம்.

இப்பொழுது ஞாநி யிடத்திலும் மூன்று சுழுத்தியினைக் காண்பிப்பாம்:—

(i) அல்லது, சுழுத்தியினிடத்தும் சுத்தாத்மாநந்தத்தை விஷயமாக வுடைய ஜாக்ரத்தின் திட அப்யாஸ ஸம்ஸ்காரத்தின் வசத்தால் ஞாநிக்கு விக்ஷேப சக்தி யுடைய அஞ்ஞாநத்தின் பரிணாம ரூப ஸாத்விகமாக நிரூபாதிக ஸுகாகார விர்த்தி யுண்டாகின்றது; அது சுழுத்தி ஜாக்ரமாம். அதுவும் அங்ஙனமே ஜாக்ர ஸ்மரணத்தால் அநுமிக்கற்பாலதாம்.

(ii) சுழுத்தி ஸ்வப்நம்.

(ii) ஆண்டே அஞ்ஞாநத்தின் லேசத்தாலும், பிராரப்தத்தின் வசத்தாலும் "நான் துக்கி" என ஒரு கால் துக்காகார ரஜோ குண ஸம்பந்த அஞ்ஞாநத்தின் விர்த்தி யுண்டாகின்றது ; அது சுழுத்தி



ஸ்வப்நமாம். அதுவும் அங்ஙனமே ஜாக்ர பராமர்சத்தால் அநுமிக்கத் தக்கதாம்.

(iii) சுழுத்தி சுழுத்தி.

(iii) அந்த அஞ்ஞாநத்தின் லேசத்தானே "நான் ஒன்றும் அறிய வில்லை" என்னும் ஆகாரமாய்த் தமோ குண ஸம்பந்த விர்த்தி யுண்டாகின்றது ; அது சுழுத்தி சுழுத்தியாம். அதுவும் அங்ஙனமே ஜாக்ர ஸ்மரணத்தால் அநுமாநஞ் செய்தற்கு யோக்யமாம். இங்ஙனம் பிராரப்த அதீநம் கூறிய மும்மூன்றுவித ஜாக்ராதி மூன்று அவஸ்தைகளும் புத்தியின் தர்மங்களாம் ; ஆத்மாவின் தர்மங்க என்றும். அங்ஙனமாயினும், அஞ்ஞாநி, ஆத்மா புத்திகளின் தாதாத்மிய அத்தியாஸத்தால் அவ்வவஸ்தைகளைத் தன்னிடத் தங்கீகரித்து அநந்தக் கிலேசாதிகளை யடைகின்றனன். அத்தியாஸம் நிவிர்த்தியா யிருக்கின்ற ஞாநியோ அவற்றை மித்தை யென்றும், அந்ய தர்ம மென்றும் அறிந்து ஸதா தனது ஸ்வரூபமாகிய அஸங்காத்மாவில் நிலைத்திருக்கின்றனன். ஆதலால், ஜிஞ்ஞாஸுக்களும் வேதாந்த விசாரத்தால் இம் மூன்று அவஸ்தைகளின் அபிமாநத் தியாகத்தின் பொருட்டுப் புருஷார்த்த (யத்ந)த்தைச் செய்வது யோக்யமாம்; போக்யம், போக்தா, போக ரூப திரிபுடியோடு கூடிய பிரபஞ்சம் மாயா ரூப ஸ்வப்நமும், மநோரத ரூபமுமாக இருத்தலின்.

**2—40. ஆத்மா.**

மூன்று ஆத்மாவினைக் கூறுவாம்:—ஞாநாத்மா மஹாநாத்மா சாந்தாத்மா என்னும் பேதத்தால் ஆத்மா மூ வகைத்தாம்.

(1) ஞாநாத்மா.

(1) வர்ணாச்ரமாதி அபிமாநத்தோடு கூடிய பரிச்சிந்ந வியஷ்டி விசேஷ அஹங்கார அவச்சிந்ந சேதநம் ஞாநாத்மாவாம்.

(2) மஹாநாத்மா.

(2) ஸர்வ வியஷ்டி அஹங்கார அநுகத அபரிச்சிந்ந ஸமஷ்டி ஸாமாந்ய அஹங்கார அவச்சிந்ந சேதநம் மஹாநாத்மா(பெரிய ஆத்மா) வாம்.

(3) சாந்தாத்மா.

(3) இரு வித அஹங்கார அநவச்சிந்ந சுத்த சேதநம் சாந்தாத்மா வாம்.

(எந்த ஜிஞ்ஞாஸு ப்ரத்யகாத்மாவினை அஸங்கமாக அறிந்து இரு வித அஹங்காரத்தில் தாதாத்மியாத்தியாஸம் செய்யா திருக்கின்றனனே அவனே தனது ஸ்வரூப சாந்தாத்மாவினை யடைகின்றனன்.)

## 2—41. தாபம்.

ஸ்வர்கத்தின்க ணுள்ள மூன்று தாபத்தினைக் கூறுவாம்:—க்ஷய அதிசய ஸாஹஸ பதந மென்னும் பேதத்தால் ஸ்வர்க்க லோகத்தில் தாபம் மூ வகைத்தாம்.

(1) க்ஷய தாபம்.

(1) சாஸ்திரத்திற் கூறிய பிரகாரம் ஸ்காம கர்ம அநுஷ்டாநத்தால் உத்பந்நமாய் புண்ய ரூப அபூர்வத்தால் சரீரம் விழுந்ததன் பின்னர்த் தேவ சரீரத்தால் அடையப்படும் ஸ்வர்க்க ஸம்பந்தி திவ்ய போகமாய ஸ்ருக் சந்தநம் அப்ஸராவிஹாரம், அமிருத பாநாதி ரூப பிரதிதிந போகங்களால் அப் புண்யம் க்ஷயமாகின்றது என்னும் சிந்தநத்தால் போக காலத்தின்கண்ணும் உண்டாம் "விழுவோம்" என்னும் பயத்தால் ஜநித்த தாபம் க்ஷய தாபமாம்.

(2) அதிசய தாபம்.

(2) புண்ய ரூப அபூர்வத்தின் உத்கிருஷ்டத் தன்மையால் ஸ்வர்க்கத்தில் அடைந்த வேறு புருஷனுக்கு, அதிகாரத்தை யுடைய ஆஜாந தேவர்களா லடையப்பட்ட தன்னினும் அதிகமாக முற்புகன்ற போகத்தினைப் பார்ப்பதால் உண்டாம் தன்னிடத்தில் ஸகிக்கக் கூடாத்தன்மை ரூப தாபம் அதிசய தாபமாம்.

(3) ஸாஹஸ பதந தாபம்.

(3) போகத்தால் ஸம்பூர்ண புண்யத்தின் நாசமான பின் ஈஸ்வரன் நியமித்த (நியம) அநுஸாரம் அலௌகிக போகத்தின் வியோகத்தால் உண்டாம் சோகாக்நியால் ஜல ரூபமான தேவ சரீரத்தின் தஹநத்தின் பின் ஆஜாந தேவர்களால் பலத்தால் தன்னை ஸ்வர்க்க தேசத்தினின்றும் கீழே தள்ளுதல் ஸாஹஸ பதந தாபமாம்,



(எதனல் ஸ்வர்க்கப் பிராப்தியின் ஹேதுவாய ஜோதிஷ்டோம தர்ச பூர்ண மாஸாதி கர்மங்கள், அந்தரங்க பஹிரங்க இஷ்டிகளின் அநுஷ்டாநத்தினை யபேக்ஷிக்கின்றன; திரவ்யம், தேவதை, தேசம், காலம், மந்திரம், ரித்விக், நாநாவித அவ்யாதி ரூப ஸாமக்கிரியின் ஸம்பாதநத்தில் அநந்த கிலேசம் உண்டாகின்றன; ஸ்வராதி அபராதம் அங்க வைகுண்யத்தால் ஸம்யக் பலத்தின் பிராபக மன்றும்; அநந்த சிரமத்தால் சம்பாதிக்கப்பட்ட தநாதிகளின் நாசத்திற்கு ஹேதுவாம். அஃது எப்பொழுது ஸர்வஸாமக்கிரியின் நிர்விக்நத் தன்மையால் பூர்ணாஹுதி பர்யந்தம் பிராப்த மாகின்றதோ, அப்பொழுது அதனல் உண்டாய புண்ய ரூப அபூர்வ வாயிலாய் ஸ்வர்க்கப் பிராப்தி யுண்டாகின்றது. எப்பொழுது அந்த ஸ்வர்க்க ஸம்பந்தியாய ஸுகமும், ஸாதிசயாதி தோஷத்தால் துஷ்டமும், கீழே விழுதல் முதலிய பயத்தாலும் ஒரு காலத்தி லிருத்தலாலும் தாபத்தின் ஹேதுவும் க்ஷணிகமுமாமோ அப்பொழுது கிலேசம்,சிரமம்,தநாதி நாசமின்றிச் சாத்தியமாய் ஆவஸ்யக பலத்தை உடையதாய பகவத் பக்தி, அல்லது வேதாந்த சிந்தநாதிகளில் ஆதரவு செய்யாதும், விஷய சுகத்தின் ஆசையால் மித்தியா பலத்தின் பொருட்டு அநந்த கிலேசத்தினைச் சிரஸின்கண் தூக்கிக் கொண்டும் விஷய லம்படனுகிய அஜிதேந்திரிய னன்றி வேறு எந்த விரக்த அதிகாரி இங்ஙன மிருக்கின்றான்? "எங்ஙனம் கர்மத்தினால் ஸம்பாதித்த மநுஷ்ய லோகம் நாசத்தினை யடைகின்றதோ அங்ஙனமே பரலோகத்தில் புண்ணியத்தாற் சம்பாதித்த ஸ்வர்க்க லோகமும் நாசத்தை யடைகின்றது" என்பதாதிப் பிரமாணத்தால்.)

## 2—42. நாதம்.

நாதாதி மூன்றினைக் கூறுவாம்:—நாதம் கலை பிந்து என்னும் பேதத்தால் நாதாதி மூ வகையாம்.

(1) நாதம்.

(1) ஸ்தூல ஸூக்ஷ்ம பேதத்தால், அல்லது வியக்தாவியக்த பேதத்தால், அல்லது திரி மாத்ர அமாத்ர பேதத்தால் ஓங்காரம் இரு வகைத்தாம். பிரஹ்மத்தோடு எதற்கு வாச்சிய வாசக பாவ சம்பந்தம் இருக்கின்றது. எதற்கு அகாராதி மூன்று மாத்திரையின் ஸகுண ஸோபாதிகப் பிரஹ்மம் வாச்சியமாம், நிருபாதிக சேதநம் லக்ஷியமாம்.

"இவ் வெல்லா வாக்கும் ஓங்காரமாம்" என்னும் சுருதியால் ஸர்வ வாக்கின் ஹேது கூறப்பட்டு இக்கின்றது. விசாரத்தில் ஸமர்த்தின்றிய விரக்தி யுடைய ஜிஞ்ஞாஸுக்களின் உபாஸனையின் பொருட்டுச் சுருதி எதனை ஸகுண நிர்க்குணப் பிரஹ்ம ரூபமாகக் கூறுகின்றது. விரக்த உபாஸகர் ஏக மாத்திரை, த்வி மாத்திரை, திரி மாத்திரை, சதுர் மாத்திரை முதலிய பேதத்தால் தத்தம் குரு உபதேசித்த மார்க்கத்தால் எதனைப் பிரஹ்ம ரூபமாய்த் தன்னினும் அபிந்நமாக நிரந்தரம் உபாஸிக்கின்றனர்; சிலரோ மந்திர ரூபமாக அறிந்து, குரு கூறிய அநுஸாரம் மநதோடு பிராணனால் எதனை ஜபிக்கின்றனர்; சிலர் உபாம்ஸு (ஓஷ்ட மாதிரத்தாற் செய்யப்பட்ட) ஜபம் செய்கின்றனர்; சிலர் வைகாரி வாணியால் ஜபிக்கின்றனர்; இவ்வித ஓங்காரம் நாத சப்தத்தின் அர்த்தமாம்.

அல்லது, அகாரம் முதலிய அக்ஷரங்களின் ஸமுதாய ரூப சப்தப் பிரஹ்மம் நாதமாம். எதன் அகாரம் வேதாதி சதுர்த்தச வித்தையின் பிரஸ்தாந ரூபமாம்; சர்வார்த்தத்தினையும் பிரகாசிப்பதாம்; எதனை வேதாந்திகள் ஈஸ்வரனது சுவாஸம் போன்று கூறுகின்றனர். எது வரை நிலையான ஸாபேக்ஷ நித்திய மென்கின்றனர். மீமாம்ஸகர் எவ் வர்ண ரூப சப்தப் பிரஹ்மத்தினை விபு என்றும் நிரபேக்ஷ நித்திய மென்றும் கூறுகின்றனர். தனித் தனி உச்சாரண பேதத்தால் அகார முதலிய அக்ஷரங்களின் உத்பத்தியும் பேதமும் விளங்குகின்றன; அது விசித்ர புருஷனின் த்வநி ரூப உபாதியாற் செய்யப்பட்டதாம்; பிராந்தி ரூபமாம். புருஷத் த்வநி எதன் அபி வ்யஞ்சகமாம். விபுவும் நித்தியமுமாய வர்ணம் எதனால் அபிவியங்கியமாம். நையாயிகர்கள் எந்த அக்ஷர ரூப சப்தப் பிரஹ்மத்தினை அநித்யமாக அங்கீகரிக்கின்றனர். ஆகாசத்தினை எதன் உபாதாந காரணமாக அங்கீகரிக்கின்றனர். ஹிருதயம், உரம், கண்டம், தாலு (நாக்கு) முதலிய இடத்தால் பிராண வாயுவின் சையோகத்தினை எதன் நிமித்த காரணமாக அங்கீகரிக்கின்றனர். வையாகரணர் வர்ண ஸமுதாய ரூப பத ஸ்போட மென்றும், பத ஸமுதாய ரூப வாக்ய ஸ்போட மென்றும் எதனைக் கூறுகின்றனர். க(ம)கார, ககாராதி வர்ணம் எதன் அபிவியஞ்சகமும், ஸ்போடம் அபிவியங்கியமும், நித்தியமுமாம். பதத்தில் வர்ணம் அநேகமும் கிரமமாக உத்பந்நமும் ஆகின்றன. வாக்கியத்திலும் பதம் அநேகமாம்; கிரமமாக உண்டாவனவாம். அவையோ இது ஒரு பதமாம், இது ஒரு வாக்கியமாம் என்னும் பிரதீதியின் விஷயமாவ தின்று. ஆதலால், இப் பிரதீதியின் விஷயம் ஒரு ஸ்போடமேயாம். வர்ண ரூப பத வாக்கியங்களின் அர்த்தத்தின் பிரகாசகமாம். இவ்விதச் சப்த ரூபப் பிரஹ்மம் நாத மெனப்படும்.



அல்லது, பரா, பஶ்யந்தி, மத்தியமா, வைகரி என்னும் பேதத்தால் நான்கு பிரகாரமாகக் கூறப்படும் வாக்கு நாதமாம். அவற்றுள், பரா வாணி பஶ்யந்தி முதலியவற்றின் காரணமும், அவ்யக்தமுமாம். எப்பொழுது புருஷனுக்கு "நான் சில கூறுகின்றேன்" என ஸாமாந்ய இச்சை யுண்டாகின்றது, அப்பொழுது பரா வாணி பரிணமத்தினை யடைந்து பஶ்யந்தி ரூபமாய்க் கிஞ்சித் அபிவ்யக்தமாகின்றது. எப்பொழுது "இவ் வசநத்தைக் கூறுவேன்" என விசேஷ புத்தி யுண்டாகின்றது, அப்பொழுது அஃதே அவ் வசநாகார பரிணமத்தினைப் பெற்று மத்தியமா வாகின்றது. எப்பொழுது தனது பிரயத்நத்தால் பிராண வாயுவினை மூலதேசத்தினின்றுங் கிளப்பி, ஹிருதயம், கண்டம், தாலு, ஓஷ்டம் (உதடு), ஜிஹ்வையின் நுநி, தந்தம் (பல்) முதலிய எட்டுத் தேசங்களோடு பிராணவாயுவின் சையோக வாயிலாய்ப் புருஷன் வசநத்தினை உச்சரிக்கின்றானோ அப்பொழுது அது பரிணமத்தினைப் பெற்று, வைகரீ வாக் காகின்றது. வேதம், வேதாங்கம், தர்ம சாஸ்திரம், நியாயம், மீமாம்ஸை முதலிய ஸர்வ சாஸ்திரங்களும் எதன் விஸ்தாரமா யிருக்கின்றன. லௌகிக அநந்தப் பிரகாரமாய பாஷாதி ரூப வாணியும் எதன் விஸ்தாரமா யிருக்கின்றது. இவ்வாறு நான்கு வித வாணியும் நாத சப்தத்தின் அர்த்தமாம்.

## (2) கலை.

(2) கலை யென்னும் பெயர் அம்சத்தினுக்காம். அகாராதி மூன்று மாத்திரையின் ஸமுதாய ரூப ஓங்காரத்தின் அகாராதி ஒவ்வொரு மாத்திரா ரூப அம்சம் கலா சப்தத்தின் அர்த்தமாம். எதனால் ஓங்காரத்தின் உபாஸகர் சிலர் ஏக மாத்திரா ரூபமாகவும், சிலர் இரண்டு மாத்ரா ரூபமாகவும், சிலர் ஸமுதாய மாத்திரா ரூபமாகவும் அறிந்து ஓங்காரத்தினை உபாஸிக்கின்றனர். அல்லது, உபாஸகர்களின் ஸங்கேதத்தால் (குறியால்) பரா ரூப வாணியும் கலை யெனப்படுகின்றது.

எதனின்றும் ஸர்வ வர்ணங்களும் உத்பத்தியாய் எதன்கண் லயத்தை அடைகின்றன.

### (3) பிந்து.

(3) எது ஸர்வத்தின் அதிஷ்டாந, ஸாக்ஷி, சேதந, அஸ்திபாதிப் பிரிய ரூபங்களால் ஓங்காரத்தில், அல்லது, சப்தப் பிரஹ்மத்தில், அல்லது, பராதி நான்கு வாணியில் அநுகதமாம், தான் அமாத்ரையாம், அகாராதி மாத்திரை வர்ணங்களினின்றும் அதீதமாம், அஃது உபாஸகர்களின் ஸங்கேத அநுஸாரமாகப் பிந்து சப்தத்தின் அர்த்தமாம். அல்லது, பிந்து வென்பது வியஞ்சந அநுஸ்வார வர்ணங்(மெய் உயிர் எழுத்துக்)களாம். அஃது எங்ஙனம் சர்வ வர்ணங்களின் ஸிரஸின்மீதிருக்கின்றது. முதல் வேற்றுமையின் முடிவும், இரண்டாம் வேற்றுமையின் முடிவாகிய எல்லாப்பதங்களோடும் சேருகின்றனவோ, அங்ஙனமே ஸாக்ஷி சேதநமும் ஸர்வ வர்ணங்களின்மீது விளங்குகின்றது; அதிஷ்டாநத் தன்மையால் ஸர்வத்திலும் அநுகதமா யிருக்கின்றது. ஆதலால், துரீய சேதநம், கௌணி விர்த்தியால் பிந்து எனப்படுகின்றது.

(தத் த்வம் பதார்த்த விசாரத்திலும், பிரஹ்மாத்ம ஏகத்வ ரூப வாக்கியார்த்த விசாரத்திலும் நாதாதிகட்கு ஸாக்ஷாத் உபயோகமின்று; அங்ஙனமாயினும், சித்த ஏகாக்ரத்தன்மையின் பொருட்டு உபநிஷத்திலும் ஸர்வ சாஸ்திரத்திலும் ஸகுண நிர்க்குணப் பிரஹ்ம ரூப ஓங்காரத்தின் விவித (நாநாவித) உபாஸனை கூறப்பட்டிருக்கின்றது. அதன்கண் இதற்கும் உபயோக மிருக்கின்றது. ஆதலால், வேதாந்த சஞ்ஞா என்னும் கிரந்தத்திற் கூறிய எண்ணிக்கையின் அநுஸாரம் ஈண்டும் ஜிஞ்ஞாஸுவின் ஞாநத்தின் பொருட்டுக் கூறப்பட்டது.)

இப்பொழுது உபாஸனையின் பிரசங்கத்தால் ஸகுண நிர்க்குணப் பிரஹ்மரூப ஓங்காரத்தின் உபாஸனையையும், சாஸ்திரத்திற் கூறப்பட்டிருப்பதாய அதன் அர்த்தத்தின் சிந்தனையையும், அதன் பலத்தையும், உபாஸனையின் ஏழு ஸித்தாந்தத்தினையும், அதன் பத்துப் பெயர்களின் அர்த்தத்தினையும் ஜிஞ்ஞாஸுவின் போதத்தின் பொருட்டுக் கிரமமாகக் காட்டுவாம்:—



### (i) ஓங்காரத்தின் சகுண உபாஸனை.

அதிகாரி, ஸராஸர ரூப ஜகத், அதனை உபாதியாக வுடைய ஜீவேஶ்வரர்கள் ஆகிய இவ்வெல்லாம் ஓங்கார மாத்திரைகளால் சிந்திக்கப்படுதலின் வாசகமாம். ஜகத் ரூப உபாதி ஸஹித ஜீவேஶ்வரர்கள் வாச்சியமாம்; வாச்சிய வாசகத்தின் அத்தியந்த பேத மின்மையின். அதனைக் காண்பிப்பாம்:—

வியஷ்டி ஸ்தூல சரீர உபாதியை யுடைய விஶ்வனும், ஜாக்ராபிமாநியாகிய பஹிர்ப் பிரக்ஞனும், அவற்றோடு கூடிய ஸமஷ்டி ஸ்தூல சரீர உபாதியை யுடைய விராட் ஈஶ்வரனும் அகாரத்தின் வாச்சியமாம். அந்த விஶ்வ ஸஹித விராட் அகாரத்தின் ரூபமே யாம். வியஷ்டி ஸூக்ஷ்ம சரீர உபாதியை யுடைய தைஜஸனும், ஸ்வப்ந அபிமாநியாகிய அந்தர்ப் பிராக்ஞனும், அவற்றோடு கூடிய ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீர உபாதியினை யுடைய ஹிரண்யகர்ப்பனாகிய ஈஶ்வரனும் உகாரத்தின் வாச்சியமாம். அது ஸர்வ உகாரத்தின் ரூபமாம். வியஷ்டி அவித்தையை உபாதியாக வுடைய பிராக்ஞனும், ஸுஷுப்தி அபிமாநி ஆநந்த போக்தாவாகிய பிரக்ஞாநகநனும், அவற்றோடு உடிய அவ்யக்த உபாதியை யுடைய ஈஶ்வரனும் மகாரத்தின் வாச்சியமாம். அது அவ்வெல்லா மகாரத்தின் ரூபமே யாம். "இவ்வித சர்வ ரூப ஓங்காரம் நான்" என்னும் பாவனையோடு (கூடிய) ஓங்காரத்தின் உபாஸனை ஸகுண உபாஸனையாம்.

### (ii) ஓங்காரத்தின் நிர்க்குண உபாஸனை.

இப்பொழுது நிர்க்குண உபாஸனையின் கிரமத்தினைக் காட்டுவாம்:—உத்தமாதிகாரி அகார அக்ஷரத்தினைத் தனது வாச்சியார்த்தத்தோடுகூட உகார அக்ஷரத்தில் லய சிந்தனை செய்க. லயம் என்பது தனது வாச்சியத்தோடு உகாரத்தின் ரூபமாக அறிதலாம். ஜாக்ராபிமாநி விஶ்வனோடு கூடிய வைஶ்வாநரன், தைஜஸ ஸஹித ஹிரண்யகர்ப்பனது ரூபமாம்; காரியம் காரணத்தினும் வியதிரேக மன்மையின். ஹிரண்யகர்ப்பனே உகாரத்தின் ஸ்வரூபமாம்; அதன் வாச்சியமாகலின். ஸ்வப்ந அபிமாநி தைஜஸ ஸஹித ஹிரண்யகர்ப்பனே உகாரத்தின் ஸ்வரூபமாம்; அதன் வாச்சியமாகலின். ஸ்வப்ந அபிமாநி தைஜஸ ஸஹித ஹிரண்யகர்ப்ப ரூப உகாரத்தினை ஸுஷுப்தியபி

மாநி பிராக்ஞ ஸஹித ஈஸ்வர ரூப மகாரத்தில் லயஞ் செய்க. அப்பொழுது இங்ஙனஞ் சிந்திக்க:--தைஜஸ ஸஹித ஹிரண்யகர்ப்பன் ஈஸ்வரனது ரூபமாம்; அவனது காரியமா யிருத்தலின்; காரணம் காரிய ரூபத்தானே நிலைத்திருத்தலின். மகார ரூபமே ஈஸ்வரனாம்; அதன் வாச்சிய மாகலின். பிராக்ஞாபிந்ந ஈஸ்வர ஸஹித மகாரத்தினை அதன் அதிஷ்டாந சுத்த சேதநத்தில் லயஞ் செய்க; சுத்த சேதநம் வாச்சிய வாசக மிரண்டின் அதிஷ்டாநமாக இருத்தலின் லயஞ்செய்க. கூறிய வாச்சிய வாசகபாவ மிரண்டின் சுத்த சேதநம் பிரஹ்ம ரூபமேயாம் எனச் சிந்திக்க. "இவ் விதச் சுத்த சேதநப் பிரஹ்மம் நான்" என்னும் அநுஸந்தாநத்தோடு செய்யும் ஓங்காரத்தின் உபாஸனை நிர்க்குணப் பிரஹ்ம ரூப ஓங்கார உபாஸனையாம்.

இவ் வோங்கார உபாஸனையின் கிரமம் இஃதாம்:--மகார வாச்சிய மாயா உபாதி யுடைய பிராக்ஞனோடு அபிந்நமான ஈஸ்வர சைதந்யத்தினின்றும் தைஜஸனோடு அபிந்நமான ஸமஷ்டி லிங்க சரீர உபாதியினையுடைய ஹிரண்ய கர்ப்ப சேதநம் உகாரத்தின் வாச்சியமாகப் பிரகடமாகின்றது.அதுமாயா உபாதியினையுடைய ஈஸ்வரனதுரூபமேயாம்; காரிய காரணங்கட்கு அநந்யமாகலின். வியஷ்டி உபாதியை யுடைய விஸ்வஸஹித ஸமஷ்டி (ஸ்தூல)சரீர உபாதியை யுடைய விராட் சைதந்யம் அகார வாச்சியமாம்.அதுஉகார ரூபதைஜஸனோடு அபிந்நமான ஹிரண்யகர்ப்பனது ரூபமாம்; அதனது காரிய மாகுதலின். காரண உபாதியை யுடைய ஈஸ்வரன், ஓங்காரத்தின் லக்ஷிய சுத்த சேதந ஸர்வ அதிஷ்டாநத்தின் ரூபமாம். ஆதலால், எப் புருஷன் குரு வாயிலாய் இவ்வாறு ஓங்கார ரூப ஸகுண நிர்க்குணப் பிரஹ்மத்தின் உபாஸனையினை "நான் அந்த ரூபன்" எனச் செய்கின்றான், அப் புருஷன் உபாஸனையின் திடத்தன்மையால் ஞாநோத்பத்தியின் வாயிலாய் முத்தியினை யடைகின்றான். எதனால் எங்ஙனம் அவகாசத்தின் பிந்நமாக ஆகாசத்திற்கு ரூப மின்றோ, ஜலத்தினும் பிந்நமாக ஸமுத்திரத்திற்கு ரூப மின்றோ, உஷ்ணத் தன்மையினும் பிந்நமாக அக்நிக்கு ரூப மின்றோ, சீதத் தன்மைப் பிந்நமாகப் பனிக்கட்டிக்கு ரூப மின்றோ, சலிக்கும் தன்மையின் பிந்நமாக வாயுவிற்கு ரூப மின்றோ, கிருஷ்ணத் தன்மையினும் பிந்நமாகக் கஜ்ஜலத்திற்(மைக்)கு ரூபம் அற்பமுமின்றோ அங்ங



னமே ஓங்கார ரூப ஸகுண நிர்க்குணப் பிரஹ்மத்தினும் பிந்நமாக அற்பமும் ஜகத்திற்கு ரூப மின்று என ஜிஞ்ஞாஸு பாவிக்க.

ஆதலால், இந்த ஓங்கார உபாஸனை ஸர்வ உபநிஷத்தின்கணும் சிரேஷ்ட மென்று கூறப்பட்டிருக்கின்றது. இஃது அங்கி உபாஸனையாம். அந்ய எல்லா உபாஸனையும் இதன் அங்கமாம். எதனால் இந்த ஓங்கார மென்னும் பெயர் பரமேஸ்வரனது ஸ்வாபாவிகமாம்; மற்றஎல்லா நாமங்களும் குணக் கிரியைகளின் ஸம்பந்தத்தாலாம்.எங்ஙனம் தேவதத்தனுக்குப் பிதா புத்ராதி நாமங்கள் கௌணமும், ஸாபேக்ஷமுமாம்; மநுஷ்ய நாமம் ஸ்வாபாவிகமாம். ஓங்காரம் சப்தப் பிரஹ்மமாம். எல்லாப் பிரபஞ்சங்களிலும் தர்சந சிரவணாதியின்கண் வருவன எல்லாம் சப்தப் பிரஹ்மத்தில் அடக்கமாம். ஓங்கார ரூப சப்தப் பிரஹ்மத்தின் அர்த்தம் பரப் பிரஹ்மமாம். மந வாக்குக்களினின்றும் பரமாம். எவ்வெவ் வுபாஸனை, மந்திரம் அல்லது வித்தை, சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றன, அவ் வெல்லாவற்றிலும் முதலில் ஓங்காரமே வருகின்றது. ஆதலால், ஓங்கார ரூபப் பிரஹ்மத்தின் உபாஸனை எல்லாச் சாஸ்திரங்களிலும், சித்தாந்தக் காரர்களானும், சர்வ உபநிஷத்துக்களிலும் கூறப்பட்டிருக்கின்றது.

### ஓங்கார உபாஸனையின் ஏழு சித்தாந்தம்.

இப் பொழுது அந்த உபாஸனையின்கண் ஏழு சித்தாந்தங்க ளிருக்கின்றன; அதனை ஸங்க்ஷேபமாகக் கூறுவாம்:—

(1) ஹிரண்ய கர்ப்ப சித்தாந்தம், (2) கபில தேவ சித்தாந்தம், (3) அபாந்தர தம முநி சித்தாந்தம், (4) ஸநத் குமார சித்தாந்தம், (5) பிரஹ்ம நிஷ்டர்களின் சித்தாந்தம், (6) பசுபதி சிவனது சித்தாந்தம், (7) பாஞ்சராத்ர சித்தாந்தம் என ஓங்கார உபாஸனையில் ஏழு சித்தாந்தங்க ளிருக்கின்றன.

### (1) ஹிரண்ய கர்ப்ப சித்தாந்தம்.

பிரதமம் ஹிரண்ய கர்ப்ப சித்தாந்தமாம். அதன் அநுசாரிகளோ உபாஸனையின் கிரமத்தினை இங்ஙனங் கூறுகின்றனர்:—எவர்க்குப் பரமாத்மாவின் பாவனையில் இச்சையுண்டாகின்றது அவர் ஓங்காரத்தை இவ்வாறு உபாஸனை செய்க:—ஓங்காரம் மூன்று மாத்திரை,

மூன்று பிரஹ்மம், மூன்று அக்ஷர ரூபமாம். அக்நி, வாயு, சூரியன் மூன்றும் மாத்திரையாம். ரிக், யஜுஸ், ஸாமம் என்பன மூன்று பிரஹ்மமாம். அகார உகார மகாரங்கள் மூன்று அக்ஷரங்களாம். அக்நி ரூபம் ஜீவனும்.வைஶ்வாநரனோடுதாதாத்மியமாய்த் தேஹத்தின்கண் இருக்கின்றனன். வாயுரூப ஸூத்ராத்மா ஈஶ்வரனும்; ஸர்வதேஹத்தின் கண்ணும் அநுஸ்யூதமா யிருக்கின்றது. ஸர்வத்தினையும் பிரகாசிப்பிக்கும் பிரஹ்மரூபம் ஸூரியனும். மூன்று வேதம் சப்தப் பிரஹ்ம ரூபமாம். மூன்று அக்ஷரத்தின் வாச்யம், ஜாக்ர ஸ்வப்ந சுழுத்தியாய மூன்று அவஸ்தா ரூப ஸர்வப் பிரபஞ்சமா யிருக்கின்றது. இவ் வெல்லாம் ஓங்கார ரூபமாம். அஃது எனது ஸ்வரூபமா யிருக்கின்றது எனக் குருவினு லறிந்து பஜிக்கின், அவன் பரமபதத்தை யடைகின்றான். எதனால் ஓங்காரமே பரம தாமமும் பரம பதமுமா யிருக்கின்றது.

(2) ஸேஶ்வர கபில சித்தாந்தம்.

ஸேஶ்வர கபில சித்தாந்தத்தில் இங்ஙனங் கூறப்பட்டிருக்கின்றது:—எவனுக்குப் பரமாத்மாவின் பாவனையில் இச்சை யுண்டாகின்றது அவன் ஓங்காரத்தினை இவ்வாறு உபாஸிக்க. மூன்று ஞானம், மூன்று குணம், மூன்று காரணம் ஆகிய வெல்லாம் ஓங்கார ரூபமா யிருக்கின்றது என்று குருவாயிலாய் அறிந்து ஓங்காரத்தினைச் சிந்திக்கும் அதிகாரி முக்த னாகின்றான்.

அவற்றுள், முதல் மூன்று ஞானத்தினைக் கூறுவாம்:—வியக்த ஞானம், அவ்யக்த ஞானம், ஞேய ஞானம் என்னும் பேதத்தால் ஞானம் மூன்றாம்.

(i) வியக்த ஞானம்.

பஞ்சபூதமும் அவற்றின் காரிய ஸ்தூலப் பிரபஞ்சமாய வெல்லாம் காரிய ரூபத் தன்மையால் வ்யக்தமாம்; அதன் ஞானம் வியக்த ஞானமாம்.

(ii) அவ்யக்த ஞானம்.

பிரகிருதி, மஹத்தத்வம், அஹங்காரம், சப்த தன்மாத்திரை முதலிய பஞ்ச ஸூக்ஷ்ம பூதம் ஆகிய இவ் வெட்டுப் பதார்த்தங்களும் அவ்யக்தமாம். அவற்றுள், பிரகிருதி கேவலம் காரணமேயாம்; ஒன்றன் காரிய மன்று. மஹதாதி எழு பார்த்தங்களும் பிரகிருதியும்



விகிருதியுமாம். தனது காரணமாகிய பிரகிருதி முதலியவற்றின் அபேக்ஷையால் விகிருதியா (காரியமா)ம். அஹங்காராதிப் பதினறு பதார்த்தங்கள் பரியந்தம் தத்தம் காரியத்தின் அபேக்ஷயினல் பிரகிருதியா (காரணமா)ம். ஆதலால், எட்டும் அவ்யக்த பதார்த்தங்களாம்; அவற்றின் ஞானம் அவ்யக்த ஞானமாம்.

(iii) ஞேய ஞானம்.

ஞேய மென்பது சேதந புருஷனும். அது கேவல ஸாக்ஷியாய் நிர்விகாரமாய்க் கூடஸ்தனய் உதாஸீநமா யிருக்கின்றது; ஒன்றன் காரியமு மன்று; காரணமு மன்று; இது மூன்றாவது ஞேய ஞானமாம்.

ஸத்வ ரஜஸ் தம மென்னும் பேதத்தால் தமது காரியத்தோடு மூன்று குணமாம். ஸாத்விகத்தால் தேவதா சரீரமும், தைவீ ஸம்பத் ரூப ஞானமும்,ஸ்வர்க்காதி லோகப் பிராப்தியு முண்டாகின்றன; ராஜஸத்தால் மநுஷ்ய சரீரமும், காம ராகாதி ஆசுரீ ஸம்பத்தியும், மநுஷ்ய லோகப் பிராப்தியு முண்டாகின்றன. தாமஸத்தால் பிரமாதம் ஆலஸ்யம் நித்திரை முதலியவைகளும், பசுவாதிசரீரமும்,நரக லோகப் பிராப்தியு முண்டாகின்றன. இம் மூன்று பிரகாரமாய பலன் மூன்று குணங்களின் காரியமாம். மநம் அஹங்காரம் புத்தி என்பன மூன்றுகாரணங்களாம். ஆதலால்,இவ்வாறு கூறியதால் இவ்வாறு அறிக:—ஓங்கார ரூபம் பிரஹ்மமாம். அது வியக்த ரூபம், அவ்யக்த ரூபம்,புருஷ ரூபம், காரிய ரூபம், ஸாத்விக ரூபம், ஸத்திய ரூபம், அஸத்ய ரூபம், அதிஷ்டாந ரூபம், முக்குண ரூபம், மநம் அஹங்காரம் புத்தி ரூபமா யிருக்கின்றது. ஆதலால், ஸர்வமும் ஓங்காரமேயாம். ஓங்காரத்தின் அகார உகாரமாய இரண்டு மாத்திரைகள் பிரகிருதி ரூப மென அறிக.வ்யஞ்சந (மெய்) அநுஸ்வார ரூபம் மகாரமாம். எதனை அர்த்த மாத்திரை யென்றும் கூறுகின்றனர், அது நிர்க்குண ரூபப் பரம புருஷனும். ஆதலால், இவ்வெல்லாம் ஓங்காரமேயாம். ஓங்காரத்தின் வாச்ய மாயை பிரகிருதி ரூபமாம்; லக்ஷ்ய ரூப அதிஷ்டாந ஸாக்ஷி சச்சிதாநந்த ரூபமாம். இவ்வாறு குரு முகத்தாற் கேட்டு ஓங்காரத்தின் நிரந்தர உபாஸனை செய்பவன் ஸர்வ பந்தநத்தினின்றும் முக்தனய்ப் பரம பதத்தினை யடைகின்றனன்.

### (3) அபாந்தரதம முநியின் சித்தாந்தம்.

அபாந்தரதம முநியின் மதம் இஃதாம்:—எப் புருஷன் ஓங்காரத்தினை மும்முகமாகவும், மூன்று தேவதா ரூபமாகவும், மூன்று பிரயோஜந ரூபமாகவும் அறிந்திருக்கின்றான், இவ்வாறு குரு வாயிலாய் அறிந்து ஓங்காரத்தின் உபாஸனை செய்கின்றான், அப்புருஷன் முக்தனாகின்றான். கார்ஹபத்ய தக்ஷிண ஆஹவநீயம் என்னும் மூன்று அக்நியும் ஓங்காரத்தின் மூன்று முகமாம். அந்நத்தைப் பாகம் பண்ணுவதற்கு ஹேதுவாய க்ருஹஸ்தாஶ்ரமத்தின் அக்நி கார்ஹபத்தியமாம்; அக்நிஹோத்ரத்தின் அக்நி தக்ஷிணமாம். அதன் ரீதி இஃதாம்:—யஞ்ஞோபவீத காலத்தில் வேதியில் அக்நி ஸ்தாபிக்கப்படுகின்றது. அத் திநத்திலிருந்து அதனை நித்யம் பூஜிக்க வேண்டும்; நித்தியம் ஹோமம் செய்யவேண்டும். அந்த அக்நியாலே அந்தத்தில்(தேகத்தைக்) கொளுத்த வேண்டும். ஆதலால் இஃது அக்நி ஹோத்ர ஸம்பந்தி, தக்ஷிண அக்நி எனப்படும். எதன்கண் ஸர்வ தேவதை, பிதிர்க்களின் உத்தேசத்தால் சாஸ்திராநுஸாரமாக ஹோமம் கொடுக்கப்படுகின்றது அஃது ஆஹவநீயமாம். எதனால் ஸர்வ தேவதை முதலியோர்களும் திருப்தியாகின்றனர், எது ஸர்வ புருஷார்த்தத்திற்கும் ஸாதநமாம், இதனை ஓங்காரத்தின் முகமாக அறிக. பிரஹ்மா விஷ்ணு மஹேஶ்வரர்கள் ஓங்காரத்தின் மூன்று தேவதைகளாம்; மந்திரங்களின் பிரவர்த்தகராகலின். தர்மார்த்த காமங்கள் மூன்று பிரயோஜநங்களாம். ஆஹவநீய அக்நி ஜகதுத்பத்தியின் காரணமாம். ஹவந வாயிலாய் மேகமும், மேகத்தால் அந்நமும், அந்நத்தால் வீர்யமும், வீர்யத்தால் ஜீவ சரீரமு முண்டாகின்றன. கார்ஹபத்தியம், ஜகத் பாலநத்தின் காரணமாம். எதனால் அநந்த பிரகாரமான அந்நம் பாகம் பண்ணப்படுகின்றது (அதனால்) அதனைப் புஜித்து ஜீவன் புஷ்டனாகின்றான். தக்ஷிணாக்நி ஸம்ஹாரத்தின் காரணமாம்; அந்தத்தில் சரீரத்தின் தஹநத்திற்கு ஹேதுவா யிருத்தலின். பிரஹ்மா, விஷ்ணு, மஹேஶ்வரர்களாகிய மூன்று தேவதைகளும் உத்பத்தி ஸ்திதி ஸம்ஹாரத்தின் காரணமாம். தர்மார்த்த காமமும் பிரவாக ரூப அநாதி ஸம்ஸாரத்தின் ஆவிர்த்தியின் காரணமாம். தனது இஷ்டப் பிராப்தியின்பொருட்டு, சாஸ்திராநுஸாரமாய ஸகாம கர்ம அநுஷ்டாநத்தால் உண்டாம் புண்ய ரூப



அபூர்வம் தர்மமாம். அதனால் பிராப்தமாம் ஸம்பத்து அர்த்தமாம். அதனால் உண்டாம் யதேச்சா விஷய போகம் காமமாம். அவ்விஷய போகத்தின் அநுபவ ஜந்ய ஸம்ஸ்காரத்தால் மீண்டும் ஜந்மாந்தரத்தில் தர்மத்தின் அநுஷ்டாநமாம். இந்த ரீதியாக, இம் மூன்றும் ஆவிர்த்தியின் காரணமாம். ஆதலால், இச் சர்வ ஜகத்தும் ஓங்கார ரூபமாம். ஓங்காரமே ஜகத் ரூபமாம். ஓங்காரமே ஜீவ ஈஶ்வர பிரஹ்ம ரூபமாம். இங்ஙனம் குருவினால் அறிந்து உபாஸனை செய்பவன் முக்தனாகின்றான்.

### (4) ஸநத்குமார சித்தாந்தம்.

நான்காவது ஸநத்குமார சித்தாந்தம் இங்ஙனங் கூறப்படுகின்றது:—மூன்று கால ரூபம், மூன்று லிங்க ரூபம், மூன்று ஸஞ்ஞா ரூபம் ஓங்காரமா மென வறிந்து, ஓங்காரத்தின் உபாஸனை செய்யின், முக்தியினை யடைகின்றான். பூதம், வர்த்தமாநம், பாவி என்னும் பேதத்தால் காலம் மூ வகைத்தாம்; சென்றது பூதமாம், நடப்பது வர்த்தமாநமாம், மேல் வருவது பவிஷ்யத்தாம். இங்ஙனமே, மாஸத்திலும், வருஷத்திலும், சத்தியாதி யுகத்திலும், கலியிலும் காலத்தின் மூவிதத் தன்மையினை அறிந்துகொள்க. இம் மூவகைத்தாய காலம் ஓங்கார ரூபமாம்; ஸ்திரீ புருஷ நபும்ஸகர்கள் அதன் மூன்று லிங்கங்களாம். விஶ்வ தைஜஸ பிராஞ்ஞர்கள் அதன் மூன்று பேர்களாம். இதன் பொருள் இஃதாம் :—ஓர் ஓங்காரமே மூன்று கால ரூபத்தினையும், ஸ்திரீ புருஷ நபும்ஸக ரூபத்தினையும், விஶ்வ தைஜஸ பிராஞ்ஞ ரூபத்தினையும் தரித்திருக்கின்றது. ஓங்காரத்தின் பிந்ந வஸ்து ஒன்று மின்று. ஸர்வமும் ஓங்கார ரூபமாம் என்று குருவால் அறிந்து உபாஸனை செய்பவன் முக்தனாகின்றான்.

### (5) பிரஹ்மநிஷ்டர் சித்தாந்தம்.

ஐந்தாவது பிரஹ்மநிஷ்டர்களோ இங்ஙனங் கூறுகின்றனர்:—எது மூன்று ஸ்தாந ரூபமாம்; மூன்று பத ரூபமாம்; மூன்று பிரஞ்ஞா ரூபமாம். நான் அவ் வோங்காரத்தின் உபாஸனை செய்கின்றேன். ஹிருதயம், கண்டம், தாலு (வாய்) மூன்றும் அதன் ஸ்தாநமாம். உச்சாரண காலத்தில் ஓங்காரம் இம் மூன்று ஸ்தாநங்களில் வெளிப்படுகின்றது. ஜாக்ர ஸ்வப்ந சுஷுப்தியாய மூன்றும் இதன் பதங்களாம்,

பஹிர்ப் பிரஞ்ஞை, அந்தர்ப் பிரஞ்ஞை, கநப் பிரஞ்ஞைகள் மூன்று பிரஞ்ஞா ரூபமாம். இவ் வொன்பது பிரகாரமும் கூறிய ஓர் ஓங்காரமேயாம். இஃதே ஸர்வ வியாபியாம். பஹிர்ப் பிரஞ்ஞா ரூபன் விசுவனும்; அந்தர்ப் பிரஞ்ஞா ரூபம் தைஜஸனும்; கநப் பிரஞ்ஞா ரூபம் பிராஞ்ஞனும். இம் மூன்று ரூபமாய் ஓங்காரம் இத் தேஹத்தி லிருக்கின்றது. ஸ்தூல அபிமாநியாய விசுவன் வைசுவாநர ரூபனும்; அவன் பஹிர்திருஷ்டியால் போக்தாவாம். ஸூக்ஷ்மாபிமாநியாய தைஜஸன் ஹிரண்யகர்ப்ப ரூபனும்; அவன் அந்தர் திருஷ்டியால் போக்தாவாம். சுழுத்தி யபிமாநியாய பிராஞ்ஞன் ஈஶ்வர ரூபனும். அவன் ஆநந்தத்தின் போக்தாவாம். (ஓங்காரம்) ஸாத்விக விர்த்தியால் ஜாக்ரப் பிரபஞ்சத்தினைப் பார்க்கின்றது; ராஜஸ விர்த்தியால் ஸ்வப்நத்தினைப் பார்க்கின்றது. தாமஸ விர்த்தியால் சுழுத்தியினைப் பார்க்கின்றது. ஜாக்ர தாம (இட)த்தில் சப்த ஸ்பரிசாதி ஸ்தூல போக மிருக்கின்றது; ஸ்வப்ந தாமத்தில் வாஸநாமய சப்தாதி போக மிருக்கின்றது; அது ஸூக்ஷ்மமாம்; சுழுத்தியில் பிரஹ்மாநந்தத்தின் பிரதிபிம்ப ரூப போகம் இருக்கின்றது. இப் போக போக்தாக்களாய எல்லாவற்றினையும் ஸாக்ஷி கேவலம் அறிகின்றது. அது முக்தி ஸ்வரூபமாம். ஆதலால், யாது இம் மூன்று ஸ்தாநம், மூன்று பதம், மூன்று பிரஞ்ஞா ரூபம் என்று கூறப்பட்டது அஃது ஓர் ஓங்காரமேயாம். ஓங்கார ரூப ஈஶ்வரனே சர்வ ஜகத்தின் கர்த்தாவாம். ஸத்துக்கள் (ஸாதுக்கள்) இங்ஙனம் நிச்சயஞ் செய்தார்கள்; வேதத்தின்கண்ணும் இவ்வாறு கூறப்பட்டிருக்கின்றது:—ஓங்காரம் ஈஶ்வர ரூபமாம்; ஈஶ்வர ரூபமாய் ஜகத்தின் உற்பத்தியினைச் செய்கின்றது. ஓங்காரம் ஜீவ ரூபமாம்; ஜீவ ரூபமாய்ப் போக்தாவா யிருக்கின்றது. ஓங்காரமே ஸாக்ஷியாய் அறிகின்றது. ஓங்காரமே திருசிய ரூபமா யிருக்கின்றது. இங்ஙனம் போகம் போக்தா ஸாக்ஷி ரூபமாய் ஓங்காரத்தினைக் குருவாயிலாய் அறிந்து உபாஸனை செய்பவன் முக்தியினை யடைகின்றான்.

### (6) பசுபதியின் சித்தாந்தம்.

பசுபதியின் மதத்தினைக் கூறுவாம்:—ஓங்காரமாய விபு ஈஶ்வரனை நான் உபாஸிக்கின்றேன். எது ஒன்பது பிரகாரமா யிருக்கின்றது; மூன்று அவஸ்தா ரூபமாய், முப் போக ரூபமாய், மூன்று போக்தா ரூபமா யிருக்கின்றது; சாந்த கோர மூடங்கள் மூன்று



அவஸ்தைகளாம். இதனை ஜாக்ர ஸ்வப்ந சுழுத்தி யென்றுங் கூறுவர். ஜாக்ர முதலிய ஒவ்வொரு அவஸ்தையிலும் சாந்தியாதி மும்மூன்று உண்டாகின்றன. அதனைக் காண்பிப்பாம்:—ஜாக்ரத்தில் உள்ளபடி வஸ்துவின் பாநம் சாந்தாவஸ்தையாம். வேறு வித விளக்கம் கோராவஸ்தையாம்; எங்ஙனம்? இரஜ்ஜுவில் சர்ப்பமாம். ஒரு காலத்து ஒன்றுந் தோன்றா திருத்தல் மூடாவஸ்தையாம். ஸ்வப்நத்தில் எப் பதார்த்தம் எங்ஙனம் இருக்கின்றது அங்ஙனமே அதன் விளக்கம் சாந்த அவஸ்தையாம். வேறுவித விளக்கம் கோர அவஸ்தையாம். ஸ்வப்நத்தில் ஒரு காலத்து ஒன்றுந் தோன்றாதிருத்தல் ஸ்மரணத்தில் வாராதிருத்தல் மூட அவஸ்தையாம். நித்திரையோடு கூடிய புருஷன் எழுந்து "நான் ஸுகமாய்த் தூங்கினேன்" என்று கூறுகின்றான். இந்த ஸ்மரணத்தின் விஷயம் சாந்த அவஸ்தையாம். "நான் நன்றாய்த் தூங்க வில்லை, எனக்கு விழிப்போடு கூடிய நித்திரை யுண்டாயிற்று" என்று கூறுகின்றான். இந்த ஸ்மரணத்தின் விஷயம் ஈண்டு கோர அவஸ்தையாம். "எனக்கு ஒரு ஞாநமுமில்லை." என்று கூறுகின்றான். அது சுழுத்தியில் மூட அவஸ்தையாம். அல்லது, ஜாக்கிரத்தில் ஸுக விசிராம முண்டாவது சாந்த அவஸ்தையாம். துக்கம் உத்வேகங்களுண்டாவது கோர அவஸ்தையாம். மூர்ச்சாதிகள் உண்டாவது மூட அவஸ்தையாம். அல்லது, ஜாக்ர அவஸ்தையில் சாஸ்திராநுசாரமாயும், தைவீ ஸம்பத் தநுசாரமாயும், யஞ்ஞ, தாந, தப, பாட, பூஜாதி ரூப வியவகார முண்டாவது சாந்த அவஸ்தையாம். தநாதியின் பொருட்டு நாநா வியவஹார முண்டாவது கோர அவஸ்தையாம். ஹிம்ஸாதிக ளுண்டாவது மூட அவஸ்தையாம். ஸ்வப்நத்திலும் இஷ்ட லாபாதிகளால் ஸுகத்தின் அநுபவம் சாந்தமாம். அநிஷ்ட லாபாதிகளால் துக்கத்தின் அநுபவம் உண்டாவது கோரமாம். தண்டத்தா லடித்தல் முதலியவைகளால் மூர்ச்சையாதி யுண்டாவது மூடமாம். சுழுத்தியில் நித்திரை செய்தவன் எழுந்து "நான் ஸுகமாய்த் தூங்கினேன், என் மநம் சாந்தமாய் விட்டது" எனக் கூறுகின்றான். இப் பராமர்சத்தின் விஷயம் சாந்த அவஸ்தையாம். எப்பொழுது "நான் துக்கியாய்த் தூங்கினேன்" எனக் கூறுகின்றான்; இவ் விதப் பராமர்சத்தின் விஷயம் கோர அவஸ்தையாம். எப்பொழுது "எனக்கு ஒன்றும் தெரிய

வில்லை" என்று கூறுகின்றான்; இப் பராமர்சத்தின் விஷயம் மூட அவஸ்தையாம்; ஸ்மிருதி அநுபவ அதீநமாகலின். அல்லது, ஜாக்ரத்தில் சித்தத்தின் சச்சிதாநந்த ரூபப் பிரஹ்மாகார ஸ்திதி, அல்லது, அதன் விசார வைராக்யாதியில் ஸ்திதி சாந்த அவஸ்தையாம். விஷயங்களிற் பிரவிர்த்தி கோர அவஸ்தையாம். தேகத்தில் தாதாத்மியாபிமாநத்தால் ராகத் துவேஷாதிகளால் சித்தம் நிலைத் திருத்தல் மூட அவஸ்தையாம். அங்ஙனமே, ஸ்வப்நாவஸ்தையில் சாஸ்திரம் சத்சமாகமங்களில் பிரவிருத்தி சாந்த அவஸ்தையாம். விஷயங்களிற் பிரவிர்த்தி கோர அவஸ்தையாம். ஸ்வப்ந தேஹத்தில் தாதாத்மிய அபிமாநத்தால் ராக த்வேஷாதிகள் மூட அவஸ்தையாம். சுழுத்தியில் பிரஹ்ம விசாராதிகள் செய்யும் போது லீநமாவது சாந்த அவஸ்தையாம். விஷயத்தின் போக ஸம்ஸ்காரத்தினைக் கொண்டு லீநமாவது கோர அவஸ்தையாம். தேஹாபிமாந ஸம்ஸ்காரத்தினைக்கொண்டு லீநமாவது மூட அவஸ்தையாம். அந்நம் ஜலம் ஸோமம் என்பன மூவகையாய போகங்களாம். இம் மூன்றால் ஜீவன் புஷ்டனும், திருப்தனும், ஆநந்திதனு மாகின்றான். ஆதலால், மூன்று போகங்களும் துஷ்டியாதிகளைச் செய்வதாம். ஸோம ஜலங்களால் எல்லா ஓஷதிகளும் திருப்தியும் புஷ்டியும் அடைகின்றன; அங்ஙனமாயினும், ஜீவர்களின் தேஹமும் எங்ஙனம் ஜல அந்நங்களால் புஷ்டியும் திருப்தியுமாகின்றது அங்ஙனமே, சந்திரனது கிரண வாயிலாயும் ஆநந்தித முண்டாகின்றது. பிராணன் அக்கி ஸூர்யன் என்பன மூன்று போக்தாவாம். பிராணனது தர்மம் பசி தாகம் என்பன சாஸ்திரத்திற் பிரசித்தமாம். பிராண னின்றேல் தேஹம் காஷ்டத்தின் ஸமாநமாம்; ஒன்றும் செய்தற்கும், போகித்தற்கும் ஸாமர்த்திய முண்டாவ தில்லை. அக்கியோ பாஹ்யமாய ஆஜ்ய (நெய்) முதலியவற்றின், ஆந்தர நான்கு வித அந்நத்தின் போக்தா என்பது பிரஸித்தமாம். ஸூரியனும், ஜலத்தினையும் ஔஷதிகளின் ரஸத்தினையும் கிரண வாயிலாய் இழுக்கின்றான்; ஆதலால் அவனும் போக்தாவாம். எங்ஙனம் பாஹ்ய அக்கி ஆஜ்யாதிகளைப் பக்ஷணஞ் செய்கின்றது; வாயுவும் ஸூர்யனும் பாஹ்ய ரஸத்தினை இழுக்கின்றனர்; ஆதலால் போக்தாவாமோ, அங்ஙனமே உள் ஜீவ கலா ஸஹித ஜாடராக்கி ஆகாரத்தைப் பக்ஷணஞ் செய்கின்றது. பிராண ரூப ஸூத்ராத்மா தேஹங்களில் உள் வியாபக ரூபமாக இருந்து ஸர்வத்தின் போக்தாவாம். ஸூர்யனும் பரமாத்ம ரூபனும். எதனால் ஜீவர்களின் உள் ளிருந்து பிரகாசிக்கின்றனன். அது கீதையின்கண்ணும் "ஹே அர்ஜுந! நான் வைஶ்வாநரனாய் ஜீவர்களின் தேஹத்தினுள்ளிருந்து பிராணன் அபாநன் என்னும் இரண்டினோடு சேர்ந்து நான்கு வித அந்நத்தினைப் பாகஞ் செய்கின்றேன்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் மூன்று அவஸ்தையும், முப்போகமும், முப்போக்தாவும் ஈண்டுக் கூறிய நவவிதப் பிரபஞ்சமுமாய வெல்லாம் ஓங்காரத்தின் ரூபமாம் எனக் குருவாயிலாய் அறிந்து ஓங்காரத்தினைப் பஜநஞ் செய்பவன் முக்தியினை அடைகின்றான்.



### (7) பாஞ்சராத்திர சித்தாந்தம்.

ஏழாவது பாஞ்சராத்திர சித்தாந்தத்தினைக் கூறுவாம்:— எதனை வைஷ்ணவ ஸித்தாந்த மென்றும் கூறுவர். மூன்று ஆத்ம ரூபம், மூன்று ஸ்வபாவ ரூபம், மூன்று வியவகார ரூபமாய ஓங்காரம் ஈஶ்வரனும். அதனை நான் உபாஸிக்கின்றேன். பலம், வீர்யம் தேஜஸ் ஆகிய மூன்றும் அதன் ஆத்மாவாம். பலம் என்பது தேஹத்தின் ஸாமர்த்தியத் தன்மையாம். சக்ஷுராதி இந்திரியங்களால் பார்த்தல் கேட்டலாதி அநந்த வியாபார முண்டாவது இந்திரியத்தின் வீரியமாம். மநத்தின் உத்ஸாஹம் தேஜஸ் எனப்படும். "எதனால் மநத்தில் உதாரத்தன்மை முதலிய தர்ம முண்டாகின்றது அது தேஜஸென்றும் உத்ஸாஹமென்றும் கூறப்படுகின்றது." ஞாநம் ஐஶ்வர்யம் ஶக்தி என்னும் மூன்றும் அதன் ஸ்வபாவமாம். தேஹம், இந்திரியம், பிராணன், மநம், புத்தி, சித்தம், அஹங்காரம், மஹத்தத்வம், பிரகிருதி என்னும் இவ் வெல்லாம் அநாத்மாவாம். இவற்றின் ஸாக்ஷி, பிரத்தியக் சைதந்ய, கூடஸ்த, அந்தர்யாமி, நிர்விகார, சச்சிதாநந்த ரூப வாஸுதேவனும்; அவன் நான். மாயை முதல் முற் புகன்ற ஸர்வப் பிரபஞ்சமும் என்னிடத்தி னின்றே உத்பந்நமாய் என்னிடத்திலேயே ஸ்திதமாய், என்னிடத்திலேயே லயத்தினை அடைகின்றன. எங்ஙனம்? ஸமுத்திர தீரத்தில் தரங்காதிகளாம். இவ் வித நிச்சயம் ஞாநமாம். அணிமா முதல் அஷ்ட சித்தி ஐஶ்வரியமாம். வேறொருவராலும் செய்ய முடியாது இருப்பதனைச் செய்வது சக்தியாம். ஸங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்பன மூன்று வியவகாரமாம். தான் ஓங்

கார ரூப வாசுதேவ புருஷனும்; அவ்யய புருஷ ரூபமாம். ஆதலால், மூன்று ஆத்மா மூன்று ஸ்வபாவ மூன்று வியவகாரமாய இவ்வெல்லாம் ஓங்காரத்தின் பிந்நமாக அற்பமு மின்று. ஓங்காரம் விஷ்ணுவின் நாமமாம். விஷ்ணு நாமியாம் (பெயரை யுடையவனும்). பிரகிருதி வாசகமும் ஓங்காரமாம். ஆதலால், வியக்த ஸ்தூல ஜகத்தும், அவ்யக்த ஸூக்ஷ்ம ஜகத்தும் உத்பத்தி ஸ்திதி பிரளயமும் ஆகிய இவ்வெல்லாம் ஓங்கார ரூப வாஸுதேவனே யாம். ஓங்காரமே பரமாத்மாவாம். அதன் உபாஸனையினால் ஜீவன் முக்தி யடைகின்றான். கீதையிலும் "எந்த அக்ஷரத்தின் வேதத்தை அறிந்தவர்கள் கூறுகின்றனர். எதன்கண் ராக மற்ற ஸந்நியாசி பிரவேசிக்கின்றான். எதனை அடைவதன் இச்சையால் பிரஹ்மசர்ய விரதத்தினைத் தரிக்கின்றான். ஹேஅர்ஜுந! அப்பதத்தினை நான் ஸம்க்ஷேபமாகக் கூறுகின்றேன். (1). "ஓம்" என்னும் ஓர் அக்ஷரத்தினை உச்சரித்து, அதன் அர்த்தமாய 'நான் பிரஹ்மம்', என்று அதனை ஸ்மரணஞ் செய்து எவன் தேகத்தினை விடுகின்றான் அவன் பரம கதியினை யடைகின்றான்." (2). எனக் கூறப்பட்டிருக்கின்றது.

இந்த எழு வகைச் சிந்தாந்தங்களால் ஓங்காரம் திரிஷட்(63) பேதமாகக் கூறப்படுகின்றது. அஃது ஓங்காரத்தின் ஸ்தூல ஸகுண ரூபமாம். ஹிரண்ய கர்ப்ப சித்தாந்தத்தில், மூன்று மாத்திரை, மூன்று பிரஹ்மம், மூன்று அக்ஷர ரூபம் கூறப்பட்டன. பதஞ்ஜலியின் மதமும் இதன்கண் அந்தர்க்கதமாம். கபில மதத்தில் மூன்று ஞாநம், முக்குணம், மூன்று காரண ரூபம் கூறப்பட்டன. அபாந்தர மதத்தில், மூன்று முகம், முத்தேவதை, முப் பிரயோஜநம் கூறப்பட்டன. வியாஸ மதமும் இதன்கண் அடக்கமாம். ஸநத்குமார மதத்தில், முக் காலம், மூன்று லிங்கம், மூன்று ஸஞ்ஞா ரூபம் கூறப்பட்டன. பிரஹ்ம நிஷ்டர்களின் மதத்தில், முத் தாநம், முப் பதம், மூன்று பிரஞ்ஞா ரூபம் கூறப்பட்டன. பசு தேஹாபிமாநியாய ஜீவன். அதனது பதி யென்பது ஸ்வாமியாம். இவ்வித பசுபதியாய ஸதாசிவனது மதத்தில், மூன்று அவஸ்தை, முப் போகம், மூன்று போக்தா ரூபமாக ஓங்காரம் கூறப்பட்டது. எழாவது வைஷ்ணவ மதத்தில், மூன்று ஆத்மா, மூன்று ஸ்வபாவம், மூன்று வியவகார ரூபம் கூறப்பட்டன. இந்த அறுபத்து மூன்று ரூபமா யுள்ள ஓங்காரம் ஸ்தூல ஸகுண ரூபமாம். நூற்றெட்டு அதன் அமாத்ர! ரூபம் ஸூக்ஷ்ம நிர்க்குண நிஷ்கள ரூபமாம்; அது சாஸ்திரக்காரரால், "ஸ்தூல மன்று; ஹ்ரஸ்வ மன்று; தீர்க்க மன்று; நரை யன்று; ஆகிருதி யன்று; கருப் பன்று; ஸர்வ வர்ணமும் ஸர்வ ரூபமுமன்று; இந்திரியத்திற்கும், இந்திரியத்தின் விஷயத்திற்கும் பிந்நமாம்; சாந்த ரூபம் அக்ஷரமாம்; ரூப மின்றியதாம்; ஸர்வ அக்ஷர மாத்திரை யின்றிய நிர்விகல்ப ரூபமாம்; ஹிருதயம் தாலு நாசிகை ஓஷ்ட வாயிலாய் எவ் அக்ஷரம் உத்பத்தியாகின்றது அதனினும் வேறாம்; க்ஷர பாவ மின்றியதாம்; ஸ்வயம்புவாம்; வியாப்தமாம்; அசிந்தியமாம்; பரிணாம மின்றி நித்திய அசல சிவ ரூபமாம்; அதுவே விஷ்ணுவின் பரம பதமாம்" எனக் கூறப்பட்டிருக்கின்றது.



## ஓங்காரத்தின் பத்துப் பெயர்.

இப்பொழுது ஓங்காரத்தின் பத்து நாமத்தினைக் கூறுவாம்:— 1. ஓம், 2. பிரணவம், 3. ஸர்வ வியாபி, 4. அநந்தம், 5. தாரம், 6. ஶுக்லம், 7. வைத்யுதம், 8. ஹம்ஸம், 9. துரீயம், 10. பரப் பிரஹ்மம் என்னும் பேதத்தால் ஓங்காரத்தினுக்குப் பத்து நாமங்கள் கூறப்படுகின்றன. இப்பொழுது இவற்றின் அர்த்தத்தைக் கூறுவாம்:—

### ஓம்.

(1) ஜபிப்பவர்கட்கு எதனால் ஊர்த்வ பதத்தைக் கொடுக்கின்றது, அல்லது ஜபிப்பவர்களின் பிராணன் ஊர்த்வ பிரஹ்ம ரந்த்ரத்திற்கு இதனால் செல்லுகின்றது, அதனால் இஃது ஓங்கார மெனப்படுகின்றது. அல்லது, எதனால் உபாஸகர்களின் பாலநமும் ரக்ஷையுஞ் செய்கின்றது, அதனாலும் ஓங்காரம் எனப்படுகின்றது. பாலந ரக்ஷணங்களின் நாமமே யோகமும் க்ஷேமமுமாம். அப்ராப்த வஸ்துவின் பிராப்தி யோகமாம்; பிராப்த வஸ்துவின் பாதுகாப்பு க்ஷேமமாம். ஸகாமி உபாஸகர்கட்கு இச்சிக்கப்பட்ட வஸ்துவின் அப்பிராப்தியினை அடைவிக்கின்றது; பிராப்தத்தின் ரக்ஷணையும் செய்கின்றது. நிஷ்காம புருஷருக்கு ஞாந பூமி பிராப்த மின்று; அதனைக் கொடுக்கின்றது; பிராப்தத்தின் ரக்ஷணையும் செய்கின்றது. ஓம் சப்தத்திற்கு அங்கீகாரமும் அர்த்தமாம். இதன் உபாஸனை செய்பவர்கள் கூறும் வசநத்தினை ஸர்வ தேவதைகளும் அங்கீகரிக்கின்றனர்; அல்லது, பிரஹ்ம பதப் பிராப்தியின் பொருட்டு உபாஸகர்கள் அங்கீகரிக்கின்றனர். அதனாலும் ஓங்காரமாம்.

பிரணவம்.

(2) ரிக் வேதம் முதலிய நான்கு வேதமும், பிரஹ்மாதி தேவதைகளும் ரிஷி மநுஷ்ய தைத்தியர்கள் முதலிய எல்லோரும் எதனுல் இந்த மூன்று அக்ஷர ரூப ஓங்காரத்தினை மநம் வாக்குச் சரீரங்களால் நமஸ்காரம் அல்லது ஸ்துதி செய்கின்றனர், அதனுல் இதன் பெயர் பிரணவமாம்; அல்லது, ஓங்காரத்தினை உபாஸிக்கும் எல்லோரும் எதனுல் நமஸ்கரிக்கின்றனர் அதனுலும் பிரணவமாம்.

சர்வ வியாபி.

(3) ஸர்வ ஸ்தாவர ஜங்கம ரூப ஜகத்தும், நான்கு வேதம், உபவேதம் நான்கு, வேதத்தின் அங்கம் ஆறு, நியாயம், மீமாம்ஸை, தர்ம சாஸ்திரம், உபாஸநா சாஸ்திரம் ஆகிய அஷ்டாதசப் பிரஸ்தாந ரூபமும் ஆகிய எல்லாவற்றிலும் ஓங்காரம் வியாபித்திருக்கின்றது. அதனுல், ஸர்வ வியாபி யெனப்படும். லக்ஷிய ரூபத்தாலும் எதனுல் ஸர்வ வியாபகமாம்; அதனுல் ஸர்வ வியாபியாம். இதன் வாச்சிய ரூபம் சப்தப் பிரஹ்மமாம், லக்ஷிய ரூபம் சச்சிதாநந்த பரமாத்மாவாம். எது பிரஹ்மம் அஸ்தி பாதிப் பிரிய ரூபத்தால் வியாபித்திருக்கின்றது, அது அதன் லக்ஷிய ரூபமாம். அதனுல் அது ஸர்வ வியாபி யெனப்படும்.

அநந்தம்.

(4) நிஷ்காம உபாஸகர்கட்குத் தேச கால வஸ்து பரிச்சேத மின்றிய அநந்த பிரஹ்மத்தினை யடைவிக்கின்றது; அதனுல் இஃது அநந்தமாம்; அல்லது தேவ ரிஷி மநுஷ்யாதிகளால் எதன் அந்தம் அடையப்படுவ தின்று, அதனுல் அநந்தமாம்.

தாரம்.

(5) அத்யாத்மாதி பேதத்தால் மூவிதத் துக்க மிருக்கின்றது. மநத்தின்கண் காமக் குரோதாதி விகார ஜந்ய துக்கமும், சரீரத்தின்கண் ஜ்வர பீடாதி விகார ஜந்ய துக்கமும் அத்யாத்மகமாம்; சிம்ஹமம், ஸர்ப்பம், ராஜ பீடை முதலியவற்றுல் உண்டாம் துக்கம் அதிபூதமாம்; கிரக பீடை முதலியவற்றுல் உண்டாம் துக்கம் அதிதைவிகமாம். இம் மூவிதத் துக்கத்தோடு கூடிய ஸம்ஸார ஸமுத்திர ரூப துக்கத்தினின்றும் உபாஸகர்களைக் கடப்பித்தலின் இது தார மெனப்படும்; அல்லது, அஞ்ஞாந ஆவரண விக்ஷேப ரூப மூவித ஸம்ஸார துக்கத்தினின்றும் பக்தர்களைத் தாண்டுவித்தலின் தார மெனப்படும்.



சுக்லம்.

(6) அவித்தை அதன் காரியங்க ளின்றிச் சுத்தமாய் இருத்தலால் இது சுக்லமாம்; அல்லது, தனது உபாஸகர்களைச் சுத்தப் பதவியில் அடையச்செய்தலால் சுக்லமாம்; அல்லது, மூவிதப் பாபத்தினை நாசஞ்செய்து பக்தர்களைச் சுத்தஞ் செய்தலால் சுக்லமாம். ஸஞ்சிதம் பிராரப்தம் கிரியமாணம் என மூன்று பிரகாரமான கர்மமே மூன்று பிரகாரமான பாபமாம். கூறியமூன்று பிரகாரமான கர்மம் பாணமாம். அது சேதநப் பிரதிபிம்பத்தோடு கூடிய அஞ்ஞாந அம்சத்தோடு கூடிய அந்தக்கரண ரூப பாணுசிரயத்தி லிருக்கின்றது. அஞ்ஞாந அம்ச ஸஹித சேதநவிசிஷ்ட அந்தக்கரணத்தில் மூவிதக் கர்மத்தின் பீஜரூப வாஸனை யிருக்கின்றது. அஞ்ஞாநமும் சேதநப் பிரதிபிம்பமு மின்றி அந்தக்கரணம் ஸ்வயம் ஜடமா யிருத்தலின், தாரணஞ் செய்தற்கு ஸமர்த்த மன்று. ஸத்துவ குணத்தின் காரியமாகிய அந்தக்கரணம் மிருத் பிண்டம்போன் றிருக்கின்றது. சேதந ஆத்மா ஆகாசம் போன் றிருக்கின்றது. அஞ்ஞாநம் ஜலம் போன் றிருக்கின்றது. எங்ஙனம் எப்பொழுது மிருத் பிண்டம் ஜலம் ஆகாசம் என்னும் மூன்றும் சேருகின்றன அப்பொழுது கட ரூப காரிய முண்டாகின்றது. அஃது அந்நாதி வஸ்துக்களைத் தாரணஞ் செய்வதற்கு ஸமர்த்தமாகின்றதோ, அங்ஙனமே, கேவல ஆத்மா, அல்லது அந்தக்கரணம், அல்லது அஞ்ஞாநமாகிய ஒவ்வொன்றும் கர்ம பீஜத்தினைத் தாரணஞ் செய்தற்கு ஸமர்த்த மன்று. எப்பொழுது மூன்றுஞ் சேர்ந்து ஓர் அந்தக்கரண மாகின்றது அப்பொழுது கர்ம ரூப பீஜத்தினைத் தாரணஞ் செய்கின்றது. மூவிதக் கர்மரூப பாணமானது அந்தக்கரண ரூப அம்புக்கூட்டில் இருக்கின்றது. அவற்றுள், எப் பாணம் தநுஸினின்றும் விடப்பட்டுச் செல்லுகின்றதோ, அப்பாணம் தனது வேகத்தின் க்ஷயத்தால் கீழே விழுகின்றது; வேறு வகையா லன்று. அதன் பெயர் பிராரப்த கர்மமாம். எப் பாணம் அம்புக்கூட்டில் இருந்துகொண்டிருக்கின்றது அதன் பெயர் ஸஞ்சித கர்மமாம். எப் பாணம் தநுஸோடு கட்டப்பட்டிருக்கின்றது அதன் பெயர் கிரியமாண (செய்யப்படுகிற) கர்மமாம்; அல்லது, எங்ஙனம் அந்நத்தால் நிறைந்த ஓர் ஆலயத்தினின்றும் ஒரு முஷ்டி அந்நத்தினை எடுத்து க்ஷேத்திரத்தில் வைப்பதன் பெயர் பிராரப்தமாம். கையிலிருப்பதன் பெயர் கிரியமாணமாம். ஆலயத்திலுள்ள அந்நத்தின் பெயர் ஸஞ்சிதமாம். எக் கர்மத்தால் வர்த்தமாந சரீரங் கொடுக்கப்பட்டது அது பிராரப்தமாம். அநேக ஜந்மத்

தினைக் கொடுப்பது ஸஞ்சிதமாம். வர்த்தமாந சரீரத்தில் அபிமாந பூர்வகம் செய்யப்படுவது கிரியமாணமாம். ஒரு கர்மமே, அவஸ்தா பேதத்தால் பிராரப்தம் ஸஞ்சிதம் கிரியமாணம் என்னும் பெயர்களை அடைகின்றது. எங்ஙனம் ஒரு காலமே பூத பவிஷ்ய வர்த்தமான மென்னும் பெயர்களை அடைகின்றது. பிராரப்த கர்மத்தின் பலம் ஜாதி ஆயுள் போகமாம். மநுஷ்ய தேவ பசுக்கள் ஜாதியாம்; மநுஷ்யர்களினும் உத்தம மத்தியம நீச பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்ர சண்டாளாதிகள் இருக்கின்றனர். அங்ஙனமே, தேவர்களிலும் உத்தம மத்தியம நீச பேதங்கள் இருக்கின்றன; அங்ஙனமே, பசுக்களிலுமாம்; அங்ஙனமே, விருக்ஷ பர்வதங்களினிடத்தும் உத்தமம் மத்தியமம் முதலிய பேதங்கள் இருக்கின்றன. ஆயுளும், தீர்க்கம் மத்தியமம் அற்ப மென்னும் பேதத்தால் மூவகைத்தாம். போகமாய ஸுக துக்க அநுபவமும் அதிகம் அற்பம் என்னும் பேதத்தால் நாநாப் பிரகாரமாம். ஸஞ்சிதம் கிரியமாணம் என்னும் இரண்டும் ஞாநிக்கு ஞாநத்தின் பிரபாவத்தால் நஷ்டமாய் அஸ்பஷ்டமாகத் தோற்றுகின்றன. பிராரப்தமோ போக மின்றி நாசமாவ தின்று. எங்ஙனம் அம்புக் கூட்டில் உள்ள பாணமும், தநுஸில் கட்டப்பட்ட பாணமும் ஆகிய இரண்டினையுஞ் நாசஞ் செய்தற்கு யுத்தத்தில் சூரன் ஸமர்த்தனாகின்றான்; விடப்பட்ட பாணத்தினை நாசஞ் செய்வதற்கு ஸமர்த்தனாவ தில்லை; அதுவோ தனது வேக க்ஷயத்தால் எங்ஙனம் நாசமாகின்றதோ, அங்ஙனமே, ஞாநம் உண்டாயினும் பிராரப்த க்ஷய முண்டாவ தின்று; போகத்தானேயே நஷ்டமாம்.

பிராரப்த கர்மமும், ஸ்வேச்சை பரேச்சை அநிச்சை என்னும் பேதத்தால் மூவகைத்தாம். அது கீதையின்கண் "ஹே அர்ஜுந! ஞாநியும் பூர்வ ஸ்வபாவ அநுஸாரம் சேஷ்டிப்பனாயினே, பிரகிருதியினை யடைந்த பிராணிகளைத் தண்டம் (ஆக்ஞை) என் செய்யும்." எனக் கூறப்பட்டிருக்கின்றது. இது ஸ்வேச்சாப் பிராரப்தத்தில் பிரமாணமாம். "ஹே பகவந்! எதனால் பிரேரிக்கப்பட்ட இப் புருஷன் இச்சை யின்றியும் பாவத்தினைச் செய்கின்றான்; ராஜாவின் பலமான ஆக்ஞை போன்று. (1). காமக் குரோதங்கள் ரஜோகுணத்தினின்றும் உதயமா யிருக்கின்றன. மஹா பாபியும் மஹா அஹாரியுமாம். இதற்கு நீ விரோதியாம் என அறி" (2) என. அஃதே இச்சை யின்றியும் ஜீவர்களால் பாவம் செய்விக்கின்றது; இஃது அநிச்சை முதலியவற்றில் பிரமாணமாம்.



எங்ஙனம் ஜீவன் கெட்ட போஜநத்தை அறிந்து இது துக்கங் கொடுக்கும் எனத் தெரிந்தும் அதனை இச்சையினால் புசித்துத் துக்கத்தினை யடைகின்றான். எங்ஙனம், பர தநத்தைத் திருடுதல், பர ஸ்திரீயோடு சேருதல் முதலியன துக்கத்தின் ஹேது வென அறிந்தும், அவற்றை லோபியும் காமியுமாய ஜீவன் இச்சையினால் செய்கின்றான்; இது சுவேச்சாப் பிராரப்தமாம்.

எங்ஙனம் சில இச்சையினால் சில மார்க்கத்தில் சென்று, அதனின்றும் மறந்து இச்சை யின்றி வேறு மார்க்கத்திற்சென்று ஆண்டுக் காரண மின்றித் தநாதிகளின் லாபத்தால் அல்லது அக்நி தாஹாதிகளால் அவன் ஸுக துக்கத்தினை யடைவது அநிச்சாப் பிராரப்தமாம்.

தனது இச்சையால் பாரத்தினைத் தூக்குவ தின்று. சில பலவானால் பலத்தால் கழுத்தைப் பிடித்து அவனது சிரஸில் பாரத்தினை வைக்கின் அப்பொழுது அவன் பாரத்தினைத் தூக்குவதால் அநுபவிக்கும் கஷ்டம் பரேச்சையாம். அல்லது, இவனது இச்சை யின்றிச் சில ராஜாதியால் இவனுக்கு ஸுகங் கொடுக்கப்படுமாயின் அதுவும் பரேச்சையாம்.

அல்லது, தனது இச்சையால் ஸுகதுக்க அநுபவத்தின் அநுகூலப் பிரதிகூல விஷய ஸம்பந்தத்தால் உண்டாவது இச்சாப் பிராரப்தமாம். பூர்வ ஸம்ஸ்காரத்தால் அவசியம் அநுபவிப்பது அநிச்சையாம். சில அந்யரது இச்சையால் ஸுக துக்க முண்டாவது பரேச்சையாம்.

இம் மூன்று பிரகாரமான போகம் வித்வானுக்கும் போகத்தானே நஷ்டமாகின்றது. யோகமோ பிராரப்தத்தினும் பலவானாம். ஆதலால், யோகிகள் யோகத்தின் மஹாத்மியத்தால் பிராரப்தத்தினையும் நாசஞ் செய்கின்றனர். அங்ஙனமே, ஈஸ்வரனது உபாஸகரும் பிராரப்தத்தினை நாசஞ் செய்கின்றனர். ஆதலால், ஓங்காரத்தின் உபாஸகரும் மூன்று கர்மத்தினையும் நாசஞ் செய்கின்றனர். வர்த்தமாந ஜந்மத்தில் பிராரப்தத்தின் எக் கிரியை செய்யப்படுகின்றதோ அது அபிமாந பூர்வகம் செய்யும் பொழுது புண்யாபுண்ய அபூர்வத்தினை உண்டாக்குகின்றது; அபிமாந மின்றிச் செய்யப்படுமாயின், உண்டாக்குவ தில்லை. ஞாநி அஜ்ஞாநிகட்குப் பிராரப்த கர்மத்தின் போகம் ஸமமாய்ப் போக மின்றி நாச முண்டாவ தில்லை யாயினும், இவ்வளவு பேதமாம்:—ஞாநியின் கிரியை நடனைப் போன்றதாம். அக்

கிரியையினை மித்தையாக அறிந்திருக்கின்றான்; ராக த்வேஷ மின்றி யவனாய் அநுபவிக்கின்றான். போக காலத்திலும், "குணம் குணத்தி லிருக்கின்றது. நான் சாக்ஷியாயும், ஆத்மாவாயும், நிராகாரனாயும், நிர்விகாரனாயும் இருக்கின்றேன்" என அறிந்து சேட்டிக்கின்றான். அவனது சேஷ்டை ஜன்மாதிகளின் ஹேது வன்று. எங்ஙனம்? வறுக் கப்பட்ட அந்நம் (விதை) அங்குரத்தின் ஹேது வன்று.

அஞ்ஞானியின் சேஷ்டை அபிமாந ஸஹிதமாம். ஜகத்தினை ஸத்தியமாக அறிந்து செய்கின்றான். ஆதலால், அவனது கிரியை புநர் ஜன்மத்திற்கு ஹேதுவாம். அங்ஙனமே ஸுக துக்கத்தின் போக கர்த்ருத்வமும், ஜகத்தைச் சத்தியமாக அறிவதால் உண்டாகின்றது.

அல்லது, காயிக மாநஸிக வாசிக பக்தர்களின் மூன்று பாபங்களை ஓங்காரம் நாசஞ் செய்து சுத்தஞ் செய்கின்றமையின் சுக்லமாம். அல்லது, தனது பக்தர்களின் மூன்று தேஹத்தில் உள்ள அபிமாந ரூப பாவத்தினை நாசஞ்செய்கின்றது; அல்லது, முக்குணம் ஸர்வ பாவ புண் யங்களின் ஹேதுவாம்; அதனை நாசஞ் செய்கின்றது; அல்லது மூன்று அவஸ்தா ரூப பாவத்தினை நாசஞ் செய்கின்றது; மூன்று அவஸ்தை யின் அபிமாநத்தினை நாசஞ் செய்கின்றது என்பது பொருளாம். ஆத லால் இதன் பெயர் சுக்லமாம்.

வைத்யுதம்.

(7) மின்னல் போன்று ஸஹிக்கக் கூடாத தேஜஸாக இருக்கின் றது; அல்லது, தனது உபாஸகர்களினது துரபிபவ (அமிழ்த்துதல்) ஸஹிக்கக் கூடாத பிரகாசத்தினைக் கொடுக்கின்றது; ஆதலால் வைத் யுதம் எனப்படும்.

ஹம்சம்.

(8) பக்தர்களின் ஹிருதயத்தில் ஓங்காரம் சூரியன் போன்று அஞ்ஞான ரூப தமத்தினை நாசஞ் செய்து ஆத்மாவின் பிரகாசத்தினைச் செய்கின்றது. அதனால் இதன் பெயர் ஹம்ஸமாம். சூரியனும் ஹம்ஸ மென்று கூறப்படுகின்றான். அல்லது, எங்ஙனம் ஹம்ஸ பக்ஷி, ஜலம் பால்களைப் பிந்நஞ் செய்கின்றதோ, அங்ஙனமே சித் ஜட கிரந்தி ரூப பாலும் ஜலமும் சேர்ந்திருக்கின்றன. சேதந ரூபம் பாலாம். அநாத்ம ஜட ரூபம் ஜலமாம். அந்த அநாத்ம ரூப ஜலத் தினைப் பிந்நஞ் செய்து ஆத்ம ரூப க்ஷீரத்தினைப் பிரத்தியக்ஷமாகத் தருகின்றது. ஆதலானும் இதன் பெயர் ஹம்ஸமாம். சுத்தத்திற் கும் ஹம்ஸ மென்று பெயராம். அது சுத்த பரமாத்ம பதத்தினைப் பக்தர்களுக்குக் கொடுக்கின்றதனாலும் ஹம்ஸமாம்.



துரீயம்.

(9) அகார உகார மகார மென்னும் மூன்று பதங்களின் அபே க்ஷையால் இதன் துரீயம் அமாத்திர பதமாம். அதனால் இது துரீய மெனப்படும். அல்லது, ஜாக்ராதி மூன்று அவஸ்தையினைத் துரீய சேதநம் பிரகாசிக்கின்றது; பக்தர்களுக்கு அதனைக் கொடுக்கின் றது. அதனானும், இதன் பெயர் துரீயமாம்.

பரப்பிரஹ்மம்.

(10) பிரஹ்மம் இரண்டு பிரகாரமாம்:—ஒன்று சப்தப் பிரஹ் மம், மற்றொன்று பரப் பிரஹ்மமாம். பரா, பஶ்யந்தி, மத்தியமா, வைகரி ரூபம் சப்தப் பிரஹ்மமாம். சேதந ஆபாஸ ஸஹித அவ் யக்தம் பரையாம். அஃது எப்பொழுது பரிணாமத்தினை யடைந்து புத்தி ரூப மாகின்றது, எதன்கண் சில சொல்லுவேன் என ஸ்புரண முண்டாகின்றது, அப்பொழுது அதன் பெயர் பஶ்யந்தியாம். எப் பொழுது "நான் சொல்லுகின்றேன்" என மீண்டும் விசேஷ நிச்சய முண்டாகின்றது, அப்பொழுது பஶ்யந்தி பரிணாமத்தினை யடைந்து, மத்தியமா வாகின்றது. எப்பொழுது முகத்தால் வெளிப்படையாகச் சொல்லப்படுகின்றதோ அப்பொழுது அதன் பெயர் வைகரியாம். அவ் வைகரியின்கண் நான்கு வேதம், நான்கு உபவேதம், ஆறு சாஸ்திரம், பதினெண் புராணம், அஷ்டாதச ஸ்மிருதி முதலிய எவ்வளவு சாஸ்தி ரங்க ளிருக்கின்றனவோ, மற்றும் அநந்த பிரகாரத்தின் தேச பேதத்தா லுள்ள பாஷைகளும், ஸர்வ ஜீவர்களின் வாக்கும் ஆகிய வெல்லாம் வைகரி ரூபமாம். இது ஶப்தப் பிரஹ்மமாம். இவ் வெல்லாவற்றி னையும் அறிவது பரப்பிரஹ்மமாம். அப் பரப் பிரஹ்மத்தினை அடை விக்கின்றதாகலின், இதன் பெயர் பரப்ரஹ்மமாம்.

இவ்வாறு அர்த்தத்தோடு கூடிய ஓங்காரத்தின் பத்துப் பெயர் கள் சாஸ்திரத்தில் சொல்லப்பட் டிருக்கின்றன.

இப்பொழுது ரிஷிகளின் மதத்தினையுங் கூறுவாம்:—பாஷ்கல ரிஷி ஏக மாத்ரா ரூபமாக ஓங்காரத்தினை அறிந்து பஜிக்கின்றனர்.

ஶால் ரிஷி இரண்டு மாத்ரா ரூபமாக அறிந்து பஜிக்கின்றனர். நாரத ரிஷி இரண்டரை மாத்ரா ரூபமாக அறிந்து பஜிக்கின்றனர். மாண்டவ்ய ரிஷி மூன்று மாத்ரா ரூபமாக அறிந்து பஜிக்கின்றனர். மற்றும் அநந்த ரிஷிகளும் மூன்று மாத்ரா ரூபமாக அறிந்து ஸேவிக்கின்றனர். சிலர் மூன்றரை மாத்திரையால் பஜிக்கின்றனர். பராஶராதிகள் நான்கு மாத்ரா ரூபமாக அறிந்து ஸேவிக்கின்றனர். வசிட்டாதிகள் நாலரை மாத்ரா ரூபமாக அறிந்து சேவிக்கின்றனர். யாஞ்ஞவல்கியர் அமாத்ரா ரூபமாக அறிந்து சேவிக்கின்றனர். ஆதலால், ஓங்காரம் அநந்த மாத்ரா ரூபமுமாம்; அமாத்ரா ரூபமுமாம். எங்ஙனம் இதனது ரூபம் குரு சாஸ்திர வாயிலாய் எவர்கள் அறிந்தார்களோ, அவர்கள் அங்ஙனமே அதனைப் பஜநஞ் செய்கின்றார்கள். இது ஸதா அமாத்ரா ரூபமாம். இதற்கு இரண்டு சொரூப மிருக்கின்றது; ஒன்று சப்த ரூபமாம்; ஒன்று பரப்ரஹ்ம ரூபமாம். உச்சாரணத்தில் வருவது இதன் ஸ்தூல ஸகுண ஶப்தப் பிரஹ்ம ரூபமாம். உச்சாரணத்தில் வாரா திருப்பது அமாத்ரா ரூபமாம். சச்சிதாநந்த நிர்க்குணப் பரப்பிரஹ்ம ரூபமாம். ஏக மாத்ரா ரூபமாகப் பஜிக்கின்றவர்கள் இங்ஙனம் அறிந்திருக்கின்றார்கள்:--ஸ்தூல விராட் ஜகத்து, இந் நிர்க்குண ஓங்கார சேதநத்தின் ஆகாரமாம். நான் இதன் சரணமாம். இரண்டு மாத்திரையாகப் பஜிப்பவர்கள் இங்ஙனங் கூறுகின்றனர்:--ஸ்தூல ரூப ஜாக்ர ஜகத்து இதன் அகார ரூப ஏக மாத்திரையாம். உகார ரூப மாத்திரை ஸூக்ஷ்ம ஜகத்தாம். இதனினும் பிந்ந மாக அற்பமு மின்று. நான் அதன் சரணமாம்.

இரண்டரை மாத்திரையாகப் பஜிப்பவர்கள் ஜாக்ர ஸ்வப்நங்களை இரண்டு மாத்திரையாக அறிந்திருக்கின்றனர். சுழுத்தியினை அரை மாத்திரையாக அறிந்திருக்கின்றனர். அதன்கண் அவ் விரண்டும் லயத்தினை அடைகின்றன. அல்லது, சிலர் அரை மாத்திரை சேதந புருஷனைக் கூறுகின்றனர்:--சேதநம் ஸர்வத்தினையும் அறிவதாம்; அதனை ஒன்றும் அறிவ தில்லை. அச் சேதந புருஷனிடத்திலே ஸர்வமும் லீந மாகின்றன. ஸர்வ ஸ்தூல ஸூக்ஷ்ம ஜகத் சேதந ரூப அரை மாத்திரையின் ஸ்வரூபமாம்.

மூன்று மாத்திரையாகப் பஜிப்பவர்கள் இங்ஙனம் கூறுகின்றனர்:--ஜாக்ர ஸ்வப்ந சுழுத்தி ரூப ஜகத், அகார உகார மகாரமாகிய மும் மாத்திரா ரூபமாம். வைஶ்வாநரன் ஹிரண்யகர்ப்பன் ஈஶ்வரன் என்னும் முத் தேவதைகளும் ஜகத்தின் ஆஶ்ரயமாம்; அவர்களும் ஓங்கார ரூபமாம். நான் அதனை உபாஸிக்கின்றேன்.



மூன்றரை மாத்திரையாக உபாஸனை செய்பவர் இங்ஙனம் அறிகின்றனர்:—அகார உகார மகாரமாய மும் மாத்ரா ரூபம் இஜ் ஜகத்தாம்; அரை மாத்திரை ரூபம் சேதநப் பிரஹ்மமாம்; அல்லது, அகார ரூபம் வைராட் புருஷனும்; உகார ரூபம் ஹிரண்ய கர்ப்பனும்; மகார ரூபம் அவ்யக்த ஈஶ்வரனும்; பிந்து ரூப அரை மாத்திரை சேதந ரூபமாம். எதனை ஆச்ரயித்து இம் மூன்று மிருக்கின்றன, அப் பிந்து பரமபத ரூபமாம். ஸகுண நிர்க்குண ரூபமும் ஓங்காரமேயாம்.

நான்கு மாத்திரையாகப் பஜநம் செய்பவர் இங்ஙனம் கூறுகின்றனர்:—அகார ரூபமாய ஸ்தூல ஜகத்தும், உகார ரூபமாய ஸ்வப்ந ஜகத்தும், மகார ரூபமாகிய சுழுத்தியும் (ஆகிய) இவற்றினுக்கு நாத ரூப பராசக்தி நான்காவது மாத்திரையாம். அதனை நான் பஜிக்கின்றேன்.

நாலரை மாத்திரையாகப் பஜிப்பவர் இங்ஙனம் கூறுகின்றனர்:—அகார ரூபம் ஸ்தூல ஜகத்தாம்; உகார ரூபம் ஸ்வப்ந ஜகத்தாம்; மகார ரூபம் சுழுத்தியாம்; நாத ரூப பராசக்தி நான்காவது மாத்திரையாம்; பிந்து ரூப அரை மாத்திரை சேதந புருஷனும். எதன் ஆசிரயமாக நான்கு மாத்திரைகளு மிருக்கின்றன.

ஆறு மாத்திரையாகப் பஜிப்பவர் இங்ஙனம் கூறுகின்றனர்:—அகார மாத்ரா ரூபம் ஜாக்ரமாம்; உகார ரூபம் ஸ்வப்நமாம்; மகார ரூபம் சுழுத்தியாம்; அநாஹத சப்த முதல் நாத ரூப நான்கு பிரகாரமான பரா-பஶ்யந்தி-மத்தியமா-வைகரி என்னும் ஶப்தம் நான்காவது மாத்திரையாம்; பிந்து ரூப காரணப் பிரகிருதி மாயை ஐந்தாவது ரூபமாம்; ஆறாவது மாத்திரை சேதநமாம்; முற் புகன்ற ஸர்வத்தின் ஆதாரமாம்.

எழு மாத்திரையாகப் பஜநம் செய்பவர் இங்ஙனம் கூறுகின்றனர்:—ஐந்து பூதமும், அஹங்காரமும், மஹத்தத்வமும் ஆகிய எழும் இதன் மாத்திரைகளாம்; எட்டாவதாகிய தான் இதன் ஆதார ரூபமாம்.

இவ்வாறே ஐம்பது மாத்திரை ரூபமாகப் பஜநஞ் செய்கின்றவர் கூறுகின்றார்:— இவ் வக்ஷரங்க ளெல்லாம் ஓங்காரத்தினின்றும் உத்பந்நமாகின்றன; ஆதலால், ஸர்வமும் ஓங்காரத்தின் மாத்ரா ரூபமாம். பதார்த்தங்களின் பெயர்க ளெல்லாம் இவ் வைம்பது அக்ஷரத்தினுள் வருகின்றன. ஸர்வ அக்ஷரமும் ஓங்காரத்தின் ரூபமே யாம்; ஆதலால், அக்ஷர ரூப ஓங்காரம் ஸர்வ நாமத்தின் ஆதியிலும் மத்தியிலும் அந்தத்திலும் மேலும் கீழும் வியாபித்திருக்கின்றது. ஆதலால், ஸர்வ ஜகத்தும் ஓங்கார ரூபமாம். இங்ஙனம் வாச்சிய ரூபத்தால் ஓங்காரம் எல்லாவற்றினும் ஆதியிலும் மத்தியிலும் அந்தத்திலும் ஓதப் புரோதமாய் (குறுக்கும் நெடுக்குமாய்) இருக்கின்றது; லக்ஷிய ரூபத்தால் சேதந ஸ்வரூபமா யிருக்கின்றது. அஃதி அஸ்தி பாதிப் பிரிய ரூபத்தால் எல்லாவற்றிலும் வியாபித் திருக்கின்றது. ஆதலால், ஸர்வமும் ஓங்கார ரூபமே யாம்.

இச் சப்தப் பிரஹ்ம ரூப ஓங்காரத்தின் வர்ணம், ரிஷி தேவதை முதலியனவும் சாஸ்திரக்காரர்களாலும் கூறப்பட்டிருக்கின்றன:— அகார உகார மகாரம் மும் மாத்திரையாம். அவை இதன் வர்ணமென்பது பிரசித்தமாம். (1) அக்நி வாயு சூரியனாகிய மூன்றும் இதன் ரிஷிகளாம். (2) காயத்ரி பிருகதி திரிஷ்டுப் என்னும் மூன்றும் இதன் சந்தமாம். (3) பிரஹ்மா விஷ்ணு ருத்ரர் ஆகிய மூவரும் இதன் தேவதைகளாம். (4) இந்த அகார உகார மகார மென்னும் அக்ஷரங்கட்கு சுக்லம் ரக்தம் கிருஷ்ணம் என்னும் மூன்றும் வர்ணங்களாம். (5) ஜாக்ர ஸ்வப்ந சுழுத்தி என்னும் மூன்றும் இதன் அவஸ்தைகளாம். (6) பூலோகம் அந்தரிக்ஷ லோகம் ஸ்வர்க்க லோகம் என்னும் மூன்றும் இதன் ஸ்தாநமாம். (7) உதாத்தம் அநுதாத்தம் ஸ்வரிதம் என்னும் மூன்றும் இதன் ஸ்வரமாம். (8) ரிக் யஜுர் ஸாமம் என்னும் மூன்றும் இதன் வேதமாம். (9) கார்ஹபத்யம் ஆஹவநீயம் தக்ஷிணம் என்னும் மூன்றும் இதன் அக்நியாம். (10) பிராதக் காலம் மாத்தியாந்ஹ காலம் ஸாயங் காலம் ஆகிய மூன்று காலத்தின் ஸந்தியை இதன் ரூபமாம். (11) பூத பவிஷ்ய வர்த்தமாந கால மென்னும் மூன்றும் இதன் காலமாம். (12) ரஜ ஸத்வ தமம் என்னும் மூன்றும் இதன் குணமாம். (13) உற்பத்தி ஸ்திதி ஸம்ஹாரம் என்னும் மூன்றும் இதன் கிரியையாம். (14) கர்மம் உபாஸனை ஞாநம் என்னும் மூன்றும் இதன் காண்டமாம். (15) விராட் ஹிரண்யகர்ப்பன் அவ்யாகிருதம் என்னும் மூன்றும் இதன் சரீரமாம். (16) ஹோதா உத்காதா அத்வர்யு என்னும் மூன்றும் இதன் பிராஹ்மணனும். ஹவநஞ் செய்பவன் ஹோதாவாம். ஸாம ஸ்துதி செய்பவன் உத்காதாவாம். யஞ்ஞம் செய்பவன் விலைக்கு வாங்கிய பிராஹ்மணன் அத்வர்யுவாம். (17) ஸ்திரீ புருஷன் நபும்ஸகன் என்னும் மூன்றும் இதன் லிங்கமாம். (18) ஞாநம் ஐஸ்வர்யம் ஸாமர்த்தியம் என்னும் மூன்றும் இதன் ஸ்வபாவமாம். (19) அகாரம் உகாரம் மகாரம் என்னும் மூன்றும் இதன் பிரஞ்ஞையாம். வெளிப் பிரஞ்ஞா ரூபம் அகாரமாம்; உட் பிரஞ்ஞா ரூபம் உகாரமாம்; கநப் பிரஞ்ஞா ரூபம் மகாரமாம். பஹிர்ப் பிரஞ்ஞா ரூபம் விசுவனும்; அந்தர்ப் பிரஞ்ஞா ரூபம் தைஜஸனும்; கநப் பிரஞ்ஞா ரூபம் பிராஞ்ஞனும். (20) சூரியன் அக்நி சந்திரன் என்னும் மூன்றும் இதன் தேஜஸாம். (21) அந்நம் ஜலம் சந்திரன் என்னும் மூன்றும் இதன் போகமாம். (22) மூன்று மூன்று பதார்த்தங்களாக, மூன்று மூன்று வர்ணங்களால் கூறப்பட்டன வெல்லாமாய அறுபத்தாறு மாத்திரையும் ஓங்காரத்திற் குரியனவாம். எல்லாம் ஓங்காரத்தின் ஸ்வரூபமாதலின், உபாஸகர்கள் இவ்வெல்லாவற்றினையும் ஓங்காரத்தின் மாத்திரையாகக் கற்பித்துப் பஜநஞ் செய்கின்றனர். இதில் தத்தம் புத்தி ருசி அநுஸாரம் ஒரு மாத்திரை முதல் அறுபத்தாறு மாத்திரை பரியந்தம் ரிஷியாதியர் ஓங்காரத்தின் உபாஸனை செய்தனர்.

ஸகுண ரூப ஓங்காரமோ அநந்த மாத்திரையாக இருக்கின்றது; நிர்க்குண ரூப ஓங்காரமோ மாத்திரை ரகிதமாக இருக்கின்றது. இதனை யாஞ்ஞவல்கியர் அமாத்ரா ரூபமாக உபாஸித்தனர்; மற்றுஞ் சிலர் ஸகுண நிர்க்குண மென்னு மிரண்டு ரூபமாக உபாஸனை செய்கின்றனர். அவ் வோங்கார அக்ஷரத்தினை ஜபஞ் செய்தல், அதன் அர்த்தத்தினை பாவனை செய்தலின் பெயர் உபாஸனையாம். சிலரோ, "ஓம் ஓம்" என் றிவ்வாறு ஜபிக்கின்றனர். சிலர், பிராணயாம வாயிலாய் ஜபிக்கின்றனர். ரேசகத்தில் பதினாறு நாமமும், பூரகத்தில் முப்பத்திரண்டு நாமமும், கும்பகத்தில் அறுபத்து நான்கு நாமமும் ஜபிக்கின்றனர். சிலர் ஹ்ரஸ்வ தீர்க்க புலுத (அளபெடை) ரூபமாக உச்சாரணஞ் செய்கின்றனர். மூலத்வார முதல் மஸ்தக பரியந்

தம் ஓங்காரத்தின் த்வநியைச் செய்கின்றனர். ஆதலால் அநேக பிரகாரமாக இதன் உச்சாரண முண்டாகின்றது. அதன் அர்த்தத்தின் பாவனே இரு வகைத்தாம்:—ஒன்று ஸகுண ரூப அர்த்தத்தின் பாவனே; இரண்டாவது நிர்க்குண ரூப அர்த்தத்தின் பாவனே. ஸப்த சித்தாந்தத்தில் கூறப்பட்ட ஒன்பது ஒன்பது மாத்திரையின் அர்த்தத்தின் பாவனே ஸகுணர்த்தத்தின் பாவனேயாம். இரண்டாவது கூறப்பட்ட அறுபத்தாறு மாத்திரையின் அர்த்தமும் ஸகுணர்த்தத்தின் பாவனேயாம். "ஸர்வார்த்த ரூப ஓங்காரமாய ஈஸ்வரன் நான்" என்று அர்த்த பாவநா ஸஹிதம் குருவாயிலாய் உபாஸனே செய்கின்றனர் அது ஸகுணஉபாஸநையாம். இரண்டாவது நிர்க்குணப்பிரஹ்மத்தின்பாவனே இங்ஙனமாம்:—"நான் ஓங்காரத்தினே உச்சரிக்கின்றேன்; அதனே யறிவது ஸாக்ஷி கூடஸ்த சச்சிதாநந்தப் பிரஹ்மமாம்; ஸர்வ வியாபியாம்; அஸ்தி பாதிப் பிரிய ரூபத்தால் யாண்டு மிருப்பதாம். அந்த நிர்க்குண ரூப ஓங்காரம் நான்" என்று ஜபஞ் செய்து அர்த்தத்தினேப் பாவனே செய்யின், பிரத்யக் சேதந ரூப அகண்ட சச்சிதாநந்தப் பிரஹமத்தின் பிராப்தி யுண்டாம்; அந்தராய ரூப விக்நமும் அபாவமாம்.

பகவான் பதஞ்ஜலியும்,சித்த விக்ஷேபஞ்செய்யும் யோகத்தின் விக்நம், அதன் நிவிர்த்தியின் ஹேது, ஈஸ்வர உபாஸனே, அதன் பலனே, "1. வியாதி, 2. ஸ்தியாநம், 3. ஸம்ஸயம், 4. பிரமாதம், 5. ஹாலஸ்யம், 6. அவிரதி, 7. பிராந்தி தர்சநம், 8. அலப்த பூமிகத்வம், 9. அநவஸ்திதத்வம் என்னும் ஒன்பதும் ஸமாதியின் அந்தராயமாய்ச் சித்தத்தின் விக்ஷேபகமாம்;" "1. துக்கம், 2. தௌர்மநஸ்த்வம், 3. அங்கமேஜயத்வம், 4. ஸ்வாஸம், 5. பிரஸ்வாஸம் என்னும் ஐந்தும் விக்ஷேபத்தின் ஸஹபாவி(கூடவே உண்டாம்) அந்தராயங்களாம்" என்று சூத்திரங்களாற் காண்பித்திருக்கின்றார்.

(1) கபம் பித்தம் வாயு என்னும் மூன்று தாதுக்களின் விஷமத் தன்மையால் ஜனிக்கும் ஜ்வராதி விகாரம் வியாதியாம்.

(2) குருவாற் சிக்ஷிக்கப்பட்ட புருஷனுக்கு ஆஸநாதி கர்மத்தில் அயோக்யத் தன்மை ஸ்தியாநமாம்.

(3) யோகம் ஸாதிக்கத்தக்கதா? அன்றா? என்னும் இருகோடி ஞாநம் ஸம்சயமாம்.



(4) ஸமாதி ஸாதநங்களில் அநுஷ்டாநத்தின் ஸாமர்த்தியத் தன்மை யிருந்தும் வேறு விஷயத்திற் பிரவிர்த்தித்தலால் அநுஷ்டாநம் செய்யாமையும், யோக ஸாதநத்தில் உதாஸீநத் தன்மையும் பிரமாதமாம்.

(5) கபம் முதலியவற்றாலும் தமோ குணத்தாலும் சரீரம் சித்தம் என்னும் இரண்டின் குருத்துவம் ஆலஸ்யமாம்.

(6) அபீஷ்ட விஷயத்தில் சித்தத்தின் வியபிசாரமின்றிய இச்சை அவிரதியாம்.

(7) யோக ஸாதந மின்றியதில் அதன் ஸாதந புத்தியும், அதன் ஸாதநத்தில் ஸாதந மின்மைப் புத்தியும் பிராந்தி தர்சநமாம்.

(8) ஏகாக்ரத் தன்மை ரூப ஸமாதி பூமியின் லாப மின்மை அலப்த பூமிகத்துவமாம்; சித்தத்தின் க்ஷிப்த மூட விக்ஷிப்த ரூபத் தன்மை யென்பது பொருளாம்.

(9) ஸமாதி பூமியின் லாப மடைந்தும் பிரயத்நத்தின் சிதிலத்தன்மையால் அதன்கண் சித்தத்தின் பிரதிஷ்டை யின்மை அநவஸ்திதத்வமாம்.

(1) சரீர மாநஸ துக்கம் அத்யாத்மகமாம். அது வியாதியின் வசத்தாலும், காமாதியின் வசத்தாலும் உண்டாகின்றது. வியாக்ரம் முதலியவற்றால் ஜனிக்கும் துக்கம் ஆதிபௌதிகமாம். கிரக பீடாதிகளால் ஜனிக்கும் துக்கம் ஆதிதைவீகமாம். இம் மூன்று துக்கமும் சித்தத்தின் ராஜஸ பரிணும ரூபமாம்.

(2) இச்சை நாசமாதல் முதலியவற்றால் பல முடைய துக்கத்தின் அநுபவத்தால் ஜனிக்கும் சித்தத்தின் தாமஸ பரிணும ரூப க்ஷோபம் துர் மநஸ்த்வ மாம். இதனே ஸ்தம்பி பாவம் என்றும் கூறுவர்.

(3) பிரயோஜந மின்றி அஸ்த பாதாதி அங்கங்களின் சலநமாகிய ஆஸந ஸ்தைர்யத்தின் விரோதி அங்கமேஜயத்வ மாம்.

(4) பிராணனால் பாஹ்ய வாயுவின் உட்பிரவேசம் சுவாஸ மாம்; அது ஸமாதியின் அங்க ரேசகத்திற்கு விரோதியாம்.

(5) பிராணனல் வயிற்றிலுள்ள வாயு வெளி வருதல் பிரஶ்வாஸ மாம்; அது ஸமாதியின் அங்கமாய பூரகத்தின் விரோதியாம்.

இவ்வாறு விக்நங்கள் அறிவிக்கப்பட்டன.

அவ்வீஶ்வரனின் வாசகமாய பிரணவத்தின் ஜபமும் அதன் அர்த்தத்தின் பாவனையும் உபாஸனை யெனப்படும். அப் பிரணவத்தின் ஜபத்தால் அதன் அர்த்தத்தின் தியாநத்தால் பிரத்யக் சேதநத்தின் ஸாக்ஷாத்காரம் உண்டாகின்றது; புகன்ற அந்தராயத்தின் அபாவமும் உண்டாகின்றது. இவ்வாறு உபாஸனையின் பலம் காண்பிக்கப்பட்டது. ஈண்டு எங்ஙனம் ஓங்காரத்தின் உபாஸகர்களின் பேதம் காண்பிக்கப்பட்டதோ அங்ஙனமே விராட் ஹிரண்யகர்ப்பன் அந்தர்யாமியாய ஈஶ்வரன் என்னும் மூவரின் உபாஸகர்களும், விஷ்ணு பிரஹ்மா மஹேசன் என்னும் மூவர்களின் உபாஸகர்களும், அர்ச்சா (மூர்த்தி) அவதாரத்தின் உபாஸகர்களும் ஆகிய எல்லோரும் ஸகுணப் பிரஹ்மத்தின் உபாஸகர்க ளென்றே கூறப்படுகின்றனர். ஜகந் நாதன், பத்ரி நாதன், கேதார நாதன், விரஜ நாதன், ஸாலிக்ராம மென்று நேத்திரத்திற்கு விஷயமாவன அர்ச்சா அவதார மெனப்படும். இராம கிருஷ்ண வராஹ நரஸிம்ஹாதி அவதாரம் விபூதி அவதாரமாம். பக்தர்களை இரக்ஷித்தல் முதலியன தைத்தியர்களைக் கொல்லுதல் முதலியன இவற்றின் கர்மங்களாம். வாஸுதேவாதி நான்கு வியூஹ அவதாரம், நான்கு அந்தக்கரணத்தின் தேவதா ரூபம் என்னும் இதன் உபாஸகரும் ஸகுண உபாஸகராவர். சிலரோ விஷ்ணு சிவன் ஸூர்யன் தேவி கணேசன் என்னும் ஐந்து தேவதைகளைத் தந்திர மார்க்கத்தால் பிந்ந பிந்நமாக உபாஸிக்கின்றனர். சிலரோ, இவ்வைந்தினையும் ஏக ஸ்வரூபமாக அறிந்து உபாஸிக்கின்றனர். இச் சகுண உபாஸகரும் ஸ்மார்த்த மார்க்கிய ரெனப்படுகின்றனர்.

## 2 - 43. அர்த்த வாதம்.

இவ்வாறு பிரஸங்கத்தால் வந்த அர்த்தத்தினைப் புகன்று இப்பொழுது எண்ணிக்கையின் அநுஸாரமாக மூன்று அர்த்த வாதத்தினைக் கூறுவாம்:—அநுவாதாதி பேதத்தால் வேதாந்த பாகத்தின்கண் ணுள்ள அர்த்த வாத வாக்கியம் மூ வகைத்தாம்:—



### அர்த்த வாத வாக்யம்.

விதி வாக்கியத்தின் வாச்சியமாய யஞ்ஞாதி சிரவணாதி ரூப விதேய அர்த்த அநுஷ்டாநத்தில் அபேக்ஷிக்கப்படும் ஸ்துதி ரூப அர்த்தத்தினை லக்ஷணா வ்ருத்தியால் அறிவிப்பது அர்த்த வாத வாக்கிய மெனப்படும். அது ஸ்வதப் பிரமாண மன்று; முக்கியார்த்தத்தில் தாத்பர்ய மின்மையின். அங்ஙனமாயினும், விதிக்கப்படும் அர்த்தத்தின் ஸ்துதி வாயிலாய்ப் பிரமாணபூத விதி வாக்கியத்தோடு சேர்ந்து தனது அர்த்தத்தினைப் போதிக்கின்றது. அதனால், அஃதும் பிரமாண மாகின்றது.

### பத ஸ்தாநீய அர்த்தவாத வாக்யம்.

எதனல் லக்ஷணையால் ஸ்துதி ரூப ஓர் அர்த்தத்தில் நஷ்டமாம், அதனல் அவ் வாக்கியம் பத ஸ்தாநீய மெனப்படும். அதற்கு விதி வாக்கியத்தோடு பதைகவாக்கியத் தன்மை ஆசார்யர்களால் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றது.

### பதைக வாக்யம்.

எதனல் பத ஸ்தாநீய மாகிய அர்த்த வாத வாக்கியம் விதி வாக்கியம் என்னும் இரண்டும் பரஸ்பரம் ஆகாங்க்ஷையுடையனவாய்ப் பரஸ்பரம் சேர்ந்து தமது அர்த்தத்தினைப் போதிக்கின்றன; அதனல், 'தஹிக்கப்பட்ட அஶ்வமும் நஷ்டமான ரதமும்' என்னு நியாயம் இதன்கண் யுக்த மாகின்றது. எங்ஙனம் இரண்டு தநவான்கள் தந வ்ருத்தியின் ஹேதுவாய வியாபாரத்தின் பொருட்டு ரத அஶ்வாதி ஸாமக்கிரியைகளோடும் விற்றற்கு யோக்ய அநந்த வஸ்துக்களோடும் தத்தம் தேசத்தினின்றும் தேசாந்தரம் சென்றார்கள். ஆண்டு மார்க்கத்தின் மத்தியில் ஈஶ்வர இச்சையால் ஒருவரது ரதத்திற் கட்டியுள்ள அஶ்வம் தஹிக்கப்பட்டு விட்டது, மற்றவரின் இரதம் பங்கமாய் விட்டது, அல்லது, அக்கியில் தக்தமாய் விட்டது; அப்பொழுது இருவரும் அவ்வாரண்ய தேசத்திற் பரஸ்பரம் ஆகாங்க்ஷ யுடையவர்க ளாயினர். அப்பொழுது தஹிக்கப்பட்ட அஶ்வத்தை யுடையவர்க்குத் தம் ஸாமக்கிரியோடு கூடி இச்சிக்கப் பட்ட தேசத்தின் பிராப்தியின் பொருட்டு மற்றவரிடத்திலுள்ள அஶ்

வத்தின் அபேக்ஷா வாயிலாய் அவரது அபேக்ஷை யுண்டாயிற்று. பங்கமான ரதத்தை யுடையவர்க்கும் மற்றவரிடத்துள்ள ரதத்தின் அபேக்ஷை வாயிலாய் அவரது அபேக்ஷை யுண்டாயிற்று. அப்பொழுது அஸ்வம் கொடுத்தலாலும் ரதங் கொடுத்தலாலும் பரஸ்பரம் சேர்ந்து ஸாமக்கிரியோடு கூடி இச்சிக்கப்பட்ட தேசத்தினை இருவரும் அடைந்தனரோ அங்ஙனமே, பிரவிர்த்தியினை யுண்டாக்கும் விதி வாக்கியம்,தனது அர்த்த ஞாந வாயிலாய்க் கிருதி ஸாத்திய தன் இஷ்ட ஸாதநமாயினும் அதிகாரிகளால் விதேய அர்த்தத்தின் அநுஷ்டாந நிமித்தம் ஸாதநத்தால் அல்லது பலத்தால் அநிஷ்ட ஹேதுத்தன்மை யின்மைரூப அதன் ஸ்துதியினை விரும்பி அர்த்த வாதத்தினைக் குறித்து ஆகாங்க்ஷை யுடையதாகின்றது. அர்த்த வாத வாக்கியமும், தனது பிராமாண்யத்தின் பொருட்டு விதி வாக்கியத்தினை அபேக்ஷிக்கின்றது. ஆதலால், (எப்போது) அவை பரஸ்பர ஆகாங்க்ஷையின் பூரண வாயிலாய்ப் பரஸ்பரம் ஸம்பந்தித்து அதிகாரிகளிடத்தில் தமது அர்த்தத்தினைப் போதிக்கின்றனவோ,அப்போது பல இச்சையினை யுடைய அதிகாரி,விதிக்கப்படும் அர்த்தத்தின் ஸ்துதியினைக் கேட்டுப் பலப் பிராப்தியின் பொருட்டு அதன் அநுஷ்டாநத்தில் ஆதரத்தோடு யத்தநஞ் செய்கின்றான். இவ்வாறு அர்த்த வாத வசநத்தின் பதைக வாக்கியத் தன்மை கூறப்பட்டது.

இப் பொழுது, அதனது மூவித் தன்மையினைக் கூறுவாம் :—

### (1) அநுவாத அர்த்தவாதம்.

(1) பிரமாணாந்தரத்தால் சித்தித்த அர்த்தத்தினைக் கூறுவது அநுவாத மென்னும் பெயரினை யுடைய அர்த்த வாத வாக்கியமாம். எங்ஙனம், "அக்நி பனிக் கட்டியின் விரோதியாம்" என்னும் பனிக்கட்டியினை நிவாரணஞ் செய்யும் அக்நி, பிரத்தியக்ஷப் பிரமாணத்தாற் சித்தமாம். ஆதலால், இஃது அக்நி தேவதையின் கர்மத்தினை ஸ்துதிப்பதாம்.

### (2) குண அர்த்தவாதம்.

(2) வேறு பிரமாணத்திற்கு விரோதமாய அர்த்த வாத வசநம், குணவாயிலாய் விதிக்கப்படும் அர்த்தத்தின் ஸ்துதி செய்வது குணவாத மென்னும் அர்த்த வாதமாம். எங்ஙனம், "யூபம் ஆதித்யன்" என்



புழி யூபத்திற்கு ஆதித்திய ரூபத்தன்மை பிரத்தியக்ஷப் பிரமாண விருத்தமாம்; ஆதலால், அது ஸூரியனது பிரகாச குண ஸமாந பிரகாசாதி குணங்களைக் கொண்டு யூபத்தினை ஸூரிய ரூபத்தாற் போதிக்கின்றது.

### (3) பூதார்த்த வாதம்.

(3) சுருதி வாக்கியம் தனது அர்த்தத்திலும் பிரமாணமாய் லக்ஷணையால் விதிக்கப்படும் பொருளின் ஸ்துதியையும் அறிவிப்பது பூதார்த்த வாத மென்னும் பெயரினையுடைய அர்த்த வாதமாம்; தனது சக்கியார்த்தத்தில் பிரமாணமா யிருந்தும் ஸ்துதியைப் போதித்தலால், அல்லது, அநதிகத (அறியப்படாத) அவிருத்தார்த்தத்தைப் போதித்தலால். எங்ஙனம்? "வஜ்ரஹஸ்தன் புரந்தரன் (இந்திரன்)" "வ்ருத்ராஸுரன் பொருட்டு இந்திரன் வஜ்ரத்தைத் தூக்கினான்" என்னும் வாக்கியங்கள், விரோத மின்றிய தமது அர்த்தத்தினைப் போதித்து, லக்ஷணையால் இந்திர தேவதையின் கர்மத்தினை ஸ்துதிக்கின்றன. அது சாஸ்திரத்தில் "பிரத்தியக்ஷாதிகளின் விரோதமாயின் குணவாத மாகின்றது; நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தில் அநுவாத மாகின்றது. அவ் விரண்டின் அபாவத்தால் பூதார்த்த வாதமாம் என அர்த்த வாதம் மூ வகைத்தாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது" என்று கூறப்பட்டிருக்கிறன்து.

[எங்ஙனம் கர்மத்தை விதிக்கும் விதி வாக்கியத்தின் ஸஹகாரி அர்த்தவாத மெனப்படுகின்றதோ, அங்ஙனமே சிரவணாதிகளை விதிக்கும் விதி வாக்கியத்தின் ஸஹகாரி அர்த்த வாத மெனப்படுகின்றது. "அந்த உபதேசத்தால் அறியத்தகும் ஆத்மாவினை நீ குருவினிடத்திற் கேட்டனையா? எதன் சிரவணத்தால் கேட்கப்படாதது கேட்டதும்,மதமின்றியது மதமும், விஞ்ஞாத மின்றியது விஞ்ஞாதமு மாகின்றன", "ஆசாரியரை யுடைய புருஷனே அறிகின்றான்", "எதுவரையில்சரீரம் விழவில்லையோ, அவனுக்கு அதுவரையில் நீளுளாம்; அநந்தரம் முக்தி யுண்டாகின்றது", "எங்ஙனம் கர்மத்தா லடைந்த இந்த லோகம் நாச முறுகின்றதோ, அங்ஙனமே, புண்யத்தா லடைந்த ஸ்வர்க்காதி லோகமும் நாச முறும்", "கர்மத்தாற் சம்பாதித்த லோகத்தினை நாசஸ்வபாவமாக விசாரித்துப் பிராஹ்மணன் நிர்வேதத்தினை யடைகின்றான். எதனால், அகிருதமாய (செய்யப்படாத) மோக்ஷம் கர்மத்தால்

அடையப்படுவ தின்று" என்பன வாதி அர்த்த வாத சுருதிகள் பிரஹ்ம ஞாநத்தின் பொருட்டு விதி வாச்சியமாய அநுஷ்டிக்கத்தக்க புருஷனது கிருதி (யத்ந) ஸாத்திய சிரவணாதிகளை ஸ்துதிக்கின்றன. ஆதலால், ஜிஞ்ஞாஸு கிருதி ஸாத்திய தனது இஷ்ட ஸாதந சிரவணாதிகளில் பல முடைய அநிஷ்ட அநுபந்தித்வ (உண்டாகுதல்) ரூப சங்கையினை அர்த்த வாத வாக்கிய வாயிலாய் நிவாரணஞ் செய்து, சங்கை யற்றவனாய் நிரந்தரம் வேதாந்த சிரவணத்தினிடத்துப் பிரவர்த்திக்க. அப்பொழுது நிரந்தர அப்யாஸத்தின் பலத்தால் ஞாந வாயிலாக அவசியம் மோக்ஷத்தினை அடைவான்.]

## 2—44. விதி வாக்யம்.

மூன்று விதி வாக்கியத்தினைக் கூறுவாம்:-அபூர்வ விதி, நியம விதி, பரிஸங்கியா விதியின் பேதத்தால் விதி வாக்கியம் மூ வகைத்தாம்:—

### (1) அபூர்வ விதி.

(1) அவற்றுள், வேறு பிரமாணத்தால் அறியப்படாத அர்த்தத்தினைப் போதிக்கும் சுருதி வசநம் அபூர்வ விதியாம். அது மீண்டும் அபிதாந அபிதேய பேதத்தால் இரு வகைத்தாம்.

### (i) அபிதாந விதி.

(i) தனது அர்த்தத்தில் புருஷனைப் பிரவர்த்திக்கும், அல்லது பிரேரிப்பிக்கும் சுருதி வசநம் அபிதாந விதியாம். அது, மீண்டும் உத்பத்தி, விநியோகம், அதிகாரம், பிரயோகம் என்னும் பேதத்தினால் நான்கு வகைத்தாம்.

### (a) உத்பத்தி விதி.

அவற்றுள், அத்வீதீயப் பிரஹ்ம ஞாநத்தின் ஜநகமாய வேதாந்த விசார ரூப சிரவணத்தின் சொரூப போதகமாய விதி வாக்கியம் உத்பத்தி விதியாம். எங்ஙனம்? "கேட்க, தேடுக, அறிக" என்பனவாதி வாக்கியங்களாம்.

### (b) விநியோக விதி.

சுருதி லிங்க வாக்யாதி ஆறு பிரமாணத்தின் ஸஹாயத் தன்மையால் சிரவண ரூப அங்கியின் பஹிரங்க அந்தரங்க பாவத்



தினை அறிவிக்கும் விதி வாக்கியம் விநியோக விதியாம். எங்ஙனம்? "சாந்தம் தாந்தம் முதலியன உடையவனாய் ஆத்மாவில் ஆத்மாவினை விசாரிக்க" "பிரஹ்ம சுரோத்திரீய பிரஹ்ம நிஷ்ட குருவின்பால் அதிகாரி செல்க" "மநநஞ் செய்க, நிதித்தியாஸநஞ் செய்க" என்பனவாதி வாக்கியங்களாம்.

### (c) அதிகார விதி.

உத்பத்தி விதி கழறிய சிரவணத்திற்குப் பலத்தோடு ஸம்பந்தத்தினை அறிவிக்கும் விதி வாக்கியம் அதிகார விதியாம். எங்ஙனம்? "பிரஹ்மாத்ம ஸாக்ஷாத்காரத்தின் பொருட்டு வேதாந்தத்தினைச் சிரவணிக்க" என்பதாதி வாக்கியமாம்.

### (d) பிரயோக விதி.

அங்க ஸஹித சிரவண ரூப அங்கியின் அநுஷ்டாநத்தினை அறிவிக்கும் விதி வாக்கியம் பிரயோக விதியாம். எங்ஙனம்? "ஸாதந சதுஷ்டய ஸம்பந்ந ஸந்யாஸி, மநநாதி ஸஹித வேதாந்தத்தினைக் குருமுகமாகக் கேட்க" என்பதாதி வாக்கியமாம்.

### (ii) அபிதேய விதி.

அபிதேய விதியினைக் கூறுவாம்:—அபிதாந விதியின் அர்த்தமாகிய புருஷனது கிருதியால் ஸாத்தியமாய், இஷ்ட பலத்தின் ஸாதகமாவது அபிதேய விதியாம். எங்ஙனம்? வேதாந்தத்தின் சிரவணாதிகள் தனதுபிரயத்ந ஸாத்தியமாய்த் தனது இஷ்டமாய பிரஹ்மாத்ம ஞாநத்தின் ஸாதகமா யிருக்கின்றன. அதனால், இதுவே அபிதேய விதி யெனப்படும்.

வாசஸ்பதி மிஸ்ரர் இங்ஙனங் கூறுகின்றனர்:—வேதாந்தத்தின் சிரவணம் அவஸ்ய கர்த்தவ்யத்தன்மையால் விதிக்கப்படுவதன்று. எதனால்? சிரவணத்தில், சிரவணம் ஞாநம் என்னும் இரண்டின் காரிய காரண பாவத்தினைப் போதிக்கும். "கேட்க" என்பதாதி வாக்கியம் அபூர்வ விதி யன்று. எதனால்? ஸூக்ஷ்மமாய ஷட் ஜாதி ஸப்த ஸ்வரங்களின் பிரத்தியக்ஷ ஞாநத்தில் காந்தர்வ சாஸ்திரத்தின் சிரவணாதி அப்யாஸ காரணத் தன்மை கிரஹிக்கப்படுகின்றது. அதுபோல் அதிஸூக்ஷ்மப் பிரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரத்திலும் சிரவணாதிகளின் காரணத் தன்மை அந்வய வ்யதிரேகத்தால் பிராப்தமாம்.

அந்த அடைந்த அர்த்தத்தினை அறிவிக்கும் விதி வாக்கியம் ஒரு
காலத்தும் அபூர்வ விதியாவ தின்று. "கேட்க" என்பதாதி வாக்கி
யத்தி லுள்ள 'க' விகுதிக்கு "வேதாந்தம் சிரவண யோக்யம்" என்
னும் இவ்வளவே அர்த்தமாம். ஆதலால், வேதாந்த சிரவணுதிகள்
இச்சையின் அநுஸாரமாம், நித்திய விதி அன்றும்.

ஆசார்ய ஸ்வாமிகளோ "சிரவணம் விதேயமும், அவச்யம்அநுஷ்
டேயமுமாம்" என்று கூறுகின்றனர். அதன்கண் அபூர்வ விதி இன்று;
அந்வய வியதிரேகத்தால் பிராப்தமாகுதலின். அங்ஙனமாயினும், நியம
விதி அல்லது பரிஸங்கியா விதி அதன்கண் இருக்கின்றது. ஆதலால்,

(2) நியம விதி.

முற் புகன்ற மூ வித விதியுள் இப்பொழுது நியம விதியின் லக்ஷ
ணத்தினைக் கூறுவாம்:—ஒரு பலத்தில் விகற்பத்தால் யாண்டு இரண்டு
ஸாதநம் பிராப்தமாமோ, அவற்றுள், ஒரு பக்ஷத்தின்கண்ணே அப்
ராப்தியாகும்; அந்த அப்ராப்த அம்சத்தினைப் பூரணஞ் செய்யும் விதி
வாக்கியம் நியம விதியாம். எங்ஙனம்? பிரஹ்ம ஸாக்ஷாத்கார ரூப பலத்
தில், ஒன்றோ வேதாந்த சிரவணம் ஸாதநத் தன்மையால் பிராப்தமாம்;
இரண்டாவது, அத்யாத்ம புராணுதிகளின் சிரவணம் பிராந்தியால்
ஸ்வதந்தர ஸாதந ரூபத் தன்மையால் பிராப்தமாம். எப்பொழுது
பக்ஷத்தில் புராணுதிகளின் சிரவணம் ஸாக்ஷாத்காரத்தின் பொருட்டு
ஸ்வதந்தரமாகப் பிராப்த மாகின்றதோ, அப்பொழுது வேதாந்தத்தின்
சிரவணம் அப்ராப்த மாகின்றது ; அந்த அப்பிராப்த அம்சத்தின் பூர
ணத்தன்மையின் பொருட்டுக் "கேட்க" என்பதாதி நியம விதி, வேதாந்
தத்தினையே சிரவணிக்க என்று கூறப்படுகின்றது. அதனுல், அப்
ராப்த அம்சத்தின் பூரணத்தன்மை மாத்திரமே ஈண்டு விதிக்கப்படுவ
தன் பொருளாம். நியமஞ் செய்கின்ற பலத்தால் அர்த்தத்தால் ஸ்வ
தந்தரப் பிரமாணத் தன்மையால் அத்யாத்ம புராணுதிகளின் சிர
வணத்தின் வியாவிர்த்தி யுண்டாகின்றது என்பது அர்த்தத்தால் பெறப்
பட்ட பொருளாம்; அல்லது, ஆத்ம ஞாநத்தின் பொருட்டு அநாத்மா
வினைப் போதிக்கும் தர்க்காதி சாஸ்திரத்தின் சிரவணம் பிராந்தியால்
பிராப்த மாகின்றது; அதன் நிவிர்த்தி அர்த்தத்தால் உண்டாகின்றது.

(3) பரிஸங்கியா விதி.

இப்பொழுது பரிஸங்கியா விதியினைக்கூறுவாம்:—ஒரு பலத்தைக்
குறித்து ஏக காலத்தில் இரண்டு ஸாதநத்தின் பிராப்தி யுண்டாயின்,



ஒரு ஸாதநத்தின் நிவிர்த்தியினைப் போதிக்கும் விதி வாக்கியம் பரிஸங்
கியா விதி யெனப்படும்.

எங்ஙனம்? பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்தில் முற் புகன்ற ஏககாலத்தில்
இரண்டு ஸாதநங்கள் பிராப்தமாயின், "கேட்க" என்பதாதி பரிஸங்
கியா விதி, பிராந்தியால் ஸ்வதந்தரப் பிரமாணத் தன்மையாற் பிராப்த
அத்யாத்ம புராணுதிகளினது அல்லது, அநாத்ம சாஸ்திரத்தினது சிர
வணத்தின் வியாவர்த்தியினைப் போதிக்கின்றது. பிரஹ்ம ஞாநத்தின்
பொருட்டு வேதாந்த சாஸ்திரத்தினும் அதிரிக்த சாஸ்திரத்தினைச் சிர
வணம் செய்யற்க. ஈண்டு ஒரு ஸாதநத்தின் வியாவிர்த்தி யம்சமே
விதேய அர்த்தமாம். இரண்டாவது ஸாதநத்தின் சிரவணம் விதேய
மன்றும் ; அது பூர்வம் பிராப்தமா யிருத்தலின், விதிக்குப் பிராப்த
அம்சத்தின் போதநத்தில் பிரயோஜந மின்மையின். அது சாஸ்தி
ரத்தில், "அத்தியந்தம் அப்ராப்த அர்த்தத்தில் அபூர்வ விதியாம் ;
பக்ஷப் பிராப்தத்தில் நியமமாம். இரண்டு மடைந்திருக்கின் பரிஸங்
கியையாம் என்று கூறப்படுகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

[எதனுல் நியம விதி, அல்லது, பரிஸங்கியா விதி சிரவண விதியின்
அர்த்தமாம் அதனுல், "அநாத்மாவின் அதர்சநத்திறைல் நான் பர
மாத்மாவினைத் தியாநிக்கின்றேன்" என. ஆதலால், இவ்வாறு கூறப்
படும் விதியினது லக்ஷண ஸ்வரூபங்களைக் குருமுகத்தால் நன்கு ஜிஞ்
ஞாஸு அறிந்து, அங்கோபாங்க ஸஹிதம் வேதாந்த சிரவண ரூப
அங்கியினிடத்தே யத்நம் அதிகமாகச் செய்க. எதனுல் ஸந்நியாஸ
உதாஸ வைராக்கிய ஆச்ரமங்களி லுள்ள புருஷருக்கு வேதாந்த சிர
வண விதி நித்திய மெனப்படுகின்றது ; ஐச்சிகம் (இச்சையாநுஸாரம்)
அன்றும். எதனுல்? "வேதாந்த விமுக யதிகளை நான் காட்டுப் பன்
றிக்குச் சமாநமாய்ப் பக்ஷணத்தின் பொருட்டுக் கொடுத்து விட்
டேன்." என்னும் சுருதியில், வேதாந்த விமுக ஸந்நியாசிகட்குச் சிர
வணஞ் செய்யாதிருக்கில் அநர்த்தம் கேட்கப்படுகின்றது.]

**2 - 45.** வேத காண்டம்.

வேதத்தின் மூன்று காண்டத்தினைக் கூறுவாம்:—

கர்ம காண்டாதி பேதத்தால் வேதத்தின் காண்டம் மூன்று
வகைத்தாம்:—தர்மாதி நான்கு பலத்தினையும் அடைவிக்கும் ஸாத

நங்களைப் பிரதிபாதிக்கும் சர்வ அர்த்தங்களையும் பிரகாசிக்கின்ற ஸர்வஞ்ஞ ஸமாந ஸங்கீர்ண வாக்கியத்தினை யுடைய வேத ரூப ஒரு விருக்ஷ மிருக்கின்றது. அதற்கு வியாஸாதி ஆசார்யர்கள் கலியில் ஜீவர்களின் மந்த புத்தி முதலியவற்றினை அறிந்து ரிக் முதலிய நான்கு பாகத்தையும், விருக்ஷத்தின் காண்டம்போன்று தனித் தனி மூன்று மூன்று காண்டங்களையும் வேறாகச் செய்தார்கள்.

(1) கர்ம காண்டம்.

அவற்றுள், கர்ம காண்ட மென்பது முதலதாம். எதன்கண் ஸகாம நிஷ்காமாதி பேதத்தால், நித்திய நைமித்திகாதி பேதத்தால் நாநாவித கர்மம், நாநாவித பலம், நாநாவித அநுஷ்டாநப் பிரகாரம், நாநாவித கர்த்தாவாகிய ஜீவர்களுக்குக் கர்ம மார்க்கத்தில் பிரவிர்த்தியின் பொருட்டுப் பிரதிபாதநஞ் செய்யப்பட்டிருக்கின்றன; எதனைச் சாஸ்திரத்திற் சொல்லியபடி அநுஷ்டாநஞ் செய்து அதிகாரியாகிய ஜீவன் ஸ்வர்க்காதி,அந்தக்கரண சுத்தியாதி பலத்தினை யடைகின்றான்; அக்கர்ம காண்டத்தின் அர்த்தத்தினை நிர்ணயிக்கும் ரிஷி முநி முதலியோர்கள் செய்த அநந்த சாஸ்திரங்கள் இருக்கின்றன. அவை தர்ம சாஸ்திர மெனப்படும்.

(2) உபாஸநா காண்டம்.

இரண்டாவது உபாஸநா காண்டமாம். எதன்கண் ஸகுண நிர்க்குண பேதத்தால், பிரதீக அஹங்கிரக பேதத்தால், ஸாதந ரூப பல ரூப பேதத்தால், ஒன்பதுவித பக்தி பேதத்தால் அநந்தம் பிரகாரமாக பகவத் உபாஸனை, நாநாவித அதன் அநுஷ்டாநம், நாநாவித அதன் அதிகாரிகள், பலம் என்பன அதிகாரிகளின் உபாஸனையின் பொருட்டுப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றன. எதன் அநுஷ்டாநத்தால் உபாஸகன் சித்த ஏகாக்ர வாயிலாய்ப் பரம்பரையாக ஸகுண நிர்க்குணப் பிரஹ்மப் பிராப்தி ரூப பலத்தினை யடைகின்றான்,அவ்வுபாஸநா காண்டத்தின் அர்த்தத்தினை நிர்ணயிக்கும் ரிஷி முதலியோர்கள் இயற்றிய அநந்த சாஸ்திரங்கள் இருக்கின்றன; அவை உபாஸநா சாஸ்திர மெனப்படும்.

(3) பிரஹ்ம காண்டம்.

மூன்றாவது பிரஹ்ம காண்டமாம். எதன்கண் ஆத்ம ஸ்வரூபத்தின்கண் நிலைத்தல் ரூப, அல்லது, அவித்யா நிவிர்த்தி ரூப மோக்ஷத்



தின் ஸாதந மாகிய பரோக்ஷ அபரோக்ஷ ஞாநத்தின் ஸாதந யஞ்ஞாதி, ஸமஆதி, சிரவணாதி ரூப பஹிரங்க அந்தரங்கங்களும், அவ்வதிகாரிகளும், விரக்த புருஷனது பிரவர்த்தியின் பொருட்டு நாநாவிதப் பிரகாரமாக நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றன. எதன்கண் அதிகாரி புருஷன் ஞாநவாயிலாய் ஜீவந் முத்தி, விதேக முத்தி ரூபப் பலத்தினை அடைகின்றான், அக் காண்டத்தின் அர்த்தத்தினை நிர்ணயிக்கும் ஸ்ரீமத் வியாஸ சங்கர விஸ்வேஸ்வர வசிஷ்டாதி அநந்த ஆசாரியர்க ளியற்றிய அநந்த கிரந்தங்கள் இருக்கின்றன. அவை கௌண வேதாந்த சாஸ்திர மெனப்படும்; உபநிஷத்துக்களே முக்கிய வேதாந்த ஸ்வரூபமாகலின்.

(ஆதலால், மோக்ஷ மார்க்கத்தினை இச்சிக்கும் ஜிஞ்ஞாஸுக்களும் அதிகார அநுஸாரம் ஒரு காண்டத்தின் அர்த்தத்தினை விதி பூர்வகமாகக் குருவினால் அறிந்து இந்திரியம் புஷ்டியாயிருக்கும் அவஸ்தையில் தர்மாதி அநுஷ்டாநத்தின் பொருட்டே மிக முயலுக.)

**2 - 46. அந்தக்கரணத்தின் மலம்.**

அந்தக்கரணத்தின் மூ வித மலத்தினைக் கூறுவாம் :—பாப வாஸனை முதலிய பேதத்தால் ஞாநத்தினைப் பிரதிபந்திக்கும் அந்தக்கரணத்தி லுள்ள மலம் மூ வகைத்தாம்.

(1) அநாதி ஸம்ஸாரத்தில் அஞ்ஞராகிய இரஜ தமோகுணப் பிரதாந ஜீவர்களால் அளவிடக் கூடாத ஜந்மத்தினை யடைந்து அதன்கண் பூர்வ பூர்வ பிராந்தியால் ராகத்வேஷாதி புத்திகளால் லகு (அற்ப) தீர்க்க (மிகுந்த) அநந்தவிதப் பிரஹ்மஹத்தியாதி ரூப பாபஞ் செய்யப்பட்டிருக்கின்றது; அதனால் ஜநிக்கப்பட்ட அநந்த வாஸனை அந்தக்கரணத்தில் ஆரூடமா யிருப்பது பிரதம மலமாம். அதன் பிரபாவத்தால் ஜீவன் வர்த்தமாந ஜந்மத்திலும் பாபத்தைச் செய்தலில் பிரவர்த்திக்கின்றான். எதனால், ஸத் சாஸ்திர விசாரத்திலும், ஸத்துக்களின் ஸமாகமத்தி (ஸாதுக்கள் வருதலி) லும் ஒரு காலத்தும் பஹிர்முகனாய ஜீவனுக்கு ருசி யுண்டாகின்ற தில்லை.

(2) இரஜோ குணத்தால் இழுக்கப்பட்ட சித்தத்தின் ஒவ்வொரு க்ஷணமும் இச்சிக்கப்பட்ட விஷயத்திற் சலநம் ஸஞ்சலத்தன்மை ரூப இரண்டாவது மலமாம். எதனால், பிரதி திநமும் சாஸ்

திரங்களின் வசநத்தினைக் கேட்டும் படித்தும் அவ் வசநங்கள் சித்தத்தில் கிரஹண தாரணங்கள் ஆகின்றதில்லை. எதனால் அவ் விஷயலம்படனது சித்தம் சாஸ்திரீயப் பிரயத்ந மின்றிப் பூர்வ ஸம்ஸ்காரத்தின் பலத்தால் ஸதா பஹிர்முகமாக மிகவுஞ் செல்லுகின்றது; "ஹே கிருஷ்ண! மநம் ஸஞ்சலமாம். பிரமாதாதி பலவானுய்த்திடமாம். அதன் நிக்கிரஹம் வாயு போன்று செய்ய முடியாததாம் என நான் கொள்ளுகின்றேன்" என்னும் பிரமாணத்தால்.

(3) "நான் அஜ்ஞன்; ஆத்மாவினை அறியேன்" என்னும் அநுபவத்தாற் சித்தித்த ஸ்வரூபத்தின் அஜ்ஞாநம் முற் புகன்ற மலத்தின் ஹேதுவாய் மூன்றாவது மலமாம். எதன் பிரபாவத்தால் இச் சர்வஜீவர்களும் கடி (வடி) யந்திரம் (ஏறுதல் இறங்குதல்) போன்று ஸம்ஸாரத்தில் கீழ்க் கதி மேற் கதிகளை யடைகின்றனர்.

[இம் மூவித மல நிவாரணத்தின் பொருட்டு ஆசாரியர்கள் வேதத்தினை மூன்று பாகமாகப் பகுத்திருக்கின்றனர். கர்ம காண்டத்திற் புகன்ற விஷ்ணுவின் ஸந்தோஷத்தால் நிஷ்காம கர்மத்தின் விதி பூர்வகம் அநுஷ்டாநம் செய்து, ஜந்ம ஜந்மாந்தரங்களிற் செய்த பாவ, அதன் ஜந்ய, அநந்த வாஸநா ரூப பிரதம மலத்தின் நிவிர்த்தி யுண்டாகின்றது; "நிஷ்காம கர்மத்தால் கஷாயம் தக்த (சுத்த) மாய் அதன் பின் புருஷன் ஞாநத்திற்கு ஹேதுவாய ஸாதநத்தில் பிரவர்த்திக்கின்றான்" என்பதாதிப் பிரமாணத்தால்.

இரண்டாவது காண்டங் கூறியபகவத்பக்தி தியாநாதிகளைக்குருமுக வாயிலாய்ச் சிரத்தாதி பூர்வகம் விதி பூர்வகமாக அநுஷ்டித்தலால் ஸஞ்சலத்தன்மை ரூப இரண்டாவது மலத்தின் நிவிர்த்தி யுண்டாகின்றது. எதனால், "பகவத்தியாநாதிகளால் கிரஹிக்கப்பட்ட சித்தத்தின் ஏகாக்ரம் அந்தர்முகமாய் நிஷ்காமமாய்த் தியாநிக்கும் புருஷனுக்கு பகவத்தர்சநத்தின் யோக்யமாகின்றது." "ஸூக்ஷ்ம புத்தியால் பிரஹ்மம் பார்க்கப்படுகின்றது" என்பதாதிப் பிரமாணத்தால் மூன்று காண்டம் புகன்ற, ஸம ஆதி, சிரவணாதி, அமாநித்வாதி, பஹிரங்க, அந்தரங்க ஸாதந ஸமூக அநுஷ்டாநத்தால் உண்டாய ஸாக்ஷாத்கார வாயிலாய் ஆவரணஸஹித அஜ்ஞாநரூப் மூன்றாவது மலத்தின் நிவிர்த்தி யுண்டாகின்றது; "இவ் வாத்மாவினை யறிந்து அஜ்ஞாநத்தினைக் கடக்கின்றான்" "அப்பொழுது புருஷன் ஜீவன் முக்தனா யிருக்கின்றான்" என்பன



வாதிப் பிரமாணத்தால். எதனால் வேதங்களின் விபாகஞ் செய்தற்கு இஃதே பிரயோஜநமாம் அதனால், அதிகாரி எவ்வெப் பிரகாரத்தாயினும் ஸம்ஸாரத்தினை விடுதற் பொருட்டு மூவித மலத்தினையும் நிவாரணஞ் செய்தல் உசிதமாம்.]

## 2 - 47. ஆத்ம பேதம்.

ஆத்மாவின் மூ விதப் பேதத்தினைக் கூறுவாம் :—மித்தியாத்மா கௌணாத்மா முக்யாத்மாவின் பேதத்தால் ஆத்மாவின் பேதம் மூ வகைத்தாம்.

### (1) மித்தியாத்மா.

(1) அவற்றுள், பூதத்தின் விகாரமாய அநித்த ஜட துக்க ஸ்வரூப மல மூத்திராதிகளால் பூர்ணமாக்கப்பட்ட அந்நமயாதி பஞ்ச கோச ரூப இச்சரீர இந்திரியாதி ரூப ஸங்காதம், பிரதம மித்தியாத்மாவாம்; அங்ஙனமாயினும், சேதந ஸ்வரூபமாக அநாத்மாவும் மித்தையுமாம். அதன்கண் ரூபப் பிரத்யகாத்மாவின் தாதாத்மிய அத்தியாசத்தினால் அவிவேக ஆத்ம சப்தத்தின் பிரவிர்த்தி யுண்டாகின்றது. எதனால் தசையில் இச் சேதந ஆத்மா தன்னை முற் புகன்ற ஸங்காதத்தோடு அபிந்நமாக அங்கீகரித்துக் கர்த்ருத்வ போக்த்ருத்வாதி ஸுகித்வ துக்கித்வ ஜநந மரணாதி அநாத்ம தர்ம ஸமூஹத்தினைத் தன்னிடத்தில் லறிந்து அநந்த துர்த் தசையினை அடைகின்றது, விவேக காலத்தில் தாதாத்மிய அபிமாநத்தின் அபாவ முண்டாய் எதனால் இச் சங்காதம் பாதிக்கப்படுகின்றது, அதனால் மித்தியாத்மா எனப்படுகின்றது.

### (2) கௌணாத்மா.

(2) ஸ்திரீ புத்ர தநாதிபதார்த்தங்கள்கௌணாத்மாவாம். ஜீவனுக்கு அவிவேக காலத்திலும் தன்னினும் அவற்றினுக்குப் பேதம் பிரத்தியக்ஷ சித்தமாமாயினும், ஆத்மாவின் தாதாத்மிய அத்தியாஸத்தால் அவற்றினையும் தனது ஸ்வரூபமாக அங்கீகரிக்கின்றனன். எதனால் அவற்றினது விருத்தி, நஷ்ட காலங்களில் நான் விருத்தி நஷ்டங்களை யடைந்தேன் என்று அவிவேகி ஜீவன் அநுபவஞ் செய்கின்றான். எங்ஙனம் ஜீவனுக்குத் தனது ஆத்மாவின்கண் நிரதிசயப் பிரேமை யிருக்கின்றதோ, அங்ஙனமே, அவற்றின்கண்ணும்பிரியமிருக்கின்றது.

எங்ஙனம், துக்க, ஆபத்துக்களின் பிராப்தியினைத் தன்னிடத்தில் பிரதிகூலமாய் அங்கீகரிக்கின்றனனோ, அங்ஙனமே, அவற்றின் துக்காதிகளையும் (பிரதிகூலமாய்) அங்கீகரிக்கின்றனன். ஆதலால், ஆத்ம ஸதிருச குணத்தினைக் கொண்டு அவற்றினையும் சாஸ்திரக்காரர்கள் கௌணாத்மா வென்று கூறி யிருக்கின்றார்கள். அவற்றின் பின்னமாய மித்தியாத்மாவின், அல்லது, முக்யாத்மாவின் ஞாந காலத்தில் அதன் ஸம்பந்தி ஆத்ம புத்தி நஷ்டமாகின்றது. ஆதலால், குண வாயிலாகவே அவற்றின்கண் ஆத்ம சப்தத்தின் பிரவிர்த்தி யுண்டாகின்றது.

### (3) முக்யாத்மா.

(3) ஸ்வப்ரகாச ஸாக்ஷியாகிய ஆத்மா பஞ்சகோசங்களைப் பிரகாசிப்பிக்கின்றது. ஸம்பூர்ண ஸங்காதம் எதன் திருசியமாமோ அது திருஷ்டாவாம்; ஜீவனது வாஸ்தவ ஸ்வரூபமாம். மஹாவாக்கியம் பூர்ணாநந்தப் பிரஹ்மத்தோடு எவனுக்கு அபின்னத்தன்மை கூறுகின்றது, அது முக்யாத்மாவாம்; அதுவே ப்ரேஷியாய ஆத்மாவின் நிரதிசயப் பிரியத்திற்கு விஷயமாம்; அதன் பிரேமையானே அதன் அநுகூல மித்யாத்மா, கௌணாத்மாக்களில் ஜீவனுக்குப் பிரியம் உண்டாகின்றது.

(தனது ஆத்மாவினைக் குறித்து அவை பிரதிகூலமாயின் அந்தப் பிரேமை நஷ்டமாய் விடுகின்றது. ப்ரேஷ, ப்ரேஷி பாவம் உண்மையாய் இந்நியமமாகவே சுருதியால் பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றதாயினும், அவிவேக தசைக்கண் அத்யாஸத்தின் பிரபாவத்தால் நியமத்தின் வியபிசாரமும் பார்க்கப்படுகின்றது. எதனால், சில வியவஹாரத்தில் கௌணாத்மா ப்ரேஷியாய தனது ஆத்மாவா யிருக்கின்றது; ஏனெனின், ப்ரேஷணுப புத்ராதிகளின் ரோகாதி ரூபஆபத் காலத்தில் தனது ஆத்மாவின் அற்பண பரியந்தமான உபாயத்தால் அவற்றின் ரக்ஷணை செய்வது பார்க்கப்படுதலின். சில வியவஹாரத்தில் ஸங்காதாத்மா ப்ரேஷியாம், கௌணாத்மா ப்ரேஷமாம்; ஏனெனின், தனது தேஹாந்தினைத் தஹித்தல் முதலிய ஆபத் காலத்தில் கௌணாத்மாவாய புத்ராதிகளை விட்டு விட்டும் தனது ரக்ஷணஞ் செய்யப்படுதலின். சில அவஸ்தையில் அந்தக்கரண விசிஷ்ட ஆத்மா ப்ரேஷியாம், தேஹாத்மா



ப்ரேஷமாம்; ஏனெனின், அதிக விஷய போகத்தின் பொருட்டு லோகாந்தரத்திற் செல்லும் இச்சையால் ஸகாம தபம் முதலியவற்றால் தேஹத்தினை வற்றச் செய்தலின். அதனால், அதிகாரிகள் குருமுகமாக முக்யாத்மாவினை நன்கு அறிந்து அதன்கண் நிரதிசயப் பிரீதி செய்தல் யோக்கியமாம்; மித்தியாத்மா, கௌணாத்மாக்களில் அன்று; அவை ஒரு காலத்துப் பிரீதியின் விஷயமா யிருத்தலினாலும், அநர்த்தஞ் செய்தலினாலும் (என்க.)

## 2 - 48. கர்த்தவ்யாதி.

கர்த்தவ்யாதி மூன்றினைக் கூறுவாம்:—மநுஷ்ய ஜன்மத்தில் அவஸ்யம் கர்த்தவ்யம் (செய்யத் தக்கது), ஞாதவ்யம் (அறியத் தக்கது), பிராப்தவ்யம் (அடையத்தக்கது) என்னும் பேதத்தால் கர்த்தவ்யாதிகள் மூ வகையாம்.

### (1) கர்த்தவ்யம்.

(1) இந்த அநாதி ஸம்ஸாரத்தில் சில பிராசீந புண்யத்தால் அநந்த ஜன்மாந்தரத்தின் பின் இத் துர்லபமாகிய மநுஷ்ய ஜன்மம் பிராப்தமாகின்றது. அது எதனால் ஸர்வ பதப் பிராப்தியின் அதிகாரிகளாலும், தேவர்களாலும் இச்சிக்கப்பட்டதாம், அதனால், துர்லபமாம்; ஸ்வதந்தர மின்றியதாயும், பராதீநமாயும், ஸர்வ துக்காகரமாயும் உள்ள பசுவாதி யோநிகளினும் அதி சிரேஷ்டமா யிருத்தலின்; ஸ்வர்க்க ஸம்பந்த, நரக சம்பந்தமாய இரண்டு தேகங்களும் பக்தி ஞாநாதிகளைச் சாதிக்க இயலாததா யிருத்தலின். அங்ஙனமாயினும், க்ஷண பரிணாமியாய் நஸ்வரமாம். எதனால், வேறு தினத்தில் இருப்பதற்கு விஸ்வாஸ பாத்திர மன்று அதனால், இந்த ஜன்மத்தில் மஹா பாக்கிய புருஷனால் மநுஷ்யத் தன்மையின் ஸாபல்யத்தின் (சபலத் தன்மையின்) பொருட்டு ஸத் ஸங்கம், ஸத் சாஸ்திர விசாரம், ஹரி ப்ரஸாதம், நிஷ்காம கர்மம் முதலியன அவஸ்யம் செய்யத்தக்கனவாம்; குசங்காதிகளன்று; அவை கீழே விழுதற்கு ஹேதுவாகலின். விஷய ஸுகத்தின் பொருட்டு அநந்த அநர்த்தத்தின் ஹேதுவாய அதுர்தம் தம்பம் ஹிம்ஸை முதலியவற்றால் தநாதிகளை ஸம்பாதிக்கின்றவர்களுக்கு மநுஷ்யத் தன்மை பல மின்றியதாகின்றது. அவர்கள் இரு கால்

பசுக்களாவர்; பசுப் போன்று ஆகார மைதுநாதிகளில் ரமிக்கின்றமையின்; நரக யோநிகளிலும் விஷய போகம் இருத்தலின்.

### (2) ஞாதவ்யம்.

(2) அநிச்சை அபரிக்ரஹம் அகிஞ்சநம் ஶீலம் ஸாது ஸமாகமம் என்பவற்றினை யடைந்து இந்த ஜந்மத்தில் ஜீவேஶ்வர தத்வம் ஜகத் மாயைகளின் தத்வம் ஆகிய இந் நான்கு பதார்த்தங்களும் அவஶ்யம் ஞாதவ்யமாம். உபாதாந, ஹாநத்தின் (கொள்ளுதல் விடுதல்) பொருட்டு நியாயம் காவ்யம் கோசம் முதலிய சாஸ்திரங்கள் அறியத் தக்கனவன்றும். அல்லது, தநம் சம்பாதித்தற்பொருட்டு அநேகவித வியவஹார வித்தை அறியத்தக்க தன்றும்; முதலது, லோகத்தில் மாநம் பூஜை பிரக்யாதி என்பவற்றின் ஹேதுவாயிருத்தலின்; இரண்டாவது, மாயை அநிர்தம் வஞ்சநம் முதலியவற்றால் ஜீவனுக்கு அநர்த்தத்தினைச் செய்வித்தலின்.

### (3) பிராப்தவ்யம்.

(3) புண்யவான்களுக்கு ஸர்வ பஹிரங்க அந்தரங்க ஸாதநங்களின் பல பூதப் பிரஹ்மாத்ம ஏகத்வ ஞாநமே முற் புகன்ற ஸத்ஸங்காதிகளால் பிராப்தவ்யமாம். தநம் மாநம் பூஜை முதலியன ராஜாதி ஸம்பத்திகள் (அடையத்தக்கன) அன்று. அவை ஸ்வப்நத்திலடைந்த தநாதிகள் போன்று நஶ்வரமா யிருத்தலின்; பகவத் பக்தி பிரஹ்ம ஞாநமே துர்லபமாகலின்; தநாதி ஸம்பத்துக்கள் பிராரப்த கர்ம அநுஸாரம் பாபிகளிடத்திலும் இருத்தலின். அல்லது, இத் துர்லபமாகிய ஜந்மத்தில் பஜநாநந்தம், அல்லது, வித்தியாநந்தம், அல்லது, பிரஹ்மாநந்தமே அடையத் தக்கதாம்; விஷயாநந்த மன்று. ஏனெனின், அது விஷத்தோடு கூடிய இனிப்பினையுடைய அந்நம் போன்று அநேக துக்கத்தோடு கூடி யிருத்தலின்; அல்லது, ஒரு காலத் திருக்கும் தன்மையால் வியபிசாரியா யிருத்தலின்; அல்லது, விஷய இந்திரிய ஸம்யோக அதீநமா யிருத்தலின்; அல்லது, யாண்டும் ஸுலபமாகலின்; அல்லது, க்ஷய, அதிசயாதி தோஷத்தால் துஷ்டமாகலின்; அல்லது, தனது ஆத்மாநந்தத்தின் பிரதிபிம்ப மின்றி ஸ்வயமாக முதல் விஷயம் துக்க ஸ்வரூபமாக இருத்தலின்.



(விஷயாநந்தம் ஸம்ஸாரி புருஷனுக்காம்; பஜநாநந்தமோ பகவத் சரணாரவிந்த ரஸ லம்பட ஹரி (விஷ்ணு) தாஸனுக்காம்; பிரஹ்மாத்ம வித்தையால் உண்டாய ஸவிகற்ப ஸுகம் நான்காவது பூமியினையடைந்த வித்வானுக்காம். அதீந்திரியமாய், புத்திவிர்த்தி விஷய மின்றியதாய், தனது ஸ்வரூப ரூபப் பிரஹ்மாநந்தம் ஜீவந் முக்த புருஷனுக்கு உண்டாகின்றது. ஆதலால், எப் புருஷன் துர்லப மாய மநுஷ்ய ஜந்மத்தினை யடைந்தும், குசங்காதிகளால் விபரீத கர்மாதிகளைச் செய்கின்றான், விஷய ஸுகம் அடையத்தக்கதா மென்று கொள்ளுகின்றான், அதன் அடைவின் ஸாதநத்தினை அறியத்தக்கதா மென்று கொள்ளுகின்றான், அப் புருஷன் விஷய ஸுகத்தின் பொருட்டுச் சாஸ்திர நிஷித்த கர்மத்தினைச் செய்து தன்னை நரகத்தில் விழுபவனாகச் செய்கின்றான். "மநுஷ்ய ஜந்மத்தில் எப்புருஷன் நரகரூப வியாதியின் சிகிச்சை செய்யவில்லையோ, அந்த ரோகி ஔஷத மின்றிய ஸ்தாநத்திற்குச் சென்று என் செய்வான்" என்னும் பிரமாணத்தால்.)

## **2** - 49. கர்மம்.

கர்மாதிகளின் மூ விதத் தன்மைகளைக் கூறுவாம்:—கர்மம் விகர்மம் அகர்மம் என்னும் பேதத்தால் கர்மம் மூ வகைத்தாம்.

### (1) கர்மம்.

(1) சுருதி ஸ்மிருதிகள் கூறிய ஸ்வர்க்காதி பலத்தினையுடைய அக்நிஷ்டோமாதி ரூப ஸகாம கர்மமும், பாபநிவிர்த்தி அந்தக்கரண சுத்திகளின் ஹேதுவாகிய ஸந்தியாவந்தநாதி ரூப நிஷ்காம நித்திய கர்மமுமாகிய இரண்டும் கர்ம சப்தத்தாற் கூறப்படும். அவ்விரண்டனுள், ஸகாம கர்மம் நஶ்வர பலத்தினைக் கொடுத்தலானும், ஜீவர்களுக்குத் தனது பல போகத்தில் பந்தநத்தைச் செய்தலானும், ஸம்யக் ஞாநத்தில் அநுபயோகி யாதலானும் இராகத்தா லடைந்த யதேஷ்டாப் பிரவிர்த்தியின் ஸங்கோசந (சுருக்க)த்தின் பொருட்டு நாநாவித பலத்தினைப் பிரதிபாதிக்கும் பல சுருதியின் ரோசகமா (ருசியுண்டாக்குகின்றதா)தலானும் முமுக்ஷுக்களால் சிரத்தை செய்யத்தக்க தன்றாம். விஷ்ணுவின் ஸந்தோஷத்தைச் செய்யும் வேறு நிஷ்காம நித்திய கர்மம், அந்தக்கரண சுத்தி பூர்வகம் விஷ்ணுவின் பிரஸாத

வாயிலாய் குருவினை அடைதல் வேதாந்த சிரவணாதி அதிகாரசம்பாத கத் தன்மையால் பரம்பரையாக நல்ல வித்தையின் உபயோகியா யிருத்தலின், அதுவே அதிகாரிகளால் அநுஷ்டாநஞ் செய்தற்கு யோக்கியமாம்; "அதுவே கர்மமாம். எது பந்தநத்தின் பொருட் டாவ தில்லை; எது மோக்ஷத்தினைக் கொடுக்கின்றதோ அதுவே வித் தையாம்; ஏனைய கர்மம் கேவலம் சிரமத்தின் பொருட்டாம். மற் றைய வித்தைகள் சில்பியின் நிபுணத்தன்மையாம்" என்பதாதிப் பிர மாணத்தால்.

விகர்மம்.

(2) சுருதி ஸ்மிருதிகளால் நிஷேதிக்கப்பட்ட திருடு, அநிர்தம், பரஸ்திரீ கமநம், பிராஹ்மண ஹிம்ஸை என்பனவாதி ரூப கர்மம், ராகத்தால் சாஸ்திர ஆஞ்ஞையினை அதிக்கிரமித்து விஷய லம்படர்க ளால் செய்யப்படுகின்றது. அது விகர்மமாம். விருத்த கர்மமே விகர் மம் எனப்படும். அது, எதனுல் தனது அநுஷ்டாந வாயிலாய் ஜீவர் களின் நரக யாதனையின் ஹேதுவாகின்றது, ஈண்டு யஸஸ் இன்மை முதலியவைகளைக் கொடுக்கின்றது, அதனுல் மோக்ஷத்தை இச்சிக் கும் புருஷன் ஒரு காலத்தும் பிரமாதத்தானும் அதன்கண் ருசி செய்யலாகாது. பின்னையோ, ஆஞ்ஞை செய்யும் ஈஸ்வரனது தண் டத்தின் பயத்தால், அல்லது, லோகத்தின் லஜ்ஜையின் பயத்தால் முற் புகன்ற நிஷித்த கர்மங்களினின்றும் ஸதா உபராமத்தினை யடைதல் யோக்யமாம்.

அகர்மம்.

(3) வர்ணாசிரம அபிமாநத்தோடுகூடிய எப்புருஷன் ஜிதேந்திரியத் தன்மை யின்மையால் கர்மத்தில் அதிகாரியாகின்றனனே, அவனுல் சுருதியாதிகளால் கூறப்பட்ட தனது வர்ணாசிரமத்தோடு கூடிய தன் கர்மம், ஹாலஸ்யம், அல்லது பிரமாதம், அல்லது துக்க புத்தியால் தியாகஞ் செய்யப்படுகின்றது. அது அகர்மமாம். விஹித கர்மத்தி னைச் செய்யாதிருப்பது அகர்ம மெனப்படும். அவ் விஹித கர்மமும் தனது அநுஷ்டாநத்தின் அபாவ வாயிலாய்ச் சுருதியாதியின் ஆஞ்ஞை யினை அதிக்கிரமித்தலால் பாபத்தினை யுண்டாக்கி ஜீவர்களின் அதோ கதியின் ஹேதுவாகின்றது.



(ஆதலால், சுருதி ஸ்மிருதி ரூப ஈஸ்வர ஆஞ்ஞையின் பாலநத் தின் பொருட்டுச் சக்தியநுஸாரம், ஸத்கதா (புண்யகதை) சிரவணம், வைராக்ய உத்பத்திபரியந்தமாகத்தனது அதிகார அநுஸாரம் விஹித கர்மம் அதிகாரிகளால் செய்யத்தக்கது, ஹாலஸ்யாதி புத்திகளால் தியாகஞ் செய்யத் தக்க தன்று; "எது வரை விஷயத்தினின்றும் வைராக்கிய முண்டாக வில்லையோ, எதுவரை எனது கதையின் சிரவ ணம் முதலியவற்றில் சிரத்தை யுண்டாகவில்லையோ, அதுவரை கர்மஞ் செய்க" என்பதாதிப் பிரமாணத்தால்.)

**2 - 50. உத்தேசாதி.**

உத்தேசாதி மூன்றினைக் கூறுவாம்:—வஸ்துவின் யதார்த்த ஞாநத்தின் ஹேதுவாய உத்தேசம் லக்ஷணம் பரீக்ஷை என்னும் பேதத்தால் உத்தேசாதிகள் மூ வகையாம்.

(1) உத்தேசம்.

(1) அவற்றுள், வஸ்துவினை அதன் நாமத்தாற்கூறுவது உத்தேச மெனப்படும். அது ஸாமாந்ய ஞாநத்தின் ஹேதுவாம்.

(2) லக்ஷணம்.

(2) வஸ்துவின் அஸாதாரண தர்மத்தினைக் கூறும் வசநம் லக்ஷண மெனப்படும்.

(3) பரீக்ஷை.

(3) பிரமாண யுக்திகளால் வஸ்துவின் பரீக்ஷணம் பரீக்ஷையாம். எங்ஙனம், நையாயிகர்களால், "பிருதிவி அப்பு தேஜஸ்" என்பதாதி வாக்கியத்தால் வஸ்துவின் நாமம் கூறப்பட் டிருக்கின்றது அஃது உத்தேசமாம். "கந்தத்தை யுடையது பிருதிவி" என்பதாதி வசநத்தால் வஸ்துவின் அஸாதாரண தர்மம் கூறப்பட்டிருக்கின்றது, அது லக்ஷணமாம். பிருதிவியாதிகளின் காரணரூபத்தாலும் காரியரூபத் தாலும் நித்தியாநித்தியத் தன்மையின் பிரதிபாதநம் பரீக்ஷையாம். அல்லது, எங்ஙனம் வேதாந்தத்தில் பிரஹ்மம் அஞ்ஞாநம் முதலிய பதார்த்தங்கள் நாமங்களால் கூறப்படுகின்றன, அஃது உத்தேசமாம். அவற்றின் ஸத்திய ஞாநாதி வசநத்தால் அஸாதாரண தர்மத்தின்

பிரதிபாதநம் லக்ஷணமாம். சுருதியாதிப் பிரமாணத்தால் அவற்றின் சத்திய ஆதிகளைக் கூறுதல் பரீக்ஷையாம்.

(இம் மூன்றனுமே வியாவகாரிக பாரமார்த்திக வஸ்துவின் ஸந்தேஹ மின்றிய விசேஷ ஞாநம் உண்டாகின்றது. எதனல் யதார்த்த ஞாநத்தின் பின்னரே அநாத்ம பதார்த்தத்தின் தியாகமும், ஆத்ம பதார்த்தத்தின் கிரஹணமும் முமுக்ஷுக்களால் சக்கியமாகின்றன, அதனல் இவற்றிற்கும் பரம்பரையாக மோக்ஷத்தின்கண் உபயோக மிருத்தலின் இதுவும் கூறப்பட்டது.)

## 2 - 51. லக்ஷண தோஷம்.

லக்ஷியத்தினை அறிவிக்கும் லக்ஷணத்தின் மூன்று தோஷத்தினைக் கூறுவாம்:—அதிவ்யாப்தி அவ்யாப்தி அஸம்பவம் என்னும் பேதத்தால் லக்ஷணத்தின் தோஷம் மூ வகைத்தாம்.

### (1) அதிவ்யாப்தி.

(1) அவற்றுள், லக்ஷியத்தின்கண்ணும் அலக்ஷ்யத்தின்கண்ணுமிருக்கும் லக்ஷணம் அதிவ்யாப்தி தோஷத்தினை யுடையதாம். எங்ஙனம்? பசுவிற்குக் கொம்புடைமை லக்ஷணத்திற்குக் கொம்புடைமை பசுமாத்திரமாகிய தனது லக்ஷியத்தில் இருப்பினும், ஆடு முதலிய அலக்ஷியத்தின்கண்ணும் இருத்தலின்.

### (2) அவ்யாப்தி.

(2) லக்ஷியத்தின் ஏக தேசத்தி லின்றிய லக்ஷணம் அவ்யாப்தி தோஷ முடையதாம். எங்ஙனம்? பசுவிற்குச் சித்திரத் தன்மை லக்ஷணத்திற்கு, லக்ஷியத்தின் ஏக தேச சித்திரப் பசு மாத்திரத்தில் இருப்பினும், ரக்த நீலாதி பசு ரூப லக்ஷியத்தின் ஏக தேசத்தில் இன்றி யிருத்தலின்.

### (3) அஸம்பவம்.

(3) லக்ஷியத்தில் ஓரிடத்தும் இன்றிய லக்ஷணம் அஸம்பவ தோஷ முடையதாம். எங்ஙனம்? பசுவிற்கு ஒற்றைக் குளம்புடையதாம் தன்மை லக்ஷணம், பசு மாத்திர லக்ஷியத்தில் இன்மையின்.



இவ்வாறு கூறிய லக்ஷணத்தின் மூன்று தோஷத்தில், லட்சியம் ஒன்றோடு கூடி யிருக்கினும் அஃது அஸத் லக்ஷணமாம்; அதற்கு லக்ஷியத்தின் வியாவர்த்தகத் தன்மை யின்மையின்.

(ஆதலால். இம் மூன்று தோஷத்தின் நிவிர்த்தி பூர்வகம் ஸத் லக்ஷணத் தன்மையின் ஸம்பாதநத்தின் பொருட்டுப் பசுவிற்குச் சாஸநாதி யுடையதாந் தன்மையாகிய லக்ஷணம் கூறப்பட்டிருக்கின்றது. எங்ஙனம் வியவஹாரத்தில் லக்ஷணத்தின் தோஷங் காண்பிக்கப்பட்டதோ, அங்ஙனமே சித்தாந்தத்திலும் அதிவ்யாப்தி தோஷ நிவிர்த்தியின்பொருட்டுத் தடஸ்த லக்ஷணம், அல்லது, ஸ்வரூப லக்ஷணம் மூன்று தர்ம விசிஷ்டமாகக் கூறப்படுகின்றது; ஒவ்வொரு தர்மத்தினை லக்ஷண ரூபமாகக் கூறின், அதிவ்யாப்தி தோஷத்தின் பிராப்தியாகுதலின். ஆதலால், ஜிஞ்ஞாஸுவும் குரு முகத்தால் நிர்த்தோஷ இரண்டு லக்ஷணத்தினை அறிந்து, அபிந்ந நிமித்த உபாதாந காரண சச்சிதாநந்தப் பிரஹ்ம ரூப லக்ஷணத்தினை அத்விதீய ஞாநத்தின் பொருட்டு நிச்சயிக்க.)

## 2 - 52. வாதாதி.

வாதாதி மூன்றினைக் கூறுவாம்:—வாதம், ஜல்பம், விதண்டை என்னும் பேதத்தால் மூன்று பிரகாரமாகக் கதை பிரசித்தமாம். கதை யென்பது வாதிப் பிரதிவாதிகளின் பரஸ்பர ஸம்பாஷணையாம்.

### (1) வாதம்.

(1) அவற்றுள், குரு சிஷ்யராய இருவர்களின், அல்லது, நிராசையினை யுடைய இரண்டு ஸாதுக்களின், பிரஹ்மாத்ம ஏகத்வ ரூப தத்வ நிர்ணயத்தின் பொருட்டு, அல்லது, நிர்ணய பரியந்தம், அல்லது, நிர்ணய பலத்தினை யுடைய பிரமாண தர்க்கங்களால் கண்டந மண்டந ரூப பரஸ்பர ஸம்பாஷணம் வாத மெனப்படும். எதனல்? சிஷ்யாதிகள் ஸம்சயாதிக ளின்றியவர்களாய்த் தத்வ நிச்சயத்தினை யடைந்து சாந்தராகின்றனர்; ஜய பராஜய, அல்லது, தனது ஞாந சக்தியின் அதிசயத்தினைக் காண்பித்தல் அதன் பல மன்றும்.

### 2—3. ஜல்பம் - விதண்டை.

(2-3) துஸ் தர்க்கத்தை யுடைய வாதியின் நிராகரண பூர்வகம் தத்வ நிர்ணயத்தின் ரக்ஷணத்தின் பொருட்டு ஜய பராஜய மாத்திர

பலத்தினை யுடைய பரஸ்பரம் ஜயிக்கும் இச்சையுடைய இருவர்களின் தர்க்கப் பிரமாணங்களால் கண்டந மண்டந ரூப பரஸ்பர கதை அல்லது ஸம்பாஷணம், பீஜத்தா லுத்பந்நமாய புதிய முளையினை இரக்ஷித்தற் பொருட்டு முள் வேலி போன்றது ஜல்பமும் விதண்டையும் ஆம். அவற்றுள், ஒன்றாலோ, வாதிகளின் விவாதத்தால் தத்வ நிர்ணயத்தினை ரக்ஷிப்பதாய பலன் உண்டாகின்றது; இரண்டாவதாலோ, தனது வித்தையின் பரீக்ஷை பலமாகின்றது. இக் காரணத்தானே ஸர்வ ஆசாரியர்களாலும் தத்தம் கிரந்தங்களில் சுருதியாதிப் பிரமாணங்களாலும், அநந்த பிரகாரமாய தர்க்கங்களாலும், த்வைத மதத்தின் கண்டநமும், அத்வைத மதத்தின் மண்டநமும் ஜல்ப விதண்டைகளால் விஸ்தாரமாகச் செய்யப்பட்டிருக்கின்றன.

அவ் விரண்டுள், வாதிப் பிரதிவாதி யென்னு மிருவர்களாலும் தம் பக்ஷத்தின் ஸ்தாபநமும், அந்ய பக்ஷத்தின் கண்டநமும் செய்யப் படுவது ஜல்பமாம்.

யாண்டு ஒருவரால் தம் பக்ஷத்தின் ஸ்தாபநமே செய்யப்படுகின்றது அது **விதண்டை** யென்னும் பெயருடைய கதையாம்.

(இம் மூன்று பிரகார கதையில் தத்வ நிச்சயத்தின் முடிவுத் தன்மையால் வாத கதைக்குச் சிரேஷ்டத்தன்மை கூறப்படுகின்றது. ஜல்ப விதண்டைகட்கு வித்தியா சக்தியின் உயர்வின் பரீக்ஷையால் தத்வ நிர்ணயத்தின் காப்பில் உபயோகமாகின்றது. ஆதலால், ஜிஞ்ஞாஸுக்களால் தமது குருவின் ஸமீபத்தில் வாத கதையே அங்கீகாரஞ்செய்ய யோக்கியமாம்; ஜல்ப விதண்டைகளன்று; அதற்குக் குருவாக்கியத்தில் அச்ரத்தை, அநாதரவுகளின் லிங்கத் தன்மை யிருத்தலின்.)

## 3—24. நான்கு தொகுதியாய வஸ்துக்கள்.

### 3—1. ஞானத்தின் வர்த்தமானப் பிரதிபந்தகம்.

இப்பொழுது நான்கு எண்ணிக்கையின் விசிஷ்டத்தினைக் கூறுவாம்:— விஷயாசக்தி முதலிய பேதத்தால் ஞானத்தின் வர்த்தமானப் பிரதிபந்தகம் நான்கு வகைத்தாம்:—



#### (1) விஷயாசக்தி.

(1) அநந்த அநர்த்தத்தினைச் செய்யும் ஸ்திரீ புத்ராதி விஷயங்களில் பூர்வ பூர்வப் பிராந்தியால் "இஃது எனது" என்னும் புத்தியால் கிரஹிக்கப்பட்ட பூர்வ பூர்வ ஸம்ஸ்காரத்தின் திடப் பிரதீதி **விஷயாசக்தி** யாம். திடப் பிரதீதி யென்பது அவற்றின் வியோகம் தியாகங்களை ஸஹிக்காமை; அல்லது, விசார காலத்திலும் மீண்டு மீண்டும் அவற்றினைச் சிந்தனை செய்தலாம்.

#### (2) பிரஞ்ஞா மாந்தியம்.

(2) சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவால் யுக்தி பிரமாண திருஷ்டாந்தங்களோடு போதிக்கப்பட்ட பிரஹ்மாத்ம ஏகத்வரூப அர்த்தத்தினை நிச்சய புத்தியால் கிரஹணஞ் செய்யாமை **பிரஞ்ஞா மாந்திய** மாம்; விஷயாஸக்தியால் ஸ்தூல சித்தத்திற்கு ஸூக்ஷ்மப் பிரஹ்ம வஸ்துவின் கிரஹணத்தில் ஸமர்த் தின்மையின்.

#### (3) குதர்க்கம்.

(3) வேதாந்தங்களால் ஷட்வித லிங்கத்தோடு பிரதிபாதிக்கப் பட்ட அத்விதீய அர்த்தத்தின், அநாத்ம சாஸ்திரம் கூறிய நிர்மூல விரோதி தர்க்கங்களால், விபரீதக் கிரஹணம் **குதர்க்க**மாம்.

#### (4) துராக்கிரஹம்.

(4) "நான் சுரோத்திரியன் பண்டிதன் குலீநன் விரக்தன்" என இந்திரியாதி அநாத்மாவினிடத்து ஆத்ம புத்தி **துராக்கிரஹ**மாம். அல்லது பூர்வபூர்வப் பிராந்தியால் ஆத்மாவில் ஆரூடமான வர்ணாசிரம அபிமாநத்தினை, கர்த்ருத்வ போக்த்ருத்வ அபிமாநத்தினை அஸங்க அத்விதீய ஆத்மாவின் சிரவணாதியின் பின்னரும் விடாமை யாது, அது துராக்கிரஹமாம்.

(இந் நான்கனுள் ஒன்று இருப்பினும் யதார்த்த ஞானம் உண்டாவதின்று; எல்லா மிருப்பின் உண்டாக மாட்டா தென்பது சொல்லாதே அமையும்.)

### 3—2. ஞானப் பிரதிபந்தக நிவிர்த்தி ஹேது.

விஷயாஸக்தி முதலிய ஞானப் பிரதிபந்தகத்தின் நிவர்த்தி ஹேதுவினைக் கூறுவாம். அந்தப் பிரதிபந்தகத்தின் நிவர்த்தி நான்கு வகைத்தாம்:—

(1) விஷயாசக்தியின் நிவிர்த்தி.

(1) ஸம முதலிய ஸாதநம் ஆறின் உள்ளபடி அநுஷ்டாநத்தால் விஷயாசக்தியின் நிவர்த்தி யுண்டாகின்றது. விரோதி வியாபாரத்தால் அந்தக்கரணத்தை நிரோதஞ்செய்வது சமமாம். பாஹ்ய இந்திரியங்களை நிரோதஞ் செய்வது தமமாம். விதி போன்று விதிக்கப்பட்ட கர்மத்தின் தியாக ரூப ஸந்நியாஸம் உபரதியாம்; அல்லது, விரோதி விஷயங்களினின்றும் இந்திரியங்களின் உபராமம் உபரதியாம். ஸுக துக்காதி த்வந்த்வ தர்மங்களைச் சகித்தல், அல்லது அந்ய அபராதங்களைச் சகித்தல் திதிக்ஷையாம். குரு வேதாந்த வாக்கியங்களில் திட விஸ்வாஸம் சிரத்தையாம். மீண்டும் மீண்டும் லக்ஷியாகார விருத்தியினைச் செய்தல் ஸமாதாநமாம்; அல்லது, வேதாந்த அர்த்த விசாரத்தில் ஏக பரத்தன்மை சமாதாநமாம்; அல்லது, சாஸ்திரக்காரர்கள், ஸ்திரீ புத்ர தநாதி விஷய ஸம்பாதநத்தில் தோஷங் கூறி யிருக்கின்றனர். ஸ்வப்ந மநோரதம் போன்று அவற்றின் மித்தியா ரூபப் பிரதிபாதநத்தில் யுக்தி கூறி யிருக்கின்றனர். அவற்றினைக் குரு சாஸ்திராநுஸாரம் மீண்டு மீண்டு ஆலோசித்தலால் விஷயாஸக்தி நிவிர்த்தி யாகின்றது.

(2) பிரஞ்ஞா மாந்திய நிவிர்த்தி.

(2) ஷட்வித லிங்கங்களால் நிர்ணயிக்கப்பட்ட வேதாந்த தாத்பர்யார்த்தத்தினைக் குருமுகமாக மீண்டு மீண்டும் சிரவணஞ் செய்தலால் பிரஞ்ஞா மாந்தியம் நிவிர்த்தி யாகின்றது.

(3) குதர்க்க நிவிர்த்தி.

(3) சுருதி மூல அவிரோதி யுக்திகளால் ஸ்ரௌதார்த்தத்தின் ஸம்பாவநத்தின் பொருட்டு மீண்டு மீண்டும் அத்விதியார்த்தத்தினை மநநஞ் செய்வதால் நிர்மூல ஸுஷ்க குதர்க்கம் நிவிர்த்தி யாகின்றது.

(4) துராக்ரஹ நிவிர்த்தி.

(4) பிரஹ்மாத்ம ஏகத்வாகார சித்த விர்த்தியின் பிரவாஹ ரூப நிதித்யாஸநத்தால் அநாத்மாவில் ஆத்மாபிமாந ரூப துராக்ரஹம் நிவிர்த்தி யாகின்றது.



3 - 3. தர்மாதி.

தர்மாதி நான்கினைக் கூறுவாம்:—தர்மாதி பேதத்தினுல் புருஷார்த்தம் நான்கு வகைத்தாம்.

(1) அபூர்வம்.

(1) சுருதி ஸ்மிருதி அநுஸாரம் காம்ய கர்மத்தின் அநுஷ்டாநத்தால் உண்டாவது அபூர்வ மென்னும் பரியாயத்தினை யுடைய தர்மமாம்.

(2) அர்த்தம்.

(2) அதனுல் அடையப்படும் தநாதி பதார்த்தம், அல்லது, ஸ்வர்க்காதி லோகம் அர்த்தமாம்.

(3) காமம்.

(3) யதேச்சா இந்திரியங்களால் வாஞ்சித விஷயத்தின் போகம் ஸகாம புண்யாதிகளின் பல ரூபமாய காமமாம்.

(4) மோக்ஷம்.

(4) கர்த்ருத்வாதி ஸர்வ பந்த நிவிர்த்தி பூர்வகம் சித்தத்தின் பிரஹ்மாகார அவஸ்திதி மோக்ஷமாம்; அல்லது ஸாலோக்யாதி நான்கு வித முத்தியின் பிராப்தி மோக்ஷமாம்.

(இந் நான்கனுள் தர்மாதி மூன்றும் மீண்டு மீண்டும் ஸம்சாரத்தின் ஹேதுவாம்; ஆதலால், அந்த மூன்றும் முமுக்ஷுக்களால் விடத்தக்கன வாம். அநந்த துக்கத்தோடு கூடிய ஸர்வ ஸம்ஸார அபாவத்தால் உபலக்ஷிக்கப்பட்ட பிரஹ்மாநந்த ரூப மோக்ஷமே கொள்ளத் தக்கதாம்.)

3 - 4. சப்தப் பிரவிர்த்தியின் நிமித்தம்.

சப்தப் பிரவர்த்தியின் நிமித்தத்தினைக் கூறுவாம்:—ஜாதி குணாதிகளின் பேதத்தால் சப்தப் பிரவர்த்தியின் நிமித்தம் நான்கு வகைத்தாம்.

(1) ஜாதி சப்தம்.

(1) பிராஹ்மணன், அஸ்வம், கௌ (மௌ) என்பன வாதி ஜாதி சப்தமாம். அவை பிராஹ்மணாதி வ்யக்தியின்கணுள்ள பிராஹ்மணத்

வாதி ஜாதியினைக் கொண்டு, சுரோதாவினிடத்து சக்திக் கிரஹண வாயிலாய்த் தமது அர்த்தத்தினைப் போதிக்கின்றன; ஜாதி விசிஷ்ட வ்யக்தியின் ஸ்மரணத்தினை உண்டாக்குகின்றன.

### (2) குண சப்தம்.

(2) சுக்லம் ரக்தம் என்பன வாதி சப்தம் குண சப்தமாம். அதுவும், தன் ஆசிரயத் திரவ்யத்தி லுள்ள ஶுக்ல ரக்தாதி நிமித்தத்தால் சுரோதாவினிடத்துத் தனது விசிஷ்ட அர்த்தத்தினைப் போதிக்கின்றது.

### (3) கிரியா சப்தம்.

(3) பாசகன் பாடகன் என்பன வாதி சப்தம் கிரியா சப்தமாம். அதுவும், பசந (பாகஞ் செய்தல்), படந (படித்தல்) ரூபக் கிரியையின் நிமித்தத்தால் கிரியை யுடையதனைச் சுரோதாவினிடத்துப் போதிக்கின்றது.

### (4) சம்பந்த சப்தம்.

(4) தநவான் கோமான் புத்திமான் என்பன வாதி சப்தம் சம்பந்த சப்தமாம். அதுவும் தநாதி விசேஷணத்தின் பிரவிர்த்தி நிமித்தத்தினுல் சுரோதாவினிடத்துத் தனது அர்த்தத்தினைப் போதிக்கின்றது.

(சப்தப் பிரவிர்த்தி நிமித்த ஜாதியாதிகள் பிரஹ்மத்தி லின்மையால், அதன்கண் ஜாதியாதி சப்தத்தின் பிரவிர்த்தி யின்றென அறிக.

பிரஹ்மம் அத்விதீய ஏக வியக்தி ரூபமாக விருத்தலின், அதன்கண் ஜாதி யின்று; ஜாதி அநேக வ்யக்தி ஸமவேதமாகலின். நிர்க்குண சேதந ரூபத்தால் அத்திரவ்யமாயிருத்தலின், அதன்கண் குண மின்று; ஸர்வ குணங்களும் கடாதி ஜட திரவ்யத்தினை ஆசிரயித் திருத்தலின், கூடஸ்தமா யிருத்தலின், அதன்கண் கிரியை யின்று; க்ஷீராதி பரிணாமி வஸ்துக்கட்கே கிரியாசிரியத் தன்மை யிருத்தலின். அஸங்கத் தன்மை, நிரவயவத் தன்மைகளால் பிரஹ்மத்தில் ஸம்பந்த மின்று; ஸம்பந்தம், ஸாவயவ, ஸங்கி வஸ்துக்களில் இருப்பதாகலின், முக்கிய விர்த்தியால் பிரஹ்மம் எச் சப்தத்திற்கும் விஷய மன்று. அங்ஙனமாயினும், தத்வமஸியாதி சுருதிகளும் அவற்றின் அர்த்தத்தை நிர்ணயிக்கும் ஆசாரியர்களும் மாயா அந்தக்கரணுதிகளோடு பிரஹ்மாத்மாவின் ஆத்தியாஸிக ஸம்பந்தத்தினைக் கொண்டு உபதேச காலத்தில் முக்பார்த்த வாயிலாய் லக்ஷணு விர்த்தியால் அதனைப் போதிக்கின்றனர். அங்ஙனமே, ஸத் சேதந ஆநந்தாதி சப்தங்களும், விர்த்தி விசிஷ்ட சத்தியாதி ரூப வாச்சியார்த்தத்தினைக்கொண்டு லக்ஷணையால் சுத்தப் பிரஹ்ம வியக்தியினையே போதிக்கின்றன. ஆதலால், ஜிஞ்ஞாசுவும் குருவால் உபதேசிக்கப்பட்ட தத்வமஸியாதி பதார்த்தங்களின் வாச்சியார்த்தத்தினையும், லக்ஷியார்த்தத்தினையு மறிந்து, அஞ்ஞானத்தினுற் செய்யப்பட்ட மித்தையாகிய ஜீவேஸ்வர பேதப் பிராந்தியினை நிவாரணஞ் செய்க.



"தத்வமஸி" என்னும் வாக்கியத்தின்கண் மூன்று பதங்களிருக்கின்றன. அவற்றுள், "தத், த்வம்" என்னும் இரு பதங்களும் பிரமாணுந்தரத்தால் பிராப்த மாகாத அபாதித சுத்த இரு சேதந ரூப ஸ்வார்த்தத்தினை லக்ஷணையால் அறிவிக்கின்றன. "அஸி" என்னும் பதம் ஜீவனது ஸ்வத சித்தப் பிரஹ்மத் தன்மையின் அநுவாதகமாம்; அல்லது, சோதிக்கப்பட்ட ஜீவ சேதந, ஈஸ்வர சேதநங்களின் ஸ்வத சித்த ஏகத்தன்மையின் அந்தர்க்கதமாம் என அறிக. எதனுல் தத் த்வம் பதங்களின் ஸமாநாதிகரணத்தால் பிராப்தமாய ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு அத்தியந்த ஏகத் தன்மையினைச் சுரோதாவினிடத்துத் திஙந்த (வினை விகுதி இறுதி) ரூப அஸி பதம் புகலுகின்றது).

### 3 - 5. வர்ணம்.

பிராஹ்மணுதி வர்ணத்தினைக் கூறுவாம்:—பிராஹ்மணுதி வர்ண பேதத்தால் வர்ணம் நான்கு வகைத்தாம்.

### (1) பிராஹ்மண வர்ணம்.

(1) ஸத்வ குண பரிணும ரூபமாய் ஸர்வ வர்ணங்களிலும் பிரதாநமாய் விராட்டின் முகத்வாரத்தினின்றும் உத்பந்நமாயது பிராஹ்மண வர்ணமாம். ஸமாதி ஷட் ஸம்பத்தியும் குருமுகமாக வேதாத்தியயநஞ் செய்தலும் வேதார்த்தத்தின் நிஷ்டையும் பகவத் பக்தியின் நிஷ்டையும் பிராஹ்மணர்களின் அஸாதாரண தர்மமாம்; அல்லது,

யஜநம் (யாகஞ் செய்தல்), யாஜநம் (யாகஞ் செய்வித்தல்), அத்யயநம் (படித்தல்), அத்தியாபநம் (படிப்பித்தல்), தாநம் (கொடுத்தல்), பரிக்ரஹம் (வாங்குதல்) என்னும் இவ்வாறும் பிராஹ்மணர்களின் தர்மமாம். அவற்றுள், மூன்று பார லௌகிகம் (பரலோகத்தின் பொருட்டாம்); மூன்று இகலோகத்தின் ஜீவநத்தின் பொருட்டாம்.

(2) க்ஷத்திரிய வர்ணம்.

(2) ஸத்வ குணத்தோடு கூடி இரஜோ குணப் பரிணாம ரூபமாய் இரண்டு வர்ணங்களின் பிரதாநமாய் வைராஜனது புஜங்களி னின்றும் உண்டாயது க்ஷத்திரிய வர்ணமாம். தர்மஞ் செய்தலும், பிரஜைகளைப் பாலித்தலும், ஸாதுக்களையும் பிராஹ்மணர்களையும் ரக்ஷித்தலும், அவர்களைச் சேவித்தலும், பகவத் பக்தியும், வேத அத்தியயநாதிகளும் க்ஷத்திரியர்களின் அஸாதாரண தர்மமாம்; அல்லது, பிராஹ்மணர்களுக்குக் கூறப்பட்ட யஜநாதி ஆறு தர்மங்களில் பரிக்ரஹ மின்றிய ஐந்தும் க்ஷத்திரியர்களுக்கும் தர்மமாம். ஆயின், யாஜந அத்தியாபநங்களை லோபமும் கிரஹணமு மின்றிச் செய்க.

(3) வைசிய வர்ணம்.

(3) ஸத்வ ரஜோ குணங்களோடு கூடிய தமோ குணப் பரிணாம ரூபமாய்ச் சூத்திர வர்ணத்தினின்றும் உயர்வாய் வைராஜனது ஊரு (தொடை) அங்கத்தி னின்றும் உண்டாயது வைசிய வர்ணமாம். வேதாதி அத்யயநமும், பகவத் பக்தியும், ஸாதுக்கள் பிராஹ்மணாதியர்களின் ஸேவையும் வைசியர்களின் ஸாதாரண தர்மமாம். பசு முதலியவற்றின் பாலநமும், வஸ்துக்களை வாங்குதலும் விற்றலும் வைசியர்களின் அஸாதாரண தர்மமாம்.

(4) சூத்திர வர்ணம்.

(4) கேவல தமோ குணப் பரிணாம ரூபமாய், ஸர்வ வர்ணத்தினும் நிகிருஷ்டமாய் வைராஜனது பாதத்தினின்றும் உண்டாயது சூத்திர வர்ணமாம். பகவத் பக்தியும், ஸாதுக்களின் ஸேவையும், சூத்திரர்களின் ஸாதாரண தர்மமாம். மூ வருணத்தின் ஸேவை முதலியவற்றால் பிழைப்பின் ஸம்பாதநம் அஸாதாரண தர்மமாம்.

(பிராஹ்மணாதி நால்வரும் சாஸ்திரப் பிரகாரம் தத்தம் தர்மங்களின் அநுஷ்டாநத்தானே மோக்ஷ மார்க்கத்தின் அதிகாரியாகின்றனர்; அல்லாக்கால், தத்தம் தர்மத்தின் தியாக பூர்வகம் விபரீத தர்மத்தின் ஆசரணத்தால் கீழ்ச் செல்வ தாகின்றனர்.)



3 - 6. ஆஶ்ரமம்.

ஆசிரமத்தினைக் கூறுவாம் :—பிரஹ்மசர்யாதியின் பேதத்தினால் ஆசிரமம் நான்கு வகைத்தாம்.

(1) பிரஹ்மசர்ய ஆஶ்ரமம்.

(1) கர்ப்பாதாநம், ஜாத கர்மாதி ஸம்ஸ்கார விசிஷ்ட அஷ்ட வர்ஷ, தச வர்ஷ ஆயுளின் நியமத்தோடு மூன்று வர்ணத்தவர்களால் ஸாவித்ரீ ஸஹித யஞ்ஞோபவீத ஸம்ஸ்காரக் கிரஹணத்தின் பின் வித்தியாத்தியயநத்தின் பொருட்டுக் குரு குலத்தில் வஸித்தல் பிரஹ்மசர்ய ஆசிரமமாம். ஸ்திரீ ஸம்பாஷணாதி அபாவ ரூப அஷ்டாங்க பிரஹ்மசரியமும், குரு சிசுருஷை முதலியனவும் பிரஹ்மசாரியின் அஸாதாரண தர்மமாம்.

நைஷ்டிக உபகுர்வாண பேதத்தினால் பிரஹ்மசர்யம் இரு வகைத்தாம்.

(i) நைஷ்டிகப் பிரஹ்மசர்யம்.

(i) குருவினிடத்தினின்று வித்தையினைக் கிரஹித்த பின்னரும், விஷய வைராக்கியத்தோடு மரண பரியந்தம் அத் தர்மத்தின்கண்ணே யிருத்தல் நைஷ்டிகப் பிரஹ்மசர்யமாம்.

(ii) உபகுர்வாண பிரஹ்மசர்யம்.

(ii) எப்பொழுது வைராக்கியமுண்டாக வில்லையோ, அப்பொழுது வித்தியாத்தியயநத்தின் பொருட்டுக் குருவிற்குத் தக்ஷிணை கொடுத்தல் பரியந்தம் அத் தருமத்தின்கண் இருத்தல் உபகுர்வாண பிரஹ்மசரியமாம்.

(2) கிருஹஸ்தாசிரமம்.

(2) அக் குருகுல வாஸத்தில் வைராக்யம் உண்டாகாது, இராகாதி கஷாயங்களால் தஹிக்கப்படாது, குரு தக்ஷிணை கொடுத்தபின் புத்ராதி உத்பாதநத்தின் பொருட்டுத் தன் வர்ண முடைய பாரியினைப் பாணிக்கிரஹணம் செய்தல் கிருஹஸ்தாசிரமமாம். அதன்கண் பரம்பரையாக

அடையப்பட்ட விருத்தியின் ஸாதநத்தோடு தர்ம பூர்வகம் தநாதிகளை உத்பத்தி செய்து, அவற்றின் நான்கில் ஒரு பாசம் பகவான் பொருட்டுச் செய்து, எஞ்சிய பாகங்களால் தன் குடும்பாதிகளின் பாலநஞ் செய்வது கிருகஸ்தாசிரமத்தின் அஸாதாரண தர்மமாம்; பகவத் பக்தியும், ஸத்புருஷரின் ஸேவையும் ,வேதாந்த அத்தியயநாதிகளும் கிருஹஸ்தாசிரமத்தின் ஸாதாரண தர்மமாம்.

### (3) வாநப்பிரஸ்தாசிரமம்.

(3) எப்பொழுது, பாணிக்கிரஹணஞ் செய்த ஸ்திரீயினோடு புத்ரோத்பத்தியின் அநந்தரமும் விஷயத்தில் வைராக்கிய முண்டாகவில்லையோ, அப்போது, சரீர இந்திரியாதிகளை வற்றச் செய்தற் பொருட்டு ஆரண்யம்,அல்லது, பர்வத குஹை முதலியவற்றில் வாஸஞ் செய்வது வாநப்ரஸ்தாசிரமமாம்; அரைத்துப் பாகம் பண்ணப்பட்ட அந்நத்தாலும், கந்த மூல பலாதிகளாலும் பரமேஸ்வரனைப் பூஜித்தலும், அதனாலேயே சரீர யாத்திரையும் கிருஷ்மாதி ஆறு ருதுக்களின் குணங்களையும் சிரஸில் ஸ்ஹித்தலும், வாநப்பிரஸ்தாசிரமத்தின் அஸாதாரண தர்மமாம்.

### (4) யதி ஆஸ்ரமம்.

(4) அதன் பின் விஷயத்தினின்றும் வைராக்கியத்தினை யடைந்து சாஸ்திரத்தினைச் சோதித்து ஸர்வ விஹித கர்மத் தியாக பூர்வகம் ஞாநோத்பத்தியின் பொருட்டுத் தண்ட தாரணாதி ரூப பிரேக்ஷ மந்திரோச்சாரண பூர்வகம் ஸந்நியாசத்தினைக் கிரஹிப்பது யதி ஆஸ்ரமமாம். இதனையே ஸந்நியாஸ மென்றும் கூறுவர். இது கிரம ஸந்நியாஸமாம். அக் கிரம ஸந்நியாஸமோ, என்று வைராக்கிய முண்டாகின்றதோ, அன்றே கிரஹித்தலாம். சம தமாதி தர்மாநுஷ்டாநமும், ஓங்கார உபாஸனையும்,குரு முகமாக வேதாந்த சிரவணாதிகளும், ஸர்வ பூதங்கட்கும் அபயதாநமும், காந்தை கஞ்சநத் (பெண் பொன்) தியாகமும் ஆகிய இவை பரமஹம்ஸ ஸந்நியாஸத்தின் அஸாதாரண தர்மங்களாம்.

(அந்த நான்கு வர்ண, நான்கு ஆஸ்ரமங்களின் ஸாதாரண அஸாதாரண பேதத்தினால் அநந்த தர்மங்கள் சுருதி ஸ்மிருதிகளில் கூறப்பட்டிருக்கின்றன. நானே லக்ஷணத்தின் உபயோகியாகிய சிற்சில தர்மங்கள் லேச மாத்திரம் கூறினேன். நான்கு வித ஆஸ்ரம நிஷ்டைக்கும் இது பலமாம்:—சாஸ்திர அநுசாரமாய்த் தத்தம் ஆஸ்ரம தர்ம அநுஷ்டாநத்தினால் ஆத்மாவினை ஸம்ஸாரத்தினின்றும் உத்தாரணஞ் செய்வதாம்; அல்லாக்கால், ஆஸ்ரமத்தினைக் கிரஹித்தலும் நிஷ்பலமாம்.)



## 3 - 7. விவேகாதி.

விவேகாதிகளைக் கூறுவாம்:— நித்தியாநித்திய வஸ்து விவேகாதி பேதத்தால் விவேகாதி நான்கு வகையாம்:—

### (1) நித்தியாநித்திய வஸ்து விவேகம்.

(1) ஸ்வப்பிரகாச ஸாக்ஷி, அஸங்காத்மா, பிரஹ்ம ரூப சைதந்யம் நித்தியமாம். நித்திய மென்பது திரி காலாபாத்தியமாம். அதன் பிந்நமாய அநாத்மா மிருத்யு லோகாதி ஸப்த லோக பரியந்தமும், அதன் உசித சரீரமும், அதன் உசித விஷய போகமு மாகிய இவ்வெல்லாம் பாப புண்ணிய கர்மத்தின் பலமாம். அஃது அநித்தியமாம். அநித்திய மென்பது மித்தையாம். இவ்வாறு குரு வாயிலாய்ச் சாஸ்திராப்பியாஸத்தால் ஸம்ஸயாதிக ளின்றி உண்டாம் ஞாநம் நித்தியாநித்திய வஸ்து விவேகமாம்.

### (2) வைராக்கியம்.

(2) இக லோக பர லோக ஸம்பந்தியாய கர்ம பல ரூப விஷய போகத்தில் தோஷ திருஷ்டி மித்யா திருஷ்டியினால் ராகத்தின் அபாவம் வைராக்யமாம்.

### (3) ஷட் சம்பத்தி.

(3) முன் யத்தநத்தாற் புகன்ற லக்ஷணத்தினை யுடைய சம முதலிய ஆறு தர்மங்களின் அடைவு ஷட் ஸம்பத்தியாம்.

### (4) முமுக்ஷுத்துவம்.

(4) பிராந்தியாற் சித்தித்த கர்த்ருத்வாதி ஸகல பந்தத்தின் நிவிர்த்தி, தனது ஆநந்தத்தின் பிராப்தி ரூப மோக்ஷத்தின் மிகுந்த இச்சை முமுக்ஷுத் தன்மையாம். எங்ஙனம்? அத்தியந்த பசி தாக

முடையோன் அங்கபாநாதியின் இச்சை யன்றி, யத்தந மின்றிக் கிடைத்த ஸ்வர்ணுதிகளையும் விரும்ப மாட்டானே அங்ஙனமே முமுக்ஷு புருஷனும் வேறு பதார்த்தத்தினை இச்சை செய்யான்.

(இந் நான்கு பிரகாரமான ஸாதநங்களும் குருமுக வாயிலாய் வேதாந்த சிரவணுதிகளில் அத்தியந்த ஹேதுவாம். இவற்றின் அநுஷ்டாந மின்றி எப் புருஷன் இராகத்தால், அல்லது குதூஹலத்தால் வேதாந்த சிரவணுதிகளில் பிரவிர்த்திக்கின்றனனே அவன் தான் இச்சித்த பிரஹ்மாத்ம ஏகத்தன்மையின் ஞாநம் முதலியவற்றினை யடையான்; சுருதியில் விவேகாதிகட்கு முமுக்ஷுவின் விசேஷணத் தன்மை விதிக்கப்பட் டிருத்தலின்.)

## 3 - 8. அநுபந்தம்.

அநுபந்தத்தினைக் கூறுவாம்:— விஷயாதி பேதத்தினல் அநுபந்தம் நான்கு வகைத்தாம்.

### (1) விஷயம்.

(1) அஞ்ஞாத, அபாதித, அபரிச்சிந்ந, அத்வைதாநந்த ரூபப் பிரஹ்மம் வேதாந்தத்தின் விஷயமாம். அல்லது, ஜீவாத்மாவில் உண்மையாக ஸ்வபாவ சித்த அறியப்படாத பிரஹ்மத் தன்மை சாஸ்திரத்தின் விஷயமாம்; சுருதிப் பிரமாணத்திற்கு அநதிக (அறியப்படா)த, அபாதித அர்த்த போதகத் தன்மை யிருத்தலின்.

### (2) பிரயோஜநம்.

(2) அப்பிரமாணமாகிய கலங்க (களங்க) மின்றிய வேதாந்தப் பிரமாண ஜந்ய ஞாநத்தால் அந்த ஆநந்த ரூபப் பிரஹ்மத்தையே பிரத்தியகாத்ம ரூபமாக அறிவது வேதாந்தத்தின் பிரயோஜநமாம்; ஞாநத்தால் ஆவரண பங்கமாய், கர்த்ருத்வாதி துக்க நிவிர்த்தி பூர்வகம் பிரஹ்மாநந்தத்தின் அபிவ்யக்தியே (வெளிப்படுதலே)பிரயோஜந ரூபமாகலின்.

### (3) சம்பந்தம்.

(3) வேதாந்தங்கட்கு அத்விதீயப் பிரஹ்மத்தோடு அபிதாந அபிதேய ரூப ஸம்பந்தம், அல்லது ஸ்மார்ய ஸ்மாரக பாவ சம்பந்தம் அல்லது, விசார்ய விசாரக பாவ ஸம்பந்தம் யாது அது மூன்றாவது அநுபந்தமாம்.



### (4) அதிகாரி.

(4) அந்தக்கரண சுத்தி பூர்வகம் சமம் தமம் முதலிய விசேஷணத்தோடு கூடிய பிரமாதாவாகிய ஜீவந் அதிகாரியாம்.

(எதனல் அநுபந்த சதுஷ்டயத்தின் ஞாநம் வேதாந்த சிரவணுதி ரூபப் பிரவிர்த்தியில் ஹேது வாகின்றது, அதனல் சாஸ்திரக்காரர்கள் கிரந்தத்தின் ஆதிக்கண்ணே அநுபந்ததின் நிருபணத்தினைச் செய்திருக்கின்றார்கள்; "பிரயோஜநத்தின் உத்தேச மின்றி மந்தனும் பிரவிர்த்தியான்" என்னும் நியாயத்தினல்.)

## 3 - 9. அந்தக்கரணம்.

அந்தக்கரண நான்கினைக் கூறுவாம்:—மநம் புத்தி முதலியவற்றின் பேதத்தினல் அந்தக்கரணம் நான்கு வகைத்தாம். ஸுக துக்காதி உள் விஷயத்தினைக் கோசரிக்கும் பிரமா ஞாநத்திற்கும்,இந்திரிய வாயிலாய் வெளியி லுள்ள கடாதி ஞாநத்திற்கும் ஸாதகமா யுள்ளது அந்தக்கரணமாம். அது ஞாநாதி குணத்திற்கும், பரிணமாதி ரூப கிரியைக்கும் ஆஶ்ரயமா யிருத்தலின், திரவ்ய ரூபமாம். ஸுக துக்க மோஹங்களின் ஆஶ்ரயமாகலின் ஸத்வாதி குணத்தின் பரிணமமாம். வாசஸ்பதி மத அநுஸாரமாக அந்தக்கரணம் பிரமையின் ஹேது வெனப்படும். ஆசாரிய ஸ்வாமிகளின் மத அநுஸாரமாகவோ ஞாநாதி விருத்திகட்கு மநம் உபாதாந காரணமாம், கரணம் அன்று; "சங்கல்பம், சிரத்தை, ஸம்ஶயம், லஜ்ஜை, பயம் முதலிய வெல்லாம் மநமாம்" என்னும் சுருதியால். அதன் நான்கு பேதத்தினைக் கூறுவாம்:-

### (1) மநம்.

(1) ஸங்கல்ப விகல்ப ஸம்ஶய விர்த்தி ரூபமாகப் பரிணமிக்கும் அந்தக்கரண பாகம் மநமாம். அல்லது, மநந ரூபத் தன்மையினல் மநமாம்; அல்லது, ஸங்கல்பாதி விர்த்தி ரூப வியாபாரத்தின் காரணம் மநமாம்.

### (2) புத்தி.

(2) நிச்சய விர்த்தி ரூபமாகப் பரிணமிக்கும் அந்தக்கரண பாகம் புத்தியாம்; அல்லது, நிச்சய ரூப ஞாநம் புத்தியாம்; அல்லது, நிச்சய ரூப வியாபாரத்தின் காரணம் புத்தியாம்.

### (3) அஹங்காரம்.

(3) அபிமாந விர்த்தி ரூபமாகப் பரிணமிக்கும் அந்தக்கரண பாகம் அஹங்காரமாம்; அல்லது, அபிமாந ரூபம் அஹங்காரமாம்; அல்லது, அபிமாந ரூப வியாபாரத்தினைச் செய்வது அஹங்காரமாம்.

### (4) சித்தம்.

(4) பூர்வோத்தர அநுஸந்தாநத்தின் ஹேதுவாய விர்த்தியினை யுடைய அந்தக்கரண பாகம் சித்தமாம்; அல்லது, அநுஸந்தாந ரூபம் சித்தமாம்; அல்லது, அநுஸந்தாநத்தின் ஹேது சித்தமாம். ஸங்கல்பாதி வியாபாரம் மநத்திற்காம்; நிச்சய வியாபாரம் புத்திக்காம்; அபிமாந வியாபாரம் அஹங்காரத்திற்காம்; சிந்தனை வியாபாரம் சித்தத்திற்காம்.

(நான்கு விதமான அந்தக்கரணம் அஸங்காத்மாவில் தனது அத்தியாச வாயிலாய்க் கர்த்ரு போக்த்ருத்வாதி அநந்த அநர்த்தத்தினைச் ஸம்பாதிக்கும் உபாதியாம். அதிகாரிகள் எதனின்றும் அஸங்காத்மாவினை உண்மையாக ஸதா பிந்நமாக அறிந்து, சித்-ஜட கிரந்தி, கர்மக் கிரந்தி, ஸம்ஶயக் கிரந்தி யென்னும் மூ விதக் கிரந்தியினையும் விடுகின்றனர்; "அப் பாராவாரத்தினை அறிந்த ஞாநிக்கு ஹிருதயக் கிரந்தி விடுபடுகின்றது; ஸர்வ ஸம்ஶயங்களும் நாசத்தினை அடைகின்றன; இவனது ஸர்வ கர்மங்களும் நாசத்தினை அடைகின்றன." என்பதாதிப் பிரமாணத்தால்.)

## 3 - 10. வேதம்.

நான்கு வேதத்தினைக் கூறுவாம்:—ரிக் முதலிய பேதத்தினால் வேதம் நான்கு வகைத்தாம். அவ்வேதம் ஶ்வாஸ உஶ்வாஸம் போன்று, நிமேஷ உந்மேஷம் (திறத்தல் மூடுதல்) போன்று, யத்நமின்றி, அர்த்தாநுஸந்தாநமின்றி நிர்த்தோஷப் பிரமாண ரூப ஸர்வார்த்தத்தினையும் பிரகாசிக்கும் ஸர்வஞ்ஞனாகிய பரமேஶ்வரனால் உண்டாயது. அது நிஷத் உபநிஷத் என்னும் பேதத்தினால் இரு வகைத்தாம்:—தர்மாதிகளைப் போதிக்கும் பூர்வ காண்ட உபாஸனா காண்டங்கள் நிஷத் பாகங்களாம்; பிரஹ்மத்தினைப் போதிக்கும் உத்தர காண்டம் உபநிஷத் பாகமாம்; அவ்வேதம் விதி, நிஷே



தம், அர்த்த வாதம், உபாக்யாநம் (கிளைக் கதை), வஸ்து ஸ்வரூபம் முதலியவற்றினைப் பிரதிபாதிக்கும் வாக்கிய ஸமூஹ (தொகுதி) ரூபமாம்; மந்திரப் பிராஹ்மண ரூபங்களால் வியாக்கியேய (வியாக்யாநஞ் செய்யத் தக்க) வியாக்கியாந ஸ்வரூபங்களாம். வியாஸாதிகளால் ரிக் ஶாகை, யஜுஸ் ஶாகை, சாந்தோக்கிய ஶாகை, அதர்வண ஶாகை முதலியவற்றின் விபாகத்தினால் வேறு செய்யப்பட்டிருத்தலின், ரிக் யஜுஸ் ஸாம அதர்வண பேதத்தினால் நான்குவேதம் ஆயிற்று.

### (1) ரிக் வேதம்.

(1) அவற்றுள், அளவின்றிய அக்ஷரத்தினை யுடைய ஹோதாவின் வேதம் ரிக்காம்;

### (2) யஜுர் வேதம்.

(2) அளவோடு கூடிய அக்ஷரத்தினை யுடைய அத்வர்யுவின் வேதம் யஜுஸ்ஸாம்;

### (3) ஸாம வேதம்.

(3) கீதி (ஸ்துதி) விசிஷ்டமாய் அளவின்றிய அக்ஷரத்தினை யுடைய உத்காதாவின் வேதம் ஸாமமாம்;

### (4) அதர்வண வேதம்.

(4) அளவும் அளவின்றியதுமாகிய அக்ஷரத்தினை யுடைய பிராஹ்மணனது வேதம் அதர்வணமாம்.

(ஆண்டுச் சுருதி "இம் மஹா பூதம் பரமேஶ்வரனது நிஶ்வாஸமாம்; இது ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வண வேதமாம். இதிஹாஸம், புராணம், வித்தை, உபநிஷத், ஶ்லோகம், ஸூத்ரம், அநுவியாக்கியாநம் என்னும் அஷ்ட விதப் பிராஹ்மணமும் அதன் ஶ்வாஸமாம். எதனால் மந்திரப் பிராஹ்மண ரூப மூவிதக் காண்டத்தோடு கூடிய ஸமஸ்த தோஷ மற்ற அபௌருஷேய வேத வாக்கியமே பிரமையை யுண்டாக்குந் தன்மையால் அதீந்திரியார்த்தத்தில் பிரமாணமாகின்றது. பிரமப் பிரமாதங்களைச் செய்வதாய்ப் படுத் தன்மை யின்மை வஞ்சகத் தன்மை முதலியவற்றோடு கூடியவர்களால் செய்யப்பட்ட வேத விருத்த பாஷண்ட சாஸ்திரம்

பிரமிதியினை உண்டாக்குவ தின்று. அதனால், வேதத்திற் புகன்ற அதன் அநுஸாரியாகிய ஸ்மிருதியாதி புகன்ற தர்மாதிகளின் அநுஷ்டாநத்தினைத் தன் அதிகார அநுஸாரமாக முமுக்ஷுக்கள் அநுஷ்டிக்க.)

## 3 - 11. பிரமாணம்.

நான்கு பிரமாணத்தினைக் கூறுவாம்:—பிரத்தியக்ஷப் பிரமாண முதலியவற்றின் பேதத்தினால் நியாய ரீதியாகப் பிரமாணம் நான்கு வகைத்தாம்.

### (1) பிரத்தியக்ஷப் பிரமாணம்.

(1) ஸம்யோகம், ஸமவாயம், ஸம்யுக்த ஸமவாயம், ஸம்யுக்த ஸமவேத ஸமவாயம் முதலிய அறுவித ஸந்நிகர்ஷ ரூப தன் வியாபாரத்தினால் கடாதி விஷயத்தினை யுடைய பிரத்தியக்ஷ ஞாநத்தின் ஜநகம் பாஹ்யப் பிரத்தியக்ஷப் பிரமாணமாம்; எது பிரத்தியக்ஷப் பிரமையின் கரண மென்றுங் கூறப்படும். அது சக்ஷுராதி இந்திரியத்தின் பேதத்தினால் ஐ வகைத்தாம்:—

(i) கடாதி திரவ்யம் கடத்துவாதி ஜாதி, சுக்லாதி ரூபம், சுக்லத்வாதி ஜாதி என்பவற்றை விஷயமாக வுடைய பிரத்தியக்ஷ ஞாநம், சக்ஷு இந்திரிய ஜந்ய சாக்ஷுஷ ஞாநமாம். ஸங்கியை (எண்ணிக்கை), பரிமாணம், ஸம்யோகம், விபாக ரூப ஸாமாந்ய குணங்களையும் சாக்ஷுஷ ஞாநம் கிரஹிக்கின்றது. ஸ்வ ஸம்யுக்த விசேஷணத் தன்மைச் சம்பந்தத்தினால் பூதலாதியி லுள்ள கடாதிகளின் அபாவத்தினையும் சாக்ஷுஷ ஞாநம் கிரஹிக்கின்றது.

(ii) வர்ணரூப, த்வநிரூப இருவிதச் சப்தத்தினைக் கிரஹிக்கும் ஞாநம் சிரவணேந்திரிய ஜந்ய சிராவணமாம்.

(iii) கடிந ஸ்பரிசம், மிருது ஸ்பரிசம், சீத ஸ்பரிசம் உஷ்ண ஸ்பரிச முதலியவற்றினையும், அவற்றின் ஆச்ரய திரவ்யத்தினையும் கிரஹிக்கும் ஞாநம் த்வக் இந்திரிய ஜந்ய துவாச ஞாநமாம்.

(iv) நாநாவிதத் திரவ்யத்தினை ஆச்ரயித் திருக்கின்ற மதுரம் உவர்ப்பு புளிப்பு முதலிய ரஸங்களைக் கிரஹிக்கும் ஞாநம் ரஸநேந்திரிய ஜந்ய ராஸநமாம்.



(v) நாநாவிதத் திரவ்யத்தினை ஆசிரயித் திருக்கின்ற நற் கந்தம் துர்க்கந்தம் என்னும் இரு விதக் கந்தத்தினைக் கிரஹிக்கும் ஞாநம் கிராணேந்திரிய ஜந்ய நாஸிகமாம்.

அவற்றுள், சக்ஷு இந்திரியம், தன் கோளகத்தினின்றும் புறப்பட்டு, பாஹ்ய விஷயத்தினோடு சேர்ந்து யோக்கிய விஷயத்தின்கண் உள்ள ஜாதி ரூபத்வாதி ஆசிரய ரூப விசிஷ்ட திரவ்யத்தின் ஞாநத்தினை முற் புகன்ற ஸம்யோகாதி ஸம்பந்த வாயிலாக உண்டாக்குகின்றது.

சிரவணம், ரஸநம், கிராணம் என்னும் மூன்று இந்திரியங்களும் தம் கோளகங்களி லிருந்தே ஸம்யுக்த ஸமவாய ஸம்பந்தத்தினால் சப்தாதி குணங்களைக் கிரஹிக்கும் ஞாநத்தினை உண்டாக்குகின்றன.

த்வக் இந்திரியமும், சரீரத்தில் இருந்தே தன் விஷயமாகிய உஷ்ண சீதாதி ஸ்பரிசத்தினையும், அதன் ஆசிரய திரவ்யத்தினையும் கிரஹிக்கும் ஞாநத்தினையும், ஸங்கியை ஸம்யோகாதிகளின் ஞாநத்தினையும் உண்டாக்குகின்றது.

மநம் ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமாணமாம். அஃது ஆத்மாவின் ஸம்யோக வாயிலாக ஆத்ம விஷயக ஞாநத்தினையும், ஸம்யுக்த ஸமவாய ஸம்பந்தத்தினால் அதன் ஸம்பந்தியாய சுகாதி தர்ம விஷயகப் பிரத்தியக்ஷ ஞாநத்தினையும் உண்டாக்குகின்றது.

இவ்வாறு ஸர்வ லௌகிகப் பிரத்தியக்ஷ ஞாநமும் அறுவகைத்தாய ஸந்நிகர்ஷத்தினால் ஜநிப்பனவாம் என்பது நையாயிகர்களது கொள்கையாம்.

### அலௌகிகப் பிரத்தியக்ஷ ஞாநம்.

அலௌகிகப் பிரத்தியக்ஷ ஞாநமோ, ஸாமாந்ய ரூபம், ஞாநரூபம், யோகஜ தர்ம ரூபம் என்னும் மூன்று ஸந்நிகர்ஷத் (ஸம்பந்தத்) தால் ஜநிப்பதா மென்று கொள்ளுகின்றனர். அதனைக் காண்பிப்பாம்:—

(i) யாண்டு இந்திரிய ஸம்யோகத்தின் பின் தூமத்தினை விசேஷியமாகக் கொண்டு தூமத்வ விசேஷண விசிஷ்ட ஞாநம் உண்டாகின்றது, ஆண்டுத் தூமத்வ ரூப ஸாமாந்யம், அதன்கண் பிரகாரீபூதம், அல்லது விசேஷணமாகின்றது, அதனோடு சக்ஷுவிற்கு ஸம்யுக்த ஸமவாய

ஸம்பந்தம் இருக்கின்றது. அத் தூமத்வ ஜாதியோ, தேசாந்தரத்திலுள்ள ஸகல தூம வியக்தியின்கண்ணு முள்ளதாம்: அத் தூமத்வரூப ஸந்நிகர்ஷத்தால் சக்ஷு இந்திரியத்தோடு ஸம்பந்த மின்றிய ஸகல தூமத்தினையும் விஷயமாக வுடைய ஞாந முண்டாகின்றது ; அந்த அலௌகிகப் பிரத்தியக்ஷ ஞாநம் ஸாமாந்ய ரூப வியாபார வாயிலாகச் சக்ஷு இந்திரியத்தினால் ஜநிப்பதாம்; தூமத்வ ஸாமாந்ய ரூப ஸந்நிகர்ஷத்திற்கு ஸகல ஸ்வாசிரய ஞாநோத்பத்தியில் ஹேதுத்தன்மை யிருத்தலின்.

(ii) யாண்டுச் சக்ஷுவினோடு ஸம்பந்த முடைய சந்தநக் கட்டையின் ‘நற் கந்த முடையது சந்தநம்’ என்று சாக்ஷுஷ ஞாநம் நற் கந்த விசிஷ்ட சந்தநத்தினை விஷயமாக வுடையதாய் உண்டாகின்றதோ, ஆண்டுக் கிராணத்தால் ஜநிக்கும் நற் கந்த ஞாநமே பிரத்யா ஸத்தியாகின்றது. பிரத்தியாஸத்தி என்பது சக்ஷு இந்திரியத்தின் வியாபார ஞாந லக்ஷணமாம்; பிரத்தியாஸத்திக்குச் சக்ஷுவால் ஸ்வ விஷய வஸ்து ஞாநத்தினை யுண்டாக்குவதன்கண்ணே ஹேது இருத்தலின். அது நற் கந்த அம்சத்தினை விஷயமாக வுடைய அலௌகிகப் பிரத்தியக்ஷ ஞாநமாம்.

(iii) யோகாப்பியாஸத்தால் ஜநிக்கும் தர்ம விசேஷம் சுருதி புராணாதிகளால் பிரதிபாதிக்கப்பட்ட விசிஷ்டத்தோடு கூடி, யுக்த யுஞ்ஜாந பேதத்தினால் யோகி இரு வகைத்தாம். அஃது அலௌகிக ஞாநத்தில் மூன்றாவது ஸந்நிகர்ஷமாம். எதனை யோக சாஸ்திரத்தில் ரிதம்பரா புத்தி யென்றுங் கூறுவர். யுக்த யோகியாகிய பரமேஸ்வரனுக்கோ, ஸ்வயம் சித்தித்த யோக ஜந்ய தர்மத்தினால் ஆகாசம் பரமாணு முதலிய பூத பவிஷ்ய வர்த்தமாந கால ஸம்பந்தியாகிய ஸகல பதார்த்தங்களையும் கோசரிக்கும் ஞாநம் ஸதா உண்டாகின்றது; அந்ய யுஞ்ஜாந யோகிக்கு யத்தநத்தால் ஸாதிக்கத்தக்க யோக ஜந்ய தர்மத்தினால் சிந்தையின் விசேஷ வாயிலாக இச்சிக்கப்பட்ட ஸகல பதார்த்தங்களையும் விஷயஞ் செய்யும் ஞாநம் உண்டாகின்றது. இவ் விருவித யோக ஜந்ய தர்ம ரூப ஸந்நிகர்ஷத்தினால் அலௌகிகப் பிரத்தியக்ஷ ஞாநம் உண்டாகின்றது.

### (2) அநுமாநப் பிரமாணம்.

(2) லிங்க ஞாநத்தின் பின் வியாப்தி ஞாந, பராமர்ச ஞாந தன் வியாபார வாயிலாக அநுமிதி ஞாநத்தினை யாது உண்டாக்குகின்றது



அஃது அநுமாநப் பிரமாணமாம். அதுவே, அநுமிதிப் பிரமையின் கரணமாம். அது ஸ்வார்த்தம் பரார்த்தம் என்னும் பேதத்தினால் இரு வகைத்தாம்.

### (i) ஸ்வார்த்த அநுமாநம்.

(i) ஹேது ஞாநத்தின் பின் மஹாநச (சமைக்கு மிட)த்தில் கிரஹிக்கப்பட்ட வியாப்தியின் ஸ்மரண வாயிலாக, ஸ்வார்த்த அநுமிதியினை யுண்டாக்குவது, ஸ்வார்த்த அநுமாநமாம்.

### (ii) பரார்த்த அநுமாநம்.

(ii) ஸந்தேஹ முடைய ஸாத்திய விசிஷ்ட பக்ஷாதி வாசகத்தினை யுடைய பஞ்சாவயவ ரூப வாக்கியம் பரார்த்த அநுமாநமாம். அதுவும், வியாப்திக் கிரஹணம் முதலியவற்றால் பரார்த்த அநுமிதியின் ஜநகமாம். அது மீண்டும் கேவலாந்வயி, கேவல வ்யதிரேகி, அந்வய வ்யதிரேகி என்னும் பேதத்தினால் மூ வகைத்தாம்.

### (a) கேவலாந்வயி.

(a) கேவல அந்வய வ்யாப்தி விசிஷ்டம் கேவலாந்வயியாம். எங்ஙனம்? ‘‘கடம் வாச்சியம் ; பிரமேயத்தன்மையால்; படம் போன்று’’ என்புழி வாச்சியத் தன்மை, பிரமேயத் தன்மை ரூப ஸாத்திய ஹேதுக்கட்கு யாண்டும் இருப்புண்மையின் வ்யதிரேக வ்யாப்தியின் ஸ்தலமே யின்றாம்.

### (b) கேவல வியதிரேகி.

(b) கேவல வ்யதிரேக வ்யாப்தியினை யுடையது கேவல வ்யதிரேகியாம். எங்ஙனம்? பிருதிவி அந்ய(பிற)வற்றினும் பிந்நம்; கந்தமுடைமையால் ; ஜலாதி போன்று என்புழி, அந்ய பேதமும், கந்த முடைமைத் தன்மை ரூபமுமாய ஸாத்திய ஹேதுக்களின் அபாவம் ஜலாதி எல்லா விடத்தும் இருத்தலின். அவ் விரண்டும் இருக்கும் ஸ்தலம் ஒன்றும் இன்று.

### (c) அந்வய வியதிரேகி.

(c) யாண்டு அந்வய வ்யதிரேக மென்னும் இரண்டு வியாப்திகளின் கிரஹண முண்டாகின்றதோ, அஃது உபய வியாப்தி விசிஷ்ட

அந்வய வ்யதிரேகியாம். எங்ஙனம்? பர்வதம் நெருப்புடைத்து,
புகையுடைமையின், மஹாநஸமும் பெரிய மடுவும் போல வாம்.
ஸாத்தியம் ஹேது என்னும் இரண்டற்கும் ஓர் அதிகரணத்தில் நியம
மாக வியபிசார மின்றி ஸஹசாரம் (உடனிகழ்ச்சி) அந்வய வ்யாப்தி
யாம். அதனை விஷயமாக வுடைய ஞானம் வ்யாப்தி ஞானமாம். நிச்
சயிக்கப்பட்ட ஸாத்தியத்தினை யுடையது ஸபக்ஷமாம். அதனிடத்தில்
அந்வய வ்யாப்தியின் கிரஹணம் உண்டாகின்றது. நிச்சயிக்கப்பட்ட
ஸாத்தியாபாவ முடையது விபக்ஷமாம். அதன்கண் வ்யதிரேக
வ்யாப்தியின் கிரஹணம் உண்டாகின்றது. ஸபக்ஷம் அந்வயி திருஷ்
டாந்தமாம்; விபக்ஷம் வ்யதிரேகி திருஷ்டாந்தமாம். "ஸாத்திய
வியாப்ய ஹேதுவினை யுடையது இப் பக்ஷம்" என்னும் ஆகார
முடைய ஞாந ரூபம் லிங்க பராமர்சமாம். அதுவே பக்ஷ தர்மதா
ஞாநமாம். யாண்டுத் தூமம் ஆண்டு அக்நி என்பது அந்வய வ்யாப்தி
யாம். அது மஹாநஸம் முதலியவற்றில் கிரஹிக்கப்படுகின்றது.
யாண்டு அக்நியின் அபாவம், ஆண்டுத் தூமத்தின் அபாவம் என்பது
வ்யதிரேக வியாப்தியாம். அது மஹா மடு முதலியவற்றில் கிரஹிக்கப்
படுகின்றது.

### (3) உபமாநப் பிரமாணம்.

(3) உபமிதியின் கரணம் உபமாநமாம். ஸாதிருசிய ஞாநம்
வைதிருசிய ஞாநம் என்னும் பேதத்தினால் அவ் வுபமாநப் பிரமாணம்
இரு வகைத்தாம். ஸஞ்ஞா ஸஞ்ஞி (பெயர் - பெயரை யுடையது)
ஸம்பந்தத்தின் ஞாநம் உபமிதியாம்; அல்லது, ஸஞ்ஞியில் ஸஞ்ஞா
வாசகத்தின் ஞாநம் உபமிதியாம். அதனைக் காண்பிப்பாம்:—

ஒரு நகர வாஸி கவய மென்னும் சப்தத்தின் அர்த்தத்தினை
உணராதவனாய் ஓர் ஆரண்யக புருஷனால் "கோவின் ஸமாநம் கவயம்"
எனக் கேட்டு, வநத்திற் சென்று, ஆண்டு, கோ (மெ) ஸாதிருசிய
விசிஷ்ட பசு பிண்டத்தினைப் பார்த்து அந்தப் பிரத்தியக்ஷத்தின் தரி
சநத்தினால் ஸம்ஸ்காரம் உத்புத்தமாய் ஆரண்ய புருஷனது வாக்கி
யார்த்தத்தினை ஸ்மரணஞ் செய்கின்றான். அதன் பின், இப் பசு கவய
மென்னும் பதத்தின் வாச்சியமாம் என அவனுக்கு உபமிதி ஞாநம்
உண்டாகின்றது. ஈண்டு, கோ ஸதிருசியத் தன்மை விசிஷ்டப் பிண்
டத்தின் ஞாநம் உபமாநமாம்; ஸ்மிருதி ஞாநம் தர்க்க ரீதியாக வியா



பாரமாம்; ஸஞ்ஞியாய கவயத்தினிடை ஸஞ்ஞாவாய கவய பதத்தின்
வாச்சியத் தன்மையின் ஞாநம் உபமிதியாகிய பலமாம். இது முதல்
உபமாநத்தின் ஆகாரமாம்.

விசதிருச ஞாநத்தால் ஜநிக்கும் உபமிதியினைக் காண்பிப்பாம்:—
ஒரு புருஷன் பிருதிவியின் பொருளை உணரானாய் ஜலாதிகளின் வில
க்ஷணமாய்க் கந்தத்தினை யுடைய வஸ்துவினைப் பார்த்து, அதன் அர்த்
தத்தினை ஸ்மரணஞ்செய்து, பின்பிருதிவிபதத்தின் வாச்சியத் தன்மை
யினைக் கந்த முடைய வஸ்து வென்று நிச்சயஞ் செய்கின்றான். ஈண்டு
விருத்த தர்ம விசிஷ்ட பதார்த்தத்தின் பிரத்தியக்ஷ ஞாநம் உபமாந
மாம்; வாக்கியார்த்த ஸ்மரணம் வியாபாரமாம்; கந்தமுடைய பிருதி
வியினிடத்து பிருதிவி பதத்தின் வாச்சியத் தன்மையின் ஞாநம் உப
மிதியாகிய பலமாம். இவ்வாறு இரண்டாவது உபமாநம் கூறப்
பட்டது.

### (4) சப்தப் பிரமாணம்.

(4) ஆகாங்க்ஷை, யோக்யதை, ஸந்நிதிகளை யுடைய பதங்களின்
ஸமூஹ ரூப வாக்கியம் சப்தப் பிரமாணமாம். அது பத சக்தி
ஞாநம், ஆகாங்க்ஷாதி ஞாநம், தாத்பர்ய வாயிலாகப் பத ஜந்ய பதார்த்
தத்தின் உபஸ்திதி (ஸ்மிருதி) பூர்வகம், ஸம்ஸர்க்க விசிஷ்ட பேதங்
களினால் சுரோதாவி னிடத்துத் தனது அர்த்தத்தினைப் போதிக்கின்
றது. அந்த வாக்கியப் பிரமாணம் பரோக்ஷப் பிரமையினையே உண்
டாக்குகின்றது; அபரோக்ஷப் பிரமையினை யன்று. அது விஷய
ஸந்நிகர்ஷ வாயிலாகச் சக்ஷு முதலிய இந்திரியம் மநம் என்பவற்றால்
ஜநிக்கின்றமையின். ஈண்டு முற் புகன்ற வாக்கியம் சப்தப் பிரமாண
மாம்; பதார்த்த ஸ்மிருதி அதன் வியாபாரமாம்; இரு வித வாக்கி
யார்த்தத்தின் ஞாநம் பலமாம். இது நியாய ரீதியாம்.

### அநுபலத்திப் பிரமாணம்.

அபாவப் பிரமையினை யுண்டாக்கும் அநுபலப்திப் பிரமாணத்
தினை நையாயிகர்கள் பிரத்தியக்ஷப் பிரமாணத்தி லடக்கிக் கூறுகின்ற
னர்; வேறு பிரமாணமாகக் கொள்வ தில்லை; சக்ஷு இந்திரிய ரூபப்
பிரத்தியக்ஷப் பிரமாணமே ஸ்வஸம்யுக்த விசேஷணத் தன்மைச் சம்
பந்தத்தினால் அபாவ ஞாநத்தினை உண்டாக்குகின்றமையின்.

### அர்த்தாபத்திப் பிரமாணம்.

வேறு பிரகாரமாகப் பொருத்த மின்மை ரூப அர்த்தாபத்திப் பிரமாணத்தினை வ்யதிரேகி அநுமாநத்தில் அடக்கிக் கூறுகின்றனர்; வேறு பிரமாணமாக உடன்படுவ தில்லை; ஸ்தூலத் தன்மை ஹேதுவால் இராத்திரி போஜநரூப ஸாத்தியம் வ்யதிரேகி அநுமாநத்தினாலேயே அநுமிக்கப்படுதலின். யாண்டு ஸாத்தியாபாவ ஹேது அபாவ ரூப கேவல வ்யதிரேக வியாப்தியேயாம். அவ் வநுமானம் இதுவாம்:—இப் புருஷன் இரவு புசிப்பன்; பகலிலுண்ணாது பருத்திருத்தலின்; எவன் இரவு புசியானோ, அவன் பகலிலும் புசியாது பருத்திருத்தல் உண்டாகாது; பக லிரவு புசியாத புருஷன் போல வாம்.

(வேதாந்தத்தின் ஆசாரியர்களைப் போலவே வியவஹாரஞ்செய்ய யோக்யமாய வஸ்துவின் ஞாநத்தின் பொருட்டு நையாயிகர்களாலும் நான்கு விதப் பிரமாணம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றதா மாயினும், அவர்களது மதத்தில் நாநா விதப் பேதத்தினால் பிந்நமாய த்ரவ்யாதி ஏழு பதார்த்தங்கள், அல்லது, பதினாறு பதார்த்தங்கள் பிரமேயமாம். வேதாந்தத்திலோ அத்விதீயப் பிரஹ்மாத்மாவின் ஏகத் தன்மையே பிரமேயமாம். அவரோ சப்தப் பிரமாணத்தினை அபரோக்ஷ ஞாநத்தினை யுண்டாக்குவதாக ஒப்புவ தில்லை; வேதாந்திகளோ ஒப்புகின்றனர். அவர் சக்ஷு இந்திரிய ரூபப் பிரத்தியக்ஷப் பிரமாணம் ஸ்வ ஸம்யுக்த விசேஷணத் தன்மைச் சம்பந்தத்தினால் அபாவத்தினைக் கிரஹிக்கின்ற தென்று அங்கீகரிக்கின்றனர். வேதாந்திகளோ விசேஷணவிசேஷிய பாவத்திற்கு ஸம்பந்தமே அங்கீகரிப்ப தில்லை; அபாவத்தின் ஞாநம் அநுபலப்திப் பிரமாணத்தினால் உண்டாகின்ற தென்று உரைக்கின்றனர். இவ்வாறு அநேக விரோதம் கூறுதலால் அவர்கள் கொண்ட நான்கு விதப் பிரமாணமும் ஜிஞ்ஞாஸுக்களால் சிரத்தை செய்யத்தக்கன வன்றாம். ஆதலால், ஜிஞ்ஞாஸுவானவன் வேதாந்தத்தில் புகன்ற அறு விதப் பிரமாணத்தின் ரீதியினால் தனது மோக்ஷத்தின்பொருட்டு, வியாவஹாரிக, பாரமார்த்திக வஸ்துவின் ஞாநத்தினை ஸம்பாதநஞ் செய்தல் யோக்கியமாம்.)

### 3 - 12. சமாதி விக்கிநம்.

இப்பொழுது ஸமாதியின் விக்கிநத்தினைக் கூறுவாம்:—லயாதி பேதத்தினால் ஸமாதியின் விக்நம் நான்கு வகைத்தாம்.



#### (1) லயம்.

(1) அவற்றுள், நித்திரை லய மெனப்படும். ஸர்வ விருத்தியின் அபாவத்தின் காரணமாய தமோகுணத்தினை அவலம்பிக்கும் விருத்தி நித்திரையாம். அல்லது, மூர்ச்சாவஸ்தை போன்று சித்த விருத்தி ஆலஸ்யத்தினால் பாஹ்ய சப்தாதி விஷயத்தினைக் கிரகிஹிக்காதும் ஆந்தரப் பிரத்யகாத்ம ஸ்வரூபத்தின் கிரஹண மின்றியும் தன் காரணத்தில் லயமாவது நித்திரையாம்.

#### (2) விக்ஷேபம்.

(2) மீண்டு மீண்டும் சித்தத்தில் அநுபவிக்கப்பட்ட விஷயத்தின் ஸ்மரணமும் அநுபவிக்கப்படாத விஷயத்தினையுடைய சக்ஷு முதலியவற்றின் வாயிலாக விஷய ஸந்நிகர்ஷத்தின் பின் அநுபவமும் விக்ஷேப மெனப்படும்; அல்லது, அகண்ட வஸ்துவின் கிரஹணத்தின் பொருட்டு அந்தர்முகப் பிரவிர்த்தியாய சித்த விருத்தியின் அகண்ட வஸ்துவின் தியாக பூர்வகம் பூர்வ ஸம்ஸ்காரத்தினால் பாஹ்ய விஷயத்தின் கிரஹண பாலநத்தின் பொருட்டுக் கிரகிஹிக்கப்பட்ட நூதந ஸஞ்சல பக்ஷி போன்று மீண்டு மீண்டும் பாஹ்ய விஷய தேசத்தில் செல்லல் ரூப ஸஞ்சலத்தன்மை விக்ஷேப சப்தத்தின் பொருளாம்.

#### (3) கஷாயம்.

(3) பூர்வ பூர்வ ராகாதி திட வாஸனையினால் சித்தத்தின் ஸ்தம்பி பாவம் கஷாயமாம். லய விக்ஷேப மின்றி யிருப்பினும் ராகாதி வாஸனையினை ஹேதுவாக வுடைய சித்தத்தின் ஸ்தம்பீ பாவத்தினால் அகண்ட வஸ்துவின் அக்கிரஹணம் கஷாய சப்தத்தின் பொருளாம். ஸ்தம்பீபாவ மென்பது நிரோதமாம். எதனால் அகண்ட வஸ்துவின் கிரஹண மின்மை, பாஹ்ய வஸ்துவின் கிரஹண மின்மையாம். எங்ஙனம் ராஜ தர்சநத்தின் பொருட்டுச் சென்ற புருஷனுக்கு ராஜ மார்க்கத்தில் துவாரபாலகர்களால் ஆண்டே நிரோதநஞ் செய்யப்படுதலால் இராஜாவின் தர்சந மின்று, கிருஹத்தில் வருதலு மின்று, அங்ஙனமேயாம்.

#### (4) ரஸாஸ்வாதம்.

(4) நிர்விகல்ப அங்கியாகிய ஸமாதியின் ஆரம்ப காலத்தில் ஸவிகல்ப ஸமாதியின் ஸம்ஸ்காரத்தினால் திரிபுடிகளால் ஸவிகல்ப ஆநந்தத்தின் ஆஸ்வாதநம் (அநுபவித்தல்) ரஸாஸ்வாதமாம். திரிபுடியின்

அநுஸந்தாந மின்றி நிர்விகல்ப ஸமாதியிற் பிரவிர்த்தித்த சித்தம், அகண்ட வஸ்துவின் கிரஹண மின்மையால் பிரஹ்மாநந்த ரஸாஸ்வா தத்தின் பிராப்தி யில்லாவிடினும் பாஹ்ய விஷயத்தினின்றும் நிவிர்த்தி யடைந்து உள்ளே யுண்டாய திரிபுடி ஸஹித பிரஹ்மாநந்த அநுஸந் தாந ரூப ஸவிகல்ப சுகத்தினைப் பிரஹ்மாநந்தத்தின் பிராந்தியினால் அந்தர் முகமாய சித்தம், மீண்டு மீண்டும் அநுபவித்தல் ரஸாஸ்வாதத் தின் பொருளாம். எங்ஙனம் பிதாவால் வைக்கப்பட்ட தநத்தின் கிர ஹணத்தின் பொருட்டுப் பிரவிர்த்தித்த புருஷன், ஆண்டு அத் தநத் தினை ரக்ஷிக்கும் பூதப் பிரேதாதிகளால் பிடித்து அடிக்கப்பட்டு, பின் னர் விட்டுவிடின் அப்பொழுது அப்புருஷன் தநத்தின் பிராப்தி யின்றியவனாயினும் அடித்தலால் உண்டாய துக்க நிவிர்த்தி மாத்திரத் தினால் எங்ஙனம் சுகியாகின்றான் அது போன்றாம்.

(இவற்றுள் ஒன்று இருப்பினும் நிர்விகல்ப ஆநந்தத்தின் அநுப வம் உண்டாவ தின்று. ஆதலால், இந் நான்குமே நிர்விகல்ப ஸமாதி யின் பிரதிபந்தக விக்கிந ரூபமாம். இப்பொழுது விக்கிநத்தின் நிவிர்த்தி உபாயத்தினைக் கூறுவாம்:—நித்திராரூப லயத்தினை யடை யின், ஸ்வல்ப ஆகாரத்தின் நியமத்தினாலும், மிகச் சிரமத்தினைக் கொடுக்கும் கிரியையின் தியாகத்தினாலும், பிராணாயாமாதிகளினாலும் சித்தத்தினை நித்திரையி னின்றும் விழிப்பிக்க. எப்பொழுது பூர்வம் அநுபவிக்கப்பட்ட விஷயத்தின் ஸம்ஸ்காரத்தினால் சித்தம் விக்ஷிப்த மாகின்றதோ, அப்பொழுது விஷயத்தில் தோஷ தர்சநத்தினாலும், பிரஹ்ம அநுஸந்தாநாதிகளினாலும் மீண்டும் சித்தத்தினை ஏகாக்ரம் செய்க. எப்பொழுது இராகாதிகளால் சித்தம் கஷாய ஸஹிதமாகின் றதோ, அப்பொழுது ஸூக்ஷ்ம திருஷ்டியினால் அதனையறிந்து அதனை மீண்டும் பிரஹ்மத்தினிடத்தில் ஸ்தாபிக்க. எப்பொழுது சித்தம்பிரஹ் மத்தினை யடைந்திருக்கின்றதோ அப்பொழுதுஅதனைச் சலிப்பிக்கற்க. பின்னையோ தன்மயமா யிருக்க; "லயத்தினை யடைந்த சித்தத்தினை விழிப்பிக்க, விக்ஷிப்த சித்தத்தினை மீண்டும் ஏகாக்ரம் செய்க; கஷாய முடைய சித்தத்தினை ஸூக்ஷ்ம திருஷ்டியால் அறிக; பிரஹ்மத்தினை யடைந்த சித்தத்தினைச் சலிப்பிக்கற்க" என்னும் கௌடபாத ஸ்வாமி களின் வசநரூபப் பிரமாணத்தினால்.

அல்லது, ஈஶ்வரனது உபாஸனையானும் விக்நத்தின் நாசமும், ஸமாதியின் லாபமும் உண்டாகின்றன; "ஈஶ்வரனது பிரணிதாந



(நமஸ்கார)த்தினால் விக்ந நிவிர்த்தி பூர்வகம் ஸமாதியின் லாபம் உண்டாகின்றது" என்னும் பதஞ்சலியின் வசநத்தினால். "கிலேசம், கர்மம், விபாகம், ஆஶயம் என்பவற்றோடு ஸம்பந்திக்காத புருஷ விசேஷன் ஈஶ்வரனாம்" என்று பதஞ்சலி பகவான் கூறியிருக்கின் றனர். அவித்தை முதலியன பஞ்சக் கிலேசங்களாம். சுக்லம், கிருஷ் ணம், மிஶ்ரம் என்னும் மூன்றும் கர்மங்களாம். மூ விதக் கர்மத்தின் ஜாதி ஆயுள் போகம் என்னும் பலம் விபாகமாம். போகத்தினால் உண் டாய ஸம்ஸ்காரம் ஆஶயமாம். இக் கிலேசங்களால் பந்திக்கப்பட்ட வன் ஜீவனாம். அவற்றின் விலக்ஷணமாய ஸர்வஞ்ஞ, ஸர்வ ஶக்தி யினை யுடைய புருஷ விசேஷன் ஈஶ்வரனாம். அவ்வீஶ்வரனது வாசகமாய பிரணவ ஜபம், அதன் அர்த்தத்தின் சிந்தநம் என்பன ஈஶ்வரனது பிரணிதாநமாம். எங்ஙனம்? "நான் அது, அது நான்" என்று சுருதியில் அது என்னும் சப்தத்தினால் பரமாத்மா கூறப்பட் டிருக்கின்றது; நான் என்னும் சப்தத்தினால் அந்தராத்மா கூறப்பட் டிருக்கின்றது; இவ்விரண்டு சப்தத்தின் ஸமாநாதிகரணத்தினால் பிரஹ்மாத்மாவின் ஏகத்தன்மை கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், எங்ஙனம் "அது நான்" என்னும் வாக்கியத்திற்கு "நான் பரமாத்மா" என்பது பொருளாமோ, அங்ஙனமே, "ஸோஹம்" ("அது நான்") என்னும் வாக்கியத்தில் ஸகார, ஹகாரங்களை லோபஞ் செய்ய, "ஓ - அம்" என்பன எஞ்சுகின்றன. அகாரத்தினை லோபஞ் செய் யில் "ஓம்" என்னும் சப்தம் உண்டாகின்றது. ஆதலால், "ஓம்" என்னும் சப்தத்திற்கும் "நான் பரமாத்மாவா யிருக்கின்றேன்" என் பதே பொருளாம். இவ்வாறு பிரணவ அர்த்தத்தின் அநுஸந்தாநரூப ஈஶ்வரப் பிரணிதாநத்தினால் உண்டாய பரமேஶ்வரனது அநுக்ரஹத் தினால் விக்நத்தின் நாசமும் நிர்விகல்ப ஸமாதியும் உண்டாகின்றன.)

## 3 - 13. மைத்திரியாதி.

மைத்திரியாதிகளைக் கூறுவாம்:—மைத்திரி கருணை முதலிய வற்றின் பேதத்தால் மைத்திரியாதிகள் நான்கு வகையாம்.

### (1) மைத்திரி.

(1) ஸர்வ ஜீவர்களிடத்திலும் அந்தர்யாமி புத்தியினால் "பந்து" என்னும் பாவநா ரூப சித்த விருத்தி விசேஷம் மைத்திரியாம்; அல்

லது, சக்தி யநுஸாரம் எல்லோருக்கும் உபகாரஞ் செய்வதில் இருக்கும் சித்த விருத்தி விசேஷம் மைத்திரியாம்; அல்லது, மஹாத்ம புருஷர்களோடு மித்திரத்தன்மை (சிநேகம்) செய்தல் மைத்திரியாம்; அல்லது, துராசார நிவிர்த்தி பூர்வக ஸதாசார அநுஷ்டாநத்தினால் ஸம்ஸார ரூபச் சேற்றினின்றும் தன் ஜீவாத்மாவினை உத்தாரணஞ் செய்தல் தன்னிடத்தில் மைத்திரியாம். தனக்குத் தான் பந்துவாயிருத்தலின், தன்னாலேயே தன்னை உத்தாரணஞ் செய்க. ஸம்ஸாரத்தில் தன்னை மூழ்த்தற்க; எதனால்? "தானே தனக்குப் பந்துவும், தானே தனக்குச் சத்துருவும்" என்னும் கீதையின் (6-வது அத்தியாயம் 6-வது செய்யுள்) வசநத்தினால்.

(2) கருணை.

(2) ரோகாதிகளால் அல்லது தந துக்காதிகளினால் பீடிக்கப்பட்ட துக்கிகளாகிய ஜீவர்களைப் பார்த்து ஸ்வாபாவிக கிருபையின் வசத்தினால் அவர்களிடத்து உண்டாம் கருணா விர்த்தி, சக்தி யநுஸாரமாய், அவர்களின் துக்க நிவாரணத்தின் பிரயத்ந பரியந்தம் உண்டாகும், அவர்களின் துக்கத்தினை ஸஹித்த லின்மை ரூப விர்த்தி கருணையாம்; அல்லது, மூவிதத் தாபத்தினால் தபிக்கப்பட்டுச் சரணாகதியான ஜிஞ்ஞாஸுவின் பிராந்தியினால் சித்தித்த துக்கத்தினைப் பார்த்து, கேவலக் கிருபையினால் தனது உபதேச ரூப சந்திரனது அம்சத்தினை விழச் செய்து தாப நிவாரண பூர்வகம் சந்தோஷத்தினைச் செய்தல் கருணையாம்.

(3) முதிதை.

(3) ஸ்வதர்ம நிஷ்டர், புண்யம் செய்வோர், தம் பிராரப்தத்தினால் ஸுகி புருஷர்களைப் பார்த்து இஃது எனதே என்னும் புத்தியினால் உண்டாம் பிரஸந்நத் தன்மை ரூப விர்த்தி முதிதையாம். அல்லது சத்திய புருஷர்களின் தரிசந சம்பாஷணை முதலியவற்றால் அந்தக்கரணத்தில் உண்டாம் சந்தோஷம் முதிதையாம்.

(4) உபேக்ஷை.

(4) சாஸ்திரத்தின் பிரதிகூலமான துராசாரம், கெட்ட ஹிருதயம், பாபம் செய்தல் என்பவற்றையுடைய புருஷர்களைப் பார்த்து அவர்களிடத்து உண்டாம் உதாஸீநத் தன்மைரூப சித்தவிருத்தி உபேக்ஷையாம். உபேக்ஷை யென்பது அவர்களிடத்துப் பிரியமும், துவேஷமு மின்மையாம். அது வழியில் செல்லுவோன் பார்த்த திரணாதிகளிடத்துப் போலவாம். அல்லது, பிராரப்தத்தால் தனது பிரயத்நமின்றி யடைந்த விஷய போகத்திலும் (சரீர) நிர்வாகத்தின் அதிகமாக ஒரு வஸ்துவினையும் கிரஹிக்காமை உபேக்ஷையாம்.



(இந் நான்கு விர்த்தியின் நிரந்தர அப்பியாஸத்தினால் சித்தத்தின்கண் உள்ள மதம் மாத்ஸர்யம் அஸூயை ஈருஷை தம்பம் முதலிய ஆஸுரி ஸம்பத்துக்கள் நிவிர்த்தியாக ஞாநத்தினை யுடைய புருஷன் வாஸநாக்ஷய ரூப ஜீவந் முக்தியினை யடைகின்றான்.)

## 3-14. காநி.

இப்பொழுது நான்கு காநியினைக் கூறுவாம்:— ஜராயுஜாதி பேதத்தினால் பூதக் கிராமம் நான்கு வகைத்தாம்:—

(1) ஜராயுஜம்.

(1) ஜராயு என்னும் சர்மத்தினின்றும் உண்டாவது ஜராயுஜமாம். அது மநுஷ்ய பசு அஸ்வம் முதலியவற்றின் சரீரங்களாம்.

(2) அண்டஜம்.

(2) அண்டத்தி (முட்டையி) னின்றும் உண்டாவது அண்டஜமாம். அது பக்ஷி பாம்பு முதலியனவாம்.

(3) ஸ்வேதஜம்.

(3) ஸ்வேதத்தி (வியர்வையி) னின்று முண்டாவது ஸ்வேதஜமாம். அது பேன் கொதுகு முதலியனவாம்.

(4) உத்பிஜ்ஜம்.

(4) பிருதிவியினைப் பிளந்து கொண்டு உண்டாவது உத்பிஜ்ஜமாம். அது விருக்ஷம் கொடி குல்மம் முதலியனவாம்.

இந் நான்கு விதச் சரீரமும் அதன் அபிமாநியாகிய ஜீவனும் நான்கு காநி யெனப்படும்.

(ஸத் ஸங்கம், ஸத் சாஸ்திர விசாரம், பகவத் பக்தி யின்றி இச்சீவன் விஹித அவிஹித தன் கர்ம அநுஸாரம் இந் நான்கு வித

சரீரத்தினை யடைந்து, அநாதி ஸம்ஸாரத்தில் கடி யந்திரம் போன்று மிகவும் சுழலுகின்றனன்; அதனால் மநுஷ்ய சரீரத்தில் அவசியம் ஸத் ஸங்கர்திகள் செய்யத் தக்கன வாம்.)

### 3-15. பிரஹ்ம வித்தாதி.

பிரஹ்ம வித்தாதி நான்கினைக் கூறுவாம் :—

#### (1) பிரஹ்ம வித்.

(1) விசாரிக்கப்பட்ட மஹா வாக்கியத்தின லுண்டான ஞாநத்தினால் ஆவரண அத்தியாசங்கள் நிவிர்த்தியாக, எப் புருஷன் பூர்ணாநந்தப் பிரஹ்மத்தினைப் பிரத்தியக் போத ரூபத்தால் ஸாக்ஷாத்தாக அறிகின்றனன் அப்புருஷன் பிரஹ்மவித்தாம். அவன் ஸத்வாபத்தி என்னும் பெயரினை யுடைய நான்காவது பூமியில் இருப்பவனும். அவனே சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவாய் இருந்து தனது உபதேச வாயிலாக வேதாந்த ஸம்பிரதாயப் பிரவர்த்தகனும். அவனுக்கு ஜாக்ரமாகிய ஜகத்து ஸ்வப்நம் போன்று தோற்றுகின்றது. எங்ஙனம் ஸ்வப்நத்தி னின்றும் எழுந்த புருஷன் ஸ்வப்நப் பிரபஞ்சத்தினை ஸ்மரித்தும் அதனை மித்தையாக அங்கிகரிக்கின்றனனோ, அங்ஙனமே பிராரப்த பலத்தின் போக காலத்தில் இப் பிரஹ்மவித்தும் ஜாக்ர ஜகத்தினைப் பார்த்தும் அதனை மித்தையாகவே அங்கீகரிக்கின்றனன்.

#### (2) பிரஹ்ம வித் வரன்.

(2) எப் புருஷன் பிரஹ்ம ஞாநத்தின் பின் புத்ர தநாதி வாஸனை, தேக வாஸனை, லோக வாஸனை முதலியன நசித்தற் பொருட்டுச் சிந்மாத்திர வாஸனை, மைத்திரியாதி விரோதி வாஸனைகளைத் திடமான அப்பியாஸ முடையவனாய், ஜீவந் முக்தியின் பொருட்டு வாஸநாக்ஷய முடையவ னாகின்றான், அப்புருஷன் முற்புகன்ற பிரஹ்ம வித்தினின்றும் வர னென்னும் சிரேஷ்டனாகிய பிரஹ்மவித்து வரனும்; அஸம்ஸக்தி யென்னும் பெயரினை யுடைய ஐந்தாவது யோக பூமியில் இருப்பவனாகலின். அவனுக்கு ஜாக்கிரமாய ஜகத்துச் சுழுத்தி போல்வதாம். எங்ஙனம் தூங்கும் புருஷனது



ஸர்வ விருத்திகளும் நித்திரையில் உபராமமாமோ, அங்ஙனமே இவனும் ஜாக்ரத்தில் இந்திரியங்க ளிருப்பினும் இந்திரியங்களால் விஷயங்களைக் கிரஹிப்ப தில்லை; ஆதலால், அவன் தூங்குகின்றவனாய் அநேகமாக உபராம விருத்தி யுடையவனாய் நிர்விகல்பனாய் இருக்கின்றான். ஒரு கால் உபதேசத்தின் பொருட்டு, அல்லது சரீர யாத்திரையின் பொருட்டு, ஜட பரதாதிகள் போன்று வியுத்தாநத் தன்மையினையும் அடைகின்றான்.

#### (3) பிரஹ்ம வித் வரியான்.

(3) எப் புருஷன் பிரஹ்ம ஞாநத்தின் பின் வாஸநா க்ஷய மநோ நாசங்களால் ஸம்பந்நனோ, அப்புருஷன் பிரஹ்ம வித் வரியானும்; அவன் முற் புகன்ற வரனினும் வர னும்; பதார்த்தாபாவநா ரூப ஆறுவது பூமியின்கண் உள னாகலின். அவனுக்கு ஜாக்ர ஜகத்துக் காட சுழுத்தி போல்வதாம். எங்ஙனம் காட நித்திரை செய்யும் புருஷன் நித்திரையி னின்றும் தானாகவே எழுந்திருப்ப தில்லை, ஒரு கால் அந்யர்களால் அறிவிக்கப்பட்டு எழுந்திருக்கின்றானோ, அங்ஙனமே இவனும் தானாகவே உத்தாநத்தை யடைவ தில்லை; ஸதா நிர்விகல்பப் பிரஹ்மத்தில் உபராமமா யிருத்தலின். அந்யர்களால் அறிவிக்கப்பட்டு ஒருகால் அவதூதர் முதலியோர் போன்று எழுந்திருத்தலையும் செய்கின்றான்.

#### (4) பிரஹ்ம வித் வரிஷ்டன்.

(4) எப் பிரஹ்ம வேத்தாவின் மந வாஸனைகள் அத்தியந்தம் நாசமா யிருக்கின்றன, அவன் அகண்டப் பிரஹ்மத்தோடு தந்மயனா யிருக்கின்றான், அப்புருஷன் அந்யர்களால் ஒருகாலும் வெளிப்படுபவன் அல்லன். எங்ஙனம் ஜலத்தால் பூர்ணஞ் செய்யப்பட்ட கும்பத்தினை (ஜல மிருக்கின்ற) குளத்தில் வைக்கின், அதன் உள்ளிலும் வெளியிலும் ஜலமேயாமோ, அங்ஙனமே இவனுக்கும் உள்ளிலும் வெளியிலும் பிரஹ்மமே பூர்ணமா யிருக்கின்றது. இப்புருஷன் கத்தியால் வெட்டுதல் முதலிய பெருந் துக்கங்களினாலும் ஸ்வரூபத்தினின்றும் ரிஷப (தேவர்) முதலியோர் போன்று சலநத்தினை அடைவதில்லை; ஏழாவது துரீய மென்னும் பெயரினையுடைய யோக பூமியில்

இருக்கின்றவனாகலின். ஆதலால் யோகிகள் இவனைப் பிரஹ்மவித் வரிஷ்டன் என்கின்றனர்.

(இந்த நான்கு விதமாகக் கூறப்பட்ட ஞாந பூமி யெல்லாம் பூர்வ பூர்வம் அநந்த ஜந்மங்களில் ஸம்பாதிக்கப்பட்ட வேதாந்த சிரவணாதிகளாலும் குருபக்தி பூர்வகம் ஈஸ்வர உபாஸநா ஜந்ய அசுக்ல அகிருஷ்ண புண்ய அபூர்வத்தினாலுமே பிராப்தமாகின்றன. அதனால் (இவை) அதி துர்லபமாம்; ஆயினும், இக் கோரமாகிய கலியில் விஷயாஸக்தியின் மிகுதியினால் கேவல விவேகமார்க்க ஸாத்தியப் பிரஹ்மவித் அவஸ்தா ரூப நான்காவது பூமியின் அடைவே அதிதுர்லபமாம். மிக முயல்பவர்களுள்ளும் ஒரு மஹா பாக்கியவானே அதனை யடைகின்றான்; எல்லோரும் அடைவ தில்லை. யோகம் விவேகம் என்னும் இரண்டு மார்க்கங்களால் ஸாத்தியமாய ஜீவந் முக்தியின் அவஸ்தா ரூப மூன்று பூமியின் துர்லபத் தன்மையிலோ கூறவேண்டுவ தென்னை யிருக்கின்றது? "பரமேஸ்வரன், அநேக புருஷர்களுக்குச் சிரவணத்தின் பொருட்டே கிடைப்பதில்லை. எதனை அநேக முறை கேட்டும் நன்கு அறிய வில்லை.", "சிலர் ஆச்சரியம் போன்று இந்த ஆத்மாவினைப் பார்க்கின்றனர். * அங்ஙனமே ஆச்சரியம் போன்று சிலர் அந்யருக்குக் கூறுகின்றனர். சிலர் ஆச்சரியம் போன்று இதனைக் கேட்கின்றனர். சிலர் கேட்டும் இதனை யறிவ தில்லை." என்னும் சுருதி ஸ்மிருதிகளின் பிரமாணத்தினால்.)

---

* பகவற்கீதை 2-வது அத்தியாயம் 30-வது செய்யுள்.

"ஒருவ னென்றுங் கண்டறியா ததுகண் டாற்போ லுணர்ந்திருக்கு
மொருவ னென்ற முரைத்தறியா ததனை யுரைத்தாற் போலுரைக்கு
மொருவ னென்றுங் கேட்டறியா ததனைக் கேட்டாற் போலுவக்கு
மொருவ னென்றுங் கேட்டாலு மறியா னிந்த வுண்மையினை."

𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍇𑌨𑌮𑍍
𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌦𑍍𑌵𑌦𑌤𑌿 𑌤𑌥𑍈𑌵 𑌚𑌾𑌨𑍍𑌯𑌃 ।
𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌚𑍍𑌚𑍈𑌨𑌮𑌨𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿
𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌪𑍍𑌯𑍇𑌨𑌂 𑌵𑍇𑌦 𑌨 𑌚𑍈𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ॥ 𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾 ॥



## 3—16. ஸந்நியாஸம்.

ஸந்நியாஸம் நான்கினைக் கூறுவாம்:—குடீசகாதியின் பேதத்தினால் ஸந்நியாஸம் நான்கு வகைத்தாம்.

### (1) குடீசக ஸந்நியாஸம்.

(1) அநேக க்ஷேத்திரம் தீர்த்தம் தேசம் செல்வதால் உண்டாம் த்வந்த்வ தர்மங்களின் ஸஹநத்தன்மை, இந்திரியங்களின் நிக்ரஹங்களில் சில நிமித்தத்தினால் அசக்தனாய்ச் சுருதி ஸ்மிருதிகளின் விதி யநுஸாரம் குருவினால் ஆஸ்ரம நிஷ்டனாய்ச் சில பவித்ர தீர்த்தத்தின் கரையில் திரணங்களால் குடி (குடிசை) செய்து எதன்கண் தனது ஆஸ்ரமத்திற்கு உசிதமாய தர்மாநுஷ்டாநஞ் செய்யப்படுகின்றதோ, அது குடீசக ஸந்நியாஸமாம். (ஸஹநம் - பொறுமை).

### (2) பஹூதக ஸந்நியாஸம்.

(2) ஸமர்த்துடையனாய், ஆஸ்ரம தர்ம அநுஷ்டாந பூர்வகம் எதன்கண் த்வந்த்வ தர்ம ஸஹநத்தின் பொருட்டு அநேக க்ஷேத்திராதிகளின் ஸஞ்சார முண்டாகின்றதோ, அது பஹூதக ஸந்நியாஸமாம்.

### (3) ஹம்ஸ ஸந்நியாஸம்.

(3) பிரஹ்ம லோகப் பிராப்தியின் இச்சையினால் செய்யப்பட்ட, தனது ஆஸ்ரம உசித தர்மாநுஷ்டாந ஸஹித ஸந்நியாஸம் ஹம்ஸ ஸந்நியாஸமாம்.

இம் மூன்றனுள்ளும் அக்நி ஸாத்திய விஹித கர்மம் சுருதிப் பிரமாணத்தினால் தியாகமேயாம். இம் மூவித ஸந்நியாஸமும் நான்கு வித வசிசார மென்னும் பெயரினை யுடைய வைராக்கியமாய ஹேதுவினை யுடையன வாம். எதனைப் பர வைராக்ய மென்றும், தீவிர வைராக்கிய மென்றுங் கூறுகின்றனர்.

### (4) பிரஹ்ம ஹம்ஸ சந்நியாசம்.

(4) விவிதிஷா வித்வத் என்னும் பேதத்தினால் பிரஹ்மஹம்ஸ ஸந்நியாஸம் இரு வகைத்தாம். சிரவணாதி வாயிலாக ஞாநத்தின் ஹேதுவாயது முதலதாம்; ஞாநத்தின் பின் ஜீவந் முக்தியின் ஹேது வாகச் செய்யப்படுவது இரண்டாவதாம். அது பர வைராக்கியத்

தினை ஹேதுவாக வுடையதாம். எதனைத் தீவிர மென்றுங் கூறுகின்றனர். இதன் விசேஷத்தை முன்னரும் கூறினோம். மநு முதலிய ஸ்மிருதியிலும் இதன் ஸாதாரண அஸாதாரண தர்மங்கள் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றன. நானோ லக்ஷண உபயோகியாக லேச மாத்திரம் அறிவித்தேன்.

(கூறிய நான்குவித ஸந்நியாஸத்திலும் ஸ்திரீ புத்திராதி விஷயங்களினின்றும் விரக்த புருஷனுக்கே அதிகாரமாம்; விரக்தி யின்றிய புருஷனுக்கு அன்று. கலிப் பிரபாவத்தினால் நவீந ஜீவர்கள் வைராக்ய மின்றி ராகத்தாலேயே ஸந்நியாஸ ஆஶ்ரமத்தினைக் கிரகிக்கின்றனராயினும், அவர்கட்கு ஸந்நியாஸ ஆஶ்ரம கிரஹணத்தின் பலமாய பிரஹ்ம ஞாநாதிகள் ஒரு காலத்தும் கிடைப்ப தில்லை. அவர்கள் கிரஹித்த ஸந்நியாஸ ஆஶ்ரமம் வியர்த்தமே யாம்.)

## 3—17. யோக பூமி.

யோக பூமியின் நான்கு விதத்தினைக் கூறுவாம்:—வாக்கு நிரோதாதியின் பேதத்தினால் சித்த நிரோதத்திற்கு ஹேதுவாய யோக பூமிகள் நான்கு வகையாம்:—

(1) தத்துவத்தினை யறிந்தவர்க்கும் கிலேச நிவிர்த்தியின் பொருட்டு அபேக்ஷிக்கப்பட்ட அஸம்பிரஞ்ஞாத ஸமாதியில் பசு அஶ்வாதிகள் போன்று உண்டாம் லௌகிக வைதிக வாக் வியாபாரத்தின் நிரோத மெனப்படும் மநோமாத்திர நிலைமை அதனது பிரதம பூமி யாம்;* "வாக்கினை மநத்திடை லயிப்பிக்க" என்னும் சுருதியால்.

---

* 11-வது 17. பிரஹ்ம கீதை.

"வாக்கது மநத்திடை வைக்கு மம்மநம்
போக்கிடும் புந்தியுட் புந்தி மானிலே
யாக்கிடு மந்தமா னிவைய னைத்திலுந்
தாக்கறுஞ் சாந்தமாந் தன்னிற் சாந்தமாம்."

கடவல்லி உபநிஷத்து 1-வது அத்தியாயம் 3-வது வல்லி 67-வது மந்திரம்.

யச்சே²த்³வாங்மநஸீ ப்ராஜ்ஞஸ்தத்³யச்சே²ஜ்ஜ்ஞாந ஆத்மநி।
ஜ்ஞாநமாத்மநி மஹதி நியச்சே²த்தத்³யச்சே²ச்சா²ந்த ஆத்மநி॥



(2) ஸமாதி அப்பியாஸத்தினால் பாலன் மூக(ஊமைய)ன் முதலியோர் போன்று அதன்கண் உண்டாம் மநந மில்லாத அவஸ்தையாய விஞ்ஞாந ஆத்மா மாத்திரமான நிலைமை இரண்டாவதாம்; "மநத்தினைப் புந்தியுள் போக்கிடு" என்னும் சுருதியினால்.

(3) மீண்டு மீண்டும் ஸமாதி அப்பியாஸத்தின் பலத்தினால் தந்திரா (நரம்பு) போன்று யோகியினிடத்து உண்டாம் விசேஷ ரூப அஹங்கார மின்மை யெனப்படும் மஹத் ஆத்மா மாத்திர நிலைமை மூன்றாவதாம்; "விஞ்ஞாந ஆத்மாவினை மஹதாத்மாவில் லயிப்பிக்க" என்னும் சுருதியினால்.

(4) ஸமாதியின் திடத்தினால் உண்டாம் ஸாமாந்ய அஹங்கார மின்மை யெனப்படும் சாந்தாத்மா மாத்திரமாக நிலைத்தல் நான்காம் பூமியாம். எதனை மஹத் தத்வ அபாவம் என்றும் கூறுவர்; "மஹதாத்மாவினைச் சாந்தாத்மாவில் லயிப்பிக்க" என்னும் சுருதியினால்.

(இந் நான்கு பூமியின் அபிப்பிராயத்தினால் அவை கீதையில் பகவானால் "திருதியினால் கிரஹிக்கப்பட்ட புத்தியினால் மெள்ள மெள்ள உபராமம் செய்க" என்பதாதி வசநத்தினால் கூறப்பட்டிருக்கின்றன. அதனால் ஸவிகல்ப நிர்விகல்ப ஸமாதி சித்தியினை இச்சிக்கும் முமுக்ஷுவு அவசியம் இந் நான்கு யோக பூமியினையும் மீண்டுமீண்டும் அப்யஸிக்க.

## 3—18. சித்த நிரோதம்.

சித்த நிரோதத்தின் நான்கு யுக்தியினைக் கூறுவாம்:—அத்யாத்ம வித்தையின் அதிகமம் முதலியவற்றின் பேதத்தினால் சித்தத்தின் ஜயத்தின் யுக்தி நான்கு வகைத்தாம்.

(1) அவற்றுள், குருப் பிரஸாதத்தினால் தத் த்வம் பதார்த்தங்களை விசாரித்ததனால் பிரஹ்மாத்ம ஏகத்வ விஷயமாய வித்தையின் பிராப்தி முதலதாம். அல்லது, சுரோத்ரியப் பிரஹ்மநிஷ்ட குருவினிடத்தினின்றும் விதிபோன்று வேதாந்த சாஸ்திரத்தினைக் கிரஹித்தல் முதலதாம்.

(2) ஜிஞ்ஞாஸுவின் ஹிதத்தினை இச்சிக்கும் புருஷன் ஹிதோபதேசத்தினால் ஸம்ஶயாதிகளை நாசஞ் செய்யும் ஐஹிக ஆமுஷ்மிகப் பிரயோஜந மின்றிய ஸாதுக்களோடு, சுஶ்ரூஷை முதலியவற்றோடு கூடிச் சிரத்தையினால் கூடியிருத்தல் இரண்டாவதாம்.

(3) ஆஸுரீ ஸம்பத்து ரூப நாநாவித மலிந வாஸனையின் விரோதி தைவீ ஸம்பத்து ரூப சுத்த வாஸனையின் கிரஹணத்தினால், அதன் தியாகம் மூன்றாவதாம்.

(4) ரேசக பூரகாதி அப்யாஸத்தின் கிரமத்தினால் ஸ்வாபாவிக பிராண கதியின் நிரோத ரூபப் பிராணாயாமம் நான்காவதாம்.

("அத்யாத்ம வித்தையின் அதிகமம் (அறிதல்), ஸாதுக்களின் ஸங்கமம், வாஸனையின் தியாகம், பிராணன் செல்லுதலின் நிரோதம் என்னும் நான்கும் சித்தத்தின் ஜயத்தில் பெரிய யுக்திகளாம்" என்னும் பிரமாணத்தினால். அவற்றுள், முன் மூன்று யுக்திகளும் மிருதுவான மார்க்கங்களாம். இவற்றானே சித்தத்தின் நிரோதம் உண்டாய் விடின் நான்காவது யுக்தியின் அபேக்ஷை யில்லை; அல்லாக்கால், கிலிஷ்ட மார்க்கமாய பிராண நிரோத ரூப நான்காவது யுக்தியும் சித்தத்தினை ஜயித்தற் பொருட்டு ஆவசியகமாம்).

## 3—19. ஸ்பரிசம்.

நான்கு ஸ்பரிசத்தினைக் கூறுவாம் :—சீதோஷ்ணாதியின் பேதத்தினால் ஸ்பரிசம் நான்கு வகைத்தாம் :—

### (1) சீத ஸ்பரிசம்.

(1) த்வக் இந்திரியத்தோடு சீதளமாகிய ஜல முதலிய திரவ்யத்தின் ஸம்யோகமாக "இது சீதம்" என்று த்வக் இந்திரிய ஜந்ய ஞானத்தின் விஷயமாவது சீத ஸ்பரிச குணமாம்.

### (2) உஷ்ண ஸ்பரிசம்.

(2) அக்கினியாதி உஷ்ணத் திரவ்யத்தின் ஸம்யோக முண்டாக "இஃது உஷ்ணம்" என்னும் ஞானத்தின் விஷயமாவது உஷ்ண ஸ்பரிசமாம்.

### (3) மிருது ஸ்பரிசம்.

(3) மயிலின் தோகை, புஷ்பம், மிருதுவாய வஸ்திரம், கர்ப்பாசம் (பஞ்சு) முதலிய திரவ்யங்களின் ஸம்யோகமாக "இது கோமலம்" என்னும் ஞானத்தின் விஷயமாவது மிருது ஸ்பரிசமாம்.



### (4) கடிந ஸ்பரிசம்.

(4) கட்டை ஆயுதம் பாஷாணம் முதலிய திரவ்யங்களின் ஸம்யோக முண்டாக "இது கடிநம்" என்னும் ஞானத்தின் விஷயமாவது கடிந ஸ்பரிச குணமாம்.

(எங்ஙனம் விஷய லம்பட புருஷன் ருது பேதத்தினால் தனது அநுகூலமாக சீதோஷ்ண ஸ்பரிசத்தினை, அங்ஙனமே கோமல வஸ்திரத்தின் ஸ்பரிசத்தினை ஸ்திரீயின் மிருதுவாய அங்கத்தின் ஸ்பரிசத்தினை விரும்புகின்றனனோ, தனக்குப் பிரதிகூலமாய ஆயுதாதி கடிந ஸ்பரிசத்தினை விரும்புவ தில்லையோ, அங்ஙனமே ஜிஞ்ஞாஸுவும், தான் இச்சிக்கும் இஷ்டத்தின் பிராப்தியின் பொருட்டு வேதாந்தத்தினை உபதேசிக்கும் குருவின் பாதத்தினைத் தாங்குதலாதி ரூப ஸ்பரிசத்தினைச் செய்து தனது சித்தத்தின் சீதல மிருது ஸ்வபாவத்தினை ஸதா விரும்புக. எதனால் சுருதி, குரு பாத ஸ்பரிச ரூப குரு பக்தியினை ஜிஞ்ஞாஸுவின் இஷ்டப் பிராப்தியின் உத்தம ஸாதநமாகக் கூறுகின்றது.)

## 3—20. பக்தர்.

இப் பொழுது நான்கு விதப் பக்தரைக் கூறுவாம் :—புண்ய கர்மத்தின் தார தம்மியத்தினால் ஆர்த்தன் ஜிஞ்ஞாஸு அர்த்தார்த்தி ஞானி என்னும் பேதத்தினால் பகவத் பக்தர் நான்கு வகைய ராவர். அவர்கள் எல்லோரும் பூர்வ ஜந்மத்திற் செய்த புண்ணிய மிகுதியினை யுடையவர்களும் ஸபல ஜந்மத்தினை யுடையவர்களு மாவராயினும், அவர்களுள், மூவர் ஸகாம ராவர், ஒருவன் அகாம னும்.

### (1) ஆர்த்த பக்தன்.

(1) அம் மூவர்களுள், சத்ரு பயம், வியாதி துக்கம், ராஜ தண்டம் முதலிய ஆபத்தினால் கவரப்பட்டு நிவிர்த்தியினை இச்சிக்கும் ஓரே சித்தனாய்ப் பிரீதியோடு சச்சிதாநந்த ரூப விஷ்ணுவினைப் பஜனை செய்கின்றவன் ஆர்த்த பக்தன் எனப்படுவன். எங்ஙனம்? இந்திரனுக்குக் கோபம் உண்டாக்கிய விரஜ வாஸிகள் (முல்லை நில வாஸிகள் இடையர்) அல்லது, * எங்ஙனம் ஜராசந்தனால் சிறைச்சாலையி லிருந்த ராஜாக்க ளெல்லோரும், அல்லது எங்ஙனம் வஸ்திரத்தினை இழுக்கும்

* விருத்திராசுரன்.

அவசரத்தில் திரௌபதி, அல்லது, முதலை பிடிக்குங் காலத்தில் கஜேந்திரன் முதலிய பக்தர்கள் ஆர்த்த பக்ஷத்தில் கூறப்படுகின்றார்கள்.

(2) ஜிஞ்ஞாஸு பக்தன்.

(2) ஆத்ம ஞானத்தின் பொருட்டு முமுக்ஷுவாய்ச் சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவின் சரணத்தினை யடைந்து, அவரது வாயிலாய்ச் சச்சிதானந்த விஷ்ணுவின் ஸகுண நிர்க்குண ரூபத்தினைப் பஜநஞ் செய்பவன் ஜிஞ்ஞாஸு பக்த னும். எங்ஙனம்? ஜநகர், சுருததேவர், உத்தவர் முதலிய பக்தர்கள் ஜிஞ்ஞாஸு பக்ஷத்தி லிருப்பவர்க ளாவர்.

(3) அர்த்தார்த்தி பக்தன்.

(3) இக லோக பர லோக போக சாதநங்களில் இச்சை யுடையவனய் அதன் பிராப்தியின் பொருட்டுப் பிரீதியோடு விஷ்ணுவின் சிரவண கீர்த்தநாதி ரூப பக்தியின்கண் இருப்பவன் அர்த்தார்த்தி பக்த னும். எங்ஙனம்? ஸுக்ரீவன் விபீஷணன் த்ருவன் முதலிய பக்தர்கள் அர்த்தார்த்தி பக்ஷத்தி லிருப்பவர்க ளாவர்.

இம் மூவிதப் பக்தர்கள் ஸகாமர்களாய்த் தமது காமநாப் பிராப்தியின் பொருட்டுப் பகவானது சிநேகத்தோடு கூடி யிருப்பவர்களாயினும், ஜிஞ்ஞாஸுவானவன் ஞானோத்பத்தி வாயிலாய் நேராகவே பகவத் ரூப மோக்ஷத்தினை யடைகின்றான். ஆர்த்தன், அர்த்தார்த்தி என்னும் இருவரும் முமுக்ஷுத் தன்மையினை யடைந்து பரம்பரையாக மோக்ஷத்தினை யடைகின்றனர்.

(4) நிஷ்காம (ஞானி) பக்தன்.

(4) எவன் ஸாதந ஸமூஹத்தின் அநுஷ்டானத்தினால் பகவத் தத்வத்தினைப் பிரத்யகாத்ம ரூபமாக ஸாக்ஷாத்கரித் திருக்கின்றனனே, அஞ்ஞானத்தையும் அதன் காரியத்தினையும் மித்தையாக அறிந்து மாயையினைக் கடந்து ஸர்வ காமங்களையும்நிவிர்த்தித்திருக்கின்றனனே அவன் நான்காவது ஞானியாகிய நிஷ்காம பக்தனும். எங்ஙனம்? ஸநகாதிகள், நாரதர், பிரஹ்லாதன், பிருது (ராஜன்), சுகர் என்பவ ராதியர் நிஷ்காம ஞானி பக்தர்க ளாவர். அல்லது எங்ஙனம்? சுத்தப் பிரிய பக்தர்களாய கோபிகாதிகள், அல்லது அக்ரூரர், யுதிஷ்டிராதிகள் நிஷ்



காம பக்தர்க ளாவர். அந் நால்வருள் ஸர்வ காமங்களும் நிவிர்த்தியாய தத்வ ஞானி எல்லோரினும் உத்கிருஷ்டனும். எதனுல் பிரத்யக பிந்நப் பிரஹ்மத்தில் நித்திய ஸமாஹித சித்தனும் விக்ஷேபஞ் செய்யும் காமனை (இச்சை)யின் அபாவத்தினுல் அவனது நிரதிசயப் பிரீதியும் தனது ஸ்வரூப பரமாத்மாவினிடத்தே யாம், வேறு விஷயத்தினின்றும்; அது பிரதி க்ஷணம் பரிணமியாகலின். அதனுல் அவனும், பரமேஸ்வரனது நிரதிசயப் பிரேமையின் விஷய மாகின்றான்; பரஸ்பரம் ஆத்ம ஸ்வரூபமாய் இருத்தலின்.

(மூன்று ஸகாம பக்தரும் பரமேஸ்வரனுக்குப் பிரிய ராவர்; பூர்வ ஜந்மத்தில் சம்பாதித்த அநேக புண்யத்தினை அநுபவிப்பவரா யிருத்தலின். அங்ஙனமாயினும், அவர்கட்குத் தாம் இச்சிக்கும் பதார்த்தமும் பிரியமாம்; பரமேஸ்வரனும் பிரியமாம். ஞானிக்கோ, வேறு பிரிய வஸ்து வின்மையினுல், ஸ்வரூப பூத பரமாத்மாவே அவனது நிரதிசயப் பிரீதியின் விஷயமமாம். அதனுல், எவனுக்கு எங்ஙனம் பரமேஸ்வரனிடத்துப் பிரீதி யுண்டாகின்றதோ, அவனிடத்தில் பரமேஸ்வரனுக்கும் அங்ஙனமே பிரீதி யுண்டாகின்றது. இது வஸ்து ஸ்வபாவமாகவே ஸித்தமாம். இச் சம்பூர்ண அர்த்தத்தினையும் கீதையில், "ஹே அர்ஜுந! நான்கு விதமாக என்னைப் பஜிக்கின்றனர்." என்பதாதி சுலோகங்களால் பகவான் கூறியிருக்கின்றார். ஆதலால், மாயையினைத் தாண்ட இச்சிக்கும் புருஷனும் எவ்வாற்றானும் பகவத் பிரிய பூர்வகம் ஸதா அவரைச் சிந்திப்பவனாய் (இருக்குக); மாயையினைக் கிரஹிப்பவனாய், வியாஜ (பெயர்) மாத்திரமாகப் பகவத் பக்திபரன் ஆகாதிருக்குக.)

## 3 - 21. கிரியை.

இப் பொழுது நான்கு விதக் கிரியையினைக் கூறுவாம்:—உத்பத்தி, ஆப்தி, விகிருதி, ஸம்ஸ்கிருதி என்னும் பேதத்தினுல் கிரியை நான்கு வகைத்தாம்.

(1) உத்பத்திக் கிரியை.

(1) அவற்றுள், நிமித்த உபாதாந காரணங்களின் வியாபாரத்தின் பின் காரியத்தினை உண்டாக்குவது உத்பத்திக் கிரியையாம்.

### (2) ஆப்திக் கிரியை.

(2) பூர்வஞ் சித்தித்த வியவஹித வஸ்துவின் ஞாநத்தினால் அல்லது கிரியையினால் அடையப்படுவது ஆப்திக் கிரியையாம்.

### (3) விகிருதிக் கிரியை.

(3) முன் அவஸ்தையினைத் தியாகஞ் செய்து வேறு அவஸ்தையினை யடைவது விகிருதிக் கிரியையாம்.

### (4) ஸம்ஸ்கிருதிக் கிரியை.

(4) வேறு திரவ்யத்தின் ஸம்யோகத்தினால் வேறு திரவ்யத்தின் சுத்தி, அல்லது மல நிவாரணமாவது ஸம்ஸ்கிருதிக் கிரியையாம்.

இந் நான்கு பிரகாரமாய கிரியையின் கர்மத்தினைக் கூறுவாம் :— எவ் வஸ்து இல்லாதிருந்து உண்டாகின்றதோ, அல்லது ஸூக்ஷ்ம ரூபத்தா விருந்தும் ஸ்தூல ரூபமாக வெளிப்படுகின்றதோ, அல்லது பூர்வோத்தர காலத்தினால் பரிச்சிந்நமாகின்றதோ அஃது உத்பாத்தியமாம். எங்ஙனம்? கடாதிகள். அஃதே உத்பத்திக் கிரியையின் கர்மம் அல்லது ஆசிரயம் அல்லது பலம் எனப்படுகின்றது.

பூர்வஞ் சித்தித்த அடையப்படாத எப்பதார்த்தம் செல்லுதல் முதலிய கிரியையினால்,அல்லது ஞாநத்தினால் அடையப்படுகின்றதோ, அப்பதார்த்தம் ஆப்பிய மெனப்படும். எங்ஙனம்? வியவஹித கங்கை முதலியன. எங்ஙனம்? ஸமீபத்தி லிருக்கின்ற தேவதத்தாதிகள். அவைகளே ஆப்திக் கிரியையின் கர்மம் அல்லது பலம் ஆகின்றன.

எப் பதார்த்தம் பூர்வாவஸ்தையினை விட்டு வேறு அவஸ்தையினை அடைகின்றதோ, அப் பதார்த்தம் விகாரியமாம். எங்ஙனம்? பால்முதலியன,அல்லது பிரகிருதியின் நாச பூர்வகம் வேறு தர்மத்தின் உத்பத்தியினால் உண்டாகின்றது விகாரிய மெனப்படும். எங்ஙனம்? காஷ்டம் பஸ்ம ரூபத்தினால்; அல்லது ஸ்வர்ணம் குண்டல ரூபத்தினால்; அது விகிருதிக் கிரியையின் கர்ம மாகின்றது.

எவ் வஸ்துவினின்றும் வேறு திரவ்யத்தின் ஸம்யோகத்தினால் ஆகந்துக (இடையில் வந்த)மலத்தின் நிவிர்த்தி செய்யப்படுகின்றதோ, அல்லது எதில் ஆகந்துக குணத்தின் ஸ்தாபநம் செய்யப்படுகின்றதோ அது ஸம்ஸ்காரியாம். எங்ஙனம்? பொடிகளைத் தேய்த்தலினால் ஆதர்



சமு (கண்ணாடியு)ம் உவர்மண் சவுக்காரம் முதலியவைகளின் ஸம்யோகத்தினால் வஸ்திரமும். எங்ஙனம்? கங்கா ஸ்நாநம் ஆசமநாதிகளால் சரீரமும் மந்திரத்தினால் சுத்தஞ் செய்யப்பட்ட ஜலத்தினால் யஞ்ஞசாலையும். அதுவே ஸம்ஸ்கிருதக் கிரியையின் கர்மம் அல்லது பலமெனப்படுகின்றது.

(இங்ஙனம் நான்கு கிரியையினால் எவ்வெப் பல முண்டாகின்றதோ அவ்வப் பலமெல்லாம் அநாத்மாவாய் ஹேய (தள்ளத்தக்க) புத்தியின் விஷயமேயாம். முமுக்ஷுக்களால் கொள்ளத்தக்க புத்தியின் விஷயம் பிரஹ்மாத்ம ஸ்வரூபமாம். அது நான்கு விதக் கிரியையின் பலமன்று. எதனால் பூர்வ அபர காலத்தினால் பரிச்சிந்ந மன்று; அநாதி நித்தியமா யிருத்தலின். எதனால் அஜமாம்; காரண ஸாமக்கிரியையின் அபாவத்தினால், அதனால் உத்பத்திக் கிரியையின் பல மன்று. எதனால் ஸர்வ வஸ்துவின் ஸ்வரூபமா யிருத்தலின், சகலருக்கும் நித்தியப் பிராப்தமா யிருக்கின்றது, அதனால் ஆப்திக் கிரியையின் பல மன்று. பிராந்தி காலத்தில் ஜீவனினும் பிரஹ்மம் பிந்நம் போன்று விளங்குகின்றதாமாயினும் ஸர்வகதத் தன்மையினால் ஆகாசம் போன்று உண்மையாக எல்லாவற்றிற்கும் நித்தியப் பிராப்தமாம். எதனால் கூடஸ்த நிர்விகாரமா யிருக்கின்றது; வேறு அவஸ்தையின் அடைவின்மை ரூப பரிணாம விக்கிரியையினை அல்லது அவஸ்தையினுள் ஒன்று யிருந்தும் சலந மாத்திரக் கிரியையினை அடைவதில்லை; அச்சுதனா யிருத்தலின், அதனால் விகிருதிக் கிரியையின் பல மின்று. எதனால் பிரஹ்மம் நிரதிசயமா யிருக்கின்றது ; ஓர் அதிசயத்தினைத் தாரணஞ் செய்வதற்கும் ஆசிரய மன்று, அதனால் குணத்தை ஸ்தாபித்தல் ரூப ஸம்ஸ்கிருதியின் கர்மம் இன்று. எதனால் நித்திய சுத்த ஸ்வரூபமா யிருக்கின்றது, ஸ்வாபாவிக ஆகந்துக மல மின்றியதா யிருக்கின்றது; அஸங்க அத்விதீயமா யிருத்தலின், அதனால் மல நிவிர்த்தி ரூப ஸ்ம்ஸ்கிருதிக் கிரியையின் பல மன்று. உத்பத்தியாதி ஏகதரக்கிரியா பலத்தின் யோக்கியமாயின் பிரஹ்மத்திற்குக் கிரியையின் கர்மத்தன்மை யுண்டாம்.இதுநித்தியமாயிருத்தலின்,உத்பாத்திய மன்று ; அநித்தியமாகிய கடாதிகளே உத்பாத்தியமா யிருத்தலின். ஸர்வகதமா யிருத்தலின் பிராப்ய மன்று; பரிச்சிந்ந கங்கை முதலி

யன ஸ்வர்க்காதிகள் க்ஷீராதிகளே பிராப்யமாகலின். ஸ்தாணுவா யிருத்தலின், விகாரியமன்று; விக்கிரியை யுடைய கடாதிகளே விகாரிய மாகலின் கிரியையினை யுடைய தர்ப்பணாதிகளே ஸம்ஸ்காரியமாகலின். ஆதலால் ஸர்வக் கிரியையின் பல மின்றிய அக்கிரிய அத்விதீயப் பிரஹ்மப் பிரத்தியகாத்ம ஸ்வரூபம் முமுக்ஷுக்களால் சுரோத்ரியப் பிரஹ்மநிஷ்ட குருவாயிலாச் சர்வ யத்நத்தாலும் ஆசிரமத்திற் பிரவேசித்ததின் சபலத்தன்மையின் பொருட்டு அறிய யோக்கியமாம். அல்லாக்கால், கேவலம் உதர பூரணத்தின் (வயிற்றினை நிரப்புதலின்) பொருட்டு அல்லது விஷய போகத்தின் பொருட்டு (ஸந்நியாஸ) ஆசிரமத்தினைக் கிரகிக்கின்றவர்கள் ஜீவலோகத்தினின்றும் யதேஷ்டாசரணத்தினால் தாமும் கீழே விழுகின்றார்கள்; ஆசார்யர்களது ஆசிரமத்தினையும் கலங்க முடையதாகச் செய்கின்றார்கள்.)

### 3 - 22 பூஜா தாந பாத்திரம்.

பூஜா தாந பாத்திர பேதத்தினைக் கூறுவாம்:—பிரஹ்மவித், முமுக்ஷு, ஹரிதாஸன், ஸ்வதர்ம நிஷ்டன் என்னும் பேதத்தினால் பூஜா தாநத்தின் பாத்திரங்கள் நான்கு வகையாம்.

(1) அவற்றுள், ஸம்சய விபரீத பாவனைக ளின்றிப் பிரஹ்மாத்ம ஸாக்ஷாத்காரத்தினை யுடையவனாய், சர்வ காமங்களு மற்று ஜகத்தினை மித்தையாகப் பார்ப்பவன் பிரஹ்ம வித்து எனப்படுவன். எந்தச் சரீர நிர்வாகத்தின் பொருட்டு அபேக்ஷிக்கப்பட்ட விஹித விஷய போகத்தினைக் கிரஹிப்பதும், அதிகமாகக் கிரகிக்காமையுமாம்; அதுவும் சரீர ஸம்பந்தியாகிய ஜீவநாதி வியவஹாரத்தின் பொருட்டு; விஷய போகத்தின் பொருட் டல்ல; ஏனெனின், இகலோக பரலோக விஷய போகங்களை ஸ்வப்ந போகம் போன்று மித்தையாகப் பார்த்திருத்தலின். இவ்வித வித்துவான் பூஜா தாநத்தின் முக்கிய ஸத்பாத்திரமாவன். எதனால், அதி துர்லபமாம், மஹா பாக்யத்தினை யுடைய அதிகாரி அவ் வித்வானுக்கு விதி பூர்வகமாகப் பூஜாதிகள் செய்கின்றான், நியாயமாகச் சம்பாதித்த வஸ்திரம், அந்நம் முதலியவற்றினைக் கொடுக்கின்றான் அதனால் ஸர்வ தேவதைகளும் பூஜிக்கப்பட்டவர்க ளாகின்றனர்; அவன் ஸர்வ தேவதைகளின் ஆத்மாவா யிருத்தலின். அவ் வொருவன் போஜநம் செய்யின், எல்லோருக்கும்



போஜநம் சித்திக்கின்றது; அவர் ஸர்வாத்மாவா யிருத்தலின். "அந்த ஞாநியைத் தேவதைகள் பூஜிக்கின்றனர்." "அந்த ஞாநி அத் தேவதைகளின் ஆத்மாவா யிருக்கின்றான்." என்பன வாதிச் சுருதியினால். ஆதலால், ஸகாமனுக்கு அவனது பூஜை முதலியவைகளினால் இச்சிக்கப்பட்ட லோகாதிகளின் பிராப்தி யுண்டாகின்றது; நிஷ்காமனுக்குப் பரம்பரையாக அக்ஷய பலனாகிய மோக்ஷத்தின் பிராப்தி யுண்டாகின்றது. "அந்த ஞாநியின் தாயத்(சொத்)தினைப் புத்திரன் கொள்ளுகின்றான்; புண்யத்தினைப் பந்துக்கள் கொள்ளுகின்றனர்; பாபத்தினைத் துவேஷிகள் கொள்ளுகின்றனர்." "ஞாநிகட்கு ஒரு வஸ்து அர்ப்பிக்கப்படின், அது கோடி குணமுடையதாகின்றது." எப் பொழுது ஒரு பிரஹ்மவித் போஜநஞ் செய்கின்றான் அப்பொழுது ஸகல ஜகத்தும் திருப்தி யடைகின்றன. அதனால் உத்தம வஸ்துக் களைப் பிரஹ்ம வித்திற்குக் கொடுத்தல் யோக்கியமாம்; "கோடிப் பிராஹ்மணர்களின் போஜநத்தினால் மநுஷ்யன் எப் பலத்தினை யடைகின்றான், அப் பலத்தினை ஞாநிக்குப் போஜநஞ் செய்விப்பவன் அடைகின்றான்." என்பன வாதி சுருதி ஸ்மிருதிப் பிரமாணங்களால். ஐந் தாவது முதலிய பூமியிலுள்ள யோக ஞாநங்களை யுடைய ஜீவந்முக்த ஞாநியின் தரிசநமோ, விஷ்ணுவின் தரிசநம் போன்று அல்லது ஜடபரதர், தத்தாத்திரேயர், ரிஷபதேவர் முதலியோர்களின் தரிசநம் போன்று அதி துர்லபமாம். எவனது ஸ்வாபாவிக திருஷ்டியின் வீழ்ச்சியினால் அல்லது கிருபா கடாக்ஷத்தினால் ஆஸ்திக நாஸ்திகர்களாகிய ஸர்வ ஜநங்களும் ஸர்வ பாபத்தினின்றும் நிவிர்த்தி யடைகின்றனர், பக்தரும் ஜிஞ்ஞாஸுவும் இஷ்ட ஸித்தியினை யடைகின்றனரோ, அவனுக்குப் பூஜை செய்தல், தாநங் கொடுத் தல், (அவனோடு) ஸம்பாஷித்தல் முதலியவற்றால் பாப நிவிர்த்தியும் இஷ்ட சித்தியும் உண்டாகின்றன வென்பதில் கூற வேண்டுவ தென்னை? "எவனது புத்தி தத்வத்தில் அநுபவபரியந்த மிருக்கின்ற தோ அவனது திருஷ்டி கோசரமாய வெல்லாம் எல்லாப் பாபங்களி னின்றும் விடுபடுகின்றன." என்னும் பிரமாணத்தினால்.

### (2) முமுக்ஷு.

(2) எப் பொழுது இவ்வாறு நிஷ்காம புருஷனது துர்லபத் தன்மையினால் அவன் கிடைக்காவிடின், அப்பொழுது அவனினும் நியூநமாய முமுக்ஷு பூஜா தாநத்தின் பாத்திர மெனப்படுகின்றான்.

எப் புருஷன் விஷய போக இச்சையினை விட்டு விவேக வைராக்கியாதி ஸாதநங்களோடு கூடி, கேவல மோக்ஷ இச்சை மாத்திரத்தினை யுடையவனாய், சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவினை ஈஸ்வர புத்தியால் சேவித்து வேதாந்த சிரவணாதிகளின் பொருட்டு அவரது சரணத்தினை யடைகின்றான், அந்த முமுக்ஷுவும் ஸத்பாத்ர மெனப்படுவன். எப் புருஷன் அவனுக்கு அந்நாதிகளைக் கொடுத்து, சிரவணாதிகளில் சரீர யாத்திரையின் பொருட்டு விக்ஷேபத்தினை நிவாரணஞ் செய்கின்றான், அவனது பூஜை தாநம் முதலியவற்றால் புண்ய ரூப அபூர்வ முண்டாய் அந்தச் சேவை செய்பவன் சர்வ ஸம்பத்தினையும் அடைபவனாகின்றான்; அவனது சிரவணாதிகளா லுண்டாகிய மஹா புண்யத்தின் பாகத்தினைக் கொள்ளும் அதிகாரியாகின்றான்; "பரமேஸ்வரன் அநேக புருஷர்கட்குச் சிரவணத்தின் பொருட்டுக் கிடைப்ப தில்லை. அநேகமாகக் கேட்டும் எதனை யறிவ தில்லை.", "இவ்வாத்மாவினை ஆச்சரியம் போன்று சிலர் கேட்கின்றனர்." என்பன வாதிச் சுருதி ஸ்மிருதிகளின் பிரமாணத்தினால்.

(3) ஹரிதாசன்.

(3) அவனது ஸம்பந்தம் துர்லபமாகலின், எப்பொழுது அவனையும் அடைய வில்லை, அப்பொழுது அவனினும் நியூந பகவத் பக்தியோடு கூடிய ஆத்ம நிவேதியாகிய ஹரிதாஸனும் சற்பாத்திரமெனப்படுவன். விஷ்ணுவினிடத்தில் தன்னுடைய கர்மத்தினை ஸமர்ப்பணம் செய்பவன் ஹரி தாஸ னெனப்படுவன். எங்ஙனம் வேலைக்காரன் ராஜாவினிடத்தோ, அங்ஙனமே தனது தேஹத்தினையும் அதன் ஸம்பந்தியாய பதார்த்தங்களையும் ஸ்ரீ விஷ்ணுவினிடத்தில் ஸமர்ப்பணஞ் செய்பவன் ஆத்ம நிவேதி யெனப்படுவன். எங்ஙனம் விற்ற அஸ்வம் பசு முதலியவற்றின் பரணம் பாலநம் முதலியவைகளை விற்பவன் சிந்தை செய்வ தில்லையோ, அங்ஙனமே ஆத்மாவினை நிவேதிக்கும் கர்த்தாவாகிய ஹரிதாஸனும் தன் தேஹம் அதன் ஸம்பந்தியாகிய பதார்த்தங்களின் க்ஷேம யோகங்களின் சிந்தை யின்றியவனாய் ஸர்வ பலத்தினையும் கொடுக்கும் விஷ்ணுவினையே அதன் பாலகனாயும், போஷகனாயு மறிந்து, பஜனையில் ஸாவதானனாய் மூழ்கி யிருக்கின்றான். இவ் வித ஹரி பக்தனும் உத்தம பாத்திர னெனப்படுவன். அவனிடத்திலும் தாநாதிகள் செய்யின் அதிகத்தினும் அதிக பலமாகின்றது. எங்ஙனம்? நல்ல வயலில் விதைக்கப்பட்ட நெல் முதலிய பீஜம் அநந்த குணங்களாகின்றது.



(4) ஸ்வதர்ம நிஷ்டன்.

(4) தேவேச்சையினால் கலியின் பிரபாவத்தால் இவ்விதப் பாத்திரமும் கிடைக்காவிடின், ஸ்வதர்மத்திலுள்ள இக் காலப் பிராஹ்மணாதிகளும் ஸத்பாத்திர மெனப்படுவர். ஸம தமாதி யோடு வேதாத்தியயநாதி, ஸந்தியாவந்தநாதி, தன் தர்மத்தி லுள்ளவனாய் விருத்தியின் (குடும்ப ஸம்ரக்ஷணத்தின்) பொருட்டுக் கிடைத்தவற்றைச் சந்தோஷ முடையவனாய்ப் புஜிக்கக் கூடாததைப் புஜித்தலும், செல்லக்கூடாத பரஸ்திரீ முதலியவற்றில் செல்லாமலும் இருக்கும் பிராஹ்மணனும் தன் தர்மத்திலுள்ள ஸத்பாத்திர மெனப்படுவன். அவனிடத்திலும் தர்மமாகச் சம்பாதித்த தநம், அந்நாதிகளைக் கொடுத்தல் அநந்த பலத்திற்கு ஹேது வெனப்படுகின்றது. எப் பிராஹ்மணன், மநம் இந்திரியங்களின் நிரோத ரூப தபம், நல்ல ஞாநம் என்பவற்றை யடைந்து ஆத்ம ஸந்துஷ்ட பகவத் பிம்ப வேதார்த்தத்தினைப் பிரவிர்த்திப்பவனா யிருக்கின்றான் அவன் முற்புகன்ற பிரதம பூஜ்ய வித்வானிடத்தில் அடங்கி யிருக்கின்றானென்று அறிக; அவன் பிரஹ்மவித்தாக விருத்தலின். ஆதலால், வேறாகக் கூற வில்லை.

[இந் நான்கு வித பாத்திரங்களையும் சிரத்தையால் பூஜித்தல் கொடுத்தல் என்பவற்றை ஸாத்விக பூஜை என்றும், தாந மென்றும் கூறுவர். இவர்களினின்றும் அந்ய எப் புருஷன் உள்ளில் விஷய லம்படனாய் வெளியில் கபட வேஷதாரியாய்ப் பூஜிக்க யோக்ய மின்றியவனா யிருந்து தன்னிடத்தில் பூஜ்யத் தன்மையினைச் செய்கின்றானோ அவன் தர்மத்வஜி (டம்பி)யாய அஸத் பாத்திரம் எனப்படுவன். அவனிடத்தில் எப் பிராந்த புருஷன் பூஜ்ய, உத்கிருஷ்ட புத்தியினால் தநம் அந்நம் முதலியவற்றை ஸமர்ப்பணம் செய்கின்றான், அவனுக்குக் கொடுத்த தாந மெல்லாம் நிஷ்பலமாகின்றன; அவை அஸத்தாகிய உவர்ப் பூமியில் விதைத்த பீஜம்போன்று ஆகின்றன. அவனுக்குக் கொடுத்த தாநாதிகள், ராஜஸ தாமஸ தாநங்க ளெனப்படுகின்றன; தாந பாத்திரங்கள், ராஜஸ தாமஸ ப்ரகிருதி யுடையவர்களா யிருத்தலின். இவ்வாறு அவர்களது தாநம் கேவலம் நிஷ்பலமாவ தின்று;

பின்னேயோ, அனர்த்தத்தின் ஹேதுவும் ஆகின்றது. "எவன் ஸமம் ஸம மின்றிய பாத்திரங்களின் பொருட்டு, விஷம ஸம பூஜை செய்கின்றான் அவனது அந்நம் புஜிக்கத்தக்க தன்று; அது தர்மத்தினுலும், தநத்தினுலும் நாசத்தினை யடைகின்றது.", "பாத்திரத்திற் கொடுக்கப்பட்ட தாநம் கொடுத்தவனே ஸ்வர்க்கத்திற்குக் கொண்டு போகின்றது.", "அபாத்திரத்தில் கொடுக்கப்பட்ட தாநம் நரகத்திற் கொண்டு போகின்றது.", "அங்ஙனமே வாங்குகின்றவன் குணவானுயின் அவனே ஸ்வர்க்கத்திற்கும் நற்குண மின்றியவனே நரகத்திற்கும் கொண்டு போகின்றது.", "எத் தேசத்தில் பூஜிக்கத்தகாத புருஷன் பிராந்தியினுல் பூஜிக்கப்படுகின்றான், அத் தேசத்தில் துர்ப்பிக்ஷம் மரணம் பயம் என்னும் மூன்று ஆபத்துக்களும் உண்டாகின்றன" என்பன வாதிப் பிரமாணங்களினுல்; ஆதலால், அதிகாரி மோக்ஷத்தின் பொருட்டு ஸத் பலத்தினை விழையின், முற் புகன்ற ஸத் பாத்ரங்கட்கு ஸேவை, தாநம் முதலியவற்றினையே ஸத் சிரத்தையோடு செய்க. அஸத் பாத்திரங்களினிடத்து அநந்த சிரமத்தினுல் சம்பாதித்த தனது தநம் முதலியவற்றினை வியர்த்தமாகச் செலவு செய்யற்க.]

## 3 - 23 - தர்மாதி.

வேறு பிரகாரமாகத் தர்மாதி நான்கு பதார்த்தங்களைக் கூறுவாம்:— தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்னும் பேதத்தினுல் தர்மாதி நான்கு பதார்த்தங்களாம்.

### (1) தர்மம்.

(1) தர்மாதி மூன்று வர்க்கங்களில் பஹிர்முக ஸகாமனுக்கு அதிகார மிருக்கின்றது. நான்காவது மோக்ஷத்தில் நிஷ்காமனுக்கு அதிகார மிருக்கின்றது. அனர்த்த ஸம்பந்த மின்றிச் சோதநா (வேத) வாக்கியத்தினுல் விதிக்கப்பட்ட ஸகாம கர்மத்தின் அநுஷ்டாநத்தினுல் உத்பத்தியாகும் அர்த்த ஸ்வரூபமாகிய புண்ய ரூப அபூர்வம் தர்ம மெனப்படுகின்றது.

### (2) அர்த்தம்.

(2) அர்த்த ரூபமின்றிய மின்னல், விருக்ஷத்தின் நீழல் போன்று சலநமாகிய தநாதி சம்பத்தி, பிராந்த புருஷனுல் அர்த்த இஷ்ட புத்திகளால் ஸதா விரும்பப்படுவது அர்த்த மெனப்படுகின்றது.



### (3) காமம்.

(3) இந்திரியங்களின் போக அநுகூலங்களாகிய அந்ந பாநாதி இஷ்ட விஷய போகம் காம மெனப்படுகின்றது.

### (4) மோக்ஷம்.

(4) மீண்டும் திரும்புத லின்றிய பிரஹ்மத்தின் ஸ்வரூபம் மோக்ஷ மெனப்படுகின்றது.

(விஷய போக இச்சையினை யுடைய ஸகாம புருஷன் இச் சந்மம் அல்லது ஜந்மாந்தரத்தில் விதி பூர்வகமான காம்ய கர்மத்தின் அநுஷ்டாநத்தினுல் தர்மரூப அபூர்வத்தினை உத்பத்தி செய்கின்றான். அவனே வர்த்தமாந ஜந்மத்தில் அல்லது மேல் உண்டாம் ஜந்மத்தில் தந புத்திராதி ஸம்பத்து ரூப அர்த்தத்தினை யடைந்து இந்திரியங்களின் பிரீதியின்பொருட்டு யதேச்சையாக இஷ்ட விஷயங்களைப் போகித்து, பிராரப்த கர்ம க்ஷயத்தின் பின் நாசத்தினை யடைகின்றான்; மீண்டும் ஜந்மாந்தரத்தில் பூர்வம் அநுபவித்த விஷய ஸுகத்தின் வாஸனையினுல் கவரப்பட்டவனுய்ப் பூர்வ ஸஜாதீய ஸுகப் பிராப்தியின் பொருட்டு மீண்டும் கர்மத்தினைச் செய்கின்றான்; மீண்டும் தநாதி ஸம்பத்தினை யடைந்து விஷயத்தினைப் போகிக்கின்றான்; தநாதி ஸம்பத் தின்றி யதேச்சா விஷய போகத்தின் ஸம்பவ மின்மையின். இவ்வாறு அநாதி ஸம்ஸாரத்தில் கேவல விஷய சுக இச்சையினுல் கடி(வடீ)யந்திரம் போன்று ஸம்ஸார அத்வாவில் (மார்க்கத்தில்) மிகவும் சுழல்கின்றான்; ஒரு காலத்தும் உபராமத்தினை யடைவதில்லை; விஸ்ராந்தியாய சுகத்தை அடைவ தில்லை. அதனுல், மூவர்க்க (தர்ம அர்த்த காம) ஸேவையினை மீண்டு மீண்டும் ஸம்ஸாரத்தின் ஹேதுவென அறிந்து மூவர்க்க ஸேவையினை விட்டு நான்காவது பதார்த்தமாகிய நித்திய ஸுக ஸ்வரூப மோக்ஷத்தின் பிராப்தியின் பொருட்டே யத்நஞ் செய்தல் யோக்கியமாம். ஒருகாலத்தும் துக்க ஸ்வரூப நஸ்வரமாகிய விஷய லம்படனுக்கு இஷ்ட விஷயமாகிய சுகத்தில் இஷ்ட புத்தி செய்தல் உசித மன்றும். எதனுல் இம் மகா பாக்கியன் பஜந சுகம், பிரஹ்ம சுகங்களை யடைகின்றான். அவனே விஷயசுகத்தினை காக விஷ்டா (காக்கை மலம்) போன்று அறிந்து பகவத் விமுக விஷய லம்படனுகிய தநாட்டிய புருஷனை மலம், கிருமி

போன்று அதி துச்சமாக உணர்ந்து அவனினின்றும் மிக உபராமனுய், உதாஸீநனுய் இருக்கிறுன்; * "பிருதிவி இருக்கின் மெத்தை

* ஆரியப்பப்புலவர் பாகவதம் 2-வது ஸ்கந்தம் 1-வது அத்தியாயம் 17-வது 19-வது பாடல் வருமாறு:—

" விடங்கலு ழெயிற்றுப் பேழ்வாய் வெயின்மணிச் சூட்டு நாகப்
படங்கெழு பரவை ஞாலப் பாயலொன் றுண்டு செய்ய
குடங்கைமெல் லணையுண் டெங்குங் குலவுவற் கலைக ளுண்டா
லடங்கலா வார்வ வேர்மற் றறிந்தவர்க் கிலதெ னம்மா."

" திருநதித் துறைக ளெல்லாந் தீப்புனல் வறந்த வேயோ
விரிகட லமுத மூறும் விழுச்சுவைக் கனிகள் வாய்ந்த
மரமெலா மாண்ட வேயோ மாநிதிச் செருக்கி னுற்கண்
குருடுபட் டவர்பா லென்னே குறைபிறந் துழல்கின் றூரே."

பாகவதம் 2 வது ஸ்கந்தம் 2-வது அத்தியாயம் 4, 5-வது சுலோகம்.

ஸத்யாம் க்ஷிதௌ கிம் கஶிபோ: ப்ரயாஸை
ர்பாஹௌ ஸ்வஸித்தே ஹ்யுபபர்ஹணை: கிம் ।
ஸத்யஞ்ஜலௌ கிம் புருதாந்நபாத்ர்யா
திக்வல்கலாதௌ ஸதி கிம் துகூலை: ॥
சீராணி கிம் பதி ந ஸந்தி திஶந்தி பிக்ஷாம் நைவாங்
க்ரிபா: பரப்ருத: ஸரிதோ ப்யஶுஷ்யந் ।
ருத்தா குஹா: கிமஜிதோ வதி நோபஸந்நாந்
கஸ்மாத் பஜந்தி கவயோ தநதுர்மதாந்தாந் ॥

"பூமி இருக்கும்போது படுக்கையின் பிரயோஜநத்தை என் அடைய வேண்டும்? இயற்கையாகவே உண்டான கைக ளிருக்கும்போது தலையணைகளால் என்ன பிரயோஜநம்? அஞ்சலி இருக்கும்போது புசிப்பதற்குரிய பாத்திரங்களால் என்ன பயன்? திசைகளும் மரவுரிகளும் இருக்க வஸ்திரத்தால் என்ன பிரயோசநம்? மார்க்கத்தில் கந்தல் வஸ்திரங்க ளில்லையா? பிறரைப் போஷிக்கும் விருக்ஷம் பிக்ஷை கொடுக்க வில்லையா? நதிகள் வற்றினவா? குகைகள் நாசமடைந் திருக்கின்றனவா? சரண மென் றடைந்தவர்களை நாராயண மூர்த்தி ரக்ஷிக்கவா இல்லை?" (இவைக ளிருக்க) பண்டிதர்கள் பணக் கொழுப்பால் குருடர்களாகிய பிரபுக்களை எதற்காக ஆசிரயிக்க வேண்டும்.



யின் பிரயாஸத்தினுல் என் பயன்? தனது கைகள் இருக்குங்கால் போஜந பாத்திரத்தினுல் என் பயன்? திக்கு, மரவுரி முதலியன இருக்குங்கால் வஸ்திரங்களால் என் பயன்? மார்க்கத்தில் கந்தல் வஸ்திரங்க ளில்லையா? பிறரைப் போஷிக்கும் விருக்ஷங்கள் பிக்ஷை கொடுக்க வில்லையா? நதிகள் காய்ந்து விட்டனவா? பர்வதங்களின் குகை தடுக்கின்றதா? விஷ்ணு சரணுகத புருஷனைப் பாலிப்ப தில்லையா? அதனுல் தநத்தா லுண்டான துர் மதத்தினுல் குருடான தநாட்டியர்களை ஏன் கவிகள் ஸேவிக்கின்றனர்." என்பதாதிப் பிரமாணத்தினுல்.)

### 3 - 24 - மோக்ஷத் துவார பாலகர்.

மோக்ஷத் துவார பாலகர் நால்வரைக் கூறுவாம்:—சமம், சந்தோஷம், விசாரம், ஸத்ஸமாகமம் (ஸத்துக்கள் வருதல்) என்னும் பேதத்தினுல் மோக்ஷத்தின் துவார பாலகர் நான்கு வகைய ராவர்.

அவித்தியா நிவிர்த்தி ரூபம் அல்லது பிரஹ்ம பாவத்தினை யடைதல் ரூபம் மோக்ஷமாம். அதன் துவார மென்பது அதனை விஷயமாக வுடைய ஞானமாம். அதன் பாலகம் என்பது தன் அநுஷ்டாநவாயிலாய் அதற்கு ஹேதுவாம். அது நான்கு வகைத்தாம்.

#### (1) சமம்.

(1) அவற்றுள், ராஜஸீ, தாமஸீ பரிணும ரூப விஷயாகார பஹிர்முக விர்த்திகளைச் சாஸ்திரிய ஸாத்விகப் பிரயத்நத்தால் நிரோதித்தல் சமம் எனப்படும். ஈண்டுச் சம பதம் தன்னேடு உடன் நிகழும் தமம் முதலியவற்றிற்கும் உபலக்ஷணமாம். அல்லது இஷ்டாநிஷ்டம், ஸுக துக்கம் முதலிய த்வந்த்வ தர்மத்தின் பிராப்தியாயின் சித்தத்தில் ராக த்வேஷாதிக ளின்றி யிருத்தல் சமம் எனப்படும். அல்லது பிராரப்தத்தால் கிடைத்த பூஜை பராபவம் (அவமாநம்) முதலிய அவஸ்தையில் அநுக்ரஹ, நிக்ரஹ புத்திகளின் அபாவம் சமம் எனப்படும். அல்லது ஜாதி குணக்கிரியைகளினுல் விஷமமாய பிராஹ்மணன், பசு, யானை, நாய், சண்டாளன் என்னும் வியக்திகளில் சச்சிதாநந்த ரூபமாகப் பிரஹ்மம் சமமா யிருக்கின்றது எனச் சுருதி வாக்கியத்தினுலும் குருமுகத்தினுலும் கேட்கப்பட்டதன்கண் நிலைத்திருத்தல் சமம் எனப்படும். ஈண்டு நாக்கினு லுச்சரிக்கும் ஶகாரமும், பல்லினு லுச்சரிக்கும் ஸகாரமும் ஆகிய இரு வகை ஸகாரங்கள் கூறப்பட்டன.

(2) சந்தோஷம்.

(2) அநர்த்த காரணமாகிய ஸ்திரீ தநாதி விஷயங்களில் துக்க புத்தியால் வெறுப்பு ஞானம் ஸந்தோஷமாம். அல்லது பிராரப்தத்தால் வரப்பட்ட விஹித அந்நாதிகளில் அதிக ஆசை யின்மை ரூப திருப்தி சந்தோஷமாம். அல்லது பகவத் ஆராதநத்தினால் உண்டாய பஜநாநந்தத்தினால் விஷய சுகத்தில் ஆசையின் அபாவம் சந்தோஷமாம்.

(3) விசாரம்.

(3) பிரமாண யுக்திகளால் வஸ்துவின் பரீக்ஷை விசாரமாம். எங்ஙனம்? "ஈண்டு நாநா என்பது அற்பமு மில்லை.", "இவ்வாத்மாவினும் அந்ய மெல்லாம் நச்வரமாம்." என்பன வாதிச் சுருதிகளினும், செய்யப்பட்டவைக ளெல்லாம் அநித்தியமாம்; கடாதி போன்று என்பதாதி யுக்திகளாலும் உள்ளிலும் வெளியிலும் பேதமாயும், பிந்நமாயும் தோற்றுகின்ற அநாத்ம பதார்த்தங்களை மித்தியா ரூபமாகப் பரீக்ஷித்தல் அநாத்ம விசாரமாம். "தத்துவமஸி" என்பதாதி சுருதியால் த்வம் பதார்த்த சேதநத்திற்குத் தத்பதார்த்த சேதநத்தினோடு அத்தியந்த அபேதமாகப் பரீக்ஷித்தல் (அதாவது) எப்பொழுது பிரஹ்மம் ஆத்மாவின் பிந்நமாயின் அப்பொழுது கடாதி அநாத்மா போன்று ஜடமாம். எப்பொழுது ஆத்மா உண்மையாகப் பிரஹ்மத்தினும் பிந்நமாகும் அப்பொழுது இவ் வாக்கியத்திற் புகன்ற தத் த்வம் பதங்களின் ஸாமாநாதி கரண்யம் பாதிக்கப்படும் என்பதாதி யுக்திகளால் ஆத்மா பிரஹ்மங்களின் பரீக்ஷை ஆத்ம விசாரமாம்.

(4) ஸத்சமாகமம்.

(4) ஸத்பத வாச்சிய அபாத்தியப் பிரஹ்மம் பிரத்தியகாத்ம ரூபத் தன்மையினால் கையின்கணுள்ள நெல்லிக் கனி போன்று, எவனுக்குத் தோற்றுகின்றது, ஸத்திய லோகாதி பரியந்தம் ஸம்பூர்ண லோகம் கர்மத்தின் பலத்தன்மையினால் மித்தையாம், துச்ச புத்தியின் விஷயமாம் என்று எவனுக்குத் தோற்றுகின்றதோ அவன் ஸத் புருஷன் எனப்படுவன். அவன் மீண்டும் ஸம தரிசியாய்ச் சீதலம், வேக மின்மை, நிஷ்காமம், வைர மின்மை, சாந்தி, உதாரம் முதலிய



அநந்த கல்யாண குணங்களைப் பஜநஞ் செய்கின்றான். வேஷத்தின் பிரபாவத்தினால் பரீக்ஷிக்கப்படாது ராஜஸீ தாமஸீ புருஷர்களால் பூஜிக்கப்பட்டுத் தநாதி ஸம்பத்திகளைச் சம்பாதிப்பவன் ஸத் புருஷனன்றாம். அவர்களது ஸத் சிரத்தை, பிரீதிகளோடு ஸம்ஸர்க்கம், ஸத் ஸமாகம ரூப நான்காவது மோக்ஷத் துவார பாலகமாம். அது முற் கூறிய மூன்று துவாரபாலகர்களின் பிராப்தியின் உத்தம சாதநமாம்.

(எதனால் சிரத்தா பிரீதி பூர்வகம் தமது ஸந்நிதியில் அடைந்தவனுக்கு அவர்களே கேவலம் கிருபையினால் சமம் முதலியவைகள் பிரஹ்மாத்ம தத்துவம் என்பவற்றினைப் போதிக்கின்றனர்; முன் அறிவித்து மறந்த தத்துவத்தினை மீண்டு மீண்டும் ஸ்மரணம் செய்விக்கின்றனர். அதனால், மோக்ஷ ஸாதநப் பிராப்தியினை இச்சிப்பவன் இச்சிக்கப்பட்ட பலப் பிராப்தியின் பொருட்டுக் கபடம், வணக்க மின்மை யின்றி, தாஸனாய் ஸத்துக்களின் ஸங்கத்தினைச் செய்க. "ஸத் ஸங்கதியானது புருஷனுக்கு எதனைச் செய்யாது." "ஸத்துக்களை ஸதா அடைக; அவர்கள் உபதேசஞ் செய்யாதிருப்பார்களாயினும் ஸ்வாபாவிக அவர்களது கதையே உபதேச மாகின்றது.", "தீர்த்தம் ஜலமய மன்று. தேவன் மரண ஸ்வபாவ கன்மயனல்லன். அவை வெகு காலத்தினால் பவித்திரஞ் செய்கின்றன. ஸாதுக்கள் தரிசநத்தினனேயே (பவித்திரஞ் செய்கின்றனர்)", "ஸத் ஸங்கத்தின் அரை க்ஷணத்தோடு ஸ்வர்க்கமும் மோக்ஷமும் (சமம்) இல்லை (என்று) நான் நிறுக்கின்றேன்.", "மஹாத்மாக்களின் ஸங்கம் மோக்ஷத்வார மெனப்படுகின்றது" என்பனவாதிப் பிரமாணங்களினால்).

## 4—25. ஐவகைப் பதார்த்தங்கள்.

### 4 - 1. கோசம்.

இப்பொழுது ஐந்து எண்ணிக்கை விசிஷ்டத்தினைக் கூறுவாம்:— அந்நமயாதிப் பேதத்தினால் கோசம் ஐ வகைத்தாம்.

(1) அந்நமய கோசம்.

(1) ஸ்தூல மஹா பூதத்தின் பரிணாமமாய், அந்நத்தின் விகாரமாய், ஸுக துக்க போகத்திற் கிடமாய், ஸுக்ல சோணித ஸம்

யோக ஜந்யமாய், ஆத்மாவில் ஜாதி வர்ணம் ஆசிரமம் முதலியவற்றின் அத்தியாசத்தின் உபாதி ரூப க்ஷணபங்குரமாய் உள்ள ஸ்தூல சரீரம் அந்நமய கோசமாம். சரீரத்தினுள்ளிருக்கும் பிரத்தியகாத்மாவை வாளின் உறை போன்று மறைத்தலால் கோசமாம்.

(2) பிராணமய கோசம்.

(2) ரஜோ குணப் பிரதாந ஸூக்ஷ்ம பஞ்ச பூதத்தின் பரிணாமமாய், வாயுவின் விகாரமாய், இந்திரியாதிகளின் சேஷ்டைக்குக் காரணமாய், பசி தாகத்தினை யுடையதாய், ஐந்து கர்மேந்திரியங்களோடு கூடி யிருக்கும் பிராணன் பிராணமய கோசமாம். அது பூர்வம் போன்று ஆத்மாவை மறைத்தலால் கோசமாம்.

(3) மனோமய கோசம்.

(3) ஸத்துவ குணத்தோடு கூடிய ஸூக்ஷ்ம பூதத்தின் பரிணாமமாய், ஸங்கல்ப விகல்ப ரூபமாய், ஐந்து ஞானேந்திரியங்களோடு கூடியிருக்கும் புத்தி விருத்தி ரூப மனன ஸ்வரூப மனம் மனோமய கோசமாம். அதுவும் முன் போன்று ஆத்மாவை மறைத்தலால் கோசமாம்.

(4) விஞ்ஞானமய கோசம்.

(4) ஸத்துவத்தோடு கூடிய ஸூக்ஷ்ம பூதங்களின் பரிணாமமாய் ஞானேந்திரியங்களோடு கூடி யிருக்கும் நிச்சய ரூப புத்தி விஞ்ஞானமய கோசமாம். அஃது ஆத்மாவில் கர்த்ருத்வம், போக்த்ருத்வம் முதலிய தர்மாத்தியாஸத்தின் உபாதியாம். இம்மூன்று கோசத்தினைப் பதினேழு தத்துவ ரூப லிங்க சரீர மென்றுங் கூறுவர்.

(5) ஆநந்தமய கோசம்.

(5) இத் தூல ஸூக்ஷ்ம சரீரங்களின் அல்லது நான்கு கோசங்களின் உத்பத்தி லயத்தின் ஸ்தானமாகிய அஞ்ஞான அவஸ்தா ரூபமாகிய நித்திரை அல்லது வியஷ்டி அஞ்ஞானம் ஆநந்தமய கோசமாம். ஸ்பஷ்டத் திரிபுடி யின்றி, நிர்விஷய ஸ்வரூப ஸம்பந்தியாகிய சுகத்தின் அநேகத்தன்மையினால் ஆநந்தமயமும் ஆத்மாவை மறைத்தலால் கோசமுமாம். இதனையே காரண சரீர மென்றும், வியஷ்டி அஞ்ஞான மென்றுங் கூறுவர். பிராக்ஞன் எதன் அபிமாநியாம். நையாயிகரும் பிரபாகரரும் எதனை ஞான குணத்தினையுடைய ஜட ஆத்மா



வாக அங்கீகரிக்கின்றனர்? பாட்டர் எதனை ஜடாஜட ரூபமாக அங்கீகரிக்கின்றனர்? மாத்தியமிகர் எதனைச் சூந்யமாக அங்கீகரிக்கின்றனர்? எதனால் சித்தாந்தத்திலும் வித்வானது திருஷ்டியினால் ஆபாஸ ஸஹித அஞ்ஞானத்தினைத் துச்ச மென்கின்றனர்?

(இவ் வைந்து கோச ரூப மூன்று சரீர அநாத்ம ஸ்வரூபத்தினை அவிவேக தசையில் ஆத்மா தன் அத்தியாச வாயிலாய்த் தனது ஸ்வரூபமாக அங்கீகரித்து "நான் மநுஷ்யன், கர்த்தா, போக்தா, அஞ்ஞன்" என்பன வாதி அநேக வியவகாரங்களை யடைவதாகின்றது. அவ் வத்தியாசத்தினாலேயே ஜந்ம ஜந்மாந்தரங்களை யடைந்து ஜீவன் ஒரு காலத்தும் விச்ராந்தி ஸுகத்தினை யடைவ தில்லை. அதனால் ஜிஞ்ஞாஸுக்கள் இப் பஞ்சகோசத்தின் வெதிரிக்தமாய் இவற்றிற்கு ஸாக்ஷியாய் உள்ள தமது ஆத்மாவைச் சாஸ்திரம் புகன்ற ரீதியினால் ஸாக்ஷி - ஸாக்ஷியம், த்ருஷ்ட்ரு-திருசியம், வியபிசாரி அவ்யபிசாரி முதலிய அந்வய வ்யதிரேக யுக்திகளால் அவற்றினும் ஸதா பிந்நமாய், அஸங்கமாய் அறிக. "தேஹத்தின் அத்தியாஸத்தினால் ஸர்வ தோஷமு முண்டாகின்றன; தேஹத்தினாலேயே ஸம்ஸார முண்டாகின்றது. தேஹம் ஸத்தாயின் பாப புண்ய ஜந்மாதிகள் ஸர்வமும் ஸத்தாகின்றன", "இப் புருஷன் அஸங்கனும்" என்பன வாதிப் பிரமாணத்தினால்).

## 4—2. ஞானேந்திரியங்கள்.

ஐந்து ஞானேந்திரியங்களைக் கூறுவாம்:—சுரோத்திரம் த்வக் முதலியவற்றின் பேதத்தினால் ஞானேந்திரியம் ஐவகைத்தாம்.

(1) சுரோத்திரேந்திரியம்.

(1) ஸூக்ஷ்ம ஆகாசத்தோடு கூடிய ஸத்துவ குணத்தின் காரியமாய்ச் சத்த ஞானத்தின் அஸாதாரண காரணமாயது சுரோத்திரேந்திரியமாம்.

(2) துவக்கிந்திரியம்.

(2) வாயுவின் ஸம்பந்த ஸத்துவ குணத்தின் காரியமாய் ஸ்பரிச ஞானத்தின் அஸாதாரண காரணமாயது த்வக் இந்திரியமாம்.

(3) சக்ஷு இந்திரியம்.

(3) தேஜஸ் ஸம்பந்த ஸத்துவ குணத்தின் காரியமாய் ரூப ஞானத்தின் காரணமாயது சக்ஷு இந்திரியமாம்.

(4) ஜிஹ்வேந்திரியம்.

(4) ஜல ஸம்பந்த ஸத்துவ குணத்தின் காரியமாய் ரஸ ஞானத்தின் காரணமாயது ஜிஹ்வேந்திரியமாம்.

(5) கிராணேந்திரியம்.

(5) பிருதிவி ஸம்பந்த ஸத்துவ குணத்தின் காரியமாய்க் கந்த ஞானத்தின் காரணமாயது கிராணேந்திரியமாம்.

**4—3. சப்தாதி.**

ஞானேந்திரியத்தின் விஷயத்தினைக் கூறுவாம்:—சப்தாதியின் பேதத்தினால் விஷயம் ஐ வகைத்தாம்.

(1) சப்தம்.

(1) ஆகாசத்தின் விசேஷ குணம் சப்தமாம். அது சுரோத்திரத்தினால் கிரஹிக்கப்படுவதாம்.

(2) ஸ்பரிசம்.

(2) வாயுவின் விசேஷ குணம் ஸ்பரிசமாம். அது த்வக்கிந்திரியத்தினால் கிரஹிக்கப்படுவதாம்.

(3) ரூபம்.

(3) அக்நியின் விசேஷ குணம் ரூபமாம். அது சக்ஷுவினால் கிரஹிக்கப்படுவதாம்.

(4) இரசம்.

(4) ஜலத்தின் விசேஷ குணம் இரஸமாம். அது ரஸநத்தினால் கிரஹிக்கப்படுவதாம்.

(5) கந்தம்.

(5) பிருதிவியின் விசேஷ குணம் கந்தமாம். அது கிராணத்தினால் கிரஹிக்கப்படுவதாம்.

(கூறிய சப்தாதி ஐந்து விஷயங்களில் சப்தம் அநுகூல பிரதிகூல பேதத்தினால் இரு வகைத்தாம். ஸ்துதி முதலியவற்றினைப் போதிக்கும் சப்தம் அநுகூலமாம்; நிந்தை முதலியவற்றை அறிவிக்கும் சப்தம் பிரதிகூலமாம். ஸ்பரிசம், சீதம் உஷ்ணம் கோமலம் கடிநம் என்னும் பேதத்தினால் நான்கு வகைத்தாம். ரூபம், சுக்லம்



முதலிய பேதத்தினால் எழு வகைத்தாம். ரஸம், மதுரம் புளிப்பு முதலிய பேதத்தினால் அறு வகைத்தாம். கந்தம், ஸுகந்தம் துர்க்கந்தம் என்னும் பேதத்தினால் இரு வகைத்தாம். இவ்வைந்து பிரகாரமாய விஷயம் பிரியாப்பிரியத் தன்மையினால் ராகத்வேஷங்களையுண்டாக்குதல் வாயிலாய் இந்திரிய ஜய மின்றிய புருஷனை அநந்த துர்த் தசையில் விழச் செய்கின்றது; எங்ஙனம்? ஒவ்வொரு விஷயம் மான் முதலியவைகளை (என உணர்க). "குரங்கம் (மான்), மாதங்கம் (யானை), பதங்கம் (விட்டில்), பிருங்கம் (வண்டு), மீநம் என்னும் ஐந்தும் ஒவ்வோர் இந்திரியத்தின் விஷயங்களைச் சேவித்து நாச மடைகின்றனவா மாயின், பஞ்சேந்திரியங்களால் பஞ்ச விஷயங்களைச் சேவிக்கும் ஒரு பிரமாதியாய ஜீவந் ஏன் நாசத்தை யடையான்?" என்னும் பிரமாணத்தினால்.)

**4—4. கர்மேந்திரியம்.**

ஐந்து கர்மேந்திரியங்களைக் கூறுவாம்:—வாக்காதியின் பேதத்தால் கர்மேந்திரியம் ஐ வகைத்தாம்.

(1) வாக்.

(1) ரஜோகுண விசிஷ்ட ஆகாசத்தின் காரியமாய் வசந வியாபாரத்தின் ஹேதுவாயது வாக்கிந்திரியமாம்.

(2) பாணி.

(2) இரஜோ குண விசிஷ்ட வாயுவின் காரியமாய், கொள்ளுதல் விடுதலாய வியாபாரத்தினை யுடையது பாணீந்திரியமாம்.

(3) பாதம்.

(3) இரஜோகுண விசிஷ்ட அக்நியின் காரியமாய், போதல் வருதல் ரூப வியாபாரத்தின் ஹேதுவாயது பாதேந்திரியமாம்.

(4) பாயுரு.

(4) இரஜோகுண விசிஷ்ட பிருதிவியின் காரியமாய் மல விஸர்ஜந வியாபாரத்தினை யுடையது பாயு ரிந்திரியமாம்.

(5) உபஸ்தம்.

(5) இரஜோகுண விசிஷ்ட ஜலத்தின் காரியமாய் ஸ்திரீயின் ஸம்பந்தத்தினால் ஜனித்த ஆநந்த ரூப வியாபாரத்தின் ஹேதுவாயது உபஸ்தேந்திரியமாம்.

## 4-5. வசநாதி.

கர்மேந்திரியங்களின் விஷயத்தினைக் கூறுவாம் :—வசநாதியின் பேதத்தினால் கர்மேந்திரிய வியாபாரம் ஐ வகைத்தாம்.

### (1) வசநக் கிரியை.

(1) ஸம்ஸ்கிருத பாஷை முதலிய அநேக வாணியின் உச்சாரணம் வசநக் கிரியையாம். அது வாக்கிந்திரியத்தின் அஸாதாரண தர்மமாம்.

### (2) இடதேவேற்றற் கிரியை.

(2) வியாவஹாரிக வஸ்துவின் வியவஹார காலத்தில் தன் பிரயோஜநத்தின் பொருட்டுக் கொள்ளுதல், தள்ளுதல், மேற்போதல், கீழ் விழுதல் ரூபக் கிரியை, ஹாந ஆதாநம் (தள்ளல் கொள்ளல்) ஆம். அது பாணீந்திரியத்தின் தர்மமாம்.

### (3) கமநக் கிரியை.

(3) தேசாந்தரஞ் செல்லல், மீண்டும் தன் தேசத்திற்கு வருதல், ஓடுதல், பாதபஞ்சநா (காலால் வருதலா)தி ரூபக் கிரியை கமநமாம் (செல்லலாம்). அது பாதங்களின் விசேஷ தர்மமாம்.

### (4) விஸர்க்கக் கிரியை.

(4) புஜிக்கப்பட்ட நான்குவித அந்நத்தின் ஸ்தூல பாகம் சரீர சம்பந்தத்தினால் பரிணாமத்தினை யடைந்து தூர்க்கந்தம் மலம் என்னும் சப்தத்தின் வாச்சியமாகின்றது. அவற்றினைச் சரீர ஆரோக்கியத்தின் பொருட்டுப் பிரதி திநமும் விடுதல் விஸர்க்கக் கிரியையாம். அது பாயுருவின் நிஜ தர்மமாம்.

### (5) ஆநந்தக் கிரியை.

(5) தனது ஸ்திரீயோடு ரமிக்கின்ற காலத்தில் யோநியில் சுக்ல ரூப தாது விழும் க்ஷணத்தில் உள்ளிலும் வெளியிலும் விர்த்தியின் அபாவத்தினால் உண்டாம் ஸாத்விக அந்தர்முக விர்த்தியில் பிரதிபிம்பிக்கும் ஸ்வரூபாநந்தம் ஆநந்தக் கிரியையாம். எதன் ஞாநம் சாக்ஷியினாற் சித்தமாகின்றது, அஃது உபஸ்தத்தின் விசேஷ தர்மமாம். இதனை விஷயாநந்த மென்றுங் கூறுவர்.



(எங்ஙனம் ? "ஸ்திரீயோடு சேர்ந்த புருஷன் க்ஷணமாத்திரம் ஓர் ஆந்தர வஸ்துவினையும் பாஹ்ய வஸ்துவினையும் அறியா திருக்கின்றான் ; ஆநந்தத்தில் மூழ்கி யிருத்தலின்" என்னும் சுருதியினால். எதில் மூட புருஷனுக்கு "இச் சுகம் ஸ்திரீ ஸம்போகத்தினாலுண்டாகின்றது" என்று பிராந்தி யுண்டாகின்றது; உண்மையாக ஸ்திரீயாதி விஷயத்தில் சுக மின்று ; ஸர்வ விஷயங்களும் அஸத் ஜட துக்க ரூப மாயையின் காரியமா யிருத்தலின். ஸ்திரீயாதி விஷயம் ஸுக ஸ்வரூபமாயின், விவேகி புருஷர்களால் அதில் துக்க புத்தியினால் தியாகம் எங்ஙனம் உண்டாம்? விஷய லம்பட புருஷர்களாலும் பூர்வம் அடைந்த ஸ்திரீயாதி விஷயத்தினும் அதிக விஷயத்தை அடைந்து பூர்வ விஷயத்தின் தியாகம் எங்ஙனம் உண்டாம்? அதனால் விஷயத்தின் ஸம்பந்தத்தினால் சுக முண்டாகின்ற தென்பது அவர்கட்குக் கேவலம் பிராந்தியேயாம். அம் மூடனே அந்த க்ஷணிக சுகத்தினை மீண்டு மீண்டும் கிரஹித்தற் பொருட்டுச் சாஸ்திரத்திற் கூறிய தர்மத்தின் அதிக்ரமணம், ஸம்பந்திகளின் பயம், பாப உத்பத்தி, லோகத்தின் லஜ்ஜை என்னும் எல்லாவற்றையும் பார்க்காது அநந்த யத்தந கிலேசங்களால் கீழே விழுதற் பொருட்டுப் பர ஸ்திரீயோடு ரமிக்கின்றான். அதனால், இது பிராந்தி ஞாநத்தின் அற்புத மாஹாத்மியமாம், "காமாதுரனுக்குப் பய மில்லை, லஜ்ஜை யில்லை," "பர ஸ்திரீயி னிடத்தில் வீரியம் செல்லின் கோடி பூஜை நாசமாகின்றது ; விரதம் பங்கமாகின்றது ; தபஸ் நாசமாகின்றது ; பிரஹ்ம ஹத்தி ஒவ்வொரு பதத்திலும் உண்டாகின்றது" என்பனவாதிப் பிரமாணத்தினால். அதனால், "அஹோ ! மூட புருஷனது மந்த பாக்கியமாம். மூடன் தன் ஸ்திரீ பர ஸ்திரீ ஸம்பந்தமாகிய க்ஷணிக மித்தியாப் பிரதிபிம்ப ஆநந்தத்தின் கிரஹண ஆசையினால் வியர்த்தமாக மநுஷ்யத் தன்மையினை நாசஞ் செய்கின்றான்; ஒரு காலத்திலும் பிரஹ்ம ஸ்வரூப பிம்பாநந்தத்தின் அடைவின் பொருட்டு யத்தநஞ் செய்வ தில்லை.", "மநுஷ்ய ஜந்மம் அதி துர்லபமாம். அநித்தியமாமாயினும் அர்த்தத்தைக் கொடுப்பதாம்", "தீர புருஷன் அநேக ஜந்மத்தின் அந்தத்தில் இந்தப் பரம்பரையினால் மோக்ஷத்தின் பொருட்டுச் சீக்கிரம் யத்தநஞ் செய்க. எதுவரை விழமாட்டான் ; எதனால் இதன் பின் மிருத்யு இருக்கின்

றது; ஸ்திரீயாதி விஷய போகங்களோ, தாழ்ந்த எல்லா யோநிகளிலும் உண்டாகின்றன'' என்பன வாதிப் பிரமாணங்களினுல்.)

## 4-6. பிராணுதி.

பிராணுதி ஐந்தினைக் கூறுவாம்:—பிராணன் அபாநன் முதலிய பேதத்தினுல் பிராண வாயு ஐ வகைத்தாம்.

(1) பிராணன்.

(1) முன்னர்ச் செல்லும் ஸ்வபாவ முடையதாய் நாசி நுனியி லிருப்பது பிராணனும்.

(2) அபானன்.

(2) கீழ்ச்செல்லும் ஸ்வபாவ முடையதாய் பாயு ஸ்தாநத்தி லிருப்பது அபாநனும்.

(3) வியாநன்.

(3) சரீரத்தின் சர்வ விடத்திலும் செல்லும் ஸ்வபாவ முடையதாய்ச் சர்வ சரீரத்திலு மிருப்பது வியாநனும்.

(4) உதாநன்.

(4) மேற்செல்லும் தன்மையினை உடையதாய்க் கண்ட ஸ்தாநத்தி லிருப்பது உதாநனும்.

(5) சமாநன்.

(5) உண்ட குடித்த அந்நாதிகளைப் பகுத்துச் சர்வ நாடிகளிலும் கொண்டு போய்ச் செலுத்துவதாய்ச் சர்வ நாடிகளிலு மிருப்பது சமாநனும்.

## 4-7 உப வாயு.

உப வாயு ஐந்தினைக் கூறுவாம்:—நாகாதிகளின் பேதத்தினுல் உப வாயு ஐ வகைத்தாம்.

(1) நாகன்

(1) அவற்றுள், உத்கார (ஓக்காளித்தல்-வாந்தி)க் கிரியையின் ஹேது நாகனும்; அது ஹிருதயத்தி லிருப்பதாம்.

(2) கூர்மன்.

(2) கண்ணை மூடுதல் திறத்தல் கிரியையின் ஹேது கூர்மனும்; அது சக்ஷுு கோளகத்தி லிருப்பதாம்.

(3) கிருகிலன்.

(3) தும்மல் கிரியையின் ஹேது கிருகிலனும்; அது நாசியி லிருப்பதாம்.



(4) தேவதத்தன்.

(4) சிரித்தல் கிரியையின் ஹேது தேவதத்தனும்; அது கண்டத்தி லிருப்பதாம்.

(5) தநஞ்சயன்.

(5) ஜீவித்தல் அல்லது மரணத்தின் பின் போஷித்தலுக்கு ஹேதுவாயது தநஞ்சயனும்; அது மரணத்தின் பின்னும் பிரஹ்ம ரந்திரத்தில் கிஞ்சித் கால மிருக்கின்றது.

(வேதாந்திகளோ இவ் வவாந்தர ஐந்து உப வாயுக்களை முற்புகன்ற ஐந்து வாயுக்களில் அடக்கிக் கூறுகின்றுர்கள். இந்த ஞாநேந்திரிய முதலிய கூட்டங்கள் பஞ்ச கோசம் போன்று அநாத்மாவாமாயினும், அவிவேக காலத்தில் ஜீவாத்மா அவற்றின் அத்தியாஸ வாயிலாய் "நான் கேட்கின்றேன், பார்க்கின்றேன், குருடன், ஒற்றைக் கண்ணன், செல்லுகின்றேன், பசி தாக முடையோன்,'' என்பன வாதி அநேக வியவஹாரத்தினை யடைகின்றது; அதனுல், அநந்த துக்கத்தினை யடைகின்றது. இக் காரணத்தினுல் ஜிஞ்ஞாஸுக்கள் இவற்றில் அபிமாநஞ் செய்தல் உசித மன்று. அல்லது, எப் பரமேஶ்வரன் தனது தயையினுல் சக்ஷு முதலிய ஐந்து ஞாநேந்திரியம், வாக்காதி ஐந்து கர்மேந்திரிய ரூப போகத்தின் சாமர்த்தியமான ஸாமக்கிரியையினை ஜீவர்களுக்குக் கொடுத்திருக்கின்றுன்; எதனுல் இச் சீவர்கள் நாநாவித ரூபம், நாநாவித தர்மம் முதலியவற்றினைக் கவருகின்றுர்கள்; அருந்தல் பொருந்தல் முதலிய அந்நாதிகளின் ஆஸ்வாதநஞ் செய்கின்றுர்கள்; நாநாவித வாக்கு வியவஹாரத்தினைச் செய்கின்றுர்கள்; அப் பரமேஶ்வரனை ஒரு காலத்தும் ஸ்மரிக்கின்ற தில்லை; அதனினும் விமுகராய்ச் சர்வதா ரூப ரஸாதி விஷயாஸக்தராய் இருக்கின்றுர்கள்; அதனுல் செய்ந் நன்றி கொன்றவராய்க் கீழ்ச் செல்லுகின்றுர்கள்.

அல்லது, எப் பரமேஶ்வரன் தனது யஶஸைக் கேட்டற்குக் காதும், பகவான், ஸத் புருஷர்களின் மூர்த்தியினைப் பார்த்தற்குக் கண்ணும், குணத்தினை ஸ்துதித்தற்கு வாக்கும், தனது யஶஸின் ஸம்பந்தியாகிய ரஸத்தினைக் கிரஹித்தற்கு நாக்கையும் கொடுத்தார்; தீர்த்தம் க்ஷேத்திரம் முதலியவற்றிற்குச் செல்லுதற்குக் காலும்,

ஸத்துக்களுக்கு ஸேவை செய்தற்குக் கையும் கொடுத்திருக்கின்றார்; நமஸ்காரம் செய்வதற்குச் சிரஸும் கொடுத்திருக்கின்றார். எப் புருஷன் இச் சக்ஷு முதலிய இந்திரியங்களை ஈஶ்வர வியாபாரத்தினும் விபரீத வியாபாரத்தில் செலுத்துகின்றான், அவனுக்கு ஸூர்யன், அக்நி, ஸரஸ்வதி முதலியோர்களும், இந்திரிய வாக்குகளின் தேவதைகளும் சாபங் கொடுக்கின்றனர். அதனால், பரமேஶ்வரன் எப் பிரயோஜநத்தின் பொருட்டு விலை யின்றிய இந்திரியத்தினைக் கொடுத்திருக்கின்றார். ஜிஞ்ஞாஸுக்களுக்குச் செய்ந்நன்றி கொன்ற தோஷத்தின் நிவிர்த்தியின் பொருட்டு அந்தப் பிரயோஜநமே சாதித்தல் யோக்கியமாம். ஈண்டு இந்திரியாதிகளின் நிரூபணத்திற்கு இதுவே பலமாம்.)

## 4 - 8. கர்மம்.

ஐந்து கர்மங்களைக் கூறுவாம்:—நித்திய நைமித்திகாதிகளின் பேதத்தினால் கர்மம் ஐ வகைத்தாம்.

### (1) நித்திய கர்மம்.

(1) பலத்தின் ஸங்கல்ப மின்றி ஜீவந நிமித்தத்தினால் அல்லது பிரதிதிநம் உண்டாம் பாப நிவிர்த்தியின் உத்தேசத்தினால் சுருதி ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட காயத்ரீ, சந்தியா (வந்தந) தேவதையின் நமஸ்காரம் முதலிய கர்மங்கள், அதிகாரி செய்யாமையினால் பாபத்தின் ஸாதநமாயும், (செய்வதனால்) அந்தக்கரண சுத்தியின் ஹேதுவாயு முள்ள நித்திய கர்மமாம்.

### (2) நைமித்திக கர்மம்.

(2) புத்ரோத்பத்தி, பிதிரு சிரார்த்தம் முதலிய நிமித்தத்தினால் சாஸ்திரத்திற் புகன்ற ஜாத இஷ்டியாதி கர்மங்கள், ஜநித்த புத்திரனின் ஸம்ஸ்காராதிகளின் ஹேதுவும் பிதாவின் திருப்தியின் ஹேதுவுமாயுள்ள நைமித்திக கர்மமாம்.

### (3) பிராயச்சித்த கர்மம்.

(3) பிரஹ்ம ஹத்தியாதியினால் ஜநித்த பாப க்ஷயத்தின் ஸாதநமாய்ச் சுருதி ஸ்மிருதிகளிற் புகன்ற அசுவமேதாதிகளும், கிருச்சர ஸாந்தராயணாதிகளுமா யுள்ள கர்மங்கள் பிராயச்சித்த கர்மமாம்.





### (4) காம்ய கர்மம்.

(4) ஸ்வர்க்காதி இஷ்ட சாதநமாய்ச் சுருதியிற் புகன்ற ஜோதிஷ்டோமாதி கர்மங்கள் காம்ய கர்மமாம்.

### (5) நிஷித்த கர்மம்.

(5) நரகாதி அநிஷ்ட ஸாதநமாய்ச் சுருதி கூறிய பிரஹ்ம ஹத்தியாதி கர்மங்கள் நிஷித்த கர்மமாம்.

(அவற்றுள், நித்திய கர்மத்தின் அநுஷ்டாநத்தினால் அந்தக்கரண சுத்தி வாயிலாய்ப் புருஷன், பகவத் பக்தி ஞாநங்களின் அதிகாரி ஆகின்றான்; நைமித்திகத்தின் அநுஷ்டாநத்தினால் பிதா முதலியோர்களின் ரிணத்தி (கடனி)னின்றும் விடுபடுகின்றான்; புத்திரனின் சுத்தி முதலியவற்றினை யடைகின்றான்; பிராயச் சித்தத்தின் அநுஷ்டாநத்தினால் பாபத்தினின்றும் விடுபடுகின்றான்; பகவந் நாம கீர்த்தநாதி ரூப ஸாமாந்யப் பிராயச்சித்தத்தினால் ஜந்ம ஜந்மாந்தரங்களிற் செய்த பாபத்தினின்றும் விடுபடுகின்றான்; ஜோதிஷ்டோமாதி காம்ய கர்மத்தின் அநுஷ்டாநத்தினால் இச்சிக்கப்பட்ட விஷய போகத்தினை அடைகின்றான்; நிஷித்த கர்மத்தின் அநுஷ்டாநத்தினால் பிரதிகூலமாய நரகாதிகளின் பீடையினை யடைகின்றான். அதனால், கர்மாதிகாரியாகிய புருஷனும் காம்ய நிஷித்த கர்மங்களின் தியாக பூர்வகம் நித்தியாதி கர்மங்களைப் பரம்பரையாக மோக்ஷ சித்தியின் பொருட்டுச் செய்தலே உசிதமாம். விதிக்கப்பட்ட ஸகாம கர்மம் விஹித ரூபத்தினால் ஸ்வஜந்ய புண்ய அபூர்வ வாயிலாய் இக லோக பர லோகங்களில் ஸுகத்தினை அடைவிப்பதும், கிரியாத் தன்மை ரூபத்தினால் சுவ ஜந்ய ஸம்ஸ்கார வாயிலாய் ஜந்மாந்தரத்தில் அதன் ஸமாந ஜாதியை யுடைய புண்ணிய கர்மத்தில் பிரவிர்த்திப்பதும் ஆகின்றது. அங்ஙனமாயினும், பரம புருஷார்த்தத்தின் அடைவின் பிரதிபந்தகத் தன்மையினால் முமுக்ஷுக்கள் அதனைத் தியாகஞ் செய்தல் உசிதமாம் எனக் கூறப்பட்டிருக்கின்றது. நிஷித்த கர்மமோ நிஷித்தத் தன்மை ரூபத்தினால் ஸ்வ ஜந்ய, பாப ரூப அபூர்வ வாயிலாய் நரகம் ரோகம் முதலிய அநந்த துக்கத்தினை யடைவிக்கின்றது; கிரியாத்தன்மை ரூபத்தினால் ஸ்வஜந்ய ஸம்ஸ்கார வாயிலாய் மேலும் துராசார முதலியவற்றில் பிரவிர்த்திப்பிக்கின்றது; அதனால்

அத்தியந்தம் அனர்த்தம் செய்வதா யிருத்தலின் அதனைத் தியாகஞ் செய்வதில் அத்தியந்தம் யத்தநிக்க.)

### 4 - 9. தந்மாத்திரை.

தன்மாத்திரை ஐந்தினைக் கூறுவாம் :—சப்த தந்மாத்திரை முதலிய பேதத்தினால் தந்மாத்திரை ஐ வகைத்தாம்.

#### (1) சப்த தந்மாத்திரை.

(1) மாயா உபாதியினை யுடைய ஆத்மாவினின்றும் உண்டாகிய பிரதம காரியமாகிய ஸூக்ஷ்ம ஆகாசம் சாங்கிய மதத்தின் அபிப்பிராயத்தினால் சப்த தந்மாத்திரை யெனப்படும். எது அவகாச ரூப ஸ்தூல ஆகாசத்திற்குக் காரணமாம், அது சப்த தந்மாத்திரா ரூபத்தினால் காரணமாயினும் ஸ்தூல ஸ்வரூபத்தினால் பஞ்சிகரணஞ் செய்த ஆகாசத்தின் காரியமும் விசேஷ குணமும் எனப்படுகின்றது. எது ஸ்தூல அவஸ்தையில், "பிரதித்வநி", "வீசி", "புக் புக்", "சுலு சுலு" முதலிய அநுகரணத்தினால் ஸ்தூல பஞ்ச பூதத்தில் தோற்றுகின்றது ?

#### (2) ஸ்பரிச தந்மாத்திரை.

(2) ஆகாசத் தன்மையினை யடைந்த ஆத்மாவினின்றும், ஸூக்ஷ்ம வாயு உண்டாகின்றது. அதனைச் சாங்கியர் ஸ்பரிச தந்மாத்திரை யென்கின்றனர். எதனினின்றும் விருக்ஷாதிகள் அசைதற்கு ஹேதுவாய் ஸ்தூல வாயு உண்டாகின்றது, அப் பரிச தந்மாத்திரை ஸ்தூலாவஸ்தையில் ஸ்தூல வாயுவின் குணமு மாகின்றது. எப் பரிசம் ஆகாச மின்றி ஸ்தூல நான்கு பூதத்தில் தோற்றுகின்றது, அது ஜலத்தில் சீத ஸ்பரிசம், அக்நியில் உஷ்ண ஸ்பரிசம், வாயுவில் உஷ்ணமும் சீதமும் இன்றிய ஸ்பரிசம், பிருதிவியில் கடிந ஸ்பரிசமாம்.

#### (3) ரூப தந்மாத்திரை.

(3) வாயுத் தன்மையினை யடைந்த ஆத்மாவினின்றும் ஸூக்ஷ்ம பூத அக்நி உண்டாகின்றது. அது ரூப தந்மாத்திரையாம். அந்த ரூபமே ஸ்தூல அக்நியின் குணமாகின்றது. அந்த ஸ்தூல ரூபம் ஆகாச வாயுக்களி லின்றி ஸ்தூல மூன்று பூதங்களில் தோற்றுகின்றது. விளக்கமான வெண்மை அக்நியிலும், கேவல சுக்ல ரூபம் ஜலத்திலும், நீலாதி ரூபம் பிருதிவியிலுமாம்.



#### (4) ரச தந்மாத்திரை.

(4) அக்நி ஸ்வரூபத்தினை யடைந்த ஆத்மாவினின்றும் ஸூக்ஷ்ம ஜலம் உண்டாகின்றது. அது ரஸ தந்மாத்திரையாம் ; அதுவும், பூர்வம் போன்று ஸ்தூல ரூபத்தினால் அதன் குணமுமாகின்றது. அந்த ரஸமாகிய குணம் இரண்டு ஸ்தூல பூதத்தில் தோன்றுகின்றது. மதுர ரஸம் ஜலத்தில் ; மதுரம் புளிப்பு முதலிய அறுவகை ரஸம் பிருதிவியிலாம்.

#### (5) கந்த தந்மாத்திரை.

(5) ஜல ஸ்வ ரூபத்தினை யடைந்த ஆத்மாவினின்றும் ஸூக்ஷ்ம பிருதிவி உண்டாகின்றது. அது கந்த தந்மாத்திரையாம். அதுவும் ஸ்தூல ரூபப் பிருவிதியின் குணமு மாகின்றது. எதனால் ஸ்தூல ரூபப் பிருதிவியில் ஸுகந்தம் துர்க்கந்தம் என இருவிதக் கந்தம் தோற்றுகின்றன ?

(இச் சூக்ஷ்ம பஞ்ச பூதத்தின் உத்பத்தியின் பிரகாரமும் அவற்றின் ஸ்தூல அவஸ்தையின் அடைவின் பிரகாரமும் வேதாந்த சாங்கிய ரீதியினால் கூறப்பட்டன.)

### 4 - 10. பஞ்சீகரணம்.

பஞ்சிகரணஞ் செய்த ஸ்தூல பூதங்களைக் கூறுவாம் :—ஆகாசாதி பஞ்சீகிருத ஸ்தூல பூதம் ஐ வகைத்தாம்.

#### (1) ஆகாசம்.

(1) மாயா உபாதியினையுடைய பரமேச்வரன் ஸூக்ஷ்ம பஞ்ச பூதங்களுள் ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகப் பகுத்து மீண்டும் ஒவ்வொன்றையும் நந்நான்காக்கித் தன் அரைப் பாகத்தினை விட்டு நான்கு பாகங்களை எப்பொழுது வேறு நான்கு அரைப்பாகத்தில் சேர்க்கின்றான் அப்பொழுது பஞ்சீகிருத பூத மாகின்றது. அவற்றுள், ஆகாசம், சப்த குணம் உடையதாகின்றது ; வாயு, சப்த ஸ்பரிச குணமுடையதாகின்றது ; அக்நி, சப்த ஸ்பரிச ரூப குண முடையதாகின்றது ; ஜலம், சப்த ஸ்பரிச ரூப ரஸ குண முடையதாகின்றது ; பிருதிவி, சப்த ஸ்பரிச ரூப ரச கந்த குண முடையதாகின்றது. இடங் கொடுக்கும் ஸ்வரூபமாகிய ஆகாசம் ஜீவர்களின் சுவாஸ உசுவாஸ வியாபாரத்தின் ஹேதுவாயும், பிராணன் இந்திரியம் மநம் சரீரம் என்னும் எல்லாவற்றிற்கும்ஆச்ரய பூதமாயு மிருக்கின்றது.

(2) வாயு.

(2) வாயுவும், ஜீவர்கட்குப் பாஹ்ய ஆகார அந்ந ஔஷதி பலம் முதலியவற்றைப் பாகஞ் செய்வதற்கு ஹேதுவாகின்றது. எதனை ஜீவர்கள் பிராரப்த அநுஸாரம் கிரீஷ்மாதி ருது பேதத்தினால் அநுபவிக்கின்றனர், (அது) ஸ்பரிச வாயிலாய் ஜீவர்களின் ஸுக துக்கத்தின் ஹேதுவா யிருக்கின்றது. எது உள் ஸஞ்சாரத்திற்குப் பிராண ரூபமா யிருந்து ஜீவர்கட்குப் பலம் ஓஜ் என்பவற்றைக் கொடுக்கின்றது? எப் பிராண ரூப வாயுவினைப் புத்தியாதிகளின் அதிஷ்டாந தேவதை ஆசிரயித்து ஸம்ராட்டிற்கு (ராஜாவிற்கு) வேலைக்காரன்போ லிருக்கின்றது? எது ஜீவர்களின் கர்ம பல போகத்தின் பொருட்டு லோகாந்தரம் தேஹாந்தரம் செல்லுவதற்கு ஹேதுவாகின்றது? எதனால் ஜீவன் பிராரப்த பல போகத்தின் பின் ஸ்தூல பூத அம்சத்தோடு பிராணனைப் பிரதாநமாகக் கொண்ட லிங்க சரீரத்தில் ஆரூடனாயே லோகாந்தரத்திற்குச் செல்லுகின்றனன்?

(3) தேயு.

(3) அக்நியும், ஜீவர்களின் பொருட்டுப் பாஹ்ய விவித போஜநாதி பாகக் கிரியையின் ஹேதுவாம். அது குளிர் காலத்தில் உஷ்ண ஸ்பரிச வாயிலாய்ச் சுகத்தைச் செய்கின்றது; கிரீஷ்ம (உஷ்ண) ருது வாயிலாய்த் துக்கத்தைச் செய்கின்றது; உள்ளில் பிராண அபானனோடு சேர்ந்து புசிக்கப்பட்ட நான்கு வித ஆகாரத்தினைப் பாகஞ் செய்தற்கு ஹேதுவாகின்றது; கர்ம காண்டத்தில் பிரதி பாதிக்கப்படும் அக்நி ஸாத்ய ஸர்வ கர்மத்தின் ஆஹவநீயாதி ரூபத்தினால் நிமித்தமா யிருக்கின்றது.

(4) அப்பு.

(4) ஜலமும், ஸூர்யாதி தாப நிவாரண பூர்வகம் ஜீவர்கட்கு உள்ளில் பிராணனுக்குத் திருப்தி, ஜீவநங்களினதும் வெளியில் நாநாவித ஸ்நாந முதலிய கிரியைகளினதும் ஔஷதி அந்நாதிகளினதும் உத்பத்தி விருத்தியின் ஹேது வாகின்றது. அதுவும், உஷ்ண காலத்தில் சீத ஸ்பரிச வாயிலாய்ச் சுகத்தைச் செய்கின்றது; சரத் ருதுவில் துக்கத்தைச் செய்கின்றது. அதனால், எல்லோரும் உத்பத்தியாகின்றனர்; ஜீவிக்கின்றனர்; விருத்தி யடைகின்றனர்; அதனால் சாஸ்திரத்தில் உதார வீரியம் என்று கூறப்படுகின்றது.



(5) பிருதிவி.

(5) பிருதிவியும், பிராரப்த பல போகத்தின் பொருட்டும் விஹிதம் முதலிய கர்மஞ் செய்தற் பொருட்டும் சராயுஜாதி நான்கு வித ஜீவர்களின் ஸ்திதியின் ஸ்தாநமாம். அஃது அந்நாதி பலாதி ஸ்வரூபத்தினால் ஸர்வ ஜீவர்கட்கும் ஆஹார புஷ்டி திருப்திகளின் ஹேது வாகின்றது.

(எப் பரமேஸ்வரன், ஸூக்ஷ்ம ஸ்தூல பஞ்ச பூதங்களைச் சிருஷ்டி முதலியன செய்தும், இந்திரியாதிக் கூட்ட ரூப தேஹத்தினைச் சிருஷ்டித்தும், ஜீவர்களின் சுக போகத்தின் பொருட்டு அநந்த உபகாரங்களைச் செய்திருக்கின்றான், நாநாவித போகத்தின் ஸாமக்கிரியையினைக் கொடுத்திருக்கின்றான், அவனினின்றும் விமுகனாய் எப் புருஷன் இப் போக சாமக்கிரியையிலேயே ரமிக்கின்றான், அவன், செய்ந்நன்றி கொன்றவனாய் அதன் பலமாய நரகாதிகளையே யடைகின்றான்; கொடுத்தலில் பிரீதியுடையவனாய்த் தாதாவினின்றும் விமுகனா யிருத்தலின்.)

4 - 11. யமம்.

ஐந்து யமங்களைக் கூறுவாம்:—அஹிம்ஸாதி பேதத்தினால் யமம் ஐந்து வகைத்தாம்.

(1) அஹிம்ஸை.

(1) அவற்றுள், பிரதிகூல அநுகூல புத்தியினால் பிராணிகளுக்கு மூன்று விதமான ஹிம்ஸை யுண்டாகின்றது. பிராணி மாத்திரத்தில் அதன் அபாவம் அஹிம்ஸா ரூப யமமாம். எப்பொழுது அது ஸகாமமாகின்றதோ அப்பொழுது ஸிம்ஹம் ஸர்ப்பம் முதலியன மநுஷ்யர்களுக்கு ஸஹஜமாக வைரியாம். அவற்றின் ஸந்நிதி யுண்டாயினும் அவர்களுக்கு அவற்றின் பிரதிகூலத்தின் ஆசரண மின்மையும் சகஜ பரஸ்பர விரோதியாகிய அஹி (ஸர்ப்பம்) நகுலம் (கீரிப்பிள்ளை) முதலியவற்றிற்கும் அவற்றின் ஸந்நிதாநத்தில் வைர மின்மையும் அதன் பலமாம். அது நிஷ்காமமாயினோ, மந நிரோத ரூப யோகப் பிராப்தியில் ஸஹகாரி யாகின்றது.

(2) ஸத்தியம்.

(2) எவ்விதத்தும் பார்த்தல் கேட்டலின் அநுஸாரமாய் யதார்த்த பாஷணமும் தன் பிரயோஜநத்தின் பொருட்டும் பொய்

சொல்லா திருத்தலும் ஸத்தியமாம். அது ஸகாமமாயின், வாக் சித்தி ரூபபலத்தைக் கொடுக்கின்றது; நிஷ்காமமாயின், யோகத்திற்கு ஸஹகாரி யாகின்றது.

(3) அஸ்தேயம்.

(3) தரித்திரம் முதலிய அவஸ்தையிலும் திருடு வஞ்சனை ஏமாற்றல் முதலியவைகளால் ஒருவரது தநத்தையும் கைக் கொள்ளாமை அஸ்தேயமாம். அது ஸகாமமாயின், யத்தந மின்றித் தநாதியின் பிராப்தி ஹேதுவாகின்றது. இச்சை யின்றிய யோகிக்கும், அஸ்தேயம் இருக்கின், ஸர்வ திக்கிலும் ரத்நாதியின் பிராப்தி யுண்டாகின்ற தென்பது பொருளாம். அது நிஷ்காமமாயின், யோக ஸஹகாரியாம்.

(4) பிரஹ்மசரியம்.

(4) அஷ்ட (எண்) வித அசாஸ்திரீய ஸ்திரீ சங்கத்தின் தியாகம், அஷ்டாங்கப் பிரஹ்மசரியமாம். வீரிய நிரோதமே பிரஹ்மசரிய ரூபமாகலின், அது ஸகாமமாம்போது அதன் தேஜஸ்ஸினால் பிராணி மாத்திரம் அவனை அமிழ்த்துவ தில்லை. எதனால் அவனுக்கு அதன் உத்கிருஷ்டமாய் நிரதிசய ஸாமர்த்தியம் வெளிப்படுகின்றது. இஃது அதன் பலமாம்; நிஷ்காமமாயினோ யோகத்தின் ஸஹகாரியாம்.

(5) அபரிக்ரஹம்.

(5) சரீர யாத்திரை (நிர்வாகம்) அன்றி அதிகமாக வாங்குதலை விடுதல் அபரிக்ரஹமாம். அஃது எப்போது ஸகாமமாய்த் திடமாகின்றது அப்போது தனக்கும் பரனுக்கும் ஜந்மாந்தரத்திற்கும் ஞாநத்தினைக் கொடுக்கின்றது; நிஷ்காமமோ யோக ஸஹகாரியாம். ஸஹகாரி யென்பது தாரணை, தியாநம், ஸமாதி யென்னும் மூன்று அந்தரங்கத் (உள் அங்கத்)தின் சித்தியில் உபகாரமாகின்ற தென்பதாம். அது யோகத்தின் பிரதிபந்தகமாய பாப விக்நங்களின் நிவாரகமாகின்றது. இவ்வைந்தினையும் ஐந்து மஹா விரத மென்றுங் கூறுவர். அவை எப்போது ஜாதி தேச காலப் பிரயோஜநங்களால் அநவச்சிந்நமாய்த் திட அவஸ்தையினை யடைகின்றன, அப்பொழுது தத்தம் பல முதலியவற்றினைக் கொடுக்கின்றன; வேறு வகையாகக் கொடுப்பதில்லை.



அல்லது, பிராணிகளைக் கோறலாய அசாஸ்திரீயம் ஹிம்ஸையாம். பொய் சொல்லுதல், கோற லின்றிய பிராஹ்மணாதிகளின் ஹிம்ஸா ஸம்பந்தி யதார்த்த வசநம் அந்ருதமாம். அசாஸ்திரீய மார்க்கத்தினால் அந்யனது திரவ்யத்தினைக் கவரல் ஸ்தேயமாம். ஸ்திரீ புருஷர்களின் சேர்க்கை மைதுநமாம். சாஸ்திரத்தால் நிஷத்தஞ் செய்யப்படாத மார்க்கத்தினால் தேஹ யாத்திரையினும் அதிகமாகப் போக சாதநத்தினைக் கவரல் பரிக்ரஹமாம். இவ் வைந்தினையும் செய்யா திருத்தல் அஹிம்ஸாதி ஐந்து யமமாம்.

(இவ்வாறு, சார்வபௌம மஹாவிரத சப்த வாச்சியமாய இவ் வைந்து யமங்களைத் திடமாக அப்பியாசஞ் செய்து, காமம் குரோதம் லோபம் மோகம் என்னும் நான்கு நரக வாயிலின் நிவர்த்தி யுண்டாகின்றது. அவற்றுள், பிரஹ்மசர்யம் வஸ்து விசாரங்களினால் காமத்தின், அஹிம்ஸை க்ஷமைகளினால் குரோதத்தின், அஸ்தேய அபரிக்ரஹ ரூப ஸந்தோஷங்களினால் லோபத்தின், உண்மை யுரைத்தல் யதார்த்த ஞாந ரூப விவேகங்களினால் மோகத்தின் நிவிர்த்தி யுண்டாகின்றது. அதன் மூலமாய சர்வ ஆஸுர விர்த்திகளின் நிவர்த்தி யுண்டாகின்றது என்று வேதாந்த மதத்தின் அநுஸாரமாக அவற்றிற்குப் பலம் கூறப்பட்டது.)

4—12. நியமம்.

ஐந்து நியமங்களைக் கூறுவாம்:—சௌசம் முதலிய பேதத்தினால் நியமம் ஐ வகைத்தாம்.

(1) சௌசம்.

(1) பாஹ்யாந்தர பேதத்தினால் சௌசம் இரு வகைத்தாம். அசுசி மலிந திரவ்யங்களின் ஸம்பந்த முதலியவற்றால் உண்டாம் அசுத்தியினை ஜலம் மண் முதலியவைகளினாலும், ஆசமநம் ஸ்நாநம் முதலியவைகளினாலும் போக்குவது பாஹ்ய சௌசமாம். ஸகாம மலிந அந்நம் விஷய லோபம் ராக த்வேஷாதிகளின் தியாகத்தினால் உண்டாம் அந்தக்கரண சுத்தி ஆந்தர சௌசமாம்.

(2) சந்தோஷம்.

(2) தன் பிராரப்தத்தினல் சம்பாதிக்கப்பட்ட போக விஷயத்திலே அலம் (வியர்த்தம்) என்னும் புத்தியும், ஒரு காலத்தும் இந்திரியங்களின் பிரீதியின் பொருட்டு ஒவ்வொரு துவாரங்களிலும் கஷ்டப்படாமையும் சந்தோஷமாம்.

(3) தபம்.

(3) மநம் இந்திரியங்களைப் பஜந விரோதி வியாபாரத்தினின்றும் நிரோதித்தல் தபமாம். கேவலம் சரீர மாத்திரக் கிலேச மன்றும்; அது தமோகுண சம்பந்தியா யிருத்தலின்.

(4) ஸ்வாத்யாயம்.

(4) வேதாதிகளை விதி போன்று குரு முகத்தால் அத்தியயநமும், அர்த்தக் கிரஹணமும் ஸ்வாத்தியாயமாம்.

(5) ஈசுவரப் பிரணிதாநம்.

(5) சர்வ கர்மங்களையும் ஈசுவரனிடத்து ஸமர்ப்பணம் செய்தல் ஈசுவரப் பிரணிதாநமாம்; அல்லது, ஈசுவரனது உபாஸனை ஈசுவரப் பிரணிதாநமாம்.

அல்லது, மண் ஜலம் முதலியவற்றினல் சரீரம் முதலியவைகளைக் கழுவுதலும், ஹிதம் மிதம் பவித்ரம் ஆகிய அந்நாதிகளைப் புசித்தலும் பாஹ்ய சௌசமாம். மைத்திரி முதிதை முதலியவற்றால் மதம் மாநம் முதலிய சித்தத்தின் மலத்தினைக் கழுவல் ஆந்தர சௌசமாம்.

பிராரப்தத்தினல் கிடைத்த போகத்தின் ஸாமக்கிரியையினும் அதிகமாகச் சம்பாதித்தற்கு இச்சை யின்மை ஸந்தோஷமாம். பசி தாகம் சீதோஷ்ணம் முதலிய த்வந்தவ தர்மங்களைச் சகித்தல் தபமாம். மோக்ஷ சாஸ்திரத்தினை அத்தியயநம் செய்தல் ஸ்வாத்தியாயமாம் அல்லது, பிரணவ ஜபம் ஸ்வாத்தியாயமாம். சர்வ கர்மங்களையும் அந்தப் பரம குரு பரமேசுவரனிடத்தில் பலாபேக்ஷையின்றி அர்ப்பணம் செய்தல் ஈசுவரப் பிரணிதாநமாம்.



(இவ் வைவித யம நியமங்களில், யமங்களின் பிராப்தியின் பொருட்டு ஜிஜ்ஞாஸுக்கள் அத்தியந்தம் யத்நஞ் செய்க; நியமத்தில் சக்தி யநுசாரம் யத்நிக்க. எதனல் யமமே செய்யாமையினல் ஜீவனுக்குக் கீழே விழுதற்கு ஹேதுவா யிருக்கின்றது, நியமம் (ஹேது) அல்ல. "யமத்தினை யோகி எப்பொழுதும் ஸேவிக்க. நியமத்தினைச் சக்தியநுசாரம் (ஸேவிக்க.) எதனல் யமத்தைச் செய்யாத யோகி கீழே விழுகின்றுன்." என்னும் பிரமாணத்தினல். புராணத்தில் யம நியமங்கள் அதிகமாகக் கூறபட்டிருக்கின்றன. அதுவும் இவற்றினுள் அடக்க மென்றே அறிக).

(இப்பொழுது சௌசாதியின் பலத்தினைக் கூறுவாம்:—பாஹ்ய சௌசம் செய்பவனுக்குத் தன் சரீரத்திலும் தேகத்தின் காரணம், அவற்றின் ஸ்வரூபங்களின் பரியாலோசனைகளினல் தோஷ திருஷ்டியுண்டாகின்றது. இச் சரீரம் சதா அசுசி அமங்கலமா யிருக்கின்றது. இதில் ஆக்கிரஹம் செய்தல் அடாது. காரணத்தினலும், ஸ்வரூபத்தினலும் ஸதா தோஷ விசிஷ்டமா யிருத்தலின் என்று அறிந்து எவன் தன் சரீரத்திலும் பிரீதி செய்வ தில்லையோ அவன் ஸ்திரீயாதி சரீரத்தில் எங்ஙனம் ரமிக்கத் தக்க புத்தி ஸம்பந்தங்களைச் செய்வன்?

ஆந்தர சௌசத்தின் பலத்தினைக் கூறுவாம்:—எவன் சாஸ்திரத்திற் கூறிய ஆந்தர சௌசத்தினைச் செய்கின்றுன், அவனுக்கு ஸத்துவ சுத்தி ஸுமநஸ் தன்மை ஏகாக்ரத் தன்மை இந்திரிய ஜயம் ஆத்ம தரிசநத்தின் யோக்யத் தன்மை என்னும் இவ் வைந்து பலமும் கிரமமாக உண்டாகின்றன.

ஸந்தோஷத்தினல் அதி உத்தம சுகத்தின் லாபமாகிய பலம் உண்டாகின்றது ஸந்துஷ்டனகிய யோகிக்கு எவனுக்கு நூறு அம்சத்தினலும் பாஹ்ய விஷய சுகம் ஸமாநமாவ தில்லை, அவ்வித ஆந்தர ஸுகம் உண்டாகின்றது. அதனல், சந்தோஷத்தினை யடைந்த யோகி பாஹ்ய விஷய சுகப் பிராப்தியின் பொருட்டுத் தநத்தின் துர்மதத்தினல் குருடாராய ராஜஸீ தாமஸீ புருஷர்களுக்கு எங்ஙனம் தீநன் (இளைத்தவன்) ஆவன்? ஸ்வாத்தியாயஞ்

செய்கின்றவனுக்கு இஷ்ட தேவதையின் பிரத்தியக்ஷ தரிசநம் உண்டாகின்றது. ஈசுவரப் பிரணிதாந ரூப பக்தி விசேஷமாகச் செய்கின்றவனுக்குக் கூறிய லக்ஷணத்தினை யுடைய ஸமாதியின் ஆவிர்ப்பாவம் உண்டாகின்றது).

## 4—13. யோக பூமி.

ஐந்து யோக பூமிகளினைக் கூறுவாம்:—சித்தத்தின் க்ஷிப்த அவஸ்தை முதலிய பேதத்தினால் யோக பூமி ஐ வகைத்தாம்.

### (1) க்ஷிப்த பூமிகை.

(1) ஆஸாா ஸம்பத்து தேக போஷணம் லோக ரஞ்ஜநம் முதலியவற்றில் சித்தத்தின் அபிநிவேசத் தன்மை க்ஷிப்த பூமிகையாம். அல்லது, தன் போகத்தின் பொருட்டு ராகத்துவேஷம் முதலியவற்றினால் நாநா விஷயத்தின் ஸம்பாதநம் முதலியவற்றில் சித்தத்தில் வியக்ரத் தன்மையும் சஞ்சலத் தன்மையும் க்ஷிப்த பூமிகையாம்.

### (2) மூட பூமிகை.

(2) நித்திரை சோம்பல் முதலியவற்றினால் கவரப்பட்ட சித்தத்தின் அவஸ்தை மூட பூமிகையாம்.

### (3) விக்ஷிப்த பூமிகை.

(3) ஸதா விஷயாஸக்தியினை யுடைய சித்தமும் ஒரு காலத்தில் தியாநத்தில் இருக்கின்றது. க்ஷிப்த பூமிகையினின் சிரேஷ்டத் தன்மையினால் அஃது அதன் விக்ஷிப்த பூமிகையாம். அவற்றுள், க்ஷிப்த மூடம் என்னும் இரண்டவஸ்தையில் சமாதியின் சம்பாவனையே யின்று. விக்ஷிப்த சித்தத்தில் ஒரு காலத்து ஸமாதி யுண்டாகின்றது, விக்ஷிப்தத்தின் பிரதாநத் தன்மையினால் யோக பக்ஷத்தில் இருப்ப தில்லை. பின்னையோ, தீவிரமான காற்றினால் விக்ஷிப்த தீபம் போன்று தானே நஷ்டமாகின்றது.

### (4) ஏகாக்ர பூமிகை.

(4) ஓர் ஆத்ம விஷயக தாராவாஹிக (தாரையாகச் செல்லும்) விருத்தியினையுண்டாக்கும் ஸாமர்த்தியமாய சித்தம் ஏகாக்ர பூமியாம்;



ஆண்டு ஸாத்விகத்தின் ஆதிக்யத்தினால் தமோ குணத்தினாற் செய்யப்பட்ட நித்திரையாதி ரூப லயத்தின் அபாவத்தினாலும், ரஜோ குணத்தாற் செய்யப்பட்ட சாஞ்சல்விய ரூப விக்ஷேபத்தின் அபாவத்தினாலும் ஒன்றை விஷயமாக வுடைய ஆத்மாகாரமாகவே விருத்தி யுண்டாகின்றது. இவ் வித ஏகாக்ர சித்தம் சுத்த ஸத்வத்தில் உண்டாகின்றது. இப் பூமியில் ஸம்பிரக்ஞாத ஸமாதி யுண்டாகின்றது. அதில் தியேயாகார விருத்தியும் விளங்குகின்றது. அஃது எதனால் ஏகாக்ரக மநதில் பரமார்த்த ரூப வஸ்துவினை விளக்கஞ் செய்கின்றது, கிலேசத்தினை நாசஞ் செய்கின்றது, கர்ம பந்தநத்தினை உடைக்கின்றது, நிரோத பூமியின் எதிர்முகம் செய்கின்றது, அதனால் ஸம்பிரஞ்ஞாத ஸமாதி யெனப்படுகின்றது. இந்த ஏகாக்ர பூமி யோகத்தின் நான்காவது பூமிகையாம்.

### (5) நிருத்த பூமிகை.

(5) அந்தத் தாராவாஹிக விருத்தியும் நிரோதமாய் அநாத்மாகார ஆத்மாகார எல்லா விருத்திகளின் அபாவத் தன்மையினால் எப் பிரகாரத்தும் நிரோதமாய சித்தம் அதன் நிருத்த பூமியாம். இதில் அஸம்பிரஞ்ஞாத ஸமாதி யுண்டாகின்றது. யாண்டுச் சித்தத்தின் உள்ளிலும் வெளியிலும் பிரஹ்மமே விளங்குகின்றது; தியேயாகார விருத்தியும் உண்டாகின்ற தில்லை. எங்ஙனம் தபிக்கப்பட்ட இரும்பின் உள்ளிலும் வெளியிலும் அக்நியே பிரகாசிக்கின்றது இரும்பு (பிரகாசிப்பது) இல்லை. இவ்வித அஸம்பிரஞ்ஞாத ஸமாதி யோகத்தின் ஐந்தாவது நிருத்த பூமி யெனப்படுகின்றது. அல்லது, பிரமாணம் விபர்யயம் விகல்பம் நித்திரை ஸ்மிருதி ரூபம் என்னும் ஐந்து விருத்திகளின் நிரோதத்தினால் உண்டாம் ஸமாதி அஸம்பிரஞ்ஞாத ஸமாதியாம். எதனை யோக மென்றும், நிர்விகற்ப ஸமாதி யென்றும் கூறுவர்.

(அவற்றுள், (1) பிரத்தியக்ஷாதி ஆறு விதப் பிரமாண ஜந்ய பிரமா விருத்தி பிரமாண விருத்தியாம். யோகத்தின் ஆசாரியர்கள் பிரத்தியக்ஷம் அநுமாநம் ஆகமம் என்னும் மூன்று பிரமாணங்களைக் கொள்ளுகின்றனர், பிராசீந நையாயிகர் அர்த்தாபத்தியோடு

நான்கு பிரமாணங்களைக் கொள்ளுகின்றனர். நவீந நையாயிகர் பிரத்தியக்ஷ அநுமாந மென்னும் இரண்டு பிரமாணங்களைக் கொள்ளுகின்றனர். கௌரவ (தோஷ) த்தின் பயத்தினால் மற்றைய பிரமாணங்களை இவற்றுள் அடக்கிக் கூறுகின்றனர். அங்ஙனமாமாயினும், வைதிக சித்தாந்தத்தின் அநுஸாரமாக ஆறு பிரமாணங்கள் கூறப்படுகின்றன. அதனால் ஆறு வகைத்தாய விருத்தி பிரமாண விருத்தியாம்.

(2) மித்தியா ஞாநம், அல்லது, விபரீத ஞாநம் விபர்யய விருத்தியாம். அதுவே, அவித்தையாதி பஞ்சக் கிலேச ஐந்து பேதமாம். அதன் லக்ஷணம் இவ் வைந்து எண்ணிக்கையிலே மேலே கூறுவாம்.

(3) சப்த ஞாந அநுஸாரியாய் உண்மையில் சூந்யமாயது விகல்பமாம். அதனையே பிரமை பிராந்திகளின் விலக்ஷண அஸத் அர்த்த வியவஹார மென்று கூறுகின்றனர். ஸத் அர்த்தத்தின் விஷய மின்மையால் பிரமாவின் விலக்ஷணமாம். அநிர்வசநீய அர்த்தத்தின் விஷய மின்மையினால் பிராந்தியின் விலக்ஷணமாம். சசவிஷாணம் அஸத்தாம், சித்திரிக்கப்பட்ட புருஷனது சைதந்யம் அஸத்தாம் என்பதாதி வியவஹாரம் விகல்ப மெனப்படுகின்றது.

(4) நான்குவித விருத்தியின் அபாவத்தின் காரணமாய தமோ குணத்திற்கு விஷயமாகிய விருத்தியே நித்திரா விருத்தியாம். ஞாநாதிகளின் அபாவ மாத்திர மன்றும். இது யோக சாஸ்திரத்தின் அநுசாரமாக நித்திரா விருத்தியின் லக்ஷணமாம்.

(5) பூர்வம் அநுபவிக்கப்பட்ட விஷயத்தின் ஸ்மரணம், அல்லது, பூர்வ அநுபவத்தினால் ஸம்பாதித்த ஸம்ஸ்கார ஜந்ய ஞாநம் ஸ்மிருதியாம், இது ஸர்வ விருத்தி ரூப அநுபவத்தினால் ஜநிக்கப்பட்டிருத்தலின். யோக சாஸ்திரத்தில் இவ் விருத்தியின் அந்தத்தில் கூறப்பட்டிருக்கும் லஜ்ஜை முதலிய வேறு அநந்த விருத்திகளும் இவ் வைந்து விருத்தியினுள் அடக்கமாம்.

இவ் வைந்து விருத்திகளின் நிரோதத்தையே யோக மென்றும், ஸமாதி யென்றும் யோக சாஸ்திரத்தில் கூறப்படுகின்றது. "சித்த விருத்தியின் நிரோதம் யோகமாம்" என்னும் பதஞ்சலியின் (1—1) ஸூத்திரத்தினால். ஈண்டுக் கூறிய இரு வித ஸமாதியும் ஜிஞ்ஞாஸுவினிடத்தில் யத்நத்தினால் ஸாத்தியமாம், ஞாநத்தின் உத்பத்தியின் பொருட்டு அபேக்ஷிக்கத் தக்கதாம். ஞாநிக்கும் ஜீவந் முக்தியின் பொருட்டுத் தனது யத்நத்தினால் இவற்றின் திடத் தன்மை அபேக்ஷிக்கப்படுவதாம்).



## 4—14. பிரளயம்.

ஐந்து பிரளயத்தினைக் கூறுவாம்:—நித்திய அவாந்தரப் பிரளயம் முதலிய பேதத்தினால் பிரளயம் ஐந்து வகைத்தாம்.

### (1) நித்தியப் பிரளயம்.

(1) பிராணிகளின் பிராரப்த கர்மத்தினால் அந்தக்கரணத்தின் பரிணாம ரூப ஸர்வ விருத்திகளின் அபாவ ரூப சுஷுத்தி அவஸ்தை நித்திரா தோஷத்தினா லுண்டாகின்றது. யாண்டுத் தூங்குகின்ற புருஷனின் அபேக்ஷையினால் ஸர்வ பாஹ்ய பதார்த்தங்களும் லயமாகின்றன; அது நித்தியப் பிரளயமாம். அல்லது, ஜகத் பிராதிபாஸிக சித்தாந்தத்தில் (திருஷ்டி ஸிருஷ்டி வாதத்தில்), பிரதீதியாகும் ஸர்வ வஸ்துவும் ஞாநத்தின் பின் பிரதிக்ஷணம் வஸ்து நாசம் உண்டாகின்றது. அது நித்தியப் பிரளயமாம். அதனை க்ஷணப் பிரளயம் என்றுங் கூறுவர்.

### (2) அவாந்தரப் பிரளயம்.

(2) சதுர் யுகம் ஆயிரம் அளவினை யுடைய பிரஹ்மாவின் ஒரு திநத்தில் பதினான்கு மந்வந்தரம் உண்டாகின்றன. ஒவ்வொரு மந்வந்தரத்தில் மநு இந்திராதி ஆறு பதார்த்தங்கள் புதிய புதிய அதிகாரிகளாக வுண்டாகின்றன. ஒரு மநு முதலிய ஆறின் ஆதிபத்தியமும், அதிகாரத்தின் நிவிர்த்தியு முண்டாய், வேறு மநு முதலிய அறுவரின் ஆதிபத்திய அதிகாரங்களின் பிராப்தியினால், முன் உண்டாய லோகத்தின் பிரளயம் உண்டாகின்றது. அது மந்வந்தரப் பிரளயமாம். இவ்வாறு, பதினான்கு மந்வந்தரப் பிரளயத்தில், பிரஹ்மாவின் ஜாக்ர அவஸ்தையிலேயே உண்டாம் பதினான்கு முறையாய

லோகத்தின் பிரளயம் அவாந்தரப் பிரளயமாம். அதனை நைமித்திகப் பிரளய மென்றும், மங்வந்தரப் பிரளய மென்றுங் கூறுவர். இவ்வவாந்தரப் பிரளயத்தில் கிருதம் முதலிய யுகப் பிரளயமும் அந்தர்ப்பாவமாம்.

### (3) தைநந்திநப் பிரளயம்.

(3) ஆயிரம் சதுர் யுக அளவினை யுடைய இரவில் உண்டாம் பிரஹ்மாவின் சுழுத்தி ரூப நாராயணனிடத்தில் ஸ்திதி தைநமாகிய திநப் (நாடோறும்) பிரளயமாம்,

### (4) பிரஹ்மப் பிரளயம்.

(4) இரண்டு பரார்த்த (ஐம்பது) ஆயுள் நாசத்தின் பின் பிரஹ்மாவின் நாச அவஸ்தை யெனப்படும் விதேக கைவல்ய அவஸ்தை பிரஹ்மப் பிரளயமாம். அப்பொழுது ஆகாசாதிப் பிரபஞ்ச மின்றி மாயையும் பரமேசுவரனிடத்து அந்தர்ப்பாவம் ஆகின்றது. பகவானிடத்தில் மாயை மாத்திரம் இருக்கின்றது என்பது பொருளாம். அதனை மஹாப் பிரளய மென்றும், பிராகிருதப் பிரளய மென்றும், மஹா சுழுத்தி யென்றும் கூறுவர்.

### (5) ஆத்தியந்திகப் பிரளயம்.

(5) ஞாநத்தின் ஸம காலத்தில், இனி உண்டாம் தேஹ அபாவ லக்ஷணத்தை யுடையதாய தத்துவ வித்தின் சரீர நாசத்தின் பின் உண்டாம் விதேக கைவல்ய அவஸ்தை ஆத்தியந்திகப் பிரளயமாம். அவ் வவஸ்தையில் சர்வ வசந வியவஹாரத்தை அதிக்ரமித்த சச்சிதாநந்த மாத்திரம் எஞ்சுகின்றது; மாயையும் பாதிக்கப்பட்டிருத்தலின்.

(இந்த நாநாவிதப் பிரளயத்தினைக் கூறுவதற்கு இது பிரயோஜநமாம். ஏழு தீவினை யுடைய பிருதிவியினைப் பாலிக்கும் சக்ரவர்த்தியாகிய ராஜா முதல் பெரிய பெரிய மனிதர்க ளெல்லோரும் ஸர்வ ஸம்பத்தினை யடைந்து நாநாவித பலம் புத்தி வீர்யம் தேஜஸ் முதலியவற்றோடு கூடியவ ராயினும், இவ் வநாதி சம்ஸாரத்தில் ஜலத்தில் உள்ள தரங்கங்கள் போன்று அநந்த எண்ணிக்கையாக உண்டாய் உண்டாய் நஷ்டமாய்விட்டனர். அப்பொழுது மந்தப் பிரஞ்ஞை மந்த பாக்கியம் அநந்த விக்நத்தால் கவரப்பட்ட அற்ப ஸம்பத்து முதலியவைகளோடு கூடிய இப்பொழு துள்ள ஜீவர்கள் ஈண்டு எவ்வளவு கால மிருப்பார்கள்? அதனால் எப்புருஷன் மின்னல், விருக்ஷத்தின் நிழல் முதலியன போன்று க்ஷண பங்குரமாய், அதி சஞ்சலமாய் உள்ள தனது தேகாதி ஸாமக்கிரியைகளை ஸத்தாக வுணர்ந்து தேக புத்திராதிகளில் "நான் எனது" என்னும் தன்மையினைப் பாவித்து வேதாந்த விசார பகவத் பக்திகளில் விமுகனாயிருக்கின்றான். அஹோ அவனது புத்தியின் வைபவம்! அவனது துர்ப்பாக்கியத் தன்மை மிகவும் விசநிக்கத் தக்கதாம்! அதனால் மஹா பாக்கியத்தினை யுடைய உத்தமாதிகாரி தேகாதி ஸாமக்கிரியைகளைத் திருஷ்ட நஷ்ட ஸ்வபாவமாய் மித்தையாக அறிந்து, ஸதா வேதாந்த விசார முதலியவற்றில் தத்பரனா யிருத்தல் தகுதியாம்).



## 4—15. பிராந்தி.

ஐந்து பிராந்தியினைக் கூறுவாம்:—

### (1) பிந்நப் பிராந்தி.

(1) ஜீவாத்மா பிரஹ்மத்தினும் பிந்நமா யிருக்கின்றது; சுருதி ஸ்மிருதி ஸர்வ ஜநங்களின் அநுபவங்களினால் பேதம் சித்தமா யிருத்தலின்; "கட படாதி போன்று" என்னும் ஆகாரமாய் அஞ்ஞாநத்தின் பரிணாம ரூப சித்த விருத்தி, பாபத்தின் பிரபாவத்தினாலும், மந்த பாக்கியத் தன்மையினாலும், சுருதி தாத்பரிய ஞாநத்தின் அபாவத்தினாலும் உண்டாகின்றது. அது முதல் பிராந்தியாம்.

### (2) கர்த்திருத்வப் பிராந்தி.

(2) ஆத்மாவில், பிரத்தியக்ஷமாகத் தோன்றும் கர்த்ருத்வாதிகள் ஸத்தியமாம். அங்ஙனங் கொள்ளாக்கால், தர்மப் பிரவிர்த்தர்களின் வசநங்களும், பிரஹ்ம ஞாந சாதநப் பிரவிர்த்தர்களின் வசநங்களும் வியர்த்தமாம். கௌதமர் கபிலர் முதலிய ரிஷிகளின் அங்கீ

காரமும் வியர்த்தமாம். இவ்வாறு இகலோக பரலோக போகங்களின் ஆசையினுல் உண்டாம் அஞ்ஞானத்தின் பரிணும ரூப சித்த விர்த்தி இரண்டாவது பிராந்தியாம்.

(3) சங்கிப் பிராந்தி.

(3) ஸ்தூலாதி மூன்று சரீராவச்சிந்ந ஆத்மா, அவற்ருேடு வாஸ்தவமான ஸம்பந்த முடையதாம்; எதனுல், "நான் மநுஷ்யன்—சுகி—துக்கி—கர்த்தா—போக்தா—அஞ்ஞன்." என்பதாதி மூன்று சரீரத்தின் தர்மங்கள், தன்னிடத்தில் அநுபவஞ் செய்கின்றது என்னும் ஆகாரமாய், பரம்பரையாக தாதாத்மிய அத்தியாஸத்தின் பலத்திஞல் உண்டாம் அஞ்ஞானத்தின் பரிணும ரூப சித்த விர்த்தி மூன்ருவது பிராந்தியாம்.

(4) விகாரித் தன்மைப் பிராந்தி.

(4) பிரஹ்மம், ஜகத்திற்கு உபாதாந காரணமாக அங்கீகரிக்கப்பட்டிருத்தலின், அது விகாரியாம்; லோகத்தில் ஸ்வர்ணம் மண் முதலிய காரணங்கட்கு விகாரித் தன்மை பார்க்கப்படுதலின்; திருஷ்ட அநுஸாரியே, அதிருஷ்ட பதார்த்தத்தின் கல்பனையாகலின் என்னும் ஆகாரமாய் அஞ்ஞாந பரிணும ரூப சித்த விர்த்தி, தாத்பர்யத்தினை நிச்சயிக்கும் உபக்ரமாதி ஷட்வித லிங்கத்தின் அஞ்ஞானத்தினுலும், பிரஹ்மத்தின் அஸங்கத் தன்மை, விவர்த்த வாதங்களைப் போதிக்கும் சுருதிகளின் அஞ்ஞானத்தினுலும் உண்டாகின்றது. அது நான்காவது பிராந்தியாம்.

(5) ஸத்தியத் தன்மைப் பிராந்தி.

(5) எங்ஙனம் தந்து முதலியவற்றிலும் பிந்நமான படாதிகள், ஸத்தாகப் பார்க்கப்படுகின்றதோ, அங்ஙனமே பிரஹ்ம காரணத்தினும் பிந்நமாய பிரபஞ்சத்திற்கும் ஸத்தியத் தன்மை இருக்கின்றது; பேத மின்றிக் காரிய காரணத் தன்மை யின்மையின்; காரியத்திற்குக் காரண ஸமாந ஸத்தை யுடையதாந் தன்மை பார்க்கப்படுதலின். என்னும் ஆகாரமாய், ஜகத் ஸத்தியத் தன்மையினை விஷயமாகவுடைய சித்த விருத்தி யுண்டாகின்றது. அது ஐந்தாவது பிராந்தியாம்.



4—16. பிராந்தி நிவிர்த்தி.

பிராந்தியினை நிவிர்த்திக்கும் ஐந்து திருஷ்டாந்தத்தினுல் தார்ஷ்டாந்தத்தில் ஐந்து பிராந்தியினை நிவிர்த்திப்பதைக் கிரமமாகக் கூறுவாம்:—

(1) பேதப் பிராந்தி நிவிர்த்தி.

(1) பிராந்தி நிவிர்த்தியின் பிரகாரம் ஐந்தாம். எங்ஙனம், லோகத்தில் கடத்தி லுள்ள ஜல உபாதியின் ஸம்பந்தத்தினுல் ஆகாசத்திலுள்ள ஸூர்யனிடத்துப் பிம்ப பாவம், பிரதி பிம்ப பாவம் என்னும் இரு தர்மங்கள் அநிர்வசநீயமாக உண்டாய் விளங்குகின்றன. உபாதியின் நிவிர்த்தியினுல் பிம்பப் பிரதிபிம்ப பாவம் என்னும் இரண்டும் நிவிர்த்தியாகின்றன. சுத்த ஸூர்யனே யிருக்கின்றுன். அதனுல் பிம்பப் பிரதிபிம்பங்களின் ஸ்வரூபம் சுத்த ஸூர்யனே யாம். ஸூர்ய ஸ்வரூபத்தினுல் பிரதிபிம்பம், பிம்பம் என்னு மிரண்டும் ஸத்தியமாம். எங்ஙனம், கண்ணுடியோடு முகத்தின் ஸம்யோகத்தின் பின் சக்ஷு இந்திரியம் கண்ணுடியோடு சேர்ந்து, கழுத்தின் மேலுள்ள சுத்த முகத்தினையே கிரஹணஞ் செய்வதாய், அக் கண்ணுடியில் இருக்குந் தன்மையினைப் பிராந்தியினுல் கிரஹிக்கின்றது. அப்பொழுது அச் சுத்த முகத்தில் பிரதிபிம்ப பாவத்தின் கல்பனை யுண்டாகின்றது. அதன் அபேக்ஷையினுல் பிம்ப பாவத்தின் கல்பனையும் உண்டாகின்றது. உண்மையாகிய சுத்த முக ரூப அதிஷ்டாநத்தில் ஒரு பிராதிபாஸிக, அல்லது வியாவகாரிகப் பிரதிபிம்பமும் உண்டாவ தில்லை. பிரதிபிம்பத் தன்மை, பிம்பத் தன்மை என்னும் இரண்டும் சுத்த முகத்தில் கல்பிதமாமாயினும், பிம்பப் பிரதிபிம்பங்களின் பேத மின்று; ஏனெனின், இரண்டும் கிரீவஸ்த (கழுத்தின் மேலிருக்கும்) முக ஸ்வரூபமாகலின். அதனுல், பிரதிபிம்பமும் ஸத்தியமாம். அங்ஙனமே, ஒரு சுத்த சேதநத்தில் அநாதி அஞ்ஞாந ஸம்பந்தத்தின் வசத்தினுல் அஞ்ஞானத்தில் இருக்குந்

தன்மைப் பிராந்தியினால் பிரதிபிம்ப பாவம் ஆரோபிக்கப்படுகின்றது. அதன் அபேக்ஷையினால் பிம்ப பாவமும் ஆரோபிக்கப்படுகின்றது, அஞ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்ட பிரதிபிம்பத் தன்மை, பிம்பத் தன்மைகள் சுத்த சேதநத்தில் மித்தையாம். அங்ஙனமாமாயினும், பிரதிபிம்பம், பிம்பம் என்னும் இரண்டும் சத்தியமாம்; ஏனெனின், சுத்த சேதநத்தின் ஸ்வரூபமா யிருத்தலின். இஃது ஓர் அஞ்ஞானத்தினையே உபாதியாக வுடைய ஏக ஜீவ வாதமாம். இதில் ஜீவன், ஈசுவரன், சுத்த சேதநம் என்னும் மூன்று சேதநங்கள் அங்கீகாரமாம். ஜீவத் தன்மை விசிஷ்ட சேதநம் ஜீவனும். ஈஸ்வரத் தன்மை விசிஷ்ட சேதநம் ஈசுவரனும். அல்லது அஞ்ஞானப் பிரதிபிம்ப சேதநம் ஜீவனும், பிம்ப சேதநம் ஈசுவரனும். அவ்விருவர்களின் ஸ்வரூபம் சுத்த சேதநமாம். ஈண்டு தத் த்வம் பதங்கட்கு முக்கிய ஸாமாநாதிகரண்யம் இருக்கின்றது.

சிலரோ, ஜீவேசுவரர்கட்கு இரண்டு உபாதிகளைக் கொள்ளுகின்றனர்:— மாயையில் அதிஷ்டாந ஸஹிதப் பிரதிபிம்பம் ஈசுவரனும்; அவித்தையில் அதிஷ்டாந ஸஹிதப் பிரதிபிம்பம் ஜீவனும். அல்லது, சிலர் கடாகாச ஜலாகாசம் போன்று புத்தியி லுள்ள சேதநம், அதற் கதிஷ்டாந கூடஸ்தன், மேகாகாச மஹாகாசம் போன்று மாயையி லுள்ள ஈசுவரன், அதற்கதிஷ்டாந சேதநம் சுத்தப் பிரஹ்மம் என, நான்கு சேதநங்களைக் கொள்கின்றனர். அவர்கள் மதத்தில் பிராதிபாஸிகமாய் அநிர்வசநீயப் பிரதிபிம்பம் உண்டாகின்றது. அது ஸ்வரூபமாக மித்தையாம். அதன் அதிஷ்டாநமே ஸத்தியமாம். தத் த்வம் பதங்கட்குப் பாத சமாநாதிகரணமும், முக்கிய சமாநாதிகரணமும் என இரண்டும் இருக்கின்றன. புத்தியி லுள்ள ஆபாஸ சேதநத்திற்குப் பிரஹ்மத்தோடு பாத ஸமாநாதிகரணமாம். அதன் அதிஷ்டாந கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய ஸமாநாதிகரணமாம். எவ்விதத்தும் இரு மதத்திலும் பிம்பப் பிரதிபிம்பங்கட்கு அத்தியந்தம் பேத மில்லை. பின்னையோ, அநுகத ஒரு சேதந அஞ்ஞானத்தினால் பிராந்தியினால் பேதமாகத் தோற்றுகின்றது. ஒரு மதத்தில் பிரதிபிம்பம் ஸத்தியமாம் பிரதிபிம்பத் தன்மைத் தர்மம் மித்தையாம். மற்றொருவர் மதத்



தில் ஜீவேசுவர ஸ்வரூபமாகிய இரண்டு பிரதிபிம்பமும் மித்தையாம். அவற்றின் அதிஷ்டாந (சைதந்ய)ம் ஸத்தியமாம். இவ்வளவு பேத மிருக்கின்றது. எப்பொழுது இவ்வாறு மகாவாக்கியத்தினால் அநுக்கத ஒரு சேதநத்தின் தத்துவமஸ்யாதி மஹாவாக்கியார்த்த விசாரத்தினால் யதார்த்த ஞானம் உண்டாகின்றதோ அப்போது பிரத்யகாத்மா பூரணப் பிரஹ்மத்தோடு பேதத்தினைக் கிரஹிக்கும் முதற் பிராந்தி நிவிர்த்தி யாகின்றது. "தத்துவமஸி", "இவ் வாத்மாவில் ஸ்வல்ப பேதத்தினைச் செய்கின்றவன் பயத்தினை யடைகின்றான்." என்பன வாதிப் பிரமாணத்தினால். பேதத்தைக் கூறும் சுருதி ஸ்மிருதிகளோ, பிராந்தி ரூப லோக அநுபவத்தினை ஆசிரயித்து, சுரோதாவிற்கு அத்விதீயத்தைப் போதித்தற் பொருட்டு, ஜீவேசுவரர்களின் பேதத்தினை யநுவதிக்கின்றது. அதில் தாத்பர்ய மிருப்ப தில்லை. அபேதத்தினைக் கூறும் பிரபல சுருதியின் விரோதத்தினாலும், அறியப்படாத, பாதிக்கப்படாத சபல வஸ்துவினிடத்தே அதற்குத் தாத்பரிய மிருத்தலினாலும்.

### (2) கர்த்ருத்வப் பிராந்தி நிவிர்த்தி.

(2) எங்ஙனம், ஜபாகுஸுமத்தின் ஸந்நிதாநத்தினால் ஸ்படிக மணி ரூப அதிஷ்டாநத்தில், அஞ்ஞானத்தினால் ரக்த தர்மத்தின் அத்தியாஸம் உண்டாகின்றது. அத் தர்மம், ஸம்ஸர்க்காத்தியாஸமாம். சுக்ல குணாதி விசிஷ்ட்ட ஸ்படிக மணி ரூப அதிஷ்டாநத்தின் விசேஷ ஞானத்தினால், பாத மெனப்படும் மித்தியா புத்தியின் விஷயமாகின்றது. அங்ஙனமாயினும், ஜபாகுஸுமத்தின் நிவிர்த்தியின்றி ஸ்வரூபமாக நாச முண்டாவ தில்லை; அது ஸோபாதிப் பிராந்தி ரூபமாக விருத்தலின். அங்ஙனமே, பிரத்தியகாத்மாவில் அஹங்கார அத்தியாஸ வாயிலாய், அஹங்காரகத கர்த்ருத்வாதி தர்மங்கள் பிராந்தியினால் ஆத்மாவின்கண் பாந மாகின்றன. அத் தர்மம் ஸம்ஸர்க்காத்தியாஸமாம். அந்தக் கர்த்ருத்வாதிப் பிராந்தியும், அகர்த்ருத்வாதி ஆத்ம ஸ்வரூபத்தின் விசேஷ ஞானத்தினால், நிவிர்த்தி யாகின்றதா மாயினும், பிராப்த பரியந்தம் அதன் ஸ்வரூபம் நாச மாவதில்லை; அது ஸோபாதிகப் பிராந்தி ரூபமாக விருத்

தலின். தர்மப் பிரஹ்மப் பிரவர்த்தக வசநமோ, ஆத்மாவில் பரம் பரையாகப் பிராந்தியினுல் சித்தித்த கர்த்ருத்வாதி தர்மத்தின் அநுவாதத்தினுல், அகர்த்ருத்வ ஆத்ம ஸ்வரூபத்தின் ஞாநத்தின் பொருட்டு, பாப நிவிர்த்தி அந்தக்கரண சுத்திகளின் ஸாதநமாகிய நிஷ்காம தர்மத்திலும், பிரஹ்ம ஞாநத்தின் ஸாதநமாகிய சிரவணுதிகளிலும், பிரவர்த்தமாகின்றது. உண்மையான கர்த்ருத்வ பாவத்தில், அதற்குத் தாத்பரியம் இன்று. "ஸாக்ஷி சேதா கேவலம் நிர்க்குணம்.", "இவ் வாத்மா புத்தியின் ஏகாக்ரமாயின், ஏகாக்ரமுடையது போன்றே உண்டாகின்றது. சஞ்சல மாயின், சஞ்சலமுடையது போன்றே யுண்டாகின்றது.", "கொல்பவன் எப்பொழுது தன்னைக் கொல்லும் கிரியையின் கர்த்தாவாக அங்கீகரிக்கின்றனனே, நாசமாகுபவன் எப்பொழுது தன்னை நாசமாக அங்கீகரிக்கின்றனனே, அப்பொழுது அவ் விருவர்களும் அறியாதவர்களே.', என்பன வாதிப் பிரமாணத்தினுல். அக்ஷபாதர் கபிலர் முதலியோர்களின் அங்கீகாரமோ சுருதி தாத்பரியத்தின் அஞ்ஞாந ரூப தோஷத்தினுலேயாம். இவ்வாருய ஞாநத்தினுல் ஆத்மாவில் கர்த்ருத்வாதி தர்மத்தினை விஷயமாக வுடைய இரண்டாவது பிராந்தியின் நாச முண்டாகின்றது.

## (3) விகாரித் தன்மைப் பிராந்தி நிவிர்த்தி.

(3) எங்ஙனம் கடோபாதியினுல் அவச்சிந்நம் பண்ணப்பட்ட கடாகாசத்தில், கடத்தின்கண் ணுள்ள கொண்டுவருதல் முதலிய கிரியையின் கடாகாச நாமத்தின் பிராந்தி யுண்டாகின்றது. அஃது ஆகாசத்தின் அக்கிரியத் தன்மை, அஸங்கத் தன்மை, வியாபகத் தன்மைகளின் ஞாநத்தினுல் நிவிர்த்தியாகின்றதோ, அங்ஙனமே, மூன்று சரீராவச்சிந்ந பிரத்யகாத்மாவிலும் மூன்று சரீரங்களின் தர்மத்தின் பிராந்தி யுண்டாகின்றது, அதுவும், அஸங்க அபரிச்சிந்ந ஆத்ம ஸ்வரூபத்தின் ஞாநத்தினுல் அத்தியாஸ நிவிர்த்தி பூர்வகம் முமுக்ஷுக்களால் நிவிர்த்திக்கத் தக்கது. "ஏ கார்கி! இவ் வக்ஷரத்தினைப் பிராஹ்மணர் அஸ்தூலம் அநணு முதலியவைகளால் கூறுகின்றனர்.", "இவ் வாத்மா அஜரம் அமரமாம்." என்பன வாதி



சுருதியினுல். இப் பிராந்தி நிரூபண ஸ்தலத்தில் கூறிய ஸர்வ ஜந அநுபவம், சுருதியாதி விரோதத்தினுல் ஆபாஸ ரூபமாக விருத்தலின். இது மூன்ருவது பிராந்தி நிவிர்த்தியின் பிரகாரமாம்.

## (4) சங்கிப் பிராந்தி நிவிர்த்தி.

(4) விகாரியாகிய பிரபஞ்சம் அவித்தையின் பரிணுமமாம். அங்ஙனமாயினும், அதிஷ்டாநப் பிரஹ்மத்தின் விவர்த்தமா யிருக்கின்றது. அது காண்பிக்கப்படுகின்றது. எங்ஙனம், அறியப்படாத இரஜ்ஜு அவச்சிந்ந சேதநம் அஞ்ஞாநத்தினுல் கற்பிக்கப்பட்ட ஸர்ப்பாதிகட்கும், அவற்றின் ஞாநத்திற்கும், அதிஷ்டாநமுமாம். ஆயினும், ஒரு காலத்தும் தனது ஸ்வரூபத்தினைத் தியாகஞ் செய்வதில்லை. பரிணுமி பாவத்தினுல் விகாரியும் ஆவதில்லையோ, அங்ஙனமே, ஜகத் காரணமாகிய பிரஹ்மமும் விவர்த்த வாதத்தின் அபிப்பிராயத்தினுல் அஞ்ஞாநத்தினுற் கற்பிக்கப்பட்ட ஜகத்திற்கும், அதன் ஞாநத்திற்கும் அதிஷ்டாநமாயினும், சுத்த ஸ்வரூபமாகவே யிருக்கின்றது. ஒரு காலத்தும் பரிணுமித் தன்மையினுல் விகாரியாவ தில்லை. கல்பிதம் அதிஷ்டாந ஸ்வரூபத்தின் தூஷக மின்றி யிருத்தலின். அதனுல், முமுக்ஷுக்களால் சுருதி ஆசாரியர்களின் பிரஸாதத்தினுல், இவ் வித ஞாநத்தினை யடைந்து, விகாரித் தன்மைப் பிராந்தியினை நிவிர்த்தி செய்தல் யோக்கியமாம். பரிணுமவாதத்தினை அங்கீகரித்து நான்கு பிராந்திகளில் கூறிய லோக திருஷ்டாந்தமோ சுருதியினுல் பிரஹ்மத்தில் பரிணும வாதத்தின் கண்டநஞ் செய்யப்பட்டிருத்தலின், ஆதரவு செய்யத் தக்க தன்ரும். "நிஷ்கிரியன், நிஷ்கலன், நிர்வந்தியன், நிரஞ்ஜநன்" என்பதாதி சுருதியினுல். இது நான்காவது பிராந்தி நிவிர்த்தியின் பிரகாரமாம்.

## (5) பிரபஞ்ச சத்தியத் தன்மைப் பிராந்தி நிவிர்த்தி.

(5) எங்ஙனம், ஸ்வர்ணத்தினின்றும் நாநாவித பூஷணமும், இரும்பினின்று நாநாவித வாள் முதலியவைகளு முண்டாகின்றன. அவை பிரதீதியினுல் காரணத்தினும் பிந்நமா மாயினும், உண்மையாக அவ்ற்றிற்குக் காரணத்தினும் பிந்நமாக ஸத்தையின் அபாவத்

தினால், காரணத்தில் முக்காலத்திலும் அசத்தா யிருக்கின்றதோ, அங்ஙனமே, காரணமாகிய பிரஹ்மத்தினும், பிந்நத் தன்மையினால் தோற்றும் பிரபஞ்சத்திற்கும் ஸ்வதந்த்ரமாகச் சத்தை யின்று. பேதத் தோற்றம் மித்தையாக விருத்தலின். அதனால், பிரபஞ்சத்திற்கும் பிரஹ்மத்தில் முக்கால அபாவம் இருக்கின்றது. இவ்வாறுரிய யுக்தியால் பரபஞ்சத்தின் ஸத்தியத் தன்மைப் பிராந்தி முமுக்ஷுக்களால் நிவிர்த்திக்கத் தக்கதாம். பரிணாம ஆரம்ப வாதங்களில் உபாதாநத்தின் ஸமாந ஸத்தை யுடைய உபாதேயமாகிய காரியம் லோகத்தில் பார்க்கப்படுகின்றதா மாயினும் விவர்த்த வாதத்தில் உபாதாநத்தின் விஷம ஸத்தை யுடைய காரியம் இரஜ்ஜு சர்ப்பாதிகளில் பார்க்கப்படுகின்றது. அதனால், விவர்த்த வாதத்தின் அபிப்பிராயத்தினால் திருஷ்ட பதார்த்தத்தின் அநுஸாரமாகவும் அதிருஷ்டமாகிய பிரஹ்மத்தில் தோற்றும் பிரபஞ்சத்தின் பேதம் மித்தையே (அநிர்வசநீயமே)யாம். "விகாரம் (காரியம்) வாசாரம்பண மாத்திரமா (மித்தையா)ம். மண்ணே ஸத்தியமாம்." என்பதாதி சுருதியினால். இவ்வாறு முமுக்ஷுக்களால் விசாரிக்கத் தக்கது. இஃது ஐந்தாவது பிராந்தியினை நிவிர்த்திக்கும் பிரகாரமென்று கூறப்படுகின்றது.

### 4—17. பிரஹ்மத்தில் ஜகத் பிராந்தி திருஷ்டாந்தம்.

இப்பொழுது ஸஜாதீயாதி பேத மின்றிய அத்விதீயப் பிரஹ்மத்தில் பிராந்தியினால் ஜகத்தின் பிரதீதி யுண்டாகின்றது. அதில், ஐந்து திருஷ்டாந்தங்கள் இருக்கின்றன:— சுக்தியில் இரஜதமும், இரஜ்ஜுவில் சர்ப்பமும், ஸ்தாணுவில் புருஷனும், ஆகாயத்தில் நீலத் தன்மை முதலியனவும், ஊஷர பூமியில் ஜலமும் என்பன ஐந்து திருஷ்டாந்தங்களாம்.

இப்பொழுது சுக்தி இரஜாதிகளை மித்தை யெனக் கூறி ஜகத் பிரதீதியின் நிவிர்த்தியும் கூறப்படுகின்றது:— எங்ஙனம் சுக்தி முதலிய ஐந்து அதிஷ்டாநத்தோடு தோஷத்தோடு கூடிய சக்ஷுவின் ஸந்நிகர்ஷத்தின் பின் அதிஷ்டாநத்தின் விசேஷ அம்சத்தினை யறியாது ஸாமாந்ய அம்சத்தினைக் கிரஹிப்பதாக



உண்டாம் இதமாகார விருத்தியினால் சுக்தியாதி அவச்சிந்ந விஷய சேதநத்தின்கண் ணுள்ள தமப் பிரதாந அவித்தையானது காரிய உன்முகத் தன்மை ரூப க்ஷோபத்தினை யடைந்து ரஜதாதி ஆகாரமாகப் பரிணமிக்கின்றது. விருத்தி அவச்சிந்ந சேதநத்தி லுள்ள ஸத்துவப் பிரதாந அவித்தையானது அதன் ஞாநாகார பரிணாமத்தினை யடைகின்றது. விருத்தி சுத்தியாதி என்னும் இரண்டு உபாதிகளும் ஒரு தேசத்தி லிருக்கில், அதி லுள்ள இரண்டு சேதநமும், அதி லுள்ள இரண்டு அவித்தையும் ஒன்றாகின்றதாமாயினும், விஷயாவச்சிந்நத் தன்மை ரூப, விர்த்தி அவச்சிந்நத் தன்மை ரூப, தர்மத்தின் பேதம் ஒரு சேதநத்திலும் இருக்கின்றது. அதனால் இரஜதாகார பரிணாமத்தின், ஞாநாகார பரிணாமத்தின் அவித்தையில் பேதங் கூறப்பட்டது. எப்பொழுது நிர்த்தோஷமாய சக்ஷு ரூப பிரமாணத்தினால் உண்டாய ஞாநத்தினால் அதிஷ்டாநத்தின் விசேஷாம்சத்தினை மறைக்கும் அஞ்ஞாநத்தின் நாச முண்டாய் அதிஷ்டாநத்தின் விசேஷம் பாந மாகின்றதோ, அப்பொழுது இரஜதாதிகள், அதனுகாரப் பிராந்தி ஞாநங்கள் என்னும் இரண்டும் நாசமாகின்றனவோ, அங்ஙனமே ஸம்ஸார தசையில் அத்விதீயப் பிரஹ்மத்தில் அஞ்ஞாநத்தின் பரிணாம ரூப ஜகத்தும், ததாகார ஞாநமும் பிரதீதியாகின்றன. அதுவும் விசாரிக்கப்பட்ட மஹா வாக்கியத்தினால் உண்டாகும் ஞாநத்தினால் பிரஹ்மத்தின் விசேஷாம்சத்தின் மறைப்பு ரூப அஞ்ஞாநம் நாசமாய் விசேஷ ரூபத்தினால் பிரஹ்மத்தின் விளக்கமுண்டாய்ப் பிரபஞ்சமும், அதனுகார ஞாநமும் பாதிக்கப்படுகின்றன. இவ்வாறு யுக்தியின் ஞாநத்தினால் முமுக்ஷுக்களால் பிரஹ்மத்தி லுள்ள ஜகத் பிராந்தி நிவிர்த்திக்கத் தக்கதாம். ஈண்டு ஜகத்தின் தோற்றத்தில் கூறிய ஐந்து திருஷ்டாந்தங்கள் பிரதாநத்தின் அபிப்பிராயத்தினால் கூறப்பட்டன. எண்ணிக்கையின் நியம அபிப்பிராயத்தினா லன்று. ஏனெனின் வேதாந்தங்களில் அநந்த திருஷ்டாந்தங்கள் இருத்தலின்.

### 4. 18—கியாதி.

முற் கூறப்பட்ட பிராந்தியும், வாதிகளின் மத பேதத்தினால் ஐந்து பிரகாரமாம். எதனை ஐந்து கியாதி யென்றுங் கூறுகின்றனர்,

இவ்வாறு ஆத்மக் கியாதி முதலிய பேதத்தினுல் கியாதி ஐ வகைத் தாம்.

## (1) ஆத்மக் கியாதி.

(1) விஞ்ஞான ரூப அந்தராத்மாவின் பரிணும ரூப ஸத் இரஜதமாம். தோஷத்தோடு கூடிய சக்ஷுஸ் சுக்தி ரூப அதிஷ்டானத் தோடு சேர்ந்த பின், முன்னிருக்கும் சுக்தியில் உண்டாம் "இதம் இரஜதம்" என்னும் ஆகார ஞானத்தினுல் ஸத் இரஜதத்தின் வெளியில் விளக்க ரூபப் பிராந்தியாது அது ஆத்மக் கியாதியாம். அதனுல் அதிஷ்டான ஞானத்தின் பின் "இது இரஜத மன்று" என்னும் பாத ஞானத்தினுலும் இரஜதத்தின் வெளியி லிருக்கும் தன்மைக்கே பாத முண்டாகின்றது. உள் ளிருக்கும் ஸத் இரஜதத்திற்கும் பாத முண்டாவ தில்லை அதன் ஞானத்திற்குப் பாத முண்டாவ தில்லை. இது க்ஷணிக விஞ்ஞான வாதியின் மதத்தில் பிராந்தி ஞானம் பாத ஞானங்களின் கதியாம்.

## (2) அஸத் கியாதி.

(2) சூந்யவாதி ஸர்வப் பிரபஞ்சத்தினையும் சூந்யமாகக் கொள்ளுகின்றனன். அவனே இவ்வாறு கூறுகின்றனன்:--சூந்ய ரூப சுத்தியாதிகளோடு தோஷ ஸஹித சக்ஷுஸ்வின் ஸங்கிகர்ஷத்தின் பின் அஸத்தாகிய சுக்தியாதி அதிஷ்டானத்தில் "இதம் இரஜதம்" என்னும் பிராந்தி ஞானத்தினு லுண்டாம் அத்தியந்த அஸத் இரஜதத்தின் விளக்கம் யாது, அது அஸத் கியாதியாம். இது நிரதிஷ்டானப் பிராந்தியாம். அது அத்புத மாஹாத்மியத்தினை யுடைய தோஷத்தின் பிரபாவத்தினுலாம். அதிஷ்டான சுத்தி ஞானத்தின் பின்னரும் உண்டாம் "இது இரஜத மன்று" என்னும் பாத ஞானம், முக்கால அஸத் இரஜதத்தினை விஷயமாக வுடையதாம். எந்த உண்டாய இரஜதத்தினையும் பாதிக்க வில்லை; இது மாத்தியமிக (சூந்ய வாதிகளின்) மதமாம்.

## (3) அக்கியாதி.

(3) சுத்தியாதி அதிஷ்டானத்தோடு தோஷ ஸஹித சக்ஷுஸ் வின் ஸங்கிகர்ஷத்தின் பின் உண்டாம் "இதம் இரஜதம்" என்னும்



ஆகார ஞானம், இது என்னும் அம்சத்தில் முன்னர் இருக்கும் சுக்தியினை விஷயமாக வுடைய பிரத்தியக்ஷ ஞானமாம். "இரஜதம்" என்னும் அம்சத்தில் ஸ்திரீயின் கரம் முதலியவற்றி லுள்ள முன் பார்த்த ஸத் இரஜதத்தினை விஷயமாக வுடைய ஸ்மிருதி ஞானமாம். இவ்விரண்டின் பேதத்தின் தோற்ற மின்மை அக்கியாதியாம். அதிஷ்டான ஞானத்தின் பின் இது 'இரஜத மன்று' என்னும் பாத ஞானமும், முன்னர் உள்ள விஷயத்தில் இரஜதத்தின் வியவஹாரத்தினைப் பாதிக்கின்றது. ஸ்திரீயின் கரம் முதலியவற்றி லுள்ள ஸத் இரஜதத்தினைப் பாதிப்ப தில்லை. அதன் ஞானத்தினைப் பாதிப்பது மில்லை. எல்லா ஞானங்களும் பிரமை ரூபமாக விருத்தலின். இது ஸாங்கிய பிரபாகரர் என்னும் இருவர்களினது மதமாம்.

## (4) அந்யதாக் கியாதி.

(4) சுக்தியாகிய அதிஷ்டானத்தினேடு தோஷ ஸஹித சக்ஷுஸ் வின் ஸங்கிகர்ஷத்தின் பின் உண்டாம் "இதம் இரஜதம்" என்னும் ஆகார ஞானம் மத்தியி லுள்ள ஸ்திரீயின் கர முதலியவற்றி லிருக்கும் ஸத் இரஜதத்தின் தர்மமாகிய இரஜதத் தன்மைக்கு முன்ன ருள்ள சுக்தி விசிஷ்டத் தன்மையினுல் தோஷத்தின் பலத்தினுல் உண்டாம் பானம் அந்யதாக் கியாதியாம். "இது இரஜத மன்று" என்னும் பாத ஞானமும், முன்ன ருள்ள சுக்தியில் இரஜதத் தன்மையின் விசிஷ்டத்தன்மையினையும், அதன் ஞானத்தினையும் பாதம் செய்கின்றது. தேசாந்திரத்தி லுள்ள ஸத் இரஜதத்தினைப் பாதம் செய்வ தில்லை. அல்லது முன்ன ருள்ள சுக்தியோடு தோஷ சகித சக்ஷுஸ் வின் ஸங்கிகர்ஷத்தின் பின் உண்டாம் "இதம் இரஜதம்" என்னும் ஆகார ஞானத்தினுல் காந்தையின் கரம் முதலியவற்றி லுள்ள முன் பார்த்த ஸத் இரஜதத்தின் ரூபத்தினுல் தோஷத்தின் பலத்தினுல் உண்டாம் சுக்தியின் பானம் அந்யதாக் கியாதியாம். அதிஷ்டான ஞானத்தின் பின் "இது இரஜத மன்று" என்னும் பாத ஞானமும், முற் புகன்ற பிராந்தி ஞானத்தினையே பாதிக்கின்றது. ஸத்திய இரஜதத்தைப் பாதிப்ப தில்லை. இது பட்ட வைசேஷிகர் என்னும் இருவரது மதமாம்.

### (5) அநிர்வசநீயக் கியாதி.

(5) சுக்தியாய அதிஷ்டானத்தோடு தோஷ ஸஹித சக்ஷுவின் ஸங்நிகர்ஷத்தினால் உண்டாம் அதிஷ்டானத்தின் ஸாமாந்ய அம்சத்தினை விஷயமாக வுடைய இதமாகார விர்த்தியின் பின் சுக்தி அவச்சிந்ந சேதநத்தி லுள்ள அவித்தையின் தாமச பரிணாம ரூப அநிர்வசநீய ரஜதம் உத்பந்ந மாகின்றது. அந்த க்ஷணத்திலே இதம் விருத்தி யவச்சிந்ந சேதநத்தி லுள்ள அவித்தையின் ஸாத்விகப் பரிணாம ரூப அநிர்வசநீய ஞானம், இதம் விருத்தி விஷய சுக்தியோடு அநிர்வசநீய இராஜதத்தின் அபேத ஸம்ஸர்க்கத்தினைக் கிரஹிப்பதாக உண்டாகின்றது அதனால் அதன் பாதம் அநிர்வசநீயக் கியாதியாம். அதில் "இது இராஜத மன்று" என்னும் பாத ஞானத்தினால், முன்னருள்ள சுக்தியாய அதிஷ்டானத்தில் அநிர்வசநீய இராஜதத்திற்கும், அதன் ஞானத்திற்கும் பாதம் உண்டாகின்றது. இது வேதாந்திகளின் மதமாம்.

இந்த ஐந்து வித பிராந்தியின் பேதம் மத பேதத்தினால் காண்பிக்கப்பட்டது. ஆத்மக் கியாதி முதலிய நான்கு மதத்தில் எதனால் ஆசாரியர்களால் யுக்தி விரோதம் அநந்த பிரகாரமாகக் கூறப்பட்டிருக்கின்றதோ, அதனால் முமுக்ஷுக்களால் அவற்றை ஆதரவு செய்யத்தக்க தன்றாம். அத்வைத ஞானத்திற்கு அநுபயோகியா யிருத்தலின். கேவலம் அநிர்வசநீயக் கியாதியே அத்வைத வாதத்தில் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அநிர்வசநீயப் பிரபஞ்சத்தின் பாத பூர்வகம் அதிஷ்டான அத்வைத ஞானத்தில் ஸஹகாரியா யிருத்தலின். எதனால் விஞ்ஞாநாத்மாவின் பரிணாமமாகிய ஸத் இராஜதம், புத்தியினுள் இருக்கினோ, "உள்ளே இராஜத மிருக்கின்றது" என ஞானம் எல்லோருக்கும் உண்டாக வேண்டும். "ஈண்டு இராஜத மிருக்கின்றது" என சமீபத்தி லுள்ள சுக்தி முதலியவைகளில் இராஜத விஷிஷ்டத் தன்மையின் ஞானம் உண்டாகாது. அந்தர் (உள்) இராஜததில் வெளித் தன்மையின் பிராந்தி, தோஷத்தின் பலத்தினால் உண்டாகின்றதென்று கூறினோ, "வெளியில் இராஜத மில்லை" என்று எல்லோருக்கும் பாத ஞானம் உண்டாகும். முன் உள்ளதில் "இது இராஜத மன்று" என்று இராஜதத்தின் பாத ஞானம் ஒருவருக்கும் உண்டாகாது.



(1) சமீபத்தி லிருப்பதில் இராஜதம் முக்காலத்திலும் அஸத்தாயினோ "இதில் இராஜத மிருக்கின்றது." என்று இராஜதத்தினை விஷயமாகவுடைய பிரத்தியக்ஷ ஞானம் உண்டாகாது. எதனால், அஸத்தாய ஆகாச புஷ்பம், ஸஸவிஷாணத்தின் பிரத்தியக்ஷ ஞானம் ஒருவருக்கும் உண்டாகின்ற தில்லை. (2) தேசாந்தரத்தில் இந்த ரஜதம் ஸத்தாயினோ, இராஜதத்தை இச்சிக்கும் புருஷனது பிரவிர்த்தி ஆண்டே யுண்டாம். எதிரி லுள்ளதில் பிரவிர்த்தி யுண்டாகாது. எதனால், "இதம் இராஜதம்" என்பதாதி பிரவர்த்தக மாகிய ஞானம், தன் விஷயத்திலேயே புருஷனை பிரவிர்த்திக்கின்றது. அந்யத்தில் பிரவிர்த்திக்கின்ற தில்லை. "இதம் இராஜத மன்று" என்னும் ஞானத்தில் இராஜதத்தின் பாதம் பிரத்தியக்ஷமாகப் பார்க்கப்படுகின்றது, அதுவும் உண்டாகாது. (3) (4) அதனால் முன்னருள்ளதில் இராஜதம் உத்பத்தி யாகின்றது. அது ஸத்து மன்று. அஸத்து மன்று. பின்னையோ, இரண்டின் விலக்ஷணமாய அநிர்வசநீயமேயாம். இது அநிர்வசநீயக் கியாதியின் அங்கீகாரத்தில் யுக்தி லேச மாத்திரங் காண்பிக்கப்பட்டது.

## 4—19. கிலேசம்.

ஐந்து கிலேசத்தினைக் கூறுவாம்:— அவித்தை முதலியவற்றின் பேதத்தினால் கிலேசம் ஐ வகைத்தாம்.

### (1) அவித்தை.

(1) அவற்றுள் யதார்த்த ஞானத்தின் விரோதியாய விபரீத ஞானம் அவித்தையாம். அவித்தையின் காரியமா யிருத்தலின். எதனைக் காரியாவித்தை யென்றுங் கூறுவர். பகவான் பதஞ்ஜலியும், "அஃதின்றியதன்கண் அதன் தோற்றம் அவித்தையாம்." என்று அவித்தையின் ஸாமாந்ய லக்ஷணத்தினால் விபரீத ஞானத்தினை அவித்தை யென்று கூறியிருக்கின்றனர்

அந்த அவித்தை நான்கு வகைத்தாம்:— கர்மத்தின் பலமாகிய ஸ்வர்க்க லோகம் முதல் ஸத்திய லோக பரியந்தம் அநித்தியமாக இருக்கின்றது. அதில் பிராந்தியினால் நித்திய மென்னும் புத்தி முதலாவது அவித்தையாம். மல மூத்ராதிகளினால் பூரிக்கப்பட்டு

ஸ்திரீயாதி சரீரம் அசுசியா யிருக்கின்றது. அதில் சுசி என்னும் புத்தி இரண்டாவது அவித்தையாம் அஹங்காராதி தேஹ பரியந்தம் அநாத்மாவா யிருக்கின்றது. அதில் ஆத்ம புத்தி மூன்றுவது அவித்தையாம். சுக மின்றிய விஷய போகம், அதன் ஸாதந ஸ்நக் சந்தநாதி, அல்லது துக்கத்தின் ஸாதநமாகிய பிராணியின் ஹிம்ஸை கட் குடித்தல் பரஸ்திரீ கமநம் முதலியவற்றில் இராகத்தினுல் ஸுகம் என்னும் புத்தி நான்காவது அவித்தையாம்.

(2) அஸ்மிதை.

(2) ஸாமாந்ய அஹங்கார ரூப அந்தக்கரணத்தில் சேதநத்தின் தாதாத்மிய அத்தியாஸமாகிய "நான்" என்னும் ஞாநத்தின் விஷயம் அஸ்மிதையாம். "த்ருஷ்டா புத்தி என்னும் இரண்டு சக்திகளின் ஏகத் தன்மை அஸ்மிதையாம்." என்னும் சூத்திரத்தினுல்.

(3) ராகம்.

(3) ஸ்திரீ தநாதி ஸ்வர்க்காதி இஷ்ட விஷயத்தின் தரிசந சிரவணத்தின் பின் அதன் பிராப்தியின் இச்சை ராகமாம்.

(4) துவேஷம்.

(4) ஸிம்ஹம் சர்ப்பம் சத்ரு இராஜ பீடை கிரஹ பீடை முதலிய அநிஷ்ட விஷயத்தின் தரிசந சிரவணத்தின் பின் அதனின்றும் நிவிர்த்தித்தல், அல்லது நிவிர்த்திக்கும் இச்சா பூர்வகம் அவற்றில் பிரதிகூல புத்தி துவேஷமாம்.

(5) அபிநிவேசம்.

(5) சரீராதி வியோக ரூப மரணத்தின் ஸதா பயம், அல்லது ஸஹிப் பின்மை, பூர்வ ஜந்மத்தில் அநுபவிக்கப்பட்ட மரண துக்கத்தின் அநுபவத்தினுல் உண்டாய வாஸனையின் பலத்தினுல் எல்லோருக்கும் உண்டாகின்றது. அது அபிநிவேசமாம்.

அல்லது, அவித்தை அஸ்மிதை அசூயை ஸ்பர்த்தா (இராகம்) அபிநிவேசம் எனக் கிலேசம் ஐந்தாம்.



அவித்தையோ முற் கூறப்பட்டிருக்கின்றது. (1) மல மூத்திராதிகளினுல் போர்த்தப்பட்ட ஸ்தூல சரீரமே "நான்" என்னும் அபிமாநம் அஸ்மிதையாம். (2) த்வேஷ புத்தியினுல் அந்யரது குணத்தில் தோஷத்தின் ஆரோபணம் அசூயையாம். (3) அந்யனது ஸம்பத்தின் ஞாநாதி உத்கர்ஷத்தின் ஸகிப் பின்மை ஸ்பர்த்தாவாம். (4) லோகத்தின் ரஞ்சநத்தின் பொருட்டு அதன் உசித கர்ம உத்தியோகமும், அதன் அநுஸாரப் பிரவிர்த்தியும், வேஷாதி தாரணமும் அபிநிவேஷமாம். (5)

(எதனுல் இவ் வைந்து கிலேசங்களால் ஜீவன் பாதிக்கப்பட்டு நாநாவித உயர்வு தாழ்வான அவஸ்தைகளை அடைகின்றுன், அதனுல் அதிகாரிகள் இவற்றினை நிவாரணஞ் செய்தல் ஆவசியமாம். அவற்றில் குரு சாஸ்திர அப்பியாஸ வாயிலாய் அடைந்த நல்ல ஞாநத்தினுலும், தோஷ ஸஹிதப் பிரபஞ்சத்தின் மித்தியா ஞாநத்தினுலும் நான்கு வித விபரீத புத்தி ரூப அவித்தையின் கிலேசத்தினை நிவிர்த்தி செய்க. பால் ஜலங்களைப் பிரிப்பது போன்று ஜட சேதநத்தின், அல்லது ஆத்மாநாத்மாவின் விவேகத்தினுல் இருவித அஸ்மிதையினை நிவாரணஞ் செய்க. தநாதி இஷ்ட விஷயத்தில் சாஸ்திரத்திற் கூறிய தோஷத்தின் தரிசநத்தினுல் ராகமாய கிலேசத்தினை நிவிர்த்திக்க. ஸர்வத்திலும் ஆத்ம பாவனையினுல் த்வேஷம் அசூயை ஸ்பர்த்தாக்களை நிவிர்த்திக்க. ஜரா மரண மின்றிய அஸங்காத்மாவின் ஞாநத்தினுலும், உயர்வு தாழ்வாகிய எல்லோரையும் மித்தை யென்னும் அநுஸந்தாநத்தினுலும் இருவித அபிநிவேசத்தினை நிவிர்த்திக்க.)

**4 - 20. ஜீவந் முக்தி.**

ஜீவந் முக்தியின் ஐந்து பிரயோஜநத்தினைக் கூறுவாம். பிரஹ்மாத்ம சாக்ஷாத்காரத்தினை யுடைய புருஷனுல் கர்த்ருத்வாதி ஸகல பந்தத்தின் தோற்ற நிவிர்த்திரூப சித்த விசிராந்தியின் பொருட்டு மநோ நாசம் வாசநா க்ஷயம், தத்துவ ஞாநம், என்பன வெகு காலம் கூடவே அப்பியாஸம் செய்யப்படுகின்றது. அவற்றுல் சித்தனைய் வெகு காலம் இருப்பதாகிய திட நிர்விகல்ப ஸமாதி ஜீவந் முக்தியாம்.

ஞாந ரக்ஷை தபம் ஸம்வாதம் துக்க நிவிர்த்தி ஸுகப் பிராப்தி என்னும் பேதத்தினுல் ஜீவன் முக்தியின் பிரயோஜநம் ஐந்தாம்.

(1) ஞாந ரக்ஷை.

(1) அவற்றுள், பிரஹ்ம சாக்ஷாத்கார முண்டாய புருஷனுக்கு பிரஹ்மாத்ம தத்துவத்தில் மநோ நாசம் முதலிய மூன்றும் ஒரே காலத்து அப்யாஸத்தின் பிரபாவத்தினுல் உண்டாய், மீண்டும் ஸம்ஸய விபரீத பாவனைகள் உண்டாகாதிருத்தல் ஞாந ரக்ஷா ரூபப் பிரதமப் பிரயோஜநமாம். எதனை ஞாந தார்ட்டியம் என்றும் கூறுகின்றனர். பிரமாண குசல முக்கியாதிகாரியாகிய ஸாக்ஷாத் காரவானுக்கு ஞாநத்தின் பின் ஸம்சய விபரீத பாவனைகளின் பிராப்தி யின்ருயினும் அமுக்யாதிகாரியாகிய ஞாந முடையோனுக்குப் பிராரப்த போகத்தின் பொருட்டுத் த்வைத தரிசந ரூப நிமித்தத்தின் வசத்தினுல் ஸம்சயாதிகளின் ஸம்பாவனை யுண்டாகின்றன. எதனுல் ஸாக்ஷாத்காரத்தின் பின் முன் போன்று பிராரப்த போக காலத்தில் "நான் நீ" என்ப தாதி வியவஹாரம் ஞாநியினிடத்தும் பார்க்கப்படுகின்றது. எப்பொழுது அபரோக்ஷ ஞாநியாகிய சுகர், ஸ்ரீராமர், நிதாகர், பகிரதன் முதலியோர்களுக்கு ஞாநத்தின் பின்னும் ஸம்சயாதிகள் சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றனவோ, அப்பொழுது அகிருதோபாஸகனுய அமுக்கியாதிகாரிக்குச் சித்தம் விசிராந்த மின்மையினுல் ஸம்சயாதிகள் உண்டாமென்பதில் கூற வேண்டுவ தென்னை. அதனுல் ஜீவந் முக்தியின் அப்பியாஸத்தினுல் அபரோக்ஷ ஞாநிக்கு ஒருகாலத்தும் ஸம்சயாதிகள் உண்டாகாத ரூப ஞாந ரக்ஷை, பிரதமப் பிரயோஜநமெனல் பொருந்துகின்றது.

(2) தபம்.

(2) ஞாநியின் சித்தத்தின் தடை யற்ற ஏகாக்ரத் தன்மை, தபோ ரூப இரண்டாவது பிரயோஜநமாம். "மந இந்திரியங்களின் ஏகாக்ரத் தன்மை பரம தபமாம்" என்னும் சங்கர(ாசார்ய) ஸ்வாமிகளின் வசநத்தினுல். கேவல ஞாநிக்கும் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மை, ஆத்மாவின் ஸத்தியத் தன்மை நிச்சயங்களினுல்,



சித்தத்தின் ஏகாக்ரத் தன்மை யிருக்கின்றதாமாயினும், பிராரப்த போக சமயத்தில் பாதிக்கப்பட்ட பிரபஞ்ச ஞாநத்தின் ஸம்பவத்தினுல் அது நிரங்குச சித்தத்தின் ஏகாக்ரத் தன்மை யன்று. ஜீவந் முக்த ஞாநிக்கோ, யோகாப்பியாசத்தினுல் ஸம்பூர்ண சித்த விருத்திகளின் உதய மின்மையினுல் நிரங்குச ஏகாக்கிரத் தன்மை உண்டாகின்றது. அதுவே தபோ ரூப இரண்டாவது பிரயோஜநமாம். அந்த ஜீவந் முக்த வித்வானது தபமும் லோக சங்கிரஹத்தின் பொருட்டாம்.

கிரஹிக்கும் அதிகாரிகளும், சிஷ்யன் பக்தன் தடஸ்தன் என்னும் பேதத்தினுல் மூ வகைத்தாம். அவற்றுள்:—

(1) சிஷ்யன்.

(1) அதிகாரியாய சிஷ்யன், ஞாநியாகிய குருவின் சிசுருஷை பக்திவாயிலாய் அவரது உபதேச மார்க்கத்தால் அடிக்கடி சிரவணுதிகள் செய்து பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்தினை யடைந்து மோக்ஷத்தினை யடைகின்றுன். "ஆசாரியரை யுடைய புருஷனே பிரஹ்மத்தினை யறிகின்றுன்" என்னும் பிரமாணத்தினுல். எதனுல் அந்த ஜீவந் முக்த ஞாநியின் உபதேசாதிகள் அமோகமாய் இருக்கின்றதோ, அதனுல் அதிகாரியாகிய சிஷ்யனிடத்தில் அவனது உபகாரம் உபதேசவாயிலாய்ச் சித்திக்கின்றது.

(2) பக்தன்.

இரண்டாவது பக்தனுய அதிகாரி, ஸத்சிரத்தையினுல் அவனைப் பூஜிக்கின்றுன், சேவை செய்கின்றுன்; அந்நபாநாதிகளைக் கொடுக்கின்றுன். (அதனுல்) அவனும் அச்சேவை தாநங்களின் பிரபாவத்தினுல் உத்தம லோகாதிப் பிராப்தி ரூப இச்சிக்கப்பட்ட பலத்தினை யடைகின்றுன் எதனுல் ஜீவந் முக்த வித்வான் ஸர்வ பாத்திரத்தினின்னும் உத்தம பாத்திரமா யிருக்கின்றுன். "மனுஷ்யன் கோடி பிராஹ்மணர்களின் போஜநத்தினுல் எப்பலத்தினை அடைகின்றுனே, அப்பலத்தினை ஒரு ஞாநியின் போஜநத்தினுல் அடைகின்றுன்" என்னும் பிரமாணத்தினுல்,

(3) தடஸ்தன்.

மூன்றாவது தடஸ்தன் இரு வகைத்தாம்:—ஒருவன் ஆஸ்திகன், ஒருவன் நாஸ்திகன். அவ்விருவர்களுள், ஆஸ்திக புருஷன் அந்த ஞானியின் ஸதாசாரப் பிரவர்த்தியினைப் பார்த்துத் தானும் அவன் ஸம்பந்த வாயிலாய் ஸதாசாரத்தில் இருக்கின்றான். * "எவ்வெவ் வாசாரத்தினைச் சிரேஷ்ட புருஷர்கள் செய்கின்றனர், மற்றைய ஜநங்களாகிய சிரத்தையுடையவனும், அதனை அங்கீகாரஞ் செய்கின்றான்" என்னும் கீதையின் பிரமாணத்தினால். இரண்டாவதாகிய நாஸ்திகனும் ஜீவன் முக்தனது திருஷ்டியினைக் காரணமின்றிப் பெற்று ஸர்வ பாபங்களினின்றும் விடுபடுகின்றான். "எவனது புத்தி அபரோக்ஷ ஞாந பரியந்தம் பிரஹ்மாத்ம தத்துவத்தில் இருக்கின்றதோ அவன் திருஷ்டிக்குக் கோசரமாகிய எல்லா ஜீவர்களும், ஸர்வ பாபத்தினின்றும் விடுபடுகின்றனர்." என்னும் பிரமாணத்தினால். இவ்வாறு ஜீவன் முக்தனது தபம் மூவிதமாயவர்களின் ஸங்கிரகத்தின் பொருட்டாம்.

(3) சம்வாதம்.

(3) ஜீவன் முக்தனாகிய ஞானி உத்தானதசையிலும் துஷ்டர்களால் செய்யப்பட்ட தனது நிந்தை முதலியவற்றினைக் கேட்டும் பாஷண்டி விமுகர்களாகிய ஜீவர்களைப் பார்த்தும் அவர்களிடத்துத் துவேஷஞ் செய்வதில்லை. ஸ்வப்நம் போன்று ஜாக்ரத்தினையும் மித்தையாகப் பார்க்கின்றவனாகலின். அதனால் பாஷண்டி பிரதிபக்ஷி பஹிர்முகர்களோடு அவனுக்கு விவாத முண்டாவதில்லை. இது விஸம்வாதம் இன்மையாகிய மூன்றாவது பிரயோஜநமாம். "அந்த பிரஹ்மாத்ம தத்துவத்தின் நிஷ்டையினை யறிந்து நான் பிரஹ்மாநந்த வித்தியாநந்தத்தில் ஆநந்தியா யிருக்கின்றேன். பிராந்த புருஷர்களோடு நான் விவாதஞ் செய்வதில்லை. கேவலம் தயா திருஷ்டியினால் அவர்கட்காகச் சோகத்தை யடைகின்றேன்" என்னும் பெரியோர்களின் வசநப் பிரமாணத்தினால்.

---

* பகவற் கீதை. 3–13–பெரியவர் பயின்ற படியலாற் பயிலார் பின்புளோர். 3–20½ यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः।



(4) துக்க நிவிர்த்தி.

(4) இகலோக பரலோக துக்கத்தின் பேதத்தினால் துக்கத்தின் நிவிர்த்தி யிரு வகைத்தாம்.

(1) பிரஹ்மாத்ம சாக்ஷாத்காரத்தினால் கர்த்ருத்வாதி பிராந்தி நிவிர்த்தியாய், மநோ நாசாதி அப்பியாஸத்தினால் ஸம்பூர்ண விர்த்திகள் நிரோதமாய்ச் சித்தத்தின் நிரங்குச ஆத்ம ஏகாகாரத் தன்மை உண்டாகின்றது. அதனால் சுக துக்க ரூப பிராரப்த பல போக காலத்திலும் ஸதா ஸ்வப்பிரகாச ஸாக்ஷி ஸ்வரூபமாகவே யிருக்கின்றான். சுக துக்காதி தர்ம விசிஷ்ட அந்தக்கரணத்தை மித்தையாகப் பார்ப்பவனா யிருத்தலின். இது ஸம்பூர்ண இகலோக துக்க நிவிர்த்தியாம். எதனால் தேஹ புத்திராதிகளில் "நான் எனது" என்னும் அபிமாநத்தினாலும், போக்தா முதலிய திரிபுடிகளில் ஸத்திய புத்தியினாலும், அத்தியாத்மம் முதலிய தாபம் உண்டாகின்றது. அந்தத் தாபம் ஜீவன் முக்த புருஷனுக்கு ஞாந யோகங்களின் பிரசாதத்தினால் இருவித பிராந்திகளின் நிவிர்த்திகளினால் நாசமடைகின்றது. ஞானிக்கும் உண்மையாக இகலோக துக்கம் நிவிர்த்தியாமாயினும், பிராரப்த போக ஸமயத்தில் பாதிதாநுவிர்த்தியினால் (பாதிக்கப்பட்டுப் பின் இருக்குதல்) அவனுக்கு "நான் ஸுகி, துக்கி, என்பதாதி அநுபவத்தின் ஸம்பவம் உண்டாகின்றது. அதனால் அவனுக்கு துக்க நிவிர்த்தி மிகவும் ரக்ஷிக்கப்படுவதில்லை பாதிக்கப்பட்ட திருஷ்டியினால் துக்க முண்டாகின்றது என்பது பொருளாம். ஜீவன் முக்த ஞானிக்கோ யோக ஞாநங்களின் பிரஸாதத்தினால் ஸகல விர்த்தியின் நிரோதத்தினால் அத் துக்க நிவிர்த்தி மிகவும் ரக்ஷிக்கப்படுவதாகின்றது.

அதனால், கேவல ஞானியினும் ஜீவன் முக்தனுக்கு இவ்வளவு விசேஷம் இருக்கின்றது:—திருஷ்ட துக்கமும் அவனுக்கு உண்டாவதில்லை. "எப்பொழுது முமுக்ஷு இது நான் என்று ஆத்மாவினைப் பிரத்தியக்ஷமாக அறிகின்றான், அப்பொழுது எக் காமத்தின் பொருட்டு எதனை யிச்சித்துச் சரீரத்தின் மூவித தாபத்தினை யடைவான்" என்னும் சுருதிப் பிரமாணத்தினால்.

(2) தத்துவ ஞானத்தினுல், அஞ்ஞானத்தின் நாசமாய், சஞ்சித ஆகாமி கர்மத்தின் நாச அஸ்பரிசங்களாய் இருக்கும் ஜீவந் முக்தனுக்கு உண்டாம் பரலோக துக்கத்தின் நிவிர்த்தி இரண்டாவதாம். "கெட்டேன், நான் துராத்மா நான் புண்யத்தைச் செய்யாது பாபத்தினையே செய்தேன்" என்று புண்யஞ் செய்யாது பாபத்தினைச் செய்ததனுல் புண்ய பாப ஸம்பந்தியாகிய சிந்தை அக்நி போன்று அக்ஞாநியினைத் தபிக்கச் செய்கின்றது. அது ஞாநியினைத் தபிக்கச் செய்வ தில்லை. "அவனை (ஞாநியினை) புண்ய பாபங்கள் தபிக்கச் செய்வ தில்லை" என்னும் சுருதிப் பிரமாணத்தினுல். இது இரு வித துக்க நிவிர்த்தியாகிய நான்காவது பிரயோஜனமாம்.

(5) சுகப் பிராப்தி.

(5) ஞாந யோகங்களின் பிரபாவத்தினுல் அஞ்ஞானம் அதனின்று உண்டாய ஆவரண விக்ஷேபங்கள் நிவிர்த்தியாய், திரி புடி ரூப பிரதிபந்தகத்தின் அபாவத்தினுல் ஜீவந் முக்தனுக்குச் சித்தத்தில் உண்டாம் பரிபூரணுநந்தத்தின் அநுபவமே சுகாவிர்பாவ ரூப ஸுகப் பிராப்தி என்னும் ஐந்தாவது பிரயோஜனமாம். "ஸமாதியினுல் மல நிவிர்த்தியாகிய ஆத்மாவில் இருக்கும் ஜீவந் முக்தனுக்குச் சித்தத்தில் உண்டாம் நிஜாநந்தம் வாக்கினுல் கூறத்தக்க தன்று. அந்தச் சுகம் தன்னுனேயே அந்தக்கரணத்தில் கிரஹிக்கப் படுகின்றது." என்னும் சுருதிப் பிரமாணத்தினுல். இது சுகப் பிராப்தி ரூப ஐந்தாவது பிரயோஜநமாம்.

(அதனுல் சிரவணுதி ஸாதநங்களின் மீண்டு மீண்டும் அப்பியாஸத்தினுல் உண்டாம் புதிய ஸாக்ஷாத்காரம் எதுவரைத் திடமாக வில்லையோ, அது வரை மநோ நாசம் முதலிய மூவித அப்பியாஸத்தினை முமுக்ஷு தியாகிக்கற்க. நூதந ஸாக்ஷாத்காரத்தின் விசுவாஸத்தினுல் ஞாநாதி அப்பியாஸத்தில் சிதிலமாயின் அவன் ஞாநம் யதேஷ்டாசரணத்தினுல், அல்லது ஸம்சய விபரீத பாவனைகளினுல், அல்லது ஸ்திரீ முதலியவர்களின் ஸம்பந்தங்களினுல் கவரப்பட்டுப் பிரதிபந்திக்கப்பட்டதாய் ஒரு கால் தன் பலத்தினைக் கொடுத்தற்கு ஸமர்த் தின்றியதாகும். எங்ஙனம், கண்ணுடி முள் சரீரத்தைப் பேதிப்பதில் ஸமர்த் தின்றே. அங்ஙனமேயாம்.)



4—21 மஹா யக்ஞம்.

ஐந்து மஹா யஞ்ஞத்தினைக் கூறுவாம்:—ரணத்தினை நிவிர்த்திக்கும் ஹேதுவாய் ஐந்து ஹிம்ஸையி (பஞ்ச சூநாவி) னின்றுஞ் ஜநித்த பாபத்தினை நிவிர்த்திப்பதாய தேவ ரிஷி பிதிரு மநுஷ்ய பூதம் என்னும் பேதத்தினுல் இந்திரிய ஜய மின்றியவனுல் செய்யத் தக்க மஹா யஞ்ஞம் ஐ வகைத்தாம்.

(1) தேவ யஞ்ஞம்.

(1) அவற்றுள், தேவதைகளின் உத்தேசத்தினுல் வேதம் புகன்ற நித்திய அக்நிஹோத்திராதிகளில் விதிக்கப்பட்ட ஹவ்விய ரூப அந்நத்தின் தியாகம் தேவ யஞ்ஞமாம்.

(2) ரிஷி யஞ்ஞம்.

(2) குரு முகத்தால் உச்சரித்தல், பின் உச்சரித்தல் ரூப வேதாதிகளின் அத்யயநாதி ரூப கர்மம் ரிஷி யஞ்ஞமாம்.

(3) பிதுரு யஞ்ஞம்.

(3) பிதிர்க்களின் உத்தேசத்தினுல் சிரார்த்தம் முதலியவைகளில் கவ்ய (பசுவின் விகாரம்) அந்நங்களின் தியாகம், தர்ப்பணுதி ரூப கர்மம், பிதிர்க்களின் திருப்தியின் பொருட்டாகின்றது. அது பிதிர் யஞ்ஞமாம்.

(4) மநுஷ்ய யஞ்ஞம்.

(4) அதிதி அப்யாகதன் ஸத் பாத்திரம் என்பவர்கட்குச் சக்தி யநுஸாரம் தன் கிரகத்தினின்றும் பிரதிதிநமும் சிரத்தையினுல் பகவானது ஸந்தோஷத்தின் பொருட்டுப் போஜநஞ் செய்வித்தல் ரூப கர்மம், மநுஷ்ய யஞ்ஞமாம்.

(5) பூத யஞ்ஞம்.

(5) பசு பக்ஷியாதிகட்குச் சக்திக்குத் தக்க வாறு தன் கிரகத்தினின்றும் அந்நாதிகளைக் கொடுத்தல் பூத யஞ்ஞமாம்.

(இவ்வாறு ஐந்து மஹா யஞ்ஞம், கிரஹஸ்தனுக்கு நித்தியம் பிராப்தமாம். அவைகள் கர்மாதிகாரியாகிய புருஷர்களால் ரிண (கடன்) நிவாரணத்தின் பொருட்டும், ஐந்து ஹிம்ஸையின் நிமித்தத்தின லுண்டாம் பாப நிவிர்த்தியின் பொருட்டும் அவசியம் அநுஷ்டிக்கத் தக்கதாம். எதனால், எம் மனிதன் பிறக்கின்றான் அவன் மூன்று ரிணங்களோடு கூடியே பிறக்கின்றான். எப்பொழுது நித்திய அக்நி ஹோத்திரத்தினைப் பிரதி தினஞ் செய்கின்றானோ அப்பொழுது தேவ ரிணம் நிவிர்த்தியாகின்றது. எப்பொழுது ஹிம்ஸை முதலிய தோஷ மின்றிய ஜப யஞ்ஞத்தினைப் பிரதி தினஞ் செய்கின்றானோ அப்பொழுது ரிஷி ரிணம் நிவிர்த்தியாகின்றது. எப்பொழுது பாணிக் கிரஹணஞ் செய்த ஸ்திரீயினிடத்தில் தர்மத்தின் பொருட்டுப் புத்ரோத்பத்தி செய்கின்றான், பிதிர் யஞ்ஞத்தினையும் செய்கின்றானோ, அப்பொழுது பிதிரு ரிணம் நிவாரண மாகின்றது. அதன் பின் இச் சீவன் அந்தக்கரண சுத்தி வாயிலாய் மோக்ஷ தர்மாநுஷ்டானங்களில் அதிகாரி யாகின்றான். "மூன்று ரிணத்தினை நிவாரணம் செய்து, அதிகாரி மநத்தினை மோக்ஷ ஸாதநத்தில் பிரவேசஞ் செய்விக்க. மூன்று ரிண நிவிர்த்தி யின்றி, அநதிகாரியாய்க் கீழே விழுகின்றான்." என்னும் பிரமாணத்தினால். அங்நாதிகளை வெட்டுதலினால் உண்டாம் ஸ்வாபாவிகமாகிய ஜீவ ஹிம்ஸை முதல் ஹிம்ஸையாம் அந்த அங்நாதிகளை அரைத்தலினா லுண்டாம் ஜீவ ஹிம்ஸை இரண்டாவது ஹிம்ஸையாம். அதனை அநேகப் பிரகாரமாகப் பாகஞ் செய்தலினால் உண்டாம் ஜீவ ஹிம்ஸை மூன்றாவது ஹிம்ஸையாம். ஜலம் பூரித்த பாத்திரம் வைக்கப்பட்ட இடத்தில் உண்டாம் ஜீவ ஹிம்ஸை நான்காவது ஹிம்ஸையாம். துலக்கல் மெழுகுதலால் உண்டாம் ஜீவ ஹிம்ஸை ஐந்தாவது ஹிம்ஸையாம். இவ்வாறு ஐந்து வித ஹிம்ஸையில் ஜநிக்கப்பட்ட பாபம் கிரகஸ்தர்கட்கு எப்பொழுதும் சாஸ்திரத்தினாற் பிராப்தமாம். அவற்றினை நிவாரணஞ் செய்யும், சாஸ்திரத்திற் கூறிய ஐந்து மஹா யஞ்ஞம் வருணாசிரம அபிமாநத்தினை யுடைய கர்மாதிகாரிகளால் பிரதி தினமும் அவசியம் செய்யத்தக்கதாம். இங்ஙனங் கொள்ளாக்கால், ஐந்து ஹிம்ஸை செய்தலினாலும் சுருதி முதலிவற்றில் கூறிய ஐந்து மஹா யஞ்ஞங்களைச் செய்யாமையினாலும் உண்டாம் இருவித பாபத்தினால் ஜிதேந்திரிய



மின்றிய புருஷன் ஒரு காலத்தும் உத்தம கதியினை யடையான். "வெட்டல், அரைத்தல், பாகஞ் செய்தல், ஜல கும்பம், துலக்கல் ரூப ஐவித ஹிம்ஸை கிருஹஸ்தனுக்கு உண்டாகின்றது. அவற்றால் ஸ்வர்கத்தினை ஒரு காலத்து மடைவ தில்லை. அதனால் ஐந்து ஹிம்ஸையினால் உண்டான பாபத்தினை ஐந்து மஹா யஞ்ஞங்களினால் நாசஞ் செய்க" என்னும் பிரமாணத்தினால்.

அங்ஙனமே சுருதியுங் கூறுகின்றது. "இந்தச் சீவாத்மா ஸர்வபூதங்கட்கும் லோகமாம், லோக மென்பது போகஸ்தாநத்தின் பெயராம். அது எதனால் ஹோமம் யஜநம் செய்கின்றனர். அதனால் தேவதைகளின் லோகமாம், எதனால் வேதாதிகளின் உச்சாரணஞ் செய்கின்றனர், அதனால் ரிஷிகளின் லோகமாம். எதனால் பிதிர்க்களின் பிரஸந்நத் தன்மையினைச் செய்கின்றனர், பிரஜைகளை இச்சிக்கின்றனர். அவற்றால் பிதிர்க்களின் லோகமாம். எதனால் மநுஷ்யர்களுக்கு வாசஸ்தாந, அவர்கட்கு போஜநங்களைக் கொடுக்கின்றது, அதனால் மநுஷ்யர்களின் லோகமாம். எதனால், பசுக்கட்குத் திரண உதகங்களைக் கொடுக்கின்றனர். அதனால் பசுக்களின் லோகமாம். எதனால் இவன் கிரஹத்தில் சண்டாளன் காக்கை எறும்பு பரியந்த மாயவை அதிகார அநுஸாரம் கிஞ்சித் புஜிக்கின்றன. அவற்றால் அவற்றிற்கும் லோகமாம்")

## 4—22 அஞ்ஞாநத்தின் பேதம்.

அத்விதீயப் பிரஹ்மோபதேசத்தின் பொருட்டு ஆசாரியர்களால் கற்பிக்கப்பட்ட அஞ்ஞாநத்தின் ஐந்து பேதங்களைக் கூறுவாம். மாயை அவித்தை முதலிய பேதத்தினால் அஞ்ஞாநம் ஐ வகைத்தென்று ஆசாரியர்களால் கூறப்பட்டிருக்கின்றது.

### (1) அஞ்ஞாநம்

(1) ஒருவர் இங்ஙனங் கூறுகின்றனர்:— "தியாந யோகத்தால் அநுகதமா யுள்ள முநி, தேவாத்ம சக்தியினைப் பார்த்தார்" என்னும் சுருதியினாலும், "அஞ்ஞாநத்தினால் மறைக்கப்பட்ட ஞாநத்தினையுடைய ஜீவர், அவற்றால் மோகத்தை யடைகின்றான்."

என்னும் ஸ்மிருதியினாலும், "நான் பிரஹ்மத்தினை அறியேன்" என்னும் ஸர்வ ஜந அநுபவத்தினாலும் சித்தித்த, முக் குண ரூப ஸதஸத் விலக்ஷண பாவ ரூப ஞாந நிவர்த்திய ஜடாத்மக ஸ்வதந்தரமின்றிய அஞ்ஞாநம், மாயை அவித்தைகளின் பேதத்தினால் இரு வகைத்தாகின்றது. சுத்த ஸத்துவப் பிரதாநம் மாயை யெனப்படும். மலிந ஸத்துவப் பிரதாநம் அவித்தை யெனப்படும். "மாயை மீண்டும் அவித்தை தானே யுண்டாக்கின்றது" என்னும் சுருதியினால். மாயா வுபகித சேதநம் ஈசுவரனும். அவித்தையா வுபகித சேதநம் ஜீவனும். அந்த ஜீவன், அவித்தையின் விசித்திரத் தன்மையினால் நாநாவும், அவித்தையின் அதீநமும், ஆவன் மாயை ஈசுவரனின் அதீநமாம்.

## (2) அஞ்ஞாநம்

(2) வேறொருவர் இங்ஙனங் கூறுகின்றனர்—ஞாந சக்தி கிரியா சக்தியின் பேதத்தினால் அஞ்ஞாநத்தின் சக்தி இரு வகைத்தாம். அஞ்ஞாந மன்று. இரஜோ தமோ குணங்களின் கலப் பின்றிய ஸத்துவ குணம் ஞாந சக்தியாம். கிரியா சக்தியும் ஆவரண விக்ஷேப பேதத்தினால் இரு வகைத்தாம். தமோகுண ஸத்துவ குணங்களால் அமிழ்த்தப்படாத இரஜோகுணம் விக்ஷேப சக்தியாம். இரஜஸ் ஸத்துவ மென்னும் இரண்டுகளால் அமிழ்த்தப்படாத தமோகுணம் ஆவரண சக்தியாம். ஞாநாதி சக்திப் பிரதாந அஞ்ஞாநம் மாயை யெனப்படும். ஆவரண சக்திப் பிரதாந அஞ்ஞாநம் அவித்தை யெனப்படும். மாயாப் பிரதிபிம்ப சேதநம் ஈசுவரனும். அவித்யாப் பிரதிபிம்ப சேதநம் ஜீவ னெனப்படும் இப் பக்ஷத்திலும் உபாதியின் நாநாத் தன்மையினால் ஜீவந் நாநாவாக அங்கீகரித்திருக்கின்றனர்.

## (3) அஞ்ஞாநம்

(3) வேறொருவர் இங்ஙனங் கூறுகின்றனர். எங்ஙனம் ஒரு புருஷனே இரண்டு கிரியை செய்வதனால் பாசகன் பாடகன் எனப் படுகின்றனனோ, அங்ஙனமே ஒரு அஞ்ஞாநமே விக்ஷேப ஆவரண ரூப கிரியா சக்தியின் [illegible] பேதத்தினால் மாயை அவித்தை யென்னும் இரண்டு பதங்களின் வா[illegible]ச்சிய மாகின்றது. விக்ஷேபக் கிரியாப் பிர



தாந மாயா பத வாச்சிய அஞ்ஞாந வுபகித பிம்ப சேதநம் ஈசுவரனும். ஆவரணக் கிரியா விசிஷ்ட அவித்தியா பத வாச்சிய அஞ்ஞாநப் பிரதிபிம்ப சேதநம் ஜீவனும். இப் பக்ஷத்தில் அஞ்ஞாநத்தின் ஏகத் தன்மையினால் ஜீவன் ஏகனும். அந்தக்கரண விசிஷ்ட அநேகப் பிரமாதாவாய ஜீவர் அவனிடத்தில் கற்பிதராவர்.

## 4 அஞ்ஞாநம்.

(4) ஒருவர் இங்ஙனங் கூறுகின்றனர்:—வநம் போன்று அஞ்ஞாநத்தின் ஸமுதாய ஈசுவர உபாதிரூபம் ஸமஷ்டி அஞ்ஞாநமாம். கோத்வ ஜாதி போன்று ஸர்வ வியஷ்டி அஞ்ஞாந வ்யக்திகளில் அநுஸ்யூதமா யிருக்கும் அஞ்ஞாநம் ஸமஷ்டி யெனப்படும். அதில் உபகித சேதநம் ஈசுவரனும். விருக்ஷம் போன்று தனித் தனி அஞ்ஞாநம் வியஷ்டி அஞ்ஞாநமாம். கோத்வ வ்யக்தி போன்று பரஸ்பரம் பிந்நமாய அஞ்ஞாநம் வியஷ்டி யெனப்படும். அதில் உபகித சேதநம் ஜீவனுப். அஞ்ஞாநத்தின் நாநாத் தன்மையினால் ஜீவனும் நாநாவாவன்.

## (5) அஞ்ஞாநம்.

(5) ஒருவர் இங்ஙனங் கூறுகின்றனர்:—காரண ரூப அஞ்ஞாநம் ஈசுவர உபாதியாம். அதில் உபகிதமான சேதநம் ஈசுவரனும். அஞ்ஞாநத்தா லுண்டாய காரிய ரூப அந்தக்கரணம் ஜீவ உபாதியாம். அதில் உபகிதமான சேதநம் ஜீவனும். அவ் வந்தக்கரணம் நாநாவாதலால் ஜீவனும் நாநாவாவன்.

(இவ் வைந்து பக்ஷத்தில் ஆசாரியர்கள் பரஸ்பரம் தூஷண பூஷணங்கள் அநந்தம் கூறியிருக்கின்றனர். அங்ஙனமாயினும், இவ் வைந்து பிரகாரமாக உபதேசித்தற்கு ஒரு அத்விதீய ஞாநத்தினை ஸம்பாதித்தலே பிரயோஜநமாம். தத் த்வம் பதார்த்தங்களின் நிரூபணத்தின் பொருட்டு ஜீவேசுவரர்களின் அபேக்ஷை யிருக்கின்றது. ஜீவேசுவரர்களின் சித்தியின் பொருட்டு அஞ்ஞாந ரூப உபாதியின் அபேக்ஷை யிருக்கின்றது. எதனால் ஐ வித அஞ்ஞாந நிரூபணமும் வேதாந்த உபயோகியாம், அதனால் எவ் வதிகாரிக்கு எப் பக்ஷம் இச்சிக்கப்பட்ட

ஸாலப முடையதாம், அவன் அதன் ஆசிரயத்தினால் தத் த்வம் பதார்த்தங்களின் வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்களை யறிந்து பிரஹ்மாத்ம ஏகத்வ ஞானத்தினையே ஸம்பாதநஞ் செய்க. தத் த்வம் பதார்த் தங்களின் வாச்சியார்த்தமாய ஈசுவர ஜீவர்களின் ஸ்வரூபத்தில், அல்லது ஜீவனது ஏகத்வ நாநாத்வத்தில் உண்டாம் விவாதத்தினையே பெரிதாக்கற்க. இருவர்களும், ஏகத்வ நாநாத்வங்களும் மாயை அவித் தையின் அதீநமாய் மித்தையா யிருத்தலின், ஸ்வரூபத்தினால் ஜீவேசுவர சேதநங்கள் ஸதா ஸத்தியமாக இருத்தலின்)

### 4—23 ஹேத்வாபாசம்.

ஐந்து ஹேத்வாபாஸங்களைக் கூறுவாம்;—வேதாந்த அர்த் தத்தின் ஸம்பாவநத்தில் உபயோகியாக முற் கூறப்பட்ட அநுமாநப் பிரமாணத்தின் ஸம்பந்தியாய் அஸத் ஹேது ரூப அநுமிதியின் பிரதிபந்தகமாகிய ஹேத்வாபாஸம் ஐ வகைத்தாம். நியாய ரீதியாக அவை இவ்வாறும்:—ஸவ்யபிசாரம், விருத்தம், ஸத் பிரதி பக்ஷம், அஸித்தம், பாதிதம் என்னும் பெயரினை யுடைய ஹேத்வா பாஸங்கள் ஐந்தாம். எந்த ஹேது அறியப்படாத அநுமிதி, அதன் கரணம் என்னும் இரண்டனுள் ஒன்றனுக்குப் பிரதிபந்தகமாய் யதார்த்த ஞானத்திற்கு விஷயமாவது, அது ஹேத்வாபாஸ மெனப் படும். அல்லது ஸத் ஹேதுவின் ஸாத்தியத்தினை நிச்சயஞ் செய்யும் தன்மை ரூப தர்மம் இன்றியதாய் ஸ்வரூபத்தினால் ஹேது போன்று விளங்குவது ஹேத்வாபாஸமாம்.

### (1) சவ்யபிசார ஹேத்வாபாசம்.

(1) அவற்றுள், ஸாதாரணம் அஸாதாரணம் அநுபஸம்ஹாரி என்னும் பேதத்தினால் ஸவ்யபிசார (பிறழ்ச்சியினை யுடைய) ஹேத்வாபாஸம் மூ வகைத்தாம்.

அநைகாந்திக ஹேத்வாபாஸ மென்றும் அதற்கு நாமமாம். அம் மூன்றனுள் ஸாத்தியாபாவ முடையதன்கண் இருப்பது ஸாதா ரண அநைகாந்திக ஹேத்வாபாஸமாம். ஸாத்தியாதிகரணத்தி லும், ஸாத்தியாபாவாதிகரணத்திலும் இருப்பது ஸாதாரண



ஹேத்வாபாஸமாம். எங்ஙனம் பர்வதம் வஹ்நி யுடைத்து, பிரமேயத் தன்மையினால்? ஈண்டு பிரமேயத்துவ ரூப ஹேது வஹ்நி யுடைமை ரூப ஸாத்தியாபாவ முடைய மடுவில் இருத்தலின். (1)

எல்லா ஸபக்ஷ விபக்ஷங்களினும் இன்றி, பக்ஷ மாத்திரத்தி லிருப்பது அஸாதாரணமாம். நிச்சயிக்கப்பட்ட ஸாத்தியாதிகரணத்திலும், அதன் அபாவாதிகரணத்திலு மின்றி யிருத்தல் அஸாதாரண ஹேத்வாபாஸமாம். எங்ஙனம் சப்தம் நித்தியம், சப்தத் தன்மையால் என்னு மிடத்து சப்தத் தன்மை ரூப ஹேது ஆகாசாதி எல்லா அநித்ய ஸபக்ஷத்திலும், கடாதி ஸர்வ அநித்தியமாய விபக்ஷத்திலும் இன்றி, பக்ஷ ரூப சப்த மாத்திரத்தி லிருத்தலின் அஸாதாரண ஹேத்வாபாஸமாம்.

அந்வய வ்யதிரேக திருஷ்டாந்த மின்மை அநுபஸம்ஹாரி யென்னும் அநைகாந்திக ஹேத்வாபாஸமாம். எங்ஙனம் ஸர்வம் அநித்தியம், பிரமேயத் தன்மையால் என்புழி, எல்லாப் பதார்த்தங் களும் பக்ஷமா யிருத்தலின் இரு வித திருஷ்டாந்தமு மின்று.

### (2) விருத்த ஹேத்வாபாசம்.

(2) ஸாத்தியாபாவத்தினால் வியாபிக்கப்பட்ட ஹேது விருத்த மென்னும் ஹேத்வாபாஸமாம். எங்ஙனம், சப்தம் நித்தியம், கிருதகத் தன்மையால் (செயற்பாலதாகலின்) என்புழி, கிருதகத்வ ரூப ஹேது, நித்தியத்வ ரூப ஸாத்தியாபாவமாகிய அநித்தியத் தன்மையினால் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. யாண்டு கிருதகத்வம் ஆண்டு அநித்தியத்வம் எங்ஙனம் கடாதிகளில். (2)

### (3) சத்பிரதிபக்ஷ ஹேத்வாபாசம்.

(3) எந்த ஹேதுவிற்கு ஸாத்தியாபாவத்தினைச் சாதிக்கும் வேறு ஹேது விருக்கின்றதோ அது ஸத்பிரதிபக்ஷ ஹேத்வாபாஸமாம். எங்ஙனம், சப்தம் நித்தியம், சிராவணமாகலின் (கேட்கப்படுந் தன்மையாகலின்) சப்தம் போன்று. சப்தம் அநித்தியம், காரியமாக

மாகலின் கடம் போன்று என்னும் இது முற் புகன்ற அநுமாநத்தின் ஸத்பிரதிபக்ஷமாம். முற் புகன்ற அநுமாநத்தின் நித்தியத்வ ரூப ஸாத்தியத்தின் அபாவமாகிய அநித்தியத் தன்மையின் ஸாதகமா யிருத்தலின். (3)

(4) அசித்த ஹேத்வாபாசம்.

(4) அசித்த மென்னும் ஹேத்வாபாஸம் ஆசிரயாசித்தம் ஸ்வரூபாசித்தம் வியாப்யத்வாசித்தம் என்னும் பேதத்தினுல் மூ வகைத்தாம். ஹேதுவிற்குப் பக்ஷமின்றி யிருத்தல் ஆசிரயாசித்தமாம். பக்ஷத்தில் ஹேது வின்றி யிருத்தல் ஸ்வரூபாசித்தமாம். உபாதியை யுடைய ஹேது வியாப்யத்வாசித்தமாம். எங்ஙனம் ஆகாய புஷ்பம் ஸுகந்த முடைத்து, புஷ்பத் தன்மையால் குளத்தினுண்டாய புஷ்பம் போன்று என்பது ஆசிரயாசித்த ஹேத்வாபாஸமாம். ஸுகந்தித் தன்மை ரூப ஸாத்தியத்தினை ஸாதிக்கும் புஷ்பத் தன்மை ரூப ஹேதுவிற்கு ஆசிரயமாகிய பக்ஷ ரூப ஆகாயத் தாமரையின் அத்தியந்தாபாவத்தினுல். சப்தம் குணம், சாக்ஷுஷத் தன்மையால்; ரூபம் போன்று என்பது ஸ்வரூபாஸித்த ஹேத்வாபாஸமாம். ஈண்டு சாக்ஷுஷத்துவ ரூப ஹேதுவின் ஸ்வரூபம் சப்த ரூப பக்ஷத்தி லின்று, சப்தம் சிராவண ஞாநத்தின் விஷயமாகலின். உபாதியினை யுடைய ஹேது வியாப்யத்துவாசித்த ஹேத்வாபாஸமாம். ஸாத்தியத்தில் வியாபித்து ஸாதநத்தில் வியாபியாமை உபாதியாம். ஸாத்திய ஸாமாநாதிகரண அத்தியந்தாபாவத்திற்கு பிரதியோகத் தன்மை இன்மையாகிய உபாதி ஸாத்திய வியாபகத் தன்மையாம். ஸாதந சமாநாதிகரண அத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகத் தன்மையாகிய உபாதி, ஸாதந அவ்யாபகத் தன்மையாம். எங்ஙனம், பர்வதம் தூம முடைத்து, வந்ஹி யுடைமையால் என்புழி, ஈர விறகின் ஸம்யோகம் உபாதியாம். யாண்டு தூமம் இருக்கின்றதோ ஆண்டு ஈர விறகின் ஸம்யோக மிருக்கின்றது,எனச் சாத்தியத்தின் வியாபகத் தன்மை இருக்கின்றது. யாண்டு நெருப்பு இருக்கின்றதோ ஆண்டு ஈர விறகின் ஸம்யோக மின்று, ஒழுகக் காய்ச்சிய இருப்புத் துண்டத்தில் ஈர விறகின் ஸம்யோக மின்மை



யின் என ஸாதநத்தின் அவ்யாபகத் தன்மை யிருக்கின்றது. அதனுல் முற் புகன்ற வந்ஹி யுடைமை ஹேது உபாதியோடு கூடி யிருத்தலின் வியாப்யத்வாசித்த மென்னும் ஹேத்வாபாஸம் என்பர். (4)

(5) பாதித ஹேத்வாபாசம்.

(5) எந்த ஹேதுவின் ஸாத்தியாபாவம் வேறு பிரமாணத்தினுல் நிச்சயிக்கப்படுகின்றதோ அது பாதித மென்னும் ஹேத்வாபாஸமாம். எங்ஙனம் நெருப்புச் சூடில்லது, திரவ்யத் தன்மையால் என்புழி, சூடின்மைத் தன்மை ரூப ஸாத்தியாபாவமாகிய உஷ்ணத் தன்மை ஸாத்வீக இந்திரியத்தால் ஜநித்த ஸ்பரிசப் பிரத்திக்ஷத்தினுல் அக்கியில் கிரஹிக்கப்படுகின்றது. அதனுல் திரவ்யத் தன்மை ரூப ஹேது பாதித ஹேத்வாபாஸமாம். (5)

(இவ்வாறு கூறிய ஐந்து ஹேத்வாபாஸங்கள் எதனுல் ஸாத்தியத்தினை நிச்சயித்தல் ரூப தனது காரியத்தினைச் செய்தற்கு ஸமர்த் தின்றியதோ, அதனுல், அஸத் ஹேது வெனப்படும். இப்பொழுது வேதாந்த ரீதியினுல் முதலில் மூவித அநைகாந்திக ஹேத்வாபாஸத்தினைக் காண்பிப்பாம்.

சாதாரணம்.

அவற்றுள், முதலில் ஸாதாரணத்தினைக் கூறுவாம்:— எங்ஙனம், பிரத்ய காத்மா பிரஹ்ம பிந்நமாம், வஸ்துவாகலின்; கடம் போன்று என்புழி, வஸ்து ரூப ஹேது பிரஹ்ம பேத ரூப ஸாத்திய அபாவ முடைய பிரஹ்மத்திலும் இருக்கின்றது. எங்ஙனம் பிரபஞ்சம் ஸத்தியம், ஸத்தாக விளங்குதலின்; ஆத்மா போன்று என்புழி, ஸத்தாக விளங்குதல் ரூப ஹேது ஸத்துத் தன்மை யின்றிய ஸ்வப்நப் பிரபஞ்சத்திலும் ஜாக்கிரத்தினின்றும் பூர்வம் போன்றே இருக்கின்றது. அதனுல் இவ் விருவித ஹேது ஸாதாரண அநைகாந்திக ஹேத்வாபாஸமாம்.

## அசாதாரணம்.

அஸாதாரணத்தினைக் கூறுவாம்:- எங்ஙனம், ஜீவன் பிரஹ்ம பிந்நன், கர்த்தா போக்தாவா யிருத்தலின் என, ஈண்டு கர்த்ருத்வ போக்த்ருத்வ ரூப ஹேது பிரஹ்ம பிந்நமாய ஸர்வ கடாதிப் பிரபஞ்ச ரூப ஸபக்ஷத்தினும், பிரஹ்மாபிந்ந, பிரஹ்ம ரூப விபக்ஷத்தினும் இன்றிக் கேவலம் ஜீவ ரூப பக்ஷ மாத்திரத்தி லிருக்கின்றது. அதனால் அஸாதாரண அனைகாந்திகமாம். எங்ஙனம் ஜாக்ரப் பிரபஞ்சம் ஸத்தியம், வியாவகாரிக ஸத்துடையதாகலின், என்புழியும் வியாவகாரிக ஸத்தை யுடைய ரூப ஹேது ஸத்தியத்வ ரூப ஸாத்தியத்தினை யுடைய ஸபக்ஷமாய ஆத்மாவினும், ஸத்தியத்வ ரூப ஸாத்தியாபாவமுடைய விபக்ஷமாகிய ஸ்வப்நாதிகளினு மின்றிக் கேவலம் ஜாக்ரப் பிரபஞ்ச ரூப பக்ஷ மாத்திரத்தி லிருக்கின்றது. அதனால் இந்த ஹேதுவும் அஸாதாரண ஹேத்வாபாஸமாம்.

## அநுபசம்ஹாரி.

எங்ஙனம் இச்சர்வமும் பரமார்த்த சத்தியம், பதார்த்த மாகலின்; என்னு மிடத்துச் சர்வமும் பக்ஷமா யிருத்தலின். அந்வயவ்யாப்தியினைக் கிரஹிக்கும் ஸ்தலமாகிய ஸபக்ஷம், வ்யதிரேக வியாப்தியினைக் கிரஹிக்கும் ஸ்தலமாகிய விபக்ஷம் என்னும் இரண்டின் அபாவத்தினால் இப் பதார்த்த ரூப ஹேது அந்வய வ்யதிரேக திருஷ்டாந்த மின்றிய அநுபஸம்ஹாரி யெனப்படுகின்றது.

## விருத்தம்.

விருத்தத்தினைக் கூறுவாம் :—எங்ஙனம் ஜீவாத்மா பிரஹ்ம பிந்நம், சச்சிதாநந்த ரூபமாகலின் என்னுமிடத்து ஸத்தாதி ரூப ஹேது பிரஹ்ம பிந்நமாய அநாத்ம மாத்திர ஸபக்ஷத்தி னின்றி, பிரஹ்ம பேத ரூப ஸாத்தியம், அதன் அபாவ ரூபப் பிரஹ்ம அபேதத்தினாலேயே வியாபிக்கப்பட்டிருக்கின்றது. பிரஹ்மத்தி லுள்ள ஸத்தாதி ரூப ஹேதுக்கள் பிரஹ்ம பேத ரூப ஸாத்தியாபாவமுடைய பிரஹ்மத்தில் இருத்தலின், இது ஸாத்தியாபாவ வியாப்த ஹேதுவாய விருத்த ஹேத்வாபாஸ மெனப்படும். எங்ஙனம்,



ஜாக்கிர ஜகத் ஸத்தியம், ஸுக துக்கம் முதலிய வியவஹாரத்தின் ஹேதுவா யிருத்தலின் என்னும் இந்த ஹேது ஸத்திய ரூப அவிக்கிரிய பிரஹ்ம மாகிய ஸபக்ஷத்தி லின்றி, ஸத்தியத்வ ரூப ஸாத்தியத்தின் அபாவமாகிய அஸத்தியத் தன்மையினால் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்வப்நம் முதலியவற்றில் சுக துக்காதி வியவஹாரஞ் செய்தல் ரூப ஹேது விருத்தலின் இதுவும் விருத்த ஹேத்வாபாஸமாம்.

## சத்பிரதிபக்ஷம்.

ஸத்பிரதிபக்ஷத்தினைக் கூறுவாம்:—எங்ஙனம் ஜீவன் பிரஹ்ம பிந்நன், அஸர்வஞ்ஞனாகலின்; பிரஹ்மம் போன்று, என்பது வியதிரேக திருஷ்டாந்தமாம். ஜீவன் பிரஹ்ம அபிந்நன், சச்சிதாநந்த ரூபமாகலின்; பிரஹ்மம் போன்று என்பது பூர்வ அநுமானத்தின் ஸத்பிரதிபக்ஷமாம். எங்ஙனம் ஜாக்கிரப் பிரபஞ்சம் சத்தியம், உண்மையான அர்த்தக் கிரியையினைச் செய்வதாகலின்; ஸ்வப்நப் பிரபஞ்சம் போன்று என்பது வியதிரேக திருஷ்டாந்தமாம். ஜாக்ர விசுவம் மித்தை, திருசியத் தன்மையாகலின்; ஸ்வப்நப் பிரபஞ்சம் போன்று என்பதும் ஸத்பிரதிபக்ஷமாம். எதனால் ஸச்சிதாநந்த ரூபம், திருசியத்வ ரூபம் என்னும் இரண்டு ஹேதுவும், முற் புகன்ற இரண்டு ஹேதுவின் ஸாத்தியாபாவத்தின் ஸாதகமாமோ அதனால் ஸத்பிரதிபக்ஷம் எனப்படுகின்றது.

## ஆசிரயாசித்தம்.

முற் புகன்ற மூ வித அசித்த ஹேத்வாபாஸத்தினைக் கூறுவாம். பக்ஷ மின்றிய ஹேது ஆசிரயாசித்தமாம். எங்ஙனம் அணு அல்லது மத்தியம மாகிய ஆத்மா பிரஹ்ம பிந்நமாம், பரிசிந்நமாகலின் கடம் போன்று. எங்ஙனம், பிருதிவியாதிகளின் பரமாணு ஜகத் காரணமாம், அதன் ஆரம்பக மாலின்; படத்தினை ஆரம்பிக்கும் தந்து போன்று. எங்ஙனம் ஸ்வதந்திரப் பிரதாநம், ஜகத் காரணமாம்; அதன் ரூபத்தினால் பரிணமித்தலின் தயிராகாரமாகப் பரிணமிக்கும் பால் போன்று. எங்ஙனம், சூந்யம் ஜகத்காரணமாம்,

யாண்டு மிருத்தலின் கடத்தின்கண் ணுள்ள மட்பிண்டம் போன்று என்னும் அநுமானங்களில் ஹேதுவின் ஆசிரயமாகிய பக்ஷம் அசித்தமாம். தாத்பரியத்தினை நிச்சயிக்கும் ஷட்வித லிங்க ரூப சுருதிப் பிரமாணத்தினால், அணு அல்லது மத்தியம மாகிய ஆத்ம ரூப பக்ஷம் சித்தியாமையின். முற்புகன்ற நான்குவித பக்ஷமும் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத் தன்மை யின்மையினால் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்தியாமையின். பிரத்தியக்ஷமாகக் கிரஹிக்கப்பட்ட வியாப்தியினை உபஜீவிக்கும் அநுமானத்திற்கு அப்பிரத்தியக்ஷ அணு, வாகிய ஆத்மா முதலிய பக்ஷத்தில் பிரவிர்த்தி பொருந்தாமையின்.

### ஸ்வரூபாசித்தம்.

பக்ஷத்தி லின்றிய ஹேது ஸ்வரூபாசித்தமாம். எங்ஙனம், ஜீவாத்மா பிரஹ்மத்தின் பிந்நமாம்; நாநாவாகலின் கடாதி போன்று என்னு மிடத்து நாநாத்வ ரூப ஹேது சுருதி விருத்தமாகலின். ஆத்மா அதீந்திரியமாகலின் அதன்கண் ணுள்ள நாநாத் தன்மை, பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷய மன்றாகலின். அப்பிரத்தியக்ஷ ஆத்மாவில் பிரத்தியக்ஷத்தினை உபஜீவிக்கும் அநுமானத்தின் பிரவிர்த்தி யின்மையின், ஆத்ம ரூப பக்ஷத்தில் நாநாத்வ ரூப ஹேது அசித்தமா யிருக்கின்றது. எங்ஙனம் இப் பிரபஞ்சம் ஸத்தியமாம், ஸ்வப்பிரகாச மாகலின் ஆத்மா போன்று என்னு மிடத்து பிரபஞ்ச ரூப பக்ஷத்தில் ஸ்வப்பிரகாச ரூப ஹேது பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களினால் அஸித்தமா யிருக்கின்றது. பிரபஞ்சம் பரப்பிரகாசத் தன்மையினால் ஸர்வ ஜந அநுபவ சித்தமா யிருத்தலின், அதனால் இதுவும் ஸ்வரூபாசித்தமாகிய ஹேத்வாபாஸ மெனப்படும்.

### வியாப்யத்வாசித்தம்.

உபாதியினை யுடைய ஹேது வியாப்யத்வாசித்தமாம். ஸாத்தியத்தில் வியாபித்து ஸாதநத்தில் வியாபியாமை உபாதி யெனப்படும். ஸாத்தியாதிகரணம் எல்லாவற்றிலும் நியமமாக வுபாதி யிருப்பது ஸாத்திய வியாபகத் தன்மையாம். ஹேது வுடைய ஸர்வ விடத்திலும் நியமமாக உபாதி யின்றி யிருத்தல் ஸாதந அவ்யாபகத் தன்மையாம். எங்ஙனம் ஜீவாத்மா பிரஹ்மத்தினும் பிந்நமா



யிருக்கின்றது, அநித்திய விசேஷ குண முடையதாகலின் கடாதி போன்று. விசுவம் பரமார்த்த ஸத்தியம், பிராதிபாஸிக மின்றி யிருத்தலின் ஆத்மா போன்று என்னும் இரண்டு அநுமானங்களில் அசேதநத்வ ரூப இரண்டு உபாதி யிருக்கின்றது, யாண்டு கடாதிகளில் பிரஹ்ம பிந்நத்வ ரூப ஸாத்ய மிருக்கின்றதோ, ஆண்டு அசேதநத்துவ ரூப உபாதி யிருக்கின்றது என, இரண்டு அநுமானங்களிலும் உபாதியின் ஸாத்திய வியாபகத் தன்மை கூறப்படுகின்றது. இரண்டு பக்ஷங்களிலும் விசேஷ குணத்வம், பிராதிபாஸிகத் தன்மை யின்மை யென இரண்டு ஹேதுக்கள் கூறப்பட்டன. அவ் விரண்டின் ஆசிரயமாகிய பக்ஷத்தில் அசேதநத்வ ரூப, சேதநத்வ ரூப, உபாதி யின்று என உபாதியின் ஸாதந அவ்யாபகத் தன்மை யிருக்கின்றது. அதனால் அநித்திய விசேஷ குண முடைமை ஹேதுவும், பிராதிபாஸிகத் தன்மை யின்றிய ஹேதுவும் உபாதியை யுடையதாக விருத்தலின், இரண்டும் வியாப்யத்வாசித்த ஹேத்வாபாஸமாம்.

### பாதம்.

இப்பொழுது பாதத்தினைக் கூறுவாம்:- எங்ஙனம், ஜீவந் பிரஹ்மத்தினும் பிந்நமாம், ஜந்ம மரணாதி தர்ம முடைமையின். ஜகத் ஸத்தியமாம், “கட மிருக்கின்றது, பட மிருக்கின்றது”. என்பதாதி இருக்கின்றது என்னும் பிரதீதிக்கு விஷயமாகலின், என்னு மிடத்து பிரஹ்ம பிந்நத்வ ரூப ஸாத்தியம், ஜகத் ஸத்தியத்வ ரூப ஸாத்தியம், என்னும் இரண்டும் அநந்த சுருதி ஸ்மிருதி வசநங்களினால் பாதிக்கப்படுகின்றது. அதனால், முற்புகன்ற இரண்டு அநுமானத்திலு முள்ள இரண்டு ஹேதுவும் பாதித ஹேத்வாபாஸ மெனப்படும். ஸாத்தியாபாவத்தினைப் போதிக்கும் வேறு பிரமாணம் இருத்தலின். அந்த ஸாத்தியாபாவத்தினைப் போதிக்கும் சுருதி ஸ்மிருதிகளின் வசநம் இஃதாம்:— “தத் த்வமஸி”, “அஹம் பிரஹ்மாஸ்மி”, “இதனினும் வேறு திருஷ்டா இல்லை”, ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம்”, “ஒரு தேவன் ஸர்வ பூதங்களிலும் கூடனா யிருக்கின்றான்”, “ஹே! அர்ஜுநா ஸர்வ க்ஷேத்திரங்களிலும்

என்னை க்ஷேத்திரஞ்ஞ னாகவு மறிக'', ''இவ் வாத்மாவினும் அந்ய மெல்லாம் நசுவரம்'', ''ஈண்டு நாநா என்பது அற்பமு மில்லை'', ''முடிவினை யுடையது இத்தேஹம், ஆத்மா நித்ய மென்கின்றனர்'', ''இப் பூதம் அவித்தையினும் அவ்யக்தமா யிருக்கின்றது. நாசத்தின் பின்னும் அவ்யக்தமா யிருக்கின்றது'', என.

இரு விதமாகக் கூறிய ஐந்து ஹேத்வாபாஸங்களில் பாதத்திற்கு ஸாத்தியாபாவ நிச்சயத் தன்மையினுலும், ஸத்பிரதிபக்ஷத்திற்கு விரோதி ஞாந ஸாமக்கிரித் தன்மையினுலும், ஸாக்ஷாத் அநுமிதி ஞாநத்தின் பிரதிபந்தகத் தன்மை யிருக்கின்றது. மற்றைய மூன்றற்கும் பராமர்ச்சத்தின் பிரதிபந்தகத் தன்மை யிருக்கின்றன. அவற்றுள்ளும், ஸாதாரணத்திற்கு வியபிசாரித் தன்மையினுலும், விருத்தத்திற்கு ஸமாநாதிகரணத் தன்மையின் அபாவத் தன்மையாலும், வியாப்யத்வாசித்தத்திற்கு விசிஷ்ட வியாப்தியின் அபாவத் தன்மையாலும், அஸாதாரணம், அநுபஸம்ஹாரி என்னும் இரண்டற்கும் வியாப்தி ஸம்சயத்தின், அல்லது அபாவத்தின் ஹேதுத் தன்மையினுலும், வியாப்தி ஞாநத்தின் பிரதிபந்தகத் தன்மை இருக்கின்றது. ஆசிரயாசித்தம் இரண்டற்கும் பக்ஷதர்மத் தன்மையின் ஞாநத்தின் பிரதிபந்தகத் தன்மை யிருக்கின்றது. சித்த ஸாதநத்திற்குப் பக்ஷத் தன்மையின் நாசகத் தன்மையால் ஆசிரயாசித்த மென்னும் ஹேத்வாபாஸத்தில் அந்தர்பாவமாம். எசுனுல் பிரஹ்மாத்மாவின் ஏகத்வார்த்த ஸம்பாவனையின் நிமித்தம் சுருதியால் ஸஹகாரி அநுமாநத்தின் அங்கீகாரஞ் செய்யப்பட்டிருக்கின்றதோ, ஸ்வதந்தரப் பிரமாணத் தன்மையினு லன்றோ, அதனுல் அநுமாநத்தின் அங்கமாகிய ஸத் அஸத் ரூப ஹேதுவின் பரீக்ஷை பரம்பரையாக வேதாந்தத்திற்கு உபயோகியாம். அதனுல், ஈண்டு ஹேத்வாபாஸங்கட்கும் அதிகாரியின் ஞாநத்தின் பொருட்டு இரண்டு ரீதியாக நிருபணஞ் செய்யப்பட்டது. ஆதலால், சிரௌதார்த்தத்தின் ஸம்பாவனையின் பொருட்டு அதிகாரிகளால் அநுமிதியின் பிரதிபந்தகமாய அஸத் ஹேதுவின் தியாக பூர்வகம், பலத்தோடு கூடிய அபேத சுருதி அவிருத்த சத் சித் முதலிய ஸத் ஹேதுக்களாலும் ஜகத்தின் மித்தியாத் தன்மையினைப் போதிக்கும் சுருதி விரோத மின்றிய



திருசியத்வாதி ரூப ஸத் ஹேதுக்களினுலும், பிரஹ்மாத்ம ஏகத் தன்மையின், பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மையின் அவசியம் நிச்சயஞ் செய்தல் ஸாக்ஷாத்கார உத்பத்தியின் பொருட்டு யோக்யமாம்.)

## 4—24 பேதம்.

வேதாந்த தாத்பரிய மின்றிய த்வைத வாதிகள் ஜகத்தில் வாஸ்தவமாக ஐந்து பேதத்தினைக் கொள்கின்றனர். அவற்றினைக் காண்பிப்பாம்—(1) ஜீவர்களின் பரஸ்பர பேதம், (2) ஜீவேசுவரர்களின் பரஸ்பர பேதம், (3) கடாதி ஜட பதார்த்தங்களின் பரஸ்பர பேதம், (4) ஜகத் ஈஸ்வரனின் பரஸ்பர பேதம், (5) ஜீவ ஜகத்தின் பரஸ்பர பேதம் எனப் பேதம் ஐ வகைத்தாம். அவற்றுள், சிலர் ஜீவனை ஜடமாகக் கொள்கின்றனர். சிலர் சேதநமாகக் கொள்கின்றனர். சிலர் ஜட சேதநமாகக் கொள்கின்றனர். சிலர் அணு வென அங்கீகரிக்கின்றனர். சிலர் மத்தியம மென அங்கீகரிக்கின்றனர். சிலர் மஹத் பரிமாண மென அங்கீகரிக்கின்றனர். ஜீவர்களின் நாநாத்வமும், பரஸ்பர பேதமும் எல்லாத் த்வைத வாதிகட்கும் இஷ்டமாம்.

### (1) ஜீவர்களின் பரஸ்பர பேதம்.

(1) அவர்கள் கூறுகின்றனர்:— ஜீவன் பரஸ்பரம் பிந்நமாம். விசித்ர ஸுக துக்காதி யுடைமையின். ஒருவனுக்கு ஞாநத்தினுல் முக்தி யுண்டாயினும் மற்றையோருக்குப் பந்தம் பார்க்கப்படுதலின். புண்யம் பாவம் மிசிரம் என்னும் மூ விதக் கிரியையின் பிந்ந பிந்ந கர்த்தாவா யிருத்தலின். அதில் சுருதி ஸ்மிருதி வாக்கியங்களையுங் கூறுகின்றனர்:—''பிராஹ்மணன் நித்தியம் அக்நிஹோத்ரம் செய்க'', ''க்ஷத்திரியன் ராஜஸூயத்தினுல் யாகஞ் செய்க'', ''நித்தியம் நித்தியம் ஸந்தியாவந்தநம் செய்க'', ''பிராஹ்மணன் கொல்லத் தக்கவ னல்லன்'', ''ஸர்வ பூதங்கட்கும் ஹிம்ஸை செய்யற்க'', ''ஸ்வர்க்க காமன் அக்நிஷ்டோமத்தினுல் யாகஞ் செய்க'', ''விருஷ்டி காமன் காரீரி முதலியவற்றினுல் யாகஞ் செய்க'', ''ஹே அர்ஜுநா, அஞ்ஞாநத்தினுல் ஜீவன் மோகத்தினை அடைகின்றுன்'',

"என்னைப் பஜிப்பவன் மாயையினைக் கடக்கின்றான்" என்பன வாதி. (1)

(2) ஜீவேசுவரர்களின் பரஸ்பர பேதம்.

(2) ஜீவேசுவரர்களின் பேதத்தை இவ்வாறு கூறுகின்றனர். ஜிவன் ஸர்வதா பிரஹ்மத்தினும் பிந்நனும்; அல்பஞ்ஞத்வாதி தர்ம முடையவனாகலின், ஸுகி துக்கி ஸம்ஸாரியா யிருத்தலின். ஈசுவரன் கர்ம பலத்தினைக் கொடுப்பவனும். ஜீவன் கர்ம பல போக்தாவாம். ஜீவன் மாயாதீநனும். ஈசுவரன் ஸ்வதந்திரனும். ஜீவன் கர்மத்தாற் கட்டுப்பட்டவனாவன். ஈசுவரன் புண்ய பாவங்களற்றவனும். "இச் சீவன் மோகத்தினை யடைந்து அநீசத் தன்மையினால் சோகத்தினை யடைகின்றான்", "இப்பரமேசுவரனது பயத்தினால் வாயு சலிக்கின்றது", இப்பரமேசுவரனே அவனுக்கு நற்காமத்தினைச் செய்விக்கின்றான்" என்பன வாதி சுருதி வாக்கியாபாஸங்களைக் கொண்டு ஜீவேசுவரர்களின் பேதத்தைச் சாதிப்பதில் அநந்த கற்பனையைச் செய்கின்றனர். (2)

(3) ஜடங்களின் பரஸ்பர பேதம்.

(3) ஜட ஜகத்தின் பேதத்தினை இவ்வாறு கூறுகின்றனர்:— ஜட ஜகத்துக்கள் பரஸ்பரம் பிந்நமாம். "ஈண்டுக்கட மிருக்கின்றது." "ஈண்டுப்பட மிருக்கின்றது," என்பதாதிப் பிந்நத் தோற்றத்தின் விஷயத் தன்மையினால். எதனால், பிரதீதியோ தோற்றத்தக்கதன் அதீநமா யுண்டாகின்றது. கடம் பட மன்று; படம் கட மன்று; ரூபம் ரஸ மன்று; ரஸம் ரூப மன்று. கடத்துவம் படத்துவ மன்று. படத்துவம் கடத்துவ மன்று. என்பதாதி பேதத்தினைக் கிரகிக்கும் பிரத்தியக்ஷப் பிரதீதியின் ஸத்பாவத்தினால் திரவ்யாதி ரூப ஜட ஜகத் பரஸ்பரம் பிந்நமாகவே யிருக்கின்றது. (3)

(4) ஜகத் ஈசுவரர்களின் பரஸ்பர பேதம்.

(4) எதனால், பரமேசுவரன் ஸர்வத்திலும் அநுஸ்யூதமாய் வியபிசார மற்று இருக்கின்றான், ஜகத் பரிச்சிந்நமாய் பரஸ்பரம்



வியபிசாரியா யிருக்கின்றது. ஜகத் காரியமாம். பரமேசுவரன் காரணமாவன். ஜகத் ஷட்பாவ விகார முடையதாம். பரமேசுவரன் அவிகாரியாவன். ஜகத் கிரியை யுடையதாம். பரமேசுவரன் நிஷ்க்ரியனும். ஜகத் அநித்தியமாம். பரமேசுவரன் நித்தியனும். ஜகத் ஜட துக்க ரூபமாம். பரமேசுவரன் சேதந ஸுக ரூபனாவன் என்பன வாதி விருத்த தர்ம முடையதாந் தன்மையினால், ஈசுவரனுக்கும், ஜகத்திற்கும், பரஸ்பர பேதம் ஸ்வாபாவிகமாக அங்கீகரிக்கின்றனர். (4)

(5) ஜீவ ஜகத்களின் பரஸ்பர பேதம்.

(5) எதனால் ஜீவன் கர்த்தா போக்தா வாவன். ஜகத் கர்ம போக்கியங்களாம். ஜீவன் உபகாரிய னாவன். ஜகத் உபகாரகமாம். ஜகத் ஜீவனது பந்த மோக்ஷத்தின் ஹேதுவாம். ஜீவன் பந்த மோக்ஷத்தினை யநுபவிப்பன். ஜீவன் பிரகிருதி விகிருதிக ளல்லன். ஜகத் பிரகிருதி விகிருதி ரூபமாம். ஜீவன் நித்திய னாவன். காரிய ரூப ஜகத் அநித்தியமாம் என்பன வாதி விலக்ஷண தர்மத்தினை விஷயமாக வுடைய பிரத்தியக்ஷப் பிரதீதியினால், ஜீவனுக்கும் ஜகத்திற்கும் உள்ள பேதத்தையும் ஸ்வாபாவிகமாகவே அங்கீகரிக்கின்றனர். (5)

(இவ்வாறு த்வைத வாதிகளின் ஐந்து வித பேதத்தின் கல்பனையினைக் காண்பித்து, இப்பொழுது அத்வைத வாதிகளால் கூறப்பட்டிருக்கும் ஐந்து வித பேதத்தின் அபாவத்தினையும் ஸங்க்ஷேபமாகக் காண்பிப்பாம்:—

(1) முன்னர்க் கூறிய ஜீவர்களின் பரஸ்பர பேதம் அஞ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்டு கர்த்ருத்வாதி தர்ம விசிஷ்ட லிங்க சரீரம், வர்ணாசிரம ஜந்ம மரணாதி தர்மங்களோடு கூடிய ஸ்தூல சரீரம் என்னும் இரண்டில் பிரதிம்பித்து அத னதன் தாதாத்மிய அத்தியாஸத்தினால் அந்தந்த அவஸ்தையின் அபிமாநியாகிய பிரமாதாவாய ஜீவர்களின் பரஸ்பரம் வியாவகாரிக அல்லது பிராதி பாஸிக பேத மிருக்கின்றதாமாயினும், ஸர்வ அந்தக்கரண வுபஹித ஸர்வ ஸாக்ஷி ரூப ஒரு பாரமார்த்திக ஜீவனுக்குப் பரஸ்பரம் பேத மில்லை. ஒவ்

வொரு சரீரத்தினுள் ளிருக்கும் ஒவ்வொரு ஆபாஸ ஸகித அஹங்காரத்திற்குப் பிரகாசத் தன்மையினல் ஸாக்ஷியாகிய ஆத்மாவும் பரிச்சிந்நமாய்ப் பரஸ்பரம் பிந்நம் போன்று விளங்குகின்றது. அங்ஙனமாயினும் கடாகாச மடாகாச முதலிய உபாதியின் பேதம் போன்று அப் பேதம் மித்தையா யிருக்கின்றது. வாஸ்தவ மாக அவற்றிற்கு ஏகத் தன்மை இருத்தலின். ஸர்வத்திற்கும் ஸாக்ஷித் தன்மையினல் எல்லாவற்றிலும் ஸம்பந்தித்து இருத்தலின். அதன் பேதத்தினைக் கிரஹிக்கும் பிரமாண மின்மையின், சக்ஷுரா முதலிய இந்திரியங்கட்கு ரூபாதி யின்றிய ஸாக்ஷியாகிய ஆத்மாவில் பிரவிர்த்தி யின்மையின். மநதிற்கு காண மின்றிய தன்மையால், அல்லது விசிஷ்ட ஆத்மாவினைக் கிரஹிக்குந் தன்மையால், அந்யதா (வேறோராற்றல்) சித்தித் திருத்தலின். பிரத்தியக்ஷத்தினை உபஜீவிக்கும் அநுமாநத்திற்கு அப்பிரத்தியக்ஷ ஸாக்ஷியாகிய ஆத்மாவில் பிரவிர்த்தி யின்மையின். தனது ஸாக்ஷித் தன்மையினல் தனக்கு அபேதத்தினைக் கிரஹணஞ் செய்யின் ஆத்மாசிரய தோஷமாகலின். இரண்டாவதால் முதலதன் பேதம் கிரஹணஞ் செய்யப்படுகின்றது. மூன்றுவதால் இரண்டாவதன் பேதம் கிரஹணஞ் செய்யப்படுகின்றது. நான்காவதால் மூன்றுவதன் பேதம் கிரஹணஞ் செய்யப்படுகின்றது என அந்யோந்யாசிரய முதலிய தோஷப் பிரசங்கத்தினல் என்க.

"ஒரே பூதாத்மா பூதங்கள் தோறும் இருக்கின்றது", "ஸாக்ஷி சேதா கேவலம் நிர்க்குணம்" "இதனினும் வேறு திருஷ்டா இல்லை; இதனினும் வேறு சுரோதா இல்லை", "ஒரு தேவன் ஸர்வ பூதங்களிலும் கூடனு யிருக்கின்றுன்.", "அரே! விஞ்ஞாதியின் விஞ்ஞாதாவை நீ எதனல் அறிவாய்", "ஹே குடாகேச! நான் ஒரு ஆத்மாவாய் ஸர்வ பூதங்களிலும் இருக்கின்றேன்", "ஆத்ம ஸ்வரூப வஸ்து நாநாத் தன்மையின்றியதாய், ஹேவிப்ர! உன்னல் செய்யப்பட்ட பிரசிநம் நீ யார்? என்று அநேகவற்றில் நிச்சய ரூபப் பிரசிநம் எங்ஙனம் பொருந்தும்? உனக்கு உத்தரங் கொடுப்பவன் எதனை ஆசிரயிப்பன்? ஆத்மாவின் சேஷமாய் எந்த ஜாதி குணாதி விசேஷங்களின் ஆசிரயத்தினல் நான் உத்தரங் கூறுவேன்" என்னு



மிடத்து ஹம்ஸ ரூப பகவான் ஸநகாதிகளின் உத்தரமாம். என்பதாதி ஏகத் தன்மையினைப் பிரதிபாதிக்கும் பிரபல சுருதி ஸ்மிருதிகளோ, பிரத்தியக்ஷாதி சித்த ஜீவர்களின் பரஸ்பர ஔபாதிக பேதத்தின் அநுவாதகமாய் முற்புகன்ற துர்ப்பல சுருதி ஸ்மிருதிகளின் பாதகம் எதனல் இருக்கின்றதோ, அதனல் ஜீவர்களின் பரஸ்பர பேதம் மித்தையேயாம். உண்மை யன்று, அஞ்ஞானத்தினல் கற்பிக்கப்பட்ட அந்தக்கரண விசிஷ்ட பிரமாதவாய ஜீவன் அதிஷ்டாநத்தில் கற்பிதமா யிருத்தலின், அதிஷ்டாநத்திலும் பிந்ந ஸத்தை அதற்கின்மையின்.

(2) அஞ்ஞானத்தினல் கற்பிக்கப்பட்ட ஔபாதிக ஜீவேசுரர்களின் பேதமும் "தத்த்வமஸி" என்பதாதி அபேதத்தைக் கூறும் வசநங்களின் அவிசார தசையில், விசாரத்தில் ஸாமர்த்திய மின்றியவனுக்கு புத்தியில் ஆரூடமாய் விளங்குகின்றதாமாயினும், தத் த்வம் பதார்த்தங்களின் விசார காலத்தில், ஒரு விபக்தி (வேற்றுமை) யினை அந்தமாக வுடைய தத் த்வம் பதார்த்தங்களின் ஸாமாநாதிகரண்யத்தின் பலத்தினல் புகன்ற ஜீவேசுவரர்களின் அத்தியந்த அபேதத்தின் விரோதியாகிய இரண்டு பதங்களின் முக்கியார்த்தத்தில், பரஸ்பர விருத்த விசேஷணம்சமாகிய ஸர்வஞ்ஞத்வாதி அற்பஞ்ஞத்வாதி ரூப, ஜீவப் பிரஹ்ம பேதத்தினை ஸாதிப்பதனை ஜகதஜகத் (விட்டு விடாத) லக்ஷணையினல் விட்டு, இரண்டு அர்த்தத்திலும் அநுகதமாயுள்ள அகண்ட ஏக சேதந ரூப அவிருத்தாம்ச பரஸ்பர அத்தியந்த அபேதமே, விசார முடைய புருஷனல் கிரஹிக்கப்படுகின்றது. அஞ்ஞானத்தினல் செய்யப்பட்ட ஔபாதிக பேதம் ஞானத்தினல் மூல ஸஹித உபாதியின் நாசமாய் நாசமாகின்றதாகலின். ஸ்ரீமத் வியாஸ சங்கராதி ஆசாரியர்களும் இஷ்ட புத்தியால் ஜீவேசுவரர்களின் அத்தியந்த அபேதமே அங்கீகரித் திருத்தலின். "பிரகாசாதி போன்று" என்பதாதி சூத்திரங்களில் ஔபாதிக பேதங் கூறியிருத்தலின். அந்யதா (கொள்ளாக்கால்) "தத்துவமஸி", "அயமாத்மா பிரஹ்மம்", "பிரஞ்ஞாந மாநந்தம் பிரஹ்மம்", "அஹம் பிரஹ்மாஸ்மி", "ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம்", "ஹே அர்ஜுந! இத் தேஹத்தி லிருக்கும் பர புருஷன் உபதிருஷ்டா அநுமந்தா

பர்த்தா போக்தா மஹேசுவரன் பரமாத்மா என்னும் சப்தங்களாலும் கூறப்படுகின்றான்'', ''என்னை க்ஷேத்திரஜ்ஞனாகவு மறி'' என்பன வாதி அபேதத்தினைக் கூறும் சுருதி ஸ்மிருதிகளின் அநந்த வசநங்கட்கு அவகாசத் தன்மை யின்மையினால் கோபமுண்டாம். அதுவோ ஆஸ்திகர்கட்கு இஷ்ட மில்லை. அதனால் ஜீவேசுவரர்களின் பேதமும் மித்தையாக அஞ்ஞானத்தினாற் செய்யப்பட்டதா யிருக்கின்றது உண்மையாக அவற்றிற்கு பேதத்தின் கந்தமு மில்லை. ஜீவேசுவரர்களில் அநுகதமா யுள்ள சுத்த சேதநம் அத்விதீயமா யிருத்தலின். வேறு பிரமாணத்தினாற் சித்தித்த ஜீவேசுவரர்களின் பேதத்தை யநுவதிக்கும் முற்புகன்ற உபகாரகமாய சுருதி ஸ்மிருதிகளோ, அஞ்ஞானத்தினால் ஆரோபிக்கப்பட்ட பேதத்தினை ஆசிரயித்து அபேதத்தினைக் கூறும் உபகாரிய சுருதி முதலியவற்றிற்கு அநுகூலமான ஆரோபிக்கப்படாத அத்வைத பிரஹ்ம ஸ்வரூபத்தை அறிவிப்பதன்கண்ணே தாத்பரிய முடையன வென வறிக.

(3) பிராஹ்மணாதி கிரி நதியாதி பேத பிந்நமாய ஜட பதார்த்தங்களின் பரஸ்பர பேதம் காரிய காரணாதி ரூபத் தன்மையாலும், பிரத்தியக்ஷாதி பிரமாண ஆபாஸங்களினாலும் பிரசித்தமாமாயினும்? பரிணாம வாதத்தின் அபிப்பிராயத்தினால், தன் காரண ரூப மாயையின் அபேக்ஷையால், எதற்கும் எதனோடும் பேத மில்லை. ஸம்பூர்ணப் பிரபஞ்சமும் ஒரு மாயையின் பரிணாம ரூபமா யிருத்தலின். மாயை பிரஹ்மத்திற் கற்பிதமாகலின். அல்லது பௌதிக ஸர்வப் பிரபஞ்சமும் பஞ்ச பூதங்களின் காரியத் தன்மையினால் அவற்றின் ரூபமா யிருத்தலின். பஞ்சீகிருத பஞ்ச பூதங்கட்கு யாண்டும் ஸமாநமாய் உண்மையாகப் பரம காரண ரூபத்தோடு அபிந்நமாய் 'நீயார்?' என்னும் உனது பிரசிநம் ஆரம்ப மின்றியதாயும், நிரர்த்தகமாயும், இருக்கின்றது'' என்னும் பிரமாணத்தினால் ஜகத்திற்கு பரஸ்பரம் பேத மில்லை.

விவர்த்த வாதத்தின் அபிப்பிராயத்தினால் தனது உபாதாந காரண ரூப பிரஹ்மத்தின் அபேக்ஷையினாலும் ஜட பதார்த்தங்களின் பரஸ்பர பேதம் சித்திப்ப தில்லை. எல்லாம் பிரஹ்மத்தின்



விவர்த்தமா யிருத்தலின். எல்லாவற்றிலும் ஏக ரூப ஸத் சேதநம் அநுகதமா யிருத்தலின். பிரஹ்மமே தன் ஸ்வரூபத்தில் இருந்தும் மாயையினால் நாநா ரூபமாக விளங்குதலின். ஆண்டுச் சுருதி, ''மாயையைப் பிரகிருதி யென மதிக்க, மாயியை மஹேச'', னென, 'அது ஈக்ஷணஞ் செய்தது, நாநா வாவேன். நாநா ரூபமாக வெளிப்படுவேன்'', ''அந்த ஆத்மாவினை தான் செய்தது'', ''அந்தப் பரமேசுவரனே சத்திய சப்தார்த்த ஸ்தூலப் பிரபஞ்சமும், அஸத்திய சப்தார்த்த ஸூக்ஷ்மப் பிரபஞ்சமும் தானே யானான்', ''எதனினின்றும் பூதம் உத்பத்தி யாகின்றது'', ''ஹே ஸௌம்ய! இச் சகத்து முன் ஸத்து ரூபமாகவே இருந்தது'', இச் சர்வமும் ஆத்மாவே'', ''இவ் வெல்லாம் நாராயணனே'' என்பன வாதி அநந்த சுருதிகளின் பிரமாணத்தினால், ஜடங்களின் பரஸ்பர பேதமும் அவிசாரத்தாற் சித்தித்ததாம். ''கடம் இருக்கின்றது. படம் இருக்கின்றது. கடம் விளங்குகின்றது. படம் விளங்குகின்றது''. என்பன வாதி பேதத்தினை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷப் பிரதீதியும் ஸர்வ ஜடப் பிரபஞ்சங்களிலும் அநுகதமா யுள்ள ஸத்தாரூப சித்தோடு ஜடப் பிரபஞ்சத்திற்கு அபேதத் தன்மையினையே போதிக்கின்றது. ஸத்தாரூப சித்தும் பிரஹ்ம ஸ்வரூபமா யிருத்தலின். ஸத் சித் ரூப பிரஹ்மத்தில் நாநாவித ஜகத், அபேத சம்பந்தத்தினால் கற்பிக்கப்பட்டிருத்தலின். அதனால் ஜகத்தின் பரஸ்பர பேதம் பிராந்தி சித்தமேயாம்.

(4) ஜகத் பிரஹ்மங்களின் பேதமும் ஸ்தூல திருஷ்டியினால் பரம்பரா பிராந்தியால் ஸ்தூல புத்தி யுடையவர்கட்கு புத்தியில் ஆரூடமா யிருக்கின்றதாமாயினும், விசார திருஷ்டியினாற் பார்க்கின் அதிஷ்டாநப் பிரஹ்மத்தில் அஞ்ஞானத்தினாற் கற்பிக்கப்பட்டு ஸ்வயம் ஸத்தை யின்றிய பிரபஞ்சம் பிரஹ்மத்தில் அந்யோந்ய பேதத்தின் ஸாதகம் அன்று. எங்ஙனம் சுக்தி ரூப அதிஷ்டாநத்தில் அஞ்ஞானத்தினாற் கற்பிக்கப்பட்ட ரஜத ரங்காதிகள் சுக்தியில் அந்யோந்ய பேதத்தின் ஸாதகம் அன்று. இரஜதாதியில் அநுகதமாய அதிஷ்டாநத்தின் இதம் அச்சத்தினும் பிந்ந சத்தை யின்மையின். ''இரண்டு ஸத் பதார்த்தங்களானே அந்யோந்யாபாவம் நிரூ

பிக்கப்படுகின்றது" என்னும் நியாயத்தினலோ, அங்ஙனமே பிரபஞ்சமும் அதிஷ்டானத்தில், தான் இருக்குங் காலத்திலும் தன் அதிகரணத்தி லுள்ள அத்தியந்தாபாவத்தின் பிரதியோகியாகலின், தன் அதிகரணத்தில் தன் பேதத்தின் ஸாதகத் தன்மை யில்லை. "எதன் ஸத்துவத்தினல் ஸ்வபம் அஸத் ரூபமாகிய ஜகத்து ஸத்தாய்த் தோற்றுகின்றது. எதனினின்றும் பிந்நஞ் செய்யின், அஸத்தாய்த் தோற்றுகின்றது. இவ்வாறு ஸத் ஸ்வரூபமாகப் பரமேசுவரன் இருக்கின்ருன். அவனை நான் பஜனை செய்கின்றேன்.", "பிரஹ்ம ரூப ஸச்சிதாநந்த வஸ்துவில் ஜலம் பேநம் முதலியன போன்று எல்லா நாம ரூபங்களும் விரிதல் சிருஷ்டி யெனப்படும்". என்பன வாதி ஸ்மிருதிப் பிரமாணத்தினல்.

(5) போக்த்ரு போக்யாதி ஆகாரத்தினல் ஜீவ ஜகத்தின் பேதம், ஜீவனிடத்தில் உண்மையாகக் கர்த்ருத்வ போக்த்ருத்வமிருக்கின், அப்பொழுது சித்தமாம். அக் கர்த்ருவ போக்த்ருவம் உண்மையாக இல்லை. ஜீவன் உண்மையாகப் பிரஹ்ம ஸ்வரூபமாக இருத்தலின். பின்னையோ போக்த்ருத்வாதி தர்ம விசிஷ்ட அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட லிங்க சரீரத்தின் தாதாத்மிய அத்தியாசத்தினல், ஸர்வ அநர்த்தங்களையுஞ் செய்யும் கர்த்ரு போக்த்ருத்வாதி பிராந்தியாற் சித்தித்த தோற்றம், அவிசார காலத்தில் ஜீவனுக்குத் தன்னிடத்தி லுண்டாகின்றது. "அதன் குண ஸாரத்தால்" என்பதாதி சூத்திரங்களில் சூத்திரக்காரராலும் ஆத்மாவில் கர்த்ருத்வாதிகள் புத்தியின் அத்தியாசத்தின் அதீநம் என்று கூறப்பட்டிருத்தலின். அது ஆத்மாநாத்ம விவேக காலத்தில் அந்தக்கரணத்தோடு கூடிய சிதாபாஸனிடத்திலும் எப்பொழுது வாஸ்தவமாக இல்லையோ சிதாபாஸ அந்தக் கரணங்கட்கு ஜடாஜடத் தன்மையினல் பரஸ்பரம் பிந்நமாகலின். அப்பொழுது அதன் அதிஷ்டாந கூடஸ்த ஸாக்ஷி ஸ்வப்பிரகாச சிதாத்மா அம்சத்தில் எங்ஙனம் உண்டாம்? அதனல் வஸ்து கதியால் கர்த்தா போக்தாக்கள் ஜீவனுக் கின்மையின், அதனல் நிரூபிக்கப்பட்ட கர்ம போக்ய வஸ்துக்களும் இன்மையின், ஜீவ ஜகத்துக்களின் பேதமும் வித்துவான்களுக்கு மித்தையாகவே தோற்றுகின்றது. "இப் புருஷன் அசங்கனு யிருக்கின்ருன். எதனேடும் ஸம்பந்திப்ப தில்லை.", "ஆத்மாவினை இப் புருஷன் நான் என்று எப்பொழுது அறிகின்ருனே, அப்பொழுது எதனை இச்சித்து எதன் காமத்தின் பொருட்டு சரீரத்தினை ஆசிரயித்துத் தாபத்தை யடைவான்", "ஸ்தூல சரீரத்தோடு கூடிய லிங்க சரீரம் ஸாக்ஷியின் ஸந்நிதியில் விளங்குகின்றது. அது சித் ஸாயையின் பிரவேசத்தினல் வியாவகாரிக ஜீவனுகின்றது.", "இதன் ஜீவத் தன்மை ஆரோபமாக ஸாக்ஷியினிடத்திலும் தோற்றுகின்றது. ஆவரணம் நிவிர்த்தியாய் பேதக் கூட்டம் நாசத்தினை யடைகின்றன." என்பன வாதி சுருதி ஸ்மிருதிகளின் பிரமாணத்தினல்.



பேதம், பேதத்தினைக் கிரஹிக்கும் ஞாநம் என்னு மிரண்டின் மித்தையாத் தன்மையினைப் போதிக்கும் சுருதி மூலமாய அநுமாநங்கள் இருத்தலின். அவ் வநுமாநங்கள் இதுவாம்:— விவாதத்தின் விஷயமாய பேதம் மித்தையாம், பேதத் தன்மையால்; தர்ப்பணம் ஜலம் முதலியவற்றில் முகாதி பேதம் போன்று. (1) ஜீவாத்மா பிரஹ்மத்தினும் பிந்ந மல்ல, சுருதி, தன் அநுபவ சித்த ஸச்சிதாநந்த ரூப மாகலின்; பிரஹ்மம் போன்று. (2) ஜடஜகத்துக்களின் பரஸ்பர பேதம் ஸத்திய மன்று, பேதத் தன்மையால்; மனே ராஜ்ய அர்த்த பேதம் போன்று, சுக்தி ரஜத பேதம் போன்று. (3) ஈசுவரப் பிரபஞ்சங்களின் பேதம் சத்திய மன்று, பேதத் தன்மையால்; ஸர்வ பாவ(பதார்த்த)ங்களின் பரஸ்பர பேதம் போன்று, கல்பிததத்திற்கு அதிஷ்டாநத்தில் பேதத்தின் சாதகத் தன்மை யின்மையின். (4) ஜகத் ஜீவர் என்னும் இரண்டின் பேதம் சத்திய மல்ல; பேதத் தன்மையால், இந்திர ஜாலத்தி லுள்ள பதார்த்த பேதம் போன்று. (5) எதனல், எதுவரை முற் புகன்ற ஐந்து பிரகாரமாய பேதத்தில் ஸத் புத்தி யிருக்கின்றதோ, அதுவரை அத்வைத ஞாநம் உண்டாகின்ற தில்லை. ஜந்ம மாணுதி ஸம்ஸாரத்தின் நிவிர்த்தியும் உண்டாகின்ற தில்லை. அதனல், முமுக்ஷுக்களால் சுரோத்திரியப் பிரஹ்ம நிஷ்ட குருவினை அடைந்து ஸர்வ யத்நத்தினலும் பேதத்தினைப் பாதிக்கும் ஞாநத்தினை ஸம்பாதநஞ் செய்தல் ஸர்வ அநர்த்த நிவர்த்தியின் நிமித்தம் யோக்கியமாம்.

பிராந்தி சித்த பேதமே அநர்த்தஞ் செய்வதாகலின். "இரண்டாவதனுனே நிச்சயமாகப் பயம் உண்டாகின்றது", "இவ் வாத்மாவில் நாநாத் தன்மை போன்று பார்ப்பவன் பயத்தை யடைகின்றுன்", "அவன் மிருத்யுவினின்றும் மிருத்யுவினை யடைகின்றுன்" என்பவன வாதி சுருதிகளால்.)

## 4—25. அபாவம்.

ஐந்து அபாவத்தினைக் கூறுவாம்:— பிராகபாவம், பிரத்வம்ஸாபாவம், ஸாமயிகாபாவம், அத்தியந்தாபாவம், அந்யோந்யாபாவம், என்னும் பேதத்தினுல் நியாய மத சித்த அபாவம் ஐ வகைத்தாம். அந்யோந்யாபாவத்தின் பிந்நமாய நான்கு அபாவத்தினையும் ஸம்ஸர்க்காபாவ மென்றுங் கூறுவர். எச் சம்பந்தத்தினுல் அபாவத்தின் பிரதியோகி, தன் அதிகரணத்தி லிருக்கின்றதோ, அச் சம்பந்தாவச்சிந்நமாகவே அதன் அபாவமும் ஆண்டு இருக்கின்றது. எங்ஙனம் எப் பூதலத்தில் ஸம்யோக ஸம்பந்தத்தினுல் கட மிருக்கின்றதோ, ஆண்டு கட அபாவ காலத்தில், ஈண்டு ஸம்யோ கஸம்பந்தாவச்சிந்ந கட மில்லை. அல்லது, கடத்தின் ஸம்யோக ஸம்பந்தம் இல்லை. அபாவம் இப் பிரதீதிக்கு விஷயமாகலின். அதனுல் ஸம்ஸர்க்காபாவ மெனப்படுகின்றது. "நாஸ்தி (இல்லை)" என்னும் சப்த ஜந்ய நிஷேத ரூபப் பிரதீதியின் விஷயமாவது, அல்லது ஸம்பந்த ஸாதிருசியங்களின் பிந்நமாகிய பிரதியோகியின் ஸாபேக்ஷப் பிரதீதிக்கு விஷயமாவது அபாவ மெனப்படும். பிராசீந நவீந மத பேதத்தினுல் அபாவங்களின் ஸாமாந்ய லக்ஷணம் இரு விதமாக ஈண்டுக் கூறப்பட்டது.

### (1) பிராகபாவம்.

(1) இப்பொழுது விசேஷ லக்ஷணத்தினைக் கூறுவாம்:—உத்பத்தி யின்றி நாச மடையும் அபாவம் பிராகபாவ மெனப்படும். ஆகாசாதி நித்தியத் திரவ்யத்திலும், அந்யோந்யாபாவ, அத்தியந்தாபாவங்களிலும் அதிவ்யாப்தி நிவாரணத்தின் பொருட்டு நாசம் எனக் கூறப்பட்டது. கடாதிகளிலும், பிரத்வம்ஸாபாவம், ஸாமயிகாபாவங்களிலும் அதிவ்யாப்தி நிவாரணத்தின் பொருட்டு உத்பத்தி யின்றியது எனக் கூறப்பட்டது. வேதாந்தத்தால் சித்தித்த மாயை, அதன் சம்பந்த முதலிய உத்பத்தி யின்றி நாச முடைய ஐந்து பாவ பதார்த்தத்திலும் அதிவியாப்தி நிவாரணத்தின் பொருட்டு அபாவம் எனக் கூறப்பட்டது. அந்தப் பிராகபாவம் பிரதியோகின் ஸமவாயி (உபாதாந) காரணத்தில் இருக்கின்றது. பிரதியோகியின் விரோதியா யிருக்கின்றது. ஏனெனின், பிரதியோகியின் அதிகரணத்தில் ஒரு காலத்தில் இருப்ப தின்மையின். பிரதியோகியின் உத்பத்தியினுல் நாச மாகின்றமையின். "கடம் உண்டாம்" என்னும் வியவஹாரத்தின் ஹேது இப் பிரதீதியின் விஷயமா யிருக்கின்றது, பிரதியோகியினை உண்டாக்குவதாயு மிருக்கின்றது. எங்ஙனம் கடத்தின் ஸமவாயி காரணமாய கபாலத்தில் கடோத்பத்தியின் பூர்வம் கடத்தின் அபாவம் இருக்கின்றது. பச்சைக் கபாலத்தில் ரக்த ரூப உத்பத்தியின் பூர்வம் ரக்த ரூபத்தின் அபாவம் இருக்கின்றது.



### (2) பிரத்வம்சாபாவம்.

(2) உத்பத்தி யுடையதாய் அந்த மின்றிய அபாவம், பிரத்வம்ஸா பாவ மெனப்படும். கடாதிகளிலும், ஸாமயிகாபாவத்திலும் அதிவ்யாப்தி நிவாரணத்தின் பொருட்டு அந்த மின்றியது எனப்பட்டது. ஆகாசாதிகளிலும், பிராகபாவாதிகளிலும் அதிவ்யாப்தியின் நிவாரணத்தின் பொருட்டு உத்பத்தி யுடையது எனப்பட்டது. பிரதியோகியின் நிமித்த காரணங் (தண்டாதி) களினுல் உண்டாய்ப் பிரதியோகியின் ஸமவாயி காரணத்தி லிருக்கின்றது. "கடம் நாச மடைந்தது" என்னும் வியவஹாரத்தின் ஹேதுவாம். எங்ஙனம், கடோத்பத்தியின் பின் (உலக்கை முதலியவற்றுல்) அடித்த லாதிகளால் கடத்தின் நாச முண்டாய்த் தனது ஸமவாயி காரணமாகிய கபாலத்தில் கடத்தின் அபாவம் இருக்கின்றது. அக்நியின் சம்யோகத்தினுல் பக்குவ மடைந்த கபாலத்தில் ரக்த ரூபத்தின் உத்பத்தியாய்ச் சியாம ரூபத்தின் அபாவ முண்டாகின்றது. அது பிரத்வம்ஸாபாவமாம்.

## (3) சாமயிகாபாவம்.

(3) உத்பத்தி யுடையதாய் நாச முடைய அபாவம் ஸாமயிகாபாவமாம். அது பிரதியோகியின் ஸம்பந்தியாய் பூதலாதிகளி லிருக்கின்றது. "இப் பொழுது இப் பூதலத்தில் கட மில்லை" என்னும் வியவஹாரத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது. பிராகபாவத்தி லுள்ள அதிவ்யாப்தி நிவிர்த்தித்தற் பொருட்டு உத்பத்தி யுடையதென்று கூறப்பட்டது. பிரத்வம்ஸாபாவத்தி லுள்ள அதிவ்யாப்தியின் நிவாரணத்தின் பொருட்டு நாச முடையதென்று கூறப்பட்டது. கடாதி பாவ ரூப ஜகத்தி லுள்ள அதிவ்யாப்தியின் நிவாரணத்தின் பொருட்டு அபாவ மெனப்பட்டது. எங்ஙனம் பூதலாதிகளில் கடாதிகளின் அபாவம் இருக்கின்றது. அது ஒரு காலத்தில் உண்டாகின்றது. ஒரு காலத்தில் நாச மடைகின்றது. பூதலத்தினின்றும் கடத்தினை வேறு தேசத்திற்குக் கொண்டு போயின் கடத்தின் அபாவம் பூதலத்தி லுண்டாகின்றது. அப் பூதலத்தில் கடத்தினைக் கொண்டுவரின் கடத்தின் அபாவம் பூதலத்தில் நஷ்டமாகின்றது. அதனால் ஸாமயிகாபாவம் உத்பத்தி நாச முடையதா யிருக்கின்றது.

நவீந நையாயிகர்களோ இங்ஙனங் கூறுகின்றனர் :— ஸமய விசேஷத்தில் தோற்றும் ஸாமயிகாபாவம் அத்தியந்தாபாவத்திலடக்கமாம். கடாபாவ முடைய பூதலத்தில் கடத்தினைக் கொண்டு வருதலால் அத்தியந்தாபாவம் வேறு இடத்திற்குச் செல்லுதலின். அபாவம் உண்டாயினும் பிரதீதி யின்மையாயில். கடத்தினை எடுத்து விடின் பிரதீதி யாகுதலால். பூதல கட ஸம்யோகங்களின் பிராகபாவம் ப்ரத்வம்ஸாபாவம் என்னும் இரண்டும் அத்தியந்தாபாவப் பிரதீதியின் நியாமகமாக இருக்கின்றது. கட முடைய பூதலத்தில் அதன் சம்யோகத்தின் பிராகபாவப் பிரத்வம்சாபாவம் என்னும் இரண்டும் அஸத்தா யிருத்தலின். அத்தியந்தாபாவத்தின் பிரதீதியும் உண்டாவ தில்லை. பூதல கட ஸம்யோகத்தின் பூர்வ காலத்திலும் கடத்தினை எடுத்து விடின், ஸம்யோகத்தின் த்வம்ஸ காலத்திலும் அத்தியந்தா பாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.



## (4) அத்யந்தாபாவம்.

(4) த்ரைகாலிக (முக் காலத்தினை யுடைய) ஸம்பந்தத்தினால் அவச் சிந்நம் பண்ணப்பட்ட பிரதியோகியினையுடைய அபாவம் அத்யந்தாபாவமாம். அது அநாதி அநந்தமா யிருக்கின்றது. த்வம்ஸப், பிராகபாவங்களில் உண்டாம் அதிவ்யாப்தியினை நிவிர்த்தித்தற் பொருட்டு த்ரைகாலிகம் என்னும் பதங் கூறப்பட்டது. அந்யோந்யாபாவத்தில் உண்டாம் அதிவ்யாப்தியினை நிவிர்த்தித்தற் பொருட்டு ஸம்பந்தாவச்சிந்நம் என்னும் பதங் கூறப்பட்டது. அத்தியந்தாபாவம் அநந்தமா யிருத்தலின் பிராகபாவ மன்று. பிராகபாவம் உத்பத்தி யுடைய தாகலின். அநாதியா யிருத்தலின். பிரத்வம்ஸாபாவமு மன்று. ஏனெனின், த்வம்ஸம் ஜந்ய மாகலின் ஸதா இருத்தலின். ஸாமயிகாபாவமு மன்று. ஏனெனின் ஸாமயிகாபாவம் ஒரு காலத் திருத்தலின். த்ரைகாலிக ஸம்பந்தத்தினால் நிரூபிக்கப்படுதலின். அது அந்யோந்யாபாவ மன்று. அந்யோந்யாபாவத்திற்கு ஸம்பந்த அபேக்ஷையின்மையின் அது பிரதியோகியின் அதிகரணத்தில் எப்பொழுதும் இருக்கின்றது. "இல்லை" என்னும் வியவஹாரத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது. எங்ஙனம், வாயுவில் ரூபம் முக்காலத்தும் இல்லை. ஆண்டு ரூபத்தின் அத்தியந்தாபாவம் இருக்கின்றது. எங்ஙனம், கந்தமும் வாயுவில் எப்பொழுதும் இல்லை. அங்ஙனமே, கந்தத்தின் அத்தியந்தாபாவமும் இருக்கின்றது. ஸ்நேஹ குணத்திற்கு ஜலத் திரவ்ய மின்றி மற்றைய எல்லாத் திரவ்யங்களிலும் அபாவ மாகின்றது. அது அத்தியந்தாபாவமாம். ஆத்மாவில் ரூப ரஸாதிகளின் அபாவம் இருக்கின்றது. அதுவும் அத்தியந்தாபாவமாம் பிருதிவி ஜலங்க ளன்றி, மற்றைய எல்லாப் பதார்த்தங்களிலும் இருக்கும் ரஸத்தின் அபாவம் அத்தியந்தாபாவமாம். ஜலத்தில் பிருதிவித்வ ஜாதியின் அபாவம் அத்தியந்தாபாவமாம். க்ஷத்திரியாதி வ்யக்தியில் பிராஹ்மணத் தன்மை ஜாதியின் அபாவமும் அத்தியந்தாபாவமாம். ஆகாசம் காலாதிகள் ஆத்மா என்னும் வியாபகத் திரவ்யங்களில் உள்ள கிரியையின் அபாவமும் அத்தியந்தாபாவமாம். பிருதிவி முதல் மந பரியந்தமான ஐந்து திரவ்யங்களில் ஒரு காலத்துக் கிரியை யுண்டாகின்றது,

ஒரு காலத்து கிரியையின் அபாவ மிருக்கின்றது. அவற்றில் கிரியையின் அத்தியந்தாபாவ மில்லை. அங்ஙனமே, அதன் ஸாமயிகாபாவமு மில்லை. எதனால், ஸம்யோக ஸம்பந்தாவச்சிங்நமாகிய ஸாமயிகாபாவம் கேவலம் திரவ்யத்திற்கே உண்டாகின்றது. கிரியை குணங்களுக்கு உண்டாவ தில்லை. குண கிரியைகளுக்கு ஸம்யோக ஸம்பந்தத்தினால் யாண்டும் ஒரு காலத்தும் இருப் பின்மையின். அதனால் அவற்றில் கிரியையின் பிராகபாவ ப்ரத்வம்ஸாபாவங்களே இருக்கின்றன. இவ்வாற்றால், பூதலாதிகளில் யாண்டு ஒரு காலத்து கடாதிகள் இருக்கின்றது, ஒரு காலத்தில் இருப்ப தில்லை, ஆண்டு கடாதிகட்கு ஸாமயிகாபாவமே யிருக்கின்றது. அது அத்தியந்தாபாவத்தில் அடக்க மில்லை. எதனால், அத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோத மிருக்கின்றது. யாண்டு பிரதியோகி யிருக்கின்றது, ஆண்டு அபாவம் இருப்ப தில்லை. பின்னையோ, அபாவத்தின் அபாவ மிருக்கின்றது. ஸாமயிகாபாவத்திற்கும் அத்தியந்தாபாவம் அங்கீகரிக்குங்கால் அத்தியந்தாபாவம் நித்தியமாய் இருக்கின்றதா மாயினும், பூதலாதிகளில் கட மிருக்குங் காலத்திலும் அத்தியந்தாபாவம் இருக்கின்றது. அதற்கு தனது பிரதியோகியோடு விரோத முண்டாகாது. ஒரே காலத்து ஒரு அதிகரணத்தில் இருப்பதாகலின். அதுவோ இஷ்ட மில்லை. அதனால், பூதலத்தில் ஒரு காலத் துளதாம் கடாபாவம் அத்தியந்தாபாவ மன்று. பின்னரோ அதனினும் பிங்நமாகிய ஸாமயிகாபாவமேயாம். அங்யோங்யாபாவ மலலாமல் வேறு எல்லா அபாவங்கட்கும் பிரதியோகியோடு எப்பொழுதும் விரோத மிருக்கின்றது. பிரதியோகியின் அதிகரணத்தில் ஒரே காலத்தி லிருப்ப தில்லை. எங்ஙனம், கடோத்பத்தியின் பூர்வம் கபாலத்தில் கடத்தின் பிராகபாவம் இருக்கின்றது. அது கட ரூபப் பிரதியோகியின் உத்பத்தியின் பின் கபாலத்தி லிருப்ப தில்லை அது நாச மாகின்றது. ஆதலால், பிராகபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோதஞ் சித்திக்கின்றது. எங்ஙனம் கபாலத்தில் கடம் இருக்கும் போது, கடத்தின் பிரத்வம்ஸாபாவம் இருப்ப தில்லை. ஆதலால் பிரத்வம்ஸத்திற்கும் பிரதியோகியோடு விரோதஞ் சித்திக்கின்றதோ, அங்



ஙனமேயே பூதல முதலியவைகளில் ஸம்யோக ஸம்பந்தத்தினால் எவ்வளவு கடாதிக ளிருக்கின்றது, அதில் அவ்வளவு ஸாமயிகாபாவம் இருப்ப தில்லை. எப்பொழுது கடாதிகளுக்குப் போகுதல் உண்டாம், அப்பொழுது ஸாமயிகாபாவம் ஆண்டு உண்டாகின்றது. எப்பொழுது மீண்டும் ஆண்டு அதற்கு வருதல் உண்டாம், அப்பொழுது அதன் நாசம் உண்டாகின்றது. அதனால், ஸாமயிகாபாவமும் பிரதியோகியோடு விரோத மாகின்றது ஆதலால் ஸாமயிகாபாவத்திற்கு அத்யந்தாபாவத்தில் அடக்கம் அங்கீகரிப்பவர்களின் வசநம் மித்தையேயாம்.

### (5, அங்யோங்யாபாவம்.

(5) அபேத சம்பந்தத்தினால் அவச்சிங்நம் பண்ணப்பட்ட பிரதியோகியினை யுடைய அபாவம் அங்யோங்யாபாவமாம். அல்லது, இரண்டு வஸ்துக்களின் அபேத ஸம்பந்தத்தினை நிஷேதிப்பது அங்யோங்யாபாவமாம். அத்தியந்தாபாவம் முதலியவற்றில் அதிவ்யாப்தி நிவாரணத்தின் பொருட்டுத் தாதாத்மிய ஸம்பந்த அவச்சிங்நம் என்னும் பதங் கூறப்பட்டது. அது கட படத்தின் பேத வியவஹாரத்திற்கு ஹேதுவாம். தர்மிப் பிரதியோகிகளினால் நிரூபிக்கத் தக்கதாம். வேறு அபாவங்களைப் போலப் பிரதியோகியோடு விரோதிப்ப தில்லை. பிரதியோகியின் ஸமாநாதிகரணமா யிருக்கின்றது. பின்னையோ பிரதியோகித் தன்மை அவச்சேதகத்தினோடு ஒரு அதிகரணத்தி லிருப்ப தில்லை. பிரதியோகித் தன்மை அவச்சேதக அதிகரணத்தில் இருப்ப தில்லை என்பது பொருளாம். எங்ஙனம் கடம் பட மன்று. பிராஹ்மணன் க்ஷத்திரிய னன்று (பிருதிவி ஜலம் அன்று) என்னுமிடத்துக் கடத்தின் பேதம் படத்திலும், பிராஹ்மணனின் பேதம் க்ஷத்திரியனிடத்திலும், பிருதிவியின் பேதம் ஜலத்திலும் இருக்கின்றது. எதனால் ஸம்யோக ஸம்பந்தத்தினால் கடத்தின் அதிகரணமாகிய பூதலத்தில் கடத்தின் அங்யோங்யாபாவமு மிருக்கின்றது. கடமும் ஆண்டு இருக்கின்றது. அதனால் பிரதியோகியோடு அதற்கு விரோத மில்லை. பிரதியோகித் தன்மைக்கு அவச்சேதகமாகிய கடத்துவமோ, ஸமவாய ஸம்பந்தத்தினால் கடத்தில் இருக்கின்றது. கடத்தின் பேதம்

ஆண்டு இருப்ப தில்லை. தன்னிடத்தில் தனது பேதம் இன்மையின். அந்யோந்யாபாவத்திற்கே பேதம் இருக்கின்றது. அதனால் அந்யோந்யாபாவம் பிரதியோகித் தன்மை அவச்சேதகத்தோடு விரோதிக்கின்றது. பிரதியோகியோடு விரோதிப்ப தில்லை. இதுவும் அத்தியந்தாபாவம் போன்று அநாதி யநந்தமாம். பிராகபாவாதி போன்று உத்பத்தி நாச முடைய தல்ல. பிருதிவியாதி நித்தியத் திரவ்யங்களில் பேத வியவகாரத்தின் ஹேதுத் தன்மையினால் ஸதா இருத்தலின்.

(ஐந்து வித அபாவத்திலும், அபாவத்வ தர்மம் ஸமமாமா யிருக்கின்றது. பிரதியோகியின் ஸாபேக்ஷை யுடைய பிரதீதிக்கு விஷயத் தன்மையும் ஸமானமா யிருக்கின்றது. அங்ஙனமாயினும் அந்யோந்ய அபாவத்தினும், நான்கு வித ஸம்ஸர்க்காபாவத்திற்கு விலக்ஷணத் தன்மையு மிருக்கின்றது. எவ் வாக்கியத்தில் பிரதியோகி அநுயோகிகளைப் போதிக்கும். வெவ் வேறு வேற்றுமைகளை முடிவிற் கொண்ட பதங்க ளிருக்கின்றன, அவ் வாக்கியத்தால் நான்கு வித ஸம்ஸர்க்காபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

(1) எங்ஙனம் உத்பத்தியின் பூர்வம் கபாலத்தில் கட மில்லை, அல்லது உண்டாம் என்னும் வாக்கியத்தில் அநுயோகியினைப் போதிக்கும் கட பதம் பிரதமாந்தமா (முதல் வேற்றுமை முடிவா) யிருக்கின்றது. ஆண்டுப் பிராகபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

(2) உலக்கை முதலியவைகளால் அடித்தலால் கட நாசத்தின் பின் "கபாலத்தில் கடம் த்வம்ஸமாய் விட்டது". என்னும் வாக்கியத்திலும், தர்மிப் பிரதியோகிகளைப் போதிக்கும் பதம் ஏழாம் வேற்றுமையின் அந்தமும், முதல் வேற்றுமையின் அந்தமுமா யிருக்கின்றது. ஆண்டுப் பிரத்வம்ஸாபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

(3) "வாயுவில் ரூப மில்லை" என்னும் வாக்கியத்திலும், அநுயோகியினைப் போதிக்கும் ஸப்தமீ (ஏழாம் வேற்றுமை) அந்த பதம் இருக்கின்றது. பிரதியோகியினைப் போதிக்கும் பதம் பிரதமாந்தமா யிருக்கின்றது. ஆண்டு அத்தியாந்தாபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.



(4) "பூதலத்தில் இப்பொழுது கட மில்லை" என்னும் வாக்கியத்திலும், முன் போன்று விபக்தியினை யுடைய பதம் இருக்கின்றது. ஆண்டு ஸாமயிகாபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

(5) "பூதலம் கட மன்று" என்னும் வாக்கியத்தால் பூதலத்தில் கடத்தின் அந்யோந்யாபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

ஆண்டு அநுயோகியினைப் போதிக்கும் பூதல பதம், பிரதியோகியினைப் போதிக்கும் கட பதம் என்னும் இரண்டும் பிரதமாந்தமாய் இருக்கின்றன. இவ்வாறு பிந்ந வேற்றுமையினை அந்தமாக வுடைய பதங்களுள்ள வாக்கியத்தாற் ஜநித்த பிரதீதியின் விஷயத் தன்மை, நான்கு வித ஸம்ஸர்க்காபாவத்திலு மிருக்கின்றது, அந்யோந்யாபாவத்தி லில்லை. ஸமாந வேற்றுமையினை அந்தமாக வுடைய பதங்களுள்ள வாக்கியத்தால் ஜநிக்கப்பட்ட பிரதீதியின் விஷயத் தன்மை அந்யோந்யாபாவத்தி லிருக்கின்றது, ஸம்ஸர்க்காபாவத்தி லில்லை. இப் பிரதீதியின் விலக்ஷணத் தன்மையினாலும் அபாவங்களின் விலக்ஷணத் தன்மை கூறப்படுகின்றது. இந்த ஐந்து பிரகாரமாய அபாவத்தினை மீமாம்ஸகரும், பிராசீந நையாயிகரும் அதிகரண ஸ்வரூபமாக அங்கீகரிக்கின்றனர். கேவலம் அதிகரணத்தினாலேயே "நாஸ்தி" (இல்லை) யென்னும் வியவஹாரம் உண்டாகின்றது. அபாவ ரூப வேறு பதார்த்தம் அங்கீகரியாமையின்.

நவீந நையாயிகரோ, அதிகரணத்தினும் பிந்நமாக அபாவத்தினை யங்கீகரிக்கின்றனர், விசேஷணத் தன்மை ரூப ஸம்பந்தத்தினால் எல்லா அபாவமும் தன் தன் அதிகரணத்தி லிருத்தலின். சூந்ய வாதியோ, அபாவத்தினை ஸ்வரூப மின்றியதாக அங்கீகரிக்கின்றனர். அது சூந்யத்தின் வேறன்மையின். வேதாந்திகளோ, பாவத்தினை (பதார்த்தங்களை)ப் போல அபாவத்தினைப் பதார்த்தமாக யங்கீகரிக்கின்றனர். பாவாபாவங்கள் மாயையின் காரியமாகலின். ஈண்டுக் கூறிய அநேக வித அபாவங்களெல்லாம் ஸ்வ ஸம்யுக்த விசேஷணத் தன்மைச் சம்பந்தத்தினால் அதனோடு கூடிய சக்ஷு இந்திரியத்தினாலேயே கிரஹிக்கப்படுகின்றது. அதன் பிரமையின் பொருட்டு, வேறு பிரமாணத்தின் கல்பனை யின்று, கௌரவ (தோஷ) மாகலின். இவ்வாறு, நியாயரீதியாக, அபாவங்களின் லக்ஷணம், ஸ்வ

ரூபம், பிரதீதி என்பவற்றைக் கூறி, இப்பொழுது, வேதாந்த ரீதியாகச் சுருக்கமாக அந்த நையாயிகர்களின் அபாவத்தின் அபவாதத்தினையும் கூறுவாம். வேதாந்திகளோ இவ்வாறு கூறுகின்றனர்:—

(1) "இது இல்லை" என்னும் பிரதீதியின் விஷயம் ஒரு அத்தியந்தாபாவமேயாம். வேறு ஒன்றும் இல்லை. "கபாலத்தில் கட முண்டாம்" என்னும் பிரதீதியை நையாயிகர்கள் பிராகபாவத்தின் ஸாதகமாகக் கூறினர். அதுவோ அந்யதா சித்தமாம். எதனால், இப் பிரதீதியின் விஷயம் பவிஷ்யத் கால ஸம்பந்தியாகிய கடத்தின் ஸத்தையேயாம். கடத்தின் பிராகபாவ மன்று, எதனால் அபாவத்தினின்றும் பாவத்தின் உத்பத்தி யில்லை. இங்ஙனம் கொள்ளாக்கால், அஸத்தாகிய முயற் கோட்டினின்றும் காரியத்தின் உத்பதித் யுண்டாம். "ஹே! ஸௌம்ய! இஜ் ஜகத் உத்பத்தியின் பூர்வம் ஸத் ரூபமாகவே யிருந்தது.' என்னும் சுருதியினால் உத்பத்திக்குப் பூர்வம் காரிய ரூப ஜகத்திற்கு காரண ரூபத்தினால் ஸத் தன்மை நிச்சயஞ் செய்யப்படுகின்றது ஸத்திற்கும் உத்பத்தி யுண்டாவ தில்லை யாயினும், காரண வியாபாரத்தினால் கடாதி காரியத்திற்கு நாம ரூபமாக வெளிப்படும் தன்மையே காரியத்தின் உத்பத்தியாம். அதனால் பிராகபாவம் காரியத்தின் ஜநக மன்று. நையாயிகர்கள் இதற்கு அநாதித் தன்மை கூறினர், அதுவும் இல்லை. ஆதியை யுடைய கபாலாதிகளில் இருத்தலின், எல்லா அபாவமும் மாயையின் காரிய மாகலின்.

(2) உலக்கை முதலியவைகளால் (உடைத்தல் முதலியவைகளினால்) கடத்தின் நாசம் உண்டாய், "ஈண்டு கடம் நாசமாய் விட்டது" என்னும் பிரதீதியை பிரத்வம்ஸாபாவத்தின் ஸாதகமாக அவர்கள் அங்கீகரித்தனர். அந்தப் பிரதீதியும் அந்யதா ஸித்தமாம். நாச ஸாமக்கிரியையினால் காரியத்திற்கு தனது உபாதாந காரணத்தில் நாம ரூபமாகத் திரோபவித்தலே அந்தப் பிரதீதியின் விஷயமாம். நாச மன்று. எதனால் அத்வைத வாதத்தில் ஞானத்திற்குப் பூர்வம் காரியத்தின் அத்தியந்தாபாவம் அங்கீகார மில்லை. பின்னையோ ஸூக்ஷ்ம ரூபத்தினால் திரோபாவமே உண்டாகின்றது. அங்ஙனங் கொள்ளாக்கால், "இச் சகத்து ஸிருஷ்டிக்குப் பூர்வம் பிரஹ்ம



ரூபமாகவே யிருந்தது", "அஸத்திற்கு உத்பத்தி யில்லை. ஸத்திற்கு அபாவ மில்லை" என்னும் சுருதி ஸ்மிருதிகளின் விரோதப் பிரஸங்கம் உண்டாம். அதனால் பிரத்வம்ஸாபாவத்தின் அங்கீகாரமும் சுருதியின் விருத்தமும், பிரத்தியக்ஷப் பிரமாணத்தினால் சித்தியாமையுமாம். பிரத்வம்சாபாவத்திற்கு அநந்தத் தன்மை அவர்களாற் கூறப்பட்டது, அதுவு மின்று. அந்தத்தை யுடைய கபாலங்களில் இருக்குந் தன்மையினால் கபாலத்தின் நாச முண்டாய் அதன் கண் ணுள்ள பிரத்வம்ஸாபாவமும் நாசமாகின்றது, பாவாபாவ ரூப காரியம் பிரஹ்மத்தி லுள்ள அத்தியந்தாபாவத்தின் பிரதியோகியாகலின்.

(3) கட பூதலங்களின் ஸம்யோக ஸம்பந்த நாசத்தின் பின் "இப் பொழுது ஈண்டுக் கட மில்லை." என்னும் பிரதீதியினை அவர்கள் ஸாமயிகாபாவத்தின் ஸாதகமாகக் கூறினர். அதுவும் அந்பதா சித்தமாம். எதனால் வேதாந்திகள் கொண்ட வியாவகாரிக அத்தியந்தாபாவமே அதற்கு விஷயமாம். அதினினும் பிந்நமாக ஸாமயிகாபாவம் இல்லை. அத்வைத மதத்தில் அத்தியந்தாபாவத்தையும் உத்திபத்தி நாச முடையதாக அங்கீகரித்திருத்தலின்.

(4) "கடம் பட மன்று", "கடம் பூதல மன்று" என்னும் பிரதீதியினை அந்யோந்யாபாவத்தின் ஸாதகமாக அவர்கள் கூறினர். அதுவும் கட படங்களின் அபேதத்தின் அத்தியந்தாபாவத்தினை விஷயஞ் செய்வதாம், அந்யோந்யாபாவத்தினை விஷயஞ் செய்வதன்று. எதனால் தாதாத்மிய ஸம்பந்த மென்பது அபேத ஸம்பந்தமாம். அபேத ஸம்பந்தாவச்சிந்நப் பிரதியோகித் தன்மையின் அந்யோந்யாபாவம் அவர்களாலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது.

(5) உத்பத்தி நாசங்களின் காரணம் நிரூபிக்கப்படாமையின், அத்தியந்தாபாவ, அந்யோந்யாபாவங்களை அவர்கள் அநாதியாகவும், நித்தியமாகவும் அங்கீகரிக்கின்றனர், அதுவும் மனோரத மாத்திரமாம். அத்வைத சுருதியின் விரோதத்தினால். எதனால் அத்வைத சுருதியோ பிரஹ்மத்தினும் பிந்நமாய பாவாபாவ ரூப ஸர்வப் பிரபஞ்சத்தினையும் அஸத் தென்கின்றது. அதனால் அத்வைத வாதத்

தில் ஸர்வ பாவாபாவ ரூப அநாத்ம பதார்த்தங்களும் மாயையின் காரியங்களாம். அதனால் ஆத்மாவின் பிந்ந பதார்த்தங்கட்கு நித்தியத் தன்மை அஸம்பவமா யிருக்கின்றது. பாவ ரூப மாயைக்கு அபாவ ரூப காரியத்தின் உபாதாநத் தன்மை பொருந்துவ தில்லை. ஸஜாதியமே உபாதாநமாகலின். அங்ஙனமாயினும், அநிர்வசநீயத் தன்மை, மித்தியாத் தன்மை, ஞாந நிவர்த்தியத் தன்மை, அநாத்மத் தன்மை முதலிய ஸமாந தர்மங்கள் இருத்தலின், மாயைக்கும் அபாவத்திற்கும் ஸஜாதீயத் தன்மை யிருக்கின்றது. ஸம்பூர்ண தர்மங்களால் உபாதாந உபாதேயங்களின் ஸஜாதியத் தன்மை கூறினோ, கடத்துவ கபாலத்வம் ஆகிய விஜாதீய தர்மங்கள் இருத்தலின், கட கபாலங்கட்கே உபாதாந, உபாதேயத் தன்மை உண்டாகாது. ஆதலால், எங்ஙனம், மண்மயத் தன்மை முதலிய தர்மியின் ஸமாந தர்மங்களால் கட கபாலங்கட்கு ஸஜாதியத் தன்மை யிருத்தலின், அவற்றிற்குக் காரிய காரணத் தன்மை யிருக்கின்றதோ, அங்ஙனமே அநிர்வசநீயத் தன்மை முதலிய ஸமாந தர்மங்களின் ஸம்பவத்தினால் மாயை அபாவங்கட்கும் காரிய காரண பாவம் இருக்கின்றது. எதனால் மாயையின் காரியமாகலின் எல்லா அபாவமும் மித்தையேயாம். அதனால் அந்யோந்யாபாவத்தின் அநாதித் தன்மை அநந்தத் தன்மைகள் மநோரத மாத்திரமாம்.

எதனால் விசேஷண விசேஷ்ய பாவ ரூப ஸம்பந்தமே யின்று. ஸம்யோக ஸமவாய ஸம்பந்தங்கட்குக் கூறிய லக்ஷணம் பொருந்தாமையின். அவர்களால் ஸம்யோகாதி ஸம்பந்தம் ஒன்று, ஸம்பந்திகளின் பிந்நமாய் இரண்டின் ஆசிரிதமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. விசேஷணாபாவமோ விசேஷணத்தின் ஸ்வரூபமாம். விசேஷ்யாபாவமோ விசேஷ்யத்தின் ஸ்வரூபமாம். அவற்றின் பிந்நமன்று. எதனால் விசேஷண விசேஷ்ய பாவ ஸம்பந்தம் ஒன்று மில்லை. இரண்டின் ஆசிரிதமு மில்லை. விசேஷண விசேஷ்யங்கள் வெவ்வேறு ஸ்வரூபமாகலின். அதனால் இந்திரியத்திற்கு அபாவத்தோடு விசேஷண விசேஷ்ய பாவ ஸந்நிகர்ஷ மின்மையின், சக்ஷு இந்திரியத்தால் அபாவத்தின் கிரஹணம் அவர்கள் உடன்பட்டிருக்கின்றனர். அதுவும் துச்சமாம். அபாவம் அநுபலப்திப் பிரமாணத்தானே கிரஹிக்கப்படுதலின்.



வேதாந்த மதத்தில் மூற்கூறிய ஒரு அத்தியந்தாபாவமும் பாரமார்த்திக வியாவகாரிக பேதத்தால் இரு வகைத்தாம்:—"இப் பரமாத்மாவில் ஜீவேசுவர ஜகத்து ரூபம் இல்லை" என்பதாதி சுருதியால் பிரதிபாதிக்கப்படும் பிரஹ்ம ரூப அதிஷ்டாநத்தில் ஸர்வ பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம் பாரமாத்திகமாம். அதிஷ்டாநம் பிரஹ்ம ஸ்வரூபமாகலின். அத்தியஸ்தத்திற்கு அதிஷ்டாநத்தினும் வேறுகாமையின். அதனால் பிரஹ்மத்தினும் பிந்நமாகிய அஸத்து ரூப ஜகத்தின் அபாவ ரூபம் அதிஷ்டாநப் பிரஹ்மத்தின் ஸ்வரூபமேயாம் அபாவத்தின் அபாவம் பாவ ரூப மாகலின்.

சிலரோ இவ்வாறு கூறுகின்றனர்:—பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம் அதிஷ்டாநப் பிரஹ்மத்தின் பிந்நமாம். அதன் ஸ்வரூபமல்ல. பாரமார்த்திகமாம். இதில் அத்வைத சுருதிக்கும் விரோதமில்லை. அத்வைத சுருதி பாவ ரூப த்வைதத்தின் நிஷேதபரமாகலின் அவர்களின் கூற்று யதார்த்த மல்ல:—அதிஷ்டாநப் பிரஹ்மத்தினும் பிந்நமாக, அத்தியந்தாபாவம் பிரதியோகியின் ஸமாந சத்தையுடையதாகலின். அந்த அபாவத்தின் பிரதியோகியாகிய பிரபஞ்சமோ கல்பிதமாம். அதனால் அதன் அபாவமும் கல்பிதமாகலின், பரமார்த்தத் தன்மை பகரல் அஸங்கதமாம். "ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம்" என்னும் சுருதியின் அர்த்தத்தினையும் அவர்கள் பிரபஞ்ச நிஷேதத்தில் ஸங்கோசம் செய்கின்றனர். அதிலும் பிரமாண மில்லை. எதனால் அந்தச் சுருதியோ பாவாபாவமாகிய இரு பிரபஞ்சத்தின் நிஷேதகமாம் பிரத்தியக்ஷாதிப் பிரமாணமோ பிரஹ்மத்தில் ரூபாதி யின்றியதால் பிரவிர்த்திப்ப தில்லை. அதனால் அவர்களின் கூற்றுப் பிரமாணத்தின் அபாவத்தினால் அஸத்தா யிருக்கின்றது.

"பூதலத்தில் கட மில்லை" என்னும் பிரதீதியின் விஷயமாகிய அத்தியந்தாபாவம் வியாவஹாரிகமாம். அதிஷ்டாநத்தினும் பிந்நமாகலின். எதனால் வியாவஹாரிக கடாதிகளின் அபாவத்திற்கும் பிரதியோகியாகிய கடாதிகளின் ஸமாந சத்தையினால் வியாவகாரிகத் தன்மை யிருக்கின்றது. வியாவகாரிகப் பிரபஞ்சத்தின் பாவாபாவங்கள் பிரஹ்ம ஞாநத்தினால் பாத மாகின்றமையின். அத்வைத

மதத்தில் வியாவகாரிக அத்தியந்தாபாவத்திற்கும் மித்தியாத் தன்மையே யிருக்கின்றது. "பூதலம் கட மன்று" என்னும் பிரதீதியின் விஷயமாகிய கட பட அபேதத்தின் அத்தியந்தாபாவத்தினையே நையாயிகர் அந்யோந்யாபாவமாகக் கொள்கின்றனர். ஜீவேசுவரர்களின் பேத ரூப அந்யோந்யாபாவத்தை நையாயிகர்கள் ஸத்தியமாக அங்கீகரித்திருக்கின்றனர். ஸத்தியமாக அவர்கள் கொள்ளுதலும் சுருதி தாத்பரிய ஞாநத்தின் சூந்யத் தன்மையினாலாம். எதனால் மஹாவாக்கியத்தினா லுண்டாம் பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்தினால் அவித்தையின் நாச முண்டாய், அவித்தையின் காரியமாகிய பாவாபாவ ரூப ஸர்வ பிரபஞ்சமும் நிவிர்த்தியாகின்றது. அந்த நிவிர்த்தி சுருதிப் பிரமாணத்தினாலும் வித்துவான்களின் அநுபவத்தினாலும் சித்தமா யிருக்கின்றது. நியாய மதத்தில் எவ்வளவு அபாவ ஞாநம் சக்ஷுஃ இந்திரியத்தினால் உண்டாவதாகக் கூறப்பட்டது அவ் வெல்லா ஞாநமும் வேதாந்த மதத்தில் அநுபலப்திப் பிரமாணத்தினால் உண்டாவதாகக் கூறப்படுகின்றது. நையாயிகர்கள் அநுபலப்திப் பிரமாணத்தின் அங்கீகாரத்தில் கூறிய கௌரவத் தன்மையு மில்லை. எதனால், நியாய மதத்தில் சக்ஷு இந்திரியம் கரண மாகின்றது. அநுபலப்தி அதன் ஸஹகாரி காரண மாகின்றது. இந்திரியத்தில் பிரமாணத் தன்மை யிருக்கின்றது. அநுபலப்தியில் பிரமாணத் தன்மை யில்லை. வேதாந்த மதத்தில் அநுபலப்தியில் பிரமாணத் தன்மை அதிகமாகக் கொள்கின்றனர். இவ்வாறு அநுபலப்தியின் ஸ்வரூபம் இரண்டு மதத்லும் சித்தித் திருக்கின்றது. நியாய மதத்தில் ஸம்யுக்த விசேஷணத் தன்மைச் சம்பந்தத்திற்கு ஞாநத்தின் கரணத் தன்மை அதிகமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. விசேஷண விசேஷ்யத் தன்மைச் சம்பந்தம் அபாவத்திற்கு ஸ்வரூபமாக இரண்டு மதத்திலும் சித்தமாம் அதனால் லாகவ கௌரவம் ஒருவருக்கு மில்லை. இரண்டும் ஸமாந கல்பனையா யிருக்கிறது. அங்ஙனமாயினும் அபாவ ஞாநத்தின் கரணத்தன்மை இதிரியத்தில் நையாயிகர்கள் அதிகமாகக் கூறுகின்றனர். இது அவர்களது மததில் கௌரவமாம. அப்பிரத்யக்ஷ வாயுவில் ரூபத்தின் அபாவ ஞாநம் நேத்திர வியாபார மின்றி யுண்டாகின்றது. பிரத்தியக்ஷப் பரமாணுவில் மஹத்துவத்தின் அபாவ ஞாநம் உண்டாகின்றது.



அதனையும் நையாயிகர்கள் ஸாக்ஷுஷ ஞாநம் என்கின்றனர். அதுவோ அநுபவ விருத்தமா யிருக்கின்றது. இரண்டு திரவ்யங்களும் சக்ஷு இந்திரிய கோசர மின்மையின். ஆதலால் அபாவ ஞாநம் சக்ஷு இந்திரிய ஜந்ய மென்று நையாயிகர்களின் அங்கீகாரம் யுக்தி யுடைய தன்றாம். அதனால் அபாவ ஞாநம் அநுபலப்திப் பிரமாண ஜந்யமாம். ஆனால் அபாவ ஞாநத்தின் உத்பத்தியில் எதனால் வியாபார மின்றிய அநுபலப்தி அஸாதாரண காரணமா யிருக்கின்றதோ, அதனால் அபாவ ஞாநத்தின் அஸாதாரண காரணத் தன்மையே அநுபலப்திப் பிரமாணத்தின் லக்ஷணமாம், வியாபார முடைத்தாய்க் காரணத் தன்மை யாவ தில்லை.

அநுபலப்திப் பிரமாணத்திற்கு வேதாந்தத்தில் இவ்வாறு உபயோகம் இருக்கின்றது:—"ஈண்டு நாநா என்பது அற்பமும் இல்லை" என்பதாதி சுருதியால் த்ரைகாலிக அபாவம் பிரபஞ்சத்திற்குப் பிரமத்தினிடத்தில் கூறப்படுகின்றது. அதுவோ அநுபவ ஸித்தப் பிரபஞ்சத்திற்குப் பொருந்துவ தில்லை, பிரத்தியக்ஷமாக விளங்குதலின். அதனால் பிரபஞ்சத்திற்கு ஸ்வரூபமாக நிஷேதம் முற் கூறிய சுருதி செய்வ தில்லை. ஆனால் பிரபஞ்சம் பாரமார்த்திக மன்று என்று பாரமார்த்திகத் தன்மை விசிஷ்டப் பிரபஞ்சத்திற்குத் திரைகாலிக அபாவம் பிரஹ்மத்தில் அச் சுருதி கூறுகின்றது. இவ்வாறு பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம் எங்ஙனம் சுருதி சித்தமா யிருக்கின்றதோ, அங்ஙனமே அநுபலப்திப் பிரமாணத்தினாலும் சித்தமாகின்றது. பாரமார்த்திகத் தன்மை விசிஷ்டப் பிரபஞ்சம் இருக்குமாயின், எங்ஙனம் பிரபஞ்சம் ஸ்வரூபமாக விளங்குகின்றதோ, அங்ஙனமே பாரமார்த்திக ரூபத்தினாலும் அதன் பிரதீதி யுண்டாகுக. எதனால் வித்வானது அநுபவத்தினால் உண்டாகின்ற தில்லை, அதனால் பாரமார்த்திகத் தன்மையினால் பிரபஞ்சத்தின் அபாவம் இருக்கின்றது. இவ்வாறு பிரபஞ்சத்தின் (அத்தியந்த) அபாவ ஞாநம் அநுபலப்திப் பிரமாணத்தினாலும் உண்டாகின்றது. வேறு பிரஹ்ம ஞாநத்தின் உத்பத்தியின்பொருட்டும் அநேக அபாவங்களின் ஞாநம் ஜிஜ்ஞாஸுவிற்கு இஷ்டமாம். அதன் ஹேதுவும் அநுபலப்திப் பிரமாணமாம், அதனால் வேதாந்

த்தில் பிரயோஜன முடைய அநுபலப்தியின் அங்கீகாரம் செய்யப் பட்டிருக்கின்றது.

## 5—19 அறு வகைத்தாய பதார்த்தங்கள்.

### 5—1 சமாதி.

இப்பொழுது ஆறு எண்ணிக்கை விசிஷ்டத்தினைக் கூறுவாம்:- ஆந்தர பாஹ்ய பேதத்தினால் ஸமாதிகள் அறு வகைத்தாம். திருசியாநுவித்தம் சப்தாநுவித்தம் என்னும் பேதத்தினால் ஸவிகல்ப ஸமாதி இரு வகைத்தும், நிர்விகல்ப ஸமாதி ஒரு வகைத்துமாம். ஸ்வரூபமாக அவை மூன்றுமாயினும், மூன்று ஸமாதிகள் எங்ஙனம் முமுக்ஷுக்களால் உள்ளில் செய்யப்படுகின்றதோ, அங்ஙனமே வெளியிலுஞ் செய்யப்படுகின்றது. அதனால் அறு வகைத்தாக விருக்கின்றது. என்னும் வியவகாரத்திற்கு விஷய மாகின்றது.

#### (1) திருசிய அநுவித்த சவிகற்ப சமாதி.

(1) அஸங்கம் ஸ்வப்பிரகாசம் எல்லாவற்றிலும் அநுஸ்யூதம் ஸாக்ஷி என்னும் ஆகாரத்தினால் மறைப் பின்றிய சித்த விருத்திகளின் ஏக தானத் தன்மை ஸவிகல்ப ஸமாதியின் ஸாமாந்ய லக்ஷணமாம். முக் குண ரூப அந்தக்கரணத்தின் மூ வித பரிணம ரூப சாந்தம் கோரம் முதலிய விருத்திகளின், "நான் ஸர்வதா ஸாக்ஷியா யிருக்கின்றேன்." எதனால் அவற்றில் அநுஸ்யூதனாய், இருக்கின்றேன்" என்னும் ஆகாரத்தினால் நிரந்தரமாக உண்டாம் சித்த விருத்திகளின் பரிணாமம், திருசியாநுவித்த பிரதம ஸவிகல்ப ஸமாதியாம் திருசியத்தினை அவலம்பநஞ் செய்தலால் முமுக்ஷுக்களால் செய்யத் தக்கது யாது அது திருசியாநுவித்தமாம்.

#### (2) சப்த அநுவித்த சவிகற்ப சமாதி.

(2) "நான் அஸங்கன் அத்விதீய ஸ்வப்பிரகாசன்" என்னும் ஆகாரத்தினால் நிரந்தரம் சித்த விருத்தியின் பரிணாமம் சப்தாநுவித்த இரண்டாவது ஸவிகல்ப ஸமாதியாம். அஸங்காதி சப்தத்தின் அவலம்பநத்தினால் செய்யப்படுவது சப்தாநுவித்தமாம்.



#### (3) நிர்விகற்ப சமாதி.

(3) முற் புகன்ற இரு வித விருத்திகளின் பிரவாஹத்தின் நிரோத பூர்வகம் சித்தம் பிரஹ்ம வஸ்து மாத்திரமாக இருத்தல் நிர்விகல்ப ஸமாதியாம். அல்லது ஆந்தர பாஹ்ய வஸ்துக்களில் முற் புகன்ற இரு வித விகல்பத்தின் விளக்க மின்மையினால் ஸ்வப் பிரகாச சேதந மாத்திரத்தில் உள்ளி லுள்ள சித்தத்தின் நிலைமை நிர்விகல்ப ஸமாதியாம்.

இவ்வாறு மூன்று ஸமாதியினை ஹிருதயத்தில் முமுக்ஷுக்கள் மிக முயற்சியால் நிதித்தியாஸந அவசரத்தில் ஸாக்ஷாத்கார முண்டாகுதற்பொருட்டு எப்பொழுதும் செய்க.

#### 4—5—6—சமாதி.

(4–5–6) அங்ஙனமே முற் புகன்ற மூன்று ஸமாதியினை ஸூர்யாதி பாஹ்ய ஜகத்திலும் செய்க.

இந்த அறு வித ஸமாதிகளில் ஒன்றைக் கொண்டு முமுக்ஷுக்கள் ஸதா எங்குஞ் சஞ்சரிக்குக. இதனை விட்டு இருக்கற்க. அதனால் கூறிய ஆறு சமாதிகளும் முமுக்ஷுவினிடத்தில் யத்நத்தினால் ஸாத்திய மாகின்றது. ஞாநியினிடத்தில் யத்ந மின்றிச் சித்தித்திருக்கின்ற தென வறிக.

### 5—2—அரிஷட் வர்க்கம்.

அரி ஷ்ட வர்க்கத்தினைக் கூறுவாம்:— காமக் குரோதாதிகளின் பேதத்தினால் அரி (சத்ரு) வர்க்கம் அறு வகைத்தாம்.

#### (1) காமம்.

(1) அடையப்படாத இஷ்ட வஸ்துவின் அடைவின் இச்சை காமமாம். அல்லது ஸ்திரீ ஸம்போகத்தின் இச்சை காமமாம்.

#### (2) குரோதம்.

(2) இஷ்ட வஸ்துவின் அடைவில் உண்டாம் பிரதிபந்தக விஷயமான துவேஷம் குரோதமாம்.

(3) லோபம்.

(3) தந மிருப்பினும் அதிக தநம் சம்பாதிக்க வேண்டு மென்னும் இச்சை லோபமாம்.

(4) மோஹம்.

(4) இஷ்ட வஸ்துவின் நாச ஸாமக்கிரி பிராப்தமாயினும், அதன் வியோகத்தின் ஸஹந மின்மை ரூப, "இவ்வித முண்டாகா திருக்குக" என்னு மாகார சித்த விருத்தி மோஹமாம். அல்லது கர்த்தவ்ய அகர்த்தவ்ய விவேக மின்மை மோகமாம். அல்லது அநாத்மாவில் ஆத்மாபிமாநம் மோகமாம்.

(5) மதம்.

(5) ஜாதி குலம் ரூபம் தநம் வித்தை முதலியவைகளால் தன்னிடத்தில் ஸர்வோத்கிருஷ்டத் தன்மைப் புத்தி மதமாம்.

(6) மாத்ஸர்யம்.

(6) தன்னினும் அதிகத்தில் ஈர்ஷைப் புத்தி மாத்ஸர்ய (மத்ஸர)மாம்.

(இவ் வெல்லா ராஜஸ தாமஸ விருத்திகள், எதனுல் வைராக்கிய சாந்தியாதி ஸாத்விக விருத்தியிலும், குருவா லுபதேசிக்கப்பட்ட அர்த்தத்தின் கிரஹண தாரணங்களிலும் விக்ந ரூபமா யிருக்கின்றது. அதனுல் அரி வர்க்க மெனப்படுகின்றது. ஆதலால் ஜிஜ்ஞாஸு சாஸ்திரத்திற் புகன்ற விசாரத்தினுல் விரோதி விர்த்திகளை யுண்டாக்குதல் வாயிலாய் ஞாந சாத்திய மோக்ஷ பிராப்தியின் பொருட்டு இவற்றினை ஜயித்தற்கே உத்யோகஞ் செய்க.)

5—3. ஷட் பாவ விகாரம்.

ஷட் பாவ விகாரத்தினைக் கூறுவாம்:— ஜந்மாதி பேதத்தினுல் பாவ விகாரம் அறு வகைத்தாம்.



(1) ஜந்ம விகாரம்.

(1) இல்லா திருந்து உண்டாவது ஜந்ம மென்னும் விகாரமாம். அல்லது தன் உபாதாந காரணத்தில் முதல் க்ஷண ஸம்பந்தம் அல்லது தனது சத்தையோடு முதல் க்ஷண சம்பந்தம் ஜந்ம மென்னும் விகாரமாம். அல்லது முற் சரீர ஸம்யோகத்தின் நாச முண்டான பின் பிராரப்தத்தினுல், கர்மத்தினுல் அடைந்த உத்தர தேகத்தின் ஸம்யோகம் ஜந்மமாம். அல்லது காரியத்திற்குக் காரண ரூபத்தினுல் நிலைத் திருப்பினும், நாம ரூபமாகத் தோன்றுதல் ஜந்மமாம்.

(2) அஸ்தி விகாரம்.

(2) உத்பத்தி க்ஷணத்தின் பின் "இருக்கின்றது" என்னும் வியவகாரத்திற்கு ஹேதுவாகிய தர்மம் யாது, காரண வாயிலாய்க் காரியத்தில் உண்டாகின்றது, அது அஸ்தி ரூப விகாரமாம். அல்லது ஸத்தா ரூப ஜாதி அஸ்தி யென்னும் விகாரமாம். அதிஷ்டாந ரூப ஸத் பிரஹ்மத்தின் ஸம்ஸர்க்காத்தியாசத்தினுல் பிரபஞ்சத்தில் மாயையின் வாயிலாய் ஸத்தா ஜாதி யுண்டாகுதலின்.

(3) விருத்தி விகாரம்.

(3) க்ஷீராதி அந்ந பாநாதி ஆகாரங்களினுல் ஒவ் வொரு நாளும் சரீரத்தின் விருத்தி விருத்தி யென்னும் விகாரமாம்.

(4) பரிணும விகாரம்.

(4) பால கிசோர பௌகண்ட முதலிய அவஸ்தா பேதத்தினுல் சரீரத்தின் பரிணும ரூப வேறு அவஸ்தையின் அடைவு பரிணும மென்னும் விகாரமாம்.

(5) அபக்ஷய விகாரம்.

(5) ரோகாதிகளால் சரீரத்தின் மலிநத் தன்மையும், மெலிவும் உண்டாதல் அபக்ஷய(நாச)மென்னும் விகாரமாம்.

(6) நாச விகாரம்.

(6) பிராரப்த போகம் க்ஷயமான பின் லிங்க சரீரம், ஸ்தூல சரீரத்தி னின்றும் வேறு கர்மத்தி னுண்டாய பல போகத்தின் பொருட்டு வெளிக் கிளம்புவது நாச மென்னும் விகாரமாம்.

(இவ் வறு வித தர்மம் பிராணி மாத்திரத்தின் சரீர சம்பந்தி யாகிய பாவ விகாரம் எனப்படுகின்றது. ஆதலால் ஜிஜ்ஞாஸு இச் சட் பாவ விகாரத்தினைச் சாஸ்திர திருஷ்டியினால் வர்ணாசிரமாதி போன்று சரீர சம்பந்தி யென அறிந்து, அவற்றினின்றும் ஆத்மா வினை அஸங்கமாக உணர்ந்து, இவற்றில் தாதாத்மிய அத்தியாஸத்தி னைச் செய்யற்க.)

5—4. ஆறு கௌசிகம்.

ஷட் கௌசிகத்தினைக் கூறுவாம்:—த்வக் மாம்ஸம் ருதிரம் மேதை மஜ்ஜை ஹஸ்தி யென கௌசிகம் அறு வகைத்தாம். இவை யே அமங்கல சரீரத்தின் சம்பத்தா யிருக்கின்றன. அவற்றுள், த்வக் மாம்ஸம் ஹஸ்தி யென்னும் மூன்றும் பிருதிவியின் காரிய மெனச் சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. ருதிரம் மேதை மஜ்ஜை என்பன ஜலத்தின் காரிய மெனக் கூறப்படுகின்றது.

(1) த்வக் கௌசிகம்.

(1) த்வக் ரூப தோல் சரீரத்தி லுள்ள அமங்கல வஸ்துவினை மறைத்து ஸர்வ சரீரத்தினும் வியாபித் திருக்கின்றது.

(2-3) மாம்சம் அஸ்தி கௌசிகம்.

(2-3) மாம்ஸம் ஹஸ்தி யென்னு மிரண்டும் சரீரம் புஷ்டியா வதற்கும், விருத்தியாவதற்கும் ஹேதுவா யிருக்கின்றன.

(4) ருதிர கௌசிகம்.

(4) ருதிரம் ஜீவநத்தின் ஹேதுவாம்.



(5) மேதை கௌசிகம்.

(5) மேதையாகிய சவ்வு முதலியன ஜாடராக்கினியின் உஷ்ணத் தன்மையின் பாதகமா யிருக்கின்றன.

(6) மஜ்ஜை கௌசிகம்.

மஜ்ஜை, நாடி முதலிய அவயவங்களின் புஷ்டியின் ஹேதுவா யிருக்கின்றது.

(நான்கு வித அந்நமும், நாநாவித குடிக்தற்கு யோக்கிய ரஸமும் தன் றன் கர்மாநுஸாரமாகப் புஜிக்கவும், குடிக்கவும் செய்கின்றன. அதன் ஸ்தூல பாகத்தினால் த்வக் மாம்ஸம் ஹஸ்தி யென்பன விருத்தி யடைகின்றன. அதன் ஸூக்ஷ்ம பாகத்தினால் ருதிராதி கள் உண்டாகின்றன. அதன் அதிஸ்தூல பாகத்தினால் மல முண் டாகின்றது. அதனால் அதிகாரி இந்த அமங்கல வஸ்துவின் ஸங்காத ரூப தேஹத்தில், "நான்" என்னும் அபிமாநத்தினை மறந் தும் செய்யற்க. செய்பவன் கீழே விழுவன்.)

5—5. ஷட் ஊர்மி.

ஷட் ஊர்மியினைக் கூறுவாம்:— ஜரா மரணாதி பேதத்தினால் ஊர்மி அறு வகைத்தாம்.

(1) ஜரா ஊர்மி.

(1) தோல் சுருங்கும் அவஸ்தை ஜரையாம். எதில் இந்திரி யாதிகளின் சக்தி குறைகின்றது. மயிர்கள் நரைக்கின்றது. அநேக ரோகத்திற்கு ஸ்தாந மாகின்றது. புத்திராதிகளின் ஆசர வின்றிய பாத்திர னாகின்றான்.

(2) மரண ஊர்மி.

(2) தேஹத்தினின்றும் பிராண (வாயுவி)ன் வெளிப்போத லின் பெயர் மரணமாம். எதில் சர்வேந்திரியங்களும் குறைகின்றது. எல்லோரும் ஸ்வாபாவிகமாக எதற்குப் பயப்படுகின்றனர். இவ் விரண்டும் ஸ்தூல சரீரத்தின் தர்மங்களாம்.

(3) க்ஷுதா ஊர்மி.

(3) சமயானுஸாரமாக அன்னம் கிடைக்காவிடின் புசித்தற்கு உண்டாம் இச்சை க்ஷுதமா(பசியா)ம்.

(4) பிபாசா ஊர்மி.

(4) ஜலத்தின் அடைவின்மைக் காலத்தில் பானத்தின் இச்சை பிபாஸையா (தாகமா)ம். இவ்விரண்டும் பிராணனது தர்மங்களாம்.

(5) சோக ஊர்மி.

(5) தனது இஷ்ட பதார்த்தத்தின் நாச காலத்தில் சித்தத்தில் உண்டாம் பரிதாபம் சோகமாம்.

(6) மோஹ ஊர்மி.

(6) ஸ்திரீ முதலிய வஸ்துவில், பிரீதியின் அதிசயத்தினால் புத்தியின் ஜடத் தன்மை மோகமாம். இவ் விரண்டும் விஞ்ஞான சப்தத்தின் வாச்சியமாய புத்தியின் தர்மங்களாம்.

(இந்த ஆறு ஊர்மிகளும் அந்யத்தின் தர்மமாயினும், அவிசார காலத்தில் ஜீவன் தன் தர்மமாகக் கொண்டு ஜரா மரணாதி ஜந்ய அநந்த துக்கத்தினை யடைகின்றான். ஆயினும் ஒரு காலத்தும் ஸத் ஸங்கத்தோடு சேர்ந்து விசாரத்தினைச் செய்வ தில்லை, மந்த பாக்கியத்தினால்.)

5—6. ஷட் லிங்கம்.

ஆறு வித லிங்கங்களைக் கூறுவாம்:—உபக்ரம உபஸம்ஹாரம் முதலிய பேதத்தினால் வேதாந்த தாத்பரியத்தினை நிச்சயிக்கும் லிங்கம் அறு வகைத்தாம். அவற்றுள் உபக்ரம உபஸம்ஹாரம் என்னும் இரண்டும் ஒரு லிங்கமாம். குஹ்ய அர்த்தத்தின் ஞாபகத் தன்மையினால் அவற்றிற்கு லிங்க மெனப்படும்.

(1) உபக்கிரம உபசம்ஹார லிங்கம்.

(1) "ஸ்ருஷ்டிக்குப் பூர்வம் நாம ரூபங்க ளின்றி ஸத்தா மாத்திரமாகவே ஜகத் இருந்தது." என்று சாந்தோக்யத்தின் ஆறாவது



பிரபாடக (பிரகரண) த்தின் முதலில், "ஸௌம்ய ஸந் மாத்திரமே" என்பதாதி சுருதியால், ஜகத்திற்கு அத்விதீயப் பிரஹ்ம ரூபத்தால் பிரதிபாதிக்கப்படுவது உபக்கிரம லிங்கமாம். பிரதீதியாகப்பட்ட இவ் வெல்லா ஜகத்தும் முற் புகன்ற அத்விதீய ஸத் ஸ்வரூபமேயாம். அதனினும் பின்ன மல்ல என்று, "இவ் வெல்லாம் ஆத்மாவே" என்னும் சுருதியினால், பிரகரணத்தின் முடிவில், பிரகரணத்தினால் பிரதிபாதிக்கப்படுவதனைக் கூறுதல் உபஸம்ஹாரமாம்.

(2) அப்யாச லிங்கம்.

(2) பிரகரணத்தால் பிரதிபாதிக்கப்படும் ஸத்தாகிய பிரஹ்மத்திற்கு, அந்தப் பிரகரணத்தின் மத்தியில், "தத் த்வமஸி" என்னும் வாக்கியத்தினால் ஒன்பது முறை கூறுதலால் மீண்டு மீண்டும் கூறுதல் அப்யாஸ மென்னும் லிங்கமாம்.

(3) அபூர்வதை லிங்கம்.

(3) பிரகரணத்தால் பிரதிபாதிக்கப்படும் சத்தாகிய பிரஹ்மத்திற்கு, அதில், "அந்த ஔபநிஷத் புருஷனை நான் உன்னிடத்தில் கேட்கின்றேன்." என்பதாதி வாக்கியத்தினால் பிரத்தியக்ஷாதி வேறு பிரமாணங்களினால் ஸத் ரூபப் பிரஹ்மம் அறியப்படாதெனப் பிரதிபாதித்தல் அபூர்வதை லிங்கமாம்.

(4) பல லிங்கம்.

(4) ஆத்மா ஒன்றினை அறிந்ததனால் எல்லாவற்றையும் அறிந்ததாம் என்று கூறுதல் பல லிங்கமாம். இந்த லிங்கம் மூலத்தில் எழுத விட்டிருக்கின்றது.

(5) அர்த்த வாத லிங்கம்.

(5) பிராரப்த கர்மத்தின் க்ஷய பரியந்தம் தேஹேந்திரியாதிகளில் ஞானிக்கு மித்தியாத் தன்மைப் பிரதீதியும், பிராரப்தம் சேஷ மின்றி நாசமான பின் அதன் அப்பிரதீதி பூர்வகம் ஆத்ம ஸ்வரூபமாகத் தத்வ ஞானியின் நிலைமை, விதேக கைவல்யப் பிராப்தி

என்பது பொருளாம். அந்த "ஆசாரியரை யுடைய புருஷன் பிரஹ்மத்தினை அறிகின்றான். அந்த ஞானிக்கு அதுவரை நீணு ளாம்" என்பதாதி சுருதியால், பிரகணத்தால் பிரதிபாதிக்கப்படும் ஸத்தாகிய பிரஹ்மத்தின் ஸ்துதி அர்த்த வாத லிங்கமாம்.

(6) உபபத்தி லிங்கம்.

(6) எங்ஙனம் மண்ணினின்று உண்டாய கட சராவாதிகள் மண்ணினும் அபிந்நமாயே யிருக்கின்றதோ, எங்ஙனம் ஸ்வர்ணத்தி னின்றும் உண்டாய கடக முகுடாதிகள் ஸ்வர்ணத்தினும் அபிந்ந மாகவே யிருக்கின்றதோ, அங்ஙனமே ஸத்தாகிய பிரஹ்ம ரூப கார ணத்தினின்றும் உண்டாகிய ஜகத்துக்குக் காரணத்தினும் அபிந்நத் தன்மையே யிருக்கின்றது என்பதாதி திருஷ்டாந்தங்களினால், "ஸர்வமும் மண்ணின் விகாரமாம். வாக்கினால் கூறப்படுகின்றது. அது நாம மாத்திரமேயாம். மண்ணே ஸத்தியமாம். என்பதாதி சுருதியால், பிரகரணத்தால் பிரதிபாதிக்கப்படும் வஸ்துவின் பிரதி பாதநம் உபபத்தி யென்னும் ஆறாவது லிங்கமாம்.

(இவ் வறு வித லிங்கங்களால் குரு முக வாயிலாய் ஜிஜ்ஞா ஸுக்கள் வேதாந்தங்களின் தாத்பரியத்தினை அத்விதீயப் பிரஹ்மத் தில் எப்பொழுது கிரஹிக்கின்றனரோ, அப்பொழுது த்வைத வாதிகளின் குதர்க்கங்களினால் வேதாந்த மார்க்கத்தினின்றும் அசைக்கப்படுவ தில்லை.)

5—7— ஷட் அவஸ்தை.

ஆறு அவஸ்தையினைக் கூறுவாம். சிசுத்வம் கௌமாரம் பௌகண்டம் கிசோரம் தாருண்யம் (யௌவநம்) வார்த்தக்கியம் என்னும் பேதத்தினால் சரீரத்தின் அவஸ்தை அறு வகைத்தாம்.

(1) சிசு அவஸ்தை.

(1) அவற்றுள், தந்தங்(பற்)கள் உண்டாவதற்குப் பூர்வம் எது வரை மாதாவின் முலையினின் றுண்டாம் பால் ஆகாரமாகின்றது, அதுவரை சிசுத்வ அவஸ்தையாம்.



(2) கௌமார அவஸ்தை.

(2) அதன் பின் ஐந்து வருஷ பரியந்தம் கௌமார அவஸ் தையாம். எதில் தந்தங்களின் உத்பத்தியும், அந்நாதிகளின் ஆகா ரமும் உண்டாகின்றன.

(3) பௌகண்ட அவஸ்தை.

(3) அதன் பின் பத்து வருஷ பரியந்தம் பௌகண்ட அவஸ் தையாம். எதில் இந்த ஜீவன் வியர்த்தமாகிய சேஷ்டா ரூப விளை யாட்டினைச் செய்கின்றான். ஜநகர் (மாதா பிதாக்கள்) முதலியோர் களால் அடிக்கப்படுதற்குப் பாத்திர னாகின்றான்.

(4) கிசோர அவஸ்தை.

(4) அதன் பின் பதினைந்து வருஷ பரியந்தம் கிசோர அவஸ் தையாம். எதில் வியாவகாரிக வஸ்து, தனது அந்யரது என்னும் யதார்த்த ஞானம் உண்டாகின்றது. குல பரம்பரையாக அடைந்த அத்தியயநம் முதலியவைகள் உண்டாகின்றன.

(5) தருண அவஸ்தை.

(5) அதன் பின் நாற்பது வருஷ பரியந்தம் தாருண்ய அவஸ்தையாம். எதில் ஜீவநம் உண்டாக்குதற் பொருட்டு ஜீவன் தன் தன் கர்மாநுஸாரமாக நாநாவித யத்நஞ் செய்கின்றான். ஸ்திரீ புத்ரன் கிரஹ முதலியவற்றில் ஆசை யுடையவ னாகின்றான். நாநா வித சலம் சித்திரம் டம்பம் கபடம் பொய் ஹிம்ஸை முதலியவற் றைச் செய்கின்றான்.

(6) விருத்த அவஸ்தை.

(6) அதன் பின் மரண பரியந்தம் கர்மாநுஸாரமாக, ஆயுள் வரை இருப்பது விருத்த அவஸ்தையாம். எதில் ஒவ்வொரு நாளும் எல்லாச் சக்திகளும் நாச மடைகின்றன. கபம் பித்தம் வாதம் என்னும் மூன்று தாதுக்களால் ஜநிக்கப்பட்ட நாநாவித

ரோகம் உண்டாகின்றது. புத்ராதிகளால் செய்யப்படும் நாநா வித அநாதரவினை ஜீவன் ஸஹிக்கின்றான்.

(ஆதலால் இவ்வாறு சரீரத்தின் அவஸ்தையினை ஜிஜ்ஞாஸு விசாரித்துப் பரலோக அடைவின் பொருட்டு மிக முயலுக. புஜித்தல் பாநஞ் செய்தலால் மநுஷ்யத் தன்மையினை வியர்த்தஞ் செயற்க. "ஐந்து வருஷம் வரை கௌமார அவஸ்தையாம். பத்து வருஷம் வரை பௌகண்ட அவஸ்தையாம். பதினைந்து வருஷம் வரை கிசோர அவஸ்தையாம். அதன் பின் யௌவநமாம்." என்பன வாதிப் பிரமாணத்தினுல்.)

## 5—8. ஷட் சாஸ்திரம்

ஆறு சாஸ்திரத்தினைக் கூறுவாம்:- பூர்வ மீமாம்ஸை முதலிய பேதத்தினுல் சூத்ர ரூப சாஸ்திரம் அறு வகைத்தாம்.

### (1) பூர்வ மீமாம்சா சாஸ்திரம்.

(1) அவற்றுள், வேதத்தின் பூர்வ பாகத்தில் கூறப்படும் நித்தியம் காமியம் நைமித்திகம் பிராயச்சித்தம் நிஷித்தம் என ஐந்து வித கர்மமும், அதனை அதிகாரிகளால் கொள்ளுதல் தள்ளுதற் பொருட்டுச் சுருதிகட்குத் தனது அர்த்தத்தில் தாத்பரியத்தினை நிவிர்த்தித்தற் பொருட்டு அங்கஸஹிதமாக எதன்கண் விசாரிக்கப்பட்டிருக்கின்றதோ, அது பூர்வ மீமாம்ஸா சாஸ்திரமாம். ஜைமினி ரிஷி எதன் கர்த்தாவாம். சபர ஸ்வாமி முதலியவர்கள் எதன் வியாக்கியாநங்களின் கர்த்தாவாம். எதில் வர்ணாசிரம அபிமாநமுடையவன் அதிகாரியாவன். எது பன்னிரண்டு அத்தியாயத்தோடு கூடி யிருக்கின்றது. ஜிதேந்திரியத் தன்மையின்றிய புருஷனை ஸகாம கர்மத்தில் பிரவிர்த்தித்தல் வாயிலாய் ஸ்வர்க்காதி பலத்தினைப் போதிக்கின்றது. நிஷ்காம கர்மத்தில் புருஷனைப் பிரவிர்த்தித்து, அதன் அநுஷ்டாந ஜந்ய அந்தக்கரண சுத்தி வாயிலாய் வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணம் முதலியவைகளில் யோக்கியத் தன்மைச் சம்பாதநத்தினுல் அதற்கு உபயோகியாயு மிருக்கின்றது.



### (2) உத்தர மீமாம்சா சாஸ்திரம்.

(2) வேதத்தின் உத்தர பாகத்தில் கூறப்படும் ஜீவனது ஸ்வயம் சித்தப் பிரஹ்மத் தன்மை, நாநாவித த்வைத வாதிகளின் கண்டந பூர்வகம் ஜிஜ்ஞாஸுவிற்கு பிரஹமாத்ம ஏகத்வ விஷயத்தினைப் போதித்தற் பொருட்டு எதில் மிகவும் விசாரிக்கப்பட்டிருக்கிறதோ, அது உத்தர மீமாம்ஸா சாஸ்திரமாம். பகவாந் வியாஸர் எதன் கர்த்தாவாம். ஸ்ரீமத் சங்கர ஸ்வாமி முதலியோர்கள் எதன் வியாக்யாந கர்த்தாக்களாம். நான்கு ஸாதநத்தோடுகூடி வர்ணாசிரம அபிமாந மின்றியவன் எதில் அதிகாரியாவன். பதினாறு பாதங்களும், நான்கு அத்தியாயங்களும் எது உடைத்தா யிருக்கின்றது. சுரோத்திரியப் பிரஹ்ம நிஷ்ட குரு வாயிலாய் எதன் சிரவண மநநாதிகளால் அதிகாரிக்கு ஸம்சய மின்றி அத்விதீய ஸ்வப்பிரகாச பிரஹ்ம ஸாக்ஷாத்கார முண்டாகின்றது. எதன் முதலாவது அத்தியாயத்தில் சுருதிகளின் ஸமந்வய (பரஸ்பர சம்பந்த)ம் விசாரிக்கப் பட்டிருக்கின்றது. இரண்டாவது அத்தியாயத்தில் சுருதி ஸ்மிருதி முதலியவற்றின் அவிரோதத் தன்மையின் விசாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது. மூன்றுவது அத்தியாயத்தில் அந்தரங்க பகிரங்க பேதத்தினுல் மோக்ஷத்தின் ஸாதநம் விசாரிக்கப்பட்டிருக்கின்றது. நான்காவது அத்தியாயத்தில் ஸகுண நிர்க்குணப் பிரஹ்மப் பிராப்தி ரூப பலத்தின் விசாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

### (3) நியாய சாஸ்திரம்.

(3) பிராசீந நவீந பேதத்தினுல் தர்க்க சாஸ்திரம் இரு வகைத்தாம். அவற்றுள், பிராசீந சாஸ்திரம் நியாய சாஸ்திரம் எனப்படும். கௌதம ரிஷி எதனைச் செய்தற்குக் கர்த்தா வாவர். எது ஐந்து அத்தியாயங்களோடு கூடி யிருக்கின்றது. கதாதரர் முதலியோர் எதன் அநந்த வியாக்யாநங்களின் கர்த்தாக்க ளாவர். எதில் பிரமாணம் முதலிய பதினாறு பதார்த்தங்கள் ஆத்ம ஞாநத்தின்பொருட்டு ஐந்து அவயவங்களை யுடைய யுக்தி வாக்கியங்களினுல் விசாரிக்கப்பட்டிருக்கின்றது. பதார்த்த தத்துவ நிர்ணயத்தின்பொருட்டுப் பிரஹ்மாத்ம ஏகத்வ ரூப வேதாந்த அர்த்தத்தின்

மநநத்தில், அதன் ஸம்பாவனையின் பொருட்டு விருத்த மின்றிய யுக்தி வாக்கியங்களால் வேதாந்தத்தின் உபகாரியு மாகின்றது. சுருதியின் மூலமாக வுடைய தர்க்கங்கள் அநுபவத்திற்கு ஸமீபத்தி லிருப்ப தாகலின்.

### (4) வைசேஷிக சாஸ்திரம்.

(4) நவீந தர்க்க சாஸ்திரம் வைசேஷிக சாஸ்திர மெனப்படும். கணபுக் ரிஷி (கணுதர்) எதன் கர்த்தா வாவர். எது பத்து அத்தியாயங்களை யுடையதா யிருக்கின்றது. எதற்கு அநந்த வியாக்யாந கர்த்தாகள் இருக்கின்றனர். எதில் ஆத்ம ஞாநத்தின் பொருட்டுத் திரவ்யம் முதலிய ஏழு பதார்த்தங்கள் சோதிக்கப் பட்டிருக்கின்றது. எதில் இருபத்தொரு துக்கத்தின் த்வம்ச ரூபம் மோக்ஷ மெனப்படுகின்றது.

இரண்டு சாஸ்திரங்களும் பஹிர்முக ஹேதுவாகலின் பாஷ்யக் காரர்கள் அவற்றினைப் பாடத்தினுலும், அர்த்தத்தினுலும், முமுக்ஷுக்கள் கிரஹித்தல் கூடா தெனக் கூறி யிருக்கின்றன ராயினும், "மநநிக்க" என்னுஞ் சுருதியினுல், தனது அர்த்தத்தின் சம்பாவநத்தின்பொருட்டு மூலஸஹித யுக்தி அங்கிகரிக்கப்பட்டிருக்கின்றது. அதனுல் சுருதியின் விரோத மின்றிய தர்க்க வாயிலாய் இச் சாஸ்திரத்திற்கும் பிரஹ்மாத்ம ஏகத்வ ரூப மஹா வாக்கியார்த்தத்தின் சம்பாவனையின் நிமித்தம் உபகாரஞ் செய்யுந் தன்மை யிருக்கின்றது.

### (5) சாங்கிய சாஸ்திரம்.

(5) பிரகிருதி மஹத் தத்வம் முதலிய இரு பத்து நான்கு தத்துவங்கள் பிரகிருதி புருஷ விவேகத்தின்பொருட்டு எதில் நன்கு கூறப்பட்டு இருக்கின்றது. ஆறு அத்தியாய ரூப மாகிய அது சாங்கிய சாஸ்திர மெனப்படுகின்றது. கபில ரிஷி எதன் கர்த்தா வாவர். எதன் வியாக்யாந கர்த்தாக்கள் அநேகமாக இருக்கின்றார்கள். எதனிடத்து முக் குண ரூபப் பிரகிருதி தத்துவத்தினை மூலப் பிரகிருதி யென்றும், கேவலம் காரண மென்றும், ஸ்வதந்திர நித்திய மென்றுங் கூறப்பட்டிருக்கின்றது. எதன் பிரவிர்த்தி புருஷர்களின் போக மோக்ஷத்தின் பொருட்டுண்டாகின்றது. தன் பொருட்டு (பிரவிர்த்தி) உண்டாவ தில்லை. ஸத்வ புருஷர்களின் அவிவேக ரூப பரிணுமத்தினை யடைந்து புருஷனைத் தன் குணத்தின் காரியமாகிய ஸுக துக்க மோஹத்தில் கட்டுகின்றது. விவேக ரூப பரிணுமத்தினை யடைந்து சத்வ புருஷர்களின் அந்யத் தன்மைக் கியாதி வாயிலாய் அதன் அபவர்க்கத்தின் ஹேது வாகின்றது. எதனிடத்து மஹதாதி ஏழு தத்துவங்கள் பிரகிருதி விகிருதி ரூபமாகக் கூறப்பட்டிருக்கின்றது. பதினுறு தத்துவங்கள் கேவலம் விகிருதி யெனக் கூறப்பட்டிருக்கின்றது. ஜீவாத்ம ரூப புருஷன் சேதந ஸ்வரூப அஸங்க உதாஸீநன் எனப்படுகின்றது. அதுவும் த்வம் பத வாச்சியார்த்த லக்ஷியார்த்த நிருபணத்தில் மஹா வாக்கியத்திற்கு உபகாரியாய் இருக்கின்றது. சேசுவர (ஈசுவரனைப் பிரதிபாக்கும்) ஸாங்கியம் வேதாந்தத்திற்கு அந்தர்க்கதமாகலின் ஈண்டுக் கூறப்படவில்லை.

### (6) யோக சாஸ்திரம்.

(6) யமம் நியமம் முதலிய அஷ்டாங்கங்கள், சித்த நிரோத ரூப அங்கி சமாதியின் சித்தியின் பொருட்டு எதனிடத்து நன்கு கூறப்பட்டிருக்கின்றது. அவற்றின் அநுஷ்டாநப் பிரகாரமும் அநுஷ்டாநத்தினு லுண்டாம் அவற்றின் பலத்தின், தனது ஸங்கேத ரூப மோக்ஷ சித்தியும், அல்லது ஸமாதி சித்தியும், எதன்கண் கூறப்பட்டிருக்கின்றதோ, அது யோக சாஸ்திரமாம். பகவாந் பதஞ்ஜலி எதன் கர்த்தா வாவர். எதற்கு அநந்த வியாக்கியாந கர்த்தாக்கள் இருக்கின்றனர். எது நான்கு பாதங்களோடு கூடி யிருக்கின்றது. அதுவும் ஸவிகல்பம் நிர்விகல்பம் என்னும் இரு வித ஸமாதி வாயிலாய் உண்டாம் சித்தத்தின் ஏகாக்ரத் தன்மை, நிரோத வாயிலாய்ச் சிரவண ரூப அங்கியின் உபகாரக மாகின்றது. நிதித்தியாஸந ரூப அங்கத்திலும் உபகாரஞ் செய்வ தாகின்றது. எதனுல் ஸூத்ரக் காரர் பாஷ்யக்காரர்களினுலும் இவற்றி லுள்ள சுருதியின் விருத்தாம்சங்கள் கண்டநஞ் செய்யப்பட்டிருக்கின்றன. எல்லாச் சித்த விருத்தி நிரோத ரூப விருத்த மின்றிய அம்சங்கள் கண்டிக்கப்படவில்லை.

(பூர்வ மீமாம்ஸை முதலிய ஐந்து சாஸ்திரங்களும் த்வைதத்தினை அறிவித்துச் சுருதியின் விருத்தங்களா மாயினும், விசாரித்துப் பார்க்கின் மஹாவாக்கியார்த்த நிர்ணபத்தில் சிற் சில அம்சங்களில் அபேக்ஷிக்கப்படுவனவும் ஆகின்றன. அந்தக் கரண சுத்தியின் பொருட்டுப் பூர்வ மீமாம்ஸையின் அபேக்ஷையும், பிரஹ்மாத்ம தத்வ மநநத்தின் பொருட்டு நியாய வைசேஷிக சாஸ்திரத்தின் அபேக்ஷையும், ஆத்மாவின் அஸங்கத் தன்மை ஞாநத்தின் பொருட்டு ஸாங்கிய சாஸ்திரத்தின் அபேக்ஷையும், சித்த ஏகாக்ரத்தன்மையின் பொருட்டு யோக சாஸ்திரத்தின் அபேக்ஷையு மிருத்தலின். அதனால் ஈண்டும் இவ் வபிப்பிராயத்தினால் இவற்றிற்கு உபகாரஞ் செய்யுந் தன்மை கூறப்பட்டது.)

5—9 ஷட் கல்ப சூத்ரம்.

கர்மாநுஷ்டாநத்தினை நிர்ணயிக்கும் ஆறு வித கல்ப ஸூத்ரத்தினைக் கூறுவாம்:—ஜைமிநீய ஆசுவலாயந ஆபஸ்தம்ப பௌதாயந காத்யாயந வைகாநஸீய பேதத்தினால் கல்ப ஸூத்ரம் அறு வகைத்தாம்.

(1) ஜைமிநி கற்ப சூத்ரம்.

(1) ஜைமிநி ரிஷியினால் செய்யப்பட்டது ஜைமிநீய கல்ப ஸூத்ரமாம்.

(2) ஆசுவலாயந கல்ப சூத்ரம்.

(2) ஆசுவலாயந ரிஷியினால் இயற்றப்பட்டது ஆசுவலாயந ஸூத்ரமாம்.

(3) ஆபஸ்தம்ப கற்ப சூத்ரம்.

(3) ஆபஸ்தம்ப ரிஷியினால் செய்யப்பட்டது ஆபஸ்தம்ப சூத்ரமாம்.

(4) போதாயந கற்ப சூத்ரம்.

(4) போதாயந ரிஷியினால் இயற்றப்பட்டது பௌதாயந ஸூத்ரமாம்.



(5) காத்யாயந கற்ப சூத்ரம்.

(5) காத்யாயந ரிஷியினால் செய்யப்பட்டது காத்யாயநீய ஸூத்ரமாம்.

(6) வைகாநச கற்ப சூத்ரம்.

(6) வைகாநஸ ரிஷியினால் இயற்றப்பட்டது வைகாநஸீய ஸூத்ரமாம்.

(வேதங்களில் அநந்த சாகைக ளிருக்கின்றன. அவற்றில் ஒரு கர்மம் எங்ஙனம் கூறப்பட்டிருக்கின்றதோ, அங்ஙனமே அவற்றினை ஒன்று சேர்த்து நவீந புருஷர்கள் எதனால் நிர்ணயஞ் செய்தற்கும், அநுஷ்டாநம் செய்தற்கும் ஸமர்த் தின்றியவர்களா யிருக்கின்றார்கள், அதனால் முற் புகன்ற ரிஷிகளால் அதிகாரிகள் அநுஷ்டித்தற்கு யோக்யமாய கர்மங்கள் தத் தம் கல்ப ஸூத்ரங்களில் எதனால் அவற்றின் அநுஷ்டாநப் பிரகாரம் நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கின்றது. யஞ்ஞத்தின் அநுஷ்டாதாவாகிய ஹோதா முதலிய நான்கு பிராஹ்மணர்களும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. எவருக்கு ரித்விக் எனவும் நாமம் கூறப்படுகின்றது. அவர்களின் பிந்ந பிந்நமாய கர்மங்களும் நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அவற்றின் அநுஸாரமே இப்பொழு துள்ள அதிகாரிகளாகிய ஜீவர்கள் அக்கர்மங்களின் அநுஷ்டாநம், அநுஷ்டாநக் கிரமத்தினைக் குரு வாயிலாய் அறிந்து தனது விசார மின்றியே செய்கின்றனர். அதனால் இவற்றிற்குக் கல்ப ஸூத்ர மென்னும் பெயர் உண்டாயினவாம். அவ் வறுவகைத்தாய கல்ப ஸூத்ரமும் வேதத்திற் புகன்ற கர்மங்களின் அநுஷ்டாநத்தின் பிரகாரத்தையும், அதிகாரியினையும், பலத்தினையும், நிர்ணயிப்பனவாம்.)

5—10 ஷடங்கம்.

வேதத்தின் ஆறு அங்கங்களைக் கூறுவாம்:—சிக்ஷை முதலிய பேதத்தினால் வேதத்தின் அங்கம் அறு வகைத்தாம்.

### (1) சிக்ஷை.

(1) வேதத்தில் கூறப்படும் பத பதார்த்தங்களின் ஞானத்தினை யுண்டாக்குவதில் ஸஹகாரியா யிருந்து உபகாரஞ் செய்தலின் வேதத்தின் அங்கம் எனப்படுகின்றது. குரு முக வாயிலாய் வேதாத்தியயநத்தில் உதாத்தம் அநுதாத்தம் ஸ்வரித மென்னும் தர்ம விசிஷ்ட பதங்களின் உச்சாரணம் முதலிய நியமம் கூறப்படுகின்றது. எந்த நியமத்தினை ஆக்ரமித்து உச்சரித்தலினால் பாப முண்டாகிறது. எதில் அதன் நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கின்றது. பாணினி ரிஷி எதனைச் செய்வதற்குக் கர்த்தா வாவர். அந்தச் சிக்ஷை என்னும் பெயரை யுடைய சாஸ்திரம் வேதத்தின் உபயோகியாய் அங்கமாம்.

### (2) கற்பம்.

(2) வேதத்தில் சாகைகளின் பேதத்தினால் கூறப்படும் வைசுவாநரன் முதலிய பதினான்கு உபாஸனைகளின் அநுஷ்டானப் பிரகாரம் எதில் நன்கு கூறப்பட்டிருக்கின்றது வசிஷ்டர் முதலிய ரிஷிகள் எதன் கர்த்தா வாவர். அது சித்த ஏகாக்ரத் தன்மை யுண்டாக்குதல் வாயிலாய் வேதார்த்த உபயோகியாகலின் கல்பமென்னும் பெயரை யுடைய இரண்டாவது அங்கமாம்.

### (3) வியாகரணம்.

(3) வேதத்தில் கூறப்படும் அநந்தப் பிரகாரமாய சப்தத்தின் பரீக்ஷையின் பொருட்டு எதில் அநேகவிதப் பிரகிருதி, அநேக விதப் பிரத்தியயம், அநேக வித லிங்கம், அநேக வித ஸமாஸங்கள், ஜிஞ்ஞாஸுக்களின் ஞானத்தின் பொருட்டு நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. சப்தத்தின் ஸாதுத் தன்மை எதற்கு விஷயமா யிருக்கின்றது. ரக்ஷை முதலிய ஐந்தும் எதன் பிரயோஜனமாம். இந்திரன் முதல் பாணினி அமரஸிம்ஹன் பரியந்தம் எண்மர்களும் எதன் கர்த்தாக்களாவர். அது காலாந்தரத்தில் வேறு வியாகரணமாக வெளிப்பட்டிருந்த தாயினும் இப்பொழுது எட்டு அத்தியாயங்களோடு பாணினியால் செய்யப்பட்ட விருத்த கௌமுதி



என்னும் பெயரினை யுடைய வியாகரணம் வேத சாஸ்திரத்தின் சப்தங்களின் ஞானத்தின்பொருட்டு அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. வார்த்திக பாஷ்யங்களின் கர்த்தாவாய காத்யாயநரும் பதஞ்சலியும் எதன் வியாக்யான கர்த்தாக்களாவர். வேதார்த்த ஞான உபயோகியாகலின் அந்த வியாகரணம் அதன் அங்கமாம்.

### (4) நிருக்தம்.

(4) வர்ணத்தின் ஆகமம், வர்ண விபர்யயம், வர்ண விகாரம், வர்ண நாசம், தாதுக்களின் அதிசயார்த்தத்தோடு ஸம்பந்தம் என்னும் ஐந்தின் நிருக்தி (நிர்வசநம்) எதில் கூறப்பட்டிருக்கின்றது. யாஸ்க முனி எதன் கர்த்தா வாவர். எது பதின் மூன்று அத்தியாயத்தோடு கூடி யிருக்கின்றது. வேத மந்திரங்களில் உள்ள அப்பிரசித்தமான சப்தங்களின் அர்த்தங்கள் எதன்கண் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. அது வேதத்தின் ஸஹகாரியாய் நிருக்த மென்னும் அங்கமாம்.

### (5) சந்தசு.

(5) மகணம் முதலிய கண மாத்திரைகளின் பேதத்தினால் இருவிதமா யுள்ள சந்தத்தின் ஜாதி அநந்தமும், அளவிடற் கரியதுமாம். சந்தத்தின் ஸாதுத் தன்மை எதற்கு விஷயமாய் இருக்கின்றது. அநேகவித சந்தத்தின் ஞானமும், அநேகவித சந்தத்தினை யுண்டாக்கும் பலமும் எதற்கு இருக்கின்றது. பகவாஞ் சேஷமுதலியவர் எதன் கர்த்தா வாவர். அதுவும் வேதத்தி லுள்ள காயத்ரீ முதலிய சந்தத்தினை அறிவிப்பதாகலின் வேதத்தின் அங்கமாம்.

### (6) ஜோதிஷம்.

(6) இந்த ஜந்மத்தில் உண்டாம் பிராரப்த கர்மத்தின் பலமாகிய ஸுக துக்கம் ஆயுள் நியமம் முதலியவற்றிற்கு, பிரகஸ்பதி முதலிய கிரஹங்களின் சுபாசுப ஸ்தானத்தி லிருத்தல் வாயிலாய் எதன்கண் நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. எதில் வேதத்திற் புகன்ற கர்மங்களின் அநுஷ்டான அநநுஷ்டான ஹேதுவாகிய நானாவித சுபா

சுப காலங்கள் நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கின்றன. கர்க்கர் முதலிய அநந்த ஆசாரியர்கள் எதன் கர்த்தா வாவர். மேலுண்டாம் சுக துக்கத்தின் ஞாநம் எதன் பல மாகின்றது. அது கால ஞாந வாயிலாய் வேதத்தின் உபயோகி யாகலின். ஜோதி என்பது வேதத்தின் அங்கமாம்.

(இவ் வெல்லா அங்கமும் ஜிஞ்ஞாஸுவிற்கு வேதார்த்த கிரஹணத்தில் தத் தம் அம்சத்தில் உபகாரஞ் செய்வதாகின்றது. அதனால் அங்க மெனப்படுகின்றது )

## 5—11. ஷட் கர்மம்.

ஆறு கர்மங்களைக் கூறுவாம்:—ஸ்நாநம் ஸந்தியா வந்தநம் முதலிய பேதத்தினால் கர்மம் அறு வகைத்தாம்:—

### (1) ஸ்நாநக் கிரியை. (கர்மம்)

(1) மலம் மூத்திரம் ரக்தம் மாம்ஸம் முதலிய அமேத்திய வஸ்துக்களின் ஸம்பந்தத்தினால் உண்டாம் சரீரத்தி லுள்ள மலத்தின் நிவிர்த்தியின் பொருட்டு நதி ஜலம் முதலியவைகளில் சாஸ்திரத்தா லடையப்பட்ட பிரதிதிநம் செய்யும் ஸ்நாநம் ஸ்நாநக் கிரியையாம். அல்லது காயத்திரீ முதலிய விதிக்கப்பட்ட கர்மாநுஷ்டாநத்தின் பொருட்டு மூவர்ணங்களினால் அபேக்ஷிக்கப்பட்ட சரீர சுத்தியின் நிமித்தம் ஜலாதிகளால் தன் சரீரத்தினைக் கழுவுதல் ஸ்நாநமாம். கர்மாதிகாரியின் சரீர சுத்திக்கு ஹேதுவா யிருக்கின்றது. அதுவும் நித்திய கிரியையினுள் அடக்கமாம். கங்கை முதலிய பவித்திர தீர்த்தங்களின் ஸ்நாந விசேஷம் பாப நிவிர்த்தியின் ஹேதுவா யிருக்கின்றது.

### (2) ஜப கர்மம்.

(2) குருவினால் உபதேசிக்கப்பட்ட மார்க்கத்தினால் காலை முதலிய மூவித ஸந்தியா ஸம்பந்தமாய்ச் சுருதி ஸ்மிருதிகளால் கூறப்பட்ட கர்மம், கர நியாஸ அங்க நியாஸ பூர்வகம் ஏழு வியாகிருதி ஸஹிதம் காயத்திரீ ஓங்காரம் முதலிய பவித்திர மந்திரங்களின் ஜப ஸஹிதமாய் நாள் தோறும் மூ வர்ண த்விஜர்களால் செய்யப்படுகின்றது. அந்த ஸந்தியா வந்தநம் ஜப கர்மமாம். அது பிரதிதிநம் புத்தி பூர்வகமாகவும், அபுத்தி பூர்வமாகவும் செய்யப்பட்டு உண்டாம் பாபத்தினை நிவிர்த்திக்கின்றது. அதுவும் அதிகாரிக்கு நித்தியப் பிராப்தமாம்.



### (3) ஹோமக் கிரியை (கர்மம்)

(3) நித்திய அக்நி ஹோத்திரத்தில் தேவதையின் உத்தேசத்தினால் நெய் பாயஸம் யவை எள் முதலிய திரவ்யங்கள், மூன்று வர்ணத்தவராலும் நாள் தோறும் ஹவநஞ் செய்யப்படுவது ஹோமக் கிரியையாம்.

### (4) அர்ச்சநக் கிரியை. (கர்மம்)

(4) ஸாளிக் கிராமம் முதலிய இஷ்ட தேவதைகட்குப் பத்திரம் புஷ்பம் பலம் தூபம் தீபம் நைவேதநம் உபகாரம் முதலியவைகளினால் நாள் தோறும் நமஸ்காரம் ஸ்தோத்திரம் முதலியவற்றோடு பூஜை செய்தல் தேவதைகளின் அர்ச்சநக் கிரியையாம்.

### (5) ஆதித்ய கர்மம்.

(5) ஜிஞ்ஞாஸு, பகவத் பக்தன், ஸ்வதர்ம நிஷ்டன், அதிதிகளுக்குத் தனது சக்தி யநுஸாரமாகக் குண முடைய அந்நாதிகளால் நாள் தோறும் போஜநஞ் செய்வித்தல் ஆதித்ய கர்மமாம்.

### (6) வைசுவ தேவ கர்மம்.

(6) தேவர், ரிஷி முதலியவர்களின் நாமத்தினை யுடைய விசுவ தேவதைகட்கு ஐந்து யஞ்ஞங்களைச் செய்வது வைசுவதேவ கர்மமாம்.

(இவ் வாறும் நித்திய கர்மங்களாம். எதனது அநுஷ்டாநத்
தினுல் அதிகாரி பாப நிவிர்த்தியினையும், அந்தக்கரண சுத்தியினையும்
அடைந்து மோக்ஷ ஸாதநத்தில் அதிகாரி யாகின்றுன்.)

## 5—12. ஷட் பிரமாணம்.

ஆறு பிரமாணத்தினைக் கூறுவாம்:- முற் புகன்ற பிரமாண
நான்கோடு, அநுபலப்தி அர்த்தாபத்தி என்னும் பேதத்தினுல்
வேதாந்த மதத்தில் அங்கீகரிக்கப்பட்ட பிரமாணம் அறு வகைத்
தாம்.

### (1) பிரத்தியக்ஷப் பிரமாணம்.

(1) சக்ஷுராதி முதலிய பேதத்தினுல் ஐந்து விதமான பிரமா
விர்த்தி ஞாநம், அதிஷ்டாநத் தன்மையினுல் கடாதி வஸ்துவினோடு
தாதாத்மியத்தினை யடைந்து விஷய சேதநத் தன்மையின் பிரகா
சக மெனப்படும் அபரோக்ஷ வியவகாரத்தினை உண்டாக்கும்
அந்தக்கரண பரிணும ரூபமாம். இருவித ஆவரணத்தின் பங்கம்,
அல்லது அஞ்ஞாநத்தின் நிவிர்த்தி எதன் பல மாகின்றது. மநம்
எதன் உபாதாந காரண மாகின்றது. இவ்வித பிரத்தியக்ஷப் பிரமா
ஞாநத்தினை, விஷய ஸம்பந்த வாயிலாய் உண்டாக்கும் சக்ஷுராதி முத
லிய ஐந்து இந்திரியங்களும் பிரத்தியக்ஷப் பிரமாணங்களாம். அல்
லது ஸம்ஸார தசையில் பாதிக்கப்படாத வர்த்தமாந கடாதி வஸ்
துக்களின் அதிஷ்டாநமாகிய விஷய சேதநத்தோடு அபிந்நமாந
பிரமாண சேதந ரூப பிரத்தியக்ஷப் பிரமையின் ஹேது பிரத்திய
க்ஷப் பிரமாணமாம். எதற்குப் பிரத்தியக்ஷப் பிரமையின் கரணம்
அல்லது வியாபார முடைய அஸாதாரண காரணம் என்றுங் கூறப்
படுகின்றது. அது வியாவகாரிக வஸ்துவின் வியவகாரத்திற்கு
ஸ்வஜந்ய விருத்தி வாயிலாய் ஹேதுவா யிருக்கின்றதாயினும், விஷ
யாவச்சிந்ந சோபாதிக சேதநத்தின் ஞாநத்திலும் உபயோகியா
கின்றது. விஷயாதிஷ்டாந சேதநமே அவஸ்தா அஞ்ஞாநத்தினுல்
செய்யப்பட்ட ஆவரணத்திற்கு விஷய மாகின்றமையின்.



### (2) அநுமாநப் பிரமாணம்.

(2) லிங்க தரிசந, வியாப்தி முதலிய ஞாநத்தினுல் அநுமிதி
ரூப பரோக்ஷ விர்த்தி ஞாநத்தினை யுண்டாக்குவது அநுமாநப் பிர
பாணமாம். எதனை அநுமிதியின் கரணம், அல்லது வியாபார
முடைய அஸாதாரண காரணம் என்றுங் கூறுகின்றனர். விஷயத்தி
லுள்ள அஸத்வாபாதக ஆவரண பங்கம் எதற்குப் பலமா யிருக்
கின்றது. எது அந்தக் கரணத்தின் பரிணும ரூபமா யிருக்கின்றது.
சக்ஷுராதி முதலிய வாயிலாய் வெளியில் செல்லுதலும், தனது விஷய
ஸந்நிகர்ஷத்தினை யடைதலு மின்றி, உள்ளேயே உத்பத்தியாகின்
றது. இவ்வித விர்த்தியினை யுண்டாக்கும் அநுமாநம் வேதாந்தத்தில்
அந்வயி ஒன்று மாத்திரமே யிருக்கின்றது. கேவலாந்வயி, கேவல
வ்யதிரேகி என்பன இல்லை. எதனுல் உண்மையாகப் பிரஹ்மாத்மா
வில் தியேயத் தன்மை, பிரமேயத் தன்மைகளின் அபாவங்க
ளிருக்கின்றன. ஸ்வப்பிரகாச அப்பிரமேய அவாச்சிய ஸ்வரூப
மாக விருத்தலின். ஸர்வப் பிரபஞ்ச அபாவத்தின் அதிகரண
மாகிய பிரஹ்மாத்மாவினைக் குறித்து வ்யதிகரண வியாப்தி சிதிலமா
யிருத்தலின். அதனுல், அதில் கேவலாந்வயியின் உபயோக
மின்று. கேவல அந்வய வியாப்தியின் அபாவத்தினுல். எதனுல்
ஜீவனது ஸ்வரூபத் தன்மையினைச் சாதிக்கும் வைதிக அநுமாநத்தி
லுள்ள ஜீவப் பிரஹ்ம அபேத ரூப ஸாத்தியத்தின் அபாவம் யாண்
டும் இருப்ப தில்லை. அபேதம் சுருதி புகன்ற அநாதி சித்தத்
தன்மையினுலும், பிரஹ்மம் சுருதி சித்த ஸர்வ வியாபித் தன்மையி
னுலும் ஸதா ஸத் ஸ்வரூபமாக விருத்தலின். ஆதலால் கேவல
வியதிரேக வியாப்தியின் அபாவத்தினுல் கேவல வியதிரேகிக்கும்
உபயோக மில்லை.

அதுவும் ஸ்வார்த்தாநுமிதி பரார்த்தாநுமிதியினை யுண்டாக்குந்
தன்மையினுல் முற் புகன்றது போன்று இரு வகைத்தாம்:—
ஸ்வார்த்த அநுமிதி முதலியவற்றின் லக்ஷணம் நான்கு வித பிரமாண
நிரூபண அவசரத்தில் முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. அந்த

அந்வயி மாத்திர அநுமானமும் வியாவகாரிகமா மாயினும் மஹா வாக்கியத்தால் நிரூபிக்கப்பட்ட பிரஹ்மாத்ம ஏகத்வ ரூப அர்த்தத்தின் ஸம்பாவநத்தில் ஸஹகாரித் தன்மையினால் வேதாந்தத்தில் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்வதந்திரப் பிரமாணத் தன்மையா லன்று. சிலரோ பிரஹ்மாத்ம ஏகத்வ ரூப அர்த்தத்தின் ஸம்பாவனையின் நிமித்தம் பிரஹ்மத்தில் மூவித அநுமானங்களின் உபயோகங்களைக் கூறுகின்றனர். அந்வய மாத்திர வ்யாப்தி கேவலாந்வயி அநுமானம் இதுவாம்:— எங்ஙனம் இவ் வெல்லாம் பிரஹ்மத்தின் அபிந்ந சத்தை யுடையன. அதன் அபிந்ந சத்தையின் அஸம்பவத்தினால் பிரஹ்மம் போன்று. என்னுமிடத்து பிரஹ்மத்தின் அபிந்ந சத்தையினையுடைய ஸாத்தியம், அதன் அபிந்ந சத்துவ அஸம்பவத் தன்மை ஹேது என்னும் இரண்டின் வியதிரேக வியாப்தி யின்று. ஜகத்திற்குப் பாதிக்கப்படுந் தன்மையினாலும் ஆத்மாவிற்கு முக்யத் தன்மையினாலும் அதன் அபிந்ந சத்தை யுடையதாக விருத்தலின். அதன் பிந்ந சத்தையில் அஸம்பவமாகலின் எல்லாம் பக்ஷமா யிருத்தலின். வியதிரேக வியாப்தியினைக் கிரஹிக்கும் ஸ்தலரூப விபக்ஷ மின்மையின்.

வியதிரேக மாத்திர வியாப்தியினை யுடைய கேவல வியதிரேகியநுமானம் இதுவாம்:— எங்ஙனம் ஆத்மா பரமார்த்த சத் சேதநாநந்த ரூபமா யிருக்கின்றது. பாதிக்கப்படாத எல்லாவற்றினையும் விளக்கும் பரப் பிரமையின் ஆஸ்பத மாகலின் எது சத் சித் ஆநந்த ரூப மன்றோ, அது எவ்விதத்தும் பாதிக்கப்படாத எல்லாவற்றினையும் விளக்கும் பரப் பிரமையின் ஆஸ்பதமு மன்று. எங்ஙனம் சுக்தியாதிகளில் இரஜதாதிகள். ஈண்டு எது பாதிக்கப்படாத எல்லாவற்றினையும் விளக்கும் பரப் பிரமையின் ஆஸ்பதமாக இருக்கின்றதோ அது பரமார்த்த சச்சிதாநந்த ரூபமுமாம் என்று ஸாத்திய ஹேதுக்களின் அந்வய வ்யாப்தி யில்லை. உண்மையாகப் பிரஹ்மத்தின் அபிந்ந ஆத்மா பக்ஷமாகலின். அதனினும் வேறாய் எதற்கும் சச்சிதாநந்த ரூபத் தன்மை யின்மையின். எங்ஙனம் வியாவகாரிக பிராதிபாஸிகமாகிய எல்லாத் த்வைதமும்



பரமார்த்த ஸத்திய மன்று. அநாத்மாவாகலின். எது பரமார்த்தமாக அஸத்தன்றோ, அது அநாத்மாவும் அன்று. எங்ஙனம் சேதநமாகிய ஆத்மா என வியதிரேக வியாப்தியே யிருக்கின்றது. எது அநாத்மா அது பரமார்த்த ஸத்து மன்று என அந்வய வியாப்தி யின்று. எல்லா த்வைதமும் பக்ஷமாகலின்.

அந்வய வியதிரேக வியாப்தியினை யுடைய அநுமானம் இதுவாம்:— எங்ஙனம் ஆத்மா பிரஹ்மாபிந்நமா யிருக்கின்றது. ஸச்சிதாநந்த ரூப மாகலின்; பிரஹ்மம் போன்று. இவ்வெல்லா ஜகத்தும் மித்தையா யிருக்கின்றது; திருசியமாகலின்; ஸ்வப்நப் பிரபஞ்சம் போன்று. என்னுமிடத்து ஸபக்ஷமாகிய பிரஹ்ம ஸ்வப்நப் பிரபஞ்சங்களில் அந்வய வியாப்தியின் கிரஹணம் உண்டாகின்றது. யாண்டு முக்கிய ஸமாநாதிகரணத்தினால் பிரஹ்மத்தோடு அபேதத்தின் அபாவ மிருக்கின்றது. ஆண்டு ஸச்சிதாநந்த ரூபத் தன்மைக்கும் அபாவம் இருக்கின்றது; எங்ஙனம் கடாதிகளில். யாண்டு மித்தையாத் தன்மையின் அபாவ மிருக்கின்றது? ஆண்டு திருசியத் தன்மைக்கும் அபாவம் இருக்கின்றது. ஈண்டு விபக்ஷமாகிய கடாதி, ஆத்மாக்களில் வியதிரேக வியாப்தியின் கிரஹணம் உண்டாகின்றது. ஆதலால் இரண்டு வியாப்தியினை யுடையதாய் இருக்கின்றது.

### (3) உபமாநப் பிரமாணம்.

(3) பசு முதலிய ஸாதிருசிய விசிஷ்ட கவயாதிகளின் பிண்டத்தினை விஷயமாக வுடைய உபமிதி ஞாநத்தினை யுண்டாக்கும் ஸாதிருசிய ஞாந ரூபம் உபமாநப் பிரமாணமாம். எதற்கு உபமிதியின் கரண மென்றுங் கூறப்படுகின்றது, அது வேதாந்த ரீதியினால் உபமிதிக்கு வியாபார மின்றிய அஸாதாரண காரணமாயிருக்கின்றது. நியாயத்தில் வியாபார ஸஹிதமாய்க் கூறப்பட்டிருக்கின்றது.

அதுவும், முன் போன்று இரு வகைத்தாம். ஸாதிருசிய விசிஷ்ட பிண்டத்தினை விஷயமாக வுடைய உபமிதி ஞாநத்தின் ஹேது முதலாவது உபமாநப் பிரமாணமாம். விலக்ஷணத் தன்மை விசிஷ்ட வஸ்துவினை விஷயமாக வுடைய உபமிதி ஞாநத்தின் ஹேது

இரண்டாவது உபமானமாம். அதுவும், தத் பதத்தின் லக்ஷியமாகிய பிரஹ்மத்திலுள்ள அஸங்கத் தன்மை வியாபகத் தன்மைகளை யறிவிக்கும் ஞானத்தினை யுண்டாக்குவதில் உபகாரமா யிருக்கின்றது. எதனால், முமுக்ஷு விசார காலத்தில், "ஆகாச ஸமானம் பிரஹ்மம்" என்று சுருதியினால் கேட்டு, ஆகாசத்தின் உபமானத்தினால் உபமேயமாகிய பிரஹ்மத்தில் அதன் ஸமான அஸங்கத் தன்மை, வியாபகத் தன்மைகளின் நிச்சயஞ் செய்கின்றான். "அஸத்தாகிய அநாத்மாவினின்றும் ஆத்மா விலக்ஷணமா யிருக்கின்றது". என்று குருவினால் கேட்டு, அஸத் ஜடத்வாதி தர்ம விசிஷ்ட அநாத்மாவின் உபமானத்தினால் அதனினும் விலக்ஷணமாக ஸத் சேதநாதி விசிஷ்ட ஆத்ம வியக்தியாய த்வம் பதத்தின் லக்ஷியத்தை நிச்சயஞ் செய்கின்றான். அதனால் உபமானப் பிரமாணமும், பதார்த்த சோதநத்தில் உபகாரியாய் வேதாந்த உபயோகி யாகின்றது.

## (4) சப்தப் பிரமாணம்.

(4) ஆகாங்க்ஷை முதலிய தர்ம விசிஷ்ட பத ஸமூஹ ரூப வாக்கியம் சப்தப் பிரமாணமாம். எதற்கு சாப்திப் பிரமையின் கரண மென்றும், வியாபார முடைய அஸாதாரண காரண மென்றும் சொல்லப்படுகின்றது. அது பத பதார்த்த சங்கதி ஞானம், பதார்த்த உபஸ்திதி தாத்பரிய ஞான வாயிலாய்ச் சுரோதாவினிடத்தில் தன தர்த்த போதகத்தின் ஜநக மாகின்றது. அந்த (சப்த ஜந்ய) ஞானம், பரோக்ஷ அபரோக்ஷ பேதத்தினால் இரு வகைத்தாம். எதனை அந்தக் கரண பரிணாம ரூப பிரமா விருத்தி என்றும் கூறுகின்றனர்? இரு வித ஆவரணங்களின் பங்கம் எதற்குப் பலமாகின்றது. அந்த இருவித விர்த்தியும் வாக்கியத்தாற் பிரதிபாதிக்கப்படும் விஷயத்தின் பரோக்ஷத் தன்மை அபரோக்ஷத் தன்மையின் அதீநமா யிருக்கின்றது. அந்தக் காணத்தினும் வியவஹித (மறைப்பு) வஸ்துவில் பரோக்ஷத் தன்மை யிருக்கின்றது. அவ்யவஹித வஸ்துவில் அபரோக்ஷத் தன்மை யிருக்கின்றது.

அந்த வாக்கியப் பிரமாணம், லௌகிக வைதிக பேதத்தினால் இரு வகைத்தாம். "பக்தாமவ னிருக்கின்றான்" என்பதாதி லௌகிக வாக்கியம் பரோக்ஷ வஸ்துவினை விஷயமாக வுடைய பரோக்ஷ ஞா



னத்தினை யுண்டாக்குவதா யிருக்கின்றது. "நீ பத்தாமவனா யிருக்கின்றாய்" என்பதாதி வாக்கியம் அபரோக்ஷ வஸ்துவினை விஷயமாக வுடைய அபரோக்ஷ ஞானத்தினை யுண்டாக்குவதா யிருக்கின்றது. அதுவும் வேதத்தினைப் பிரமாணமாகக் கொண்ட ஆப்த புருஷனது வாக்கியம் பிரமாணமாம். அந்ய மெல்லாம் அப்பிரமாணமாம். வைதிக வாக்கியத்திலும், "ஸ்வர்க்கம் இருக்கின்றது." "பிரஹ்மம் இருக்கின்றது." என்பதாதி வாக்கியம் பரோக்ஷ வஸ்துவினை விஷயமாகவுடைய பரோக்ஷ ஞானத்தினை யுண்டாக்குகின்றது. "தத் த்வ மஸி" என்பதாதி வாக்கியம் லக்ஷணை வாயிலாய்ப் பிரஹ்மாத்ம ஏகத்வ ரூப அபரோக்ஷ விஷயத்தினை உடைய அபரோக்ஷ ஞானத்தினை யுண்டாக்குகின்றது. பதார்த்தங்களின் பரஸ்பரம் விசேஷண விசேஷ்யபாவ ஸம்பந்தம் அல்லது, அந்யதா விசிஷ்டத் தன்மைச் சம்பந்த ரூபப் பிரத்தியக்ஷப் பிரமாண விரோத மின்றி வாக்கியார்த்தம் உண்டாகின்றது. அதனை விஷயமாக வுடைய ஞானத்தினை லௌகிக வாக்கியம் உண்டாக்குகின்றது. எங்ஙனம் தண்டத்தினால் பசுவின் வெண்மையினைக் கொணர்க" "நீலோத்பலம்" என்பன.

"தத் த்வ மஸி" என்பதாதி வைதிக வாக்கியமோ, தத் த்வம் பதார்த்தங்களின் லக்ஷியார்த்தங்கட்குப் பரஸ்பர அபேத ஸம்பந்தம் இருக்கின்றது. எதனைத் தாதாத்மியம் என்றுங் கூறுவர். அந்த அர்த்தத்தினை விஷயமாக வுடைய ஞானத்தினை உண்டாக்குகின்றது. "ஸோயம் தேவதத்தன்" என்பதாதி வாக்கியம் போன்று. ஸம்பந்தம், அல்லது, விசிஷ்டமாகிய வாச்சியார்த்தத்தின் போதத்தினை யுண்டாக்குவ தில்லை, பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் விரோத மாகலின். சோதித தத் த்வம் பதார்த்தங்களின் அத்தியந்த ஏகத்வ ரூப இஷ்டமாகிய அர்த்தத்தின் லாப மின்மையின். இது வேதாந்தத்தின் ரீதியாம். இவ்வாறு வைதிக சப்தப் பிரமாணமோ ஸாக்ஷாத் பிரஹ்மாத்ம ஏகத்வ ஞானத்தினை யுண்டாக்குகின்றது. அந்ய பிரமாணங்கள் எல்லாம் அதன் ஸஹகாரி யென அறிக.

## (5) அர்த்தாபத்திப் பிரமாணம்.

5 உபபாத்தியத்தின் தரிசந, சிரவணத்தின் பின், அதன் அநுபபத்தியினால் உபபாதகத்தின் கல்பனை எதனால் உண்டாகின்

றது, அது வேறு வகைத்தாகப் பொருந்தாமை ரூப அர்த்தாபத்திப் பிரமாணமாம். எதனை அர்த்தாபத்திப் பிரமையின் கரண மென்றும், வியாபார மின்றிய அஸாதாரண காரண மென்றுங் கூறுவர். அதில் உபபாத்தியமாகிய பருத்தல் முதலியவற்றின் தரிசந சிரவணங்களின் அநுபபத்தி, பிரமாண அம்சமாய் இருக்கின்றது. அந்த அநுபபத்தியினால் உபபாதகமாகிய இராத்திரி போஜநாதிகளின் கற்பனை, அதனால் உண்டான பிரமை யம்சமாம். எங்ஙனம் ஒரு விவேகி கபடயோகியினது பருத்த சரீரத்தினைப் பார்த்து, அவன் பகல் இரவுகளில் போஜநம் செய்வதைப் பார்த்த தில்லை. அப்பொழுது அகோராத்ரம் போஜந மின்றிப் பருமையின் அஸம்பவத்தினை யறிந்து, அவன் யோகியின் இரகசியமான இராத்திரி போஜநத்தினைக் கற்பிக்கின்றான். அது திருஷ்ட அர்த்தாபத்திப் பிரமையாம். எங்ஙனம் "ஆத்மவித் சோகத்தினைக் கடக்கின்றான்" என்னும் சுருதியில், கேட்கப்பட்ட ஞாந மாத்திரத்தினால், சோகத்தினால் உபலக்ஷிக்கப்பட்ட அநர்த்த ரூப ஸம்ஸாரத்தின் நிவிர்த்தியின் உபபாத்தியம் உண்டாகின்றது. அது தனது உபபாதக மின்றிப் பொருத்த மின்றியதாய்த் தனது உபபாதக மாகிய ஸம்ஸாரத்தின் அநிர்வசநீயத் தன்மையினது கற்பனையைச் செய்விக்கின்றது. ஞாந மாத்திரத்திற்கு ஸத் வஸ்துவின் நிவாரகத் தன்மை பார்க்கப்படாமையின். இது சுருதார்த்தாபத்திப் பிரமையாம். விவேகிகளால் விசார காலத்தில், "நான் இருக்கின்றேன் நான் அறிகின்றேன், நிரதிசயப் பிரமையின் ஸ்தாநத்தினால் சுக ரூபமா யிருக்கின்றேன்" என்னும் பிரத்தியக்ஷ அநுபவத்தினால், தனது ஆத்ம ரூபப் பிரத்யகாத்மாவில் பார்க்கப்படும் சச்சிதாநந்த ரூபத் தன்மையாகிய உபபாத்யம், தனது உபபாதக மின்றிப் பொருந்தாதாய்த் தனது உபபாதகமாகிய ஆத்மாவின்கண் ணுள்ள ஸ்வபாவ சித்தப் பிரஹ்ம ரூபத் தன்மையினைக் கற்பனை செய்விக்கின்றது. இது திருஷ்டார்த்தாபத்தியாம். அதனால் அர்த்தாபத்திப் பிரமாணமும் இவ்வாறு பிரஹ்மாத்ம ஏகத்வ ஸாக்ஷாத்காரத்தில் உபயோக மாகின்றது.

(6) அநுபலப்திப் பிரமாணம்.

6 யோக்கிய உபலப்தியின் அபாவம் அநுபலப்திப் பிரமாணமாம். எதனை அநுபலப்திப் பிரமையின் கரண மென்றும், வியாபார



மின்றிய அஸாதாரண காரண மென்றுங் கூறுவர். அதனால் பிரதியோகி அநுயோகியின் ஞாநாதீநமாய் அபாவத்தினை விஷயமாக வுடைய பிரத்யக்ஷ பரோக்ஷ பேதத்தினால் பிரமா விர்த்தி யுண்டாகின்றது. அது அநுபலப்திப் பிரமையாம். யாண்டுப் பிரத்யக்ஷ யோக்ய தர்மி, யோக்யப் பிரதியோகி யாகின்றதோ, ஆண்டு அதன் அபாவத்தின் பிரத்தியக்ஷப் பிரமை யுண்டாகின்றது. எங்ஙனம் "பூதலத்தில் கடாபாவம் இருக்கின்றது", அல்லது, "கடாபாவமுடைய பூதலம் இருக்கின்றது" எனப் பிரத்தியக்ஷப் பிரமை யுண்டாகின்றது. அபாவத்தின் அநுயோகியாகிய பூதலமும், அதன் பிரதியோகியாகிய கடமும் பிரத்யக்ஷ ஞாநத்தின் விஷயமாகலின். யாண்டுப் பிரத்யக்ஷத்தின் அயோக்ய தர்மியும், அயோக்யப் பிரதியோகியும் இருக்கின்றதோ, ஆண்டு அதன் அபாவத்தின் பிரமையும் பரோக்ஷமாக உண்டாகின்றது. எங்ஙனம் ஆப்த வாக்கிய சிரவணத்தின் பின் கடத்தில் யக்ஷசு, அல்லது, பிசாசின் அத்தியந்தாபாவத்தினை விஷயமாக வுடைய பரோக்ஷப் பிரமை யுண்டாகின்றது. அந்த அநுபலப்திப் பிரமாணமும், விசார சீலனாகிய விவேகியினிடத்தில், பிரஹ்மாத்மாவி லுள்ள பிரபஞ்சத்தின் த்ரைகாலிக அத்தியந்தாபாவம் சுருதிப் பிரமாண சித்தமா யிருக்கின்றதோ, அதனை விஷயமாக வுடைய பிரத்தியக்ஷப் பிரமையினை உண்டாக்குவதாய் வேதாந்த உபயோகியாய் இருக்கின்றது. (6)

(மஹா வாக்கியப் பிரமாண ரூப மன்றி வேறு எல்லாப் பிரமாணத்திற்கும் அநேக கிரந்தங்களில் வியாவகாரிக பிரமையின் ஜநகத் தன்மை கூறப்பட்டிருக்கின்றதா மாயினும், ஈண்டுக் கூறியவாற்றால் மஹாவாக்கிய ஜந்ய அபரோக்ஷ ஞாநத்திலும், சிற்சில அம்சவாயிலாய் எல்லாப் பிரமாணங்கட்கும் உபயோகம் இருக்கின்றதென வறிக.)

5—13 ஷட் சம ஆதி.

ஸம ஆதி ஆறினைக் கூறுவாம்:— ஸமம் தமம் உபரதி திதிக்ஷை ஸமாதாநம் சிரத்தை என்னும் பெயரினை யுடைய ஸமாதி அறு வகைத்தாம். அவற்றின் இலக்ஷணம் முன்னர்க் கூறப் பட்டிருக்

கின்றது. புநருக்தியின் (கூறியது கூறல் என்னும்) பயத்தினுல் மீண்டும் கூற வில்லை.

(அவைகள் நான்கு சாதநங்களில் அடக்கமாய் வேதாந்த சிரவணம் முதலியவற்றில் அதிகாரிகளின் அஸாதாரண விசேஷண மாகச் சுருதியில் கூறப்பட்டிருகின்றது. அதனுல் சிரவணத்தினை இச்சிக்கும் புருஷன் யத்தநத்தால் தன்னிடத்தில் இவற்றினைச் சம்பாதநஞ் செய்க.)

## 5—14. ஜிஹ்வைத் தன்மை யின்மை யாதி ஆறு.

அஜிவ்ஹைத் தன்மை முதலிய ஆறு தர்மங்களைக் கூறுவாம்:— அஜிவ்ஹத்வம் (நாக் கின்றிய தன்மை) கண்டகத் தன்மை முதலிய பேதத்தினுல் சந்நியாசியின் தர்மம் அறு வகைத்தாம். அவற்றின் லக்ஷண வாசகமாய ஸ்மிருதியின் வசநத்தினைக் கூறுவாம். "பிக்ஷு (யதி) அஜிவ்ஹன் கண்டகன் பங்கு (நொண்டி) அந்தன் பதிரன் (செவிடன்) முக்தன் (மூடன்) ஆய், எதனுல் ஆறு தர்மங்களின் தாரணத்தினுல் பந்தநத்தினின்றும் விடுபடுகின்றுன். முக்த ஞகின்றுன். இதில் ஸம்சய மில்லை." என்னும் வசநம் ஒரே காலத்தில் ஆறு தர்மங்களின் வாசகமாய் இருக்கின்றது.

### (1) அஜிவ்ஹன்.

(1) இப்பொழுது ஒவ்வொரு லக்ஷணத்தினைப் போதிக்கும் வசநத்தினைக் கூறுவாம்:— "எந்தச் சந்நியாசி, பிராரப்தத்தினுல் வந்த சாரம் சார மற்ற அந்நத்தினைப் புஜித்துக் கொண்டும், இது இஷ்டம் இது இஷ்ட மில்லை என விகல்பஞ் செய்யாது, எவ்வாற் றுனும் ஸந்துஷ்டனு யிருக்கின்றுன். ஹிதம் ஸத்தியம் அல்பவசநங் களை வியவஹார காலத்தில் கூறுகின்றவனை, ஆசாரியர் அஜிவ்ஹன் என்று கூறுகின்றனர்." என.

### (2) கண்டகன்.

(2) "எந்த யதியானவன், இன்று பிறந்த ஸ்திரீயினையும், அங்ஙனமே பதி ஞறு வருஷ முடைய ஸ்திரீயினையும், அங்ஙனமே நூறு வருஷ முடைய ஸ்திரீயினையும், பார்த்து விகார மற்றவனு



யிருந்து காமாதி விகாரங்களை யடையாது இருக்கின்றுன், அவன் கண்டகன் எனப்படுகின்றுன்." என.

### (3) பங்கு.

(3) "எந்த யதியானவன், மல மூத்திரங்களை விடுதற் பொருட்டு, அல்லது பிக்ஷையின் பொருட்டே ஸஞ்சரிக்கின்றுன். யோசனை தூரத்தினின்றும் அதிகமாக எவ்விதத்தும் செல்லாது இருக்கின்றுன், அவன் பங்கு எனப்படுகின்றுன்." என.

### (4) அந்தன்.

(4) "எவனது சக்ஷு இந்திரியம் இருந்தும் சென்றும் நான்கு யுக (பதி ஞறு அஸ்தங்களினுல் அளவிடப் பட்ட நான்கு தண்டம்) பரிமாணப் பிருதிவியினை விட்டு அதிகமாகச் செல்லாதி ருக்கின்றது. அந்தப் பரிவிராட்டாகிய சந்நியாசி அந்தன் எனப்படுகின்றுன்." என.

### (5) பதிரன்.

(5) "எந்தச் சந்நியாசி, ஹிதாஹித வசநங்களையும், அங்ஙனமே ஸுகத்தைக் கொடுக்கும், துக்கத்தினைக் கொடுக்கும் வசநங்களையும், கேட்டும் கேளாதவ னுகின்றுன், அதனுல் உண்டான ராக த்வேஷ விர்த்திகளை யடைவ தில்லை. அவன் நல்ல பதிரன் எனக் கூறப் படுகின்றுன்." என.

### (6) முக்தன்.

(6) "யத்தந மின்றி, ஸ்திரீ தநம் முதலிய விஷயங்களின் ஸந்நிதாநம் உண்டாயின், எந்த ஸந்நியாசி, குறையாத ஸாமர்த் தியம் உடைய இந்திரிய முடையவனு யிருந்தும், தூங்குபவன் போன் றிருக்கின்றுன். அந்த விஷயங்களில் ஆசையும், ஏழ்மையும் அடைவ தில்லை என்பது பொருளாம். அவன் ஆசாரியர்களால் முக்தன் எனப்படுகின்றுன்." என.

(இந்த ஸ்மிருதியினுல் கூறப்பட்ட அறு வகைத்தாய தர்மங் கள் ஜிஜ்ஞாஸுவினிடத்து யத்நத்தால் ஸாத்திய மாகின்றது, வித்வானிடத்தில் ஸ்வபாவ சித்தமாய் இருக்கின்றது.)

5—15 ஷட் பிராந்தி.

ஆறு பிராந்தியினைக் கூறுவாம்:—குலம் கோத்திரப் பிராந்தி முதலிய பேதத்தினல் பிராந்தி அறு வகைத்தாம்:—

(1) குலப் பிராந்தி.

(1) அநாத்மாவாகிய தேஹத்தில் தாதாத்மிய அத்தியாசத்தினல், நான் மாளவம் நான் கர்நாடகம் நான் திராவிடம் முதலிய குலங்களில் பிறந்திருப்பதனல், நான் உத்தமன யிருக்கின்றேன் என்று அந்தக் கரணத்தி லுண்டாம் அபிமாநமும், அதனைக் கூறுதல் ரூப வியவஹாரமும் குலப் பிராந்தியாம்.

(2) கோத்ரப் பிராந்தி.

(2) விசுவாமித்ர பிருகு வசிஷ்டர் முதலியோர் எனது கோத்திரமாம். என்று உண்டாம் அபிமாநமும், வியவஹாரமும் கோத்திரப் பிராந்தியாம்.

(3) ஜாதிப் பிராந்தி.

(3) நான் பிராஹ்மணன் க்ஷத்திரியன் வைசியன் சூத்ரன் இது எனது கர்மம் என்று உண்டாம் அபிமாநமும், வியவஹாரமும் ஜாதிப் பிராந்தியாம்.

(4) வர்ணப் பிராந்தி.

(4) சுருதி ஸ்மிருதிகளில் கூறப்படும் நான்கு வர்ணமும், வர்ணங்களின் ஸம்ஸ்கார பேதங்களும், அந்திய ஜாதிகளின் பேதங்களுமாகிய அவ்வெல்லாவற்றுள்ளும் நான் சிரேஷ்டன் பூஜ்யன யிருக்கின்றேன். பிராஹ்மண னதலின். வேதாத்தியயநாதி தனது தர்மத்தில் இருத்தலின். "பிராஹ்மணன் ஜந்மத்தினலேயே எல்லோருக்கும் குருவா யிருக்கின்றான்" என்னும் வசநத்தினல், என்று உண்டாம் அபிமாநமும், வியவஹாரமும் வர்ணப் பிராந்தியாம்.

(5) ஆசிரமப் பிராந்தி.

(5) பிரஹ்மசர்யம் கிருஹஸ்தம் வாநப்பிரஸ்தம் ஸந்நியாஸம் என நான்கு ஆசிரமங்கள் சுருதி ஸ்மிருதிகளில் கூறப்பட்டிருக்



கின்றன. அவற்றுள், உத்தம சந்நியாஸ ஆசிரமி நான், சந்நியாசிகளிலும் தண்டதாரி பரமஹம்ஸ ஸந்நியாசியாய் நான் சிரேஷ்டன யிருக்கின்றேன். விவாக மின்றி யிருக்கின்றேன். விரக்தன யிருக்கின்றேன். எனது உத்தம மட மிருக்கின்றது என்பன வாதி அபிமாநமும், வியவகாரமும் ஆசிரமப் பிராந்தியாம்.

(6) நாமப் பிராந்தி.

(6) விசுவேசுவரர் முதலிய நான்கு ஆசாரியர்களால், கிரி புரி வநம் பர்வதம் முதலிய பேதத்தினல் செய்யப்பட்ட தச நாமத்தில், நான் பாரதி என்னும் உத்தம நாம முடையவன யிருக்கின்றேன். அல்லது கிருதாந்தம் (வினைச் சொல் முடிவு) தத்திதாந்தம் இன்றி லோகத்தில் செய்யப்படும் நாமங்களினின்றும் கிருதாந்தம் தத்திதாந்தம் உடைய எனது நாமம் சிரேஷ்டமா யிருக்கின்றது. "கிருதாந்த, அல்லது தத்திதாந்த நாமத்தினைச் செய்க" என்னும் மஹாபாஷ்யத்தின் வசநத்தினல், இவ்வாறு உண்டாம் அபிமாநமும், வியவகாரமும் நாமப் பிராந்தியாம். அநாத்ம ரூபமாம். ஆத்ம ஞாநத்தின் அபாவத்தினல்.

(எதனல் குலம் கோத்திரம் ஜாதி வர்ணம் ஆசிரமம் முதலியன எல்லாம் தேக சம்பந்தியாகிய தர்மங்கள் ஆகின்றன. ஜீவாத்மாவோடு இவற்றிற்கு ஸம்பந்தம் இல்லை. அது குலம் கோத்திரம் முதலியவற்றை கடந்து இருத்தலின். ஆதலால் இவற்றிற்குப் பிராந்தி யெனப்படுகின்றது. அதனல் புருஷன் ஸத் சாஸ்திரம் ஸத்துக்களின் ஸமாகமத்தை யுடையவனயினும், ஸர்வாசிரமம் முதலிய கல்பனைக ளின்றிய ஆத்மாவினை அறியாதிருக்கின்றான். அநாத்ம தர்மத்தினைத் தன்னிடத்தில் பிராந்தியால் ஸத் புத்தியினல் கிரஹிக்கின்றான். மித்தையாகவே தன்னிடத்தில் மஹத் தன்மை, பூஜ்யத் தன்மைகளின் அபிமாநத்தைச் செய்கின்றான் அவன் வேதாந்த விசாரத்தில் அதிகாரியாவ தில்லை. அனவது விருப்பம், மநோ ராஜ்ஜியம் போன்று மித்தையே யாம்.)

## 15—16 ஷட் ரசம்.

ஆறு ரஸத்தினைக் கூறுவாம்:—மதுரம் புளிப்பு முதலிய பேதத்தினால் ரஸம் ஆறு வகைத்தாம். சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தமென்னும் பேதத்தினால் முற்புகன்ற ஐந்து விசேஷ குண ஆகாசாதி திரவ்யங்களை ஆசிரயித்திருக்கின்றன. அவற்றுள் ஒன்று ரஸ குணமாம்.

### (1) மதுர ரசம்.

(1) மாம்பழம் சர்க்கரை முதலிய திரவ்யங்களில் இனிப்பாயிருப்பது மதுர ரஸம் எனப்படுகின்றது.

### (2) ஆம்ல ரசம்

(2) புளி எலுமிச்சம் பழம் முதலியவற்றில் புளிப்பு ரஸமுண்டாகின்றது. அது ஆம்ல (புளிப்பு) ரஸமாம்.

### (3) திக்த ரசம்

(3) கிராம்பு முதலிய திரவ்யங்களில் உரைப்பு ரஸம் இருக்கின்றது. அது திக்த (உரைப்பு) ரஸமாம்.

### (4) கடு ரசம்

(4) மிளகு முதலிய திரவ்யங்களில் கௌடா (கார) ரஸ மிருக்கின்றது. அது கடு ரஸமாம்.

### (5) கஷாய ரசம்

(5) மஞ்சள் முதலிய திரவ்யங்களில் கஸாரா (துவர்ப்பு) ரஸ மிருக்கின்றது. அது கஷாயரஸமாம்.

### (6) க்ஷார ரசம்

(6) உப்பு முதலிய திரவ்யங்களில் உவர்ப்பு ரஸ மிருக்கின்றது. அது க்ஷார (உவர்ப்பு) ரஸமாம்.



(நியாய மதத்தில் எல்லா விருக்ஷங்களையும், அதன் பலன்களையும் பிருதிவி ரூபமாகவே கூறுகின்றனர். அதனால் பிருதிவிக்கே ஆறு வகை ரஸம் கூறப்பட்டிருக்கின்றது.)

வேதாந்த ரீதியானே பிருதிவியில் நிச தர்மம் கந்தமாம். அந்நியமாகிய ரஸம் முதலிய நான்கு தர்மங்களும் காரணத்தின் சம்பந்தத்தினால் பிராப்தமாம். ஜலத்தில் நிஜ தர்மம் ரஸமெனப்படுகின்றது. சப்த ஸ்பரிச ரூபம் என்னும் மூன்று தர்மங்களும் காரணத்தின் ஸம்பந்தத்தினால் தோன்றுகின்றது என அறிக. இந்த ரஸ ரூப விஷயம் எங்ஙன மிருக்கின்றது:-அகாதமான ஜலத்தி லுள்ள மீன் முதலியவைகளும் எதன் ஆசையினால் தூண்டிலை ஸஹிக்கின்றன. அங்ஙனமே அநந்த விஷய லம்பட ஜீவனும், நாக்கின் ரஸத்தின் ஆசையினால் மதுராதி ரஸங்களோடு கூடிய போஜநத்தின் பொருட்டுப் பிரதிதிநமும் யத்நஞ் செய்கின்றான். பகவத்பஜனை முதலியவற்றில் விமுகனாய் இருக்கின்றான் ஆதலால் ஜிஜ்ஞாஸுக்கள் கிடைத்தவற்றில் ஸந்தோஷத்தோடு கூடியிருத்தல் உசிதமாம். நாவின் ரஸத்தின் அடைவின்பொருட்டுத் தீநனாதல் உசிதமல்ல. எதனால் ஜிஹ்வேந்திரியத்தின் ஜயமே ஸர்வ இந்திரியங்களின் ஜயமெனச் சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அந்தச் சாஸ்திர மிதுவாம்:—"அந்யேந்திரியங்களை ஜயிக்கப்பட்ட புருஷன் எதுவரை ரஸநேந்திரியத்தினை ஜயிக்க வில்லையோ, அதுவரை ஜிதேந்திரிய னாவ தில்லை. எதனால், ரஸநேந்திரியத்தினை ஜயித்தவன் ஸர்வேந்திரியங்களையுஞ் ஜயித்தவ னாகின்றான்" என.

## 5—17—ஈசுவரனது ஷட் ஐசுவரியம்

ஈசுவரனது பக (ஐஸ்வரிய) ரூப அஸாதாரண தர்மத்தினைக் கூறுவாம்:- ஐசுவர்யம் முதலிய பேதத்தினால் ஈசுவரனிடத்தி லுள்ள பகம் ஆறு வகைத்தாம்.

### (1) ஐசுவரியம்.

(1) எல்லா அணிமாதி ஸித்தியும், அல்லது எல்லா ஸாமர்த்தியமும் ஐசுவரிய ரூப முதல் பகமாம். அது ஸம்பூர்ண ஸித்தி

ஸம்பூர்ண ஸாமர்த்தியம், ஜகத் உற்பத்தி முதலிய செய்வதனால், ஸர்வ சக்தியினை யுடைய ஈச்வரனிடத்தில் ஸ்வாபாவிகமாகவே சித்தமா யிருக்கின்றது. பிரஹ்மாதிகளும், ரிஷியாதிகளும், அங்ய வற்றில் ஸாமர்த்தியமும், சித்தியும் உடையவர்களா யிருக்கின்றனர். அது யத்ந சாத்தியமாய் ஈசுவரனால் கொடுக்கப்பட்டதாம், ஆதலால் எல்லா மெனக் கூறப்படுவ தில்லை. புராணங்களில், "ஈசுவர மாயையினைப் பிரஹ்மாதிகளுக்கு மோஹஞ் செய்வதாகக் கூறப்படுகின்றது" என.

(2) தர்மம்.

(2) "பிரவிர்த்தி, நிவிர்த்தி ரூபம் என இரண்டு மார்க்கங்கள் இருக்கின்றன. அதனின்று உண்டாய இரு வித தர்மங்களும், ஸ்வர்க்க மோக்ஷப் பிராப்தியின் ஹேதுவா யிருக்கின்றது. அதுவும் ஸம்பூர்ணம் ஈசுவரனிடத்திலேயே இருக்கின்றது. அவன் தனது நிசுவாஸ ரூப வேத வாயிலாய் இரண்டு மார்க்கங்களின் பிரவர்த்தகனாகலின்." என.

(3) யசஸ்.

(3) யசஸ் என்பது வியபிசார மின்றிய கீர்த்தியாம். அது பக்தவத்ஸலாதி அநந்த கல்யாண குண அதிகரணத் தன்மையால் மூன்று லோகத்தின் பிரக்கியாதியாம். அது எல்லாமும் ஈசுவரனிடத்திலேயே யிருக்கின்றது. அங்யர்களிடத்தில் அவரது கிருபையின் அதீநமா யிருத்தலின்.

(4) ஸ்ரீ.

(4) ஸ்ரீ என்பது ஆபத்துக்களின் ஸம்பந்த மின்றி வியபிசார மற்ற ஸம்பத்தாம். அது எல்லாமும் ஈசுவரனிடத்திலேயே யிருக்கின்றன. ஸர்வ ஸம்பத்தின் ஹேதுவாய மஹா மாயையாகிய ஆதி சக்தி ரூப லக்ஷ்மியின் பதியாகலின். எவனது கிருபா கடாக்ஷத்தின் பொருட்டுப் பிரஹ்மாதிகளும் தபஞ் செய்கின்றனர். அதனால் அங்யரிடத்தி லுள்ள ஸம்பத்து ஒரு காலத்ததும், ஈசுவரனது கிருபையின் அதீநமுமா யிருக்கின்றது.





(5) ஸர்வஞ்ஞத்வம்.

(5) ஸாமாங்ய விசேஷ ரூப இரு வித நாச மற்ற எல்லா ஞாநமும் ஈசுவரனது நிஜ தர்மமா யிருக்கின்றன. அவனே ஸ்வதந்திர ஸர்வஜ்ஞனாகலின். அங்யர்கள் ஸர்வஜ்ஞ கல்ப(சமாந)ராகலின்.

(6) வைராக்கியம்.

(6) விஷயத்தில் ராக மின்மை ரூப வைராக்கியமும், எல்லாம் ஈசுவரனிடத்திலேயே யிருக்கின்றன. அவனே ஸ்வபாவ சித்த ஆப்த காம, ஆத்ம ராம னாகலின். அங்யர்களுக்கோ வைராக்கியம் ஈசுவரப் பிரஸாதத்தால் யத்ந ஸாத்திய மாகலின்.

"எல்லா ஐசுவரியங்களும், எல்லாத் தர்மங்களும், எல்லா யஸஸ்ஸும், எல்லா ஸ்ரீயும், எல்லா ஞாநமும், எல்லா வைராக்கியமும் என்னும் ஆறு தர்மங்களுக்குப் பக மெனப் பெயராம்" என்னும் ஸ்மிருதியின் வசநம் ஈசுவரனது ஆறு தர்மத்தில் பிரமாணமா யிருக்கின்றது. பகத்தினை யுடையவனே பகவா னாகலின்.

5—18. ஈசுவரனது ஷட் ஞாநம்.

ஈசுவரனது அறு வித ஞாநத்தினையும் பகம் என்கின்றனர் :— உத்பத்தி ஞாநம் முதலிய பேதத்தினால் ஈசுவரனது அறு வகைத்தாய ஞாநம் பக மெனப்படுகின்றது.

(1) உத்பத்தி ஞாநம்.

(1) ஜீவர்களின் பல ஸந்முகமான கர்மத்தின் பரிபக்குவ வசத்தினால், சிருஷ்டி காலத்தில், ஈசுவரன் பூர்வ கல்ப அநுஸாரமாக உண்டாம் ஜகத்தின், அக்கினியினின்று விஸ்புலிங்கம் போன்று, உதயமாம். உதயம் என்பது பூர்வம் போன்று நாமம் ரூபம் என்னும் இரண்டினையும் வெளிப்படுத்தலாம் அது உத்பத்தியாம்.

(2) நாச ஞானம்.

(2) பிராரப்த கர்ம பல க்ஷயத்தின் பின், ஜீவர்களின் ஸர்வ உபாதிகட்கும் ஈசுவரனிடத்தில் லய முண்டாகின்றது. அது நாச மெனப்படுகின்றது.

(3) ஆகதி ஞானம்.

(3) புண்ய பாபத்தின் பல ரூப ஸ்வர்க்க நரக ஸம்பந்தி, ஸுக துக்கங்களின் போகத்தின் பின், ஜீவர்கட்கு ஸ்திதி (இருத்தல்) அவஸ்தா ரூப ஸம்ஸாரத்தில் மீண்டும் வருதல் உண்டாகின்றது. வருதல் என்பது பல ஸந்முகமாகிய ஸஞ்சித கர்ம அநுஸாரம் உயர்வு தாழ்வான யோநியினைக் கிரஹித்தலாம். அது ஆகதியாம். (வருதலாம்).

(4) கதி ஞானம்.

(4) பிராரப்த கர்ம பல போகத்தின் பின், ஸ்திதி (இருத்தல்) அவஸ்தையில், ஜீவர்கட்கு மரண முண்டாகின்றது. மரண மென்பது இப்பொழு துள்ள சரீரத்தின் தியாக பூர்வகம் தன் கர்ம பல போகத்தின் பொருட்டு லோகாந்தரம் செல்லுதலாம். அது கதியாம். (செல்லுதலாம்).

(5) வித்தை ஞானம்.

(5) வித்தை யென்பது இஷ்ட தேவதைகளின் உபாஸனை, அல்லது, யதார்த்த தத்துவ ஞானமாம். எது அதிகாரி புருஷர்களால் செய்யப்படுகின்றது. ஸமம் முதலிய சாதந அநுஷ்டாநத்தினல் புருஷர்களால் எது அடையப்படுகின்றது. அது வித்தையாம்.

(6) அவித்தை ஞானம்.

(6) அவித்தை யென்பது கர்மமாம். எது ஜீவர்களால் அதிகார அநுசாரம் செய்யப்படுகின்றது. அல்லது அவித்தை யென்



பது அஜ்ஞானமாம். எது ஜீவர்களிடத்தி லுள்ள பிரஹ்ம ஸ்வரூபத்தினை மறைக்கின்றது. அல்லது அவித்தை யென்பது காரியா வித்தியா ரூப நான்கு வித விபரீத ஞானமாம். அது அவித்தையாம்.

இந்த ஜீவர்களின் ஸம்பந்தியாகிய ஆறு தர்மங்களின் நல்ல ஞானம் எவனுக்கு இருக்கின்றதோ, அந்த ஈசுவரன் பகவா னென்று கூறப்படுகின்றான். அவனே சர்வ சக்தி யுடையவனும் ஸ்வதந்திர ஸர்வஜ்ஞ னுகலின். மற்ற எல்லோரும் ஈசுவரத் தன்மை யின்றி, ஸ்வதந்திர மின்றி, ஸர்வஜ்ஞத் தன்மை யின்றியவர்களா யிருத்தலின். ஆண்டு ஸ்மிருதி :— "பூதங்களின் உத்பத்தி மரணம் ஆகதி கதி வித்தை அவித்தை யென்னும் ஆறு பதார்த்தங்களை எதார்த்தமாக அறிபவன் பகவான் எனப்படுகின்றான். பகவத் சப்த வாச்சியம் என்பது பொருளாம்". என.

(எப்புருஷன் எல்லா ஞானாதிகளோடு கூடி யிருக்கின்ற ஈசுவரனது உபாஸனை, அதன் ஆகார விருத்திப் பிரவாக ரூப, அல்லது அதன் ஆராதந, அர்ச்சநாதி ரூப பக்திகளைச் செய்வ தில்லை, எந்த ஈசுவரன் பக்தியால் பத்திர புஷ்பாதி ஸ்வல்ப திரவ்யத்தின் ஸமர்ப்பணத்தினுலும், கேவல கிருபா கடாக்ஷத்தினுலும் அல்லது தனது சக்தி பதிதலால் பக்தர்களின் போக மோக்ஷ ரூப இஷ்டத்தின் ஸம்பாதநத்தைச் செய்கின்றான். எங்ஙனம் துருவன் முதலியோர் இஷ்டத்தினை அடைந்தனர். அவர் ஆப்த காமர் ஆகலின். இவ்வித ஈசுவரனை விட்டு க்ஷுத்ர (அல்ப) பலத்தின் பொருட்டு, க்ஷுத்ர தேவதைகளின் சேவையைச் செய்கின்றனர். எங்ஙனம் தேவதை சேவையின் அநுஸாரமாகவே பலத்தினைக் கொடுக்கின்றது. ஒருகால் அவவிக்கம் உண்டாயின் மாறுய் தன் பக்தனைக் கொல்லுகின்றது. அவனுக்கு ஒரு காலத்த துச்ச பலமே கிடைக்கின்றது. ஆதலால் பாக்கிய முடைய ஜீவர்கள் ஈசுவரனது ஆராதநமே செய்க. எதன் ஆராதநத்தில் பலத்தின் நாசமும், பிரத்தியவாயத்தின் உத்பத்தியும், அங்கத்தின் விபரீதத் தன்மை யிருப்பினும் உண்டாவன வல, "இந்த பகவத் ஆராதந ரூப தர்மத்தில் பலத்தின் நாசம்

உண்டாவ தில்லை. பிரத்தியவாயம் உண்டாவ தில்லை. ஆதலால் இதன் தர்மம் ஸ்வல்பமாயினும் பெரும் பயத்தினின்றும் இரக்ஷிக்கும்.", "ஹே! ராஜன்! எந்தப் பகவத் ஆராதநாதி ரூப பாகவத தர்மங்களை நரன் ஆசிரயத்தலால் ஒருகாலத்தும் பிரமாதி ஆகின்ற தில்லை. நேத்திரத்தினை (சுருதி, ஸ்மிருதியினை) நிமீலநம் செய்து கொண்டு (மூடிக் கொண்டு) இத் தர்மத்தில் சென்றனனாயினும் ஸ்கலநமாவ தில்லை. பதந மில்லை." என்னும் கீதை பாகவதங்களின் பிரமாணத்தினால். பிரமாதி யென்பது விக்நங்களால் நாசமாகா திருத்தலாம். நேத்திர நிமீலந மென்பது பகவத் ஆராதந ரூப தர்மத்தின் உண்மையினை அறியாமையாம். செல்லல் என்பது மிகுந்த இச்சையினால் சிலவற்றை விட்டுச் சிலவற்றை அதி சீக்கிரம் அநுஷ்டித்தலாம். ஸ்கலந மென்பது பாவ முண்டாகாமையாம். பதநம் என்பது பலத்தினால் நஷ்ட மின்றி யிருத்தலாம்.

## 5—19 ஷட் அநாதி பதார்த்தம்.

வேதாந்தத்திற் கொள்ளப்பட்ட ஆறு அநாதி பதார்த்தங்களைக் கூறுவாம்:—(1) ஜீவன் 2 ஈசுவரன் 3 சுத்த சேதநம் 4 அஞ்ஞாநம் 5 அஞ்ஞாந சுத்த சேதநங்களின் ஸம்பந்தம் 6 ஜீவேசுவரர்கட்குச் சுத்த சேதநத்தோடு பேதம் என ஆறு பதார்த்தங்கள் அநாதியாம். "ஜீவேசுவரர்கள் இருவர், விசுத்த சித், ஜீவேசுவரர்களின் பேதம், அவித்தை, சேதந அவித்தைகளின் சம்பந்தம் என்னும் ஆறும் எமது மதத்தில் அநாதியா யிருக்கின்றது" என்னும் பிரமாணத்தினால். அவற்றுள், சுத்த சேதநம் அன்றி வேறு ஐந்திற்கும் மகாவாக்கியத்தினால் ஜநிக்கப்பட்ட பிரஹ்ம ஞாநத்தினால் நிவிர்த்தியும் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால் அது அநாதி நாசமா யிருக்கின்றது. சுத்த சேதநமோ அநாதி அநந்தமாயிருக்கின்றது.

## 1—2 ஜீவ ஈசுவரன் அநாதி.

(1-2) ஜீவேசுவரன் என்னும் இருவரும் அநாதியா யிருக்கின்றனர், அவர்களின் உபாதாந நிமித்த காரணத்தினைப் பிரதிபாதிக்கும்



பிரமாண மின்மையின். "ஜீவேசுவரர் என்னும் இருவரையும் ஆபாஸமாக மாயை செய்கின்றது" என்னும் சுருதியினால், ஜீவேசுவரர்கள் அத்வைத வாதத்திலும் மாயிக ரென்று கூறப் படுகின்றதாமாயினும், மாயிகர் என்னும் பதம் காரியத் தன்மை அர்த்த முடையதல்ல. பின்னையோ மாயையின் ஸ்திதியின் அதீநமாய் ஜீவேசுவரர்களின் ஸ்திதி யிருக்கின்றது என்பதே மாயிகர் என்னும் பதத்தின் வாஞ்சிதார்த்தமாம். ஆதலால் அவித்தை போன்று ஜீவேசுவரர்க ளென்னும் இருவரும் அநாதியா யிருக்கின்றனர். அதிஷ்டாந சேதநத்தில் ஜீவேசுவர பாவமானது சுத்த சேதநத்தோடு அநாதி அவித்தையின் அநாதி சம்பந்த அதீநமா யிருத்தலின். இருவரும் உத்பத்தி யுடையவராயின் கிருத நாசம் அகிருதாப்பியாகமம் (செய்த வினை அழிந்து செய்யாத வினை தோன்றிற்று) வரும். ஈசுவர அநந்தத் தன்மைகளின் பிராப்தியினால். முற்புகன்ற சுருதியும் ஜீவேசுவர பாவம் ஒரு சுத்த சேதநத்தில் மாயாதீநம் என்று கூறுகின்றது, அதன் காரிய மென்று கூற வில்லை. ஏனெனின் அவைகள் அவித்தையின் அந்வய வ்யதிரேகங்களின் அநுஸாரியாகலின். அதனால் அதிஷ்டாந ஸாக்ஷாத்காரத்தின் பின் அவித்தையின் பாத முண்டாய் ஜீவேசுவர பாவமே நாச மாகின்றன. அவற்றின் ஸ்வரூபமாகிய அதிஷ்டாந சேதநம் அந்த முடையதாவ தில்லை. பின்னையோ அநந்தமா யிருக்கின்றது. கொள்ளாக்கால் (அவித்தை யின்றி) அதற்குக் காரிய காரணம் ஆதல் பொருந்தாது. "இந்தப் பிரஹ்மம் அபூர்வ (அகாரண) மா யிருக்கின்றது. அநபர (அகாரிய) மா யிருக்கின்றது", "சேதநம் உத்பத்தியாவ தில்லை. மரிப்பது மில்லை", "ஹே அர்ஜுந! அவ் வாத்மாவினை நீ அவிநாசி யென வறி". என்பதாதி சுருதி ஸ்மிருதிகளின் விரோதமாம். எப்பொழுது இரண்டும் ஆதியை யுடையதாகும், அப்பொழுது அவற்றிற்கு உற்பத்திக்குப் பூர்வமும், த்வம்ஸத்திற்குப் பின்னரும் அபாவத்தினால், ஈசுவர உபாஸனையை விதிக்கும் சுருதி வாக்கியம் எல்லாம் அநர்த்தகமாம், அதிகாரி உபாஸ்யங்களின் அபாவத்தினால், அக்நியாதா த்யேயம் ஞாதா ஞேயம் என்னும் இரண்டின் அபாவத்தி... ஜீவனது விஸ்புலிங்கம் (பொறி) முதலிய திருஷ்டாந்தங்களினால்

உற்பத்தி லயங்களைப் போதிக்கும் சுருதி வாக்கியங்கட்கு, ஜீவோபாதியாகிய தேஹ அந்தக்கரணங்களின் உதயமாய், ஜீவனுக்கு ஆவிர்ப்பாவமும், லயமும் உண்டாய், ஜீவனது திரோபாவத்தில் தாத்பரியமுடையதா யிருத்தலின். இவ்விருவருக்கும் அநாதித் தன்மை நையாயிகர் முதலிய பரீக்ஷகர்களாலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் இதில் விவாதம் ஒன்று மில்லை.

### 3. சுத்த சேதநம் அநாதி.

(3) எதனால் சுத்த சேதநமோ, அநாதி அஞ்ஞானத்தினால் செய்யப்பட்ட ஜீவேசுவர பாவம் முதலிய ஸகல கல்பனைக்கும் அதிஷ்டாநமா யிருக்கின்றது. அதனால் எல்லாவற்றினும் பூர்வம் ஸ்வயம் சித்தமாயிருக்கின்றது. ஸர்வ கல்பித பதார்த்தங்களின் பாதத்திற்கு அவதிபூத மாயிருக்கின்றது. ஆகலால் எஞ்சி யிருக்கின்றது. அதன் காரணத்திற்கும், நாச ஸாமக்கிரியைக்கும், சுருதி ஸ்மிருதிகளில் நிரூபிக்கப்படா திருக்கின்றது. அதனால் பகுப் பற்ற சுத்த சேதநம் அநாதி அநந்தமா யிருக்கின்றது. "ஸத்திய ஞாநாநந்த ரூபம் பிரஹ்மமாம்" என்பதாதிப் பிரமாணத்தினால்.

### 4—5 அவித்தை அதற்குச் சேதந சம்பந்தம். அநாதி.

(4-5) அங்ஙனமே அவித்தையும், அதற்கு சுத்த சேதநத்தோடுள்ள ஸம்பந்தம் என்னும் இரண்டும் அநந்தமா யிருக்கின்றது. அவற்றிற்கு ஆதி யுடைமையாயின் அவற்றிற்குக் காரணங் கூறுதல் யோக்யமாம். அக்காரணம் சுத்த சேதநமா? அஞ்ஞாநமா? வேறு அந்யமா? ஆண்டு முதற் பக்ஷம் பொருந்துவ தில்லை. ஏனெனின் சுத்த சேதநம் அஞ்ஞாந ஸம்பந்தத்தின் பூர்வம் கூடஸ்த அவிக்கிரிய மாகலின். காரணத் தன்மை ஸம்பவியாமையின். துவிதீய பக்ஷத்திலும் அஞ்ஞாநமாகிய தானே தனது உற்பத்தியிலும், சுத்த சேதநத்தோடு தனது சம்பந்தத்திலும் காரணமா? இரண்டாவது அஞ்ஞாநமா? ஆத்மாசிரய மாகலின் முதற் பக்ஷம் பொருந்தாது. தனது உற்பத்தி ஸம்பந்தங்களின் பொருட்டுத் தனது அபேக்ஷை யிருத்தலின், இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. இரண்டாவது



அஞ்ஞாநத்திற்கும் பூர்வம் போன்று தனது காரணத்தின் அபேக்ஷை யுண்டாம். அதன் காரணம் தானா? முதல் அஞ்ஞாநமா? தான் எனின், பூர்வம் போன்று ஆத்மாசிரய முண்டாம். முதல் அஞ்ஞாநமெனின், அந்யோந்ய ஆசிரயமாம். பரஸ்பர அபேக்ஷையாகலின், இத்தோஷ நிவாரணத்தின் பொருட்டு மூன்றாவது அஞ்ஞாநத்தைக் கூறின், அதற்கும் தனது உத்பத்தியின் பொருட்டு முதலஞ்ஞாநத்தின் அபேக்ஷை யிருத்தலின், சக்கிரிகாப் பிராப்தி யுண்டாம். அதன் நிவாரணத்தின் பொருட்டு நான்காவது அஞ்ஞாநத்தினை அங்கீகரிக்கின், அநவஸ்தா ரூப தோஷம் உண்டாம். மூன்றாவது ஆகிய அந்ய பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின் ஜீவேசுவர பாவம், ஜக தஜ்ஞாநங்களின் சித்தியின் பின் சித்தித்தலின். அஞ்ஞாநத்தின். காரணத் தன்மை அஸம்பவமா யிருக்கின்றது. அதனால் அஞ்ஞாநம் அதன் ஸம்பந்தம் என்னு மிரண்டும் அநாதியாகவே சித்திக்கின்றன. "தியாந யோகத்தால் அநுகதமாய முநி தேவாத்ம சக்தியினைப் பார்க்கின்றான்", "சிவப்பு வெண்மை கறுப்பு என்னும் மூன்று குணங்களை யுடைய ஒரு அஜை", "இந்த ஜகத்து அப்பொழுது அவ்யாகிருதமாகவே யிருந்தது", "மாயையினைப் பிரகிருதி யென மதிக்க", "இதற்கு ஆதியு மில்லை. அந்தமு மில்லை. ஸ்திதியு மில்லை", "ஹே அர்ஜுந! எனது மாயையினைத் தாண்டற் கியலாது" என்பன வாதிப் பிரமாணத்தினால்.

### (6) ஜீவேசுவர சுத்த சேதநங்களின் பேதம் அநாதி.

(6) அங்ஙனமே ஜீவேசுவர சுத்த சேதநங்களின் பேதமும் அநாதியாம். அதுவும் ஆதி யுடை[illegible]ய தாயின், அதன் உற்பத்தியின் பூர்வம் ஜீவேசுவர பேதங்களின் அபாவத்தால். பகுப் பற்ற சுத்த சேதநம் ஸர்வாதிகாரமாக இன்மையின். முக் காண்ட ரூப வேதத்தால் கூறப்பட்ட அதிகார அநுசாரம் ஜீவனைக் குறித்துத் தர்மாநுஷ்டாநம் உபாஸநாநுஷ்டாநம், ஞாந ஸாதந சிரவணாதி யநுஷ்டாநங்கள், (அவர்களிடத்து) ஸர்வாதிகார மின்மையின் அரண்யருதநம் (காட்டில் அழல் போல) ஆம். "இவன் ஸர்வேசுவரன், இவன் லோகாதிபதி இவன் ஸர்வ வசி, எவனிடத்தினின்றும் இப்

பூதங்கள் உண்டாகின்றன.'' என்பதாதி ஸர்வேசுவரத் தன்மை
முதலிய ஜகத் காரணத் தன்மை முதலியவற்றைக் கூறும் சுருதி
களுக்கும் நிரவகாசத் தன்மை யுண்டாம். எதனால் சுத்த சேத
நத்தில் மாயா ஸம்பந்த மின்றி ஸர்வேசுவரத் தன்மை முதலிய
வற்றிற்கு அஸம்பவம் இருக்கின்றது. ஸர்வேசுவரத் தன்மை
முதலிய தர்மங்கள் மாயிக மாகலின். ஒரு அத்விதீய சுத்த சேதநத்
தில் ஜீவேசுவர பாவமும், அவற்றின் பேதமும், ஈசுவரனால் கற்
பிக்கப்பட்ட குரு சாஸ்திரம் முதலிய த்வைதமும், ஜீவனால் கற்பிக்
கப்பட்ட மனோமய த்வைதமுமாகிய வெல்லாம் மாயிகமேயாம்.
அங்ஙனமாயினும், அதிகாரி புருஷன் தத் த்வ மஸி யாதிகளின்
விசார காலத்தில்; ஞாநப் பிரதிபந்தகமாய் அநர்த்த ஹேதுவாகிய
ஜீவ த்வைதத்தினை யத்நத்தால் விடுக. அது ஞாநோத்பத்தியில்
பாதக மாகலின். உண்மையாக இல்லா திருக்கினும் ஸ்வப்ந த்வைதம்
போன்று அநந்த துர்த்தசைக்கு ஹேதுவாகலின். குரு சாஸ்திராதி
ரூப ஈசுவர த்வைதத்தினைப் பிரீதியோடு ஆசிரயிக்க. அது நன்
ஞாந உத்பத்தியின் ஸாதக மாகலின். ஒரு அத்வைத ஞாநத்தின்
பின், உண்மையில் அது இல்லா திருந்தும் ஞாநோத்பத்திக்குப்
பூர்வம், ஸ்வப்நத்தில் பார்க்கப்பட்ட ஸிம்ஹத்தின் தரிசநத்திற்கு
நித்திரையினின்றும் விழித்தல் ஹேதுத் தன்மையாவது போன்று,
ஸத் வஸ்துவினை விஷயமாக வுடைய ஞாநத்தின் ஜநகமா யிருத்
தலின். அநந்த அநர்த்த பரம்பரையினை நிவிர்த்திப்பதாகலின்.
பின்னர் சுருதி வாக்கிய, குருப் பிரசாதங்களினால் பிரதிபிம்ப வாதம்
அல்லது அவச்சேதக வாதத்தின் அபிப்பிராயத்தினால், ஜீவேசுவ
ரரின் ஸ்வரூபமாகிய அத்விதீய சுத்த சேதநத்தினை அஞ்ஞாந
நிவிர்த்தி பூர்வகம் நேரே அறிந்து, ஜீவேசுவராதி சர்வ கல்பனை
யினையும் உள்ளே நிவிர்த்திக்க. மாயிகமாகிய எல்லாக் கல்பனையும்
மாயா நிவிர்த்தியினால் நிவிர்த்தியாகின்றது. பாஹ்யத்தில் பாதித
அநுவிர்த்தியினால் ஜீவந பரியந்தம், ஞாநாதி உத்பத்தியில் பிரஸா
தஞ் செய்த ஈசுவரனையும், பிரஹ்மாத்ம ஏகத்வ ஞாநத்தினை ஈந்த
குருவினையும், ஏகத்வத்தினைப் பிரதிபாதிக்கும் வேதாந்த சாஸ்திரத்
தினையும், செய் நன்றி கொன்றல் என்னும் தோஷ நிவிர்த்தியின்



பொருட்டும், லோக ஸங்கரத்தின் (லோகத்தி லுள்ளவர் கொள்ளு
தற்) பொருட்டும் அதிகாரிகள் நமஸ்காரம் முதலியன செய்க.
“எவனுக்குத் தேவதையினிடத்து எங்ஙனம் மேலான பக்தி
இருக்கின்றதோ, அங்ஙனமே எப்பொழுது குருவினிடத்தில்
உண்டாம்'' (சுவேதாசுவதர உபநிஷத்), “ஹே அர்ஜுந! அந்த
ஞாநத்தினை நீ குருவின் நமஸ்காரத்தினாலும், கேள்வியினாலும்,
சேவையினாலும், அடைக'' (பகவற் கீதை), “எதுவரை ஆயுள் (அது
வரை) வேதாந்தம் குரு ஈசுவரன் என்னும் மூன்றும் நமஸ்கரித்
தற்கு யோக்கியமாம். ஆதியில் வித்தையின் அடைவின் பொ
ருட்டும், வித்தை யுண்டானதன் பின், செய் நன்றி கொன்றல்
நிவிர்த்தித்தற் பொருட்டும்'' என்பன வாதிப் பிரமாணத்தினால்.
எப் புருஷன் அதிட பூரி யுடையனாய் இவ்வாறு நன் ஞாநத்தின்
உத்பத்தி யின்றி, “ஈசுவரன் குரு சாஸ்திரம் ஆகிய வெல்லாம் அஞ்
ஞாநத்தினாற் கற்பிக்கப்பட்டு ஸ்வப்நம் போன்று மித்தையா யிருக்
கின்றது.'' என்று, இவ்வாறு ஜீவந முக்தி அவஸ்தையினைப் பிரதி
பாதிக்கும் சுருதி ஆசாரியர்களின் வசநங்களைக் கேவலம் கேட்ட
லினாலும், படித்தலினாலும், தன்னைக் கிருதார்த்தனாக அங்கீகரித்து,
ஸர்வ மோக்ஷ சாதநங்களிலும், ஈசுவர குரு பக்திகளிலும், அசி
ரத்தை யுடையவனாய்ச் சங்கை யற்று விஷய போகத்தின் பொருட்டு
யதேஷ்டாசரணஞ் செய்வனோ, அவன் அவசியம் கீழே விழுவன்.
கர்ம மார்க்கம் பிரஹ்ம மார்க்கங்களின் பிரஷ்டனாகலின். “எப் புரு
ஷன் நான்கு வேதத்தினையும், அநேக தர்ம சாஸ்திரங்களையும் படித்
தும், பிரஹ்மத்தினைப் பிரத்யக் ரூபமாக அறிய வில்லை. அவன்
படித்தலின் பலனை அடைவ தில்லை. எங்ஙனம் தர்வி (கரண்டி)
பாகத்தின் ரஸத்தினை'', “கலியினை யடைந்து ஸர்வ ஜீவர்களும்
வாக்கினால் பிரஹ்மத்தினைக் கூறுவர். ஏ! மைத்திரேயி! அப்
பிரஹ்ம ஸ்வரூபத்தில் இருப்ப தில்லை. சிசுந உதர (வயிற்றின்)
பராயண ராகலின்'', * “அத்வைத தத்வத்தினை எவன் அறிந்திருக்
கின்றான், அவனுக்கு எப்பொழுது யதேஷ்டாசரணம் உண்டாம்
அப்பொழுது நாய்க்கும் தத்துவ தரிசிக்கும் அசுசி பக்ஷணத்தில்

எப்பேத முண்டாம்''? *(பஞ்சதசி 4—55) என்பதாதி. "அத்வைதத்தினைச் சதா பாவனையில் செய்க. கிரியையில் அத்வைதத்தினை ஒருகாலும் செய்யற்க. மூன்று லோகத்திலும் அத்வைதத்தினை செய்க. உபதேஷ்டாவாகிய குருவோடு அத்வைதம் செய்பற்க. ஸம்ஸார ஜந்ய சுகத்தில் ஆஸக்தனாய் நான் பிரஹ்ம ஞாநி என்று வாக்கால் கூறுபவன் கர்மம் பிரஹ்மம் என்னும் இரண்டினும் பிரஷ்டனும். அவனைக் கடைச் சாதியான் (பறையன்) போன்றுவிடுக." என. இதன் பொருளிதுவாம்:— "நான் பிரஹ்ம நிஷ்டன் அதனால் எனக்கு விஷய சுக ஆசையினால் தோஷமில்லை. சுபாசுப கர்மங்களின் லேபநமின்மையின் என்று கூறுபவன் ஸத் கர்மம் பிரஹ்மத்தியாநம் என்பவற்றின் விமுகனாய் ஞாந சும்பகனாய் இருக்கின்றான். அவனைச் சண்டாளன் போன்று ஸ்பரிசமுஞ் செயய்ற்க" என்பனவாதிப்பிரமாணங்களினால்.

## 6—10 ஏழு வகைத்தாகிய பதார்த்தங்கள்.

### 6—1 சப்த அவஸ்தை.

ஏழு எண்ணிக்கை விசிஷ்டத்தில் முதலாவது ஏழு அவஸ்தையினைக் கூறுவாம்:—அஞ்ஞாநம் ஆவரணம் முதலிய பேதத்தினால் ஜீவனுக்கு ஏழு அவஸ்தைகள் இருக்கின்றன.

#### (1) அஞ்ஞாநம்.

(1) அவற்றுள் அஞ்ஞாநத்தின் லக்ஷணம் முற் கூறப்பட்டது.

#### (2) ஆவரணம்.

(2) ஆவரணம் அஸத்துவம் அபாநம் என்னும் பேதத்தினால் இரு வகைத்தாம். "கூடஸ்தன் இல்லை. என்னும் வியவகாரத்திற்கு ஹேதுவாய்க் கூடஸ்தனது ஸத்தாம்சத்தினை ஆவரணஞ் செய்வது, அல்லது விஷயஞ் செய்வது முதலாவது அஸத்தாவரணமாம். விளக்க அம்சத்தினை மறைப்பது, அல்லது விஷயஞ் செய்வது இரண்டாவதாகிய அபாநாவரணமாம்.

#### (3) விக்ஷேபம்.

(3) "நான் கர்த்தா போக்தா ஸுகி துக்கி" என்பதாதி வியவஹாரத்தின் ஹேதுவாய் இருவித சரீர விசிஷ்ட அபிமாநியாய சிதாபாசன் விக்ஷேபன் எனப்படுவன். ஜீவனை ஆசிரயித்து இம் மூன்று அவஸ்தையும் அஞ்ஞாநத்தினால் செய்யப்பட்டதாயிருக்கின்றது. அஞ்ஞாநத்தின் பின் உண்டாம் ஆபாஸனாகிய ஜீவன் அஞ்ஞாநத்தின் ஆசிரயம் எனல் பொருந்தாது. ஜீவன் அஞ்ஞாந காரியமாகலின். அங்ஙனமாயினும் விக்ஷேப ரூப ஜீவன் ஸம்ஸ்கார ரூபத்தால் அக்காலத்திலும் இருத்தலின். அஞ்ஞாநத்தின் ஆசிரயம் ஜீவன் எனல் பொருந்துகின்றது. அல்லது "நான் அஞ்ஞன் கூடஸ்தன் எனக்கு விளங்கவில்லை" என ஸர்வ ஜநங்களின் அநுபவத்தினால், அபிமாநித் தன்மையினால் அஞ்ஞாந ஆவரணங்களின் ஆசிரயம் ஜீவனுமாம். அதிஷ்டாநத் தன்மையினாலன்று.

#### (4) பரோக்ஷ ஞாநம்.

(4) பரோக்ஷ அபரோக்ஷ ஞாநமும், துக்கம் நீங்குதல் ரூப அநார்த்த நிவிர்த்தியும், தடையற்ற திருப்தி ரூப ஆநந்தப் பிராப்தியும் என்னும் நான்கு அவஸ்தைகளும் ஜீவனை ஆசிரயித்து ஞாநத்தினால் செய்யப்பட்டனவாம். சுருதி வாக்கிய ஜந்ய ஞாநத்தினால் அஞ்ஞாநத்தின் நிவிர்த்தியுண்டாய் அதன் காரியமாகிய ஆவரணத்திற்கும் நாச முண்டாகின்றது. "பிரஹ்மம் கூடஸ்த சச்சிதாநந்த ரூபம்" என்பதாதி அவாந்தர சுருதி வாக்கியத்தினாலுண்டாய பரோக்ஷ ஞாநத்தினால் அஸத்தாவரணத்தின் நிவிர்த்தியுண்டாகின்றது.



---

*பஞ்சதசி 4—27 "தௌ்ள வொருமைப் பொருடெரிந்தோன் சித்தப் படியே குதலாமேற், தள்ள வசுசி திநிநாய்க்குந் தத்து வனுக்கும் பேதமெனே."

4—55 बुद्धाद्वैतसतत्वस्य यथेष्टाचरणं यदि ।
शुनां तत्वदृशां चैव को भेदोऽशुचिभक्षणे ॥

(5) அபரோக்ஷ ஞானம்.

(5) "தத் த்வமஸி" என்பதாதி விசாரிக்கப்பட்ட மஹாவாக்கிய ஜந்ய அபரோக்ஷ ஞானத்தினால் அபானாவரணம் நாசமாகின்றது.

(6) துக்க நிவிர்த்தி.

(6) அபரோக்ஷ ஞானத்தின் பிரபாவத்தினால் சர்த்ருத்வாதி தர்ம விசிஷ்ட இருவித சரீரத்தோடுகூடிய சிதாபாஸனிடத்தில் உண்டாம் மித்தியா புத்தி விக்ஷேபத்தின் நிவிர்த்தியாம். ஆபாஸ ஸஹித இருவித சரீரத்தின் ஸ்வரூபத்தின் நிவிர்த்தி யாவதில்லை. ஏனெனின் விக்ஷேப ஸ்வரூபம் பிராரப்த பல போகத்தின் நாச பரியந்தம் இருத்தலின். இது ஞானத்தாற் செய்த அதிசயத்தினை யுடைய நான்காவது பூமியி லுள்ள வித்வானிடத்தில் உண்டாகின்றது. ஜீவந் முக்தியின் அடைவின் பொருட்டு தத்துவ ஞான மநோ நாச வாஸநா க்ஷயங்கள் ஓரே காலத்து அப்பியாஸத்தினு லுண்டாம் ஞானத்தின் திடத் தன்மையால் ஸகல பந்தத்தின் நிவிர்த்தி யுண்டாகின்றது. நிவிர்த்தி யென்பது கர்த்ருத்வாதி ஸர்வ பந்தத்தின் தோற்றமின்றிப, அல்லது அடங்கியிருக்கின்ற அவஸ்தை யாம். அது சோக நிவிர்த்தி ஆம்

(7) சுகப் பிராப்தி.

(7) ஞான திடத் தன்மை யவஸ்தையில் பிரத்யகாத்மா பூரணநந்தமாக பாந மாகுதல். பாந மென்பது பிரஹ்மாபிந்ந ஆத்மாவிலே ரமித்தலாம். ஆத்மாவின்கண்ணே சந்தோஷமாம். பிரத்யகாத்மாவில் அபரிச்சிந்ந பிரஹ்மாநந்தத்தின் ஆவிர்பாவம் என்பது பொருளாம். அது நிரங்குச திருப்தியாம். இது ஞான திடத் தன்மையில் செய்யப்பட்ட அதிசயத்தினை யுடைய ஜீவந் முக்தியில் உண்டாகின்றது.

(ஆதலால், எவ்வாற்றானும் ஜிஞ்ஞாஸுவானவன் அஞ்ஞானத்தா லியற்றப்பட்ட மூவித அவஸ்தையினை நிவிர்த்தித்தற்கு யத்தனிக்க. உத்தரோத்தர பூமியின் அடைவின் பொருட்டு மீண்டு மீண்டும் ஸத் சாஸ்திரத்தினை விசாரஞ் செய்க.)

6—2 ஏழு சைதந்யம்.

2 இப்பொழுது ஏழு வகைத்தாய சேதநத்தினைக் கூறுவாம்:- ஈசுவர சேதநம் ஜீவ சேதநம் முதலிய பேதத்தினால் சேதநம் ஏழு வகைத்தாம். வேதாந்த சித்தாந்தத்தில் உண்மையாகச் சேதநம் ஓர் அத்விதீயமேயா மாயினும், உபதேச காலத்தில் ஔபாதிக கல்பித பேதத்தினால் அதன் பேதமும் அங்கீகாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

(1) ஈசுவர சேதநம்.

(1) அநாதி அஞ்ஞான உபஹித பிம்ப சேதநம் ஈசுவர சேதநமாம்.

(2) ஜீவ சேதநம்.

(2) அஞ்ஞானத்தில் பிரதிபிம்பிக்கப்பட்ட சேதநம் ஜீவ சேதநமாம்.

(3) சுத்த சேதநம்

(3) இரண்டி லும் அநுகதமான அஞ்ஞான உபாதி யின்றிய சேதநம் சுத்த சேதநமாம். இது ஏக ஜீவ வாதமாம். ஈண்டு அஞ்ஞானம் ஒன்று யிருக்கின்றது. அதில் பிரதிபிம்பித்த ஜீவனும் ஒன்று யிருக்கின்றான். மாயை அவித்தைகட்குப் பேத மில்லை. ஈண்டு முக்தி யவஸ்தையில் உபாதி நீங்கி ஜீவனுக்கு ஈசுவர ரூப பிம்பத்தோடு உண்டாகின்ற அபேதமே சுத்த சேதநத்தோடு அபேதமாகின்றது. பிம்ப சேதநமும், சுத்த சேதநமும் உண்மையில் ஒன்றாகலின். அஞ்ஞான உபாதியினால் இயற்றப்பட்ட அநிர்வசநீயப் பிரதிபிம்பத் தன்மை பிம்பத் தன்மை ரூப தர்மங்கள் மித்தை யாகலின் என்று சிலர் கூறுகின்றனர். ஆயின், எப்பொழுது ஜீவிக்கும் அவஸ்தையிலேயே ஞானவானுக்கு விசாரித மகா வாக்கியத்தினின்றும் லக்ஷணை

யினால் பிம்பத் தன்மை முதலிய, ஈசுவரத் தன்மை முதலிய, கற்பனையின் நிவிர்த்தி பூர்வகம், இரண்டு சுத்த சேதநங்களின் அபேதஞானமே உண்டாகின்றது, ஸாக்ஷி சேதந சுத்தங்கட்கு பிம்ப ஈசுவரனோடு அபேதத் தன்மையின் ஞானம் உண்டாகின்றதில்லையோ, அப்பொழுது விதேக முக்தி அவஸ்தையில் ஸர்வ வியவகார கல்பனைகட்கு அதீதமாய், உபாதிக ளின்றிய நிர்விசேஷ அவஸ்தை சுருதி ஆசாரியர்களால் யாது கூறப்பட்டிருக்கின்றதோ, அதில் சுத்தாத்மாவிற்கு பிம்பமாய ஈசுவரனோடு அபேதம் கூறுதல் எங்ஙனம் ஸம்பவிக்கும்? உண்மையில் சுத்த சேதநம் ஈசுவர சேதநங்கள ஒன்றாயினும், அவற்றிற்கு உபாதியினால் செய்யப்பட்ட பேதமும் இருக்கின்றன, விதேக முக்தியிலோ ஸர்வ உபாதிகளும் ஸ்வரூபமாக நாச பாகுதலின். ஆதலால், முக்தனுக்கு ஈசுவரனோடு அபேதங் கூறுதல் உபசார (கூறல்) மாத்திரமாம்.

அல்லது, ரஜோ குண தமோ குணங்களோடு கலப்பின்றிய சுத்த ஸத்வப் பிரதாந மாயையில் உள்ள அதிஷ்டாந சஹிதப் பிரதிபிம்ப சேதநம் ஈசுவர சேதநமாம். ரஜோ குண தமோ குணங்களோடு கூடிய மலிந சத்துவப் பிரதாந அவித்தையி லுள்ள அதிஷ்டாந ஸஹிதப் பிரதிபிம்ப சேதநம் ஜீவ சேதநமாம். அது தனது உபாதியாகிய அவித்தை நாநாவாகலின் நாநாவா யிருக்கின்றது. இரண்டின் அதிஷ்டாந சேதநம், இரண்டிலும் அநுஸ்யூதமாய் மாயை அவித்தை உபாதிக ளின்றிய சுத்த சேதநமாம். இது நாநா ஜீவ வாதமாம். ஈண்டு மாயை அவித்தைகட்குப் பரஸ்பரம் பேதம் இருக்கின்றது. ஈண்டு முக்தாவஸ்தையில் ஜீவனுக்கு ஈசுவரனோடு அபேத முண்டாவதில்லை. பின்னரோ அதன் அதிஷ்டாந சுத்தப் பிரஹ்மத்தோடு அபேத முண்டாகின்றது. எங்ஙனம் லோகத்தில் ஒரு பிரதிபிம்பத்தின் உபாதி நீங்கில் அதற்கு வேறு பிரதிபிம்பத்தோடு அபேதம் பார்க்கப்படுவதில்லை. பின்னரோ தனது பிம்பத்தோடேயே அபேத முண்டாகின்றது. இம் மதத்தில் ஜீவாபேக்ஷையினால் பாத ஸமாநாதிகரணமும், அதன் அதிஷ்டாந அபேக்ஷையினால் முக்கிய ஸமாநாதிகரணமும் ஆகிய இரண்டும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன.



(4) பிரமாதா சேதநம்.

(4) அந்தக்கரண விசிஷ்ட சேதநம் பிரமாதா சேதநமாம். சிலர் இதனைப் பிராதிபாஸிக மென்றுங் கூறுகின்றனர். சிலர் வியாவகாரிக மென்றுங் கூறுகின்றனர்.

(5) பிரமாண சேதநம்.

(5) சக்ஷுரா வாயிலாய் வெளிப் போந்து கடாதி விஷய ஸந்நிகர்ஷ பரியந்தம் அந்தக்கரணத்தின் பரிணாமரூபவிர்த்தியுண்டாகின்றது. அதனோடு ஸம்பந்தித்திருக்கிற சேதநம் பிரமாண சேதநமாம்.

(6) விஷய சேதநம்.

(6) அதிஷ்டாநத் தன்மையினால் கடாதி விஷயத்தோடு தாதாத்மியத்தினை யடைந்து, அறியப்படாத சேதநம் விஷய சேதநமெனப்படும்.

(7) பல சேதநம்.

(7) விஷய ஸந்நிகர்ஷத்தின் பின் விஷயாகார அந்தக்கரண விர்த்தி ஆவரண பங்கத்தின் ஹேதுவாய் உண்டாகின்றது. அதன் விசிஷ்ட சேதநம், அல்லது அறியப்பட்ட சேதநம், பிரமிதி சேதநமென்றும், பிரமா சேதநமென்றும், பல சேதநமென்றுங் கூறப்படுகின்றது.

(இவ்வாறு சேதநங்கட்கு ஏழு பேதம் கிரந்தங்களில் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு ஸ்மிருதி:— "சுத்த சேதநம், ஈசுவர சேதநம், ஜீவ சேதநம், பிரமாண சேதநம், பிரமேய சேதநம், பிரமாதா சேதநம், பல சேதநம் என ஏழு வகைத்தாகச் சேதநங்கள் கூறப்படுகின்றன. அது வியவகாரத்தினால் பரஸ்பரம் பின்னமாகின்றது. (1) மாயா உபாதி யின்றிய சேதநம் சுத்தம் எனப்படுகின்றது. மாயா ஸம்பந்தத்தினால் ஈசுவரன் எனப்படுகின்றது. அவித்தையின் வசமா யிருப்பது ஜீவ சேதநமாம். (2) அந்தக்கரண ஸம்பந்தத்தினால் பிரமாதா எனப்படுகின்றது. அதன் விருத்தி

ஸம்பந்தத்தினல் பிரமாணம் எனப்படுகின்றது. அறியப்படாத சேதநம் பிரமேயம் எனப்படுகின்றது. அறியப்பட்ட சேதநம் பல மெனப்படுகின்றது". (3) என. ஓர் அத்விதீய சேதநத்தில் ஏழு வகைத்தாகிய பேதங் கூறப்பட்டது, அது அவிவேக காலத்தில் உபாதியினுல் செய்யப்பட்டதேயாம் உண்மையி லன்று. "ஏகமே வாத்விதீயம் பிரஹ்மம். ஒரே தேவன் ஸர்வ பூதங்களிலும் கூடமாயிருக்கின்ருன்" என்பதாதி சுருதிகளின் விரோதத்தினுல். விவேக தசையிலோ ஒரு சேதநத்தின் பேதத்தினைச் செய்யும் மாயை அவித்தை அந்தக்கரணம் அதன் விருத்தி விஷய ரூப உபாதிகளை ஞாநத்தினுல் பாதித்து, நிமித்த மின்மையினுல் நைமித்திக சேதநங்களின் பேதமும் நிவிர்த்தியாகின்றது. அக் காலத்தில் ஒரு அத்விதீய நாராயணனுகிய சேதநமே விளங்குகின்றது. ஜீவ ஈசுவராதி பேதம் விளங்குவ தில்லை.)

## 6—3 பூராதி லோகம்.

6-3. ஏழு லோகங்களைக் கூறுவாம்:—பூ முதலிய பேதத்தினுல் லோகம் ஏழு வகைத்தாம்.

### (1) பூலோகம்.

(1) அவற்றுள், பூ லோக ஸம்பந்தி சம்பத்துக்கள், மூன்று லோகங்கள் நிரூபித்த காலத்து முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது.

### (2) புவர் லோகம்.

(2) பூர்லோக ஸ்வர்க்கங்களின் மரியாதை ரூப அந்தரிக்ஷ லோகத்தினை புவர் லோகம் என்பர். எது மூன்று லோக எண்ணிக்கையில் மத்திய லோகம் எனப்பட்டது. எதில் யக்ஷ ரக்ஷ பூத பிரேத பிசாசாதிகளின் கூட்டங்கள் சஞ்சரிக்கின்றன. எது வரை வாயு செல்லுகின்றது. எது வரை மேகம் ஸம்பந்திக்கின்றது. அதுவும் கர்ம கதியின் பல ரூப ஜீவர்களின் போக ஸ்தாநமா யிருக்கின்றது.



### (2) ஸுர லோகம்.

(3) தேவ ராஜனுல் அதிஷ்டிக்கப்பட்டு நாநா சம்பத்தோடு கூடிய ஸ்வர்க்க லோகம் ஸுர லோகம் எனப்படுகின்றது. எதன் ஸம்பத்து முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. விதி பூர்வமாக அநுஷ்டிக்கப்பட்ட ஜோதிஷ்டோமாதி யஞ்ஞங்களினுல் புருஷன் சுருதி கழறிய தூம மார்க்கத்தினுல் செல்லுகின்றனன். எவ்விடத்தினின்றும் புண்ய போக நாசத்தின் பின் கீழே விழுந்து ஐந்து, அல்லது மூன்று ஆஹுதிகளின் கிரமத்தினுல் தன் கர்ம அநுஸாரமாய் ஜந்ம அடைவின் பொருட்டு மீண்டும் மிருத்யு லோகத்திற்கு வருகின்ருன்.

### (4-5-6) மஹர் ஜந தப லோகம்.

(4-5-6) இந்த மூன்று லோகத்திலும் பாஹ்யமாய் மகர் ஜந தப என மூன்று லோகங்கள் இருக்கின்றன. அவற்றுள், உபாஸனை ஞாநங்களோடு கூடிய பிருகு முதலிய ரிஷி முநிகள் இருக்கின்றனர். கர்மிகள் இருப்ப தில்லை. அவர்கள் நாச மற்ற கதியை யுடையவர். ஸர்வ லோக சஞ்சாரிகள். அங்ஙனமாயினும், எப்பொழுது திடிரப் பிரளயத்தில் ஸங்கர்ஷணனது முகத்தினின்றும் உண்டாய அக்நியினுலும், ஸூர்யாதி தாபங்களினுலும் மூன்று லோகங்களும் தஹிக்கப்படுகின்றது அப்பொழுது அதன் உஷ்ணத்தினுல் தனது ஸ்தாநத்தை விட்டு ஸத்திய லோகத்திற்குச் செல்லுகின்றனர். அந்த அதிகாரி புருஷர்கள் அவ்விடத்தினின்று மீண்டும் மிருத்யு லோகத்தில் விழுவ தில்லை. பிரஹ்மாவோடு பிராகிருதப் பிரளயத்தில் மோக்ஷத்தை யடைகின்றனர்.

### 7. சத்ய லோகம்.

7. பிரஹ்மாவினுல் அதிஷ்டிக்கப்பட்டு நாநா விபூதியினை யுடைய பிரஹ்ம லோகம் ஸத்திய லோகமாம். ஆண்டு அநேகமாக ஸகுண நிர்க்குண ஈசுவர உபாஸனையினை யுடையவர்கள் உபாஸனையின் பிரபாவத்தினுல் சுருதி புகன்ற அர்ச்சிராதி மார்க்கங்களினுற் செல்லுகின்றனர். அவர்களோ பிரஹ்மாவின் இரண்டு பரார்த்த (50) ஆயுள் பரியந்தம் பிரஹ்மாவின் ஸபையில் வேத

வேதாந்தங்களின் விசாரத்தினைக் கேட்கின்றனர். புண்யத்தின் உத்கர்ஷத்தினால் உத்தமோத்தம விபூதிகளின் அநுபவத்தினையுஞ் செய்கின்றனர். இச்சையின் அநுஸாரம் நாநா சரீரங்களைத் தாரணை செய்து ஜாக்ராவஸ்தை போன்று இச்சிக்கப்பட்ட போகங்களைப் போகிக்கின்றனர். அல்லது லிங்க சரீரத்தானேயே ஸ்வப்நம் போன்று புண்ய நாசத்தின் பொருட்டு விஷய போகங்களைச் செய்கின்றனர். பின்னர் பிரஹ்மாவோடு அவர்கள் முக்த ராகின்றனர். எங்ஙனம் ஒரு கேவல புண்ய கர்மத்தின் பிரபாவத்தால் ஆண்டுச் செல்லுகின்றவர்களோ புண்ய பல போக பர்யந்தம் ஆண்டு வாசஞ் செய்து மீண்டு மிருத்யு லோகத்தில் திரும்புகின்றனர் இப்பொருள் சூத்ரக்காரர் பாஷ்யக்காரர்களாலும் நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

ஆதலால், விரக்தி யுடைய மத்தியாதிகாரிகள் மூன்று லோகத்தினும் வெளியிலுள்ள லோகப் பிராப்தியின் பொருட்டேயும், மீண்டும் ஸம்ஸாரத்தில் விழுதலின் நிவிர்த்தியின் பொருட்டும் யத்நஞ் செய்க. இந்தச் சாஸ்திரத்தில் இரு விதப் பிரபஞ்சம், மூ விதப் பிரபஞ்சம், இருவகைச் சரீரம், மூ வகைச் சரீரம், மூன்று லோகம், ஏழு லோகம் என்பன வாதி பதார்த்தங்களில் லக்ஷண நிரூபண ஸ்தலங்களில் ஆண்டாண்டு கூறப்பட்டிருக்கின்றது. லக்ஷணத்தின் புநருக்தி யுண்டாம் எனக் கூற வில்லை அதுவும், எண்ணிக்கை பேதத்தின் அதீநமா யிருக்கின்றது. எதனால் ஈண்டு இரண்டு மூன்று எண்ணிக்கையின் அநுஸாரமாக பதார்த்தங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. பரஸ்பர உபயோகியும், ஸம்ஸர்க்கியுமாகிய பதார்த்தங்களின் அநுஸாரமாக நிரூபிக்கப்பட வில்லை. இப்பிரகரணம் எண்ணிக்கையின் கிரமத்தின் பிரதாநத் தன்மையோடுகூடி யிருத்தலின், பதார்த்தக் கிரமத்தின் பிரதாநத் தன்மையா லன்று என அறிக.

### 6—4 அதலாதி பாதாளம்

4 ஏழு பாதாள லோகத்தினை கூறுவாம்:— அதலம் முதலிய பேதத்தினால் பாதாளம் ஏழு வகைத்தாம். இந்தப் பிலத் துவாரங்களுள் ஸ்வர்க்கத்தினும் அதிக காம போக ஐசுவர்ய விபூதிக



ளோடு கூடிய இடமும், தோட்டமும், வியவகார ஸ்தாநமும் இருக்கின்றன. எதில் தைத்தியர் தாநவர் காத்ரவேயர் (நாகர்) நித்தியம் ஆநந்த முடையவர்களாய், ஸ்திரீ புத்ரன் பந்து உறவினர் வேலைக்காரரோடு ஈசுவரனாலும் நாசம் செய்ய முடியாத இச்சையோடு கூடிய மாயாவிகள் இருக்கின்றனர். எதில் மாயாவியாகிய மயன் என்னும் பெயரை யுடைய தைத்தியனால் அநேக பட்டணங்கள் வீடுகளோடு ரத்ந சிரேஷ்டங்களினால் செய்யப்பட்டுப் பிரகாசிக்கின்றன. எதில் மந இந்திரியங்களுக்கு ஆநந்தத்தினைச் செய்யும் நந்தந வநம் குசும (புஷ்பம்) பழங்களின் குலை முதலிய தனது விபூதிகளால் தேவ லோகத்தின் ஐசுவர்யத்தினை அமிழ்த்துகின்றனவா யிருக்கின்றன. யாண்டு மாக சிரேஷ்டமாகிய மணிகள் பில (துவார)ங்களின் இருட்டை நாசஞ் செய்கின்றன. எதில் அகோ ராத்ராதி காலத்தின் பகுப்பினால் பயமுண்டாவ தில்லை. எதில் இருக்கும் புருஷர்களுக்குத் திவ்ய ஔஷதம் ரஸாயநம் அந்நபாநம் ஸ்நாநம் முதலியவைகளினால் ஆதி வியாதி ஜ்வராதிகள், தேக விவர்ணத் தன்மை, துர்க்கந்தத் தன்மை, வியர்வை முதலியன உண்டாவன வல. பகவானது தேஜஸ் ரூப சக்கர மன்றி எவனைக் கொல்லுவதற்கு யமனுக்கும் ஸாமர்த்திய முண்டாவ தில்லை. அது அதலம் விதலம், ஸுதலம், தலா தலம், மஹா தலம், ரஸா தலம், பாதாலம் என்னும் பேதத்தினால் ஏழு பாதாள லோகமா யிருக்கின்றது.

### (1) அதலம்.

(1) இப்பொழுது ஒவ்வொன்றையும் வெவ்வேறாகக் கூறுவாம்:- எதில் மய னென்னும் தைத்தியனது, பல னென்னும் பெயரை யுடைய புத்ரன் இருக்கின்றான் அது அதலமாம். எவனுடைய திறக்கப்பட்ட முகத்தினின்றும் ஸ்திரீகளின் ஸ்வைரிணீ கணம், காமிநீ கணம், புஞ்சலீ கணம் என மூன்று கணங்கள் உத்பந்நமாயின. எவள் தன் வர்ணத்தில் ரமிக்கின்றாள் அவள் ஸ்வைரிணீயாம். எவள் அந்ய வர்ணத்திலும் ரமிக்கின்றாள் அவள் காமிநியாம். எவள் அதி ஸஞ்சலமா யிருக்கின்றாள். அங்கு வசிக்கும் புருஷர் கட்கு பார்த்தல், மந்தகாசஞ் செய்தல், ஸல்லாபம் செய்தல், ஸமீபத்தில் வசநித்தல் என்பன வாதி தனது காரியங்களினால் தனது இச்சையின்படி ரமிக்கச் செய்கின்றவள் புஞ்சலியாம்.

### (2) விதலம்.

(2) அதன் கீழ் விதலம் இருக்கின்றது. எதில் பவானியோடு கூடச் சிவன் தனது பக்கத்தி லுள்ள பூத கணங்களால் சூழப்பட்டு ஜகத்தின் விரிவின் பொருட்டு இருக்கின்றார்.

### (3) சுதலம்.

(3) அதன் கீழ் ஸுதலம் இருக்கின்றது. எதில் புண்ய சுலோக விரோசனனது புத்திரனாகிய பலியாகிய தைத்திய னிருக்கின்றான். வாமந ரூப பகவான் இந்திரன் பொருட்டு எதனின்றும் மூன்று லோகியாகிய ஹரி யானான் மஹா பாகவதமாகிய தனது தர்மத்தினால் அந்தப் பகவானை ஆராதநஞ் செய்துகொண்டு எவன் இதுவரை யிருக்கின்றான். அவன் மஹா பாகவதனும். எவனது மஹிமை சாஸ்திரங்களில் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

### (4) தலா தலம்.

(4) அதன் கீழ்த் தலா தல பிலம் இருக்கின்றது. யாண்டு மயன் என்னும் பெயரினை யுடைய தாநவேந்திர திரிபுர அதிபதி இருக்கின்றனன். எவன் மாயாவிகளின் ஆசாரிய னவன் திரிபுர தகநத்தின் பின் மஹா தேவரால் இரக்ஷிக்கப்பட்டு ஸுதர்சந சக்கரத்தின் பய மின்றியவனாய் வேலைக்காரால் பூஜிக்கப்படுகின்றான்.

### (5) மஹா தலம்.

அதன் கீழ் மஹா தலம் இருக்கின்றது. யாண்டு அநேக சிரஸ்களை யுடைய காத்திரவேய ஸர்ப்பம் இருக்கின்றது. பக்ஷி ராஜனாகிய பகவானது வாஹநமான கருடனினின்றும் பய முடையதாயினும், தனது ஸ்திரீ புத்ராதியோடுகூடி உன்மத்த முடையதாய் ஸஞ்சரிக்கின்றது.

### (6) ரசா தலம்.

அதன் கீழ் ரஸா தலம் இருக்கின்றது. எதில் தைத்திய தாநவர்களாகிய பெரும் பல முடையவர் இருக்கின்றனர், எவர்கள்



ஸ்வாபாகமாக தேவதைகளின் விரோதிக ளாவர். பகவத் சக்கரத்தால் பய பீதியை யுடையவர்களா யிருக்கின்றனர்.

### (7) பாதாளம்.

அதன் கீழ் பாதாளம் இருக்கின்றது. யாண்டு பெரிய சரீரத்தினை யுடைய மகா குரோதியாகிய வாஸுகி முதலிய நாகங்கள் இருக்கின்றன. அவைகளும் தமது பண(பட)ங்களில் சஞ்சரித்துக்கொண்டு மகா மணிகளின் பிரகாசத்தினால் பாதாளத்தின் இருளை நாசஞ் செய்கின்றன

(அதன் மூல இடத்தில் பகவத் கலா ரூப அநந்த னென்னும் பகவான் இருக்கின்றனர். எதன் ஒரு சிரஸில் பூ மண்டலம் ஸர்பத்தோடு கூடியது போன்று இருக்கின்றது. எது அநந்த கல்யாண குணத்திற்கு இடமா யிருக்கின்றது. எது ரிஷி முநியாதிகளால் சேவிக்கப்படுகின்றது மூன்று லோகத்தின் மத்தியில் பூமியின் கீழ் ஜலத்தின் மேல் நரக ஸ்தாநம் இருக்கின்றது. சிலர் இரு பத்தொரு நரக மென்றும், சிலர் இரு பத்தெட்டு நரக மென்றுங் கூறுகின்றனர். எதில் பிதிர் ராஜா வாகிய யம பகவான் பாப கர்மங்களின் அநுஸாரமாய் பகவத் ஆஜ்ஞாநுஸாரமாக நரகத்தினை யடைந்த ஜீவர்கட்கு நாநா வித தண்டத்தினைச் செய்கின்றனர். எந்த நரக யாதனைகளை விஸ்தாரமாகக் கேட்டுப் பெரும் பயம் உண்டாகின்றது. ஆதலால் அஹோ! மந்த பாக்கிய பாவத்தையும், அற்ப ஆயுளையும் உடைய ஜீவர்கள் துச்சமாகிய விஷய சுகத்தின் பொருட்டுச் சங்கை யின்றி ஸதா பாபத்தினைச் செய்கின்றனர். குரு சாஸ்திரங்களின் உபதேசத்தினைக் கேட்டுக் கேட்ப தில்லை. அற்ப சுகாசையினால் அநந்த காலம் நரக துக்கத்தினை யடைகின்றனர். பகவத் அநுக்ரஹ முடைய சில புருஷர்கள் யதேச்சையாகச் செய்யும் பாபச் செய்கையினின்றும் பயந்து, பகவத் சரணம், சத்சங்கம், ஸத் சாஸ்திரம் ஸமாகமங்களைச் செய்கின்றனர். அவர்களே மஹா பாக்கிய முடையோர்.)

### 6—5. பூமிகை.

எழு ஞாந பூமியினைக் கூறுவாம்:— சுபேச்சை முதலிய பேதத்தினால் ஞாந பூமி எழு வகைத்தாம். சித்தத்தின் அவஸ்தா விசே

ஷத்தின் பெயர் பூமியாம். அதை வசிஷ்ட பகவான் உத்பத்திப் பிரகரணத்தில், 13 சர்க்கத்தில் 113-114 சுலோகத்தில், சுபேக்ஷை என்னும் பெயரினை யுடைய ஞான பூமி முதலாவ தெனப்படும். விசாரணை என்னும் பெயரினை யுடையது இரண்டாவதாம். தநு மாநஸை மூன்றாவது பூமியாம்." (1) "ஸத்வாபத்தி நான்காவதாம். அஸம் சத்தி ஐந்தாவதாம். பதார்த்தபாவிநீ ஆறாவதாம். துர்யகா ஏழாவது எனப்படும். (2)" எனக் கூறி இருக்கின்றார்.

(1) சுபேச்சை.

(1) நித்தியாநித்திய வஸ்து விவேகம், இகலோக பரலோக விஷயங்களில் தோஷ திருஷ்டி மித்தியா புத்திகளால் வைராக்யம், ஸமாதி ஷட் ஸம்பத்தி என்னும் மூன்று ஸாதநங்களை ஸர்வ கர்ம ஸந்நியாஸ ஸஹிதமாக அடைந்த அதிகாரியினிடத்து உண்டாகின்ற, பிரஹ்ம ஞாந பலப் பிராப்தி பரியந்தமான மோக்ஷ இச்சை யாது, அது சுபேச்சை என்னும் முதல் பூமியாம். ஸாதந சதுஷ்டயப் பிராப்தி என்பது பொருளாம்.

(2) விசாரணை.

(2) அதன் பின் சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட குரு குலத்தில் (வீட்டில்) வேதாந்த வாக்கியத்தின் சிரவண ரூப விசாரம் சுருதி விரோத மின்றிய தர்க்கங்களினால் கேட்ட அர்த்தத்தின் விசார பரியந்தம் உண்டாவது விசாரணை யென்னும் இரண்டாவது பூமியாம். சிரவண மநநத்தின் அடைவு என்பது பொருளாம்.

(3) தநு மாநஸை.

(3) அதன் பின் நிதித்யாஸநத்தின் அப்பியாஸத்தினால் ஏகாக்ர சித்தத்தில் ஸூக்ஷ்ம பிரஹ்ம வஸ்துவின் கிரஹண யோக்யத்தன்மை, தநுமாநஸை என்னும் மூன்றாம் பூமியாம். விசாரிக்கப்பட்ட பிரஹ்மாத்ம ஏகத்வ வஸ்துவில் ஸம்சய விபரீத பாவங்கள் உண்டாகாதிருத்தல் என்பது பொருளாம்.



இம் மூன்று பூமியும் பிரஹ்ம வித்தையின் ஸாதந ரூப யோக் யங்க ளாகலின் ஜாக்ரம் எனப்படுகின்றது. அவற்றுள் ஜகத் பேத மாக விளங்குதலின். பிந்நமாகிய ஜகத்தில் ஸத் புத்தி நாச மாகா மையின்.

(4) சத்வாபத்தி.

(4) அதன் பின் குரு உபதேசிக்கப்பட்ட மஹாவாக்கியத் தினால் பிரஹ்மாத்ம ஏகத்வத்தினை விஷயமாக வுடைய நிர்விகல்ப ஸாக்ஷாத்காரம் உண்டாகின்றது. அது நான்காவது பூமியாகிய பல ரூப ஸத்வாபத்தியாம், அது ஸ்வப்ந மெனப்படுகின்றது. அதில் ஸர்வ ஜகத்தும் மித்தையா ரூபமாக, ஜாக்ரத்தில் ஸ்வப்ந பதார்த்தம் போன்று விளங்குதலின்.

(5) அசம் சக்தி.

(5) ஐந்து ஆறு ஏழு என்னும் மூன்று பூமிகளும் ஜீவன் முக்தியின் அவாந்தர பேதமாம். அவற்றுள், ஸவிகல்ப ஸமாதியின் பரிபாகத்தினால் வித்வானது சித்தத்தில் உண்டாகின்ற நிர்விகல்ப ஸமாதி யவஸ்தை அஸம் சத்தி என்னும் பெயரினை யுடைய ஐந்தா வது பூமியாம். அது சுழுத்தி யெனப்படுகின்றது. அந்த அவஸ் தையில் தானாகவே எழுந்திருத்தலின்.

(6) பதார்த்தாபாவநீ

(6) அந்த நிர்விகல்ப ஸமாதியின் பரிபாகத்தினால் வெகு காலம் இருக்கும் நிர்விகல்ப ஸமாதி பதார்த்தாபாவநீ என்னும் ஆறாவது பூமியாம். அது காட சுழுத்தி யெனப்படுகின்றது. அந் அவஸ்தையில் தானாக உத்தாந தசையினை அடையாமையின்.

(7) துரீயா.

(7) எந்த நிர்விகல்ப ஸமாதியினால் தன்னானும், பிறனானும் எழா திருத்தல், எவ்வாற்றானும் பேத தரிசந மின்மையின் ஏழா வது துரீயா எனப்படுகின்றது. அவன் தேக வியாபாரம் பரமேச வரனால் பிரேரிக்கப்பட்ட பிராண வாயுவின் வசத்தினால் அந்யர்களா லேயே உண்டாகின்றது.

(இவற்றுள் முதல் மூன்று பூமியும், பரோக்ஷ ஞானத்தின் ஹேது வாகின்றது. சிரவணாதி அப்யாஸத்தாற் ஜநித்த சாக்ஷாத்கார பல ரூப நான்காவது பூமி ஸத்வாபத்தியாம். மநோ நாச வாஸநா க்ஷயத்தின் பலம் ஜீவந் முக்தியின் மூன்று பூமிக ளாகின்றது. என அறிக.)

விவித தோஷத்தினால் தூஷிக்கப்பட்ட இக் கலி ஸமயத்தில் மநோ நாசம், வாஸநா க்ஷயம், தத்துவ ஞானங்களை அநேக காலங்க ளோடுகூடி அப்பியாசஞ் செய்தலினால், இந்த ஜீவந் முக்தியின் மூன்று பூமிகளை அடையும் மஹா பாக்கியத்தினை யுடைய புருஷன் துர்லபமா யிருக்கின்றான். எதனால் இப்பொழு துள்ள புருஷர்கள் அல்ப ஆயுள், அல்ப ஸத்துவம், அல்ப புருஷார்த்தத்தினை யுடைய வர்களாய்ப் பல ரோகங்களினால் கவரப்பட்டிருக்கின்றனர். அவர் களால் பிராணாயாமம் முதலிய அஷ்டாங்கத்தோடு கூடிய யோகத் தின் அநுஷ்டானம் அசக்கியமா யிருக்கின்றது. யோகாநுஷ்டான மின்றி மிகுதியாகிய மநோ நாசம், மிகுதியாகிய வாஸநா க்ஷயங்க ளால் அடையத் தக்க ஜீவந் முக்தி அஸக்கியமாம். அங்ஙன மாயி னும், பகவானால் அநுக்ரஹிக்கப்பட்ட சில புருஷர்கள் விஷய வாஸனை, தம்பாதி தோஷ நிவிர்த்தி பூர்வகம் சமம் முதலிய சிரவணாதி ஸாதநங்களோடுகூடி யிருக்கின்றனர். அவர்களால் விவேக மார்க்க வாயிலாய் முற் புகன்ற சுபேச்சை முதல் ஸத்வாபத்தி முடிவா யுள்ள நான்கு பூமிகளின் அடைவு வுண்டாவதற்கு ஸம்சய மின்றிய ஸம்பாவனை உண்டாகின்றது. ஆதலால், ஜிஜ்ஞாஸுக்களால் விஷய சுகேச்சையின் தியாக பூர்வகம் தனது பிரயத்நத்தால் தன்னை சுபேச்சை முதல் ஸத்வாபத்தி பரியந்தமான நான்கு பூமிகளின் மேல் ஆரூடஞ் செய்தல், யோகப் பிரஷ்ட ஜந்ம அடைவின் பொருட்டு, அல்லது, மீண்டும் திரும்புத லின்றிய மோக்ஷ அடைவின் பொருட்டு எவ்விதத்தும் உசிதமாம். அந்யதா ஒரு ஞான பூமியினையும் அடையாத ஜீவன் விஷய ஸுகத் தின் ஆசையினால் அநந்த துர்த்தசையினை யடைந்து அதோ கதியி னின்றும் அதோ கதியினை யடைவன். இந்த ஞான பூமியின் அடை வின் பலமும், அடைவின்மையில் தோஷமும் வாசிஷ்ட ராமாயணத்



தில் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. நாம் மிகுதியாகக் கூற வில்லை.)

### 6—6 மௌநாதி.

மௌநாதி ஏழினைக் கூறுவாம்:—மௌநம், யோகாஸநம், யோகம், திதிக்ஷை, ஏகாந்த சீலத் தன்மை, நிஸ்ப்ருகத் தன்மை, ஸமத்தன்மை என மௌநாதி ஏழாம்.

#### (1) மௌநம்.

(1) வாக் இந்திரியத்தின் விசார விரோதி வியாபாரத்தி னின்றும் நிவிர்த்தித்தல் மௌநமாம். அல்லது, வேதாந்த அர்த் தத்தினை நிரந்தரம் மநநஞ் செய்தல் மௌநமாம். அல்லது விருத்தி யின்றி மநம் இருத்தல் மௌநமாம்.

#### (2) யோகாஸநம்.

(2) சரீரத்தின் சஞ்சல நிவிர்த்தியின் ஹேதுவாய ஆஸநம் யோகாஸநமாம். அல்லது, ஸ்திரமான ஸுகாஸநம் ஆஸநமாம். ஸமாதி விசாரங்களின் பொருட்டு எங்ஙனம் சரீரத்திற்கு ஸுகமாக ஸ்திதி யுண்டாம் அது ஸுகாஸநமாம். வெகு கால மிருத்தல் ஸ்திரமாம்.

#### (3) யோகம்.

(3) எவ்விதத்தும் பகவானது சிந்தநத்திற்கு விரோதியாகிய சித்த விருத்திகளின் நிரோதம் யோகமாம்.

#### (4) திதிக்ஷை.

(4) பிராரப்த பலமாக அறிந்து, ஸுக துக்காதி த்வந்த்வ தர்மங்களைச் சகித்தல் திதிக்ஷையாம். அல்லது, அந்யனது அபரா தத்தினைச் சகித்தலாம்.

#### (5) ஏகாந்த சீலத் தன்மை.

(5) சிம்ஹ ஸர்ப்பாதி பய மின்றிய இடத்தில் உட்கார்ந்து ஸமாதி செய்தல் ஏகாந்த சீலத் தன்மையாம். பய விக்ஷேப

விசிஷ்ட தேசம் சித்த சஞ்சல காரணமாகலின். அல்லது கு(கெட்ட) யோகி விஷய லம்படர்களின் ஸபையில் ரமிக்கா திருக்குதல் ஏகாந்த சீலத் தன்மையாம்.

(6) நிஸ்ப்ருக்த் தன்மை.

(6) அநந்த தோஷத்தினுல் தூஷிக்கப்பட்ட அநேக வித அநர்த்தத்தினைச் செய்யும் தநம் முதலியவற்றின் இச்சை யின்மை நிஸ்ப்ருகத் தன்மையாம்.

(7) சமத் தன்மை.

(7) இஷ்ட அநிஷ்ட பிராப்தி காலத்தில் சித்தத்தின் அவிகாரித் தன்மை சமத் தன்மையாம். அல்லது சராசரத்தி லிருக்கும் ஸமமாகிய பிரஹ்மத்தின் ஸம்பாவனை, அல்லது எல்லாவற்றிலும் ஸமமான பிரஹ்மத்தினைப் பார்க்குதல் ஸமத் தன்மையாம்.

(ஏழு தர்மங்கள் பிக்ஷுவின் ஞாநப் பிராப்தியில் ஸாதநமா யிருக்கின்றன. ஆண்டு ஸ்மிருதி:- மௌநம், யோகாஸநம், யோகம், திதிக்ஷை, ஏகாந்த சீலத் தன்மை, நிஸ்பிருஹத் தன்மை, ஸமத் தன்மை இவ் வேழு தர்மஙகளும் ஏக தண்டி யாகிய பிக்ஷுவிற்குக் கூறப்பட்டிருக்கின்றது" என. ஆதலால் மோக்ஷத்தினை யிச்சிக்கும் பிக்ஷுக்களால் ஸந்தியா வந்தநாதி நித்திய கர்மம் போன்று இவ் வேழு தர்மங்களையும் நித்தியமே சேவிக்க. விட்டு விட்டுச் சேவிக்கத் தக்க தன்று. தீர்க்க கால நிரந்தர ஆதரத்தினுல் இவற்றினைச் சேவித்துக் கையி லுள்ள நெல்லிக் கனி போன்று பிக்ஷு மோக்ஷ பலத்தினை அடைகின்றுன்)

6—7. தாது.

ஏழு தாதுக்களைக் கூறுவாம்:— "ரஸம், ருதிரம், மாம்ஸம், மேதை, மஜ்ஜை, ஹஸ்தி, ரேதஸ் என்பன ஏழு தாதுக்களாம். இவ் வெல்லாம் தேஹத்தின் ஆசிரயமா யிருக்கின்றன." என்னும் பிரமாணத்தினுல் ஸப்த தாதுக்கள் எனப்படுகின்றன. இவற்றின் லக்ஷணமோ முன் ஆறு எண்ணிக்கையில் கூறப்பட்டிருக்கின்றது.



புஜிக்கப்பட்ட அந்நம் ரஸ ரூபத் தன்மையினுல் பரிணமத்தினை யுடைந்து ரஸ மெனப்படுகின்றது. இவ்வாறே ருதிர மாம்ஸாதி ரூபத்தினுல் பரிணமத்தினை யுடைந்து ருதிர மாம்ஸாதி எனப்படுகின்றது.

(இவ் வேழு தாதுக்களின் ஸமுதாய ரூபம் மநுஷ்ய சரீரமாம். அதுவும் தனது காரண ஸ்வரூபங்களால் அமங்கலமா மாயினும், நல்ல இந்திரியாவஸ்தை, ரோக மின்றிய அவஸ்தைகளில், விவேக விசாரஞ் செய்வதற்கு உத்தம ஸாதநமா யிருக்கின்றது. ஈசுவரத் தன்மை, க்ஷணிக் ஸ்வபாவத் தன்மைகளால் வைராக்கியத்தின் ஹேதுவா யிருக்கின்றது. ஆதலால், சரீரத்தின் ஸ்வஸ்த (சௌக்கிய) அவஸ்தையில் பல்லோடு பல்லை அரைத்தலினுலும், கையோடு கையைத் திருகுதலினுலும், ஜிஜ்ஞாஸு ஸத் ஸங்கத்தினை யடைந்து விவேக விசார வைராக்கியங்களை ஜந்ம மரணுதி நிவிர்த்தியின் பொருட்டு எது பரியந்தம் கீழே விழவில்லையோ, அதுவரை உற்பத்தி செய்க. "ஹே ராஜன்! இத் தேஹம் எனது குருவா யிருக்கின்றது. விரக்தி விவேகங்கட்கு ஹேதுவா யிருக்கின்றது எதனுல் உற்பத்தி நாசங்களைத் தாரணை செய்கின்றது. ஸதா துக்கத்தினைக் கொடுக்கின்றது. அதனுல், வைராக்கியத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது. எதனுல், இதனுல் நான் ஆத்மாநாத்மாக்களை உண்மையாக விசாரிக்கின்றேன். அதனுல், விவேகத்திற்கு ஹேதுவாயிருக்கின்றது. இவ்வாறு உபகாரம் செய்கின்றதாயினும், நாய் நரி முதலியவைகள் சாப்பிடுவதா யிருக்கின்ற தென்று அறிந்து நான் இதில் விசுவாசஞ் செய்வ தில்லை. அஸங்கனு யிருந்து விசாரிக்கின்றேன்." என்னும் அவதூத வசநத்தின் பிரமாணத்தால்.)

6—8 வியசநம்

ஏழு வியசநத்தினைக் கூறுவாம்:— தந (தநு) வியஸநம், மந வியசநம், காமக் குரோத வியஸநம், விஷய வியஸநம், தந (धन) வியஸநம், ராஜ்ய வியஸநம், ஸேவக வியஸநம் என்னும் பேதத்தினுல் வியஸநம் ஏழு வகைத்தாம். வியஸநம் என்பது துக்கம், அல்லது துராக்ரஹத் துக்காம்.

## (1) தநு வியசநம்

(1) ரோகாதியால் சரீரத்தின் துக்க ரூப வியசநம் உண்டாம். எனது சரீரம் இளைத்துக் துக்கியாய் விட்டேன். ஒரு உபாயமாகிலும், துக்க நிவிர்த்திக்கு இருக்கும் என்று தேஹாத்தியாஸியாகிய ஜீவன் தீநனாய், துக்கத்தோடு கூடியவனாய், ஔஷதாதி கிரஹண ரூப உபாயத்தினைச் செய்கின்றான். அல்லது மித்தியா சரீரத்தினைத் தனது ஸ்வரூபமாக அறிந்து அதன் புஷ்டி பலங்களின் ஸம்பாதநத்தின் பொருட்டுத் துராக்ரஹ ரூப வியஸந முண்டாய்த் தநத்தின் நாசம், சரீர சிரமம் முதலியவைகளாலும், பலம் புஷ்டியினைச் செய்யும் அநேக வித ஔஷதத்தினையும், நாநா வித போஜநத்தினையும் ஸம்பாதநஞ் செய்கின்றான். ஜீவன் ஸே(அநுப)விக்கின்றான். அது தநு (சரீர) வியஸநமாம்.

## (2) மந வியசநம்

(2) சஞ்சல ஸ்வபாவ மநத்தின் துராக்ரஹ ரூப வியஸந முண்டாயின் தன்னால் இச்சிக்கப்பட்ட ஸம்பாதிக்கக் கூடாத விஷயத்தின் சித்தியின் பொருட்டும், அந்த மநம், ஜீவனின் சரீரம் இந்திரியங்களின் க்ஷோபத்தை உண்டாக்குகின்றது. பரவசஞ் செய்விக்கின்றது என்பது பொருளாம். எதனால் பிரமாதியாயிருக்கின்றான். இச்சிக்கப்பட்ட விஷயம் அநர்த்தம் செய்வதாமாயினும், அந்த விஷயத்தினின்றும் எவ்வித உபாயத்தினாலும் நிவிர்த்தித்தற்கு ஸாமர்த்திய முண்டாவதில்லை. எதனால் பலவானாயிருக்கின்றது. முன் முன் அநுபவிக்கப்பட்ட விஷய ஸுகத்தின் வாஸனை ஆயிரத்தோடு கூடி இருக்கின்றனன். எதனால் திடமாயிருக்கின்றது. அதனால் நிவிர்த்தித்தற்கு அஸமர்த்தமாம். இவ்வாறு மநத்தின் வியஸநம் உண்டாகின்றது.

## (3) காமக் குரோத வியசநம்.

(3) காம வியசநம் உண்டாயின் இந்த ஜீவன் லோக லஜ்ஜை, சாஸ்திர லஜ்ஜை, தனது மஹத் தன்மைகளின் லஜ்ஜைகளைத் தியாகம் செய்து செல்லக்கூடாத (ஸ்திரீ) இடத்தில் செல்லுதல் முதலிய வியவஹாரங்களைச் செய்கின்றனன், பரஸ்திரீயினை சேவிக்கும்



(தத்) பரனாகின்றான் என்பது பொருளாம். பரஸ்திரீயினைச் சேவித்தல் அநர்த்தஞ் செய்வதாய் இருக்கின்றதாமாயினும், வெளிப்படின் மஹத் தன்மையினை நாசஞ் செய்வதாகின்றது. "பரஸ்திரீ ஸம்பந்தத்தின் தண்டத்தினையும், ராஜ யம தண்டத்தினையும் எண்ணுவதில்லை. காமாதுரனுக்குப் பயம் லஜ்ஜை உண்டாவதில்லை" என்னும் பிரமாணத்தினால் அந்த இச்சிக்கப்பட்ட ஸ்திரீ முதலியவற்றின் பிரதிபந்தகத்தில் எப்போது குரோத வியஸநம் உண்டாகின்றதோ, அப்போது செய்யக்கூடாத பெரும் ஹிம்ஸை, த்வேஷம் முதலியவற்றைச் செய்கின்றான். அந்தக் குரோதம் நான்கு பதார்த்தங்களை நாசஞ் செய்வதாம். அது காமக் குரோத வியஸநமாம். "இக் காமமே இஷ்டத்தினைப் பிரதிபந்திக்கும் காலத்தில் பரிணாமத்தினை யடைந்து குரோதமாகின்றது. ரஜோ குணத்தினால் உண்டாகின்றது. பெரும் சாப்பாடுடையதாம். ஹே அர்ஜுந! இதனை மோக்ஷ மார்க்கத்தில் வைரி என அறிக." (3—37), "எப்பொழுது அபகாரியினிடத்திலேயே கோபம் உண்டாகின்றதோ. அப்பொழுது கோபத்தில் உனக்கு ஏன் கோபம் உண்டாகின்றதில்லை. எதனால் உனது தர்மார்த்த காம மோக்ஷமென்னும் நான்கினைப் பலாத்காரமாய் நாசஞ் செய்கின்றது." என்பன வாதிப் பிரமாணத்தினால்.

## (4) விஷய வியசநம்.

(4) விஷய போக ரூப வியஸந முண்டாயின் இந்த ஜீவன் ஸ்திரீ, சூதாடல், கட் குடித்தல் முதலிய வியவஹாரத்தினைச் செய்கின்றான். குரு சாஸ்திராதிகளின் ஆஞ்ஞையினை அதிக்ரமித்தற்கும், யம ராஜாவின் தண்டாதிகட்கும் பயப்படுவதில்லை. அது விஷய வியஸநமாம்.

## (5) தந வியசநம்.

(5) தந அடைவின் வியஸந முண்டாயின் இந்த ஜீவன் நாநா வித க்ஷேத்திர(நில)ாதிகளைச் சம்பாதித்தலிலும், இராஜாதிகளைச் சேவித்தலிலும் தத்பரனாகின்றான். திருடுதல் முதலிய கர்மங்

களைச் செய்கின்றான். சரீரம் முதலியவற்றின் சிரமத்தினையும், பராதீநத் தன்மையினையும் சகிக்கின்றான். அது தந வியசநமாம். "தந இச்சை யுடையவனுக்குக் குரு வென்ப தில்லை, மித்திர னென்ப தில்லை." என்னும் பிரமாணத்தினால்.

(6) ராஜ்ய வியசநம்.

(6) எப்பொழுது இராஜாவிற்கு அதிக இராஜ்ய அடைவின் துராக்ரஹ ரூப வியஸந முண்டாகின்றதோ, அப்பொழுது அந்த ராஜா ஸ்வராட்டாகிய மண்டலேசுவரன் தனது இராஜ்யத்தின் ஸமீபத்திலுள்ள அற்ப இராஜ்யத்தினைக் கவர்தற் பொருட்டு முதலில் ஸாம, தாந, பேத ரூப நீதி சாஸ்திரத்திற் கூறிய மூவித உபாயத்தினைச் செய்கின்றான். பின்னர் அவர்களுள் பரஸ்பரம் பேத முண்டாய் ஒருவரது பக்ஷபாதியாய் சதுரங்க சேனையினால் அந்யனை நிக்ரஹஞ் செய்கின்றான். அது தண்ட மெனப்படும். இது இராஜ்ய வியஸநமாம்.

(7) சேவக வியசநம்.

(7) மந்திரி, அமாத்தியர் (ஆலோசனை சொல்பவர்) முதலிய இராஜ ஸேவகர்கள். ராஜ ஸேவகர்கள் என்பது இராஜப் பிரகிருதிகள் எனப்படுகின்றன. அவர்கள் வாயிலாய்த் துக்க ரூப வியஸநம் உண்டாயின், இராஜாவால் அந்ய இராஜ்யத்திற்குச் செல்லுதல் முதலியன உண்டாகின்றது. அது சேவக வியசநமாம். அல்லது எப்பொழுது வியாஜ மாத்திரமாகக் குருவினிடத்தில், அல்லது குயோகியினிடத்தில் நாநாவித சேவை செய்வதற்குத் துராக்ரஹ ரூப வியஸந முண்டாகின்றதோ, அப்பொழுது அவர்களால் நாநாவித தம்பம், லீலை, ஸத் வித்தைகளின் தியாக பூர்வகம் மலிந மந்திராதிகள் சேவிக்கப்படுகின்றன. தன்னிடத்தில் தனது வேலைக்காரர்களுக்குச் சிரத்தை விசுவாஸம் உண்டாக்குதற்பொருட்டு, அவர்களின் ஸ்திரீ புத்ராதிகட்கும் நாநா வித போஜநம் வசந (வஸ்த்ர)ாதிகளால் பிரஸந்நஞ் செய்விக்கின்றனர். எப்பொழுது ஒரு காலத்துத் தனது வேலைக்காரரின் கிரஹத்தின் புத்ராதிகள் அந்



யர்களைச் சேவிக்கின்றனரோ, அப்பொழுது சித்த, யோகியாய் அவர்களுக்குச் சாபம் முதலியவற்றைக் கொடுக்கின்றனர். எவர்களின் தநாதிகளை வாங்கி வாங்கிச் சேகரித்துக் கொண்டனரோ, அவர்களைச் சோக ரூப ஸம்ஸாரத்தினின்றும் ஒரு காலத்தும் உத்தாரம் செய்வ தில்லை. தானும் பரலோகப் பிரஷ்டனாய் ஸம்பத்துக்களை விட்டு நக்நனாய் (வஸ்திர மின்றியவனாய்) செல்லுகின்றான். இது சேவக வியஸநமாம்.

(இந்த எழு வகைத்தாய வியஸநம் எதனால் ஜீவன் கீழே விழுதற்கு ஹேதுவாகின்றதோ, அதனால் ஜிஜ்ஞாஸு இவற்றின் லக்ஷண ஸ்வரூப பலன்களை நன்கு அறிந்து தியாகமே செய்க.)

6—9. ரூபம்.

எழு வித ரூப குணத்தினைக் கூறுவாம்:—சுவேதம் பீதம் முதலிய பேதத்தினால் ரூபம் எழு வகைத்தாம். ஸமவாய ஸம்பந்தத்தினால் திரவ்யத்தின் ஸமவேதமாய் திரவ்ய விசேஷணமாய் வியாப்ய விருத்தி ரூபமா யிருக்கின்றது. அல்லது தாதாத்மிய சம்பந்தத்தினால் திரவ்யத்தோடு சேர்ந்து ஸ்வதந்தர மின்றி விசேஷண ஞாநத்தில், அல்லது விசேஷண ஸந்நிகர்ஷத்தினா லுண்டாய விசிஷ்டப் பிரதீதியில் பிரகாரிபூதமா யிருப்பது ரூபமாம். திரவ்ய மின்றி ஸ்வதந்தரமாக யாண்டும் தோற்றாமையின்.

(1) சுக்கிலம்.

(1) அது ஜல திரவ்யத்தில் சுக்லமாம். அக்நி முதலிய திரவ்யத்தில் விளக்கமான வெண்மை ரூபமாம். பிருதிவி ரூப திரவ்யத்திலோ எழு வகைத்தாம். பருத்தி பஞ்சு முதலிய திரவ்யத்தி லுள்ளது வெண்மை ரூபமாம்.

(2) பீதம்.

(2) மஞ்சள் முதலியவற்றில் பீத (மஞ்சள்) ரூபமாம்.

(3) ரக்தம்.

(3) செவ்வரத்தம் புஷ்பம் குசும்பா (ஜாப்பிரா) முதலிய ரக்த ரூபமாம்.

(4) ஹரிதம்.

(4) மாம்பழ முதலியவற்றில் ஹரித (பச்சை) ரூபமாம்.

(5) கறுப்பு.

(5) நீலக் கமலம் முதலியவற்றில் கறுப்பு ரூபமாம்.

(6) மாஜ்ஜிஷ்டம்.

(6) காவி மாஜிஷ்டம் (மருந்து) முதலிய தாதுவில் மாஜிடா ரூபமாம்.

(7) சித்ரம்.

(7) சித்ர வஸ்திரம் முதலியவற்றில் சித்ர ரூபமாம்.

(தள்ளத் தக்கார்த்த அநாத்ம பதார்த்தத்தின் விசேஷண ஞாநமும், ஆரோப்பியத்தின் அநுவாத காலத்தில் அபேக்ஷிக்கப் படுதலின். அவற்றிற்கும் பரம்பரையாக வேதாந்தார்த்த நிரூபணத்தில் உபயோகத் தன்மை யிருக்கின்றது ஆதலால் ஈண்டு எண்ணிக்கையின் கிரமமாக அடைந்த அநாத்ம வஸ்துக்கட்கும் ஜிஜ்ஞாஸுக்களின் ஞாநத்தின் பொருட்டு வேறு வேறு லக்ஷணங் கூறப்பட்டது. எதனால் ரூப குணமும், விஷய ரூபத் தன்மையினால் விஷப லம்படனை ஸ்திரீயாதி சுந்தர ரூபத்தின் தரிசந வாயிலாய் அநர்த்த தூர்த்தசையில் தள்ளுகின்றது. "ஜிதேந்திரிய மின்றிய புருஷன் தேவ மாயா ரூப ஸ்திரீயினைப் பார்த்து அதன் பாவத்தினால் லோப முடையனாய்க் குருட்டு இருட்டில் விழுகின்றான். அக்நியில் விட்டில் போன்று" என்னும் பிரமாணத்தினால். ஆதலால் அதிகாரிகள் இந்த ரூப விஷயத்தின் தியாகமும் யத்தநத்தினால் செய்க.)

## 6—10. திரவியாதி பதார்த்தம்.

நவீந நையாயிகர்கள் கொண்ட எழு பதார்த்தத்தினை ஹேயம (தள்ளத் தக்க) புத்தியின் பொருட்டுக் கூறுவாம்:—திரவ்யம் குணம் கர்மம் ஸாமாந்யம் விசேஷம் ஸமவாயம் அபாவம் என ஏழே பதார்த்தங்களாம். அவற்றுள் பிருதிவி ஜலம் அக்நி வாயு



ஆகாசம் காலம் திக்கு ஆத்மா மநம் என ஒன்பதே நித்தியத்
திரவ்யங்களாம். ரூபம் முதல் ஸம்ஸ்காரம் வரை இரு பத்து
நான்கே குணங்களாம். எழும்பல் முதல் நடத்தல் வரைக் கர்மம்
ஐந்தாம். பரம் அபரம் என இரு விதம் ஸாமாந்யம (ஜாதிய)ாம்.
பரம் சத்தா ஜாதியாம். அபரம் திரவ்யத்துவாதி ஜாதியாம். அந்தச்
சாமாந்யம் நித்தியமாய் ஏகமாய் அநேகவற்றில் அநுகதமா யிருக்
கின்றது. நித்தியத் திரவ்யத்தி லுள்ள ஸ்வாசிரய வியாவர்த்தகமாய
விசேஷம் அநந்தமாம். ஸமவாயமோ ஒன்றாய் நித்தியமாய் இரண்
டினை ஆசிரயித் திருக்கின்றது. பிராகபாவாதி பேதத்தினால் அபா
வம் நான்கு வகைத்து, அல்லது ஐ வகைத்தாம். இவ்வாறு நையா
யிகர்களது கொள்கையாம். அவர்களது கற்பனை சுருதி தாத்பரிய
ஞாநத்தின் சூந்யத் தன்மையினால் சுருதி விருத்தமா யிருக்கின்றது.
சுருதி அர்த்தத்தினை நிர்ணயஞ் செய்யும் வேதாந்த சாஸ்திர
விருத்தமாயு மிருக்கின்றது. அந்த விருத்தாம்சத்தினைக் காண்பிப்
பாம்:—முதலில் வேதாந்தத்தில் சாதிருசியம் முதலிய அதிக
பதார்த்தங்கள் கொள்ளப்படுதலினால் ஏழே பதார்த்தங்கள் என்னும்
அவர்களின் அவதாரணம் (நிச்சயம்) மித்தையாம். இருள் ரூப பதத்
தாம் திரவ்யத்தினைக் கூறுதலால் ஒன்பதே திரவ்ய மென்னும் அவர்
களினது கொள்கையும் விருத்தமாம். பிருதிவி முதலிய நான்கு
பரமாணுக்கட்கும், ஆகாசாதிகட்கும், அவர்கள் நித்தியத் தன்மை
அங்கீகரித் திருக்கின்றனர். அதுவும் இல்லை. "ஆத்மாவினின்
றும் ஆகாசம் உண்டாயிற்று, ஆகாசத்தினின்றும் வாயு, வாயுவி
னின்றும் அக்நி, அக்நியினின்றும் ஜலம், ஜலத்தினின்றும் பிரு
திவி யுண்டாயின" என்பதாதி சுருதியின் விரோதத்தினால். கால
மும் மாயிகனாகிய ஈசுவரனது அவஸ்தை, அல்லது சக்தி, அல்
லது வியாபாரமாகலின் நித்திய மன்று. "காலத்திற்கும் காலன்
ஸர்வ வித்தா யிருக்கின்றான்." என்பதாதி சுருதியின் விரோ
தத்தினால். திக்கோ கிழக்கு முதலிய ஔபாதிக பேதத்தினால்
ஆகாயத்தினுள் ளடக்கமேயாம். வேறு பதார்த்தம் அன்றாம்.
புத்தி முதலிய நவ (ஒன்பது) குண ஆசிரயத் தன்மையினா
லும், கிரியாசிரயத் தன்மையினாலும் ஆத்மாவிற்குத் திரவ்யத்

தன்மை அவர்கள் கூறியிருக்கின்றனர். அதுவும் மித்தையாம். "நிஷ்கிரியன் நிஷ்கலன் சாந்தன் சாக்ஷி சேதா கேவல நிர்க்குண" என்பதாதி சுருதி விரோதத்தினால். குண, கிரியைகட்கு ஆசிரயமாகிய கடாதி திரவ்யங்கட்கு ஜடத் தன்மை பார்க்கப்படுதலின். ஆத்மா சேதந ஸ்வரூபமாகலின். இரு வித ஆத்மாவிற்கு ஜடத் தன்மை அவர்களால் சொள்ளப்பட்டிருக்கின்றது. அதுவும் பொருத்தமுடைத் தன்றாம். "எவன் ஸர்வஜ்ஞன் அவன் ஸர்வ வித்தாவன்", "இப்புருஷன் ஸ்வயம் ஜோதியா யிருக்கின்றான்" என்பனவாதி சுருதிகளின் விரோதத்தினால். புத்தி ஸுக துக்காதி ரூப நவ குணமும் ஆத்மாவிற்கு அவர்களால் கொள்ளப்பட்டிருக்கின்றது. அதுவும் ஆத்மாவிற்கு இன்று. அந்தக் கரணத்தினுக்கேயாம். "காமம், ஸங்கல்பம், சம்சயம், புத்தி, லஜ்ஜை, பயம் இவ்வெல்லாம் மநமேயாம்." என்பனவாதி சுருதி விரோதத்தினால். ஆத்மாவின் நாநாத் தன்மை அவர்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அதுவுமின்று. "ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம் ஒரு தேவன் ஸர்வ பூதங்களிலும் கூடமா யிருக்கின்றான் ஒரே அஜந் இந்த அஜையை (மாயையை) ஸேவிக்கின்றான்.", "இந்த ஜீவ ரூபத்தினால் பிரவேசித்து நான் நாம ரூபங்களைச் செய்வேன்", "எவன் இந்த ஆத்மாவினைக் கொல்லும் கர்த்தாவாகவும் கொல்லப்படும் கர்மமாகவும் அங்கீகரிக்கின்றான்.", "இவ்வாத்மாவினைச் சிலர் ஆச்சர்யம் போன்று பார்க்கின்றார்கள்." என்பனவாதி ஜீவ ஏகத் தன்மையினைக் கூறும் சுருதி ஸ்மிருதிகளின் விரோதத்தினால்.

அவர்களால் அங்கீகரிக்கப்பட்ட மநத்தின் நித்தியத் தன்மையும் பொருந்தாது. "இதனின்றும் பிராணன் உண்டாயிற்று. மநம் எல்லா இந்திரியங்களும் உண்டாயின. ஆகாசம், வாயு, அக்நி ஜலம், ஸர்வத்தினையும் தாரணை செய்யும் பிருதிவி உண்டாயின." என்பதாதி சுருதியின் விரோதத்தினால். இரு வித ஜாதியின் நித்தியத் தன்மை அவர்களால் அங்கீகரிக்கப் ட்டிருக்கின்றது. அதுவும் பொருந்தாது. ஜாதி மாயா காரிய மாகலின். "இந்த ஆத்மாவினின்றும் அந்யமாய வெல்லாம் ஆர்த்த(அநித்திய)மாம். இதில் நாநா வென்பது அற்பமுமில்லை." என்பதாதி சுருதி விரோதத்தினால். அத்வைத மதத்தில் ஆத்மாவினும் பிந்நமாய வேறு எத்



திரவ்யத்திற்கும் நித்தியத் தன்மை அங்கீகரிக்கப்படவில்லை. "எதனினின்றும் இப்பூதம் உண்டாயின." என்பதாதி சுருதியினால், பரமேசுவரனினின்றும் ஸர்வ ஜகத்திற்கும் உற்பத்தி லயம் கூறப்படுதலின். நித்தியத் திரவ்யங்களின் அபாவமாக, அதி லுள்ள அநந்த விசேஷத்தின் அவர்களின் கற்பனையும் மித்தையாம். திரவ்யங்கட்கு பரஸ்பர வியாவிருத்தி வியவஹாரமோ அந்யோந்ய பேதத்தினாலும், பிருதக்த் தன்மை முதலிய தர்மத்தினாலும் ஸித்தமாகின்றது. ஆதலால் விசேஷத்தின் அங்கீகாரமும் வியர்த்தமாம். ஸமவாய ஸம்பந்தத்திற்கும் நித்தியத் தன்மையில்லை. எதனால் "இந்த ஜகத் பூர்வம் ஸத்து ரூபமாகவே யிருந்தது. ஒன்றே அத்விதீயம். ஸத்திய ஞாநாநந்த ரூபப் பிரஹ்மம் இருந்தது" என்னும் சுருதி ஸ்ருஷ்டியின் பூர்வம், பிரஹ்மத்தின் அநந்தத் தன்மை, அத்விதீயத் தன்மைகளைக் கூறி, அதன் ஸித்தியின் பொருட்டு, "எல்லா மட் காரியமும் வாக்கு மாத்திரமாம். மண்ணே ஸத்தியமாம்." என்பதாதி திருஷ்டாந்த சுருதியினால் ஸர்வப் பிரபஞ்சங்கட்கும் மித்தியாத் தன்மை வாயிலாய், பிரஹ்மத்திற்கு அத்விதீயத் தன்மையினைப் பிரதிபாதிக்கின்றது. ஸமவாயம் நித்தியமாயின் அந்தச் சுருதிகட்கு வியாகோபம் (விரோதம்) உண்டாம். ஆதலால் "நித்திய ஸமவாய ஸம்பந்தம்" என்னும் அவர்களின் லக்ஷணம் அஸங்கதமாம். ஸமவாய ஸம்பந்தம் தனது ஸம்பந்தியினும் பிந்நமா? அபிந்நமா? பிந்நமெனினே, ஸம்பந்திகளில் அதன் பிரவிர்த்தி ஸம்யோக ஸம்பந்தத்தினாலா? அல்லது ஸமவாய ஸம்பந்தத்தினாலா? அல்லது அந்யத்தினால் உண்டாகின்றதா? முதற் பக்ஷம் பொருந்தாது. ஸம்யோகம் இரண்டு திரவ்யத்தின் ஆசிரயமாகலின். இரண்டாவதிலும் ஸமவாயம் தன்னால் தனது ஆசிரயத்தி லிருக்கின்றதா? இரண்டாவது ஸமவாயத்தினாலா? முதலாவதில் ஆத்மாசிரய தோஷம் வருதலின். இரண்டாவது அங்கீகரிக்கின் அந்யோந்யாசிரய தோஷத்தினால். மூன்றாவது அங்கீகரிக்கின் சக்கிரிகாப் பிராப்தியினால். நான்காவது அங்கீகரிக்கின் அநவஸ்தையாகலின். ஸமவாயத்தினால் ஸமவாயத்திற்குத் தனது ஆசிரயத்தில் பிரவிர்த்தி ஸித்திக்கவில்லை. மூன்றாவது பக்ஷத்திற் கூறிய வேறு எச் சம்பந்தத்தினாலும் தனது ஆசிரயத்தில்

பிரவிர்த்தி யுண்டாகின்ற தில்லை. இவ்விரண்டு ஸம்பந்தத்தினும் அந்ய ஸம்பந்தம் நியாய மதத்தில் நிரூபியாமையின். ஸ்வரூப ஸம்பந்தம் அங்கீகரிக்கில் யாண்டும் ஸம்யோகாதிகளின் நாசம் வருதலின். ஸமவாய ஸம்பந்தம் இரண்டு ஸம்பந்திகளோடு அபிந்நமா யிருக்கின்ற தென்னும் இரண்டாவது பக்ஷம் கூறினும் பொருந்தாது. நையாயிகர்களால் ஸம்பந்திகளினும் ஸமவாயத்திற்குப் பேதம் அங்கீகரித்தலின், தனது ஸித்தாந்த ஹாநியின் அடை வுண்டாகலின். ஆதலால் ஸமவாய ஸம்பந்தம் ஸ்வரூபத்தானும் சித்திப்பதில்லை. பிரமாணத்தின் அபாவமும் அதன் அஸித்தியின் ஹேதுவாகின்றது.

சக்ஷுராதி முதலிய பிரத்தியக்ஷப் பிரமாணம் அதில் இல்லை. அவர்களால் ஸமவாயம் அதீந்திரியம் என அங்கீகரிக்கப்பட்டிருத்தலின். விசேஷண விசேஷிய ஸம்பந்தத்தினை விஷயமாக உடைய விசிஷ்டப் பிரதீதியும் அநுமாநத்தினுற் ஜநிக்கப்பட்ட அதில பிரமாணமில்லை. அது வேதாந்தத்தில் கொள்ளப்பட்ட தாதாத்மிய ஸம்பந்தத்தின் விஷயமாகலின். அநுமாநம் பிரத்தியக்ஷ உபஜீவியாகலின். அப்பிரத்தியக்ஷ ஸமவாயத்தில் அதன் பிரவிர்த்தி யின்மையின். அர்த்தாபத்தி அவர்களால் அங்கீகரிக்கப்படாமையின். "பிரஹ்மமே இவ்வெல்லாம்" என்பதாதி ஸமாந வேற்றுமையினை யுடைய பதங்கள் பொருந்திய சுருதி வாக்கியத்தில் காரிய காரணம், குணகுணி முதலிய ஸர்வப் பிரபஞ்சத்திற்கும் பிரஹ்மத்தோடு அநிர்வசநீய தாதாத்மிய ஸம்பந்தம் புகலுதலின். சுருதியோ யாண்டும் ஸமவாய ஸம்பந்தத்தினை கூறுவ தில்லை. மாருய் அத்வைத சுருதி பிரஹ்மத்தினும் பிந்நமாக எதற்கும் நித்தியத் தன்மையினை ஸஹிப்பதில்லை. ஆதலால் லக்ஷண ஸ்வரூபப் பிரமாணங்கள் நிரூபிக்கப்படாமையின் ஸமவாயம் ஸமவாயத்தின் நித்தியத் தன்மைகளின் அங்கீகாரம் மநோரத மாத்திரமாம். நான்கு விதம், அல்லது ஐந்து வகையாகிய அபாவத்தின் அவர்களின் கல்பனையும் பொருத்தமுடைத் தன்றும். எதனுல் "ஈண்டு நாநா வென்பது அற்பமும் இல்லை." என்னும் சுருதியோ, பிரஹ்மத்தில் ஸர்வ பிரபஞ்சத்தின் பிரதியோகியினை யுடைய ஒரு அத்தியந்தாபாவத்தையே கூறுகின்றது. அந்த ஐந்து வகையாய அபாவத்தின் கண்டநம் முன்னர் ஐந்து எண்ணிக்கையில் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. அதனுல் ஈண்டுக் கூற வில்லை. ஆதலால் நையாயிகர்களின் கல்பனை சுருதி வசநம், ஆசாரியர்களின் வாக்கியங்களோடு விரோதித்தலின் அவர்களின் கல்பனை முமுக்ஷுக்களால் ஸதா கொள்ளத்தக்கதே யன்றும். "பாடத்தினுலும் தள்ளத்தக்கதாம். அர்த்தத்தினுலும் தள்ளத்தக்கதாம்" என்பதாதி பாஷ்ய வசநப் பிரமாணத்தினுல்.



## 7—8 எண்வகைத்தாய பதார்த்தங்கள்.

### 7—1. புரி.

இப்பொழுது எட்டு எண்ணிக்கை விசிஷ்டத்தினைக் கூறுவாம்:— ஞாநேந்திரியாதி ரூப புரிகளின் பேதத்தினுல் ஜீவன் இருத்தற்கு ஸ்தாநமாகிய புரி எண் வகைத்தாம். அவற்றுள் சக்ஷுராதி முதலிய ஞாநேந்திரியம் ஐந்தும் ஒரு புரியாம். கர்மேந்திரியம் ஐந்தும் இரண்டாவதாம். மநம் முதலிய அந்தக்கரணம் நான்கும் மூன்றுவதாம். பிராணன் அபாநன் முதலிய ஐந்தும் நான்காவதாம். ஆகாசம் முதலிய பூதங்கள் ஐந்தும் ஐந்தாவதாம். இச்சா ரூப காமம் ஆறுவதாம். மூவித கர்மம் ஏழாவதாம். ஞாந கர்ம ஸம்ஸ்கார ரூப வாஸனை எட்டாவதாம். அல்லது காரியாஜ்ஞாந நான்கு விதமும் எட்டாவது புரியாம். கர்ம பதத ஜீவன் இப்புரிகளில் அபிமாநியாய் இதன் மேல் ஆரூடனுய்க் கர்ம பல போகத்தின் பொருட்டு லோகாந்தரத்தில் சொல்லுதல் வருதலைச் செய்கின்றுன். ஆகையால் இவற்றிற்குப் புரி அஷ்டகம் எனப்படுகின்றது. இவற்றின் லக்ஷணமோ அந்தந்த அவசரத்தில் பூர்வங் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால் மீண்டும் கூற வில்லை.

(பரமேசுவரன் மூற்புசன்ற புரிகளை ஜீவர்களின் பிராரப்த கர்ம பல போகத்தின் பொருட்டும், தர்மாதி அநுஷ்டாநத்தின் பொருட்டும், பிராரப்த பல போக பரியந்தம் ஜீவர்கள் இருத்தற்கு வீடாக ஸிருஷ்டித்தனர். பக்ஷிகள் இருத்தற்கு ஸ்தாநமாகிய ஆலயம் போன்று. அல்லது சம்சாரிகள் இருத்தற்கு ஸ்தாநமாகிய பாஹிய கிருஹம் போன்று.

அங்ஙனமாயினும், ஜீவன் ஸ்வரூபாஜ்ஞான தோஷத்தினால் தாதாத்மிய அத்தியாஸ வாயிலாய் இவற்றினைத் தனது ஸ்வரூபமாக அங்கீகரிக்கின்றனன். அந்த அங்கீகாரத்தினாலேயே விஷயாசை யுடையவனாய் அநந்த உயர்வு தாழ்வான அவஸ்தைகளை யடைகின்றனன். ஒரு காலத்தும் மோக்ஷத்தின் பொருட்டுத் தர்மாதி யநுஷ்டானஞ் செய்வதில்லை, ஆதலால் அஹோ அஜ்ஞ ஜீவர்களின் பிராந்தியின் வைபவம். எங்ஙனம் வாநரம், ஸிம்ஹம் ஆகிய பசு தமது சரீரத்தின் சாயையினை தானே தானாய் அங்கீகரித்ததினால் வாநரம் ஸிம்ஹத்திற்கு பக்ஷியமாய்விட்டதோ, ஸிம்ஹம் கிணற்றில் விழுந்ததோ, அங்ஙனமே கிருஹத்தை யுடைய ஜீவனும் தேஹத்தைத் தானே தானாய் அங்கீகரித்துக் கீழே விழுந்து காலனுக்கு பக்ஷிய மாகின்றான். ஆதலால் ஜிஜ்ஞாஸுக்களாலும் இந்த அஷ்ட புரியினைத் தானே தானாக அங்கீகரித்தல் யோக்ய மல்ல.)

### 7—2. பிரகிருதி.

அஷ்டப் பிரகிருதியினைக் கூறுவாம்:—பிருதிவி, ஜலம், அக்நி, வாயு, ஆகாசம் என்னும் ஐந்தும், மநம் புத்தி அஹங்காரம் என்னும் மூன்றும் சேர்ந்து எட்டுப் பிரகாரமாகிய அபரப் பிரகிருதியாகின்றது. ஆண்டு "பூமி, ஜலம், அநலம், வாயு, கம், மநம், புத்தி, அஹங்காரம் என்னும் எட்டும் எனது அபரப் பிரகிருதி, பரப்பிரகிருதியினின்றும் பிந்நமாய் இருக்கின்றது." எனப் பகவத் வசநமிருக்கின்றது. இவற்றின் லக்ஷணமும் முன்னர்க்கூறப்பட்டிருக்கின்றது, அவ்வச் சமயத்தில். இந்த அஷ்ட வித அபரப் பிரகிருதியின் விவேகத்தினால் அதிகாரியாகிய ஜீவன், ஆத்மாவின் அஸங்கத் தன்மை, சேதநத்தன்மைகளை நிச்சயஞ் செய்து அஷ்டப் பிரகிருதியின் ஸமுதாய ரூப ஸ்தூல ஸூக்ஷ்ம இரு வித சரீரங்களில் மீண்டும் தாதாத்மிய அத்தியாஸம் செய்யற்க. வேதாந்தத்தில் இதனைக் கூறுவதற்கு இதுவே பலமாம்.

### 7—3. ஸமாதியின் அங்கம்.

ஸமாதியின் எட்டு அங்கத்தினைக் கூறுவாம்:—யமம், நியமம், ஆஸநம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியாநம், ஸமாதி



என யோகத்திற்கு அங்கம் எட்டாம். சிலரோ அவற்றினை அங்கியாகிய நிர்விகல்ப ஸமாதியின் அங்கமென்கின்றனர். இப் பக்ஷத்தில் அஷ்டாங்கத்தினுள்ள கூறிய ஸமாதி ஸவிகல்பம் என்னும் பெயரினையுடைய ஸம்பிரக்ஞாத ஸமாதி யெனப்படும். சிலரோ அங்கியாகிய ஸம்பிரக்ஞாத ஸமாதியின் எட்டு அங்க மென்கின்றனர். இப் பக்ஷத்தில் திரிபுடி யின்றிய தியேயாகார விருத்தி ரூப ஸவிகல்ப ஸமாதியாகிய அங்கியின் பிந்நமான அஷ்டாங்கத்தி லுள்ள திரிபுடியோடு கூடிய ஸவிகல்ப ஸமாதியின் அங்கமெனப்படுகின்றது அங்காங்கி யென்னும் இரண்டற்கும் பேதம் அவசியமாகலின். ஐந்து வகைத்தாய யமம், ஐந்து வகைத்தாய நியமம், மூன்று வகைத்தாய பிராணாயாமம் என்னும் மூன்றும் முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றன. கர,(கை) சரணாதி (கால் முதலிய) ஸமஸ்தாந விசேஷ ரூப பத்மகம் ஸ்வதிகம் முதலியன யோக சாஸ்திரத்திற் கூறிய நாநா வித ஆஸநமாம். இந்திரியங்களைத் தன் தன் விஷயங்களினின்றும் திருப்புதல் பிரத்தியாஹாரமாம். சித்தத்தினை ஒரு விஷயத்தில் கட்டுதல், அல்லது ஸ்தாபித்தல் தாரணையாம். வேறு விருத்திகளின் விச்சேதத்தோடு கூடிப் பிரத்தியத்தின் ஆவிர்த்தி தியாநமாம். விர்த்தியின் விச்சேத மின்றித் திரிபுடி ஸஹிதப் பிரத்யயத்தின் ஆவிர்த்தி ஸவிகல்ப ரூப அங்க ஸமாதியாம். விச்சேத மின்றித் திரிபுடி யின்றிய தியேயாகாரம் அங்கியாகிய ஸவிகல்ப ஸமாதியாம். அல்லது விச்சேதம் இன்றித் தியேயாகாரப் பிரத்தியத்தின் ஆவிர்த்தி வேறு பக்ஷத்தில் அங்க ஸமாதியாம். ஸர்வ விருத்தி நிரோதமாகிய நிர்விகல்பம் அங்கி ஸமாதியாம். தாரணை, தியாநம், ஸமாதி என்னும் மூன்றற்கும் ஒரு விஷயத் தன்மையாயினும் பிரத்யயங்களின் விச்சேத, அவிச்சேதங்களின் தாரதம்மியத் தன்மைகளினால் அவற்றிற்குப் பேதம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. யமம் முதல் பிரத்யாஹார பரியந்தமாய ஐந்து அங்கங்களும் பகிரங்கமெனப்படும். தாரணை முதல் ஸமாதி பரியந்தமான மூன்றும் அந்தரங்கமெனப்படும். முதலதி லுள்ள ஐந்து அங்கங்களும் மூன்று அந்தரங்கத்திற்கும் உபகாரம் செய்வதாம். மூன்று அந்தரங்கமும் அங்கி ஸமாதிக்கு உபகாரம் செய்வதாம். ரஜோ குண தமோ குண விர்த்திகளால் பருத்திருக்கும் சித்தத்தினை ஜயித்திற்கு உபாயமாக

இந்த அஷ்டாங்க யோகம் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்ற சத்வ விருத்திப் பிரதான புருஷனுக்கோ சித்தத்தை ஜயிப்பதற்கு உபாயமாக விவேக ஞானமே சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றது. அதனால் அதிகாரிகள் தமது அதிகார அநுஸாரம் ஒரு ஸாதனத்தைக் கொண்டு தமது சித்தத்தினை ஜயஞ் செய்யவேண்டும் என அறிக.

## 7—4 பிரமசரியத்தின் அங்கம்.

பிரஹ்மசர்யத்தின் அஷடாங்கத்தினை அதன் பிரதியோகியின் நிரூபண பூர்வகம் கூறுவாம்:— இச்சிக்கப்பட்ட ஸ்திரீயின் தரிசநம் மைதுநத்தின் முதல் அங்கமாம். அவளது ஸ்பரிசநம் இரண்டாவதாம். அந்த ஸ்திரீயினோடு கேலி (பரியாஸம்) மூன்றாவதாம். அந்த ஸ்திரீயினைக் கீர்த்தித்தல் நான்காவதாம். இரகஸ்யமாகப் பேசுதல் ஐந்தாவதாம். அந்த ஸ்திரீயின் ஸங்கல்பம் ஆறாவதாம். அவளது மைதுநத்தின் நிச்சயம் ஏழாவதாம். ரமிக்கின்ற கிரியையினால் உண்டாம் ஆநந்தம் எட்டாவதாம். "இந்த அஷ்டாங்கத்தோடு கூடியதனை மைதுநம் என மஹா புத்திமான்களாகிய பண்டிதர்கள் கூறுகின்றார்கள். அதன் விபரீதமான அஷ்டாங்கத்தினை யுடையது பிரஹ்மசர்யமாம். அது முமுக்ஷுக்களால் அநுஷ்டிக்கத் தக்கதாம்" என்னும் பிரமாணத்தினால், அஷ்ட விதம் பிரஹ்மசரியமாம்.

### (1) தரிசநம்

(1) இராகத்தோடு இச்சிக்கப்பட்ட பர ஸ்திரீ விஷய ஞானம் தரிசநம்.

### (2) பரிசநம்.

(2) இராக பூர்வம் அந்த ஸ்திரீயின் அங்கத்தினை ஸ்பரிசித்தல் ஸ்பரிசநமாம்.

### (3) கேலி.

(3) பிரியத்தோடு பரிஹாஸம் முதலிய வியவஹாரம் கேலியாம்.



### (4) கீர்த்தநம்.

(4) பிரியத்தோடு ஸ்திரீயின் ஸௌந்தரியம் முதலிய குணங்களை வர்ணித்தல் கீர்த்தநமாம்.

### (5) குஹ்ய பாஷணம்.

(5) காம இச்சையோடு ஏகாந்தத்தில் பேசுதல் குஹ்ய பாஷணமாம்.

### (6) சங்கற்பம்.

(6) இது எனக்குக் கிடைக்குக என்னும் ஆகாரமாய ஸ்திரீ விஷய திட இச்சை ஸங்கல்பமாம்.

### (7) அத்யவசாயம்.

(7) இவளோடு கூடியே நான் ரமிப்பேன் என்னும் நிச்சயம் அத்தியவஸாயமாம்.

### (8) கிரியா நிர்விருதி.

(8) அவளோடு ரமித்தல் கிரியையினால் உண்டாகின்ற விஷயாநந்தத்தின் அநுபவம் நிர்விருதி (உத்பத்தி யாம்.)

(முற் பிரமாணத்திற் கூறிய மைதுநத்தின் அஷ்டாங்கத்திற்கு இது லக்ஷணமாம் இவ் வஷ்டாங்கங்கள் இன்றி இருத்தல் பிரஹ்மசரியமாம். அது பெரும் பிரயத்நத்தினால் ஸாதிக்கத் தக்கதாம். இப் பிரஹ்மசரியம் கிருஹஸ்தன் முதலிய நான்கு ஆசிரமத்தவர்க்கும் ஸாதாரண தர்மமாம். எந்தக் கிரகஸ்தன் பாணிக் கிரஹணம் செய்த தன் ஸ்திரீயினிடத்திலேயே ஸந்துஷ்டனா யிருக்கின்றான். அந்ய ஸ்திரீயினை மாதா தங்கை போன்று அறிகின்றான். அவனும் சாஸ்திரத்தில் பிரஹ்மசாரி எனப்படுகின்றான்.

யஞ்ஞோபவீதத்தின் பின் பிரஹ்மச்சரியத்தினைத் தாரணை செய்து, வித்தியாக் கிரஹணத்தின் பொருட்டுக் குரு குலத்தில் வாசஞ் செய்பவனும் பிரஹ்மச்சாரி எனப்படுகின்றான். எந்த ஸந்நியாஸி இந்த அஷ்டவித பிரஹ்மச்சர்யத்தினைத் தரிக்கின்றான். அவன் சாஸ்திரத்தில் ஊர்த்வ ரேதஸ் எனப்படுகின்றான். அங்ஙனமே வாநப் பிரஸ்தனு மாவன். அதனால் நான்கு ஆசிரமத்தவரும் இதன் அப்பியாசம் செய்தல் உசிதமாம்.)

## 7—5 பாசம்.

எட்டுப் பாசத்தினைக் கூறுவாம்:—கிருணை முதலிய பேதத்தினால் பாசம் எண் வகைத்தாம். "கிருணை (தயை) சங்கை பயம் லஜ்ஜை ஜுகுப்ஸா (நிந்தை) குலம் சீலம் வித்தம் எனப் பாசங்கள் எட்டெனக் கூறப்படுகின்றது." என்னும் பிரமாணத்தினால்

### (1) கிருணை பாசம்.

(1) மாதா பிதா முதலியோர் இன்றிய துக்கியாகிய ஏழை ஜநங்களைப் பார்த்துத் தனது புத்தியால் அவர்களை இரக்ஷித்தல் போஷித்தலில் தத்பரத் தன்மை கிருணை ரூப பாசமாம். எதனால் ஜட பரதர் புருஷார்த்தத்தினின்றும் பிரஷ்டராயினர். அதனால் மோக்ஷத்தின் பிரதிபந்தகத் தன்மையினால் இதனைப் பாசம் எனப்படுகின்றது.

### (2) சங்கை பாசம்

(2) சுருதி வாக்கியத்தில் விசுவாஸம் இன்றித் தனது போக ஆசையின் பொருட்டு ஞாந வைராக்கியம் முதலிய மோக்ஷ சாதந அநுஷ்டாநத்தில் ஸம்சயம், அல்லது அஸம்பாவனை சங்கா (சங்கை) பாசமாம். ஸாதநங்களின் அநுஷ்டாநத்தினால் மோக்ஷ பலத்தின் பிராப்தி யுண்டாகுமோ இன்றோ? முன்னர் அநுஷ்டித்த புருஷர்கட்குப் பலப் பிராப்தி பார்க்கப்படாமையின் என்பது ஸம்சயமாம். அநேக விஷய லம்படருக்கு மோக்ஷ ஸாதநத்தில் விமுகத் தன்மையினைப் பார்த்து உண்டாகின்ற விருத்தப் பிரதீதி அஸம்பாவனையாம். இச் சங்கையினால் ஸத்துக்களின் ஸமாகமம் முதலியவற்றில் விமுகத்தன்மையும், இஷ்ட விஷய தியாகத்தில் ஸஹநமின்மையுமுண்டாகின்றன. ஆதலால் மோக்ஷப் பிரதிபந்தகத் தன்மையினால் சங்கை பாச மெனப்படுகின்றது.

### (3) பய பாசம்.

(3) சுருதி ஆசாரியர்களால் கூறப்பட்ட எல்லாவற்றின் தியாகத்தினை யநுஷ்டித்தலால் எனக்கு ஜீவநம் எங்ஙனம் உண்டாம்? எங்ஙனம் பாதிநமாய்ச் சரீரம் முதலியவற்றின் நிர்வாகம் உண்டாம்? என்னும் பயத்தினால் துச்சமாகிய லௌகிக ஸாதந விஷயத்தினை விடுத லின்மை பய பாசமாம். அதுவும் மோக்ஷ மார்க்கப் பிரதிபந்தக மாதலின் பாசம் எனப்படுகின்றது.



### (4) லஜ்ஜை பாசம்.

(4) தநம் சேவகன் முதலிய ஸம்பத்துக்களினால் தன்னைப் பெரிதாக அறிந்து லோக லஜ்ஜையினால் எப்புருஷன் சுரோத்திரீயப் பிரஹ்மநிஷ்டரின் ஸமீபத்தி லுள்ள ஸாது ஜநங்களிடத்து வேதாந்த சிரவணாதியின் பொருட்டுச் செல்லுத லில்லை. அதனால் ஸகா மூடனாகவே யிருக்கின்றான். தன்னையும், அந்நியனையும் உத்தாரணஞ் செய்வதில் அஸமர்த்த னாகின்றான். அது லஜ்ஜா பாசமாம். அதுவும் மோக்ஷத்தின் பிரதிபந்தகமாதலின் பாசமெனப்படும்.

### (5) ஜுகுப்ஸா பாசம்.

(5) விஷய லம்படத் தன்மையினால், அல்லது குசங்கத் தன்மையினால் பழமையான சுருதி ஸ்மிருதி ஆசாரியர்களின் மதம் பஹிர்முகர்களால் நிந்திக்கப்படுகின்றது. அவற்றின் வசநத்தில் சிரத்தை யின்றியவனாதலின். அது ஜுகுப்ஸை என்னும் பெயரினையுடைய பாசமாம். "ஹே அர்ஜுந! எவன் எனது மதத்தினை நிந்தை செய்கின்றான். அவனிடத்து இந்தக் கீதையின் இரகசியத்தினைக் கூறற்க." என்னும் பகவத் வசநத்தினால். நிந்தையும் மோக்ஷப் பிரதிபந்தகமாதலின்.

### (6) குல பாசம்.

(6) நான் பிராஹ்மணாதி உத்தம குலத்தில் ஜநித்திருக்கின்றேன். எங்ஙனம் தாழ்ந்த குல ஸாதுக்களோடு ஸம்பந்தம் செய்வேன் என்று சித்தத்தி லுண்டாம் அபிமாநம் குல ரூப பாசமாம். சிரேஷ்ட குலத்தில் பிறத்தல் சரீரத்தின் தர்மமாம். ஆத்மாவின் தர்ம மன்றாம் என அறியாது, எதனால் ஸாது ஜநங்களின் ஸம்பந்த மின்மையினால் மோக்ஷ ரூப புருஷார்த்தத்தின் நழுவுதல் உண்டாகின்றது. ஆதலால் குல பாசமும் பிரதிபந்தகம் எனப்படுகின்றது.

(7) சீல பாசம்.

(7) நான் வைஷ்ணவாதி தர்மங்களை அடைந்து ஸுசீலனாய் இருக்கின்றேன். மற்றையோ ரெல்லாம் ஸுசீல ரல்லர் என்னும் அபிமாநம் சீல ரூப பாசமாம். அதுவும் ஸாதுக்கள் வருகவின்மைக்கு ஹேதுவா யிருத்தலின் பாசம் எனப்படுகின்றது.

(8) தந பாசம்.

(8) நான் தநம் கிரஹம் முதலிய ஸம்பத்துக்களினால் உயர்வுடையவனா யிருக்கின்றேன். எங்ஙனம் தநமும், ஸர்வ ஸம்பத்துக்களும் இன்றிய வித்துவானோடு ஸம்ஸர்க்கஞ் செய்வேன். எதனால் இவர்கள் எங்ஙனம் அநந்த ஆசிரமிகள் என்னினும் ஏழையாய்ப் போஜநாதிகளை என்னிடத்தில் பெற்றுக் கொண்டு சரீர நிர்வாகத்தினைச் செய்கின்றனர். என்னும் அபிமாநம் வித்த (தந) பாசமாம். அதுவும் மோக்ஷப் பிரபந்தக மாகலின் பாசம் எனப் படுகின்றது.

(ஆகலால் ஜிஜ்ஞாஸுக்கள் இவ் வெட்டுப் பாசத்தினையும், மோக்ஷ விரோதி யென அறிந்து, இவற்றில் தியாக புத்தியையே செய்க. எதனால், நிஷ்காம விரக்த புருஷனே தநாதி ஸம்பத்தினையுடைய ராஜஸீ தாமஸீ புருடர்களை வைராக்கியத்தின் பிராபல்யத்தினாலும், பாதிதாநுவிர்த்திகளினாலும், மலத்தின் கிருமி, அல்லது விஷக் கிருமிகளாக அறிகின்றான். அவர்களின் லௌகிக நசுவரமஹத் தன்மையினைத் துச்சமாக அறிகின்றான்.)

7—6. மதம்.

எட்டு மதத்தினைக் கூறுவாம்:— குல மதம் முதலிய பேதத்தினால் மதம் எண் வகைத்தாம். "குலம் சீலம், தநம், ரூபம், யௌவநம், வித்தை, தபம், இராஜம், என மதம் எட்டாம்" என்னும் வசநத்தினால்.

(1) குல மதம்.

(1) நல்ல குலத்தில் தேகத்தின் உத்பத்தி மாத்திரத்தினால் தன்னிடத்தில் உண்டாகின்ற ஸர்வோத்கிருஷ்ட ரூப கர்வம் இரஜோகுண பரிணாம ரூப அந்தக்கரண விருத்தி விசேஷம் அந்யர்களைத் திரஸ்கரித்தற்கு ஹேதுவாய், அல்லது அந்யர்கட்குச் செட்டகுலத் தன்மையினைச் சம்பாதித்தல், அல்லது நிக்கிருஷ்டத் தன்மையினைச் சம்பாதித்த லாகின்றது. அது குல மதமாம். அது ஆஸுரீ ஸம்பத்தில் அடக்கமாம். எதனால் ஜீவர்களின் பந்தத்தின் பொருட்டாகின்றதோ, அதனால் முமுக்ஷுக்களால் ஸதா தள்ளத் தக்கதாம்.



(2) சீல மதம்.

(2) உள்ளில் சுத்தியின் ஹேது இராக த்வேஷாதிகளின் தியாக மின்றி, காரணத்தினாலும், ஸ்வரூபத்தினாலும் அசுத்தமான சரீரத்தை மீண்டு மீண்டும் சௌசாதிகளினாலும், சக்ர அடையாளம் முதலிய ரூப வெளி ஸம்ஸ்காரங்களின் தாரணத்தினாலும், "நான் ஸத் சக்ர முதலியவற்றினால் சுடப்பட்டவனா யிருக்கின்றேன். ஸுசீலனாப் சுத்தனா யிருக்கின்றேன்" என்று சித்தத்தி லுண்டாம் ஸுசீலத் தன்மையின் அபிமாநம் இரஜோ குண பரிணாம அந்தக்கரண விர்த்தி விசேஷ ரூபமாம். அந்யர்களின் சீலத் தன்மை யின்மையினைச் சாதிப்பதா யிருக்கின்றது. அது சீல ரூப மதமாம் அதுவும் ஆஸுரீ ஸம்பத்தாகலின் ஸாதுக்களால் அங்கீகரிக்கத் தக்க தன்றாம்.

(3) தந மதம்.

(3) அநந்த அநர்த்தம், அந்யாயங்களினால் ஸாதிக்கப்பட்ட, அல்லது டம்பம், தீநத் தன்மையினால் ஸாதிக்கப்பட்ட தநத்தினையடைந்து, நான் பெரிய தாதா, பெரும் யஜ்ஞ தாநாதிகளைச் செய்கின்றேன். அதிதி, வந்தவர்களுக்கு எனது கிரஹத்தில் போஜநஞ் செய்விக்கின்றேன். எனக்குச் சமாநம் வேறு யார் இருக்கின்றார்கள்? என்று உண்டாம் சித்தத்தின் கர்வம் ரஜோகுண பரிணாம விர்த்தி விசேஷ ரூபமாம் அது தந மதமாம். அதுவும் ராஜஸ தாமஸமாகலின். அதிகாரிகளால் தள்ளத் தக்கதாம். அந்யாயம் முதலியவற்றால் ஸம்பாதிக்கப் பட்ட தநம் முதலிய ஸம்பத்துக்கள் அநர்த்தஞ் செய்வதாயும் க்ஷணிகமாயு மிருத்தலின்.

### (4) ரூப மதம்.

(4) பழமையான கர்மத்தினுல் ஸம்பாதிக்கப்பட்ட சரீரத்தின் ஸௌந்தரியத்தினை யடைந்து, "நான் உத்தம ரூபம் உடையவனு யிருக்கின்றேன். எனது ரூப லாவண்ய ரஸத்தினை யடைந்து அநேக சுந்தர ஸ்திரீகள் மோஹிதர்களாய் வச மாகின்றனர். எனது ரூபத்திற்கு ஸமானமாக வேறு யார் ஸுந்தர ரூபமாக இருக்கின்றனர்" என் றுண்டாம் சித்தத்தில் அபிமானம், சரீரத்தி லுள்ள நாநா வித அமங்கலத் தன்மையின் அஜ்ஞானத்தினுல் தோற்றுகின்றது. அது ரூப மதம் எனப்படுகின்றது. அதுவும் அஸுர தர்ம மாகலின் ஸாத்விக ஸாதுக்களால் தியாகம் செய்யுத் தக்கதாம். சரீர சுந்தரத் தன்மை பரிணுமியாய் ஒரு காலத்த தாகலின்.

### (5) யௌவந மதம்.

(5) ஸத்துக்கள் வருத லின்றி நாநா விதக் காமக் குரோதாதி அநர்த்தத்தின் ஹேதுவாகிய க்ஷணிக யௌவநாவஸ்தையை யடைந்து, "நான் பலவான், புஷ்டியா யிருக்கின்றேன். பலத்தோடு கூடிய அறிவுடையோன், என்னினும் ஸ்திரீயினிடத்தில் ரமண சக்தி யாரிடத்தி லிருக்கின்றது." என்று உண்டாகின்ற ஸித்தத்தில் கர்வம் யௌவந அவஸ்தையின் சலந ஸ்வபாவத்தினை அறியாமையினுல் உண்டாகின்றது. அது யௌவந மதமாம். அதுவும் ராஜஸ தர்ம மாகலின் முமுக்ஷுக்கள் அதனை ஆதரவு செய்யற்க. ஜடா(வயோதிக)ரவஸ்தையில் அது நாச மாகுதலின்.

### (6) வித்யா மதம்.

(6) லோகத்தி லுள்ளவர்களை வஞ்சித்தற் பொருட்டுப் பாஷண்ட மதத்தில் சித்தித்த உபாஸனையினை யடைந்து, அல்லது ஜயித்தல் ஸந்மானம் பூஜை முதலியவற்றின் பொருட்டு ஸூக்ஷ்ம வஸ்துவின் தரிசநத்தில் அயோக்கியமாகிய பஹிர் முகத்தன்மையின் ஹேதுவாகிய அநாத்ம சாஸ்திரத்தின் ஞானத்தினை யடைந்து, "நான் உத்தம தியாகி, நிரந்தர தியாக தத்பரன். நான் உத்தம பண்டிதன், ஸபைகளில் அநந்த பண்டிதர்களின் ஜயத்தினை யடைந்திருக்கின்



றேன்." என்று அந்பர்களின் வஞ்சந பராஜயத்தின் பொருட்டுச் சித்தத்தி லுண்டாம் கர்வம் வித்தியா மதமாம். அதுவும் நன் ஞாநமடை வின்றி வியர்த்த நிஷ்பலமாய் இருக்கின்றது. "எப் புருஷன் சப்தப் பிரஹ்மத்தில் குசலனுய் இருக்கின்றுன். பரப் பிரஹ்மத்தில் குசல மின்றி யிருக்கின்றுன். அப்பொழுது அவன் ஆசிரமத்தினைக் கிரஹித்ததிலும், வேத அத்தியயநம் முதலியவற்றிலும் உண்டாய சிரமம், சிரமம் பல மெனக் கூறப் பட்டிருக்கிறது. எங்ஙனம், வரட்டுப் பசுவின் சேவையினுல் புருஷனுக்குச் சிரமமாம்." என்னும் பிரமாணத்தினுல். நல்லவித்தையினை யுடைய புருஷனே இவ்வாறு ஒரு காலத்தும் மதஞ் செய்வ தில்லை. ஸம்சய விபரீத மின்றிப் பிரஹ்மாத்ம தத்துவத்தினையே உள்ளில் அறிந்திருக்கின்றுன். அதிகாரிகளுக்கும் அறிவிக்கின்றுன். எதனுல் ஒருவனின்றும் மற்றவரிடத்தில் வித்தையின் அதிசயம் ஸர்வஜ்ஞனுகிய விஷ்ணு பரியந்தம் கேட்கப்படுகின்றதோ. அதனுல் தன்னினும் அதிகமாகிய பண்டிதர்களால் அந்த அபிமாநியாகிய பண்டிதனும் பராஜய மடைகின்றுன் என்று அறிந்து, அந்த நல்ல ஞானத்தினை யுடைய புருஷன் ஆஸுர தர்ம அபிமாநத்தின் அங்கீகாரஞ் செய்வ தில்லை.

### (7) தப மதம்.

(7) சரீரம் வாக்கு மந ரூப மூவித ஸாத்விக தபத்தின், அல்லது மந இந்திரியத்தின் ஏகாக்ரத் தன்மை ரூப தபத்தின் தியாக பூர்வகம் சரீரத்திற்கும், அதி லுள்ள ஆத்மாவிற்கும், கேவலம் கிலேச ஹேதுவாய தாமஸீ தபஸினை லோகத்தி லுள்ளவர்கள் கொள்ளுதற்பொருட்டு அநுஷ்டானஞ் செய்து, "நான் பெரும் தபஸ்வியாய் இருக்கின்றேன். உஷ்ணம் சீதம் முதலிய ருது தர்மங்களைச் சகிக்கின்றேன். பஞ்சாக்நி தாபம் முதலியவற்றினைச் செய்கின்றேன். அநுக்ரஹ, நிக்ரஹங்களில் ஸமர்த்தனு யிருக்கின்றேன்". என்று மநத்தி லுண்டாம் தமோ குண பரிணும ரூப கர்வம், தனக்கும் அந்யனுக்கும் அநர்த்தத்தினைச் செய்வதாகின்றது. அது தப மதமாம். அது தாமஸீ ரூபமா யிருத்தலின், அத்தியந்தம் விடத் தக்கதாம். குரோதம் முதலியவைகளால் கீழே விழுதற்கு ஹேதுவாகலின்.

### (8) ராஜ மதம்.

(8) யாதாம் ஒரு பழமையான ராஜஸீ, தாமஸீ தபஸஸின் பிரபாவத்தினால் அமாத்தியன், மந்திரி, பொக்ஷம் முதலிய ஸாமக்கிரியையினையும், சதுரங்க சேனையாகிய ஸாமக்கிரியையினையும் அடைந்து, "நான் அதிக ராஜாவாய்ச் சக்கரவர்த்தியாய் இருக்கின்றேன். மற்றைய மண்டலேசுவரராகிய அரச ரெல்லாம் என்னை யநுஸரித்துக் கப்பம் கட்டுகிறவர்களா யிருக்கின்றனர். எனதாஞ்ஞை நாச மாவ தில்லை. நான் பிரஜைகளைப் பாலிப்பவன்" என்று சித்தத்தில் உண்டாம் இரஜோ குண பரிணாம ரூப அபிமாநம் ராஜ்ய மதமாம். அதுவும் மோக்ஷ மார்க்கமாகிய ஞாநத்தின் சுர்க்கல (பிரதிபந்தக)மாம். தர்ம நியாய மின்றிப் பிரஜைகட்குக் துக்கம் முதலியவற்றினைக் கொடுத்தலினால் கீழே விழுவதற்கு ஹேதுவாகின்றது. ஸ்வப்ந சிருஷ்டி போன்று நசுவரமா யிருக்கின்றது. ஆதலால் முமுக்ஷுக்கள் இதனையும் விரும்புவ தில்லை.

## 7—7. மூர்த்தி மதம்.

எட்டு மூர்த்தி மதத்தினைக் கூறுவாம்:—பிருதிவீ மதம் முதலிய பேதத்தினால் மூர்த்தி மதம் எண் வகைத்தாம்.

### (1) பிருதிவி மதம்.

(1) அவற்றுள், சரீரத்தி லுள்ள பிருதிவி மதம் என்பது பிருதிவியினால் தனது குணங்களினிடத்து ஜீவனை ஆகர்ஷணம் செய்வதாம் ஆகர்ஷணம் என்பது சரீரத்தி லுள்ள பிருதிவியின் ஹஸ்தி முதலிய ஐந்து அம்சங்களோடு ஜீவனுக்குத் தாதாத்மிய ஸம்பந்தம், அல்லது ஹஸ்தி யாகிய பிருதிவி மாத்திரத்தில் நான் என்னும் அபிமாநமாம். அது ஆவிர்ப்பவிக்கின் ஜீவன் தமோகுணத்தினாற் பூரிக்கப்பட்டவனாய் பாதம் முதல் சிரஸ் பரியந்தம் ஆகிய இச் சரீரம் எலும்பு, மாம்ஸம் முதலியவைகளின் கூட்டமாகிய "இவ்வளவே நான்" என்று ஜீவன் அபிமாநம் செய்கின்றான். லௌகிக வைதிக வியவகாரத்தினால் மூடனா யிருக்கின்றான். தனது அம்சத்தோடு கூடிய பிருதிவி அத்தியந்தம் ஜடமாகலின் ஜீவனும். அவ்வளவு மாத்திரத்தில் அதன் ஸ்வபாவமாகலின் இது பிருதிவி மதமாம்.



### (2) ஜல மதம்.

(2) ஜல மதமென்பது பூர்வம் போன்று ஜலத்தினால் தன் குணத்தில் ஜீவனை ஆகர்ஷித்தல், அல்லது அதன் அபிமாநமாம். அது உதயமாயின் இந்த ஜீவன் ரஜோகுணத்தினா லுண்டான காம ரஸத்தினால் பூரிக்கப்பட்டு ஸ்திரீ போக இச்சையினால் அதன் அநுகூல வியாபாரத்தினை யுடையவனாய்ச் சுக்ல சோணித விருத்தியின் ஹேதுவாகிய வஸ்துக்களைச் சேவிக்கின்றான். ஸ்திரீ ரமணத்தில் ரமிப்பவ னாகின்றான்.

### (3) அக்நி மதம்.

(3) அக்நி மத முண்டாயின் இரஜோ குண தமோ குணங்களால் பூரிக்கப்பட்ட ஜீவன் மிகுந்த பசி ஆசையினை யுடையவனாகின்றான். நித்திரை சோம்பல் முதலியவைகளினால் வியாபிக்கின்றான். பசி முதலியன அக்நியின் அம்சமாகலின்.

### (4) வாயு மதம்.

(4) பவந (வாயு) மத முண்டாயின் இரஜோ குண பரிணாம ரூப விக்ஷேபத்தினாற் பூரிக்கப்பட்டு இஷ்டப் பிராப்தியின் இச்சையினால் அந்ய தேசத்திற்குப் போதல், வருதல் உடையவனாகின்றான். இங்கு மங்கும் ஓடுதல், நடத்தல் என்பனவற்றில் ரமிப்பவனாகின்றான் என்பது பொருளாம். சலநம் முதலியவைகள் வாயுவின் அம்ஸமாகலின்.

### (5) ஆகாச மதம்.

(5) ஆகாச மதம் உண்டாகில் இரஜோ குணத்தால் பூரிக்கப்பட்டு யானை குதிரை முதலியவற்றில் ஏற இச்சை யுடையவனாகின்றான். இராக த்வேஷ பயாதிகளாற் கவரப்பட்டுச் சாமக் குரோதாதி பரனா யிருக்கின்றான். இராகத் வேஷாதிகள் ஆகாசத்தின் குண மாகலின்.

### (6) சசி மதம்.

(6) சரீர சம்பந்தியாகிய ஸூக்ஷ்ம அம்ச ரூப சசி (சந்திர) மதம் இருக்கில் சீதளத் தன்மையினால் பூரிக்கப்பட்டு, "என்னால்

செய்யப்பட்ட இது இஷ்ட காரியமாமா? அல்லது வேறு வகைத் தாமா? என்னும் சங்கையோடு கூடினவனுக் கிஞ்சித் காலம் ஜீவன் தூஷ்ணீம் பூத அவஸ்தையில் இருக்கின்றான். சந்திரனது ஸ்வபாவம் தாப நாசத்தையும், சாந்தியையும் செய்வதாகலின்.

(7) சூர்ய மதம்.

(7) சரீர சம்பந்தியாகிய ஸூர்ய மதம் உண்டாகில் இந்த ஜீவன் குரோதாக்கினியினால் பூரிக்கப்பட்டு "இஷ்டத்திற்கு விரோதியாயிருந்த இச் சத்ருவை நான் கொன்றேன், மற்றவன் கொல்லத் தக்கவன் எங்ஙனம் கொல்வேன்" என்னும் விகல்பத்தோடு கூடித் தாபத்தை யடைகின்றான், ஸூர்யனது ஸ்வபாவம் தாபம் செய்வதாகலின்.

(8) ஆத்ம மதம்.

(8) லிங்க சரீரத்தில் தாதாத்மியத்தினை யடைந்த ஆத்ம மதம் ஆவிர்ப்பவிக்கில் அஹங்காரத்தால் பூரிக்கப்பட்டு, "வித்தை ரூபம், தநம், குலம், யஜ்ஞம், தாநம், முதலியவைகளால் எனக்கு ஸமாநமாக எவர் இருக்கின்றனர்?" என்று ஜீவன் பிரக்ஞை யுடையவனாகின்றான் விசிஷ்டாத்மா குணாபிமானியாகலின். இவ் வெட்டு மதமும் அநாத்மாவில் ஆத்மாபிமாநத்தின் ஹேதுவாகலின். மோக்ஷத்தினை இச்சிக்கும் புருஷர்களால் இவற்றினையும் விடுதற்கு இச்சை செய்க.

(1) பிருதிவி மதம்.

(1) அல்லது யோக சாஸ்திரத்திற் கூறிய ரீதியின் அநுசாரமாக எப்புருஷன் பிருதிவி தத்துவத்தின் தாரணை முதலியவற்றைச் செய்கின்றான். அதனால் உண்டாம் பர்வதம் குஹை முதலிய செல்லற் கியலாத இடத்தில் நாச மின்றிச் செல்லுதல் ரூப சித்தி, அல்லது பிருதிவி ரூபமாவதற்கு ஸாமர்த்தியத்தினை யடைந்து, "நான் இவ்வித சித்தி யுடையவன்" என உண்டாம் கர்வம் பிருதிவி மதம் எனப்படும்.



(2) ஜல மதம்.

(2) அங்ஙனமே ஜல தத்வத்தின் தாரணை முதலியவற்றால் உண்டாம் நதி ஸமுத்திராதிகளில் பாதத்தால் நடக்கும் சக்தி ரூப சித்தியினையும், ஜலத்தின் ஸ்தம்பத்தினையும், ஜல ரூப மாவதற்கு ஸாமர்த்தியத்தினையு மடைந்து அபிமாநம் உண்டாகின்றது. அது ஜல மதமாம்.

(3) அக்நி மதம்.

(3) அங்ஙனமே அக்நி தத்வத்தின் தாரணை முதலியவற்றால் உண்டாம் அக்நியின் உஷ்ண சக்தியின் ஸ்தம்பந ரூப ஸாமர்த்தியத்தையும், எதனால் யோகி அக்நிப் பிரவேசாதிகளையும் செய்கின்றான். அக்நி ரூப மாவதற்கு ஸாமர்த்தியத்தினையும் அடைந்து அபிமாநம் உண்டாகின்றது. அது அக்நி மதமாம்.

(4) வாயு மதம்.

(4) அங்ஙனமே வாயு தத்துவத்தின் தாரணை முதலியவற்றால் வாயுவின வேகம் போன்று உண்டாகின்ற இச்சிக்கப்பட்ட தேசத்தில் யோகியின் சரீரத்தின் கமநம் தனது இச்சையின் அநுஸாரத்தினையும், வாயு ரூப மாவதற்கு ஸாமர்த்தியத்தினையும் அடைந்து யோகிக்கு உண்டாகின்ற மதம் வாயு மதமாம்.

(5) ஆகாச மதம்.

(5) அங்ஙனமே ஆகாச தத்வத்தின் தாரணை முதலியவற்றால் யோகிக்கு உண்டாம் ஆகாசத்திற் செல்லல் முதலிய சித்தியினையும், ஆகாச ரூபத்தினையும் அடைந்து அபிமாநம் உண்டாகின்றது. அது ஆகாச மதமாம்.

(6) சந்திர மதம்.

(6) அங்ஙனமே சந்திர மூர்த்தியின் தாரணை முதலியவற்றால் யோகிக்கு உண்டாம் சந்திர ரூப அடைவும், சந்திரனது

கிரியை முதலியவற்றின் ஸ்தம்பநமும், அல்லது தேவதை ஆவாஹந வித்தையின் அப்பியாஸத்தினுல் உண்டாம் தேவதைகளைக் கேட்கும் ஸாமர்த்தியத்தினையு மடைந்து கர்வம் உண்டாகின்றது. அது சந்திர மதமாம்.

(7) சூர்ய மதம்.

(7) அங்ஙனமே ஸூர்ய மூர்த்தியின் தாரணை முதலியவற்றால் உண்டாம் ஸர்வ வஸ்துவின் பிரகாச சக்தியினையும், அதன் ரூப அடைவினையும், அதன் கிரியை முதலியவற்றின் ஸ்தம்பநத்தையும், அல்லது ஆவாஹந வித்தையினு லுண்டாம் அதனைக் கேட்டலின் ஸாமர்த்தியத்தினையும், அடைந்து கர்வம் உண்டாகின்றது. அது ஸூர்ய மதமாம்.

(8) ஆத்ம மதம்.

(8) அங்ஙனமே ஆத்ம தத்வத்தின் தாரணை முதலியவற்றால் உண்டாகின்ற பரகாயப் பிரவேசம் முதலியனவும், அந்நியர்களின சித்தத்தி லுள்ள ஸங்கற்பத்தின் ஞானத்தினையும் அடைந்து உண்டாகின்ற அபிம நம் ஆத்ம மதமாம்.

(இந்தப் பிருதிவி தத்வங்களின் தாரணை, அதன் திட அவஸ்தைகளில் உண்டாகின்ற அதன் தாரணையின் பல ரூப சித்தியாம். அது ஸர்வ யோக சாஸ்திரத்திலும், வாசிஷ்ட முதலிய சாஸ்திரத்திலும் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. யோகம், தாரணைகளால் முற் புகன்ற சித்திகள் லோகத்தில் மஹத் தன்மை, ஸந்மாநம் முதலியவற்றிற்கு ஹேதுவா மாயினும், ஜகத்தில் த்வைதத்தைப் பார்த்தலுக்கும், ஸத்புத்திக்கும் ஹேதுவாயிருத்தலின். சித்திகளும் ஒரு காலத்த தாகலின். பாதிக்கப்படாத அத்விதீயப் பிரஹ்ம ஞானத்தின் பிரதிபந்தகத் தன்மையினுல் அதனை யிச்சிக்கும் புருஷனுல் சித்தியின் அடைவின் பொருட்டு ஒரு காலத்தும் யத்தநம் செய்யற்க. பிரஹ்ம தத்வத்தினும் அந்யமாய வெல்லாம் நசுவரமாயிருத்தலின்.)



## 7—8 சப்தத்தின் சக்தியைக் கிரகிக்கும் காரணம்.

முற் புகன்ற சப்த சக்தியினைக் கிரஹிக்கும் காரணமான எட்டினைக் கூறுவார்:—வியாகரணம் உபமாநம் கோசம் ஆப்த வாக்கியம் விருத்த வியவஹாரம் வாக்கிய சேஷம் விவரணம் சித்த பதத்தின் ஸந்நிதி என்னும் எட்டுப் பிரமாணத்தினுல் சப்த சக்தி ஞாந மின்றிய பாலகர்களால் கிரஹிக்கப்படுகின்றது. "வியாகரணம் உபமாநம் கோசம் ஆப்த வாக்கியத்தினுல், வியவஹாரத்தினுல், வாக்கிய சேஷத்தினுல், விவரணத்தினுல், சித்த பதத்தின் ஸந்நிதியினுல், சக்திக் கிரஹணம் உண்டாகின்றதென்று பெரியோர் கூறிகின்றனர்.' என்னும் பிரமாணத்தினுல்.

(1) வியாகரணம்.

(1) தாது (வினை) பிரகிருதி (பகுதி) பிரத்யயம் (விகுதி) முதலிய சப்தங்களின் சக்திக் கிரஹணம் முதலில் வியாகரணத்தினுல் இவ்வாறு உண்டாகின்றது:—'சைத்திரன் பசதி (பாகஞ் செய்கின்றான்)" என்பதாதிப் பிரயோகத்தில் பசதி, என்னும் பதத்தில், பச் என்னும் தாதுவும், ஆக்யாதத்தின் திப் என்னும் ஆக்யாதப் பிரத்யயமும் இருக்கின்றன. வையாகரணர்களால் பச் என்னும் தாதுவிற்குப் பாகக் கிரியையினிடத்துச் சக்தி கூறப்படுகின்றது. பிரத்யயத்திற்கு கர்த்தாவில் சக்தி கூறப்படுகின்றது. சைத்ரன் என்னும் பதம் கர்த்தாவின் விசேஷணமாகக் கூறப்படுகின்றது. இப் பிரயோகத்திற்குப் "பாகக் கிரியையின் கர்த்தா சைத்திரனு யிருக்கின்றான்" என வாக்கியார்த்தம் உண்டாகின்றது. இவ்வாறு வியாகரணம் பதத்தின் சக்தியின் போதகமா யிருக்கின்றது.

(2) உபமாநம்.

(2) உபமாநத்தினுல் சக்திக் கிரஹணம் இவ்வாறு உண்டாகின்றது:—ஒரு ஆரண்யக புருஷன் கிராம வாசியினிடத்தில் இவ்வாறு கூறுகின்றான்:- பசுவின் ஸமாநமாகிய பசு கவய மென்னும் பதத்திற்கு வாச்சியமா யிருக்கின்றது என, பின்னர் கிராம வாஸி

ஆரண்யத்தில் கூறிய கவயத்தினைப் பார்த்தான். அதில் அவனுக் குப் பசுவின் சாதிருசிய ஞானம் உண்டாயிற்று. அது உபமிதியின் காரணமாகிய உபமானமாம். அதன் பின் "பசுவின் ஸமானமாகிய பசு கவய மென்னும் பதத்தின் வாச்சியமா யிருக்கின்றது" என ஆரண்யக புருஷனால் கூறப்பட்ட வாக்கியார்த்தத்தின் ஸ்மரணம் அவனுக்கு உண்டாகின்றது அதுவே கரணத்தின் வியாபாரமாம். அதன் பின்னர் பசுவின் ஸாதிருசிய விசிஷ்ட கவய பிண்டத்தில், "இப் பசு கவய பத வாச்சியமாம்" என்னும் ஞானம் உண்டாகின்றது. அது உபமிதியாம். அதுவே கவய பதத்தின் சக்திக் கிரஹணமாம்.

(3) கோசம்.

கோசத்தி (நிகண்டி)னாலும் இவ்வாறு சக்திக் கிரஹணம் உண்டாகின்றது:—"நீலோத்பலம் ரக்தோத்பலம்" என்பதாதிப் பிரயோகத்தில், நீலம் முதலிய பதங்கட்கு நீல ரூப குணம் முதலிய வற்றிலும், நீலாதி விசிஷ்ட உத்பலத்திலும், கோசக்காரர்களால் சக்திக் கிரஹணம் செய்விக்கப்பட்டிருக்கின்றதா மாயினும், இரு வித சக்தியினை அங்கீகரித்துச் சக்கியத் தன்மையின் அவச்சேத கத்தின் கௌரவத்தினும், லாகவத் தன்மையினால் நீலாதி குணத்தி னிடத்தே நீலாதி பதங்களின் சக்தி யிருக்கின்றது. நீலாதி விசிஷ்ட டத்திலும் சக்தி யிருப்ப தில்லை. அதிலோ அஜகத் நிரூட லக்ஷணை யே உளது. இது நையாயிகரது சித்தாந்தமாம்.

(4) ஆப்த வாக்கியம்.

(4) ஆப்த வாக்கியத்தினாலும் இவ்வாறு சக்திக் கிரஹணம் உண்டாகின்றது:—எங்ஙனம் "கோகிலம் பிக பத வாச்சியமாம்" என்னும் ஆப்த வாக்கியத்தின் சிரவணத்தினால் வியுத்பத்தி யின்றிய பாலன் பிக பதத்தின் சக்திக் கிரஹணம் கோகில பக்ஷியினிடத்துச் செய்கின்றான்.

(5) விருத்தர் வியவகாரம்.

(5) விருத்தர்களது வியவஹாரத்தினாலும் இவ்வாறு சக்திக் கிரஹணம் உண்டாகின்றது:—எங்ஙனம் பிரயோஜக விருத்த



புருஷனால் (முதியோனால்) "கடத்தினைக் கொணர்க" எனக் கூறக் கேட்டுப் பிரயோஜ்ய விருத்தனால் (இடைப்பட்ட முதியோனால்) கடம் கொணரப்பட்டதைப் பார்த்துப் பக்கத்தி லுள்ள வியுத்பத்தி யின்றிய பாலன் கடத்தைக் கொணர்தல் ரூபக் கிரியை "கடத்தினைக் கொணர்க" என்னும் வாக்கிய ஜந்ய ஞானத்தினால் உண்டாயிருக் கின்றதென்று நிச்சயஞ் செய்கின்றான். புருஷப் பிரவிர்த்தி ஞானாதீந மாகலின். ஞானம் வாக்கிய ஜந்ய மாகலின். அதன் பின் மீண்டும் பிரயோஜக விருத்தன் கூறும் "கடத்தினைக் கொண்டு போ. பசுவினைக் கொணர்க." என்பதாதி வாக்கிய சிரவணத்தின் பின் பிரயோஜ்ய விருத்தன் கடத்தினைக் கொண்டுபோய்ப் பசு வினைக் கொண்டு வந்த தாகிய இரண்டனையும் பார்த்துக் கடம் முதலிய பதங்கட்குக் கிரியா அந்வித (கூடிய) கடாதிகளில் பாலன் சக்தியினைக் கிரஹிக்கின்றான்.

(6) வாக்கிய சேஷம்.

(6) வாக்கிய சேஷத்தினாலும் இவ்வாறு சக்திக் கிரஹணம் உண்டாகின்றது:—எங்ஙனம சுருதியில் கூறப்படும் "யவ மயம் சரு வாகின்றது" என்புழி யவ சப்தத்தின் சக்தியின் தீர்க்க சூகம் என்னும பெயரினை யுடைய அந்நத்திலும், கங்கணி என்னும் அந்நத்திலும் ஸம்சயம் உண்டாகின்றது. இரண்டிலும் பண்டிதர் களும், மத்தியம விருத்தர்களும் பிரயோகித்தலின். அப்பொழுது சுருதியி லுள்ள வாக்கிய சேஷம் கூறுகின்றது:—"எந்த வஸந்த ருதுவில் அந்ய ஔஷதிகள் எல்லாம் நாச மடைந்திருக்கின்றனவோ, ஆண்டு எது சந்தோஷத்தோடு கூடியிருக்கின்றதோ, அதுவே யவை யாம்" என்னும் வாக்கிய சேஷத்தினால் கங்கணி என்னும் அந்நத்தில் யவை சப்தத்தின் சக்தி பிராந்தியா யிருந்தது அது நாச மாகின்றது. தீர்க்க சூகம் என்னும் அந்நத்தில் யவை யென்னும் சப்தத்தின் சக்தியின் வியுத்பத்தி யின்றிய புருஷனுக்கு நிச்சயம் உண்டாகின்றது.

(7) விவரணம்.

(7) ஸமாந அர்த்தத்தினை யுடைய வேறு பதங்களால் பூர்வ பதத்தின் அர்த்தத்தினைக் கூறுதல் விவரணமாம். இந்த விவரணத்

திஞலும் இவ்வாறு சக்தியின் கிரஹணம் உண்டாகின்றது:—எங்ஙனம் "கடம்" என்னும் பதத்திற்கு "கலசம்" என விவரணம் உண்டாகின்றது. அதனுல் கட பதத்திற்குக் கலச பதார்த் தத்தில் சக்தியின் கிரஹணம் உண்டாகின்றதோ அங்ஙனமே, 'பசதி" என்னும் பதத்திற்குப் பாகஞ் செய்கின்ருன். என்னும் விவரணத்திஞல் முற் பதத்திற்குப் பாக கர்த்தாவில் சக்திக் கிரஹணம் உண்டாகின்றது.

### (8) சித்த பதத்தின் சந்நிதி.

(8) சித்த பதத்தின் ஸந்நதியிஞலும் இவ்வாறு சக்தியின் கிரஹணம் உண்டாகின்றது:—எங்ஙனம் "ஆம்ர(மா) விருக்ஷத்தில் பிகம் (கோகிலம்) மதுர சப்தஞ் செய்கின்றது" என்னும் பிரயோகத்தில், பிரசித்த அர்த்தத்தினை யுடைய மதுரம் முதலிய பதங்களினுல் அப்ரஸித்தமாகிய பிக பதத்தின் சக்திக் கிரஹணம் கோகிலத்தில் உண்டாகின்றது.

(எதனுல் பத ஸங்கதி ஞாநமும், பதார்த்த ஸ்மரணமு மின்றி மகாவாக்கியார்த்தத்தின் ஞாநம் அசக்கியமாம். தத்த்வமஸ்யாதி சப்தத்தின் சக்திக் கிரஹணத்தில், சக்திக் கிரஹணத்தின் ஹேதுவாகப் புகலப்பட்ட எட்டுப் பதார்த்தங்கட்கும் பரம்பரையாக வேதாந்தத்தில் உபயோகம் இருக்கின்றன. லோக வேத சப்தங்கள் ஸமாநமாகலின். ஆதலால் முமுக்ஷுக்களால் யோக்யாநுஸாரம் இந்தப் பிரமாணங்களினுல் அவசியம் பதங்களின் சக்திக் கிரஹணமாகிய பதார்த்த உபஸ்திதி (ஸ்மிருதி) யின் பொருட்டுச் செய்தல் யோக்யமாம்.)

## 8—2 ஒன்பது வகைத்தாய பதார்த்தங்கள்.

### 8—1 சம்சாரம்.

இப்பொழுது ஒன்பது எண்ணிக்கை விசிஷ்டத்தினைக் கூறுவாம்:—ஞாநம் ஞாதா முதலிய பேதத்திஞல் ஸம்ஸாரம் என்னும் ஒன்பது வகைத்தாம்.



### 1 ஞாநம்.

(1) அவற்றுள் ஞாநம் பிரமை அப்பிரமை என்னும் பேதத்திஞல் இரு வகைத்தாம். அது (பிரமை) வியாவகாரிக பாமார்த்திக வஸ்துவினை விஷயமாக வுடையதாய் ஞாதா வாகிய ஜீவனை ஆசிரயித்திருக்கின்றது. எங்ஙனம் கடாதி ஜகத்தின் ஞாநமும், பிரஹ்மத்தின் ஞாநமுமாம். அஞ்ஞாநத்தின் பரிணாம விசேஷமாய்த் தோஷ ஸஹிதப் பிரமாணத்திஞல் உண்டாயதாய பிராந்தி ஸம்சயங்களின் ஞாநம் அப்பிரமையாம். அது பிராதிபாஸிக விஷயத்தினை விஷயஞ் செய்வதாம். எங்ஙனம் இரஜ்ஜு ஸர்ப்பாதிகளின் ஞாநமும், ஸ்வப்ந பதார்த்தங்களின் ஞாநமுமாம். ஸ்தாணுவில் திருட னென்னும் ஞாநம் ஸம்சயமாம். ஸம்ஸ்கார ஜந்ய ஞாநம் யதார்த்த ஸ்மிருதி ஞாநமாம். அது பூர்வம் அநுபவிக்கப்பட்ட விஷயத்தினை விஷயமாக வுடைய தாயிருக்கின்றது. பிரமை அப்பிரமைகளின் பிந்நமாய் இருக்கின்றது. பிரமாணத்திஞற் ஜந்ய மாகாமையின் பிரமை யின்று. பாதிக்கப்படாத வஸ்துவினைக் கிரஹித்தலின் அப்பிரமையு மன்று. எங்ஙனம், சுழுத்தியினின்றும் எழுந்த புருஷனுக்குச் சுழுத்திச் சுகம் முதலிய ஞாநமாம். தத்தா (அந்தத் தன்மை) இதந்தா (இந்தத் தன்மை) என்னும் இரண்டினையுங் கிரஹிப்பது பிரத்யபிஞ்ஞை ஞாநமாம். முன்னர் அநுபவத்திஞ லுண்டாம் சம்ஸ்காரத்தோடு கூடிய நேத்திரப் பிரமாணத்திஞற் ஜநிக்கப்பட்டதாகலின், முன்னர் அநுபவிக்கப்பட்ட தத்தாம்சத்தின் கிரஹணத்தில் ஸ்மிருதி ரூபமாகின்றது. இதந்தாம்சத்தின் கிரஹணத்தில் பிரத்தியக்ஷ ரூப மாகின்றது. இவ்விரண்டு ஜாதியினை யுடைய ஞாநம் சங்கர ஞாநமாம். எங்ஙனம், "ஸோயந் தேவதத்தன் (அந்த இந்தத் தேவதத்தன்)" என்பதாதிஞாநமாம். இவ்வாறே மநோ ராஜ்யத்திலுமே லுண்டாம் ஞாநத்தினையும் அறிக. அவற்றுள் பிரத்யக்ஷ ஞாநம் விஷயேந்திரியங்களின் ஸந்நிக்ஷ அதீநமா யிருக்கின்றது. பரோக்ஷ ஞாநம், ஸ்மிருதி, அதீதாதி ஞாநங்கள் அதன் அதீந மலவாம். அல்லது முற் புகன்ற ஆறு பிரமாணத்திஞ லுண்டாய அந்தக் கரண பரிணாம ரூப விருத்தி விசிஷ்ட சைதந்யம், அல்லது சிதாபாஸ விசிஷ்ட விருத்தி ஞாந மெனப்படுகின்றது. இவ்வாருகிய ஞாநம் ஒன்பது வித ஸம்ஸாரத்தின் முதல் அவயவமாம்.

## 2 ஞாதா.

(2) இவ் வெல்லா ஞானங்கட்கும் அதிகரணமாய ஜீவன் ஞாதா வாம். "நான்" என்னும் பிரதீதிக்கு விஷயமா யிருக்கின்றது. பந்த மோக்ஷத்தினை யடைவதா யிருக்கின்றது. அல்லது அந்தக் கரண விசிஷ்ட சேதநம் ஞாதாவாம். லௌகிக வைதிக ஞான வியவகாரத் தின் ஹேது வாகின்றது. எல்லாப் பிரமாணங்களுக்ம் பிரமாதாவின் அதீநமா யிருத்தலின். மித்தையாகிய பந்த மோக்ஷங்கட்கு ஆசி ரயமாயு மிருக்கின்றது எதனை வியவகாரிக ஜீவன் என்றுங் கூறு வர். இவ்வாறுய ஞாதா ஸம்ஸாரத்தின் இரண்டாவது அவயவமாம்

## 3. ஞேயம்.

(3) பார்க்கப்பட்டதும், கேட்கப்பட்டதுமாய அறியப்படாத தனது அதிஷ்டானத்தோடு கூடிய ஆந்தர பாஹியப் பிரபஞ்சம் ஸ்தூல ஸூக்ஷ்ம காரிய காரண ரூப ஞானத்தின் விஷயமாகின்றது. அது ஞேய மெனப்படுகின்றது. இது மூன்றுவது அவயவமாம். இந்த ஞாதா முதலிய மூன்றும் ஒரு திரிபுடி யெனப்படுகின்றது.

## 4. போக்தா

(4) விஹித அவிஹித கர்ம பலமாகிய ஸுக துக்க அநுபவத் தின் ஆசிரயம், அல்லது அபிமானி போக்தா வாம. அல்லது, ஆத் மாவில் போக்த்ருத்வ உபாதி ரூப அந்தக்கரண விசிஷ்ட சேதநம் போக்தா வாம். அல்லது ஆபாஸ ஸஹித அந்தக்கரண பரிணாம ரூப ஸுக துக்காகார விருத்தியின் ஆசிரய சேதநம் போக்தா வாம்

## 5. போக்யம்.

(5) விஷயத் தன்மைச் சம்பந்தத்தினால் ஸுக துக்க அநு பவத்தினை உண்டாக்கும் ஸ்திரீ புத்ராதி ரூப முற் புகன்ற பிர பஞ்சம் போக்யமாம்.

## 6. போகம்.

(6) ஸுக துக்கார அந்தக் கரண பரிணாம ரூப ஆபாஸ ஸஹித விருத்தி போகமாம். வேதாந்த மதத்தில் ஸுக துக்காதி கள் ஸாக்ஷி பாஸியமா மாயினும், ஸுக துக்காகார விருத்தி வாயிலாய்



ஸுக துக்காதிகளைப் பிரகாசிக்கின்றது ஸாக்ஷியாம். விருத்தி யின்றி ஸுக, ஸாக்ஷிக்கு நித்தியமாகலின். காலாந்தரத்தில் உண்டாம் ஸுக துக்கத்தின் ஸ்மிருதியினை உண்டாக்கும் ஸம்ஸ்காரத்தின் ஜநகத் தன்மை யின்மையின். தனது நாச வாயிலாய் ஞானத்திற்கு ஸம்ஸ் காரத்தின் ஜநகத் தன்மை நியமமாகலின். இப் போக்தா முதலியன இரண்டாவது திரிபுடி யாம்.

## 7. கர்த்தா.

(7) முற் புகன்ற ஞாதா போக்தா ஜீவனே. பிராண கர்மேந் திரியப் பிரதானனும் ஸ்வாபாவிக சாஸ்திரீய கிரியைகளின் அபிமானி, அல்லது ஆசிரயம், அல்லது ஜநக. கர்த்தாவாம்.

## 8. கரணம்.

(8) நானா விதக் கிரியையின் நற் சாதநமாய வாக்கு முதலிய கர்மேந்திரியங்கள் ஐந்தும், அல்லது சரீரம் வாக்கு மநங்கள் கரண மெனப்படும்.

## 9. கிரியை.

(9) அசனின்றும் உண்டாய நானா வித வியாபாரம் விதிக்கப் பட்டதும் விதிக்கப் டாததுமாய கிரியை யெனப்படும். இக் கர்த்தா முதலியன மூன்றுவது திரிபுடி யாம்.

ஞாதா போக்தா கர்த்தா என்னும் மூன்றும் ஒரு ஜீவனுக்கே பெயரா மாயினும், ஞான ஆசிரயத் தன்மை, யோக ஆசிரயத் தன்மை, கிரியா ஆசிரயத் தன்மை ரூப சப்தப் பிரவிருத்தி நிமித்தத்தின் பேதத்தினால் அவைகள் பேத மாகின்றன. உண்மையில் இல்லை. இம் மூன்று பிரகாரமான திரிபுடியின் கூட்டமே ஒன்பது வித ஸம்ஸாரமாம். எதனால் இவற்றானேயே ஜீவன் ஸம்ஸாரத்தினை யடைகின்றான். அநுபவ ஞானம், ஞாதா போக்தாவாகிய ஜீவனி டத்துத் தனது நாசவாயிலாய் ஒரு ஸம்ஸ்காரத்தினையே உண்டாக்கு கின்றதா மாயினும், விஹித அவிதித கர்மமோ ஸம்ஸ்காரம், புண் யாபுண்ய அபூர்வம் என்னும் இரண்டினையும் தனது நாச வாயிலாய்க்

கர்த்தாவினிடத்து உண்டாக்குகின்றது. அவற்றுள் விஹிதக் கிரியையினல் உண்டாகிய பூர்வ ஸம்ஸ்காரத்தினல் ஜீவன் இப்பொழுதும் நல்ல கர்மத்தில் இருக்கின்ருன். அவிஹிதக் கிரியையினல் உண்டான ஸம்ஸ்காரத்தினல் நிஷேதிக்கப்பட்ட கர்மத்தில் (பிரவிர்த்தித்து) புண்யாபுண்ய அபூர்வத்தால் சுக துக்க ஸ்வர்க்க நரகங்களை யடைகின்ருன். "அந்த ஜீவனிடத்தில் வித்தை கர்மமென்னும் இரண்டும் செல்லுகின்றன. பூர்வப் பிரக்ஞையும்" என்னும் சுருதியினல்,

அல்லது, மஹா பூதம் ஐந்து, (1) ஞானேந்திரியம் ஐந்து, (2) கர்மேந்திரியம் ஐந்து, (3) பிராணுதி ஐந்து, (4) மனம் முதலிய அந்தக்கரணம் நான்கு, (5) ஸ்தூல சரீரம், (6) மூவித கர்மம், (7) அவஸ்தை மூன்று (8) இவற்றிற் கெல்லாம் காரண ரூப அஜ்ஞானம் (9) என்னும் இவை ஒன்பது வகைத்தாய ஸம்ஸாரமாம்.

(இவற்றின் லக்ஷணம் முன்னர் ஆண்டாண்டுக் கூறப்பட்டிருக்கின்றது. எதனேடு ஜீவன் சேர்ந்து கடி யந்திரம் போன்று அநாதி ஸம்ஸாரத்தில் தனது கர்ம அநுஸாரமாக உயர்வு தாழ்வாகிய யோநிகளில் எப்பொழுதும் சுழல்கின்றனன். ஸத்ஸங்கம் ஸத் சாஸ்திர விசாரங்களின்றி ஸர்வ உத்தமமாகிய மநுஷ்ய ஜந்மத்தினை வியர்த்தமாக நாசஞ் செய்கின்ருன். "தனது தேஹம் தனம், தாரம் முதலியவற்றில் எப்புருஷன் ஸதா ரமிக்கின்ருன், அவன் ஜநித்தலையும், மரித்தலையும் அடைகின்ருன். ஆஹா! மஹா கஷ்டம். எதனல் அஜ்ஞானத்தினல் மோகத்தினை யடைகின்ருன்." என்னும் பிரமாணத்தினல்)

## 8—2 தத்துவம்.

ஒன்பது வகைத்தாய தத்துவத்தினைக் கூறுவாம்:— நேத்திரம் முதலிய ஞானேந்திரியம் ஐந்தும் மனம் முதலிய நான்கு அந்தக்கரணமுமாகிய இவை ஒன்பது தத்வங்களாம். அவை சாஸ்திரிய அசாஸ்திரீயப் பிரவிர்த்தி வாயிலாய் எங்ஙனம் பந்த மோக்ஷத்திற்குக் காரணமாகின்றதோ. அங்ஙனமே காண்பிப்பாம்:— முதலில் அவற்றிற்குப் பந்த ஹேதுத் தன்மையினைக் கூறுவாம்,



### 1. சக்ஷுரிந்திரியம்.

1. அஜிதேந்திரிய பஹிர்முகப் புருஷனது சக்ஷு இந்திரியம் ஜீவனை ஆத்மா (தன்) அநுகூல சுந்தரமாகிய காமிநீ முதலிய ரூபங்களைப் பார்ப்பதற் பொருட்டு இழுக்கின்றது.

### 2. சுரோத்ரேந்திரியம்.

2. சிரவணேந்திரியமும், ஸ்திரீ புத்ராதிகளின் பிரியமான வசநத்தினைக் கேட்டலிலும், காமிநிகளின் கீத இராகங்களிலும், தனது ஸ்துதியிலும் ஸதா இழுக்கின்றது.

### 3. ரசநேந்திரியம்.

3. ரஸநேந்திரியமும் நாநா வித அந்ந பாநங்களின் ரஸத்தைக் கிரஹித்தற் பொருட்டு ஜீவனைத் தன் வசஞ் செய்கின்றது.

### 4. கிராணேந்திரியம்.

4. கிராணேந்திரியமும் விஷய சுகத்தின் பொருட்டு நாநா வித சுகந்தத்தினைக் கிரஹித்தலில் இழுக்கின்றது.

### 5. த்வக் கிந்திரியம்.

5. த்வக்கிந்திரியமும் ஜீவனை காமிநிகளின் மிருதுவான அங்கத்தின் ஸ்பரிசத்திலும், மிருதுவான வஸ்திராதிகளின் ஸ்பரிசநத்தின் பொருட்டும் இழுக்கின்றது. இவ்வாறு விஷய லம்பட பஹிர்முக புருஷன் பூர்வ பூர்வ ஸம்ஸ்காரத்தின் வசத்தால் பஞ்சேந்திரியங்களின் அதீநனுப் அவற்றின் விஷயங்களைச் சம்பாதித்தற் பொருட்டு நாநா வித அநாசாரப் பிரவிருத்தியினையும், அசாஸ்திரீயப் பிரவிர்த்தியினையும் செய்கின்றனன். எதனல் அதோகதி உண்டாகின்றது. * "குரங்கம் (மான்) பதங்கம் (விட்டில்) மீநம், மாதங்கம், (யானை) பிருங்கம் (வண்டு) என்னும் ஐந்தும் ஒவ்வொரு

* விவேக சூடாமணி உலவுபாம் பானை விட்டில் ஆருமீன் வண்டிவ் வைந்து, மொலிமுதற் புலனெனன் றென்றி லாவந்தா விறக்கு மாகிற், புலனிவை யைந்தி னும்பால் பொருந்திய புருடன் சேரும், பலவிதத் துன்பந் தன்னைப் பகர்ந்தி— முடியு மோசொல். (87)

இந்திரியங்களின் ஸேவையினுல் நாச மாகின்றன. ஆயின் ஒரு பிர மாதியாகிய ஜீவன் எங்ஙனம் நாசமாகான். எவன் பஞ்சேந்திரியங் களால் பஞ்ச விஷயங்களையும் சேவிக்கின்றான்." என்னும் (விவேக சூடாமணி 78) பிரமாணத்தினுல். இது இந்திரியங்களின் பந்த கார ணத் தன்மை கூறப்பட்டது.

## 6. மநம்.

6. பஹிர்முகனது மநமும் விதிக்கப்படாத விஷய சம்பா தநத்தின் பொருட்டு நாநா வித ஸங்கல்ப விகல்ப மநங்களில் ஜீவனை யிழுக்கின்றது

## 7. சித்தம்.

7. அங்ஙனமே அவனது சித்தமும் அநுகூல விஷயத்தின் சிந்தநத்தில் அவனை இழுக்கின்றது.

## 8. புத்தி.

8. அவனது புத்தியும் லிங்கேந்திரிய, ஜிவ்ஹேந்திரியங்களி னுல் உண்டாய க்ஷணிக சுகத்தின் நிச்சயத்தில் அவனை இழுக் கின்றது.

## 9. அஹங்காரம்.

9. அவனது அஹங்காரமும் வர்ணுசிரம வித்யா ரூப குல, தந, அபிமாநத்திலேயே அவனைச் சதா இழுக்கின்றது.

(ஆதலால் ஞாந மின்றிய ஜீவனும் பூர்வ பூர்வப் பிராந்தியி னுல் இவற்றின் வசனுய்த் தனது சுத்த சிதாநந்த ரூப சுகத்தினை மறந்து, "இச் சம்சாரத்தில் லிங்கேந்திரிய, ஜிவ்ஹேந்திரியங்களினு லுண்டாய ஸுகமே ஸாரமாம். இதனினும் அதிக ஸுகம் ஒன்று மின்று." என்று நிச்சயம் செய்கின்றான். அதன் பின் அந்தச் சுநத்தின் சாதநமாகிய தநம், ஸ்திரீ, ஸ்ருச்(மாலை) சந்தநம் முதலியவற்றினைச் சம்பாதித்தற் பொருட்டு அசாஸ்திரீயமான பிரவிர்த்தியினுல் நாநா வித அநாசாரத்தினைச் செய்பவனுய் அநந்த



தர்த்தசையினை யடைகின்றான். க்ஷணிகமாய் அமங்கலமாய் உள்ள தேஹம், கிரஹம் முதலிய பதார்த்தங்களைச் சத்தியமாய் அங்கீ கரிக்கின்றனன். "அசூர்யா என்னும் பெயரினை யுடைய லோகத் தில் மிகுந்த இருட்டினுல் மறைக்கப்பட்டிருக்கின்றது. மரித்து அவர்கள் அந்த லோகத்திற்குச் செல்லுகின்றனர். எவர்கள் ஆத்மாவினைக் கொன்றவ ராவார்கள்." (ஈசாவாஸ்யோபநிஷத்) "அஜி தேந்திரிய புருஷனுக்கு ஜிவ்ஹேந்திரியமானது திருப்தி யடையா திருக்குமாயின், யாண்டு மதுரம் முதலிய ரஸங்க ளிருக்கின்றன வோ ஆண்டு இழுக்கின்றது. சிசுநம் ஸ்திரீயின் ரமித்தலில் இழுக்கின்றது. த்வக் இந்திரியம் தொடுதலில் இழுக்கின்றது. வயிறு சாப்பிடுதற்கு இழுக்கின்றது. காது சுந்தர சப்தத் தைக் கேட்பதில் இழுக்கின்றது. கிராணம் சுகந்தத்தினைக் கவர் வதற்கு இழுக்கின்றது சபலமாகிய சக்ஷு ரூபத்தினைக் கவர்வதில் தடையற் றிருக்கின்றது. கர்மேந்திரியங்களும் தத் தம் விஷயத்தி விழுக்கின்றது. அநேக ஸ்திரீயோடு கூடிய ஒரு கிரஹபதியினை எங்ஙனம் எல்லா ஸ்திரீகளும் பிடித் திழுப்பார்களோ (அங்ஙனமே யாம்.)" என்பன வாதி சுருதி ஸ்மிருதிப் பிரமாணங்களால்.

அந்த ஒன்பது தத்துவங்களே விரக்தனுகிய அதிகாரிக்கு மோக்ஷத்தின் ஹேதுவாக இங்ஙனம் ஆகின்றது:—சாஸ்திரீயப் பிரயத்திநத்தினை யுடைய புருஷன் சக்ஷு இந்திரியத்தினுல் யாண் டும் அநுஸ்யூதமா யுள்ள ஸர்வாத்மாவாகிய பரமேசுவரனை யாண்டும் பார்க்கின்றான். அல்லது பரமேசுவர லிங்கத்தினை, அல்லது பரமே சுவர ரூப குருவை, அல்லது ஸத் புருஷர்களின் மூர்த்தியி (சரீரத்தி)னைப் பார்க்கின்றான். அல்லது சத் சாஸ்திரத்தினைப் பார்க்கின்றான். சிரவணேந்திரியத்தினுல் பகவானது பக்தவத்ஸலத் தன்மை முதலிய குணங்களை, அல்லது, மநுஷ்யர்களின் சென்ற ஜந்ம கர்மங்களைக் கேட்கின்றான். அல்லது வேதாந்த சாஸ்திரத்தில் பிரதிபாதிக்கப்படும் சகுண நிர்க்குண ஸ்வரூபத்தினைக் குருமுக மாகக் கேட்கின்றான். ரஸநேந்திரியத்தினுல் பகவானது குணம் முதலியவைகளின் சிரவணம் முதலியவைகளா லுண்டான மதுரம் முதலிய ரஸத்தினையே ரஸநேந்திரியத்தோடு கூடிய விருத்தியினுல்

ருசி பார்க்கின்றான். அல்லது பகவானுக்கு நிவேதிக்கப்பட்டு இருக்கும் சேஷத்தின் அற்புத ரஸத்தினைக் கிரஹிக்கின்றான். அல்லது குரு உபதேசம், வேதாந்த சாஸ்திரங்களின் பன் முறை சிரவணாதிகளினால் உண்டாகும் ரஸத்தினை விருத்தியோடு கூடிய ரஸனேந்திரியத்தினால் கிரஹிக்கின்றான். கிராணேந்திரியத்தினால் பகவானுக்கு அர்ப்பிக்கப்பட்ட துளஸீ முதலியவைகளின் கந்தத்தினையே கிரஹிக்கின்றான். அல்லது எல்லா வஸ்துவிலும் வியாபித்து விரிந்திருக்கும் சேதந ரூப கந்தத்தினையே கிரஹிக்கின்றான். த்வக் இந்திரியத்தினால் பகவானது மூர்த்தியின் பாதாதிகளின், அல்லது பகவானை உபதேசிக்கும் குரு மூர்த்திகளின் பாதாதிகளின் ஸ்பரிசத்தினையே செய்கின்றான். அவர்கட்கு சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்ட சிசுருஷையினையே செய்கின்றான். என்பது பொருள். சிரவணத்தின் பின் மநந அவஸ்தையில் விரோதமின்றிய யுக்திகளால், மநதினால் அந்தப் பரமேசுவானையே மநநஞ் செய்கின்றான். ஏகாந்த இடத்தில் சித்தத்தினால் அதனையே சிந்திக்கின்றான். புத்தியினால் ஸம்சய விபரீத மின்றிய பிரஹ்மாத்ம ஏகத்வாகார நிச்சயத்தினையே செய்கின்றான். அல்லது இந்த ஜகத்தில் ஒரு அத்விதீய நாராயணனே ஸாரமாம். வே றெல்லாம் அஸாரமேயாம் என்னும் நிச்சயத்தினைச் செய்கின்றான். "தேஹேந்திரியாதிகளினும் அதீதமாய்ச் சுத்த ஸ்வப்பிரகாசப் பிரஹ்மத்தோடு அபிந்நமாய் நான் இருக்கின்றேன்." என்று சுத்த அஹங்காரத்தினால் அபிமாநஞ் செய்கின்றான். இவ்வாறு சாஸ்திரீய வியாபாரத்தின் உத்பாதநத்தினால் முற் புகன்ற பந்த ஹேது வாகிய ஒன்பது தத்துவங்களையுடைய இந்திரியங்களே ஸகுண நிர்க்குண மோக்ஷத்தின் ஹேது வாகின்றன. "ஹே அச்யுத! எனது வாக்கு உனது குணத்தினைக் கூறுதலில் இருக்குக. எனது சுரோத்திரங்கள் இரண்டும் உனது கதா சிரவணத்தின்கண்ணே யிருக்குக. எனது இரண்டு கைகளும் உனது கர்மத்தின்கண்ணே யிருக்குக. எனது மநம் உனது பாதத்தின் ஸ்மரணத்திலே கிடக்குக. எனது சிரம் உனது நிவாஸ ஸ்தாநமாகிய ஜகத்தின் நமஸ்காரத்தின்கண்ணே வீழ்க. எனது கண்கள் உனது ஸ்வரூபத்தினையும், ஸத் புருஷர்களையும் பார்த்தலிலேயே யிருக்குக" என, (பாகவதம்) "ஹே அர்ஜுந! முமு



க்ஷுக்கள் என்னிடத்திலேயே சித்த முடையவ ராகின்றனர். என்னிடத்திலேயே பிராணனை வைக்கின்றனர். பரஸ்பரம் என்னையே அறிவிக்கின்றனர். அந்யனிடத்திலும் என்னையே கூறுகின்றனர். என்னிடத்திலேயே ஸந்தோஷத்தினை அடைகின்றனர். என்னிடத்திலேயே ரமிக்கின்றனர்"(* பகவத் கீதை) என்பன வாதி ஸ்மிருதிப் பிரமாணத்தினால். ஆதலால் ஜிஞ்ஞாஸுக்களால் சாஸ்திர திருஷ்டியினால் இந்திரிய அந்தக்கரண மென்னும் இரண்டின் விஹித அவிஹிதப் பிரவிர்த்தியினை விசாரித்து மோக்ஷ சித்தியின் பொருட்டுத் தனது இந்திரிய அந்தக்கரணங்களை யத்நத்தினால் சாஸ்திரீய வியாபாரத்தில் நடப்பித்தல் உசிதமாம்.

## 9—2. பத்து வகைத்தாய பதார்த்தங்கள்.

### 9—1. நாடி தேவை.

இப்பொழுது பத்து எண்ணிக்கை வசிஷ்டத்தினைக் கூறுவாம்:— இடை பிங்கலை முதலிய பேதத்தினால் நாடி பத்து வகைத்தாம். சரீரத்தின்கணுள்ள நாடி அநந்தமாயினும் பிரதாந அபிப்பிராயத்தினால் தேவதைகளோடு கூட யோக சாஸ்திரத்தில் பத்து நாடிகள் கூறப்பட்டிருக்கின்றன. "இடை, பிங்கலை, ஸுஷும்னை, காந்தாரி, ஹஸ்திஜிவ்ஹை, பூஷா, யசஸ்வநீ, குஹூ, அலம்புஸா, சங்கிநி எனப் பத்து நாடிகளாம்." என்னும் யோக சாஸ்திரத்தின் பிரமாணத்தினால்.

#### 1. இடா நாடி தேவதை.

(1) அவற்றுள் நாசியின் வாம கோலகத்தில் இடா என்னும் பெயரினை யுடைய சந்திர நாடி யிருக்கின்றது. எதற்கு விஷ்ணு தேவதையாம்.

---

* பகவத் கீதை. இப்பரி சென்னைய றிந்தவ ரென்பால்,
வைப்பர்கள் சிந்தையை மன்னுயி ரோடு,
மப்பரி சேயறி யாவையு மாங்கே,
யுய்ப்பரு ரைப்பரு வப்பர்க ளிப்பார். (10—5.)

2. பிங்கலை நாடி தேவதை.

(2) நாசியின் தக்ஷிண (வலது) கோலகத்தில் பிங்கலை யென்னும் பெயரினை யுடைய சூரிய நாடி யிருக்கின்றது. ஹிரண்ய கர்ப்ப அவஸ்தையினை யடைந்த பிரஹ்மா எதற்குத் தேவதையாம்.

3. சுழுமுனை நாடி தேவதை.

(3) ஸுஷும்னை என்னும் பெயரினை யுடைய மத்தியம நாடி நாசியின் மத்தியி லிருக்கின்றது. ஸம்ஹார அவஸ்தையினை யடைந்த ருத்ரன் எதற்குத் தேவதையாம்.

4 காந்தாரி நாடி தேவதை.

(4) காந்தாரி என்னும் பெயரினை யுடையது தக்ஷண நேத்திரத்தின் நாடியாம். இந்திரன் எதன் தேவதையாவன்.

5. ஹஸ்தி ஜிவ்ஹை நாடி தேவதை.

(5) ஹஸ்தி ஜிவ்ஹை என்னும் பெயரினை யுடையது வாம நேத்திரத்தின் நாடியாம். வருணன் எதன் தேவதையாவன்.

6. பூஷா நாடி தேவதை.

(6) பூஷா என்னும் பெயரினை யுடையது தக்ஷிண காதின் நாடியாம். நியந்திருத் தன்மை அவஸ்தையினை யடைந்த ஈசுவரன் எதன் தேவதையாவன்.

7. யசஸ்வினீ நாடி தேவதை.

(7) யசஸ்வினீ என்னும் பெயரினை யுடையது வாம காதிலுள்ள நாடியாம். திரி லோக ரூபமாய தாமரைப் புஷ்பத்தினின்றும் ஜநித்த நான்கு முகங்களோடு கூடிய பிரஹ்மா எதன் தேவதை யாவர்.



8. குஹூ நாடி தேவதை.

(8) குஹூ என்னும் பெயரினை யுடையது குதத்தி லுள்ள நாடியாம் பிருதிவி எதன் தேவதையாம்.

9. அலம்புசா நாடி தேவதை.

(9) அலம்புஸா என்னும் பெயரினை யுடையது சிசுநத்தின் நாடியாம். ஸூர்யன் எதன் தேவதையாவன்.

10. சங்கினி நாடி தேவதை

(10) சங்கினி என்னும் பெயரினை யுடையது நாபியின் நாடியாம். சந்திரன் எதன் தேவதையாவன்.

இந்த நாடிகளும் யோக மார்க்கத்தினால் ஞானோத்பத்தியில் பரம்பரையாகச் சககாரியாம். எதனால் யோகிகள் பூரக, கும்பக, ரேசகக் கிரமங்களினால் பிராணாயாம அநுஷ்டானத்தில் இடா நாடி வாயிலாய்ப் பிராண வாயுவின் ரேசக மெனப்படும் வெளியில் செல்லுதலைச் செய்கின்றனர். பிங்கலை நாடியால் வெளிப் பிராண வாயுவின் பூரக ரூப உள் சஞ்சாரத்தினைச் செய்கின்றனர். ஸுஷும்னை நாடியால் பிராணன்களின் கும்பகம் என்னும் ஸ்தம்பனத்தினைச் செய்கின்றனர். இவ்வாறு கிரமமாகப் பிராண நிரோத வாயிலாய்ச் சித்தத்தின் ஜயத்தினை யடைந்து கிரமமாக ஞானத்தினை யடைகின்றனர். எதனால் ஸ்ரீ பகவான், வசிஷ்டர் முதலியோர்கள் ஞானத்தின் பொருட்டுச் சித்தத்தினை ஜயித்தற்கு யோகம், விவேகம் என்னும் இரண்டு சாதனங்களையும் கூறியிருக்கின்றனர். சிலரோ சந்திர ஸூர, சூர சுரம் முதலியவற்றின் ஸாதனத்தினைச் சோதித்தலிலும் இந் நாடிகளின் உபயோகத்தினைக் கபம் பித்த வாயு தாதுக்களின் விஷமத் தன்மையின் நிவிர்த்தியின் பொருட்டுக் கூறுகின்றனர். எந்த அதிகாரி விசுத்த சத்துவம், சுசீலம், மிருது ஸ்வபாவம் முதலிய குணங்களோடு கூடினவனாயிருக்கின்றானோ, அவன் ஸ்ரீமத் பாஷ்யக்காரர் முதலியோர்களால் புகலப்பட்ட விவேகாதி, சிரவணாதி, ஸத்ஸமாகமம் முதலிய ஸாத

நத்தொகுதியின் அநுஷ்டாநத்தினலேயே சித்தத்தின் ஜய பூர்வகம் ஞாந மோக்ஷங்களை யடைகின்றான். அவனைக் குறித்துப் பிராணயாமம் முதலியவற்றின் உபதேசஞ் செய்ய வில்லை. உபயோகமுமில்லை எப் புருஷன் இந்த மிருதுவாகிய ஸாதநங்களினல் சித்தத்தின் ஜயம், வாஸநா க்ஷயங்களைச் செய்யச் சக்தியற்றிருக்கின்றனன், அவனல், பிராணயாம ரூப கடிந ஸாதநங்களினலும் சித்தத்தின் ஜயத்தினை அவசியம் ஞாநப் பிராப்தியின் பொருட்டுச் செய்யத் தக்கது. அவனே இந்த நான்காவது ஸாதநத்தில் அதிகாரியாவன். அதலால் நம்மாலும் எண்ணிக்கையின் கிரம அநுஸாரமாகச் சுருக்கிப் பத்து நாடிகளின் லக்ஷணம் முதலியன சிலத் தெரிவிக்கப்பட்டது.)

## 9—2. சிருங்காராதி ரசம்.

நாடகம் அலங்காரம் காவியம் முதலிய கிரந்தங்களில் கூறிய காமிநீ ஸம்பந்தியாகிய சிருங்காரம் முதலிய பத்து ரஸங்களாம். அது எங்ஙனம் ஸ்ரீமத் பாகவதத்தில் ஸத்யாநந்த ரூப ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் கூறப்படுகின்றதோ, அங்ஙனமே சாஸ்திரீய ஸம்ஸ்காரமுடைய விரக்த விவேகி புருஷனிடத்திலும் குண விருத்தியினல் காண்பிப்பாம்.

### 1. சிருங்கார ரசம்.

(1) எங்ஙனம் சிருங்காரம் முதலிய ஸர்வ ரஸமூர்த்தியாகிய பகவாந் ஜீவர்களின் அபிப்பிராய அநுஸாரத்தினல் சபையில் பிந்ந பிந்ந ரஸத்தினல் அறியப்பட்டனர். ஸம்பூர்ணத் தன்மையினல் எல்லோருக்கும் அறியப்பட வில்லை. அதனை முதலில் காண்பிப்பாம்:— அந்த ஸ்ரீகிருஷ்ணன் கம்ஸனது சபையில் அடைந்த ஸ்திரீகளுக்கு மூர்த்தியோடுகூடிய காம தேவனகப் பார்க்குங் காலத்தில் தோன்றினர். அவர்கட்குச் சிருங்கார ரஸம் காண்பிக்கப்பட்டதாம்.



### 2. வீர ரசம்.

(2) அஸத்தாகிய க்ஷிதிபுஜர்களுக்குத் தண்ட கர்த்தாவாய் அறியப்பட்டதனல் அவர் அதில் வீர ரஸம் காண்பிக்கப்பட்டவராயினர்.

### 3. கருண ரசம்.

(3) மாதா பிதாக்கட்குப் பார்க்குங் காலத்தில் தனது பாலனய் இருந்தனர். அதனு லவர்கட்குக் கருண ரஸம் காட்டப்பட்டதாம்.

### 4. அத்புத ரசம்.

(4) மற்றைய மநுஷ்யர்கட்குப் புருஷோத்தம நர சிரேஷ்டனய் அறியப்பட்டமையின் அவர் அதில் அத்புத ரஸம் காட்டினர்.

### 5. ஹாஸ்ய ரசம்.

(5) கோபிகளுக்குத் தனது ஜந மென அறியப்பட்டமையின் அவர்கட்கு ஹாஸ்ய ரஸம் காட்டப்பட்டதாகும்.

### 6. பயாநக ரசம்.

(6) போஜபதிக்குக் கொல்லுபவனக அறியப்பட்டமையின் அவனுக்குப் பயத்தினை யுண்டாக்கும் ரஸம் காண்பிக்கப்பட்டதாம்.

### 7. பீபத்ஸ ரசம்.

(7) பகவத் தத்வத்தினை யறியாதவர்கட்குப் பிந்ந பிந்நமாய் விளங்குபவராய்த் தோற்றினர். அவர்களுக்கு பீபத்ஸ ரஸம் காண்பிக்கப்பட்டதாம்.

### 8. ரௌத்ர ரசம்.

(8) முஷ்டிக (கையினல் குத்தப்பட்ட) சாணூராதி மல்லர்கட்கு வஜ்ராயுதம் போன்று அறியப்பட்டமையின் அவர் அதில் ரௌத்ர ரஸம் காட்டினர்.

### 9. சாந்தி ரசம்.

(9) யோசி, ஞானவான்கட்குச் சச்சிதானந்தப் பிரஹ்ம ரூப மாக அறியப்பட்டமையின் அதில் அவர் சாந்தி ரசத்தினைக் காண் பித்தனர்.

### 10. பிரேம பக்தி ரசம்.

(10) அக்குரூரர் முதலிய யாதவர்கட்குப் பரதேவதையாக அறியப்பட்டமையின் அவர்கட்குப் பிரேம பக்தி ரூப பத்தா வது ரசத்தினைத் தன்னிடத்திற் காட்டினர். எதனை வாத்ஸல்ய ரஸ மென்றுங் கூறுகின்றனர்.

இப்பொழுது விரக்தியினை யுடைய முமுக்ஷுக்களினிடத்திலும் நாநா ஜீவ அபிப்பிராய அநுசாரத்தினால் பத்து ரசத்தினையுங் காண்பிப்பாம்.

### 1. சிருங்கார ரசம்.

(1) அங்ஙனமே விரக்தியினை யுடைய ஜிஜ்ஞாஸுவும் சித்த சுத்தியினாலும், விஷ்ணுவின் பிரசாதத்தினாலும், நான்கு ஸாதந ஸம்பத்தி ரூப குணங்களினாலும் அலங்கரிக்கப்பட்டவனாய்ச் சுரோத்திரீயப் பிரஹ்ம நிஷ்ட குருவிற்குச் சுந்தரமாக விளங்குகின்ற னன். அதனால் அதில் அவருக்குச் சிருங்கார ரஸம் விளங்குகின்றது.

### 2. வீர ரசம்.

2. கெட்ட பிரவிர்த்தியின் ஹேதுவாகிய ஸ்வபாவ சித்த ராஜஸீ தாமஸீ ரூப விருத்திகளைச் சாஸ்திரீயப் பிரயத்தநத்தினாற் ஸாத்விக பரிணாம ரூப விருத்திகளால் தண்டஞ் செய்கின்றனன். அதனை அமிழ்த்துவதில் உத்ஸாஹ முடையவனாகின்றான் என்பது பொருளாம். ஆதலால் அவருக்கு வீர ரஸம் காண்பிக்கப்பட்டதாம். அல்லது அவற்றின் அபேக்ஷையினால் அதில் வீர ரஸம் வெளிப் படுகின்றது.



### 3. கருணா ரசம்.

3. குரு, விஷ்ணு பக்தி ரூப அவனது நற் றொழிலைப் பார்த் துக் குரு, விஷ்ணுக்கட்கு அவன் மீது கருணை யுண்டாகின்றது. அந்தக் கருணா ரஸம் அதில் அவர்களுக்கு அறியப்பட்டதாகின்றது.

### 4. அத்புத ரசம்.

4. எப்பொழுது அந்த ஜிஞ்ஞாஸு குரு, விஷ்ணு வென்னும் இருவர்களின் பிரசாதங்களினால் பிரஹ்மாத்ம தத்வ ஸாக்ஷாத்காரத் தினை யடைகின்றனன். அப்பொழுது ஸர்வ ஆஸ்திக புருஷர் களும் அவனது பரஸம்வேத்திய லக்ஷணத்தினையும், நல்லொழுக்கம், சுசீலத் தன்மைகளையும் பார்த்து, அவனை மநுஷ்ய சிரேஷ்டனாக அறிகின்றனர். ஆதலால் அவர்கட்கு அதில் அத்புத ரஸம் விளங்கு கின்றது.

### 5. ஹாஸ்ய ரசம்.

5. எப்பொழுது தனது ஸமாந வித்வானோடு தத்துவ கோஷ்டியினைச் செய்கின்றான். அப்பொழுது கர்த்ருத்வ போக்த் ருத்வாதி ரூப ஜந்ம மரணாதி அநந்த துக்கத்தோடு கூடிய அஞ்ஞா நிகளின் துர்த்தசையினைப் பார்த்தலினால், அல்லது தனது பூர்வ அவஸ்தையினை ஸ்மரித்தலினால், நகைப் புடையவனாய்ச் ஸச்சிதா நந்த ரூப அத்விதீயப் பிரஹ்ம தத்வத்தினை அவர்கட்கு உணர்விக் கின்றனன். அவர்களும் அவனது யதார்த்த வாக்கியத்தினைக் கேட்டலினால் நகைத்தலையும், பிரஸந்நத்தையும் அடைகின்றனர். ஆதலால் அவர்கட்கு ஹாஸ்ய ரஸம் காண்பிக்கப்பட்டதாம். அல்லது இஷ்டம் அநிஷ்டம் ஹர்ஷம் சோகம் முதலிய நசுவரமான ஸம்ஸார கதியினை யறிந்து ஸதா ஸந்தோஷமும், பிரஸந்நமு முடைய முகத்தோடு இருக்கின்றனன். இவ்வித முகாரவிந்தத்தினைப் பார்க் கும் ஆஸ்திக புருஷர்கட்குத் தன்னிடத்தில் ஹாஸ்ய ரஸத்தினைக் காட்டுகின்றனர்.

### 6. பயாநக ரசம்.

(6) உள்ளில் ரோகம் முதலிய தோஷங்க ளின்றித் தனது ஆநந்தத்தினால் ஸந்தோஷத்தோடு கூடி இருக்கின்றன னாயிம்,

பாஹ்யத்தில் எதனால் ஒன்றையுங் கிரகிக்காதவனாய் வர்ணாசிரம அடையாளங்களின்றியவனாய், மலினமாகிய அவதூத வேஷத்தோடு கூடி அஞ்ஞானியாகிய ஜீவர்கட்குப் பயத்தினைக் கொடுக்கும் வேதாளம் போன்று விளங்குகின்றான். ஆதலால் இந்தப் பயத்தினைக் கொடுக்கும் ரஸத்தின் ஆவிர்ப்பாவம் அதில் உண்டாகின்றது. எங்ஙனம் ரிஷப தேவர், பர்த்ருஹரி, தத்தாத்ரேயர், கதர்யர் என்னும் பிராஹ்மணாதிகளிடத்திலாம். அல்லது மனோ ரூப தேவன் ஸர்வ தேவர்களாகிய தனுஜர், மனுஜர் முதலியோர்களையும், தனது அதீனத்தினால் எல்லோருக்கும் சூடாமணியா யிருக்கின்றனன். அதனை எவன் சாஸ்திரீய ஞானத்தினால் தன் ஸ்வரூபத்தினின்றும் அன்யமாயவற்றைச் சித்திரத்தி லுள்ள சிங்கம் போன்று துச்சத் தன்மையினால் தள்ளி யிருத்தலின் ஸதா பயத்தைக் கொடுப்பதாக விளங்குகின்றனன். அதனால் அதில் இதுவே பயத்தைக் கொடுக்கும் ரஸத்தின் ஆவிர்ப்பாவமாம்.

### 7. ஜுகுப்ஸா ரசம்.

7. எதனால் திருஷ்ட அதிருஷ்ட போக ஹேதுவாகிய ஸர்வ ஸாமக்கிரியைகளு மின்றித் தனம் முதலிய மதத்தினால் குருடரா யுள்ளவர்களைச் சேவிப்ப தில்லை. கேவலம் ஜயிக்கப்படாத சரணத்தினை யுடையவனா யிருக்கின்றனன். ஆதலால் தனாட்டிய ராஜஸீ தாமஸீ புருஷர்கள், ஸம்பத்து முதலிய அபிமானத்தினால் கர்விக்கின்றனர். அவனது மாஹாத்மியத்தினை அறிவ தில்லை. அவர்கள் எவ்வாற்றானும் குறை வுற்ற அங்க முடையவனாகவே அங்கீகரிக்கின்றனர். அல்லது, ஒரு காலத்துப் பிராரப்த கர்ம அநுஸாரமாகத் துஷ்ட நிஷ்டுர புருஷர்களின் பிரதிகூல ஆசரணத்தினை அவனிடத்தில் பார்த்தலினால், அல்லது, அவர்களை விட்டிருத்தல் முதலியவற்றினால் அவனைப் பயத்தோடு கூடியவனாக அங்கீகரித்து ஆஸ்திக புருஷர்கள் கூறுகின்றனர்:—'ஹே பகவாந்! துஷ்ட புருஷர்களின்றும் இந்தப் பாப மற்ற புருஷனை இரக்ஷிக்க." என. அதில் அவர்களுக்கு விகலத் தன்மை விளங்குகின்றது. அது ஜுகுப்ஸா ரஸமாம். எதனை பீபத்ஸம் என்றுங் கூறுவர்.



### 8. ரௌத்ர ரசம்.

8. எதனால், க்ஷணிக விஷய ஸுகத்தின் ஸாதனமாகிய ஸ்திரீ, புத்ராதி, அந்ந பாநாதி, ஸர்வ பதார்த்தங்களும் அஞ்ஞ ஜீவனுக்கு அநேக அநர்த்தத்தின் ஹேதுவாகின்றன. அதனைத் தனது அதீனஞ் செய்தற்கு ஸமர்த் தில்லை. பரம வைராக்யத்தினால் அதனை அதிவிரக்த ஞானலின் (வசஞ் செய் திருக்கின்றான்). அதனால் அதில் அவனுக்கு ரௌத்ர ரஸம் தோற்றுகின்றது.

### 9. சாந்த ரசம்.

(9) மஹா பாக்கியத்தினை யுடைய பரீக்ஷகனாகிய சிஷ்யனுக்கு அந்த வித்வான் சச்சிதானந்தப் பரப்பிரஹ்ம ரூபமாக விளங்குகின்றான். ஆதலால் அவனுக்கு அதில் சாந்த ரஸம் அறியப்படுகின்றது.

### 10. வாத்சல்ய ரசம்.

(10) ஆஸ்திக புருஷன் அவருக்குப் பக்தி சிசுருஷை முதலியவைகளையும், அந்ந பாநாதிகளைக் கொடுத்தலையும் நான்கு புருஷார்த்தத்தின் அடைவின் ஹேதுவாகக் கொண்டு அவரிடத்தில் மனம் சரீரம் தனம் முதலியவற்றின் ஸமர்ப்பணத்தினால் நிரதிசயப் பிரேமைப் பக்தியினைப் பரதேவதை போன்று செய்கின்றான். அதனால் அவர்களின் அபிப்பிராயப் அநுசாரம் அதில் வாத்ஸல்ய ரஸத்தின் ஆவிர்பாவம் உண்டாகின்றது. எதனைப் பிரேமை ரஸம் என்றுங் கூறுகின்றனர்.

(ஈண்டு ஒரு ஞானியி னுடைய சரீரத்தில், நானா திருஷ்டா புருஷர்களின் அபிப்பிராயத்தினால் நானாவித ரஸத்தின் விளக்கம் கூறப்பட்டது. இவ்வளவு அம்சத்தில் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களின் ஸமானத் தன்மை கூறப்பட்டிருக்கின்றது. ஒரு காலத்தில் விளக்க அம்சத்தின் சமானத் தன்மை யின்றென அறிக. இம் முமுக்ஷு, ஞானியினிடத்தில், காவ்ய, அலங்காராதி சாஸ்திராதிகளிற் கூறிய சிருங்காரம் முதலிய ரஸத்தின் முக்கிய லக்ஷணம் பொருந்துவ தில்லையா மாயினும், குண விருத்தியினால் எல்லா ரஸ

மும் இதிலும் சம்பவிக்கின்றது. ஆதலால், எங்ஙனம் விஷயியாகிய புருஷன் ஸ்திரீ ஸம்பந்தியாகிய சிருங்காரம் முதலிய ரஸ லம்படன் ஆகின்றனனோ, அங்ஙனமே முமுக்ஷுவும் இந்த பக்தி ரஸத்திலும் லம்படனாதல் உசிதமாம்.)

## 10—1. ஞான சாதனம்.

10—1. இப்பொழுது பதினொரு எண்ணிக்கை விசிஷ்ட ஸாதனத்தினைக் கூறுவாம். விவேகம் வைராக்கியம் முதலிய நான்கு, குரு ஸமீபத்திற் செல்லல், (1) சிரவணம், மனனம், நிதித்தியாஸனம், (3 மனோ நாசம், வாஸனா க்ஷயம், தத்வ ஞானாப்பியாஸம், (3) என்னும் பதினொன்றும் ஜீவன் முக்தி பரியந்தம் தத்துவ ஞானத்தின் ஸாதனமாக ஆண்டாண்டுச் சுருதி முதலியவற்றில் கூறப்பட்டிருப்பதனைக் காண்பிப்பாம்.

## 1—2—3—4. விவேகாதி நான்கு.

1—2—3—4. "இவ்வாத்மாவினும் அன்ய மெல்லாம் நசுவரம் ஆத்மாவே சத்தியம்.", "எங்ஙனம் கர்மத்தினா லடைந்த இந்த லோகம் நாச முறுகின்றதோ, அங்ஙனமே புண்ணியத்தினா லடையப்பட்ட பரலோகமும் நாச முறுகின்றது.", "சாந்தன், தாந்தன், உபரதன், திதிக்ஷு, சிரத்தாவான், ஸமாஹிதனாய் ஆத்மாவில் ஆத்மாவினை விசாரிக்க", "கருமத்தினாற் சம்பாதிக்கப்பட்ட லோகத்தினை விசாரித்துப் பிராஹ்மணன் வைராக்யத்தை யடைகின்றான்", "என்று வைராக்ய முண்டாயிற்றோ, அன்றே ஸந்யாசம் செய்க" "ஆத்ம லோகத்தினையே இச்சிக்கும் விரக்த புருஷன் சந்நியாஸம் செய்க" என்பன வாதி சுருதிகளால் குருவினிடத்துச் செல்லுதற்கு ஹேதுவாகிய விவேகம், வைராக்யம் முதலிய நான்கு ஸாதனங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவை யக்ஞ, தானம், தபம் முதலிய ஸர்வ கர்மங்களின் அபேக்ஷையினால் அந்தரங்க மாகின்றன. சிரவணாதிகளின் அபேக்ஷையினால் பகிரங்க மாகின்றன. இவற்றின் லக்ஷணங்களோ முன்னரே கூறப்பட்டிருக்கின்ற.



## 5. குருசமீபத்திற் செல்லல்.

(5) "அந்த ஆத்மாவின் ஞானத்தின் பொருட்டு அதிகாரி சுரோத்திரீயப் பிரஹ்ம நிஷ்ட குருவினிடத்தில் கையில் ஸமித்துடையவனாய்ச் செல்க" என்பதாதி சுருதியினால் குருவின் சமீபத்தில் செல்லல் கூறப்படுகின்றது.

சுருதி, யுக்தி வித்வான்களது அநுபவத்தினால் சிஷ்யனது
ஸம்சயாதிகளைக்களைபவர் சுரோத்தரியர் எனப்படுவர், கையி லுள்ள
வில்வப் பழம் போன்று ஸம்சய விபர்யய மின்றிப் பிரஹ்மாத்ம
அபரோக்ஷ ஞானத்தினை யுடையவர் பிரஹ்ம நிஷ்டர் எனப்படுவர்.
இருளித தர்ம விசிஷ்ட குருவே சிஷ்யனது காரிய ஸஹித அவித்
தையினை நிவாரணம் செய்வதிலும் பிரஹ்மானந்தத்தின் அடைவிலும்
மிகுந்த ஸாதன மாவர். ஒவ்வொரு தர்மங்களோடு கூடியவ
ராகார். ஸம்சயத்தினை நாசஞ்செய்பவர்க்கு அபரோக்ஷ ஞான
மின்மையின், அபரோக்ஷ ஞானத்தினை யுடைய பிரஹ்ம நிஷ்ட
ஸமாஹிதற்கு ஸம்சயம் முதலியவற்றினைக் களையும் ஸாமர்த்திய
மின்மையின். எங்ஙனம், மாம்பழம் முதலியவற்றின் அடைவின்
நொண்டியும் குருடனுமாகிய புருஷர்கள் ஒவ்வொரு ஸாமர்த்தியத்
தினாலும் அடைவதில்லை. நொண்டிக்கு மரத்தின்கண் ஏறுதற்குச்
சாமர்த்திய மின்மையின் குருடனுக்கு மாம்பழம் பிளக்கப்படா
மையின், ஆதலால், உபய தர்ம விசிஷ்ட குருவினிடத்தில் விதி
பூர்வமாக நான்கு சாதனங்களோடு கூடிய அதிகாரி சென்று சிசு
ருஷை முதலியன பூர்வகம் பிரசினம் செய்கின்றனன். குருவும்
அவனது அதிகாரத்தினை யுணர்ந்து மஹா வாக்கிய உபதேசத்தி
னைச் செய்கின்றனர். "ஹேஅர்ஜுன! அந்த ஞானியை நீ அடை
வாய். குருவின் நமஸ்காரத்தினாலும், ஸேவையினாலும், நல்ல பிர
சினத்தினாலும், அந்த ஞானியாகிய தத்துவ தரிசி குருவும் உனக்கு
ஞானத்தின் ஸாதனத்தைக் கூறுவர். எதன் அநுஷ்டானத்தினால்
நீ ஞானத்தினை அடைவாய்" என்பதாதிப் பிரமாணத்தினால்.

## 6—7—8 சிரவண மனன நிதித்தியாசனம்.

6—7—8 "கேட்க. தேடுக. அறிக. மனனிக்க. நிதித்தியாசிக்க." என்பனவாதி சுருதிகளால் சிரவண மனன நிதித்தியாஸனங்கள் கூறப்

பட்டிருக்கின்றன. அம் மூன்றுமே நான்கு சாதநங்களின் அபே க்ஷையினுல் பிரதிபந்த நிவிர்த்தி வாயிலாய் ஞானத்தின் அந்தரங்க ஸாதநமாம். தத்கவமஸி மஹா வாக்கியத்தின் அபேக்ஷையினுல் அவைகள் பஹிரங்க ஸாதநமாம். வாக்கிய ஜந்ய ஞாநத்தின் பிரதிபந்தகமாகிய ஸம்சய விபரீத பாவத்தினை நிவிர்த்தித்தலின். அவற்றின் லக்ஷணமும் முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. ஈண்டுக் கூறப்பட வில்லை.

9—10—11 மநோ-நாசம், வாசநா க்ஷயம், தத்வ ஞாநம்.

9-10-11 "ஹே மஹா மதியினை யுடைய இராமா வாஸநா க்ஷயம், தத்வ ஞாநம், மநோ நாசம் என்னும் மூன்றினையும் எப்பொழுது ஒன்ருய் வெகு காலம் அப்யாசம் செய்யப்படுகின்றதோ, அப்பொழுது இம் மூன்றுமே ஜீவந் முக்தியின் பலத்தினைக் கொடுப்பதாகின்றது. (5—116) என்னும் வஸிஷ்ட பகவானது வசநத்தினுல் மூன்று ஸாதநங்களோடு கூடவே ஜீவந் முக்தியின் அப்யாசம் கூறப்பட்டிருக்கின்றது இந்த மநோ நாசம் முதலிய மூன்றும் ஜீவந் முக்தியின் ஸாக்ஷாத் ஸாதநமாம். வேறு முற் புகன்ற ஸாதநம் பரம்பரா ஸாதநமாம். எதனுல் இம் மூன்றின் அந்வய வ்யதிரேகத்தினுல் பரஸ்பர காரணத் தன்மை கூறப்பட்டிருக்கின்றதோ, அதனுல் ஜீவந் முக்தியின் பொருட்டு இம் மூன்றுக்கும் கூடவே அப்யாஸம் அபேக்ஷிக்கப்படுகின்றது. அப்யாஸம் என்பது யத்நத்தினுல் மீண்டும் மீண்டும் அதன் ஆவிர்த்தியாம். முதலில் தத்வ ஞாநம் வாஸநா க்ஷயம் என்னும் இரண்டின் பரஸ்பரங் காரணத் தன்மையினை அந்வய வியதிரேகத்தினுல் காண்பிப்பாம்:-பார்க்கப்பட்ட இவ்வெல்லா ஜகத்தும் மித்தையாம். அத்விதீய ஆத்மாவே பரமார்த்த ஸத்தியமாம். ஆத்மாவினும் பிந்நமாக அற்பமு மில்லை. இவ்வாருய ஞாநம் எப்பொழுது சிரவணம் முதலியவற்றின் மீண்டும் மீண்டும் ஆவிர்த்தியினுல் உண்டாகின்றதோ, அப்பொழுது விஷயத்தில் ஸத்திய புத்தியின் அபாவத்தினுல் இராக த்வேஷாதி லக்ஷண வாஸநா க்ஷயம் உண்டாகின்றது. முற் புகன்ற தத்வ ஞாநத்தின் அபாவ முண்டாயின் ஜகத்தில் ஸத்திய புத்தி இருத்தலின் இராக த்வேஷாதி வாஸனைக்கும் அபாவம்



உண்டாகின்ற தில்லை. மாருய் உத்தரோத்தரம் பிரதிதிநமும் இராக த்வேஷாதி வாஸனை விர்த்தியாகின்றது. இது தத்வ ஞாநத்திற்கு வாஸநா க்ஷயத்தில் அந்வய வ்யதிரேகம் காண்பிக்கப்பட்டது. இப்பொழுது வாஸநா க்ஷயத்திற்கும் தத்துவ ஞாநத்தில் காரணத் தன்மை அந்வய வ்யதிரேகங்களால் கூறப்படுகின்றது:— விவேகம், விஷயங்களில் தோஷ தர்சநம், விரோதி வாஸனை என்பவற்றினை யுண்டாக்குதலால் இராக த்வேஷாதி வாஸனை நாச மாகின்றது. அது உண்டாயின் சுருதி ஆசாரியர்களின் பிரஸாதத்தினுல் நிர்மல மநதில் தத்வ ஞாநம் உண்டாகின்றது. "இவ் வெல்லாம் ஆத்மாவே" என.

இவ்வாறு வாஸநா க்ஷயத்தின் அபாவ முண்டாயின், இராகாதிகளால் மநம் மலிந மாகின்றது. மலிநமாகிய மநத்தில் சமம் முதலிய ஸாதநங்களின் அஸம்பவத்தினுல் வேதாந்த சிரவணம் முதலியவற்றின் அஸம்பவம் உண்டாகின்றது. எதனுல் விஷயாசை யுடைய புருஷனுக்குத் தத்வ ஞாநம் ஒரு காலத்தும் உண்டாவது இல்லை இது வாஸநா க்ஷய, தத்வ ஞாநங்களின் பரஸ்பரங் காரணத் தன்மை கூறப்பட்டது.

இப்பொழுது தத்வ ஞாந மநோ நாசங்கட்குப் பரஸ்பரங் காரணத்தன்மை காண்பிக்கப்படுகின்றது:—முற் புகன்ற தத்வ ஞாநம் உண்டாயின் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மையின் நிச்சயம் உண்டாகின்றது. அதனுல் அதன் பாத முண்டாகின்றது. அந்தப் பாதிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் முன் போன்று மந மிருப்ப தில்லை. சத்திய ரூபத்தினுல் நிச்சயம் செய்யப்பட்ட ஆத்மா மநதின் விஷய மன்ருகலின், அதிலும் மநம் பிரவிர்த்திப்ப தில்லை. ஆகலால் விறகின்றிய அக்நி போன்று தானே லயமாகின்றது. இவ்வாறு தத்வ ஞாநத்தின் அபாவமாயின் பிரபஞ்சத்தில் சத்திய புத்தி நிவிர்த்தியாவ தில்லை இராகாதி விர்த்திகளினுல் மாருய் மநம் ஸ்தூல மாகின்றது. அதனுல் மநத்தின் நாசம் எங்ஙனம் உண்டாம்?

---

* பகவத் கீதை "விழியாமென வறிவாலறி வுறவார்விழி வசமே
வழிபாடுசெய் தவர்சேவடி மலர்சூடிட வவரே
யொழியாதெவர் களுமியாவையு மொருநீயென திடையென்
றழியாவகை யதுவாவதொ ரறிவேயரு ளுவரால்". (4—25.)

இப்பொழுது மநத்தின் நாசமும் தத்வ ஞாநத்தின் காரண மாதலைக் காண்பிப்பாம்:—யோகாப்பியாஸத்தினால் மநத்தின் நாசம் உண்டாய் ஸம்பூர்ண த்வைத விர்த்திகளும் நாச மாகின்றன. அப்பொழுது சுருதி ஆசாரியர்களின் பிரசாதத்தினால் நிர்த்த மாகிய மநதில் பிரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரமும் உண்டாகின்றது. மநோ நாசத்தின் அபாவம் இருக்கின் பிரஹ்ம ஞாநமும் உண்டாகின்ற தில்லை. எதனால் வர்ணாசிரம அபிமாநத்தோடு கூடிய ஸ்தூல மநதில் பிரஹ்ம தரிசநத்தின் யோக்யத் தன்மை யில்லை. இவ்வாறு தத்வ ஞாந மநோ நாசங்களின் பரஸ்பரக் காரணத் தன்மை கூறப் பட்டது.

இப்பொழுது வாஸநா க்ஷய மநோ நாசத்தின் பரஸ்பரங் காரணத் தன்மை அந்வய, வ்யதிரேகங்களினால் கூறுவாம். முற் புகன்ற வாஸநா க்ஷயத்தின் அபாவ முண்டாயின் இராக த்வேஷாதிகளினால் ஸ்தூலத் தன்மையினை யடைந்த சித்தம் இச்சிக்கப் பட்ட விஷயத்தின் ஸந்முகமாய் அதன் ஆகாரமாகப் பரிணமிக் கின்றது. அதனால் மநத்தின் நாசம் எங்ஙனம் உண்டாம்.? இராகாதி வாஸனைகளின் க்ஷய முண்டாயின் இராகாதி விர்த்திகளும் உண்டாவ தில்லை. எதனால், வாஸனையே அதற்குக் காரணமாம். விருத்திகள் உண்டாகா திருக்குதலே மநத்தின் நாசமாம். இது வாஸநா க்ஷயத்திற்கு மநோ நாசத்தில் காரணத் தன்மை இருக் கின்றது. இவ்வாறே மநத்தின் நாச முண்டாயின் எல்லா விருத்தி கட்கும் நாச முண்டாகின்றன. ஆதலால் எல்லா வாசனையும் க்ஷய மாகின்றது. மநோ நாசத்தின் அபாவ முண்டாயின் பிராரப் தத்தின் வசத்தினால் விஷய போகத்தில் சித்தத்தின் பிரவிர்த்தி யுண்டாய் நெய் முதலியவற்றால் நெருப்புப் போன்று இராகாதி வாஸனையும் உண்டாகின்றது. அதனால் எங்ஙனம் வாஸனையின் நாசம் உண்டாம்? இவ்வாறு அவற்றிற்குப் பரஸ்பர காரணத் தன்மை யின் அபிப்பிராயத்தினால் "தீர்க்க கால நிரந்தர ஆதரத்தோடு கூடி இம் மூன்றனையும் ஒன்றாக அப்யாஸம் செய்யில் அவசியம் ஜீவந் முக்தி ரூப பலத்தின் அடைவு உண்டாகின்றது" என வாசிட்டத்தில் மூன்றற்கும் கூடவே அப்பியாஸம் கூறப்பட்டது. அதனால் முமுக்ஷுவாகிய ஜிஜ்ஞாஸுக்களும் அதிகார அநுஸாரம்



இப் பதின்மூன்று ஸாதநங்களையும் ஜீவந் முக்தி பரியந்தம் ஞாந அடை வின் பொருட்டு அவசியம் அநுஷ்டாநம் செய்க.

## பன்னிரு வகைத்தாய பதார்த்தங்கள். 11-3.

### 11—1. ஆத்மாநாத்மாக்களின் தர்மம்.

இப்பொழுது ஆத்மா, அநாத்மாவின் விவேக சித்தியின் பொருட்டு அவற்றின் பரஸ்பர விலக்ஷணமாய பன்னிரண்டு எண் ணிக்கை விசிஷ்ட தர்மத்தினைக் கூறுவாம்:— நித்தியத் தன்மை, அநித்தியத் தன்மை முதலிய பேதத்தினால் ஆத்மா அநாமாக்களின் அஸாதாரண தர்மம் பன்னிரண்டாம்.

#### 1: நித்தியம்.

1. ஆத்மா நித்தியமாம் முக்காலத்திலும் இருப்பதாகலின். உற்பத்தி யுடையன வாக தேகாதி அநாத்மாக்கள் அநித்தியமாம். "அரே! இந்த ஆத்மா அவிநாசி" என்னும் சுருதியினால். வின்.

#### 2. அவ்யயம்.

2. ஆத்மா அவ்யயமாம். அவ்யய மென்பது நாச சூந்யமாம். தர்மத்தினாலும், ஸ்வரூபத்தினாலும் நாச மின்மையின். அநாத்மா விநாசியாம். ஷட்பாவ விகார முடையதாகலின். "அரே! கார்கி! இவ் வாத்மாவினை பிராஹ்மணர் அக்ஷரம் என்கின்றனர்", "பரம ஆகாச ரூப அக்ஷரத்தில் ரிக்குகள் தாத்பரியத்தினால் இருக்கின் றன.", "பண்டிதன் ஜநிப்ப தில்லை. மரிப்பதில்லை" என்பன வாதி சுருதியினால்.

#### 3. சுத்தம்.

3 ஆத்மா சுத்தமாம்; ஸ்வாபாவிக ஆகந்துக மல மின்றி யிருத்த லின். அநாத்மா அசுத்தமாம்; அவித்தை, பூதங்களின் காரிய மாக லின். "நிரவத்யன் நிரஞ்சநன்" என்னும் சுருதியினால்.

#### 4. ஏகம்.

4. ஆத்மா ஏகமாம். ஸஜாதிய, விஜாதிய பேத மின்றி யிருத் தலின். அநாத்மா நாநாவாம்; ஸஜாதீயம் முதலிய பேத முடையன வாகலின். "ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம்", "ஒரே தேவன் ஸர்வ

பூதங்களிலும் கூடனாய் இருக்கின்றான்." என்பன வாதி சுருதியினால்.

5. க்ஷேத்ரக்ஞன்.

5. ஆத்மா க்ஷேத்ரக்ஞனாம்; எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாகலின். அநாத்மா க்ஷேத்ரமாம்; ஜடமாய்த் திருசியமாகலின். "அரே! விஞ்ஞாத ஆத்மாவினை நீ எதனாலறிவாய்" என்பதாதி சுருதியினால்.

6. ஆசிரயம்.

6. ஆத்மா ஆசிரயமாம்; எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாகலின். அநாத்மா ஆசிரிதமாம்; அத்தியஸ்தமாகலின். "எதில் ஸ்வர்க்க லோகம், பிருதிவி, அந்தரிக்ஷங்கள் ஓதப் புரோதபா (குறுக்கு நெடுக்கா) யிருக்கின்றன." என்பதாதி சுருதியினால்.

7. அவிக்கிரியம்.

7. ஆத்மா அவிக்கிரியமாம். கூடஸ்தமாகலின். அநாத்மா விகாரியாம். பரிணாமியாகலின். "நிஷ்கலன்; நிஷ்கிரியன், சாந்தன்." என்பதாதி சுருதியினால்.

8. ஸ்வப் பிரகாசம்.

8. ஆத்மா ஸ்வப்பிரகாசமாம். அறியப்படாததாய் அபரோக்ஷமாகலின். அநாத்மா பரப்பிரகாசியமாம். இந்திரியங்கட்கு விஷயமாகலின். "இப் புருஷன் ஸ்வயம் ஜோதியா யிருக்கின்றான்", "ஆத்ம ஜோதி ஸம்ராட்டா யிருக்கின்றது. என்பன வாதி சுருதிகளினால்.

9. ஹேது.

9. ஆத்மா ஹேதுவாம். அபின்ந நிமித்த உபாதான காரணமாகலின். தேகாதி அநாத்மா ஹேதுவுடையதாம். ஸத்துவாதி குண விசிஷ்ட பஞ்ச பூதங்களின் காரியமாகலின். "ஆத்மாவினின்றும் ஆகாசம் உண்டாயிற்று.", "எதனின்றும் இப் பூதங்கள் உண்



டாயின.", "அது இந்த லோகங்களை ஸிருஷ்டித்தது" என்பன வாதி சுருதிகளினால்.

10. வியாபகம்.

10. ஆத்மா வியாபகமாம். தேச கால வஸ்து பரிச்சேத மின்றி யிருத்தலின். அநாத்மா வியாப்பியமாய்ப் பரிச்சின்னமாம். பரஸ்பரம் வியபிசாரி யாகலின். "ஸத்திய ஞானாநந்தம்," "ஆகாசம் போன்று எங்கும் ஸம்பந்தித்து நித்தியமா யிருக்கின்றது," "ஸர்வ வியாபி ஸர்வ பூதாந்தராத்மா" என்பன வாதி சுருதிகளினால்.

11. அசங்கி.

11. ஆத்மா அஸங்கியாம். ஸம்யோகம் முதலிய ஸம்பந்தங்களின் அதிகரணமாகாமையின். அநாத்மா சங்கியாம். பரஸ்பரம் ஸாபேக்ஷையும், ஸம்பந்தியுமாகலின். "இப் புருஷன் அஸங்கன்", என்பதாதி சுருதியினால்.

12. அநாவிருதம்.

12. ஆத்மா அநாவிருதமாம். அநாவிருத மென்பது மறைப்பின்றியதாம. விபுவாகலின். அநாத்மா ஆவிருதமாம்; பரிச்சின்னமாகலின். "ஸர்வ வியாபி, ஸாக்ஷி, சேதா, நிர்க்குணன்.", "பூர்ணத்தினைக் கொண்டு பூர்ணமே எஞ்சுகின்றது." என்பன வாதி சுருதிகளினால்.

(இவ்வாறு கூறிய ஆத்மா அநாத்மாக்களின் அஸாதாரண தர்மங்களை ஜிஜ்ஞாஸு நன்கு விசாரித்து அநாத்மாவினின்றும் பின்னமாக ஆத்மாவின் ஞானத்தினைச் சம்பாதிக்க. எதனால் சோதித ஆத்மாவிற்கே தத்த்வமஸி மஹாவாக்கியம் பிரஹ்மத்தோடு அபேதங் கூறுகின்றது. அந்தக்கரணாதி ஸங்காத விசிஷ்டத்திற்கு அபேதங் கூறுவதில்லை.)

மஹத்துத் தன்மை முதலியவற்றின் காரண தர்மம்.

11—2. இப்பொழுது லோகத்தில் பெருந் தன்மை மானங்களின் ஹேதுவாகிய பன்னிரண்டு தர்மங்கள் சாஸ்திரத்தில் கூறப்பட்டி

ருக்கின்றது. அதுவும் பகவத் பக்தி யின்றியவனுக்கு பவித்திரமாவ தில்லை. வியபிசார மின்றிய, பக்தி யின்றி, அந்ய தர்மங்கள் பகவானுக்கு ஸந்தோஷம் செய்யாமையின். அப் பன்னிரு தர்மங்களைக் காண்பிப்பாம்:—தநாட்டியத் தன்மை, அபிஜநம், ரூபம், தபம் சுருதம், ஓஜ், தேஜஸ், பிரபாவம், பலம், பௌருஷம், புத்தி, யோகம் என்பன பன்னிரு தர்மங்களாம்.

1. தநாட்டியத் தன்மைத் தர்மம்.

1. பரம்பரையாக யடைந்த தனது விருத்தியினால் நியாயமாகச் சம்பாதிக்கப்பட்ட வெள்ளி முதலிய வஸ்துவின் சேர்க்கை தநாட்டியத் தன்மை யெனப்படும்.

2. அபிஜந தர்மம்.

2. நல்ல குலத்தில் ஜநித்தல் அபிஜநமாம்.

3. ரூப தர்மம்.

3. சக்ஷு முதலிய அவயவங்களின் சுந்தரத் தன்மை ரூபம் எனப்படும்.

4. தப தர்மம்.

4 இந்திரியத்தினை வற்றச் செய்தற்கு ஏதுவாகிய காயக் கிலேசம் முதலியவைகள் தபம் எனப்படும்.

5. சுருத தர்மம்.

5. வியாவகாரிக வித்தையின் பாண்டித்தியம், அல்லது குரு முகமாக வேத வேதாங்கங்களின் சிரவணம் சுருதம் எனப்படும்.

6. ஓஜ் தர்மம்.

6. சக்ஷு முதலிய இந்திரியங்களின் நிபுணத் தன்மை ஓஜ் எனப்படும்.

7. தேஜஸ் தர்மம்.

7. அந்யரை அமிழ்த்துதற்கு ஹேது தேஜஸ் எனப்படும்.



8. பிரபாவ தர்மம்.

8. அநுக்ரஹ, நிக்ரஹங்களின் ஹேதுவாகிய நாநா விதப் பிரதாபம் பிரபாவம் எனப்படும்.

9. பல தர்மம்.

9. சரீர சாமர்த்தியமும், தனது ஜநம் முதலிய ஸாமர்த்தியமும் பலமெனப்படும்

10. பௌருஷ தர்மம்.

10. அவசியம் செய்யத்தக்கதில் யத்நம் பௌருஷம் எனப்படும்.

11. புத்தி தர்மம்.

11. நாநாவித வியவஹாரப் பிரஞ்ஞை புத்தி எனப்படும்.

12 யோக தர்மம்.

12. யமம் நியமம் முதலிய அஷ்டாங்கம் யோகம் எனப்படும். அல்லது தனது வர்ணாசிரமத்தின் அதிகார அநுஸாரம் சாஸ்திரப் பிரகாரம் கர்மத்தில் இருத்தல் யோகம் எனப்படும்.

ஏதனால், பகவத் பக்தி யின்றியவனுக்கு இப் பன்னிரண்டு குணங்களும் கர்வத்தின் பொருட்டே யாகின்றன. பகவத் பிரசாதத்தினை யுண்டாக்குந் தன்மையினால் மோக்ஷத்தின் ஹேதுவாவதில்லை. “ஸர்வ தர்மங்களையும் விட்டு நான் ஒரு சரணத்தினை அடைவேன். நான் ஸர்வ பாவங்களினின்றும் உன்னை விடுவிப்பேன்”, “ஆசார மின்றியவனை வேதம் பவித்திரஞ் செய்வ தில்லை. ஷடங்க ஸஹிதமாய்க் குரு முகத்தினால் அத்யயநஞ் செய்திருக்கினும். இறக்கைகள் உண்டாய பக்ஷி கூண்டை விடுவது போல அந்த (மரண) காலத்தில் பக்தி யின்றியவனைச் சாதுக்கள் விடுகின்றனர்.” என்பன வாதிப் பிரமாணத்தினால். ஆதலால் ஒரு ஆஸ்திகனும் பௌருஷத்தோடு கூடிய பிராரப்த கர்மத்தினை யடைந்தும் இக் குணங்களில் ஆசை யடையற்க. பின்னையோ எல்லாவற்றினையும்

தியாசஞ் செய்வதனாலே பகவானது சரணாரவிந்தத்திலேயே பிரீதியுடையவனாதக. இதுவே மநுஷ்ய ஜந்மத்தின் உத்தம லாபமாம். அங்ஙனமே பாகவதத்தில், "தநம் அபிஜநர், ரூபம், தபம், சுருதம், ஓஜ், தேஜஸ், பிரபாவம், பலம், பௌருஷம், புத்தி, யோகம் எனப் பன்னிரு குணங்கள் பரம புருஷனது ஆராதநம் முதலியவற்றின் பொருட்டு உண்டாவதில்லை. எதனால் பகவான் கஜயூதபர் (யானைக் கூட்டங்களைக் காபாற்றுவோன்) கஜேந்திரனிடத்தில் கேவலம் பக்தியினாலேயே ஸந்தோஷத்தினை யடைந்தனர்", என்று கூறப் பட்டிருக்கின்றது.

## 11—3. பிராஹ்மணர்களின் விரதம்.

ஸநத்ஸுஜாத சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கும் பிராஹ்மணனது பன்னிரு தர்மங்களை ஈண்டுக் கூறுவாம்:— ஜ்ஞாநம், ஸத்தியம், தமம், சுருதம், அமாத்ஸர்யம், ஹ்ரீ, திதிக்ஷை, அநஸூயை, யஜ்ஞம், தாநம், திருதி, சமம், என்னும் பன்னிரண்டும் பிராஹ்மணர்களின் மஹா விரதமாம், என.

### 1. ஞாநம்.

1. குரு முகமாகச் சாஸ்திர வாயிலாய் அடைந்த புத்தி ஞாநமாம்.

### 2. ஸத்தியம்.

2. சத்ரூபப் பரமேசுவர ஸம்பந்திபாகிய ஆலாபம் (வர்ணனை), அல்லது யதார்த்த வார்த்தை ஸத்தியமாம்.

### 3. தமம்.

3. பாஹ்யேந்திரியங்களை நிஷித்தப் பிரவிர்த்தியினின்றும் நிரோதித்தல் தமமாம்.

### 4. சுருதம்.

4. நாநா சாஸ்திரங்களை படித்தல், வியாக்யாநம் செய்தல் சுருதமாம்,



### 5. அமாத்சர்யம்.

5. அந்யனது உயர்வினை ஸஹிக்காமை மாத்ஸர்யமாம். அதன் அபாவம் அமாத்ஸர்யமாம்.

### 6. ஹ்ரீ.

6. கெட்ட ஆசாரத்தினால் குரு சாஸ்திரம் லோகங்களில் லஜ்ஜை ஹ்ரீயாம்.

### 7. திதிக்ஷை.

7. அந்யனது அபராதத்தினை ஸஹித்தல் திதிக்ஷையாம்.

### 8. அநஸூயை.

8. நிந்தை செய்யாதிருத்தல் அநஸூயையாம்.

### 9. யஞ்ஞம்.

9. விதிக்கப்பட்ட கர்மத்தினைச் செய்தல் யஜ்ஞமாம்.

### 10. தாநம்

10. பாத்திரத்தில், அந்நம், தநம், வஸ்திரங்களை அர்ப்பித்தல் தாநமாம்.

### 11. திருதி.

11. ஆபத் காலத்தில் தைர்யவானாகுதல் திருதியாம்.

### 12. சமம்.

12. மநத்தினைச் தன் வசம் செய்தல் சமமாம்.

(இப் பன்னிரண்டு விரதமும் பிராஹ்மணர்களின் தைவீ சம்பத்தின் அடக்கத் தன்மையினால் பரலோகத்தின் ஹேதுவாமாயினும், இத் தர்ம விசிஷ்ட பிராஹ்மணனுக்கு எப்பொழுது தனது ஸ்வரூப பூத அந்தர்யாமியாகிய பரமேசுவரனிடத்தில் பிரீதி

யுண்டாக வில்லையோ, அப்பொழுது அந்த நல்ல குலத்தினை யுடைய பிராஹ்மணனும் பகவத் பிரீதியோடுகூடிய சண்டாளனினும் தாழ்வுடையவனாவன். ஆயின், இப் பன்னிரண்டு தர்மங்களு மின்றி, பகவத் பக்தியு மின்றிய பிராஹ்மணனது நிக்கிருஷ்டத் தன்மையில் கூற வேண்டுவ தென்னை? "சண்டாளனும் விஷ்ணு பக்தி பராயணனாயின் அவனும் சிரேஷ்ட முடையாவன். எவன் விஷ்ணு பக்தி யின்றி த்விஜனா யிருக்கினும் அந்த த்விஜன் சண்டாளனினும் அதமனே யாவன்." "பன்னிரண்டு குணங்களோடு கூடிய விப்ரான் அரவிந்த நாபனது பாதாரவிந்தத்தினின்றும் விமுகனா யிருக்கின்றான், அவனினும் அந்தச் சண்டாளனை நான் சிரேஷ்டமாகக் கொள்கின்றேன். எவன் தனது மநம், வாக்குக் கிரியை, அர்த்தம் பிராணன் என்பவற்றைப் பரமேசுவரனிடத்து ஸமர்ப்பணம் செய்கின்றான், அந்தச் சண்டாளன் ஸர்வ குலத்தினையும் பவித்திரம் செய்கின்றான். அந்தக் கர்வ முடைய பிராஹ்மணன் செய்வ தில்லை. அவன் ஆத்மாவினையும் பவித்திரஞ் செய்ய வில்லையாயின், குலத்தினை யாண்டுப் பவித்திரம் செய்யப் போகின்றான்." என்னும் ஸ்மிருதி, பாகவதங்களின் பிரமாணங்களினால். ஆதலால் பகவத் பக்தியில் வர்ணாசிரமாதிகளின், அல்லது தநம் முதலிய ஸம்பத்துக்களின் அபேக்ஷை யில்லை. குலம், ஜாதி, கிரியை, தநம், முதலியவைகள் இன்றிய வால்மீகி, கஜேந்திரன் கணிகை ஸுதாமா (குசேலசர்) முதலியோர்களும் சாஸ்திரப் பிரஸித்த பக்திமான்களா யிருத்தலின்.)

## பதின் மூன்று வகைத்தாய பதார்த்தம்.

### 12—1. பாகவத தர்மம்.

இப் பொழுது பதின் மூன்று எண்ணிக்கை விசிஷ்ட பாகவத தர்மத்தினைக் கூறுவாம்:—முக் குண ரூப பகவத் மாயை, யஜ்ஞம், யோகம், தாநம், தபம், முதலிய ஆயிரம் உபாயங்களினாலும் தாண்டுவதற்குச் சமர்த் தில்லை. இந்திரியாதி சங்காத ரூப தேஹத்தில் நான் என்னும் புத்தியினையும், ஸ்திரீ, புத்ரன், கிருஹம் முதலியவற்றில் எனது என்னும் புத்தியினையும் ஜீவனிடத்தில் ஆரோபித்தலினால் ஜீவனை அநந்த துர்த்தசையில் தள்ளுகின்றது. அதனைத் தாண்



டுதற்கு அஸாதாரண உபாயமாகிய விஷ்ணுவிற்குச் சந்தோஷத்தினைச் செய்யும் பாகவத தர்மம், சாஸ்திரத்திற் புகன்றது அநந்தமாயினும், அவற்றுள் பிரதாநம் பதின் மூன்று எண்ணிக்கையினையுடைய தர்மமாம். அவற்றினைக் காண்பிப்பாம்:--ஜீவர்களின் ஸகாம கர்மத்தின் பலத்தை விபரீதமாகப் பார்த்தல் (1), தநம், கிருஹம், புத்ரன் முதலியவற்றில் துக்க புத்தியும், சல புத்தியும் (2), பரலோகத்தில் நசுவர புத்தி (3), சப்தப் பிரஹ்ம, பரப்ரஹ்மங்களின் நிஷ்டை யுள்ள குருவினிடத்தில் செல்லல் (4), குருவினிடத்தில் பகவத் புத்தியும், நிஷ்கபட சேவையும் (5), பரமேசுவரனிடத்தில் ஸர்வ கர்மத்தினையும் அர்ப்பணஞ் செய்தல் (6), பகவத் பக்தி, பரேச அநுபவம், விரக்தி (7), சாது ஸங்கம் (8), சௌசம், தபம், திதிக்ஷை, மௌநம், ஸ்வாத்தியாயம், ஆர்ஜவம், பிரஹ்மசர்யம், அஹிம்ஸை, த்வந் த்வங்களில் சமத் தன்மை (9), யாண்டும் ஆத்மா, ஈசுவர தரிசநம் (10), கைவல்யம், அநிகேதத் தன்மை, விவிக்தி, சீர வஸநம், ஸந்தோஷம் (11), ஸர்வ பூதத்திலும் ஆத்மாவின் பகவத் பாவத்தின் தரிசநம், பகவதாத்மாவில் பூதங்களின் தரிசநம் (12), ஜந்மம், கர்மம், வர்ணாசிரமம் முதலியவைகளால் சரீரத்தில் அஹம்பாவமின்மை, தனது, அந்யனது என்னும் புத்தி யின்மை (13).

1. கர்ம பலத்தை விபரீதமாகப் பார்த்தல்.

பகவானை உபேக்ஷிக்கப்பட்ட ஜீவர்களால் துக்க நிவிர்த்தி, ஸுகப் பிராப்தியின் பொருட்டுச் செய்யப்பட்ட ஸகாம கர்மத்தினால் அவர்களுக்கு மாறாய் துக்க அடைவு உண்டாகின்றது, பகவத் விமுக ராகலின். "அவர்கட்கு வியர்த்தமான ஆசை, வியர்த்தமான கர்மம்" என்னும் கீதாப் பிரமாணத்தினால். இவ்வாறு பிரவிர்த்தி மார்க்கத்தில் பலத்தின் விபரீத தரிசநம், முதலாவது பாகவத தர்மமாம்.

2. தநம் கிரஹம் புத்ரன் முதலியவற்றில் துக்க, சலந புத்தி.

2. அநேக அநர்த்தங்களினால் எதனால் தநம் பிராப்தமாகின்றது. உத்பத்தி முதலிய அவஸ்தையில் க்லேசஞ் செய்கின்றது. அதனால் ஆத்மாவிற்குத் துக்கத்தைக் கொடுக்கின்றது. கிருஹ, புத்திராதிகள் தனது கர்மத்தினால் ஸாத்தியமாய் வருதல், போதல்

உடையனவாம். தனது நாசம் முதலிய அவஸ்தையில் துக்கத்தைக்
கொடுக்கின்றது. ஆதலால் அவற்றில் இவ்வாறு துக்க ஹேதுத்
தன்மை, அநித்யத் தன்மைகளைப் பார்த்தல் இரண்டாவது தர்மமாம்.

3. பரலோக நசுவர புத்தி.

3. இந்திரன் முதலிய லோக அடைவினால் உண்டாகின்ற
ஊர்வசியோடு சஞ்சாரம் முதலிய விஷய போகம், எதனால் புண்யத்
தினால். சாத்திய மாகின்றது. ஸாதிசய தோஷத்தால் தூஷிக்கப்பட்
டிருக்கின்றது. த்வம்ஸத்தை யுடைய பயம் முதலியவற்றோடு கூடி
யிருக்கின்றது. அதனால் நசுவரமும், துக்கத்தைச் செய்வதுமாம்.
"எங்ஙனம் இம் மநுஷ்ய லோகம் கர்மத்தால் சாதிக்கப்பட்டதாய்
நாச மடைகின்றதோ, அங்ஙனமே ஸ்வர்க்க லோகமும் புண்யத்தி
னால் சாதிக்கப்பட்டதாய் நாச முறுகின்றது." என்னும் பிரமாணத்
தினால் இவ்வாறு அதன் விசாரம் மூன்றாவது ஸாதநமாம்.

4. குருவினிடத்தில் செல்லல்.

4. வேத ரூப பிரஹ்மத்தின் பொருளினை யதார்த்தமாக அறி
பவன் ஸப்தப் பிரஹ்மத்தில் நிஷ்டை யுடையவனும். யுக்தி, பிரமா
ணங்களால் சிஷ்யர்களின் சம்சயம் முதலியவற்றினை நிவிர்த்தி செய்
தலின். அபரோக்ஷ அநுபவத்தினால் பிரஹ்மாத்ம தத்வத்தினை அறி
பவன் பிரஹ்மத்தில் நிஷ்டை யுடையவனெனப்படுவன். அல்லாக்
கால் ஸாக்ஷாத் ஞானத்தினைக் கொடுத்தற்கு அயோக்கிய மாகலின்.
இவ்வாறு இரண்டு தர்ம விசிஷ்ட குருவினிடத்தில் பகவத் தர்ம
சிக்ஷையின் பொருட்டுச் செல்லல் நான்காவது சாதநமாம்.

5. குருவினிடத்தில் பகவத் புத்தி, நிஷ்கபட சேவை.

5. மேற் புகன்ற வித்துவானிடத்தில் சாஸ்திர திருஷ்டியினால்
பிரஹ்ம புத்தி செய்தல், அவரது பாஹ்ய சேஷ்டையினைப் பார்த்து
ஒரு காலத்தும் மநுஷ்ய புத்தியினால் அவரிடத்தில் சிரத்தை
யின்மை யுண்டாகா திருக்குதல், அவனதுபிரவிர்த்தி பாதித மாக
லின். "பிரஹ்மத்தினை யறிந்தவன் பிரஹ்மமே யாகின்றான்." என்
னும் சுருதிப் பிரமாணத்தினால். வாக் மந, காயங்களினால் ஸதா அவ



ரது சிசுருஷை முதலியவற்றைத் தனது பிரயோஜந கால பரியந்தம்
மாத்திர மின்றிச் செய்தல், அவரது நமஸ்காராதிகள் ஞானத்திற்கு
அந்தரங்க ஸாதந மாகலின். "எவனுக்குப் பரமேசுவரனிடத்தில்
எங்ஙனம் மேலான பக்தி யிருக்கின்றதோ, அங்ஙனமே எப்
பொழுது குருவினிடத்திலும் உண்டாகின்றதோ, அப்பொழுது
அவனுக்கு இரகசியார்த்தங்கள் விளங்குகின்றன." (சுவேதாசுவ
தர உபநிஷத்), "எவ்வளவு ஆயுள் இருக்கின்றதோ, அவ்வளவும்
வேதாந்தம், குரு, ஈசுவரன், என்னும் மூன்றின் நமஸ்காரத்தின்
கண்ணே யிருக்கின்றது." என்பதாதிப் பிரமாணத்தினால் இது
ஐந்தாவது தர்மமாம்

6. பரமேசுவரனிடத்தில் சர்வ கர்ம அர்ப்பணம்

6. காயத்தினாலும், வாக்கினாலும், மநதினாலும், இந்திரியங்
களினாலும், புத்தியினாலும், சித்தத்தினாலும் சாஸ்திரீயமான கர்மத்
தினைச் செய்தல், அல்லது பூர்வ ஸ்வபாவ அநுஸாரம் லௌகிக
கர்மத்தினைச் செய்தல், அவ் வெல்லாவற்றினையும் பரமேசுவர
னிடத்து அர்ப்பணஞ் செய்க, அந்தக் கர்மத்தில் கர்த்தா பாவம்
பலேச்சைகளைச் செய்யற்க. "ஹே அர்ஜுந! நீ எக் கர்மத்தினைச்
செய்கின்றாய்? அந்த ஹோமம், தேவதை, போகமாகிய வெல்லாம்
என்னிடத்திலேயே அர்ப்பணஞ் செய்க" என்னும் பிரமாணத்
தினால். இது ஆறாவது தர்மமாம்.

7. பகவத் பக்தி, பரமேச அநுபவம் விரக்தி.

7. எங்ஙனம் பஹிர் முகனாகிய ஜீவன், தநம், ஸ்திரீ, புத்ரன்
முதலியவற்றில் பிரீதி செய்கின்றனனோ, அங்ஙனமே எப்பொழுது
பரமேசுவரனிடத்தில் உண்டாகின்றதோ. அது பகவத் பக்தியாம்
கிரதிசயப் பிரமையின் இடமாய பகவத் ஸ்வரூபத்தினை அநுஸந்தா
நம்செய்தல் பரேச அநுபவமாம். கிரஹம் க்ஷேத்ரம் முதலியவற்றில்
ஆசை யின்மை விரக்தியாம். இவ்வாறு இம் மூன்று தர்மத்தினை
யும் குரு முகமாகக் கிரஹணஞ் செய்க. இது ஏழாவது தர்மமாம்.

### 8. சாது சங்கம்.

8. பகவத் சரணமாகிய ஒரே இடத்தி லிருக்கும் பரம ஹம்ஸ, ஸமதரிசி சாந்தாத்மாவாகிய சாதுக்களிடத்தில் யத்நத்தினால் சங்கஞ் செய்க. எதனால் அவர்களே பகவத் பக்தி, பரம வைராக்கியம், பிரஹ்மாத்ம தத்வ ஞாந மென்னும் மூன்று முக்கிய பாகவத தர்மத்தினைக் கொடுப்பவர்க ளாகின்றனர். இது எட்டாவது தர்மமாம்.

### 9. சௌசாதி ஒன்பது.

9. மண் ஜலம் முதலியவற்றினால் சரீரத்தினைச் சுத்தஞ் செய்தல் பாஹ்ய சௌசமாம். ஸகாமன் பாபிஷ்டனாகிய ஜீவர்களின் அந்நாதிகளைப் புசியா திருத்தல், தம்பம் மாநம் முதலியவைகளின்மை ஆந்தர சௌசமாம். தனது தர்மத்தின் ஆசரணம் தபமாம். க்ஷமை திதிக்ஷையாம். விருதாவாகிய வசநங்களைக் கூறா திருத்தல் மௌநமாம். அதிகார அநுஸாரமாக வேதம் முதலியவற்றினைப் படித்தல் ஸ்வாத்தியாயமாம். சித்தத்தில் வக்ர மின்மை ஆர்ஜவமாம். ருது காலத்தில் தனது ஸ்திரீயினிடத்தில் (போகஞ் செய்தல்) நியமம் கிருஹஸ்தப் பிரஹ்மசரியமாம். எட்டு வகைத்தாக ஸ்திரீயின் தியாகம் விரக்தப் பிரஹமசரியமாம். பூதங்களினிடத்தில் துரோகஞ் செய்த லின்மை அஹிம்ஸையாம். சந்தோஷ விஷாதங்கள் இன்றி யிருத்தல் த்வந்த்வ ஸமத் தன்மையாம். இது ஒன்பதாவது தர்மமாம்.

### 10. எங்கும் ஆத்ம, ஈசுவர தரிசநம்.

10 எல்லாவற்றிலும் சத் சித் ரூபத்தினால் ஆத்மாவினைப் பார்த்தல், அல்லது நியந்தரு ரூபத்தினால் ஈசுவரனைப் பார்த்தல் பத்தாவது ஸாதநமாம்.

### 11. கைவல்யாதி நான்கு.

11. ஏகாந்த சீலத் தன்மை, அல்லது துர்ஜந சபையில் பிரீதியின்றி யிருத்தல், கைவல்யமாம். கிருஹம் முதலியவற்றில் அபிமாந



மின்றி யிருத்தல் அநிகேதத் தன்மையாம். குப்பையில் கிடக்கும் வஸ்திரக் கண்டத்தினைக் கட்டிக் கொள்ளுதல், அல்லது, சுத்த வஸ்திரத்தினைக் கட்டிக் கொள்ளுதல் விவிக்த சீர வஸநமாம். பிராரப்தத்தால் கிடைக்கப்பட்ட அந்நாதிகளினால் போது மென்னும் புத்தி சந்தோஷமாம். அல்லது இனிப்பாய், பசை யுடையதாய், ஸுகந்த முடையதாய அந்ந முதலியவைகளின் இச்சை யின்மை ஸந்தோஷமாம். பதி னொன்றாவது தர்மமாம்.

### 12. பூதங்களில் ஆத்ம தரிசநம், ஆத்மாவில் பூத தரிசநம்.

12. பகவத் பாவ மென்பது பிரஹ்ம ஸ்வரூபத் தன்மையினால் ஆத்மாவின் ஸமந்வயத் தன்மையினைப் பூதங்களினிடத்தில் பார்த்தல், "ஆத னாகலின், பிரமாத்ரு வாகலின், ஆத்மா மேலாகிய விஷ்ணு ஸ்வரூபமாம்" என்னும் தந்திரப் பிரமாணத்தினால். அல்லது, ஆத்மா வென்பது கொதுகு முதலியவற்றிலும் நியந்த்ருத் தன்மையினால் இருக்கும் பரமேசுவரனாம். அவனது பகவத் பாவம் என்பது நிரதிசய ஐசுவர்யத்தினைப் பார்த்தலாம். பகவத் ஆத்மா வென்பது நாச மற்ற ஐசுவர்யாதிகளோடு கூடிய பரமேசுவரனாம். ஜட, மலிந மாகிய பூதங்களின் ஆசிரயத் தன்மையினாலும், ஜாட்யாதிகளின் பிராப்தியினாலும், எதன் ஐசுவர்யாதிகள் நாசமாவ தில்லை. அந்தப் பகவத் ஆத்மாவினிடத்தில் அத்தியஸ்த தாதாத்மிய சம்பந்தத்தினால் பூதங்களைப் பார்த்தல். யாண்டும் பரிபூரண தத்வத்தினைப் பார்த்தல் என்பது பொருளாம். இவ்வாறு ஞாநத்தினை யுடைய புருஷன் பாகவத உத்தமன் எனப்படுவன். இது பன்னிரண்டாவது தர்மமாம்.

### 13. ஜந்மாதிகளால் சரீர அஹம் பாவ, மம பாவ மின்மை.

13. நல்ல குலத்தில் பிறத்தல் ஜந்ம மெனப்படும். முற் புகன்ற பாகவத தர்மத்தினை யநுஷ்டித்தல் கர்மம் எனப்படும். பிராஹ்மண வர்ணம் உத்தம வர்ண மெனப்படும். சந்நியாஸ ஆச்ரமம் உத்தம ஆசிரம மெனப்படும். என்பன வாதி தர்மங்களால் கூடியவ னாயினும், பூதங்களின் ஸங்காத ரூப தேஹத்தில் 'இது நான்' என்று அஹம் பாவம் செய்வதில்லை, தேஹம் மித்தையாகலின். அதன் ஸம்பந்தி

யாகிய ஜந்மம், கர்மம், வர்ணாசிரமம் முதலியவைகளும் அங்ஙனமே யாகலின் இவ்வாறாய புருஷனும் பாகவத உத்தமனாவன். "இது எனது இது என தன்று" எனத் த்வைத புத்தி எவனுக் கில்லை, அத்வைத ஆத்ம தரிசியாகலின். தான் அந்யன் என்னும் அபிமாந மின்மையின். அவனும் பாகவத உத்தமனாவன். இது பதின் மூன்றாவது தர்மமாம்.

இப் பதின் மூன்று பாகவத தர்மங்களில் ஆண்டாண்டு ஒரு சாதநத்தில் தர்ம சமுச்சயம் கூறப்பட்டிருக்கின்றது. அது பரஸ்பரம் கூடவே யிருக்கும் தன்மையின் அபிப்பிராயத்தினால் கூறப்பட்டதாம். அதிக எண்ணிக்கையின் அபிப்பிராயத்தினால் கூறப்பட வில்லை. எத் தர்மம் பரம்பரையாக, அல்லது ஸாக்ஷாத்தாக பகவானை யடைவிக்கின்றதோ. அல்லது பகவானால் மோக்ஷ ஹேதுத் தன்மையினால் நேரே கூறப்பட்டிருக்கின்றதோ. அவைகள் பாகவத தர்ம மெனப்படும். இது பாகவத தர்ம பதத்தின் வியாக்கியாநமாம். எப் புருஷனுக்குப் பகவாந் தியேயத் தன்மையினால், அல்லது ஞேயத் தன்மையினால் அடையப்படுகின்றது. அல்லது எப் புருஷன் பகவானுக் காவன் அது பாகவதன் எனப்படும். இது பாகவத புருஷ பதத்தின் வியாக்கியாநமாம். எந்த மஹா பாக்ய புருஷன் முன் புகன்ற கிரமத்தினால் முற் புகன்ற தர்மங்களின் உண்மையான அநுஷ்டாநம் செய்கின்றான், அவனே பகவானது மாயையினைக் கடக்கின்றான். இது பகவத் கீதை முதலிய சாஸ்திரங்களில் பிரசித்தமாம்.

## பதினான்கு வகைத்தாய பதார்த்தம்.

### 13—1 திரிபுடி.

இப்பொழுது பரஸ்பர ஸாபேக்ஷையினை யுடைய பதினான்கு எண்ணிக்கையோடு கூடிய திரிபுடியினைக் கூறுவாம்:—ஞாநேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு என்பன பதினான்கு இந்திரியங்களாம். அவற்றிற்கு எங்ஙனம் பதினான்கு தேவதை முதலியவற்றால் சித்தமாகின்றன. பதினான்கு தேவதை விஷயங்களின் சித்தி இந்திரியங்களால் எங்ஙனம் உண்டாகின்றன,



அங்ஙனமே காண்பிப்பாம். திக்கு வாதம், அர்க்கன், வருணன், அசுவிநி குமாரர்கள் என்னும் ஐந்து தேவதைகளால் கிரமமாக அநுக்ரஹிக்கப்பட்ட சுரோத்திரம், த்வக், சக்ஷு, ரஸநம், கிராணம் என்னும் ஐந்து இந்திரியங்களும் சித்தமாகின்றன. அவற்றால் சப்தம் ஸ்பரிசம் ரூபம் ரஸம் கந்தம் என்னும் ஐந்து விஷயங்களும் கிரஹிக்கப்படுகின்றன. (5) அக்நி, இந்திரன், உபேந்திரன், மிருத்யு பிரஜாபதி என்னும் ஐந்து தேவதைகளினால் அநுக்ரஹிக்கப்பட்ட வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என ஐந்து கர்மேந்திரியங்கள் சித்தமாகின்றன. அவற்றால் வசநம், ஆதாநம், (கவரல்) கமநம், (செல்லல்) விஸர்க்கம், (விடுதல்) ஆநந்தம் என்னும் ஐந்து விஷயங்களும் கிரஹிக்கப்படுகின்றன. (10) சந்திரன், பிரஹ்மா, க்ஷேத்திரக்ஞன் ஈசுவரன் என்னும் நான்கு தேவதைகளினால் அநுக்ரஹிக்கப்பட்ட மநம், புத்தி, அஹங்காரம் சித்தம் என நான்கு இந்திரியங்கள் சித்தமாகின்றன. அவற்றால் ஸங்கற்ப, விகற்பம் நிச்சயம் அபிமாநம் சிந்தை யென்னும் நான்கு வியாபாரமும் உண்டாகின்றன. (14)

(இப் பதினான்கு இந்திரியங்களின் தேவதை விஷயங்களோடு அந்யோந்ய ஸாபேக்ஷ முடையதாய்ச் சித்திக்கின்றன. ஸ்வதந்தரமாகச் சித்திப்ப தில்லை எதனால் தேவதைகளின் அநுக்ரஹ மின்றித் தனது விஷயக் கிரஹணத்தின் பொருட்டு இந்திரியங்களின் பிரவிர்த்தி அசக்கியமாம். தேவதையினால் அநுக்ரஹிக்கப்பட்ட இந்திரியப் பிரவிர்த்தி யின்றிச் சப்தாதி விஷயங்களின் ஞாநம் அஸம்பவமாம். விஷயம் பரப் பிரகாச மாகலின். அதனால் இவ்வெல்லாப் பரஸ்பர ஸாபேக்ஷ வஸ்துக்கட்கு ஸ்வதந்தர ஸாக்ஷி ஸ்வப்பிரகாச ஸர்வத்தினுள்ளும் வியாபித்திருக்கும் ஒரு ஆத்மா தனது சத்தா ஸ்பூர்த்தியினை ஒரே காலத்துக் கொடுத்தலினால் ஸாதகமாம் அதுவே பாரமார்த்திக ஜீவனது ஸ்வரூபமாம். ஒரு ஸ்வதந்தர மின்றிப் பரஸ்பர ஸாபேக்ஷ வஸ்துக்கட்குச் சித்தி யின்மையின். ஜகத்தில் அந்தப் (குருட்டுப்) பிரஸங்கம்வரும். ஒருவருக்கும் ஒன்றன் ஞாநமும் உண்டாகாது. ஞாந மின்றி லௌகிக, வைதிகப் பிரவிருத்தியின் அசம்பவ முண்டாம் அதுவோ இஷ்ட மில்லை.

எதனால் இந்திரியங்களின் பிரவிர்த்தி வாயிலாய் அவசியம் ஒரு
ஸாக்ஷியாகிய சிதாத்மா அங்கீகரிக்கத் தக்கதாம். அது பாகவதத்
திலும், "ஒரு இந்திரியம் அத்தியாத்மம். ரூபம் அதிபூதமாம்
சக்ஷுவின்து கோளகத்தில் பிரவேசித்திருக்கும் சூரியாம்சம்.
அதிதைவமாம். இம் மூன்றும் பரஸ்பர அபேக்ஷையினால் சித்திக்
கின்றன. சக்ஷுவினால் ரூப ஞானம் உண்டாகின்றது. அது வேறு
வகைத்தாகப் பொருந்தாமையினால் சக்ஷு சித்திக்கின்றது. சக்ஷு
வின் பிரவிர்த்தி வேறு வகைத்தாகப் பொருந்தாமையினால் அதன்
அதிஷ்டாதாவாகிய தேவதை சித்திக்கின்றது. அதனால் மீண்டும்
சக்ஷுவின் பிரவிர்த்தி ஸித்திக்கின்றது அதனால் மீண்டும் ரூப
ஞானம் உண்டாகின்றது. இவ்வாறு மூன்றும் பரஸ்பரம் சித்த
மாகின்றன. எதனால் இந்த அத்யாத்மம் முதலிய திரிபுடிகட்கு
ஆத்மா ஆதியா யிருக்கின்றது. ஏக ரூபமாய் இருக்கின்றது. இவற்
றின் விலக்ஷணமா யிருக்கின்றது. ஸ்வதசித்தப் பிரகாசத்தினால்
பரஸ்பர பிரகாசங்கட்கும் பிரகாசஞ் செய்கின்றது. எல்லோருக்கும்
சித்தப் பிரகாச விஷயமாகலின். ஆதலால், இதன் ஸ்வயம் பிரகாசத்
தன்மை ஸித்திக்கின்றது" எனக் கூறப்பட்டிருக்கின்றது. எங்ஙனம்
ஒரு சக்ஷு இந்திரியத்தில் அத்யாத்ம முதலிய பேதத்தினால் ஒரு
திரிபுடி காண்பிக்கப்பட்டது. அங்ஙனமே மற்ற இந்திரியங்களிலும்
அறிக. பதி னான்கு திரிபுடிகளின் சித்தி அந்யோந்ய ஸாபேக்ஷமாக
வே உண்டாகின்றது என்பதுவே பொருளாம். அவ்வெல்லாவற்
றிற்கும் ஸாதகம் ஸ்வப்பிரகாசமாகிய ஒரு ஸாக்ஷி சேதநமேயாம்.
ஜிஞ்ஞாஸுக்களால் அதனையே தனது ஸ்வரூபமாக அறிதல்
யோக்கியமாம். பரஸ்பரம் அபேக்ஷயினை யுடைய திரிபுடிகளில்
அத்தியாஸியாகுதல் யோக்ய மன்றாம். இது பதினான்கு திரிபுடி
களின் நிரூபணத்தின் பலமென அறிக.)

பதினைந்து வகைத்தாய பதார்த்தம்.

14—1. மாயையின் பெயர்.

இப்பொழுது வேதாந்தங்களில் ஆண்டாண்டுச் சிஷ்யர்கட்கு அறிவித்தற் பொருட்டு மாயையினால் கற்பிக்கப்பட்ட அநர்த்தம்



என்னும் பெயரினை யுடைய பதினைந்து எண்ணிக்கையோடு கூடிய நாமத்தினைக் கூறுவாம்:—(1) மாயை, (2) அவித்தை, (3) பிரகிருதி, (4) சக்தி, (5) அவ்யக்தம், (6) அவ்யாகிருதம், (7) அஜை, (8) அஞ்ஞானம், (9) தமம், (10) அநிர்வசநீயம், (11) துச்சம், (12) ஸத்தியா, (13) தூலா, (14) மூலா, (15) யோநி, என்பதாதி பேதத்தினால் ஆசாரியர்கள் உபதேச அவஸ்தையில் ஆண்டாண்டு மாயையின் பதினைந்து நாமங்களைக் கூறியிருக்கின்றனர். அவற்றினை, ஒவ்வொன்றினையும் லக்ஷணப் பிரமாணங்களினால் காண்பிப்பாம்.

1. மாயை.

1. எந்த வஸ்து ஸ்வரூபமாக வேறு பிரகாரமாய் இருந்தும்
வேறு பிரகாரமாகப் பார்க்கப்படுவது, அல்லது அகடித கடநத்தில்
ஸமர்த்தமாம், அல்லது விசாரத்தினை ஸஹிக்காது பிரத்யக்ஷமாக
விளங்குவது, அது மாயை எனப்படும். எங்ஙனம், சுருதி முதலிய
பிரமாணத்தினால் சித்தித்த சச்சிதாநந்த ஸ்வரூப ஆத்மாவினை
ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்களின் அத்தியாசவாயிலாய் அவிசார காலத்
தில் அஸத், ஜட துக்க ரூபமாக காண்பிக்கின்றது. எங்ஙனம்,
ஆத்மா, உண்மையில் அகர்த்தா, அபோக்தா, அபரிச்சிந்ந, ஸ்வப்பிர
காச, ஜந்மம், மரணம் முதலிய ஷட்பாவ விகார மின்றி இருக்கின்றது,
அதில் கர்த்ருத் தன்மை, போக்த்ருத் தன்மை, பரிச்சிந்நத் தன்மை.
பரப்பிரகாசத் தன்மை, ஜந்ம மரணத் தன்மை முதலிய அநந்த
மித்தியா பொருத்த மின்றிய தர்மங்களின் ஆரோபணத்தினால்
ஜீவனைப் பிரத்தியக்ஷாதி பிரமாண சித்த நாநா துர்த்தசையில் தள்ளு
கின்றது. எங்ஙனம், அஞ்ஞாந காலத்தில் காரியாகாரியத்தினால்
தேவ தநுஜாதி, கிரி, நதியாதி, ஆகாசாதி பேதத்தினால் நாநாவாக
விளங்கினும், விவேக தசையில் வித்வான்களது அநுபவத்தினாலும்,
சிரௌத ஞானத்தினாலும் எப்பொழுதும் சத்தா சூந்யமாகவும், மித்
தையாகவும் விளங்குகின்றது. அதனால் முற்புகன்ற லக்ஷணங்கள்
மாயையில் பொருந்துகின்றது. இந்த மாயையின் லக்ஷணம் ஐந்திர
ஜாலனது மாயையில் அஜ்ஞ, தஜ்ஞ, (அறிஞ)ர்கட்குப் பிரசித்தமாம்.
"மாயை ஆபாசத்தினால் ஜீவேசுவரர் என்னும் இருவரையும் செய்
கின்றது", "இந்திரன் (பரமாத்மா) மாயைகளால் நாநா ரூபமாக

விளங்குகின்றனன்.'', "மாயையைப் பிரகிருதி யென மதிக்க''
என்பன வாதி சுருதிகள் அதன் நாமத்தினை அநுவதிப்பனவாம்.

## 2. அவித்தை.

2. வித்தையினை விரோதியாக வுடையது அவித்தையாம்.
இரண்டும் ஒருகாலத்து ஒரு விஷயத்தில் இராமையின் அல்லது
வித்தையினால் நாச முறுவது அவித்தையாம். பாத்திய பாதக ஸ்வ
பாவமாகலின். நையாயிகர்களால் கொள்ளப்பட்ட வித்தையின் அபா
வம் அவித்தையன்று. அபாவத்திற்கு அஸத்தாகிய ஆகாச புஷ்பாதி
கள் போன்று காரிய ஜநகத் தன்மையும், மறைக்குந் தன்மையும் அங்கீ
கரியாமையின். நஞ்ஞின் ஆதேச ரூப அகாரத்திற்கு, அதன் விருத்
தம். அதன் பிந்நம், அதன் அபாவம், என்னும் மூன்று அர்த்தங்கள்
பண்டிதர்களால் கொள்ளப்பட்டிருத்தலின். எங்ஙனம், எந்தக் கட
படாதி விஷய அஞ்ஞானம் எது வரை யிருக்கின்றதோ, அதுவரை
அதனை விஷயமாக வுடைய ஞாநம் உண்டாவ தில்லை. சக்ஷு முதலிய
ஸந்நிகர்ஷத்தின் பின் விஷய விருத்திகளின் சேர்க்கையினால் கடாதி
ஞாந முண்டாய் அதனை விஷயமாக வுடைய அஜ்ஞாநம் நாச மாகின்
றதோ, அங்ஙனமே பிரத்யகாத்ம ரூப பிரஹ்மத்தினை விஷயமாக
வுடைய அவித்தை, அவிவேக காலத்தில் எது வரை யிருக்கின்றதோ,
அதுவரை அதனை விஷயமாக வுடைய ஞாநம் உண்டாவ தில்லை.
வித்தை யின்றி வேறு யஜ்ஞம், தாநம், தபம், முதலிய அநந்த ஸாத
நங்களினாலும் அவித்தையின் நாசம் உண்டாவ தில்லை. ஏகத் தன்
மையினை விஷயமாக வுடைய சிரௌத ஞாநம் உண்டானதன் பின்
னரே பிரஹ்மத்தினை மறைக்கும் அவித்தை நாச மாகின்றது. ஆத
லால் முன்னர் மொழிந்த லக்ஷணம் அவித்தையில் பொருந்துகின்
றது. "அவித்தையின் வயிற்றில் இருக்கின்றான். தன்னைப் பண்
டிதனாக நினைக்கின்றான்.'' என்பதாதி சுருதி அதனை அநுவதிப்ப
தாம். (வழிமொழிதலாம்) "எவன் ஆத்மாவினை அறிகின்றான்
அவன் ஈண்டே அவித்தையாகிய கிரந்தியினை வெட்டுகின்றான்.''
என்னும் சுருதி வித்தையினால் அவித்தையின் நாசத்தினைக் கூறு
கின்றது.



## 3. பிரகிருதி.

3. பரிணாம வாதத்தின் அபிப்பிராயத்தினால் எல்லாப் பிர
பஞ்சங்கட்கும் மூல காரணம் பிரகிருதி யெனப்படும். அது மீண்டும்
ஸாங்கிய மதத்தின் அபிப்பிராயத்தினால் மஹத் தத்வம் முதலிய
ஆகாரத்தினால் பரிணாமத்தினை யடைந்து ஜகத்தினைச் சிருஷ்டிக்
கின்றது. வேதாந்த மத அபிப்பிராயத்தினால் ஆகாசம் வாயு
முதலிய ஆகாரத்தினால் பரிணாமத்தினை யடைந்து ஜக தாகாரத்தினை
யடைகின்றது. "மாயையைப் பிரகிருதி யென மதிக்க. மாயியை
மஹேச னென மதிக்க.'' என்பதாதி சுருதி அதன் அநுவாதகமாம்.

## 4. சக்தி.

4. ஸ்வதந்திர மின்றியதாய் காரியத்தினால் அநுமிக்கற்பால
தாய்த் தனது ஆசிரயத்தினும் பிந்ந விடத்தில் தோற்ற மின்றிய
தாய்ச் சக்தியினால் பிந்நாபிந்நங்களாக அநிர்வசநீயமா யிருப்பது
சக்தி யெனப்படும். எங்ஙனம் அக்நியின் சக்தி ஸ்போடம் முதலிய
காரியத்தினால் அநுமிக்கற்பாலதாம். தனது ஆசிரயமாகிய அக்நி
யின்றி யாண்டும் தோற்றுவ தில்லை. அதனால் பாதந்திரமா யிருக்
கின்றது. அக்நி இருக்கினும் மணி மந்திரம் முதலியவற்றால் பிரதி
பந்தமாய்த் தோற்றுவ தில்லை. அதனால் அக்நியினும் அபிந்ந
மன்று. ஸ்வதந்தரமாகத் தோற்றாமையின் பிந்ந மன்றாமோ, அங்ஙன
மே பிரஹ்மத்தின் சக்தியும் ஆகாசாதி காரியப் பிரபஞ்ச வாயிலாய்
அநுமிக்கற்பாலதாம். தனது ஆசிரயமாகிய பிரஹ்ம மின்றி யாண்
டும் அதன் லாபம் இன்று. அதனால் பிரஹ்மத்தினும் பிந்நமு
மன்று. முக்தி யவஸ்தையில் பிரஹ்ம மிருக்கினும் பிரஹ்ம ஞாநத்
தினால் பாதமாய்த் தோற்றுவ தில்லை அதனால் அபிந்நமு மன்று.
"இப் பரமேசுவரனது பரா சக்தி நாநா விதமாகவே கேட்கப்படு
கின்றது. அநாதி ஞாந பலக் கிரியையை யுடையது.'', "தியாந
யோகத்தினால் அநுகத முநியாய்த் தனது குணங்களினால் கூடமான
தேவாத்ம சக்தியினைப் பார்த்தான்''. என்பன வாதி சுருதிகள்
அதன் அநுவாதிநிகளாம்.

5. அவ்யக்தம்.

5. இந்திரியங்களின் கோசரமின்றியது அவ்பக்தமாம். தனது ஸ்வரூபத்தினால் கர சரணாதியை யுடைய மூர்த்தியின் அபாவத்தினால், ரூப ரஸ முதலிய குண முடைமை யின்மையின். "அவ்யக்தத்தினும் புருஷன் பரன். புருஷனினும் பரமாய் ஒன்று மின்று. அது காஷ்டையாம். அது மேலான கதியாம்.", "அவ்யக்தத்தினின்றும் ஸர்வ வியக்தங்களும் உண்டாகின்றன. பூதத்தின் முதலில் அவ்யக்தம் இருந்தது. ஹே பாரத! மத்தியில் வியக்த மாகின்றது" என்பன வாதி வாக்கியங்கள் அதன் அநுவாதகங்களாம்.

6. அவ்யாகிருதம்.

6. எதற்குக் கர சரணாதி யுடைய வியாகிருதி (ஆகிருதி) யின்று, அல்லது எதற்கு அவபவ ஸம்ஸ்தாந மின்று அது அவ்யாகிருதமாம். "இந்த ஜகத்து பிரளயத்தில் அவ்யாகிருதமாகவே யிருந்தது. அது நாம ரூபமாக வியாகிருதஞ் செய்யப்பட்டது" என்னும் சுருதி அதன் அநுவாதகமாம்.

7. அஜை.

7. எது ஜந்மத்தினை யடைவ தில்லை; அநாதியாகலின். அது அஜையாம்; "ஒரு அஜை, சிவப்பு, வெண்மை, கறுப்பு ரூப தனது ஸமாந நாநா பிரஜைகளைச் சிருஷ்டிக்கின்றது. அதனை ஒரு அஜன் ஸேவிக்கின்றனன்" என்பதாதி சுருதி அதன் அநுவாதகமாம்.

8. அஞ்ஞாநம்.

8. தனது ஆசிரயத்தி லிருந்தே தன் ஆசிரயத்தின் விசேஷ அம்சத்தினை மறைத்தலினால், அதில் நாநா விக்ஷேபத்தினைக் கற்பிக்கின்றது. அஞ்ஞாநமாம். எங்ஙனம் மூலாஞ்ஞாநம் பகுப் பற்ற சேதநத்தின் ஆசிரயமாய், அதன் அநவச்சிந்நத் தன்மை, ஆநந்தத் தன்மை, அத்வைதத் தன்மையாதிய விசேஷ அம்சத்தினை, அஸத்துவ, அபாந ரூப ஆவரண வாயிலாய் மறைத்தலினால், அந்த மறைபட்ட பிரஹ்மத்தினிடத்திலேயே ஜீவ ஈசுவர ஜகத்து ரூப நாநா



விக்ஷேபத்தினைக் கற்பிக்கின்றது. மீண்டும் ஈசுவரனிடத்தில் ஸர்வஞ்ஞத் தன்மை முதலிய தர்மங்களையும், ஜீவனிடத்தில் அற்பஞ்ஞத் தன்மை முதலிய தர்மங்களையும், ஜந்ம மரணாதி அநர்த்த பரம்பரையினையும் கற்பிக்கின்றது. "இச்சு அவச்சிந்ந சேதநத்தி லுள்ள அஞ்ஞாநம் போன்று எதன் அஞ்ஞாநத்தினால் ஜகத் தோற்றுகின்றது எதன் ஞாநத்தினால் லய மடைகின்றது.?", "அநீசத் தன்மையினால் ஜீவன் மோஹிதனாய்ச் சோகத்தினைச் செய்கின்றான்." "எதனது அஞ்ஞாநத்தினால் ஞாநம் மறைக்கப்பட்டிருக்கின்றது, அந்த மறைப்பினால் ஜந்துக்கள் மோஹத்தை யடைகின்றன. அந்த அஞ்ஞாநம் ஞாநத்தினால் எவனுக்கு நாச மடைகின்றது. அவனுக்குச் சூரியன் போன்று அந்த ஞாநம் பரம தத்வத்தினை விளக்குகின்றது. என்பன வாதி வாக்கியங்கள் அதன் அநுவாதகங்களாம். அந்த ஆவரண ஸஹித அஞ்ஞாநம் எப்பொழுது விசாரிக்கப்பட்ட மஹாவாக்கிய ஜந்ய ஞாநத்தினால் பாத மடைகின்றதோ அப்பொழுது ஜீவத் தன்மை, ஈசுவரத் தன்மை முதலிய ஸர்வ விக்ஷேபத்திலும் மித்தியா புத்தியினால் வித்வானுக்கு ஒரு அத்வைத சைதநயமே தோற்றுகின்றது. "ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம்.", இதில் நாநா வென்பது அற்பமும் இன்று." என்பன வாதி சுருதிப் பிரமாணத்தினால்.

9. தமம்.

9. எங்ஙனம் லௌகிக தமம் (இருள்) கட முதலிய திரவ்பத்தி லுள்ள வெண்மை சிவப்பு முதலிய ரூபத்தினைக் கிரஹிக்கும் சக்ஷுவிற்குப் பிரகாச மின்றி மறைகின்றதோ, அங்ஙனமே இம் மாயா ரூப தமமும் சேதந ஆத்மாவில் ஆநந்த அநந்தத் தன்மைகளை மறைத்தலினால் ஞாந மின்றி ஜீவனைத் துக்கியாய்ப் பரிச்சிந்நமாய்ச் செய்கின்றது. அதனால் தமம் எனப்படுகின்றது. "சிருஷ்டிக்குப் பூர்வம் தமமே யிருந்தது.", "இச் சகத்துப் பூர்வம் தமத்தினால் கூடமாய் இருந்தது.", "மாயை தம ரூபமாம்" "இந்தத் தமம் ஜட மோஹ ரூபமாம்" என்பன வாதி சுருதிகள் அதன் அநுவாதகங்களாம்.

10. அநிர்வசநீயம்.

10. எதனால் இம்மாயை சத்து சப்தத்தினால் கூறப்படுவதில்லை. ஞாநத்தினால் பாதிக்கப்படுதலின். அஸத் சப்தத்தினால்

கூறப்படுவ தில்லை. காரிய ரூபத்தினால் பிரத்தியக்ஷமாக விளங்குதலின். ஸதஸத் சப்தங்களினாலும் கூறப்படுவ தில்லை. விருத்தமாதலின். அதனால் இதனை ஆசாரியர் அநிர்வசநீயம் என்கின்றனர். "சிருஷ்டிக்குப் பூர்வம் சத்தும் இருந்த தில்லை. அஸத்தும் இருந்தில்லை." என்பதாதி சுருதி அதன் அநுவாதகமாம்.

11. துச்சம்.

11. எதனால் அந்த மாயை ஜீவன் முக்தனது சிரௌத பிரத்தியக்ஷ அநுபவத்தினால் அதிஷ்டானப் பிரஹ்மத்தில் மூன்று காலத்திலு மில்லை. அதன் அத்தியந்த அஸத்பாவத்தின்கண்ணே சுருதியின் தாத்பரியம் இருக்கின்றது. அதிஷ்டான சத்தையினும் பிந்ந சத்தையின் அபாவத்தினால். ஆகலால் துச்ச மெனப்படுகின்றது. "நிரோத மில்லை, உற்பத்தி யில்லை, பந்த னில்லை, ஸாதக னில்லை, முமுக்ஷு இல்லை, முக்த னல்ல. இதுவே பரமார்த்தத் தன்மையாம்.", "ஈண்டு நாநா வென்பது அற்பமு மில்லை.", "விடுபட்டவன் விசேஷத்தினால் விடுபடுகின்றான். எப்பொழும் நிவிர்த்தியானவனே நிவிர்த்தியாகின்றான்.", "தத்வமஸ்யாதி, வாக்கியத்தி லுண்டாய நன் ஞானத்தின் உற்பத்தி மாத்திரத்தினால் அவித்தை காரியஸகிதமாக இருந்தது மில்லை, இருக்கின்றது மில்லை, இருப்பது மில்லை" என்பன வாதி சுருதி ஸ்மிருதிகள் அதன் பிரதிபாதகங்களாம்.

12. சத்யா.

12. அவிவேக தசையில் விஷய லம்படனாய பஹிர் முக ஜீவனுக்கு ஸ்வப்ந ஸமானமான மித்தியா ஜகத்தில் பூர்வ பூர்வப் பிராந்தியால் ஸத் புத்தியினை உண்டாக்குகின்றது, ஸத்தியா எனப்படும். "ஸ்வர்க்காதி காமன், யஞ்ஞர், தானம் ஹோமங்களைச் செய்க.", "பிராஹ்மணனைக் கோறற்க" என்பன வாதி பூர்வ காண்டத்தி லுள்ள விதி நிஷேத வாக்கியங்களும், சிருஷ்டி லயம் முதலிய வாக்கியங்களும், நாநா வித பேத பிந்ந ஜகத்தினைக் கூறுகின்றது. அவைகள் வேறு வழித்தாய்ப் பொருந்தாமையின், அஜ்ஞனாகிய ஜீவனுக்குப் பிராந்தியினால் ஸித்தித்த ஜகத்தின் ஸத்தியத் தன்மையினை அர்த்



தத்தினால் கற்பிக்கின்றன. பிராந்தி சித்த ஜகத்தினை அநுவாதஞ் செய்கின்றது என்பது பொருளாம். சிரௌத சித்தாந்தத்தினால் அதன் ஸத்தியத் தன்மையில் தாத்பர்யம் வைப்ப தில்லை. "நிரோதமன்று, உத்பத்தி யன்று, பத்த னல்ல, ஸாதக னல்ல" என்பதாதி வாக்கியத்தின் விரோதத்தினால். ஆகலால் ஆசாரியர்களும் அதிகாரிகளின் ஞானத்தின் பொருட்டு, ஆரோப அபவாத நியாயத்தினால் காரிய ஸஹித அவித்தையின் அநிர்வசநீயத் தன்மையின் நிரூபணஞ் செய்திருக்கின்றனர். ஜீவந் முக்தனது அபிப்பிராயத்தினால் காரிய ஸஹித மாயைக்குத் துச்சத் தன்மை கூறியிருக்கின்றனர். அஜ்ஞாநிகளின் அபேக்ஷையினால் அதற்கு ஒரு காலத் துளதாம் நித்தியத் தன்மை காண்பிக்கப்பட்டது.

13. தூலா.

13. அதிஷ்டானத் தன்மையினால் கட படம் முதலிய வியாவகாரிகப் பிரபஞ்சாவச்சிந்ந சேதநத்தி லுள்ள அவித்தை தூலா (தூலம்) எனப்படும். எதனை அவஸ்தாஜ்ஞாநம் என்றும், அம்சாஜ்ஞாநம் என்றும், காரியாஜ்ஞாநம் என்றும் கூறுவர். அது பிரஹ்ம ஞான மின்றியும், அவ்வவ் வாகார நிர்த்தோஷப் பிரமாண ஜந்ய விருத்தி உதயமாயின், அவ்வவ் விஷயாவச்சிந்ந சேதநத்தின் மறைக்கும் அவித்தையும் நாச மாகின்றது. எதனால் லௌகிகப் பிரமா விருத்திக்கும் ஆவண ஸஹித அஜ்ஞாநத்தின் நிவிர்த்தியே பிரயோஜநமாம். அப்பொழுது விஷயாவச்சிந்ந சேதநம், தன்னிடத்தில் அத்தியஸ்தமான விஷய ஸஹிதமாகப் பிரத்தியக்ஷமாக விளங்குகின்றது. மீண்டும் அதுவே சுக்தி முதலிய வியாவகாரிக விஷயாவச்சிந்ந சேதத்தினை மறைத்தலினால், தோஷத்தின் வசத்தினால் அதனிடத்து, இரஜதாகாரப் பிராதீதிகப் பிரபஞ்சத்தினையும், அதன் ஞானத்தினையும், ஒரே காலத்தி லுண்டாக்குகின்றது. அது பிரஹ்ம ஞான மின்றியும் தன் தன் அதிஷ்டான ஞானத்தினால் தனது காரியத்தோடு நாசமும் ஆகின்றது.

14. மூலா.

14. அநந்த அவஸ்தையினை யுடைய அஜ்ஞாநம் எதன் அம்சமாம், அந்த மாயை மூலா வெனப்படும். அது பிரத்ய காத்மாவி

ஆள்ள ஸ்வபாவ சித்த பிரஹ்மத் தன்மையினை மறைக்கின்றது. அதில் அநந்தப் பிரகாரமான விக்ஷேபம் செய்கின்றது. அது நிர்த்தோஷ சிரௌதப் பிரமாண ஜந்ய பிரஹ்மாத்ம ஏகத்வ ஞாநத்தினாலேயே நாச மாகின்றது. அவஸ்தா அஜ்ஞாநத்தினை நிவிர்த்திக்கும் வியாவகாரிக ஞாநத்தினால் (வியாவகாரிக அதிஷ்டாந ஞாநத்தினால்) நாச மாவ தில்லை. அதனால் மூலா வெனப்படும். "யோகியாகிய பிரஹ்ம நிஷ்டன் எந்தப் பிரஹ்மத்தின் ஸாக்ஷாத்கார முண்டாய் விக்ஷேபத்தினைச் செய்யும் மாயையினை நாசஞ் செய்கின்றனன், அந்த அம்ச ரூப, அல்லது அவஸ்தா ரூப, அல்லது காரிய ரூபமாக மறைக்கும் அவித்தையினையும் நாசஞ் செய்கின்றான், அந்தச் சேதந ரூப அப்பிரமேயத்தின் பொருட்டு எனது நமஸ்காரம் இருக்கின்றது." என்பதாதி ஸ்மிருதியின் வசநம் தூல மூல அவித்தைகளின் அநுவாதகங்களாம். தூல மூல அவித்தையில் ஞாந விரோதத் தன்மை ரூப தர்மம் ஸமாநமாம். அங்ஙன மாயினும், தூலாவித்தை வியாவகாரிக அதிஷ்டாநத்தில் பிராதீதிகப் பிரபஞ்சத்தினைச் செய்கின்றது. வியாவகாரிக அதிஷ்டாநத்தின் ஞாநத்தினாலேயே காரிய ஸஹிதமாய் நாச மாகின்றது. மூலாவித்தை பாரமார்த்திக அதிஷ்டாநத்தில் வியவகாரிக ஆகாசாதிப் பிரபஞ்சத்தினைச் செய்கின்றது. பாரமார்த்திகப் பிரஹ்ம சேதநத்தின் ஞாநத்தினாலேயே காரிய ஸஹிதமாய்ப் பாத மாகின்றது. அவற்றுள் இவ்வளவு விலக்ஷணத் தன்மையு மிருக்கின்றது.

### 15. யோநி.

15. எதனால் பரமேசுவரன் சிருஷ்டி காலத்தில் இந்த மாயையில் பிரபஞ்ச உத்பத்தியின் ஹேதுவாகிய தனது ஈக்ஷணத்தினை வைக்கின்றனன். சிதாபாச ரூப கர்ப்பத்தினைத் தாரணஞ் செய்கின்றனன் என்பது பொருளாம். அதனால் இது யோநி எனப்படும். "அவன் ஈக்ஷித்தான். நான் எல்லா மாவேன்", * ஹே அர்ஜுந இந்த மாயை எனது யோநியாம். மஹத்தாம். பிரஹ்ம மென்னும்

* பகவற் கீதை "மூத வாவென்கு ணமவை முற்றினும், பேத மாகும்பிர கிருதி தன்னிலே, காத லால்வைப்பன் யான்கரு வக்கருப் பூத மியாவும்புலப்படு கின்றவே." 14–4.



அபரிச்சிந்நமாம். அதில் நான் ஆபாஸ ரூப கர்ப்பத்தினைக் கொடுக்கின்றேன். அந்த ஆபாஸ விசிஷ்ட எனது மாயையினின்றே சராசர பூதங்களின் ஸம்பவம் உண்டாகின்றன" (14-3.) என்பன வாதி வாக்கியங்கள் அதன் அநுவாதகங்களாம். இவ்வொரு மாயைக்கே பதினைந்து பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றது. சிலவிடங்களில் அதிகமாகவும் கூறப்பட்டிருக்கின்றது. அது சப்தத்தின் பிரவிர்த்தி நிமித்த பேதத்தினாலும், கிரியையின் பேதத்தினாலுமாம்.

சுருதி ஸ்மிருதியிலும், ஆசாரியர்களினது வாக்கியங்களிலும் இப் பதினைந்து விதமான மாயையின் அநுவாதம் ஆண்டாண்டு ஆரோப அபவாத நியாயத்தினால் அத்வைதப் பிரஹ்ம ஞாநத்தின் பொருட்டுப் பார்க்கப்படுகின்றது. அங்ஙன மாயினும், இதனால் இதற்குப் பிரமாண சித்தத் தன்மை அங்கீகரிக்கற்க. அவற்றின் நிஷேத வாக்கியங்கட்கு அவகாச மின்மையின். அதனால் அநுவாதஞ் செய்யும் சுருதி ஸ்மிருதிகளின் தாத்பரியம் இதன் பாதத்தின்கண்ணேயாம் என அறிக. அதனானேயே அதிகாரிகள் மீண்டு மீண்டும் விசாரிக்கப்பட்ட மஹா வாக்ய ஜந்ய பிரஹ்மாத்ம ஏகத்வத்தினை விஷயமாக வுடைய ஸாக்ஷாத்காரத்தினை யடைந்து, அதன் பின் உண்டான பாத ஞாநத்தினால் கார்ய சகித அவித்தையின் த்ரைகாலிக அபாவத்தினை, அதிஷ்டாந ரூப அத்வைதப் பிரஹ்மத்தில் நிச்சயஞ் செய்து, அபரிச்சிந்ந பூரணாநந்த ரூபமாக யிருக்கின்றனர். கிருத கிருத்யரும், பிராப்தப் பிராப்தவ்யரும் ஆகின்றனர். "ஞாநாமிருதத்தினால் யோகி திருப்த னாகின்றான். கிருத கிருத்திய னாகின்றான். அவனுக்கு அற்பமும் கர்த்தவ்ய மில்லை. எவனுக்குக் கர்த்தவ்ய மிருக்கின்றதோ, அவன் தத்வவித் தலன்", "பிரமத்தினை யுணர்ந்தவன் பிரஹ்மமே யாகின்றனன்.", "பிரஹ்ம மாகியே பிரஹ்மத்தில் லயத்தினை யடைகின்றனன்." என்பன வாதிப் பிரமாணங்களினால்.

பதார்த்தமஞ் ஜூஷா வென்னுமின் னூலைப்
பாமூல ராமசா துவினால்,
யதார்த்தமா யுபர்வாம் விருப்பத னாலே
யியற்றின னுண்மையோக் கியரின்,

ததர்த்தமாய்ப் போத மாகுதற் பொருட்டுச்
சாந்திரன் மதிவை ரமின்றிச்,
சதர்த்தச்சா துக்க ளாநந்தப் பொருட்டுச்
சாத்தினன் கிருஷ்ணபா தத்தில்.

இந்தப் பதார்த்த மஞ்ஜூஷா என்னும் கிரந்தம் விக்கிரமார்க்க
வருஷ 1926 ஆனி மீ சுக்கில பக்ஷத் துதியை அன்று அதிக உல்
ாசமாக மூற்றுவிக்கப்பட்டது.

ஓம் தத் சத் பரப்பிரஹ்மணே நம: ஸ்ரீ அகண்ட அத்வை
ஸ்வப்பிரகாச சித் ரூப தேவாதி பூஜ்ப ஜகத் உத்தாரகராகிய ஸ்ரீ
குரு நாநகாசாரியாது பூஜ்ப பாத சிஷ்பாநுசிஷ்பராகிய மூல ர
ஸாது என்னும் ஸ்ரீமத் சேஷன் என்னும் பெயரினை யுடை
கிருஷ்ண ஸ்வரூப பக்தனுல் புத்தி யநுசாரம் இயற்றப்பட்
பதார்த்த மஞ்ஜூஷா ஸமாப்தம். சுப மஸ்து.

